# சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்மொழித் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

நறுமலர்ப் பதிப்பகம்
சென்னை-600029

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள் (1970-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெற்ற பிஎச். டி ஆய்வேட்டின் விரிவாக்கம்) |
| ஆசிரியர் | : | டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| வெளியீடு | : | நறுமலர்ப் பதிப்பகம் 19, சயம்மாள் தெரு ஐயாவு குடியிருப்பு சென்னை 600 029. |
| வெளியிடப் பெற்ற நாள் | : | டிசம்பர், 1985 |
| தாள் | : | சேசசாயி 11.6 கி. |
| நூலின் அளவு | : | கிரௌன் |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 788 |
| படிகள் | : | 1000 |
| அச்சகம் | : | கற்பகம் அச்சகம் 6, நல்லதம்பி தெரு சென்னை-600 002. |
| நூல் கட்டு | : | அரை காலிகோ அட்டை |
| விலை | : | ரூ. 55 |
| விற்பனை உரிமை | : | பாரி நிலையம் 184, பிரகாசம் சாலை சென்னை-600 108. |

# அணிந்துரை

**மாண்புமிகு செ. அரங்கநாயகம்**
*தமிழகக் கல்வி அமைச்சர்*

பழந்தமிழகம் முடியுடை மூவேந்தரால் ஆளப் பெற்றமையைத் தொன்மை நூல்கள் எடுத்துரைக்கின்றன. கிறித்துநாதர் பிறப்பதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்னரேயே தமிழும், தமிழகமும் புகழ்பெற்று விளங்கியது. முத்தமிழ், மூவேந்தர் என்னும் அடைமொழிகளால் மொழியும், முடியுடை வேந்தரும் குறிக்கப்பெற்றனர். சேர, சோழ, பாண்டியநாடுகள் முத்தமிழுக்கும் அரிய பல வளங்களைத் தந்து போற்றின. 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில்' காலந்தோறும் பல்வேறு இலக்கியங்கள் தோன்றின.

'சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள்' என்னும் இவ் ஆய்வுநூல் சேரநாட்டுப் புலமையாளர்கள் பலரும் செந்தமிழுக்கு வழங்கிய நூல்களைப் பற்றி ஆராய்கின்றது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் அரிதின் முயன்று இந்நூல்வழி, சேரர்தம் மொழி, நாடு, பண்பாடு, அரசியல் ஆகியன பற்றி ஆராய்ந்துள்ளார். பழந்தமிழ் நூல்களுள் ஒன்றான பதிற்றுப்பத்து என்னும் நூல் முதலாகப் பக்தி இலக்கியங்கள் ஈறாகச் சேரநாட்டுச் செந்தமிழ்ப் புலமை நல்லோர் தமிழுக்களித்த இலக்கியங்கள் இந்நூலில் நன்கு ஆராயப் பெற்றுள்ளன.

நூலின் முதல் இயலான 'பதிற்றுப்பத்து' என்னும் முதல் பகுதியில் சேரமன்னர்களின் அரசியல் வரலாறு, சேரர் அரசாட்சி முறை, சேரர் கொடை வளம், பதிற்றுப் பத்து காட்டும் சமுதாய வாழ்க்கை, பதிற்றுப்பத்தின் இலக்கிய நயம் ஆகியன சிறப்பாக ஆராயப்பெற்றுள்ளன. முதற்கண் சேரவேந்தரின் தொன்மையைத் தக்க சான்று களுடன் நிறுவி, பெருஞ்சோற்று உதியன் சேரலாதன், இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் பல்யானைச் செல்கெழு குட்டுவன், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், சேரன் செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செல்வக் கடுங்கோ வாழியாதன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை முதலாய சேர அரசர்களின் வரலாற்றினை, அரசியல் பின்னணியோடு ஆசிரியர் எடுத்துரைப்பது குறிப்பிடத்தக்கதாகும். அவர்தம் அரசநீதி, பண்பு நலம் முதலியனவற்றை நன்கு அறியுமாறு உரிய எடுத்துக் காட்டுகளுடன் இனிய நடையில் விளக்கியுள்ளார். வீரத்தின் விளைநிலமாகத் திகழ்ந்த அரசர்கள் ஈரத்தின் பிறப்பிடமாகவும் திகழ்ந்து, வந்தோர்க்குக் கொடை நல்கும் இனிய பண்பாளர்களாகத் திகழ்ந்தார்கள் என்பதையும் அவர்களுடைய வரலாற்றால் அறிய முடிகின்றது.

இரண்டாம் பகுதியில் எட்டுத்தொகை நூல்கள் ஆராயப்பெறுகின்றன. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்கள் சேரநாட்டுத் தொடர்புடைய செய்திகளை எங்ஙனம் விவரிக்கின்றன என்பதை இப்பகுதியில் ஆராய்ந்து கூறுவர். சேரனின் தொண்டி, மாந்தை முதலான சங்ககால வரலாற்றுப்புகழ்மிக்க நகரங்களின் குறிப்புகள் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. மூவன் என்னும் குறுநில மன்னனின் வலிமையை அடக்கி அவனுடைய பற்களைப் பிடுங்கித் தன்னுடைய கோட்டைக் கதவில் பதித்த சேரமான் கணைக்கால் இரும்பொறையின் வீரச் செயலும்

எடுத்துக்காட்டப்பெற்றுள்ளது. சேரனின் வஞ்சியில் கொங்குநாட்டினர் மணிகளை இடையில் கட்டிக்கொண்டு தெருவில் ஆடும் 'உள்ளிவிழா' பற்றிய குறிப்புகள், பிற விழாக்கள் பற்றிய குறிப்புகள் முதலாயின படிப்போர்க்குச் சுவை நல்கும் பான்மையன. பழந்தமிழரின் வாழ்க்கை முறையை அறிய விழைவார்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும் என்பது உறுதி.

அகநானூற்றில் சேரர்களைப் பற்றி அறுபத்திரண்டு பாடல்கள் உள்ளதாக ஆசிரியர் கூறுவர். இவற்றுள் பாலைத்திணையைப்பற்றிய பாடல்களே மிகுதியானதாகும் என்பர். வரலாற்றுக் களஞ்சியமான அகநானூறு ஒன்று மொழிக்கோசர் என்பாரின் பண்பு நலன்களை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. ஆதிமந்தியின் வரலாறு, சேரனுடைய கொல்லிமலை, அண்டினாரைக் கொல்லும் பாவையின் தன்மை முதலானவை குறித்த செய்திகள் குறிப்பிடத்தகுந்தன. இயற்கைக் காட்சிகளின் அழகிய வருணனைகள் இவ்விலக்கியங்களில் எங்ஙனம் அமைந்து விளங்குகின்றன என்பதனையும் ஆசிரியர் இந்நூலுள் சுவைபடக் கூறுகின்றார்.

இரண்டாம் இயலில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான களவழி நாற்பதினைப் பொய்கையார் என்னும் புலவர் பாடிச் சேரனைச் சிறையிலிருந்து விடுவித்தார் என்னும், வரலாற்றுச் செய்தி குறித்து ஆராயப் பெற்றுள்ளது.

மூன்றாம் இயல் சேரநாட்டுக் காப்பியங்களைப் பற்றியதாகும். சிலப்பதிகாரம் காட்டும் அரசியல், சமுதாய வரலாறுகள் அக்காலச் சூழலில் எங்ஙனம் விளங்கின என்பது குறித்து ஆசிரியர் விரிவாக ஆராய்ந்துள்ளார். தந்தைக்குப் பின் அவனுடைய மூத்தமகன் முடி சூடும் மக்கள்தாயக் கொள்கையே சிலப்பதிகார காலத்தில் நிலை பெற்றிருந்தது என்றும், மருமக்கள் தாயக்கொள்கை அந்

நாளில் சேரர் பரம்பரையில் நிலவியது என்போர் கூற்றுப் பொருந்தா உரை என்று சிலப்பதிகாரம்மூலம் புலனா கிறது என்பார். இளங்கோவடிகளே இந்நுணுகிய அரசியல் உண்மையினைச் சிலப்பதிகாரத்தின் இறுதியில் இடம் பெற்றிருக்கும் வாழ்த்துக் காதையில் வடித்துக்காட்டு கின்றார் என்று தம் ஆய்வு நுட்பத்தையும் ஆசிரியர் இந் நூலுள் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

'சேரநாட்டுப் பிற இலக்கியங்கள்' என்னும் நான்காம் இயலில் தகடூர் யாத்திரை, முத்தொள்ளாயிரம், புறப் பொருள் வெண்பாமாலை ஆகிய நூல்கள் கூறும் செய்திகள் ஆராயப்பெற்றுள்ளன. காலத்தின் வாய்ப்பட்டு அழிந்துபோன பல நூல்களுள் 'தகடூர் யாத்திரை' என்னும் நூலும் ஒன்றாகும். இந்நூலின் 44 செய்யுட்கள் புறத் திரட்டு என்னும் தொகை நூலில் தொகுக்கப் பெற்றுள்ளன. 'தகடூர்' என்னும் ஊரில் நிகழ்ந்த போர்ச் செய்திகளை இந்நூல் விளக்கமாக எடுத்துரைக்கின்றது. இன்றைய தருமபுரியே அந்நாளின் தகடூர் என்பர். தகடூர் அதியமான் புகழ்பெற்ற மன்னன் ஆவன். 'தகடூர் யாத்திரை' என்னும் நூல் முழுமையாகக் கிடைத்திருப்பின் இன்னும் பல வரலாற்றுச் செய்திகள் நமக்குக் கிடைத் திருக்கக் கூடும்.

ஐந்தாம் இயல் பக்தி இலக்கியங்கள் குறித்ததாகும். வைணவ பக்தி இலக்கியங்கள் சேரநாட்டுப் பெருமையை எங்ஙனம் எடுத்துரைக்கின்றன என்பதை இவ்வியல் ஆராய்கின்றது. சேரநாட்டில் செங்கோல் செலுத்திய குலசேகரரின் பெருமாள் திருமொழி குறித்து இப்பகுதி விரிவாக எடுத்துக் கூறுகின்றது. திருமொழியின் உள்ளுறை பொருள், நயம், சமுதாய வரலாறு, பழக்க வழக்கங்கள் குறித்து இப்பகுதி நன்கு ஆராய்ந்துள்ளது. சைவ இலக்கியங்களுள் பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கைலாய ஞானவுலா, சுந்தரரின்

தேவாரப் பதிகங்கள், வேணாட்டடிகளின் திருவிசைப்பா ஆகியன சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்களாகும். இவ்விலக்கியங்களின் பல்வேறு திறன் குறித்து இவ்வியல் ஆராய்ந்துள்ளது.

பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்களின் நுண்மாண் நுழைபுலமும், வகை தொகை ஆராய்ச்சித் திறனும், நுட்பமான ஆய்வுக் கருத்துகளும் இந்நூலில் நன்கு புலனாகின்றன. மிகப்பரந்துபட்ட ஆய்வுப் பொருளை உள்ளடக்கியதாக விளங்கும் இந்நூலினை நன்கு வரையறை செய்து உரிய மேற்கோள் விளக்கங்களுடன் சான்றுகளைத் தந்திருக்கும் ஆசிரியரின் ஆய்வு நெறி பெரிதும் பாராட்டிற்கு உரியதாகும். ஏராளமான நூல்களுள் நுழைந்து, அரிய பொருள்களை ஆராய்ந்து எடுத்து, எளிய இனிய நடையில் சேரநாட்டுச் செந்தமிழரின் வரலாற்றை அரசியல், சமூக வரலாற்றுப் பின்னணியில் படைத்திருக்கும் பேராசிரியரின் தமிழ்த் தொண்டு பாராட்டிற்குரியதாகும். தமிழ்கூறுநல்லுலகம் இந்நூலினை பெரிதும் வரவேற்கும் என நம்புகின்றேன்.

பழகுதற்கு இனிய பண்பாளரான பேராசிரியர் டாக்டர் சி. பா. அவர்கள் மேன்மேலும் இத்தகைய நல்ல ஆய்வு நூல்களை தமிழுலகத்திற்கு வழங்க என் உளம்நிறைந்த வாழ்த்துக்களும் பாராட்டுதல்களும் உரியன.

செ. அரங்கநாயகம்

# முன்னுரை

முன்னொரு காலத்தில் தமிழகம் சேர சோழ பாண்டிய அரசமரபினரால் ஆளப்பட்டது. சேரர் ஆண்ட தென் பகுதியே தற்பொழுது கேரளா என்று அழைக்கப்படு கின்றது (சேர > கேர > கேரளா). தமிழ்மொழியே அந் நிலத்து வாழ் மக்கள் மொழியாகவும், அரசவை மொழி யாகவும், அரசு மொழியாகவும் இருந்து வந்தது. கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகே மலையாளம் வளர்ந்து தனிமொழியாகச் செயல்படத் தொடங்கி, அரசவையிலும் மற்ற இடங்களிலும் தமிழின் இடத்தைப் பெற்றது. கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டு வரை தமிழ்ப்புலவர் பெருமக்களே சேரநாட்டில் சிறந்து விளங் கினர். இவ் ஆய்வு நூல், சேரநாட்டுப் புலவர் மட்டுமின்றி, சேரநாடு, சேர அரசர் குறித்துத் தம் செய்யுட்களில் செப்பியுள்ள புலவர் குறித்தும் எழுந்துள்ளது.

சங்க இலக்கியம் என்ற தொகுப்பின்கீழ்த் தமிழின் தொன்மைக்கால இலக்கியம் அடங்குகின்றது. அவற்றுள் பதிற்றுப்பத்து சேர அரசமரபு பற்றியும், சேரநாடு பற்றி யும் இயம்பும் இலக்கியமாய்த் திகழ்கின்றது. இவ்ஆய்வின் முதல் இயல், மூன்று பிரிவுகளைக் கொண்டதாகும். முதற் பிரிவு, பதிற்றுப்பத்து குறிப்பிடும் அரசியல், சமுதாயம் மற்றும் அரசர், மக்கள் குறித்து விரிவாக எடுத்துரைக் கின்றது. இரண்டாம் பிரிவு, எட்டுத் தொகையுள் ஒன்றான பதிற்றுப்பத்து நீங்கலாக ஏனைய நூல்கள், சேரர், சேரநாடு குறித்துக் கூறும் செய்திகளைப் பகுத்தும் தொகுத்தும் தருகின்றது. மூன்றாம் பிரிவு, சேரர் குறித்துப் ‘பத்துப்பாட்டு’ நல்கும் செய்திகளைத் திரட்டித் தருகின்றது.

இரண்டாம் இயல், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான களவழி நாற்பது குறித்த ஆய்வு பற்றியதாகும். ஒரு சேரமன்னனின் போர்த்திறனை விளக்கும் இச்செய்யுள் இலக்கியம் மிக்க பயனுடைத்து. மூன்றாம் இயல், இரட்டைக்காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை

குறித்து ஆய்கின்றது. சிலப்பதிகாரம், முடிதுறந்து சமண சமயத்தைத் தழுவிய சேர இளவலால் இயற்றப்பெற்ற காப்பியமாகும். இக்காப்பியம் அக்கால அரசியல், சமுதாயம், சமயம் குறித்து அறியப் பெருந்துணை புரிகின்றது.

நான்காம் இயல், தகடூர் யாத்திரை, முத்தொள்ளாயிரம், புறப்பொருள் வெண்பாமாலை என்பன குறித்த ஆய்வாகும். தகடூர் யாத்திரையில் சில செய்யுட்கள் அன்றிப் பிற கிடைத்தில. முத்தொள்ளாயிரம், ஒரு பகுதியே கிடைத்துள்ளது; அவற்றுள் இருபது செய்யுட்கள் சேர அரசமரபினர் குறித்தது ஆகும். சேர இளவல் ஒருவரால் எழுதப்பெற்ற புறப்பொருள் இலக்கணம், புறப்பொருள் வெண்பாமாலை ஆகும். அவ் இலக்கண நூலில் இயற்றப்பட்டுள்ள நான்கடிகளாலான எடுத்துக்காட்டுச் செய்யுட்கள் சேர அரசர்கள் குறித்துச் சில இடங்களில் மட்டும் குறிப்பிடினும் அரசியல், சமுதாய நிலையையும் குறிப்பிடுகின்றன; கற்பனையில் சிறந்து விளங்குகின்றன. ஐந்தாம் இயல், சேரநாட்டுப் பக்தி இலக்கியங்கள் குறித்தது ஆகும். இது முன்னர்க் குறிப்பிட்ட ஏனைய இலக்கியப் படைப்புகளுக்கு இவ்விலக்கியங்கள் குறைந்தன அல்ல என்று சான்று பகர்கின்றன.

சேரநாட்டையும், சேரநாட்டைச் சார்ந்த பத்தொன்பது அரசர்களையும் மொத்தம் இருபத்தேழு புலவர்கள் தங்கள் செய்யுட்களில் பாடியுள்ளனர் எனத் தெரிகின்றது. சேர அரசர்கள் எண்மர் புலவராகத் திகழ்ந்துள்ளனர். இவ்வரச மரபினில் பற்றுடையவர்களாக அயல்நாடு மற்றும் மரபைச் சார்ந்த அரசர்கள் எண்மர் இருந்துள்ளனர். சில காலக்கட்டங்களில் சேரநாட்டை ஆண்ட அயலார் குறித்தும், சோழ பாண்டிய அரச மரபினர் குறித்தும் சொல்வது இன்றியமையாததாகின்றது. இப்பட்டியலில் மூவர் அடங்குவர். பல்வேறு புலவர், அரசர் குறித்த பட்டியல் இணைக்கப்பட்டுள்ளது. இணைப்பு

VI-ல் சேரநாட்டு இலக்கியம் குறிக்கும் நகரங்களும், ஆறுகளும் குறிக்கப்பட்டுள்ளன.

பக்தி இலக்கியம் என்ற இயலில் குலசேகர ஆழ்வாரின் துதிப்பாடல்களில் காணப்படும் இலக்கிய நயம் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றது.

மலையாளத்தை முதல்மொழியாகக் கொண்டுள்ள கேரளத்தின் பண்பாடு, வரலாற்றுப் பின்னணி குறித்து அறியவும், சேரநாட்டின் இலக்கியம், அரசியல், சமுதாயம் இவற்றின் நிலை குறித்து அறியவும், இவ் ஆய்வு உதவும் என நம்புகின்றேன். ஆய்வுக்கண் திறந்த என் பெருமதிப்பிற்குரிய பேராசான், சான்றோர் பெருந்தகை டாக்டர் மு. வரதராசனார் அவர்களை நன்றியோடு நினைவு கூர்கின்றேன். என்னை இருபது ஆண்டுகளாக ஏற்றிப் புரந்துவரும் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு என்றும் நன்றியுடையேன். பல துறையினும் பல நோக்கினும் பெருகிவரும் ஆய்வு எனும் அருந்தமிழ்ப் பெட்டகத்திற்கு இவ் ஆய்வு நூல் வளஞ்சேர்க்குமெனில் யான் பெருமிதமுறுவேன். "குற்றங்களைந்து குறை பெய்து வாசித்தல் கற்றறி மாந்தர் கடன்" என்றபடி, இலக்கிய ஆய்வுப் பசி மிக்க தமிழ் கூறு நல்லுலகம், இவ் ஆய்வு நூலினை வரவேற்கும் என்னும் துணிபுடையேன்.

தம் அன்பால், பண்பால், அறிவால், ஆற்றலால் தமிழகக் கல்வித் துறையினை நெறிப்படுத்தி, வளப்படுத்தி வரும் சான்றோர் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள், இந்நூலிற்கு அழகியதோர் அணிந்துரை நல்கி, இந்நூலினை அணிபெறச் செய்துள்ளார்கள். அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

சி. பா.

தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறை, தமிழில் சிறந்த நூல்கள் வெளியிட ஊக்குவிக்கும் திட்டத்தின் கீழ், இந்நூல் வெளியீட்டிற்கு நிதியுதவி நல்கியது. தமிழ்நாடு அரசிற்கு என் நன்றி உரியது.

# பொருளடக்கம்

# சங்க இலக்கியம்

"பழந் தமிழ்நாட்டு மக்கள் வேற்றுநாட்டாருடன் நெருங்கிய தொடர்புகொள்வதற்கு முன்னமே, தமிழிலக்கியம் தோன்றி வளரத் தொடங்கியது. அதனால் பழந்தமிழ் இலக்கியம் நாட்டின் சொந்தக் கலையாய் வளர்ந்தது எனலாம். வேற்றுநாட்டு இலக்கியத்தின் சார்போ கலப்போ இல்லாமல் தமிழிலக்கியம் வளர்ந்த காலம் அது; ஆதலின் தமிழ்நாட்டின் இயற்கை வளமும் பழந்தமிழரின் வாழ்க்கை நெறியுமே அந்தப் பழைய இலக்கியத்திற்கு அடிப்படையாய் அமைந்தன" என்று தமிழ்க்கலைக்களஞ்சியக் கட்டுரையொன்றில் (தொகுதி V-ப. 478) டாக்டர் மு. வரதராசனார் குறிப்பார். மாக்சுமுல்லர் கருத்துப்படி, தமிழ்மொழி தனித்தன்மை வாய்ந்த இலக்கியச் செல்வத்தைப் பெற்றுத் திகழும் பெருமை உடையது. தமிழ் இலக்கணம் குறித்த தொன்னூலான தொல்காப்பியத்தில் அதற்கும் முந்தைய இலக்கணங்கள் பற்றிய குறிப்புகள் பல்வேறு நூற்பாக்களில் இடம்பெற்றுள்ளன. இதனின்று தொல்காப்பிய காலத்திற்கு முன்பே தமிழ்மொழி இலக்கண இலக்கிய வளமுடையதாக இருந்திருக்க வேண்டுமென அறியலாம். அறிஞர் தனிநாயக அடிகளார் தமது 'தமிழ்த்தூது' என்னும் அரிய நூலில், தமிழ்ப்புலவர்கள் தங்களது கவித்திறத்தை வெளிப்படுத்துவதற்கு மக்கள் வாழ்க்கையை அடிப்படையாகவும் இயற்கையைத் துணையாகவும் கொண்டனர் என்றும், பழந்தமிழ்ப்புலவர்கள் போன்று எந்தப் புலவரும் இயற்கையை ஆழமாகப் படைத்துக் காட்டவில்லை என்றும் குறிப்பிடுகின்றார். மொழி வாயிலாக வாழ்க்கையை வெளிப்படுத்துவது இலக்கியம் என்று அட்சனால் நிறுவப்

படுகின்ற உண்மை, தமிழ்மொழி அளவிற்கு வலிவாக வேறெங்கும் மெய்ப்பிக்கப் படவில்லை.

சங்க காலம் எனப்படுவது கி. மு. 500 முதல் கி. பி. 200 வரையிலான காலம் எனக் கணிக்கப்பட்டுள்ளது.

சங்கத்தொகை நூல்கள் எட்டுத்தொகை, பத்துப் பாட்டு என்னும் பிரிவுகளாய்ப் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் முதலாவதாகிய எட்டுத்தொகையில் இடம் பெற்றுள்ள இலக்கியங்களில் சில, தமிழ்மொழியில் எழுந்த உண்மையான இலக்கியப் படைப்புகளில் அடங்கும். எட்டுத்தொகையுள் ஒன்றான பதிற்றுப்பத்து சேரர்களைப் பற்றிய தனி நூலாகும். எனவே இவ்ஆய்வு, பதிற்றுப்பத்து குறித்த ஆய்வோடு தொடங்குகின்றது.

# சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள்

## 1. பதிற்றுப்பத்து காட்டும் சேர மன்னர்கள் அரசியல் வரலாறு

### சேர வேந்தரின் பழமை

கிறித்துநாதர் பிறப்பதற்கு முன்னமேயே தமிழகம் சிறந்த வரலாற்றுப் பின்னணியினைக் கொண்டதாக இலங்கியது. தமிழ்மக்கள் திருந்திய வாழ்க்கையினையும் செம்மை சான்ற இலக்கியச் செல்வத்தினையும் உடையவர்களாயிருந்தனர். வரலாற்றுப் பழமை நிறைந்த அந்நாட்களில் இவ் இந்தியப் பெருநாட்டில் பல நாடுகள் (ராஜ்யங்கள்) அமைந்திருந்தன. தென்னாட்டில் புகழ் பூத்து விளங்கிய நாடுகளில் சேர சோழ பாண்டிய நாடுகள் தலைசிறந்தனவாம். இக்கருத்தினை உள்ளிட்டே,

> **வழங்குவது உள்வீழ்ந்த கண்ணும் பழங்குடி**
> **பண்பின் தலைப்பிரிதல் இன்று**[1]

என்ற குறளுக்கு உரை கூறுமிடத்துப் பரிமேலழகர் 'படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வருங்குடிகள் இம்மூவேந்தரும்' என்று கூறிப் போந்தார். தொல்லாசிரியராம் தொல்காப்பியனாரும்,

> **வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்**[2]

என்று வடவேங்கடம் தென்குமரிக்கு இடையில் வழங்கும் பகுதியினைத் தமிழகம் என்றும், இந்நிலப்பகுதி கொடை

---

1. திருக்குறள்; குடிமை : 5.
2. தொல்காப்பியம்; பொருளதிகாரம்: செய்யுளியல், 79.

நெஞ்சு கோடாச் சேர சோழ பாண்டியர் மூவரால் ஆளப் பெற்றுவரும் சிறப்புடையது என்றும் சுட்டினர்.

தமிழ் வேந்தர்களின் அடையாளப் பூமாலையினைத் தொல்காப்பியனார்.

**போந்தை வேம்பே ஆரென வரூஉம்**
**மாபெருந் தானையர் மலைந்த பூவும்** [3]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு பழமையும் பெருமையும் நிறைந்த மூவேந் தருள்ளும் சேர மன்னர்களே பழமையிலும், நாட்டின் பரப்பிலும், கொடைமடத்திலும், மற்ற பிற சிறப்பு களிலும் முதலாவதாக வைத்து எண்ணப்படும் தகுதிக் குரியவராகின்றனர். இதற்குரிய காரணங்களை இனி ஒருவாறு காண்போம்.

சோழ மரபினர் சூரிய வமிசத்தவராக இலக்கியத்தில் குறிக்கப் பெறுகின்றனர்.[4] பாண்டியர்கள் சந்திர வமிசத் தினைச் சேர்ந்தவர்கள் என்பது பெறப்படுகின்றது.[5] ஆயினும் இவர்களினும் சேர அரசர்கள் தொன்மைச் சிறப்பு உடையவர்களான காரணத்தினால் அவர்களது மரபினை இன்னதென வரையறுத்துக் கூறும் நூல்கள் இல்லை. பிற்காலத்து நூல்கள் சேரரை அக்கினி குலத்திற் குரியவராகக் கூறக் காணலாம்.[6] ஆயினும் இக்கூற்றிற்குச் சான்று பகரப் பழைய நூல்கள் துணை செய்யவில்லை.

---

3. தொல்காப்பியம்; பொருளதிகாரம் : புறத்திணை யியல், 5.
4. 'செங்கதிர்ச் செல்வன் திருக்குலம்'—மணிமேகலை, பதிகம்: 9.
5. 'திங்கட் செல்வம் திருக்குலம்' —சிலப்பதிகாரம், 11: 23.
6. 'இவன் செந்தழலோன் மரபாகி யீரேழுலகம் புகழ் சேரன்' —(வில்லிபாரதம்; திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 45)

வரலாற்றாசிரியர் சிலர் சேரர்மரபு தொடக்கக் காலத்தில் தெய்வ சம்பந்தம் பெற்றதாகக் கூறுவர்.[7] பண்டை நூல்களில் 'வானவர்' என்ற சொல் சேரரைப் பலவிடங் களிலும் குறிப்பிடுவதால் இக்கருத்து எழுந்தது போலும்! 'சேரர்' என்ற சொல் 'சேரலர்' என்ற சொல்லிலிருந்து வந்ததாகக் கருதுவர். 'சேரல்' என்பது மலையினைக் குறிக்கும். மேலைக் கடலுக்கும் மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் இடைப்பட்ட பகுதியினைக் கொண்டு அரசாண்டதால் 'சேரலர்' என்று வழங்கப்பெற்றுப் பின்னர் அது 'சேரர்' எனத் திரிந்திருக்கக்கூடும். சேர நாட்டின் கிழக்கெல்லை மேலை மலைத்தொடராகும். இம்மலை தெற்கே பொதியமலை தொடங்கி வடக்கே தபதியாற்றங்கரை வரை உளது. வடநாட்டினர் தம் மொழியில் இம்மலையினை சஃயாத்திரி என அழைத்தனர். சஃயம் என்றால் தொடர்பு; அத்திரி என்றால் மலை. எனவே தொடர்ச்சியான மலை எனப் பொருள்படும். இத்தொடர் தமிழ்ப்பகுதியின் மேற்கே இருப்பதால் குடவரை என்றும், இந்நாட்டை ஆண்ட மன்னர்கள் 'குடவர்' என்றும் கூறப்பட்டனர். இராசராசனுடைய கல்வெட்டுகள் சேர நாட்டைக் 'குடவரை நாடு' எனக் குறிப்பிடுகின்றன.[8] தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமான்,

> **மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னும்**
> **தொன்மை மலைநாடு[9]**

என்று சேரநாட்டை மலைநாடு என்பர். சேர மன்னரைப் 'பாவீற்றிருந்த பல்புகழினர்'[10] எனக் குறிப்பிடுவர்.

---

7. வி. கனகசபைப் பிள்ளை, —(The Tamils 1800 years ago, P, 52)
8. பிற்காலச் சோழர் சரித்திரம், பக். 103.
9. திருத்தொண்டர் புராணம்; சேரமான் பெருமாள் நாயனார் புராணம்; 1.
10. ,, ; ,, : 1.

இலக்கியங்களில் சேரர்கள் பல பெயர்களால் வழங்கப் படுகின்றனர். அப்பெயர்களுள் வானவன், வானவரம்பன், குட்டுவன், குடக்கோ, பொறையன், இரும்பொறை, கடுங்கோ, கோதை என்பன சிறப்புப் பெயர்களாகும். சேரல், சேரலர், சேரமான் என்பன பொதுப் பெயர் களாகும்.

**வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்[11]**
**மாண்வினை நெடுந்தேர் வானவன்[12]**
**வானவன் மறவன்[13]**
**வசையில் வெம்போர் வானவன்[14]**
**பெரும்படைக் குதிரை நற்போர் வானவன்[15]**
**தேனிமிர் நறுந்தார் வானவன்[16]**
**வான வரம்பனை நீயே பெரும[17]**
**சினமிகு தானை வானவன்[18]**
**வென்றி நல்வேல் வான வரம்பன்[19]**

என்று வருஉம் தொடர்கள் சேரர்களை வானவன் என்றும் வானவரம்பன் என்றும் குறிக்கின்றன.

சோழ பாண்டியர் மரபினைக் குறிப்பிடும் பண்டை நூல்கள் சேர மரபின் மூலத்தைக் குறிப்பிடாதொழிந்த தனைநோக்குமிடத்துச் சேரமரபு ஏனைய சோழ பாண்டிய மரபுகளை நோக்கப் பழமை மிகுந்தது என்பது நன்கு

---

11. *அகம்;* 159 : 15.
12. *புறம்;* 139 : 16.
13. *அகம்;* 77 : 15.
14. *அகம்;* 143 : 10.
15. *அகம்;* 309 : 10.
16. *அகம்;* 381 : 15.
17. *புறம்;* 2 : 12.
18. *புறம்;* 126 : 14.
19. *அகம்:* 45 : 16-17.

தெளிவாகும். மேலும் வழக்கிலுள்ள 'சேர சோழ பாண்டியர்' என்னும் தொடரில் சேரர் முற்படக் கூறப் படுதலும் சேரர் சிறப்பினைத் தெளிவுறுத்தும். பழந் தமிழ்நாட்டு வரலாற்றினைப் பரக்கப் பேசும் புறநானூறு பழமை சான்ற நூலாகும். அந்நூலினைத் தொகுத்த புலவர்கள் மூவேந்தருட் சேரரைப் பற்றிய பாடல்களை முன்னர் வைத்தும், ஏனைச் சோழ பாண்டியர் பாடல் களைப் பின்னர் வைத்தும் உள்ளனர். மேலும், பத்துப் பாட்டுள் ஒன்றான சிறுபாணாற்றுப்படையுள்ளும் குட்டுவன் (சேரன்) செழியன் செம்பியன் என்னும் முறை கூறப்படுதலும்[20] கருதற்குரியதாகும்.

சேர மன்னர்களின் நாடும் ஊரும் வடமொழி நூல் களில் குறிப்பிடப்பட்டுள்ளன. வடமொழியில் ஆதிகாவியம் எனப்படும் வான்மீக ராமாயணத்தில், சீதாதேவியை வானரவீரர் தேடிவரும்படி சுக்ரீவன் குறிப்பிட்டுள்ள இடங்களுள் கேரளநாடும், முரசீபத்தனமும்[21] உரைக்கப் பட்டுள்ளன. இம் முரசீபத்தனம் மேலைக் கடற்கரை யிலுள்ள முசிறி என்னும் பட்டினமாக அறிஞர்களால் கருதப்படுகின்றது. இம் முசிறி முற்காலத்தே சுள்ளி யென்னும் பேரியாறு கடலோடு கலக்குமிடத்து விளங்கிய பெருந்துறைமுகமாகவும், சேரர் தலைநகரங்களுள் ஒன்றாகவும் இருந்ததென்பதும், மேனாட்டு யவனரது மரக்கலங்கள் மிளகு முதலிய மலைநாட்டுப் பொருள்களை ஏற்றிச் செல்வதற்கு இம்முசிறித் துறைமுகமே அக்காலத் தில் ஏற்றதாக இருந்ததென்பதும் தமிழ் நூல்களாலும்[22] பிளினி (Pliny) முதலிய யவனாசிரியர்களின் குறிப்பு களாலும் தெரியவருகின்றன.[23]

---

20. சிறுபாணாற்றுப்படை; 49, 65, 82.
21. கிஷ்கிந்தா காண்டம்; 43ம் ஸர்க்கம் : 12 ஆம் சுலோகம்.
22. அகம்; 149; 7-11.
23. Nagam Iyer, T. V. C. Manual, Nol. I. P. 291.

மற்றொரு பழைய இதிகாசமான மகாபாரதத்தி னுள்ளும் சேரர் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. பாரதப்போரில், பாண்டவர் பக்கத்தினின்று சேரமன்னர் துணைபுரிந்தனர் என்று பொதுப்பட அவ்விதிகாசம் குறிப் பிடுகின்றது. தமிழ் நூல்களில் சேரவேந்தன் போர்க் களத்தில் பொருத இரு படைகளுக்கும் உணவு வழங்கினான் என்ற செய்தி குறிப்பிடப்பெறுகின்றது.[24] இச் செய்தி யினையே சிலப்பதிகாரமும் பேசுகின்றது.[25] புகழ்பெற்ற மௌரிய சக்கரவர்த்தியான அசோகன் சாசனத்தில் சேரர் கேரள புத்திரர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.[26] மேலும் அச்சாசனத்தால் அசோகனது கொற்றக் குடைக்கீழ் பாரத நாட்டின் பெரும்பகுதி அடங்கியிருந்த காலத்தும் தமிழ் நாட்டு மூவேந்தர் எம் மன்னர்க்கும் அடங்காது சுதந்தர மன்னர்களாக விளங்கினார்கள் என்பதனை அறியும் பொழுது சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தரின் பெருமையினையும் வீர மேம்பாட்டினையும் விளங்கக் காணலாகும்.

மற்ற அரசர்களுக்கும் மாறாகச் சேர அரசர்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொள்ளாமல் ஒற்றுமையாக இருந்தார்கள் என்பதைச் சங்க இலக்கியங்கள் கொண்டு தெளியலாம். சேர அரசர்களில் தாயாதி அரசர்கள் கூடச் சண்டையிட்டுக் கொள்ளவில்லை.[27]

பழந்தமிழ் நாட்டின் எல்லையைப் புறநானூற்றுப் புலவராம் காரிக்கிழார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

**வடாஅது, பனிபடு நெடுவரை வடக்கும்**
**தெனாஅது, உருகெழு குமரியின் தெற்கும்**

---

24. புறம்; 2 : 13-16.
25. சிலம்பு; வாழ்த்துக்காதை: ஊசல் வரி.
26. V. A. Smith's Early History of India, P. 173.
27. மயிலை சீனி. வேங்கடசாமி—சேரன் செங்குட்டுவன், ப. 2.

**குணா அது, கரைபொரு தொடுகடல் குணக்கும்**
**குடா அது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்**

—புறம்; 6 : 1-4.

பிறிதொரு புறநானூற்றுப் புலவராம் குறுங்கோழியூர் கிழார்,

**தென்குமரி வடபெருங்கல்**
**குணகுடகட லாஎல்லை**

—புறம்; 17 : 1-2.

என்று தமிழ்நாட்டின் எல்லையைக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழகத்தை ஆட்சிபுரிந்து வந்த மூவேந்தர்களில் சேரவேந்தரே சிறக்க மதிக்கப் பெற்றமைக்கு அவர் நாட்டின் விரிவும், வளமும், வீரமும், தமிழபிமானமும் கொடையுமே காரணங்கள் என்பர்.[28]

பாண்டிய நாடு ஐம்பத்தாறு காதமும், சோழநாடு இருபத்துநான்கு காதமும் பரப்பாகக் கொண்டிருக்கச் சேரநாடோவெனில் எண்பது காத அளவு பரப்புக் கொண்டது என்று முன்னோர் குறிப்பிட்டுள்ளனர்.[29] இதனால் சோழ பாண்டிய நாடுகள் இரண்டின் பரப்பினைச் சேரநாடு ஒருங்கு பெற்றிருந்ததனை அறியலாம்.

சேர நாட்டின் எல்லையினைப் பழந்தமிழ்ப் பாட்டொன்று பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

**வடக்குத் திசைபூமி வான்கீழ்தென் காசி**
**குடக்குத் திசை கோழிக் கோடாம் — கடற்கரையின்**
**ஓரமே தெற்காகும் உள்ளெண் பதின்காதம்**
**சேரநாட் டெல்லையெனச் செப்பு.**

## சேரநாட்டின் செழுமை

நானில வளம் பொருந்தியது சேரநாடு. குமட்டூர்க் கண்ணனார்,

---

28. மு. இராகவையங்கார்; சேரவேந்தர் செய்யுட் கோவை: முன்னுரை ப. V.
29. பெருந்தொகை; பாடல்கள்: 2091, 2093, 2098.

**கடலவும் கல்லவும் யாற்றவும் பிறவும்**
**வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு**
**விழவறு பறியா முழவிமிழ் மூதூர்**

—இரண்டாம் பத்து; 5 : 16-18.

என்று குறிப்பிட்டுள்ளார். கடல்படு பொருளும் மலைபடு பொருளும், ஆற்றில் கிடைக்கக்கூடிய பொருளும் சேர நாட்டில் தட்டின்றிக் கிடைத்தன என்று இப்பாட்டில் குறிப்பிடப்பெறுகின்றது. சேரநாட்டு மகளிர் அவலை எறிந்து உலக்கையை வாழை மரத்தின் கண்ணே சார்த்தி வைத்து விட்டு வள்ளைப் பூக்களைப் பறிப்பதற்கு வயலில் இறங்குவார்கள் என்றும், அவ்வயல்கள் பருத்த கதிர் களினால் வளைந்துகிடக்கும் தன்மையன என்றும் பாலைக் கௌதமனார் பாடியுள்ளார்.

**அவலெறிந்த உலக்கை வாழைச் சேர்த்தி**
**வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்**
**முடந்தை நெல்லின் விளைவயல்.**

—மூன்றாம் பத்து; 9 : 1-3.

சேரநாட்டில் எல்லாக் காலங்களிலும் கரும்பு விளை விக்கப் பெற்று, அது அறுவடை செய்யப்படுகிறது என்றும் அப்புலவர் குறிப்பிட்டுள்ளார்.

**கால மன்றியுங் கரும்பறுத்து ஒழியாது**

—மூன்றாம் பத்து; 10 : 14.

சேரநாட்டின் விரிவினையும் வளத்தினையும், சேர மன்னன் படைப்பெருக்கத்தின் சிறப்பினையும் முத்தொள் ளாயிரப் பாடல்களும் புகழ்ந்துரைக்கின்றன.

**வானிற்கு வையகம் போன்றது வானத்து**
**மீனிற் கனையார் மறமன்னர் — வானத்து**
**மீன்சேர் மதியனையான் விண்ணுயர் கொல்லியர்**
**கோன்சேரன் கோதையென் பான்.**

—முத்தொள்ளாயிரம்; 15.

வானமளவு விரிந்த நிலப்பரப்பினையுடையது; அவனுக்கு அடங்கிய சிற்றரசர்கள் வானத்திலுள்ள விண் மீன்களை யொத்தவர்களாவர். சேரமன்னனின் தன்மை வானத்திலுள்ள திங்களையொத்ததாகும் என இப்பாடல் குறிப்பிடுகின்றது.

பிறிதொரு புலவர் ஓர் அழகான காதற்காட்சியினை படம்பிடித்துக் காட்டுமுகத்தான் சேரநாட்டின் வளத் தினை நம் கண்முன் கொணர்ந்துவிடுகின்றார்.

குளத்தில் உள்ள செல்வாம்பல் மொக்குகள் மலர்ந்து மணம் பரப்பும் வேளையில் நெருப்பினும் மிக்க செம்மை தோன்றியது. அக்காட்சியினைக் கண்ட பறவைகள், ஏதோ தீப்பற்றி எரிகின்றது என்று எண்ணித் தம் குஞ்சு களைச் சிறகுக்குள் ஒதுக்கி வைத்துக் கொள்கின்றன. இத்தகு பறவையின் ஆரவாரம் உண்டேயொழியப் பகைவரின் ஆரவாரம் அந்நாட்டில் என்றும் எழுந்த தில்லை என்று புலவர் பாடுகின்றார்.

**அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ**
**வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப்—புள்ளினந்தங்**
**கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கவ்வை யுடைத்தரோ**
**நச்சிலைவேற் கோக்கோதை நாடு.**

—முத்தொள்ளாயிரம்; 13.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பெருமானும்,

**திரைசெய் கடலின் பெருவளமும்**
**திருந்து நிலனின் செழுவளமும்**
**வரைவெய் வளமும் உடன்பெருகி**
**மல்குநாடு மலைநாடு [30]**

என்று மலைநாட்டின் மாறா வளத்தினை மனமாரப் பாராட்டியுள்ளார்.

---

30. பெரியபுராணம்; விறன்மிண்டநாயனார் புராணம்: 1.

மூன்றாம் பத்தில் பாலைக்கௌதமனார் பல்யானைச் செல்கெழு குட்டுவன் நாட்டை,

**யாண்டு பிழைப் பறியாது பயமழை சுரந்து**
**நோயின் மாந்தர்க் கூழி யாக** [31]

என்று பாராட்டுகின்றார். மேலும்,

**கடலுங் கானமும் பலபய முதவ**

—மூன்றாம்பத்து; 2:6.

என்றும் பாராட்டியுள்ளமையால் பல்வளங்களும் நிரம்பிய நாடு பல்யானைச் செல்கெழு குட்டுவன் நாடு என்பது பெறப்படுகிறது. அவன் காத்தோம்பிய நாட்டில் வயல் வளம் சிறக்கப் பெயல்வளம் சிறந்து பேரா யாணர் பெரிதும் நிகழ்கின்றது என்பதும் பின்வரும் பகுதி கொண்டு அறியலாம்.

**வயங்குகதிர் விரிந்து வானகஞ் சுடர்வர**
**வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி**
**பயங்கெழு பொழுதோ டாநிய நிற்பக்**
**கலிழுங் கருவியொடு கையுற வணங்கி**
**மன்னுயிர் புரைஇய வலனேர் பிரங்கும்**
**கொண்டற் றண்டுளிக் கமஞ்சூன் மாமழை**
**காரெதிர் பருவ மறப்பினும்**
**பேரா யாணர்த்தால் வாழ்கனிற் வளமே**

—மூன்றாம்பத்து; 4:23-30

மேலும், 'செந்நீர்ப் பூசலல்லது வெம்மை' (மூன்றாம் பத்து, 18:13-14) அரிதான நாடாகச் சேரநாடு துலங்குகின்றது.

சேரநாட்டின் நெய்தல் வளத்தினை ஆறாம் பத்து அழகுற எடுத்து மொழிகின்றது. 'வளைநரலும் பனிப் பௌவத்து' மருங்கில் 'வண்பிணி யவிழ்ந்த கண் போல் நெய்தல்' கமழ்வதாகக் காக்கைபாடினியார்

---

31. பதிற்றுப்பத்து; மூன்றாம்பத்து: 1:30-31.

நச்செள்ளையார் பாடியுள்ளார் (நான்காம்பத்து, 1:14-17). பிறிதொரு பாடலில் கடல்வளம் அப்படியே படம்பிடித்துக் காட்டப் பெறுகின்றது.

**இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து**
**நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்**
**கமழுந் தாழைக் கானலம் பெருந்துறை**
**தண்கடற் படப்பை நன்னாட்டுப் பொருந.**

—ஆறாம்பத்து; 5:3-6.

கலப்பை யுழுத கொழுவழியில் தானியக் கதிர்கள் நன்கு விளைகின்றன என்பதனையும் காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடுகின்றார்.

**நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்**
**அலங்குகதிர்த் திருமணி பெறூ உம்**
**அகன்கண் வைப்பின் நாடுகிழ வோனே,**

—ஆறாம்பத்து; 8:17-19.

மேலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்,

**பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய**
**மலையவுங் கடலவும் பண்ணியம் பகுக்கும்.**

—ஆறாம்பத்து; 9:14-15.

மன்னனாகப் புலவர் பெருமாட்டியால் குறிப்பிடப் பெறுகின்றான். மேலும் தொண்டி யென்னும் கடற்கரைப் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு அவன் ஆளும் சேரநாடு,

**மறாஅ விளையுள் அறாஅ யாணர்**

—ஆறாம்பத்து; 10:8.

நாடாகக் கூறப்படுகின்றது.

செல்வக் கடுங்கோ வாழியாதன் நாட்டினைக் கபிலர் கவினுறப் பாடியுள்ளார். முல்லை மயங்கும் நில வருணனை பின்வருமாறு அமைந்துள்ளது:

**போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த**
**கடவுள் வாகைத் துய்வீ யேய்ப்பப்**
**பூத்த முல்லைப் புகழ்சூழ் பறவை**
**கடத்திடைப் பிடவின் றொடைக்குலைச் சேக்கும்**
**வான்பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பின்**
**இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன்கண் வைப்பின் நாடுகிழ வோனே.**

—*ஏழாம் பத்து;* 6:14-20.

*இதே முறையிலேயே அரசில் கிழார் பெருஞ்சேரல் இரும்பொறை காத்தோம்பிய நாட்டைக் கவினுறக் கிளத்தி யுள்ளார் (எட்டாம் பத்து;* 5:5-14).

*காந்தளங்கண்ணி சூடிய செல்வக்குடியில் வந்த செல்வ மக்கள் முழவு போன்றமைந்த பெரிய பலாப்பழத்தை உண்டு விழாக் கொண்டாடியது போன்று, புதுமை சான்ற கரிய அழகிய மூங்கிற் குழாயிடத்தே பெய்து முதிர்வித்த இனிய கள்ளையருந்தி ஆரவாரிக்கின்றனர் கொல்லிமலைச் சாரலில் வாழ்வோர் என்று ஒன்பதாம் பத்துப் பேசுகின்றது (ஒன்பதாம் பத்து;* 1:19-24).

*மழை உரிய காலத்தில் தப்பாது பொழிகிறது. ஆண்மானும் பிணைமானும் காட்டகத்தே கூடித் துள்ளி விளையாடுகின்றன. பறவைகளும் வண்டினமும் மரக்கிளை களிலிருந்து ஆரவாரிக்கின்றன. பழங்களும் கிழங்குகளும் பலரும் பலவாக உண்ணவும் குறைவுபடாதுள்ளன. பசுக் கூட்டங்கள் நல்ல புல்லை மேய்ந்து களித்துலவுகின்றன. வறுமை யறியாத வளம் பொருந்திய சிறப்பினால் சேர நாட்டில் பெரிய பலவாகிய புதுப் புதுக் கூலங்கள் பெருகிக் கிடக்கின்றன (ஒன்பதாம் பத்து;* 9:1-7).

**வானம் பொழுதொடு சுரப்பக் கானம்**
**தோடுறு மடமா னேறுபுணர்ந் தியலப்**
**புள்ளு மிஞிறு மாச்சினை யார்ப்பப்**
**பழனுங் கிழங்கு மிசையற வறியாது**

பல்லா னன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலங் கெழும.

—ஒன்பதாம் பத்து; 9:1-7.

இவ்வாறு சேரநாடு நானில வளமும் நன்கு சிறந்து, இயற்கை எழிலும் பூத்துங் குலுங்கிக் கவினார் காட்சி வழங்கியது என்பதனைப் பதிற்றுப்பத்தின் பாடல்கள் பலவும் எடுத்து மொழிகின்றன.

## பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்

சேரலாதன் என்பது சேர வேந்தரின் குடிப்பெயர் ஆகும். குட்டநாட்டு வஞ்சி நகரைத் தலைநகரமாகக் கொண்டு சேரநாட்டை ஆண்ட மன்னர்களுள் இவ் வேந்தனே பழைமையானவனாகக் கருதப்படுகின்றான். சேரர்களில் பெருஞ்சேரலாதன் என்றும் நெடுஞ்சேரலாதன் என்றும் பெயர்கள் காணப்படுதலால் சேரலாதன் என்ற பெயரினைப் பொதுவாகக் கொள்ளலாம். சேரலாதன் என்பது சேர வேந்தனான ஆதன் என்று பொருள்படுகிறது என்றும், எனவே சேரமான் ஆதன் என்பான் வழிவந்தவரே சேரலாதன் என்ற பெயருடையோர் ஆவர் என்றும் நன்கு விளங்கும் என்பர் ஆய்வாளர்.[32]

முதலாம் பத்திற்குரிய சேரமன்னன் பெருஞ்சோற்று தியன் சேரலாதனே என்பர். ஆயினும் அப்பத்து இன்று கிடைக்காமையினால் இவனது வரலாற்றினை விளங்கக் காண முடியவில்லை. புறநானூற்றின் இரண்டாவது பாடல் இவனைப் பற்றியதாகும். முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர் பெருமான் இவ்வேந்தனைப் பாடியுள்ளார். இப்பாட்டு இவன் பாரதப் போர் நடந்த காலத்துப் பாண்டவர் கௌரவர் ஆகிய இரு திறத்துப் படையினர்க்கும் பெருஞ்சோறு வழங்கியதாகக் குறிப்பிடுகின்றது. அப்பகுதி வருமாறு:

---

32. திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, பண்டை நாளைச் சேர மன்னர் வரலாறு, ப. 61.

**அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ**
**நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை**
**ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்**
**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்.**

— *புறம்;* 2:13-16.

புறநானூற்றின் பழைய உரைகாரர் இப்பகுதிக்குப் பின் வருமாறு உரை கண்டுள்ளார்:

"அசைந்த தலையாட்டமணிந்த குதிரையையுடைய பாண்டவர் ஐவருடனே சினந்து நிலத்தைத் தம்மிடத்தே கொண்ட பொற்பூந் தும்பையையுடைய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் பொரு போர்களத்தின்கட் படுந் துணையும் பெருஞ்சோறாகிய மிக்க உணவை இரு படைக்கும் வரையாது வழங்கினோய்".

இவ்வுரைகாரர் கூற்றையே உண்மையெனக் கொண்டு சிலர் இச்சேரவேந்தன் பாரத காலத்தவன் என்றும், பாரத வீரர்களுக்குப் பெருஞ்சோறு அளித்தவன் இவனே என்றும், இவன் கொடைச்செயலைச் சிறப்பித்துப் பாடிய முரஞ்சியூர் முடிநாகராயரும் பாரத காலத்தவர் என்றும் கருத்துக்கொள்ளலாயினர்.[33] அறிஞர் சிலர், செங் குட்டுவன் பாட்டனாகிய உதியஞ் சேரலாதன் பாரத காலத்தவனாதற்கு இயைபின்மையால், பெருஞ்சோற்று தியன் வேறு, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுடைய தந்தையும், செங்குட்டுவனுடைய பாட்டனுமாகிய உதியஞ் சேரல் வேறு என்றும்,

**துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை**
**முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை**

— *அகம்;* 233: 7-9.

---

33. திரு. மு. இராகவையங்கார், சேரவேந்தர் செய்யுட்கோவை, ப. IX.

என மாமூலனார் குறிப்பிடுவது பாரத காலத்திய நிகழ்ச்சி என்றும் கூறுவர்.[34]

“கோதுமை உண்ணும் கூட்டத்தவரான பாண்டவ கௌரவர்கட்கு நெற்சோறுண்டு தென்னாட்டுப் பகுதிகள் ஒன்றில் வாழும் வேந்தனொருவன் சோறு கொடுத்தான் என்பது சிறிதும் ஒவ்வாதது என்றும், கௌரவர் இறந்தது குறித்துச் செய்த விழாவில் பேரெண்ணினரான மக்கட்கு இவ்வுதியன் பெருஞ்சோறளித்தான் என்று கொள்வதே பொருத்தமானது என்றும், இவ்விழா, பாரத வீரர்கட்குச் சிரார்த்தமாகவோ பாரதக் கதையை நடித்த நாடகத்தின் இறுதி விழாவாகவே இருத்தல் வேண்டும் என்பர். பேராசிரியர் பி. டி. சீனிவாச ஐயங்கார், மேலும் அவர், செயற்கரும் செயல் செய்த வீரர் வரலாறுகளை நடித்துக் காட்டும் கூத்து நிகழ்த்துவோர்க்கு மன்னர் பெருஞ் சோறளித்துப் பாராட்டும் மரபு உண்டென்றும் அவ்வாறு பாரதக் கூத்தினை நிகழ்த்திய கூத்தர்க்குப் பெருஞ்சோறு வழங்கியதனையே புறப்பாடல் குறிப்பிடுகின்றது என்றும் கூறுவர்.[35] ஆயினும் இக்கருத்தும் பொருந்துவதாக இல்லை. ஏனெனில் சாக்கைக் கூத்து அல்லது கதகளி என்னும் இவ்வகைக் கூத்து சங்ககாலத்திற்குப் பின்னர்ச் சேரநாடு கேரள நாடாகத் திரிந்த பின்றை நிலையில் ஆங்காங்குத் தோன்றிய சிற்றரசர்களுள் கொட்டாரக் கரை சிற்றரசர் ஒருவர் இக்கதகளிக் கூத்தினை முதற்கண் தோற்றுவித்தார் எனப்படுவதனால், பெருஞ்சோற்றுதியன் சேரலாதனுக்குப் பல நூறாண்டுகள் பிற்பட்டு வரலாற்றில் இடம்பெறும் கேரள சிற்றரசர்கள் காலத்துத் தோன்றிய தொரு கூத்து, பெருஞ்சோற்றுதியன் காலத்தில் நிகழ்ந்த தாகக் குறிப்பிடுவது ஆராய்ச்சி முறைக்குப் பொருந்தி

34. திரு. மு. இராகவையங்கார், சேரவேந்தர் செய்யுட்கோவை, ப. IX.

35. History of the Tamils, PP. 492—494.

வராத ஒன்றாகும்.[36] சங்ககாலத்தே தென்னாட்டு ஊர்களில் பாரதம் படிப்பதும், அது கேட்டுச் செல்வர்கள் பாரதி விருத்தியென்ற நிவந்தங்கள் வழங்குவதும் யாண்டுங் கூறப்படாமையும், இத்தகு நிகழ்ச்சிகள் இடைக்காலத்தும் பிற்காலத்து மட்டுமே நிகழ்ந்தன என அறியப்படுகின்றமையும் மேற்கூறப்பட்ட கருத்திற்கு எதிராக உள்ளனவாகும்.

வேறு சில அறிஞர் உதியன் சேரலாதன் தன்னுடைய முன்னோருள் சிலர் பாரதப்போரில் இறந்தவராக, அவர்கட்குச் செய்த ஆண்டுவிழாவில் இப்பெருஞ்சோற்றை அளித்திருக்க வேண்டும் என்றும் கூறுவர்.[37]

இது பற்றி நெடிது ஆராய்ந்த ஆராய்ச்சி அறிஞர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் பின்வருமாறு முடிவு கூறுகின்றார்:

"பெருஞ்சோற்றுதியன் கொங்குநாட்டில் தான் பெற்ற வெற்றி குறித்துச் செய்த விழாவில் மேற்கொண்டு மகிழ்ந்து ஆற்றிய பெருஞ்சோற்றுநிலை என்னும் புறத்துறைச் செயல், அவனுக்கே சிறப்பால் அமைந்தமையின், அவன் பெருஞ்சோற்றுதியன் எனச் சிறப்பிக்கப் பெற்றான் என்பதும், அதனைப் பாராட்ட வந்த முடிநாகனார் ஒப்புமை பற்றி முன்னோன் ஒருவன் செயலை இவன்மேல் ஏற்றிக் கூறினார் என்பதும் தெளியப்படும்."[38]

---

36. திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பண்டை நாளைச் சேரமன்னர் வரலாறு, ப. 70.

37. K. G. Sesha Aiyar, Cera kings of the Sangam Period, P. 7.

38. திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பண்டை நாளைச் சேரமன்னர் வரலாறு, ப. 71.

எனவே பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் வேறு, இமயவரம்பன் தந்தையான உதியஞ்சேரல் வேறு என்பது பெறப்படும்.[39]

"நாடுகண் அகற்றிய உதியஞ் சேரல்[40]" என்று மாமூலனாரால் குறிப்பிடப்பெறும் சேரனே உதியஞ் சேரலாவன். இவ்வுதியன் சேரலே பதிற்றுப்பத்தின் முதற்பத்திற்குரியவனாவன். இவன் வெளியன் வேண்மான் என்னும் வேளிர்குல அரசனுடைய மகளாகிய நல்லினி என்னும் நங்கை நல்லாளை மணந்து கொண்டான் என்பது பதிற்றுப்பத்தின் இரண்டாம் பதிகத்தினால் தெரியவருகின்றது.[41] இவ்விருவர்க்கும் இரு புதல்வர்கள் பிறந்தார்கள். மூத்த மகனே இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் ஆவன். இவனே இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவன். இளையமகன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் ஆவன். இவனே மூன்றாம் பத்தில் பாடப்படும் சேர மன்னனாவன்.

## இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவன். உதியஞ்சேரலின் மூத்த மகன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பதும், இளைய மகன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்பதும் பதிகத்தின் வழி அறியப்படுகின்றன. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்றும் இவன் அழைக்கப்படுகின்றான். குமட்டூர்க் கண்ணனார் என்னும் புலவர் இவ்வரசன்மீது

---

39. திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பண்டை நாளைச் சேரமன்னர் வரலாறு, ப. 72.

40. அகம்; 65: 5.

41. "இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மான் நல்லினி யீன்றமகன்"
(இரண்டாம் பத்து, பதிகம் 3—4)

இரண்டாம் பத்தினைப் பாடியுள்ளார். இம்மன்னனுக்கு மனைவியர் இருவர். ஒருத்தி வேள் ஆவிக் கோமான் பதுமன் தேவி என்பவளாவள். இவளுடைய தங்கையை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தாயாதித் தம்பி யாகிய செல்லக் கடுங்கோ வாழியாதன் மணஞ் செய்திருந் தான். அவளுடைய பெயரும் வேளாவிக் கோமான் பதுமன்தேவி என்பது எட்டாம் பத்தின் பதிகத்தால் அறியப் படுகின்றது. செல்வக் கடுங்கோ வாழியாதன் பொறையன் மரபினைச் சேர்ந்தவன் என்பதும், இவனுடைய தந்தை அந்துவன் பொறையன் என்பதும் அறியப்படுகின்றன.

## போர்ச் செயல்கள்

சேரநாட்டுக்கு வடமேற்கே மேற்கடலில்—கொண்கான நாட்டுக் கடற்கரையை அடுத்த தீவுகளில் கடம்ப மரத்தைக் காவல் மரமாகக் கொண்டிருந்த கடம்பர்கள் வாழ்ந்து வந்தனர். இவர்களைத் துளு நாட்டுக்கு அடங்கிய குறும்பர்கள் என்றும் கூறுவர்.[42] இவர்கள் சேரநாட்டுத் துறைமுகங்களை நோக்கி வணிகப் பொருள்களை ஏற்றிக் கொண்டுவந்த யவனக் கப்பல்களையும் பிற நாட்டுக் கப்பல்களையும் இடைமறித்துத் தடுத்துக் கொள்ளையிட்டு வந்தனர். கி. பி. 80 இல் வாழ்ந்திருந்த பிளினி (Pliny) என்னும் யவனர் தாம் எழுதியிருக்கும் யவன வாணிகக் குறிப்பிலிருந்து மேலே கண்ட செய்தி உண்மையெனத் தெரிகின்றது. இதனால் சேரநாட்டின் வாணிபவளம் பாதிக்கப்பட்டது. எனவே நெடுஞ்சேரலாதன் ஒரு பலம் வாய்ந்த கப்பற்படையினைச் செலுத்திக் கடற்குறும்பு செய்த கடம்பரைவென்று, அவர்தம் காவல் மரத்தையும் தடிந்து வந்தான். கடலகத்தே மாமரத்தைக் காவன் மரமாகக் கொண்டிருந்த சூரனை வேலாயுதத்தால் வென்ற முருகப் பெருமானின் வெற்றிக்கு உவமையாக

---

42. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டு வன், ப. 8.

இயம்வரம்பன் நெடுஞ்சேரலாதனின் வெற்றியினைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியுள்ளார். இக்குறிப்பிடத் தக்க கடம்பனின் வெற்றி, பின்வரும் பாடற்பகுதிகளில் சுட்டப் பெறுகின்றது.

பலர்மொசிந் தோங்கிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்
நாரறி நறவின் ஆர மார்பிற்
போரடு தானைச் சேர லாத.

—*இரண்டாம் பத்து*; 1: 12-16.

துளங்குபிசி ருடைய மாக்கடல் நீக்கிக்
கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை
ஆடுநர் பெயர்த்துவந் தரும்பலி தூஉய்க்
கடிப்புக் கண்ணுறூஉந் தொடித்தோள் இயவர்.

—*இரண்டாம் பத்து*; 7: 4-7.

இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச்சென்று
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின முன்பின்
நெடுஞ்சேர லாதன்.

—*இரண்டாம் பத்து*; 10: 2-5.

வரலாற்றுக் குறிப்புகளைத் தம் பாடலில் பெரும் பான்மையும் மறவாது குறிப்பிடும் மாமூலனார் என்னும் சங்கச் சான்றோரும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கடம்பறுத்த செய்தியினைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

வலம்படு முரசின் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பறுத்து.

—*அகம்*; 127: 3-4.

சால்பெருந் தானைச் சேர லாதன்
மால்கடல் ஓட்டிக் கடம்பறுத் தியற்றிய
பண்ணமை முரசின் கண்ணதிர்ந் தன்ன

—*அகம்*; 347: 3-5.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடும் குமட்டூர்க் கண்ணனார் அவன் ஆரிய அரசர்கள் சிலரை வென்றதாகவும் பாடியுள்ளார். பதிற்றுப்பத்தின்இரண்டாம் பத்துப் பதிகமும்,

**பேரிசை மரபின் ஆரியர் வணக்கி**

என்று குறிப்பிடுகின்றது. ஆனால் அவ் ஆரிய அரசர்கள் இன்னார் என்பது தெரியவரவில்லை. தமிழ்நாட்டு எல்லைக்கு வடக்கில் இருந்த தெலுங்கரையும் கன்னடத்தினரையும் வடுகர், வடவர் எனத் தமிழர் அந்நாட்களில் குறித்தனர். இவ்விரு மொழி பேசுவோர் வாழ்ந்த பகுதிகளுக்கு அப்பாலே இருந்த மக்களை 'ஆரியர்' என்று சங்க கால மக்கள் வழங்கினர். தக்காணப் பகுதிகளை ஆண்ட சதகர்ணி (நூற்றுவர் கன்னர்) என்னும் மன்னர்களோடு சேர அரசர்கள் நல்ல நட்புறவு கொண்டிருந்தனர் என்பது, சேரன் செங்குட்டுவனுக்கு அவர்கள் அவனுடைய வடநாட்டுப் படையெடுப்பினுக்குக் கங்கைப் பேரியாறு கடத்தற்கும், இமயமலையில் பத்தினிக் கடவுட்குரிய படிமம் சமைத்தற்குரிய கல் எடுத்தற்கும் துணையாக விளங்கியமை கொண்டு அறியலாம். எனவே அக்காலத்தே வடநாட்டில் ஆண்ட சிற்றரசரான ஆரிய மன்னர்கள் சிலரை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வெற்றிகொண்டான் என்று கொள்வதே அமைவுடைத்தாகும்.

ஆரிய அரசர்களை அமர்க்களத்தே வென்று அதற்கு அடையாளமாக இவன் தன்னுடைய விற்கொடியினைத் தன் வீர மேம்பாடு தோன்ற இமயமலையிற் பொறித்தான் என்பது மாமூலனாரும் பரணரும் பாடியுள்ள அகநானூற்றுப் பாடல்கள் வழிப் புலனாகின்றன.

**வலம்படு முரசிற் சேர லாதன்**
**முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமயத்து**
**முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து.**

—அகம்; 127:3-5.

**ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்**
**தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து**
**வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்.**

—அகம்; 396: 16—19.

இச்செய்தியினை,

**அமைவரல் அருவி இமயம் விற்பொறித்து**

என்று 2ஆம் பத்துப் பதிகமும்,

**கடற்கடம் பெறிந்த காவலன் வாழி**
**விடர்ச்சிலை பொறித்த வேந்தன் வாழி**

—சிலம்பு; 23 : 81—82.

என்றும்,

**மாநீர் வேலிக் கடம்பெறிந் திமயத்து**
**வானவர் மருள மலைவிற் பூட்டிய வானவன்**

—சிலம்பு; 25 : 1—2.

என்றும் சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றன.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் யவனரை வென்று சிறைப்பிடித்து, அவர்கள் தலையில் நெய்யை ஊற்றிக் கைகளைப் பின்கட்டாகக் கட்டிக்கொண்டு வந்து, அவர்களிடமிருந்து திறையாக வயிரம் முதலிய பெருஞ் செல்வங்களைப் பெற்றுக் கொண்டதாக இரண்டாம் பத்தின் பதிகம் உரைக்கின்றது. அப்பகுதி வருமாறு:

**நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து**
**நெய்த்தலை பெய்து கைபிற் கொளீஇ**
**அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு**
**பெறுவிறன் மூதூர்த் தந்துபிறர்க் குதவி.**

இப்பகுதிக்கு விளக்கம் எழுதியுள்ள பதிற்றுப்பத்தின் பழைய உரைகாரர் அக்கால வழக்காற்றினைப் பின் வருமாறு சுட்டுகின்றார்;

''இதன் பதிகத்து யவனர்ப் பிணித்தென்றது யவனரைப் போருள் அகப்படுத்தியென்றவாறு. நெய்த்

தலைப்பெய்து கைபிற் கொளீஇ யென்பதற்கு, அக்காலத்துத் தோற்றாரை நெய்யைத் தலையிற் பெய்து கையைப் பிறகு பிணித்தென்றுரைக்க. அருவிலை நன்கலம் வயிரெமாடு கொண்டென்றது அந்த யவனரைப் பின்தண்டமாக அருவிலை நன்கலமும் வயிரமுங் கொண்டென்றவாறு."

பதிகத்தில் வரும் இச்செய்தி இரண்டாம் பத்தின் பத்துப்பாடல்களில் ஒரு பாடலிலேனும் காணப்படாமை யால் குமட்டூர்க் கண்ணனார் 2ஆம் பத்துப் பாடிய பிறகு, இமயவரம்பன் யவனரோடு தொடுத்த போர் நடை பெற்றிருக்க வேண்டும் எனக் கொள்ளலாம். இவ் யவனர் தக்காணத்து மேற்குக் கரைப் பக்கமாகச் சில ஊர்களை அரசாண்டிருந்த யவனர் என்பர் வரலாற்றாராய்ச்சி யாளர்.[43] மேலும், தக்காணத்தின் விந்தியப் பிரதேசத்தில் இந்தச் சாகயவன அரசர்கள் ஆட்சி நடத்தினர் என்றும், இவர்களுக்கும் சதகர்ணி அரசர்களுக்கும் போர் ஏற்பட்டது என்றும், அப்போரில் தம் நட்பினரான சதகர்ணி அரசர்கள் பக்கம் நின்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் உதவினான் என்றும், இதனையே ஒன்பதாம் பத்து இளஞ்சேரல் இரும்பொறையின் முன்னோன் செயலாகக் குறிப்பிடுகின்றது என்றும் கூறுவர்.[44] சேரநாட்டுக் கடற்கரைப் பட்டினத்தில் குடியேறியிருந்த யவனரை நெடுஞ்சேரலாதன் வென்றான் என்றும் ஆராய்ச்சியாளர் சிலர் குறிப்பிட்டுள்ளனர்.[45] இக்கருத்து தவறு என்று திரு. மயிலை சீனி. வேங்கடசாமி தம் ஆராய்ச்சி நூலான

---

43. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டு வன், ப. 11.

44. 9:2-16.

45. K. N. Sivaraja Pillai, The Choronology of Early Tamils, P. 117.

'சேரன் செங்குட்டுவன்' என்னும் நூலில் குறிப் பிட்டுள்ளார்.[46]

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் 58 ஆண்டுகள் வீற்றிருந்தான் என்று பதிகம் குறிப்பிடுகின்றது. இவன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியுடன் போர் செய்து இறந்ததாகப் புறநானூற்றுப் பாடல் ஒன்று[47] குறிப்பிடுகின்றது. போர் என்னும் இடத்தில் அப்போர் நிகழ்ந்ததாகவும் அப்போரில் இருதரத்துப் படை மறவரும் யானைகளும் குதிரைகளும் மாண்டு வீழ்ந்ததாகவும், அதே போர்க்களத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் புண்பட்டுப் போர்க்களத்தில் விழுந்து சில காலம் உயிர் போகாமல் கிடந்தனர் என்றும் அப்பாட்டு குறிப் பிடுகின்றது. இந்நிகழ்ச்சியை நேரில் கண்டு கழாத் தலையார் பாடல் பாடினார் என்றும், அப்பாடல் மறக்கள வழி என்னும் துறையைச் சாரும் ; என்றும் குறிப்பிடுவர். பின்னர் நெடுஞ்சேரலாதன் போர்க்களத்து இறந்த செய்தி யினையும் கழாத் தலையார் பிறிதொரு பாடலில் பாடி யுள்ளார்.[48] சேரனும் சோழனும் போரில் புண்பட்டு வீழ்ந்து கிடந்த நிலையினை நேரிற் கண்டு பரணரும் ஒரு பாடல் பாடியுள்ளார்.[49] இதனால் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்

---

K. G. Sesha Aiyar, Cera kings of the Sangam Period, P. 18.

K. A. Nilaknta sastri, A Comprehensive History of India, P. 519.

46. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டு வன், ப. 12.
47. புறம்; 368.
48. புறம்; 63.
49. புறம்; 62.

கிள்ளியும் சமகால அரசர்கள் என்பதும், இவர்களைப் பாடியுள்ள குமட்டூர்க் கண்ணனாரும், கழாத்தலையாரும், பரணரும் சமகாலப் புலவர்கள் என்பதும் தெரியவருகின்றன.

## பல்யானைச் செல்கெழு குட்டுவன்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தம்பி பல் யானைச் செல்கெழு குட்டுவனாவான். குடநாட்டை மாந்தை என்னும் கடற்கரை நகரிலிருந்து இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆட்சி செய்தான். இவன் குட்ட நாட்டை வஞ்சிமாநகரிலிருந்து ஆட்சி செய்தான். இவன் போர் செய்து நாட்டை விரிவுபடுத்துவதில் பெருவேட்கை காட்டினான். குட்டநாட்டுக்குக் கிழக்கில் தென்மலைத் தொடரின் மேற்கில் மணல் பரந்த பகுதி அந்நாளில் பூழி நாடு என்று வழங்கப்பட்டது. பூழி நாட்டில் வாழ்ந்தவர் பூழியர் எனப்பட்டனர். இப்பூழி நாட்டின் அண்மையில் அணிபெற விளங்கிற்றுத் தென்மலைப் பகுதி. இத்தென் மலையில் யானைகள் மிகுதி. பூழி நாட்டினர் யானையைப் பிடித்துப் பழக்கிப் போருக்கு ஆயத்தப்படுத்துதலில் வல்லவராவர். எனவே குட்டுவன் படை, யானைகளை மிகுதியாகப் பெற்றிருந்தது. இச்சிறப்புக் குறித்துக் குட்ட நாட்டுக் குட்டுவன், பல்யானைச் செல்குழு குட்டுவன் என வழங்கப்பெற்றான்.

அக்காலத்தில் இப்போது ஆனைமலைத்தொடர் என வழங்கும் தென்மலைப் பகுதியில் முதியர் என்பார் வாழ்ந்து வந்தனர். குட்ட நாட்டின் வடபகுதிக்கு நேர் கிழக்கில் வடமலைத் தொடரின்மிசை இருந்த பாயல் நாட்டுக் குறுநிலத் தலைவர் சிலர் அவ்வப்போது குட்டநாடு புகுந்து குறும்பு செய்யத் தலைப்பட்டனர். உம்பற்காட்டின் வடபகுதியில் அமைந்திருந்த அகப்பா என்னும் அரண் இவர்கட்குத் தலைமையிடமாக இருந்தது. இவ்வரண் உயரிய மதிலும் பெரிய காவற்காடும் கொண்டு பாது

காப்பாக அமைந்திருந்தது. இவர்களை அடக்கப் பல் யானைச் செல்கெழு குட்டுவன் யானைப் படை நடத்திச் சென்று, குறும்பு செய்த குறுநிலத் தலைவர்களை எளிதில் வென்று அவர்கள் பணிந்து திறைதரத் தன்னாடு திரும்பினான். உம்பற்காடு சேரவேந்தரின் ஆணைக்கும் ஆட்சிக்கும் உட்படுவதாயிற்று. முதியர் இப்போரில் குட்டுவனுக்குத் துணை நின்றனர். உம்பற்காட்டு வெற்றியுடன் அமையாது, குட்டுவன் மேலும் படை நடத்திச் சென்று அகப்பா என்னும் அரணைக் கைப்பற்றி, அதனைச் சுற்றியுள்ள ஊர்களைத் தீக்கிரையாக்கிப் பின்னர் அப்பகுதியினை முதியர் காவலின் கீழ் வைத்துத் தன் அரசவாணையை அப்பகுதியிலும் நிறுவிவிட்டுத் தன் தலைநகர் திரும்பினார். இச்செய்தியினையே, மூன்றாம் பத்தின் பதிகம்,

> உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ
> அகப்பா எறிந்து பகற்றீ வேட்டு
> மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்
> கண்ணகன் வைப்பின் மண்வகுத்து ஈத்து

என்று குறிப்பிடுகின்றது.

> துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை
> ஓங்குநிலை வாயிற் றூங்குபு தகைத்த
> வில்விசை மாட்டிய விழுச்சீர் ஐயவிக்
> கடிமிளைக் குண்டு கிடங்கின்
> நெடுமதில் நிறைப் பதணெத்து
> அண்ணலம் பெருங்கோட்டு அகப்பா வெறிந்த
> பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ
>
> — மூன்றாம் பத்து; 2:21-27.

என்று பதிற்றுப்பத்து இவனுடைய அகப்பா எறிந்த வெற்றியைக் குறிப்பிடுகின்றது.

இவன் கொங்குநாட்டுப் பகுதிகள் சிலவற்றையும் வென்றான் என்பது,

**மாகெழு கொங்கர் நாடகப் படுத்த**
**வேல்கெழு தானை வெருவரு தோன்றல்**
—மூன்றாம் பத்து; 2:15-16

என்ற பதிற்றுப்பத்தால் தெரியவருகின்றது. இவனுடைய வெற்றியில் யானைப்படை பெரும் பங்கு வகித்தது என்பது

**அமர்கோள் நேரிகந்து ஆரெயில் கடக்கும்**
**பெரும்பல் யானைக் குட்டுவன்**
—மூன்றாம் பத்து; 9:13-14.

என்பதனால் அறியப்படுகின்றது. மேலும் இவன் யானைகளைக் கீழ்க்கடல் முதல் மேற்கடல் வரையில் ஆங்காங்கு நிறுத்தி அந்த யானைகளின் மூலமாகக் கீழ்க்கடல் நீரையும் மேற்கடல் நீரையும் ஒரே நாளில் கொணரச் செய்து அந் நீரைக் கொண்டு தன்னை முழுக்காட்டிக் கொண்டான் என்பது

**கருங்களிற் றியானைப் புணர்நிரை நீட்டி**
**இருகடல் நீரும் ஒருபகல் ஆடி**

என்று மூன்றாம் பத்தின் பதிகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வெற்றியினால் விம்மிதம் எய்திய பல்யானைச் செல்கெழு குட்டுவன் சேர நாட்டைச் சேர்ந்த மேற்கு மலையின் ஒரு பகுதியாகிய அயிரைமலையின்கண் அமைந் திருந்த கொற்றவை கோயிலுக்குச் சென்று வீரர் வணங்கும் வெற்றிக் கடவுளான தெய்வத்தினைப் பரவி நின்றான்.

பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் என்னும் அந்தணப் புலவர் பாடிய பாட்டு மூன்றாம் பத்தாகப் பதிற்றுப்பத்தில் விளங்குகின்றது. இப்பாடலுக்குப் பரிசாக, "பாடிப்பெற்ற பரிசில்: 'நீர் வேண்டிய கொண்மின்' என, பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பத்தாம் பெரு வேள்வியில் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணா ராயினார்" என்று மூன்றாம் பத்துப் பதிகத்தின் அடிக் குறிப்பு கூறுகிறது.

பல்யானைச் செல்கெழு குட்டுவன், பாலைக் கௌதமனாரும் அவர் பார்ப்பணியும் சுவர்க்கம் புக யாகத் தீ வேட்டு உதவியதனைக் கேள்வியுற்ற சோழ நாட்டு அந்தணனாகிய பராசரன் என்பான், இச்சேர மன்னன் அவைக்களம் போந்து, வேள்வி இயற்றி வேதம் ஓதி வெற்றி கொண்டு 'பார்ப்பன வாகை' பெற்றதோடு சேர வேந்தனால் நல்கலன்களும் நல்கப் பெற்றான் என்று சிலப்பதிகாரங்கொண்டு தெளியலாம்.

**குலவுவேற் சேரன் கொடைத்திறங் கேட்டு**
**வண்டமிழ் மறையோற்கு வானுறை கொடுத்த**
**திண்டிறல் நெடுவேல் சேரலற் காண்கெனக்**
**காடும் நாடும் ஊரும் போகி**
**நீடுநிலை மலயம் பிற்படச் சென்றாங்கு**
**ஒன்றுபுரி கொள்கை இருபிறப் பாளர்**
**முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி**
**ஐம்பெரு வேள்வியுஞ் செய்தொழி லோம்பும்**
**அறுதொழி லந்தணர் பெறுமுறை வகுக்க**
**நாவலங் கொண்டு நண்ணார் ஓட்டிப்**
**பார்ப்பன வாகை சூடி யேற்புற**
**நன்கலங் கொண்டு தன்பதி பெயர்வோன்**

— சிலம்பு; 23:62-73.

இவன் இருபத்தைந்து ஆண்டு ஆட்சி செய்தான் என்றும், நெடும்பாரதாயனார் என்னும் இவனுடைய அரசவைப் புரோகிதர் இல்வாழ்க்கையைத் துறந்து தவஞ் செய்யக் காடு சென்றபோது இவ்வரசனும் மண்ணரசையும் மனைவியையும் துறந்து காட்டுக்குச் சென்றான் என்றும் பதிகங்கொண்டும், பதிகத்தின் அடிக்குறிப்பு கொண்டும் பழைய உரைகாரரின் விளக்கம் கொண்டும் அறிகிறோம். பதிகத்தின் பகுதி வருமாறு :

**ஒடுங்கா நல்லிசை யுயர்ந்த கேள்வி**
**நெடும்பார தாயனார் முந்துறக் காடுபோந்த**
**பல்யானைச் செல்கெழு குட்டுவன்.**

## களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்

குட நாட்டை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆட்சி செய்த காலையில் குட்டநாட்டிற்குத் தென்கிழக்கில் அமைந்திருந்த குன்றநாட்டுக் காவலை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் முதல் மனைவி பதுமன் தேவி வயிற்றில் பிறந்த மகன் நார்முடிச்சேரல் மேற்கொண் டிருந்தான். இக்குன்ற நாட்டுப் பகுதியில் வண்டன் என்னும் பழையோன் வழிவந்தவரும், முதியர் இனத்த வரும் வாழ்ந்து வத்தனர். அவர்கள் இவன்பால் பேரன்பு பூண்டொழுகினர்.

அந்நாளில், குடநாட்டின் வடக்கில் இருந்த பகுதி கொண்கான நாடு என வழங்கப்பட்டது. அக்கொண் கானத்தின் வடபகுதி துளுநாடு என்றும், கீழ்ப்பகுதி புன்னாடு என்றும் வழங்கின. கொண்கானப் பகுதியினை நன்னன் என்னும் வேள்புல வேந்தனும், புன்னாட்டுப் பகுதியினைக் கங்கன் என்பவனும், புன்னாட்டிற்குத் தெற்கில் உள்ள பகுதியினைக் கட்டி என்பவனும், அதற்கும் தெற்கில் அமைந்திருந்த பகுதியினைப் புன்றுறை என்பவனும் ஆட்சி செய்து வந்தனர்.

நன்னன் வழிவந்தோர், நன்னன் வேண்மான்,[50] நன்னன் ஆஅய்,[51] நன்னன் சேய்[52] நன்னன் ஏற்றை[53] என்று சான்றோர்களால் நூல்களில் வழங்கப் பெறு கின்றனர். நன்னன் வேண்மான் துளுநாட்டு வியலூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டான். நன்னன் ஆசாய், பிரம்பு என்னும் ஊரினைக் கோநகராகக் கொண்டு அரசாண்டான். நன்னன் சேய் தற்போது வடார்க்காடு மாவட்டத்தில் திருவண்ணாமலைக்கு

50. அகம்: 97: 2.
51. அகம்; 366.
52. மலைபடுகடாம்; 87.
53. அகம்; 44.

அணித்தேயுள்ள செங்கைமா என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு, அவ்வூரைச் சுற்றியிருந்த பகுதிகளை அரசாண்டான். நன்னன் ஏற்றை பொள்ளாச்சிக்கு அணித்தேயுள்ள ஆனைமலைப் பகுதியினை உள்ளிட்ட பாலைக்காட்டுப் பகுதியினை அரசாண்டான். இப்பகுதியில் இன்றும் காணப்படும் நன்னன் முக்கு[54], நன்னன் பாறை,[55] நன்னனேற்றை[56] என்னும் ஊர்கள் நன்னன் என்னும் குலத்தவர் கொங்குநாட்டிலும் பரவி அரசாண்ட சிறப்பினை நுவலும் என்பர்.[57]

நன்னன் மரபின் முதல்வனான நன்னன் கொண்கான நாட்டில் ஏழில் மலைப் பகுதியினைத் தன் நாடாகக் கொண்டு ஆட்சி செலுத்தினான்.

> **மெய்ம்மலி பெரும்பூண் செம்மற் கோசர்**
> **தோகைக் காவின் துளுநாடு**

என்று அகப்பாடல் (15) குறிப்பிடும் துளுநாட்டில் கோசர் வாழ்ந்து வந்தமை அறியப்படும். இத்துளுநாடும் நன்னர்க்கு உரியதாயிருந்தது.

> **........................பல்வேற் கோசர்**
> **இளங்கள் கமழும் நெய்தலஞ் செறுவின்**
> **வளங்கெழு நன்னாடு**

—அகம்; 113 : 5-7.

என்ற அகப்பாடலால் துளு நாட்டுள்ளும் மேலைக் கடற்கரையைச் சார்ந்த நெய்தல் பகுதியிலேயே கோசர்கள் வாழ்ந்துவந்தனர் என அறிகிறோம். இக்கோசர் வேளிர் குலத்தவர் அல்லர் என்றும், அதியர், மழவர் போன்ற ஓர் இனத்தவரே இவர்களும் என்றும், துளுநாடு, கொங்குநாடு,

---

54. மலையாள மாவட்டத்துப் பொன்னானி தாலுக்கா.
55. மலையாள நாட்டு ஏர்நாடு தாலுக்கா-
56. T. A. S. Vol. III. P. 8.
57. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பண்டை நாளைச் சேரமன்னர் வரலாறு, ப. 127.

பாண்டிநாடு ஆகிய இந்நாடுகளில் இவர்கள் பெரும் பான்மையும் வாழ்ந்தனர் என்றும், இவர்கள் எப்பகுதியிலும் நிலை பெறத் தங்கி, நாடு வகுத்து நல்லரசு காணவில்லை என்றும் அறிஞர் ஆய்ந்து கூறுவர்.[58]

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் என இம்மன்னனுக்குப் பெயர் வந்த காரணத்தைப் பதிற்றுப்பத்தில் பழையவுரைகாரர் பின்வருமாறு கூறுவர்:

''களங்காய்க் கண்ணி நார்முடியென்றது களங்காயாற் செய்த கண்ணியும் நாராற் செய்த முடியுமென்றவாறு. தான் முடிசூடுகின்ற காலத்து ஒரு காரணத்தால் முடித்தற்குத்தக்க கண்ணியும் முடியும் உதவாமையிற் களங்காயால் கண்ணியும் நாரால்முடியும் செய்துகொள்ளப்பட்டனவென்றவாறு''

இதற்குரிய காரணமாகப் பின்வரும் செய்தியினை மகாவித்துவான் மு. இராகவையங்கார் குறிப்பர்.

''முடிசூடுகின்ற சமயத்தில் முடித்தற்குரிய கண்ணியும் கிரீடமும் பகைவர் கவர்ந்ததனால் உதவாமை பற்றி, அவற்றுக்குப் பிரதியாகக் களங்காயாற் கண்ணியும் நாரால் முடியுஞ் செய்து புனைந்துகொண்டு பட்டம் பெற்றமையின் 'களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்' என்னும் பெயர் பெற்றான்.[59]

இக்காரணத்தை வரலாற்றறிஞரான திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி மறுக்கிறார்.[60] இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் உடன்று போர் செய்து போர்க்களத்துப் புண்

58. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பண்டை நாளைச் சேரமன்னர் வரலாறு, ப. 128.

59. சேரன் செங்குட்டுவன், ப. 12 & 13.

60. A comprehensive History of India, Vol IV P. 521 foot note.

பட்டு உயிர் நீங்காது சின்னாள் கிடந்தமையின் போர்க் களத்தே அம்முடியும் கண்ணியும் சிதைந்தோ கெட்டுப் போயோ இருக்க வேண்டும் என்றும், முடிசூட்டுவிழா திடீரென்று நடைபெற்ற காரணத்தால் அச்சமயத்துக்கு வாய்ப்பாக களங்காயாற் கண்ணியும், நாரினால் முடியும் புனைந்து முடிசூடிக் கொண்டான் என்றும், அதுவே இவனுக்கு இப்பெயர் வரக் காரணமும் ஆகும் என்றும் கூறுவர். ஆராய்ச்சி அறிஞர்.[61] இவன் பிற்காலத்தே நவமணிகள் பதித்து முத்துவடங்கள் நிறைந்த நல்ல முடியினை அணி பெறச் சூடியிருந்தான் என்பதைப் பின்வரும் பாடற்பகுதி உணர்த்துதல் காண்க:

**இலங்குமணி மிடைந்த பசும்பொற் படலத்து**
**அவிரிழை தைஇ மின்னுமிழ் பிலங்கச்**
**சீர்மிகு முத்தந் தைஇய**
**நார்முடிச் சேரல்.**

—நான்காம் பத்து; 9: 14-17.

சேரநாட்டினைச் சிறப்புற ஆண்ட இம்மன்னன் அந் நாட்டோடு ஒட்டிய கொங்கு நாட்டுப் பகுதிகள் சில வற்றைக் கைப்பற்றித் தன் ஆட்சிப் பரப்பை அகலப்படுத்தி யதன் காரணமாக அழுக்காறு கொண்ட கொங்குநாட்டுத் தகடூர் மன்னனாகிய நெடுமிடல் எழினி என்பான் பாண்டி யரிடம் படை உதவிபெற்று இச்சேரவேந்தனைச் செருக் களத்தே செயிர்த்தெதிர்த்தனன். நெடுமிடல் எழினி இப்போரில் தோற்றுப் போனான்.

**நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்**
**பெருமலை யானையொடு புலங்கெட இறுத்து.**

—நான்காம் பத்து; 2 : 10-11.

அடுத்து நார்முடிச் சேரல் மேற்கொண்ட போர் துளு நாட்டு நன்னன் மேலதாகும். சேரநாட்டின் வடபகுதி யிலிருந்த பூழிநாட்டையும் கொங்குநாட்டின் வடக்குப்

---

61. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 210.

பகுதிகளையும் துளுநாட்டு மன்னனாகிய நன்னன் கைப் பற்றிக்கொள்ள, அவனை வெல்லும் பொருட்டு நார்முடிச் சேரல் தொடங்கிய போர் நெடுநாள் நிலைச்செருவாக நடந்தது. இறுதியில் நார்முடிச் சேரல் வெற்றி கொண்டான். பூழி நாட்டைத் திரும்பவும் நன்னனிடமிருந்து மீட்ட நார்முடிச்சேரல் துளுநாட்டினுட் புகுந்து போர் செய்து, பின்னர் நன்னன் நாட்டின் கடற்கரைப் பக்க மாகப் புகுந்து, அவன் நாட்டின் நல்ல ஊர்களாகிய வியலூர், கொடுகூர், நறவு முதலிய ஊர்களைக் கைப் பற்றினான். கடம்பின் பெருவாயில், வாகைப் பெருந்துறை என்னும் இடங்களிலும் போர் நிகழ்ந்தது. இறுதியில் நன்னன் தோல்வியுற்றதோடு போர்க்களத்திலும் இறந்து போனான். இச்செய்தி,

எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்துப்
பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்

—நான்காம் பத்து; 10: 13-16.

என்ற பதிற்றுப்பத்துப் பகுதியாலும்,

ஊழின் ஆகிய உயர்பெருஞ் சிறப்பில்
பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇப்
உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச் செருவின் ஆற்றலை யறுத்தவன்
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்பச்
செருப்பல செய்து செங்களம் வேட்டு

என்ற நான்காம் பத்தின் பதிகத்தாலும் தெரியவருகின்றது. மேலும் இச்செய்தி கல்லாடர் இயற்றிய அகப்பாடல் ஒன்றாலும் வலியுறுகின்றது.

..........................................குடா அது
**இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்**
**பொலம்பூண் நன்னன் பொருதுகளத் தொழிய**

**வலம்படு கொற்றந் தந்த வாய்வாள்**
**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்**
**இழந்தநாடு தந்தன்ன வளம்.**

—அகம் ; 199: 18-24.

இவ்வெற்றிக்குப் பின்னர் நன்னன் வழிவந்தோர் சேர வேந்தரின் அரசாணையை ஏற்று அவருக்குக் கீழடங்கித் துளுநாட்டை ஆண்டனர். அதனால் 'நன்னன் உதியன்' என்ற பெயரும் அவருக்கு வழங்கிற்று.

**நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்**
**தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்தபொன்**

—அகம் ; 258: 1-3.

என்ற பரணரின் அகப்பாட்டு இக்கருத்தினை வலியுறுத்தல் காண்க.

களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் மீது நான்காம் பத்துப் பாடிய புலவர் காப்பியாற்றுக் காப்பியனார் ஆவர். இவர் இதற்காகப் பெற்ற பரிசில் நாற்பது நூறாயிரம் பொன்னும் மன்னன் ஆள்வதில் ஒரு பாகமுமாகும். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் இருபத்தைந்து ஆண்டுகள் அரசு புரிந்தான்.

## சேரன் செங்குட்டுவன்

சங்ககாலச் சேரமன்னர்களுள் சேரன் செங்குட்டுவனே வீரமும் ஆற்றலும் புகழும் சிறப்பும் மிக்கோனாக விளங்கு கின்றான். தென்னாட்டு அசோகன் என்றும் இவனை ஓர் ஆசிரியர் புகழ்கின்றார்.[62] இமயவரம்பனுக்கு வேளாவிக்கோ பதுமன் தேவி என்னும் மனைவி வயிற்றில் பிறந்த மகன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலுக்குப் பிறகு, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனனின் மற்றொரு மனைவியாகிய சோழன் மணக்கிள்ளியின் மகனான செங்குட்டுவன்

---

62. திரு மு. இராகவையங்கார், சேரன் செங்குட்டுவன், ப. 198.

சேரநாட்டின் செங்கோல் வேந்தனாயினன். இவன் இளவரசனாயிருந்தபோதே தன் தந்தை தமையன் முதலியோர் மேற்கொண்ட போர்களில் இவன் பங்கு கொண்டு வெற்றி பெற்றிருக்கிறான். மேலும் நெடுஞ் சேரலாதன் கடற்குறும்பு செய்த பகைவரை வெல்வதற்கு இளவரசனான செங்குட்டுவனையே அனுப்பினான் என்று தெரிகிறது. பகைவரின் காவல் மரமான கடம்பமரத்தை வெட்டி அதனால் முரசு செய்து தன் நாட்டிற்கு வெற்றி யுடன் திரும்பிய செய்தி பல பாடல்களால்[63] தெரிய வருகின்றது. பதிற்றுப்பத்தில் பரணர் செங்குட்டுவன் மேல் பாடிய ஐந்தாம் பத்தும், அதற்குப் பழையவுரைகாரர் எழுதிய குறிப்புரையும் இதற்குச் சான்று பகருகின்றன. அவை வருமாறு:

**........................தானை மன்னர்**
**இனியா ருளரோ நின்முன்னும் இல்லை**
**மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது**
**விலங்குவளி கடவும் துளங்கிருங் கமஞ்சூல்**
**வயங்குமணி யிமைப்பின் வேல்இடுபு**
**முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசினோரே.**

இப்பாடலில் செங்குட்டுவனின் கடற்போர்ச் செய்தி குறிப்பிடப் பெறுகின்றது.

"கடல் மறுத்திசி னோராகிய தானை மன்னர் இனியாருளரோ, நின் முன்னும் இல்லையெனக் கூட்டி வினைமுடிவு செய்க. கடல் மறுத்தல் என்றது கடலிற் புக்கு ஒருவினை செய்தற்கு அரிதென்பதனை மறுத்தலை."

"செங்குட்டுவன் காலத்திலும் அவனுடைய தந்தை நெடுஞ்சேரலாதன் காலத்திலும் இருந்த பரணரே,

---

63. அகம், 127: 35; 347: 3-6.
பதிற்றுப்பத்து; 2:1; 2-16; 2:2-3; 7:4-7; 10:2-5.
சிலம்பு; 28: 135-136.

செங்குட்டுவன்தான் முதல்முதல் கடற்போர் செய்தான், அவனுக்கு முன்பு கடற்போர் செய்தவர் இலர் என்று கூறுகிறபடியினாலே செங்குட்டுவன் இந்தக் கடற்போரைத் தன் தந்தை ஏவியபடி செய்தான் என்பது தெரிகின்றது'' என ஆராய்ச்சி அறிஞர் திரு மயிலை சீனி. வேங்கடசாமி குறிப்பிடுகின்றார்.[64] இக் கருத்தைப் பின்வரும் இரண்டாம் பத்துப் பாட்டு வலியுறுத்துவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

**பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்**
**கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்**
**வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்**
**நாரறி நறவின் ஆர மார்பின்**
**போரடு தானைச் சேரலாத.**

—இரண்டாம் பத்து ; 1 : 12-16.

இப்பாட்டில் 'கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்' என வருவதனால் தந்தை ஏவ மகன் போர் உடற்றினான் என்பது அறியப்படுகின்றது. தந்தையும் மகனும் ஆற்றிய போராதலின் கடம்பறுத்த செயல் இருவர் மேலும் கூறப் படுகிறது.

சிலப்பதிகாரம்,

**கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை**
**படர்ந்தநிலம் போர்த்த பாடலோ பாடல்**

—சிலம்பு ; 29: வள்ளைப்பாட்டு 3.

என்றும்,

**பொங்கிரும் பரப்பிற் கடல்பிறக் கோட்டிக்**
**கங்கைப் பேரியாற் றுக்கரை போகிய**
**செங்குட் டுவன்**

—சிலம்பு ; 30, கட்டுரை 12-14

என்றும் செங்குட்டுவன் ஆற்றிய கடற்போரினைக் குறிப்பிடு கின்றது. மேலும் சிலப்பதிகார ஊசல் வரியும் அவன் கடற்போர்ப் புகழைச் சிறப்பித்துரைக்கின்றது.

---

64. சேரன் செங்குட்டுவன், ப. 26 & 27.

**கடம்பெறிந்த வாபாடி ஆடாமோ ஊசல்.**

—சிலம்பு; 29, ஊசல் வரி 2

செங்குட்டுவனை எதிர்க்கும் பகைவர் நிலவரங்கில் இல்லாமையினால் நீரரங்கு சென்று குறும்பரோடு போருடற்றினான் என்று பரணர் பாடியுள்ளார்.

**படைநிலா விளங்கும் கடல்மருள் தானை**
**மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்**
**பொருமுரண் பெறாஅது விளங்குசினஞ் சிறந்து**
**செருச்செய் முன்பொரு முந்நீர் முற்றி**
**ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய**
**நீர்மாண் எஃகம்.**

—அகம்; 212 : 15-20.

மேலும் பரணர்,

**நீர்புக்குக்**
**கடலொடு உழந்த பனித்துறைப் பரதவ**

—ஐந்தாம் பத்து; 8 : 3-4.

என்று செங்குட்டுவனைக் கடலில் மீன்வேட்டம் ஆடும் பரதவனுக்கு ஒப்பிட்டுள்ளார். கடற்போரில் இவன் பெற்ற வெற்றியே இவனுக்குக் 'கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்', 'சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன்' என்னும் சிறப்புப் பெயர்களை நல்கியது.

தன் தமையன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் துளுநாட்டு நன்னனோடு, துளுநாட்டின் தெற்குப் பக்கத்திலிருந்து தாக்கியபோது, செங்குட்டுவன் துளு நாட்டின் மேற்குப் பக்கத்தில் கடற்கரையோரமாகச் சென்று தாக்கினான். நிலைச்செருவாய்ப் பலகாலம் நடந்த இப்போர் இறுதியில் சேரர்க்கே வெற்றியைத் தந்தது. இப் போரில் செங்குட்டுவன் கொண்கான (துளு) நாட்டுக் கடற்கரைப் பகுதியிலிருந்த வியலூர், கொடுகூர் முதலிய ஊர்களை வென்று கைப்பற்றினான். வியலூர் துளு நாட்டின்கண் இருந்தது என்பதனை,

**அகவுநர்ப் புரந்த அன்பிற் கழல்தொடி**
**நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்**
**வயலை வேலி வியலூர்**

—அகம்; 97 : 11-13.

என்று மாமூலனார் கூறியுள்ளதனின்றும் உணரலாம். இவ்வெற்றியினைப் பதிற்றுப்பத்துப் பதிகம் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது:

**உறுபுலி யன்ன வயவர் வீழச்**
**சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி**
**அக்கரை நண்ணிக் கொடுகூர் எறிந்து**

—பதிற்று; ஐந்தாம் பத்து: பதிகம்.

இளங்கோவடிகள்,

**கறிவளர் சிலம்பில் துஞ்சும் யானையின்**
**சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்**

—சிலம்பு; 28 : 114-115.

என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

செங்குட்டுவனுடைய பங்காளித் தமையனான தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை கொங்குநாட்டைக் கைப்பற்றிக் கொண்டபோது, சோழ பாண்டியர் கொங்கர்க்குத் துணை நின்று சேரனை எதிர்த்தனர். அப்போரில் செங்குட்டுவன் தன் அண்ணனுக்குத் துணைநின்று பகைவர் பலரையும் வென்றான் என்பதனைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

**நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்**
**கொங்கர் செங்களத்துக் கொடுவரிக் கயற்கொடி**
**பகைப்புறத்துத் தந்தனர் ஆயினும் ஆங்கவை**
**திசைமுக வேழத்தின் செவியகம் புக்கன.**

—சிலம்பு; 25 : 152-155.

**கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்**
**பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்**
**வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்**
**கடமலை வேட்டம் கட்புலம் பிரியாது**

—சிலம்பு; 25 : 156-159.

பங்களர், கட்டியர், கங்கர் என்போர் அக்காலத்தே தமிழகத்தைச் சுற்றியிருந்த பகுதிகளில் இருந்தவர் ஆவர். வேங்கட மலைக்கு மேற்கே தமிழ் நாட்டின் எல்லைப்புற நாடாக இருந்தது பங்கள நாடாகும். இந்த வெற்றி சேரன் செங்குட்டுவனின் வீரத்தையும் வெற்றி மேம் பாட்டையும் வளர்த்து நின்றது.

சேரன் செங்குட்டுவன் செய்த போர்களில் சிறப்பான தொரு போர் அவன் மேற்கொண்ட மோகூர்ப் போராகும். மோகூர் பாண்டிநாட்டில் மதுரைக்கு அண்மையில் இருந்தது. பிற்காலத்தில் வைணவத் திருப்பதியாக விளங்கிய திருமோகூரே இம்மோகூர் என்பர்.[65] மோகூர் மன்னன் பாண்டியர்க்குப் படைத்தலைவனாக இருந்தான். மோகூர் மன்னனுக்கும் அறுகை என்னும் குறுநில மன்னனுக்கும் பகை இருந்தது. ஒருகால், போரில் அறுகை மன்னனை மோகூர் மன்னன் வென்றான். தோற்ற அறுகைக்கு நண்பனாக இருந்த செங்குட்டுவன் அறுகையின் சார்பில் மோகூர்மேல் படையெடுத்துச் சென்றான். மோகூர்ப் பழையன் அப்போரில் முற்றிலும் தோற்றான். அவன் காவல்மரமாகிய வேப்பமரத்தை வெட்டி அதனால் முரசு செய்து தன் நாடு திரும்பினான். இவ்வெற்றி பலராலும் பலவிடங்களிலும் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. அவற்றை ஒருங்கே காண்போம்.

**நுண்கொடி யுழிஞை வெல்போர் அறுகை**
**சேணன் ஆயினும் கேளென மொழிந்து**
**புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்று**
**அரண் கடாவுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன**
**மோகூர் மன்னன் முரசங் கொண்டு**
**நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து**

---

65. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 31.

**முரசுசெய முரற்சிக் களிறுபல பூட்டி**
**ஒழுகை யுய்த்தோய் கொழுவில் பைந்துணி**

—*ஐந்தாம் பத்து;* 4 : 10-17.

என்றும்,

**வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து**
**மொய்வளம் செருக்கி மொசிந்துவரு மோகூர்**
**வலம்படு குழூஉநிலை அதிர மண்டி**
**...............**
**படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து**
**படுகண் முரசம் நடுவட் சிலைப்ப**
**வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்**
**கருஞ்சினை விறல்வேம் பறுத்த**
**பெருஞ்சினக் குட்டுவன்**

—*ஐந்தாம் பத்து;* 9 : 7-17.

என்றும் *பரணர் குறிப்பிடுகிறார்.*

**பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்**
**முழாரை முழுமுதல் துமியப் பண்ணி**
**வாலிழை கழிந்த நறும்பல் பெண்டிர்**
**பல்லிருங் கூந்தல் முரற்சியால்**
**குஞ்சர ஒழுகை பூட்டி**

என்று *ஐந்தாம் பத்தின் பதிகம் குறிப்பிடுகின்றது.* சிலப் *பதிகாரத்திலும் இம்மோகூர் வெற்றி பேசப்பட்டுள்ளது.*

**பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு**
**வேம்புமுதல் தடிந்த ஏந்துவாள் வலத்துப்**
**போந்தைக் கண்ணி பொறைய.**

—*சிலம்பு;* 27 : 124-126.

*இப்போரில் மோகூர் மன்னன் பழையனுக்குத் துணை யாகச் சோழ பாண்டிய வேந்தர்களும், வீரத்தில் மேம்பட்ட வேளிர் சிலரும் பங்கு கொண்டனர் என்பதும் தெரிய வருகின்றது.*

பழையன் பெண்டிரின் கூந்தலை அரிந்து திரித்த கயிற்றினைக் குஞ்சர ஒழுகை பூட்டிப் பழையனின் காவல் மரமான வேம்பினை ஏற்றிச் சென்றான் என்ற அரிய செய்தியைப் பதிகம் குறிப்பிடுகின்றது.

சோழன் கரிகாலன் இறந்த பின்னர் அவன் மகனான கிள்ளி வளவன் முடிசூடிக் கொண்டபோது, சோழர் குடியில் வந்த தாயாதிகள் ஒன்பதின்மர் தங்கட்கும் ஆட்சியுரிமை கோரி உள்நாட்டுக் கலகத்தை விளைவித்தனர். அதுபோது செங்குட்டுவன் தன் மைத்துனனான கிள்ளிவளவன் சார்பில் படையெடுத்துச் சென்று சோழர் ஒன்பதின்மரையும் ஒருங்கே வென்றான். இவ்வெற்றியினை,

வெந்திறல்,
ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயில்புறத் திறுத்து
நிலைச் செருவின் ஆற்றலை யறுத்து

என்று ஐந்தாம் பத்தின் பதிகமும்,

மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்
இளவரசு பொறாஅர் ஏவல் கேளார்
வளநா டழிக்கும் மாண்பின ராதலின்
ஒன்பது குடையும் ஒருபக லழித்தவன்
பொன்புனை திகிரி ஒருவழிப் படுத்தோய்
—சிலம்பு; நீர்ப்படை, 118-123.

ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை
நேரிவாயில் நிலைபெற வென்று
—சிலம்பு; நடுகல், 116-117.

என்று சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றது.

கங்கைக் கரையில் செங்குட்டுவன் இரு போர்களைச் செய்துள்ளான். தன் தாயைக் கங்கை நீராட்டக் கொண்டு சென்றபோது முதற் போர் நிகழ்ந்தது என்றும் பிறிதொரு போர் கண்ணகியைக் கடவுண் மங்கலம்

செய்யக் கல் எடுக்கச் சென்றபோது நடந்ததென்றும் கூறுவர்.[66]

**கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்**
**எங்கோ மகளை யாட்டிய அந்நாள்**
**ஆரிய மன்னர் ஈரைஞ் நூற்றுவர்க்**
**கொருநீ யாகிய செருவெங் கோலம்**
**கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்**

—சிலம்பு; காட்சி. 160-165.

என்ற அடிகளில் சுட்டப்படுவது முதற்போர் என்றும், கனகவிசயரை வென்றது பிறிதொரு போர் என்றும் கூறுவர்.

வடநாட்டு வெற்றியினை ஐந்தாம் பத்தின் பதிகம் பின்வருமாறு குறிப்பிடுகின்றது:

**கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்**
**கானவில் கானங் கணையிற் போகி**
**ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை**
**இன்பல் அருவிக் கங்கை மண்ணி.**

பதிகத்தில் காணும் இச்செய்தி பதிற்றுப்பத்தில் காணப் படவில்லை. காரணம். ஐந்தாம் பத்துப் பாடிய பரணர் காலத்திற்குப் பின்னரே இவ்வடநாட்டுப் போர் நிகழ்ந் திருக்க வேண்டும். எனவே அச்செய்தி பதிற்றுப்பத்தில் விடுபட்டதாகலாம்.

ஐந்தாம் பத்துப் பாடியமைக்காகப் பரணர்க்குச் செங்குட்டுவன் தன் மகன் குட்டுவன் சேரலைப் பரிசாகக் கொடுத்தான் எனக் கூறுகிறது பதிகம். இதன் பொருள் பரணருக்கு மாணவனாகக் குருகுலவாசம் செய்யக் கொடுத்தான் என்பதேயாகும். இதனால் குட்டுவன் சேரலுக்குப் பரணர் கல்வி புகட்டினார் என்பது தெரிய

---

66. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 35.

வருகின்றது. பரணர் உம்பர்காட்டு வாரியைப் பரிசிலாகப் பெற்றார் என்பதும் அறியப்படுகிறது.

செங்குட்டுவன் ஐம்பத்தைந்து ஆண்டு வீற்றிருந்த தாகப் பதிகம் குறிப்பிடுகின்றது.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

ஆறாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் ஆவன். இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனுக்கு வேளாவிப் பதுமன்தேவி ஈன்ற மக்கள் இருவருள் இவன் இளையவன். நெடுஞ்சேரலாதனின் மற்றொரு மனைவியாகிய சோழன் மணக்கிள்ளியின் மகள் நற்சோணையின் மூத்த மகன் செங்குட்டுவனுக்கும் இவன் இளையோனாக இருந்திருக்க வேண்டும். எனவே இவன் தன் தமையனான களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கும் செங்குட்டுவனுக்கும் பின்னர்ச் சேரநாட்டு ஆட்சியைப் பெற்றான்.

அக்காலத்தில் தொண்டை நாட்டிற்கும் கொண்கான நாட்டிற்கும் இடைப்பகுதி தண்டாரணியம் எனப்பட்டது. அப்பகுதியினைப் புரந்துவந்த மன்னர்கட்கும் சேரர்க்கும் இடையே ஏற்பட்ட பகைமை காரணமாக இவன் அந்நாட்டின் மீது படையெடுத்துச் சென்று வெட்சிப் போர் செய்து அந்நாட்டின் ஆநிரைகளைக் கவர்ந்தான். பின் அவற்றைத் தன் நாட்டுக்கு ஓட்டி வந்து, தன் நாட்டுத் தொண்டி நகர்க்கண் நிறுத்தி, வெட்சிப் போர் விளைவித்து வெற்றி தேடித் தந்த வீர மறவர்களுக்கும் ஒற்றுரைத்த ஒற்றர்களுக்கும், கணி சொன்ன கணியர்களுக்கும் பாதீடு செய்தான். தண்டாரணியத்திலிருந்து கொண்டுவந்த கால் நடைச் செல்வங்களுள் ஆடுகளே மிக்கிருந்தமையின் இவனுக்கு ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது. இதனைப் பதிகம்,

**தண்டா ரணியத்துக் கோட்பட் டவருடையைத்**
**தொண்டியுட் டந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்**
**கபிலையொடு குடநாட் டோரூ ரீத்து**
**வான வரம்பனெனப் பேரினிது விளக்கி**

என்று குறிப்பிடுகிறது. மேலும் இவனுக்கு 'வானவரம்பன்' என்ற பெயரும் வழங்கியது என்பது தெரிகிறது.

சேரநாட்டின் வடக்கே வாழ்ந்த சதகன்னர் குடநாட்டுட் புகுந்து குறும்பு செய்யத் தலைப்பட்டனர். எனவே சேரலாதன் குடபுலம் நோக்கிப் படைநடத்திச் சென்றான். நன்னன் மரபினருட் சிலர் அப்போது கொண்கான நாட்டை ஆண்டுவந்தனர். அவர்கள் மலைபடு பொருளும், காடுபடு பொருளும், கடல்படு பொருளும் சிலவற்றைத் திறையாகத் தந்து பணிந்தேத்தினர். பின்பு சேரலாதன் நன்னன் வழியினரின் துணையோடு தன்னை எதிர்த்துவந்த சதகன்னருடன் பெரும்போர் செய்து வெற்றி பெற்றான். தோற்ற சதகன்னர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் அடிபணிந்து திறை தந்த அளவில் இவனும் சினம் தணிந்து வானவரம்பன் என்ற தன் பெயரை நிலைநாட்டி, அந்நாட்டுப் பார்ப்பனரைக் கொண்டு பெருவேள்வி ஒன்று நிகழ்வித்து, அவர்கட்குக் குடநாட்டில் ஓர் ஊரையும் தானமாக நல்கினான்.

வடநாட்டுச் சதகன்னருடன் குடநாட்டின் ஆதிக்கம் காரணமாகப் போர் உடற்றி வெற்றிபெற்று வஞ்சிமாநகர் போந்த சேரலாதன் கொல்லி மலைக்கும் காவிரியாற்றிற்கும் இடைப்பகுதியிலுள்ள நாட்டில் வாழ்ந்த மழவர் என்னும் குறுநில மன்னர்கள் தெற்குப் பகுதியில் வாழ்ந்த வேளிர்கள் வாழும் நாட்டிற் புகுந்து, குறும்பு செய்து அலைக்கத் தலைப்பட்டபோது, சேரலாதன் அவர்களின் தகாத செயலைத் தகர்க்கத் தலைப்பட்டான் அவர்கள் ஆற்றல் சான்ற குதிரை வீரர்கள் ஆனமை பற்றி

அவர்களை முற்றுகையிட்டு வளைத்து, அவர்கட்கு விருப்பமான ஊன் கலந்து அட்ட சோற்றினையும் துவரைத் துவையலையும் தந்து அவர்களை நட்பாக்கிப் பின்னர்த் தான் நிகழ்த்திய போர்களில் அவர்கட்கும் மெய்ம் மறையாய் நின்று அன்பு சுரந்தான்.[67] இதனையே பதிகம்,

**ஏனை மழவரைச் செருவிற் சுருக்கி**
**மன்னரை யோட்டி**

என்று குறிப்பிடுகின்றது.

இப்படையெடுப்பின்போது சேரலாதன் கொங்கு நாட்டில் ஆன்பொருநை நதிக்கரையில் (ஆம்பிராவதி) உள்ள கொங்கு வஞ்சி என்ற நகரத்தின் அரண்களை வலிமை மிக்கதாக்கி, ஆங்குச் சேரர் குடித் தோன்றிய செல்வன் ஒருவனை நாடு காவல் செய்யுமாறு பணித்தான். இடைக்காலச் சோழர் காலத்தில் கொங்கு வஞ்சி சோழர்க் குரியதாகி, இராசராசபுரம் என்ற பெயரினையும் பெற்றது. சோழர் கல்வெட்டுக்கள், 'நறையனூர் நாட்டுக் கொங்கு வஞ்சியான ராஜராஜபுரம்'[68] என்று குறிக்கின்றன. இப்போது கோயம்புத்தூர் மாவட்டத்தில் தாராபுரம் என அழைக்கப்படும் ஊர் இடைக்காலச் சோழர் காலத்தில் 'இராஜாதி ராஜச் சதுர்வேதி மங்கலம்' என அழைக்கப் பட்டது.

இவன் குடிமக்களைக் குழவி கொள்பவரின் காத் தோம்பிய காரணத்தினால் பதிகம் இவனை,

**குழவி கொள்வாரிற் குடிபுறந் தந்து**

என்று குறிப்பிட்டுள்ளது.

இவன் முப்பத்தெட்டாண்டு அரசியல் நடத்தினான். இவனை ஆறாம் பத்தால் விளங்கப் பாடியவர் நல்லிசைப் புலமை மெல்லியராகிய காக்கைபாடினியார் நச்செள்ளை

---

67. பதிற்றுப்பத்து. 55.
68. A.R. No. of 146 of 1920.

யாராவர். அவர்க்குச் சேரலாதன் 'கலன் அணிக' என ஒன்பது காப்பொன்னும், நூறாயிரம் காணமும் கொடுத்துத் தன் பக்கத்தே கொண்டான் என்று பதிகம் குறிப்பிடுகின்றது. தன் பக்கத்துக் கொண்டான் என்பதனைத் தன் திருவோலக்கத்துச் சான்றோருள் ஒருவராகக் கொண்டான் என்பதை ஆராய்ச்சி அறிஞர் சிலர் பிறழ உணர்ந்து, காக்கைபாடினியாரை இவன் மணந்துகொண்டதாகக் குறிப்பிட்டு விட்டனர். அது தவறாகும்.

**வாரா ராயினும் இரவலர் வேண்டித்**
**தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்**

சேரலாதன் என இவன் பாராட்டப்படுவதனால்[69] இவன் கொடைமடம் பட்ட சேரமான் ஆவன்.

## செல்வக் கடுங்கோ வாழியாதன்

புலனழுக்கற்ற அந்தணாளனும், பொய்யா நாவினரும், குறிஞ்சி பாடுதலில் வல்லவருமான கபிலர் ஏழாம் பத்தில் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடியுள்ளார்.

மலையாள மாவட்டத்தில் பொன்னானி, பாலைக்காடு, வைநாடு, வள்ளுவநாடு, குறும்பர் நாடு, கோழிக்கோடு, ஏர்நாடு முதலிய மாவட்டங்களைத் தன்னகத்தே கொண்டது பொறை நாடாகும். இப்பொறை நாட்டில் குறும்பர் நாடு என்பது ஒரு பகுதியாகும். இப்பகுதியில் மாந்தரம் எனப் பெயரிய மலையொன்றும், அதனையடுத்து மாந்தரம் என்னும் மூதூரும் உண்டு. இவ்வூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வேந்தர்கள் மாந்தரன் என்றும், மாந்தரம் பொறையன் என்றும், மாந்தரம் சேரல் இரும்பொறை என்றும் வழங்கப் பெற்றனர். மாந்தரஞ் சேரர்களுள் மிக்க பழையோனாகப் பழம்பாடல்களில் காணப்படுபவன் மாந்தரம் பொறையன் கடுங்கோ

69. பதிற்றுப்பத்து; 55 : 10-11.

என்பவனாவன். இவன் கொடை வழங்குவதில் கோடா நெஞ்சினன் என்று பரணர் பாடியுள்ளார்.

> **மாந்தரம், பொறையன் கடுங்கோப் பாடிச்சென்ற**
> **குறையோர் கொள்கலம் போல**
> **உவவினி வாழி நெஞ்சே.**[70]

இவன் அறவழியில் ஆட்சியை நடாத்தியவன் என்பது,

> **அறன்வாழ்த்த நன்காண்ட விறல்மாந்தரன்**[71]

என்ற பதிற்றுப்பத்துத் தொடரால் அறியலாகும்.

இவனையடுத்து, ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும்பொறை என்பான் சேரநாட்டைப் புரந்திருத்தல் வேண்டும். இவனே 'கொங்கு நாட்டில் வடக்கே பூவானி யாறு வரையும், கிழக்கே கொங்கு வஞ்சி (தாராபுரம்) வரையும் பரவியிருந்த பொறைநாட்டைக் கீழ்க்கொங்கு நாட்டுக் கருவூர் வரையில் பரப்பிய முதற் சேரமான்[72] என்றும் காவிரிக்கு வடகரையில் உள்ள மழநாட்டைச் சோழர் கைப்பற்றினாராக, இக்கோப்பெருஞ்சேரல் அவரோடு ஒள்ளிய வாட்போர் உடற்றிக் கீழ்க் கொங்குநாட்டையும் அதற்கு நேரே காவிரியின் வடகரையில் கொல்லிமலை வரையில் இருந்த மழநாட்டையும் வெற்றி கொண்டான் என்றும், பின்னர்ச் சோழரொடு உறவுகொண்டு, கருவூர்க்கு அணித்தே ஓடும் ஆன்பொருநை ஆற்றின் கரையிலிருந்த ஊரின் பழம்பெயரை கருவூர் என்று மாற்றியும், அந்நகரின் நேர் வடகரையில் விளங்கிய மழநாட்டுப் போரூரின் பெயரை மாற்றி முசிறி என்ற பெயரையும் இட்டனன் என்றும், இடைக்காலக் கல்வெட்டுக்களில் கருவூர், கருவூரான வஞ்சி மாநகரம்[73] என்றும், அமராவதி என

---

70. அகம்; 142 : 4-7.
71. பதிற்றுப்பத்து; 90:12-13.
72. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, பண்டை நாளைச் சேர மன்னர் வரலாறு, ப. 185.
73. A. R. No. 166 of 1936-37.

இப்போது வழங்கப்படும் ஆறு ஆன் பொருநை[74] என்றும் கூறிக்கப் பெறுகின்றன என்றும், சேரநாட்டுப் பெருநகரங்களின் நினைவாகவே காவிரிக்கரையிலும் கருவூரும் முசிறியும் பெயர் பெற்றன என்றும் ஆராய்ச்சி அறிஞர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார்.[75]

பொறையர் குடியிற் பிறந்த கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை சேர அரசு கட்டிலில் ஏறினான். இவனை 'நெடுநுண் கேள்வி அந்துவன்' என்று பதிற்றுப்பத்தின் ஏழாம் பதிகம் குறிப்பிடுகின்றது. இவ் வேந்தன் வேணாட்டில் வாழ்ந்த வேளிர் குலத் தலைவன். ஒருதந்தை என்பானின் மகள் பொறையன் தேவியினை மணந்து செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும் நன்மகனைப் பெற்றான்.

செல்வக் கடுங்கோ வாழியாதன் இளமை முதலே கல்வியில் கருத்தூன்றிச் சான்றோர் சூழலில் பெரிதும் கலந்துரையாடி மகிழ அவாக் கொண்டான். பகை கொண்டு பிறர் கூறும் புறஞ்சொற்களைப் பாராட்டாது பொறைக்குணம் போற்றி வாழ்ந்த இவன் சால்பு சான்றோரால் செவ்விதின் பாராட்டப்பட்டது. மேலும் இவன் தான் பயந்த சிறுவர்களை முதியோர்க்குத் தொண்டு செய்யப் பணித்துத் தன் தொல்கடனை இறுத்தான் என்பது,

**இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்**
**தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்[76]**

என்பதனால் அறியப்படுகின்றது.

சேர நாட்டின் வடபகுதியில் வாழ்ந்த சதகன்ன வேந்தன் வடவாரிய வேந்தர் சிலரின் துணைகொண்டு

---

74. A. R. No. 355 of 1927-28.
75. பண்டைநாளைச் சேரமன்னன் வரலாறு, ப. 185-186.
76. பதிற்றுப்பத்து. 70:20-22.

தமிழ்நாடு புகுந்து குறும்பு செய்யத் தலைப்பட்டபோது, கடுங்கோ வேந்தன் சோழ பாண்டியர்க்கு இச்செய்தியினை அறிவித்து, அதன்வழி அவ் விருவர் தம் படைகள் வரவும், தானும் படைகொண்டு சென்று சேரவாறு கடந்து வானவாசி நாட்டுட் புகுந்து சதகன்னர்க்குரிய நகர் ஒன்றை முற்றுகையிட்டுப் பகைவர் பயந்து சிதறியோட வெற்றி பெற்றான். இவ்வெற்றியைக் கபிலர்,

**ஒருமுற்று இருவர் ஓட்டிய ஒள்வாள்**
**செருமிகு தானை**[77]

என்று பாராட்டினார். ஏழாம் பத்தின் பதிகம்,

**நாடுபதி படுத்து நண்ணா ரோட்டி**
**வெருவரு தானைகொடு செருப்பல கடந்து**

செல்வக் கடுங்கோ வாழியாதன் சிறப்புற்றான் என்று குறிப்பிடுகின்றது.

இவனுடைய படை வலிமைமிக்கதாயிருந்து, உழிஞைப் போர் இயற்றி மதிலைக் கைப்பற்றுவதில் வல்லதாயிருந்தது. இந்த மதிலை எறிந்து கைப்பற்றிய பின்னன்றி உணவு கொள்வதில்லை என்று உணவு சமைத்தற்குரிய கலன்களை மதிலினுள் இட்ட படைவீரர் பலர் இவன் படையில் இருந்தனர்.[78]

மறத்துறையில் மேம்பட்டிருந்த இவன் அறத்துறையினும் மேம்பட்டிருந்தான். களவேள்வி இயற்றியது போன்றே மறைவேள்வியும் பல இயற்றி அந்தணர் ஓம்பினான் (70: 17-19). திருமால்பால் பெரும் பக்தி செலுத்திய இவன் திருமால் கோயில் வழிபாட்டுக்கென நெல்வளம் நிறைந்த ஒகந்தூர் என்னும் ஊரினை இறையிலி முற்றூட்டாக வழங்கினான் (பதிகம்).

ஈத்தற்கு இரங்காது ஈயுந்தொறும் இன்பமே கொண்ட இவ்வேந்தன் கபிலர்க்கு நன்றா என்னும் குன்றேறி நின்று

77. பதிற்றுப்பத்து; 63: 11-12.
78. பதிற்றுப்பத்து; 68.

தன் கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான். இந்நன்றா இன்று நணா என்று மருவி பவானி என்று வழங்குகின்றது.

இருபத்தைந்தாண்டு அரசு வீற்றிருந்த இவன் படை கொண்டு ஒரு போரில் பாண்டிய மன்னனுக்குத் துணை சென்றபோது சிக்கல் என்ற இடத்தில் நடந்த போரில் பகைவர் இட்ட வேல் இவன் மார்பில் தைத்துப் பெரும் புண்ணை உண்டாக்கியது. அப்புண் விழுப்புண்ணாய் புகழ்ப் புண்ணாயிற்று. அங்கேயே அவன் பள்ளிப்படுக்கப் பட்டதனால், இவனைப் பின்வந்த புலவர்கள் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன் என வழங்கினர். இப்போது இராமநாதபுர மாவட்டம் உத்தர கோச மங்கைப் பகுதியில் அவ்வூர் உளது.

## தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

சேரலாதன் கைப்பற்றிய கொங்கு நாடு முல்லை வளம் சிறந்திருந்தமையின் ஆநிரைகளும் ஆடுகளும் ஆன கால்நடைச் செல்வம் அந்நாட்டில் மிகுந்திருந்தது. புலவர் கொங்குநாட்டுக் குடிமக்களை 'ஆகெழு கொங்கர்' என்றும் பாராட்டியுரைப்பாராயினர். இக்கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக விளங்கியது அதியமான் எழினியின் நாடாகும். தற்காலம் தருமபுரி என வழங்கப்படும் நகரமே அந் நாளில் தகடூர் என வழங்கப்பட்டது. முன்பு அதியமான் கோட்டை என வழங்கப்பட்ட இடமே இன்று அதமன் கோட்டை என வழங்கப்படுகிறது.

பெருஞ்சேரல் இரும்பொறை பொறையர் மரபினன்; செல்வக் கடுங்கோ வாழியாதனின் மைந்தனாவன். நார்முடிச் சேரல் காலத்திலும் இவன் இருந்தவனாவன். இவன் காலத்தில் சேரவாதிக்கம் தகடூர் வரையில் பரவி யிருந்தது. அக்காலத்துக் கொங்கு நாட்டை ஆண்டவன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவன். இவன் அதியமான் நெடுமிடல் அஞ்சியின் மகனாவன். நெடுமிடல் வஞ்சி, சேரன்

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலால் போரில் தோற் கடிக்கப்பட்டவனாவன். பின்னர் அதியமான் நெடுமிடல் அஞ்சி துளுநாட்டு நன்னனுடன் போர் செய்து தோற்றான். போரிலும் இறந்துபட்டான். இதன் பின்னர்ப் பட்டத் திற்கு வந்தவனே அதியமான் நெடுமான் அஞ்சி எனப்படு பவன். இவனுக்கு உரிய தகடூரின்மீது பெருஞ்சேரல் இரும்பொறை படையெடுத்துச் சென்றான். இதற்குரிய காரணம் சரியாக விளங்கவில்லையெனினும், அதியமான் நெடுமான் அஞ்சி சேரர் ஆதிக்கம் சிறிது சிறிதாகப் பரந்து விரிந்து கொங்குநாடு முழுவதனையும் அகப்படுத்திக் கொண்டது என்கின்ற எண்ணம் ஏற்பட்டதன் விளைவாக இருக்கலாம். கொங்குநாடு முழுதும் எங்கே சேரர் ஆதிக்கத்தின் கீழ் வந்துவிடப் போகிறதோ என்று அஞ்சி னான். எனவே, சேரர் செல்வாக்கைக் குலைக்கவேண்டும் என்று எண்ணங்கொண்டு அதனைச் செயல்படுத்தவும் தொடங்கினான். தனக்குத் துணையாகக் கொங்கு நாட்டுப் பகுதிகளில் வாழ்ந்த ஆயர்குலத் தலைவர் சிலரையும், கொங்குநாட்டு வேளிர் சிலரையும் திரட்டத் தலைப்பட்டான். கழுவுள் என்னும் ஆயர்குலத் தலைவன், சிக்கலில் செல்வக் கடுங்கோ வாழியாதன் இறந்த பின்னர் அச்ச உணர்ச்சி அறவே அற்றவனாய் முன்னர்த் தனக்கு உரியதாகவிருந்த கொல்லிக் கூற்றத்தை வேளிர் சிலர் உதவியுடன் தனதாக்கிக் கொண்டு, காவிரியின் வடகரைப் பகுதியில் தங்கி வாழ்வானாயினன். இச்செய்தி கொங்கு வஞ்சியாகிய தாராபுரத்திலிருந்து சேர மன்னர் சார்பில் செங்கோல் செலுத்திய சேரர் தலைவன் அறிந்து செல்வக் கடுங்கோவிற்குப் பின் அரசு கட்டிலில் அமர்ந்த பெருஞ் சேரல் இரும்பொறைக்கு அறிவித்தான். இரும்பொறை பெரும்படையொன்றை ஆயத்தப்படுத்திக் கொல்லிக் கூற்றத்தின் மேல் படையெடுத்துச் சென்றான். சேரனின் படை பலத்தையும் பெருமையையும் கண்ட வேளிர் சிலர் சேரமான் பக்கம் சேர்ந்தனர். எனவே கழுவுள் சேர

மானின் சீற்றத்திற்கு முன் ஆற்றாது அடிபணிய வேண்டியதாகிவிட்டது. ஆயினும் நிகழ்ந்த போரில் கழுவுள் காட்டிய வீரம் பெருஞ்சேரல் இரும்பொறையின் கண் முன் நின்றது. எனவே அவனைத் தன் நண்பனாக்கிக் கொண்டு, முன்னர் அவன் இருந்த நிலையினை அவனுக்கு வழங்கி, அவன் தந்த யானைகளையும், அருங்கலன்களையும் திறையாகக் கொண்டு தன் நாடு திரும்பினான்.

ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து

—எட்டாம் பத்து, 1 : 17-18.

என்று பதிற்றுப்பத்து பெருஞ்சேரல் இரும்பொறையின் வெற்றியினைக் குறிப்பிடுகின்றது. தகடூரைக் கைப்பற்றி அதியமானை வென்ற செய்தியினை,

வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயில் இறும்பிற் றகடூர் நூறி

—எட்டாம் பத்து, 8 : 8-9.

என்ற பதிற்றுப்பத்துப் பாடல் உணர்த்துகின்றது. இப்போரில் எழினி இறந்தான். தகடூர்க் கோட்டை தீக்கிரையாயிற்று. தகடூர் வெற்றி பெருஞ்சேரல் இரும்பொறைக்குத் 'தகடூர் எறிந்த' என்ற அடைமொழியினைப் பெயர்க்கு முன் தருவதாயிற்று. அஞ்சிக்கு உதவியாகச் சோழனும் பாண்டியனும் போரில் பங்கு கொண்டமையினால் இப்போர் பெரும் பரபரப்பை உண்டு பண்ணிற்று. சோழ பாண்டியரும் தோல்விக்குட்பட்டனர். இதனை எட்டாம் பத்தின் பதிகம் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

பல்வேற் றானை யதிக மானோடு
இருபெரு வேந்தரையும் உடனிலை வென்று
முரசுங் குடையுங் கலனுங் கொண்டு
உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்
துகள்தீர் மகளிர் இரங்கத் துப்பறுத்துத்
தகடூர் எறிந்து நொச்சிதந் தெய்திய
அருந்திறல் ஒள்ளிசைப் பெருஞ்சேரல் இரும்பொறை

தகடூர்ப் போர் குறித்துத் 'தகடூர் யாத்திரை' என்றொரு நூல் இயற்றப்பட்டது. அந்நூல் இன்று முழுதும் கிடைக்காமல், நூலின் சில செய்யுட்களே தொல் காப்பியப் புறத்திணையியலின் உரையில் நச்சினார்க் கினியர் மேற்கோளாகக் குறிப்பிடும் போக்கில் காணப்படு கின்றன. புறத்திரட்டிலும் ஒரு சில செய்யுட்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இவன் பல யாகங்களைச் செய்தான் என்றும், தன்னு டைய புரோகிதனாகிய நரைமூதாளனைத் துறவு மேற் கொள்ளும்படிச் செய்தான் என்றும் எட்டாம் பத்து எடுத்து மொழிகின்றது.

**முழுதுணர்ந் தொழுக்கும் நரைமூ தாளனை**
**வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்**
**தெய்வமும் யாவதும் தவமுடை யோர்க்கென**
**வேறுபடு நனந்தலைப் பெயரக்**
**கூறினை பெருமநின் படிமை யோனே.**

—எட்டாம் பத்து; 4 : 24-28.

புலவர்களை இவன் பெரிதும் போற்றி மதிப்பளித் தான் என்பதனை நெடுந்தொலைவு நடந்து வந்த களைப்பால் அறியாது முரசு கட்டிலில் படுத்துறங்கிய மோசிகீரனாரை ஒறுக்காமல் அவருக்கு விசிறி கொண்டு வீசிய செயலால் அறியலாம்.[79]

எட்டாம் பத்து கொண்டு இவனைப் பாடியவர் அரிசில் கிழார் ஆவர். இவர் பெருஞ்சேர லிரும்பொறையின் அமைச்சராக விளங்கிய தகுதி சான்றவராவர். இச்செய்தி,

"தானும் கோயிலாளும் (அரசனும் அரசியும்) புறம் போந்து நின்று கோயிலுள்ள வெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பது நூறாயிரத்தோடு அரசுகட்டில் (சிம்மாசனம்) கொடுக்க, அவர் யான் இரப்ப இதனை

79. புறம். 50.

ஆள்கவென்று அமைச்சுப் பூண்டார்'' என்ற எட்டாம் பத்துப் பதிக அடிக்குறிப்பால் விளங்குகின்றது.

தகடூர் எறிந்த பெருஞ்சேர லிரும்பொறை பதினேழு ஆண்டு ஆட்சி புரிந்தான்.

## இளஞ்சேரல் இரும்பொறை

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறைக்குப் பின்னர்ச் சேர நாட்டு மன்னனாக முடி புனைந்து கொண்டவன் சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறை ஆவன். இவன் பெருஞ்சேரலின் மைந்தனாவன். ஆயினும் சிலர் இவன் பெருஞ்சேரல் இரும்பொறையின் தம்பியான குட்டுவன் இரும்பொறையின்மகன் என்றும், செங்குட்டுவன் காலத்தினன் என்றும், செங்குட்டுவனின் தாயாதித் தமையனின் மகன் என்றும் கூறுவர்.[80] ஆயினும் பெருஞ் சேரல் இரும்பொறையின் மகனே இளஞ்சேரலிரும்பொறை என்பது அறிஞர் பலர் கண்ட முடிபாகும்.

இவன் 'பொலந்தேர்ப் பொறையன்' என்றும் 'பல்வேற் பொறையன்' என்றும் புலவர் பெருமக்களால் அழைக்கப் பெறுகின்றான். இளஞ்சேரல் இரும்பொறையை ஒன்பதாம் பத்தால் பாடிய புலவர் பெருங்குன்றூர் கிழார். ஒரு நான்று இளஞ்சேரல் இரும்பொறையிடம் பரிசில் பெறச் சென்ற இப்புலவர்க்குப் பரிசில் கொடுக்காமல் காலந்தாழ்த் தினான். அது குறித்துப் புலவர் வருத்தமுற்று, தம் வறுமை நிலையைக் குறித்து இரண்டு பாடல்கள்[81] பாடினார். ஆயினும் இளஞ்சேரல் இரும்பொறை நேரே புலவர்க்குப் பரிசில் நல்கவில்லையே தவிர, இப்புலவர் அறியாமல் வீடும் மனையும் ஊரும் அமைத்துப் பிறகு அவருக்கு அளித்தான் என்று ஒன்பதாம் பத்தின் அடிக்குறிப்புக் கூறுகின்றது.

---

80. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 40.

81. புறம். 210, 211.

ஒன்பதாம் பத்துப் பாடிய காரணத்தால் பெருங்குன்றூர் கிழார்க்கு, 'மருளிலார்க்கு மருளக் கொடுக்க வென்று உவகையின் முப்பத் தீராயிரங்காணம்' பரிசு கொடுத்தான் என்றும் பதிற்றுப் பத்து கொண்டு அறியலாம்.

இளஞ்சேரல் இரும்பொறை சோழவேந்தன் ஒருவனை வென்றதாகப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது.[82] இவனுடைய படைவீரர் சோழனோடு வேற்போர் செய்ய, அவர் போராற்றலுக்கு ஆற்றாத சோழனுடைய படைவீரர் தங்கள் வேல்களைப் போர்க்களத்தே போட்டுவிட்டுப் புறங்காட்டி ஓடினர் என்றும், அவ்வாறு அவர்கள் போர்க் களத்தே போட்டுவிட்டு ஓடிய வேல்களின் எண்ணிக்கை, செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடிப் பரிசாகப் பெற்ற ஊர்களின் தொகையைவிட மிகுதியாக இருந்தது என்றும் ஒன்பதாம் பத்து குறிப்பிடுகின்றது.

**நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப்**
**பொன்னவிர் புனைசெய விலங்கும் பெரும்பூண்**
**ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்**
**இட்ட வெள்வேன் முத்தைத் தம்மென்**
...... ...... ...... ......
**நனவிற் பாடிய நல்லிசைக்**
**கபிலன் பெற்ற ஊரினும் பலவே.**

—ஒன்பதாம் பத்து : 5

இளஞ்சேரல் இரும்பொறையோடு போர் செய்த சோழவேந்தனின் பெயர் பதிற்றுப்பத்துப் பாடல்களுள் காணப்படவில்லை. ஆயினும் அச்சோழனின் பெயர் 'பொத்தியாண்ட சோழன்' என்று பதிகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

மேலும் இவன் ஐந்தெழில் என்னும் கோட்டையை முற்றுகையிட்டு, சோழன், பாண்டியன், விச்சி, இளம்

---

82. பதிற்றுப்பத்து ஒன்பதாம் பத்து: ஐந்தாம் பாட்டு 3—4.

பழையன் மாறன் என்பவர்களை வென்று, அவர்களிட மிருந்து திறையாகப் பெற்று வந்த பொருளைக் கொண்டு வஞ்சி மூதூரில் தன்னை நாடிவந்த இரவலர்க்கு இனிதே வழங்கி மகிழ்ந்தான் என்று பதிகம் குறிப்பிடுகின்றது.

**வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்று**
**இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ**
**அருமிளைக் கல்லகத் தைந்தெயி லெறிந்து**
**பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும்**
**வித்தை யாண்டவிளம் பழையன் மாறனையும்**
**வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று**
**வஞ்சி மூதூர்த் தந்துபிறர்க் குதவி.**

—ஒன்பதாம் பத்துப் பதிகம் : 3-9.

வஞ்சி மூதூரில் சதுக்கம் அமைத்து, அங்குப் பூதர் என்னும் தெய்வங்களைக் கொணர்ந்து அமைத்து, அவற்றிற்குச் சாந்தியும் விழாவும் சிறப்பும் செய்தான் என்று இவன் கூறப்படுகின்றான்.

**அருந்திறல் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த**
**வெந்திறல் பூதரைத் தந்திவண் நிறீஇ**
**ஆய்ந்த மரபிற் சாந்தி வேட்டு**
**மன்னுயிர் காத்த மறுவில் செங்கோல்**

—ஒன்பதாம் பத்து; பதிகம்: 13—16.

இளங்கோவடிகள்,

**சதுக்கம் பூதரை வஞ்சியுட் டந்து**
**மதுக்கொள் வேள்வி வேட்டோன்**

—சிலம்பு; நடுகல்: 147—148.

என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளதனால் இச்செய்தி யின் உண்மை மேலும் வலுப்பெறுகின்றது.

இளஞ்சேரல் இரும்பொறையின் அமைச்சராக அமைந்து விளங்கியவர் மையூர் கிழார் என்பவராவர்.

**மெய்யூர் அமைச்சியன் மையூர் கிழானைப்**
**புரையறு கேள்விப் புரோசு மயக்கி**

என்று பதிகம் குறிப்பிடுவதனால், புரோகிதனிலும், அறநெறி வழுவா அறிஞனாக மையூர் கிழாரை இளஞ்சேரல் இரும்பொறை உருப்பெறச் செய்தான் என்பது அறியலாம்.

பதினான்கு ஆண்டுகள் நாடு காவற் றொழிலை நலமுற மேற்கொண்டிருந்த இவன், செங்குட்டுவன் வடநாடு சென்று பத்தினிக் கடவுளுக்குரிய படிமம் கொண்டுவந்து பத்தினிக் கோட்டம் அமைப்பதற்கு முன்னமேயே இறந்து போனான் என்பதனைச் சிலப்பதிகாரம் [83] குறிப்பிடுகிறது என்பர் அறிஞர். [84]

இதுகாறும் ஒருவாறு பதிற்றுப்பத்துள் பாடப் பெற் றுள்ள சேரமன்னர்களின் போர் வெற்றிகளைக் கண்டோம். இனி, அவர்தம் இயங்கிய முறைகளைக் காண்போம்.

---

83. சிலம்பு; நடுகற் காதை: 147-150.

84. மயிலை சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டு வன் ப. 43.

## 2. சேரர் அரசாட்சி முறை

சங்க கால மக்கள் மன்னனுக்குச் சிறந்த மதிப்பளித்தார்கள். மோசிகீரனார் என்னும் சங்ககாலப் புலமைச் சான்றோரும் மக்களுக்கு நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று; மன்னனே மாநிலத்தில் வாழும் மக்களுக்கெல்லாம் உயிராகக் கருதப்படுவான் என்று புறப்பாட்டொன்றிற்[1] புகன்றுள்ளார்.

**நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்.**

—புறம்; 186 : 1—2.

இடைக்காலத்தில் நம்மாழ்வார் 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்'[2] என்று மன்னன் மக்கட் சமுதாயத்திற் பெற்றிருந்த மதிப்பினைக் குறிப்பிட்டுள்ளார். பிற்காலச் சோழர் காலப் பெரும் புலவர்களான சேக்கிழாரும் கம்பரும் மன்னனுக்கும் மக்களுக்கும் இடையிலுள்ள தொடர்பினை உடம்பிற்கும் உயிருக்கும் இடையேயுள்ள தொடர்புக்கு ஒப்புமை கண்டுள்ளனர். மக்களை உடலாகவும் மன்னனை உயிராகவும் சேக்கிழார் குறிப்பிட்டிருக்க,[3] கம்பர் மன்னனை மக்களாகிய உயிர் தங்கும் உடம்பாகக் குறிப்பிட்டுள்ளார்.[4]

---

1. புறநானூறு; 186 : 1—2.
2. நம்மாழ்வார் திருவாய்மொழி 4 : 8.
3. 'மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
   கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலன்
   —பெரியபுராணம்; நகரச்சிறப்பு : 14.
4. 'செயிரிலா உலகினில் சென்று நின்று வாழ்
   உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்.
   —கம்பராமாயணம்; பாலகாண்டம் : 10.

இனிச் சங்ககாலச் சேர மன்னர் தம் அரசியல் அமைப்பு முறையினை விளங்கக் காண்போம்.

சேர மன்னர்களில் மிகப் பழமை வாய்ந்தவனாகக் கருதப்படுபவன் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் ஆவன். இரண்டாம் பத்தின் பாட்டுடைத்தலைவன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவன். இப்பேரரசன் உதியஞ்சேரலின் மைந்தன் ஆவன் இவ்வுண்மையை மறுத்து மொழிவாரும் உண்டு. இந்நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே சேரவேந்தர் மக்கட்தாயிகளா? மருமக்கட் தாயிகளா? என்ற சர்ச்சை இருந்து வருகிறது. திரு. எம். சீனிவாச ஐயங்கார் 'Tamil Studies' என்னும் தம்முடைய நூலில்[5] சேரவேந்தர் மருமக்கட் தாயிகளே என்னும் கொள்கையை வலியுறுத்தியுள்ளார். இதன் பின்னர் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் 'சேரர் தாயமுறை' என்று தாம் வரைந்த கட்டுரையில் 'மருமக்கட்டாயமே சேரர்க்குப் பழைமையாக உரியது' என்று காரணங்கள் பலவற்றைக் காட்டியுள்ளார். இக் கூற்றினை ஏதுக்கள் பலவற்றை எடுத்துக்காட்டித் தாம் எழுதிய 'சேரவேந்தர் தாய வழக்கு' என்னும் கட்டுரையில் (ஆராய்ச்சித் தொகுதி — ப. 339—398) பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் சேரர், சோழ பாண்டியர் போன்று மக்கட்தாயிகளே என்று நிலைநாட்டியுள்ளார்.[6]

கல்வெட்டு ஆராய்ச்சி அறிஞர் திரு. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் 'பதிற்றுப்பத்தும் பதிகங்களும்' என்னும் தம் ஆராய்ச்சிக் கட்டுரையில் இச்சிக்கலுக்கு நல்ல தீர்வு கண்டுள்ளார். அவர் ஆராய்ச்சி வருமாறு:[7]

---

5. M. Srinivasa Aiyangar; Tamil Studies.
6. மு. இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப. 339—398.
7. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் — இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும், ப. 143 & 144.

"பதிற்றுப்பத்தின் நான்காம் பத்து எட்டாம் பத்துக்களின் பதிகங்களில், 'வேளாவிக்கோமான் பதுமன்தேவி' என்றும், ஆறாம் பதிகத்தில் 'வேளாவிக் கோமான் தேவி' என்றும் பயின்றுவரும் தொடர்கள் வேளாவிக்கோமான் பதுமன் என்பவனுடைய மகள் எனவே பொருள்படும் என்பது ஈண்டறியத்தக்க தொன்றாகும். சோழமன்னர்களின் மனைவியருள், பாண்டியன் மகள் தென்னவன் மாதேவி, பஞ்சவன்மாதேவி, சேரன்மகள் சேரன் மாதேவி, மாதேவி வானவன் எனவும் வழங்கப் பெற்றனர் என்பது சோழ மன்னர் கல்வெட்டுக்களால் நன்குணரப்படும். தேவி என்னும் சொல் மனைவியென்ற சிறப்புடைப் பொருளில் வழங்குவதாயினும் இடைக்காலத்தில் அச்சொல் மகள் என்ற பொருளிலும் பெருக வழங்கினமை மேற்காட்டிய பதிற்றுப்பத்துப் பதிகங்களின் தொடராலும் சோழ மன்னர் கல்வெட்டுக்களாலும் இனிது புலனாகும்." (இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும் — பக்கம். 143, 144).

பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் எழுதிய 'பதிற்றுப்பத்து — மூலமும் உரையும்' என்னும் நூலின் அறிமுகத்தில் இவ்விவாதத்திற்கு முற்றுப் புள்ளி வைக்கும் வகையில் அழகானதோர் விளக்கத்தினை ஆராய்ச்சி உலகிற்கு வழங்கியுள்ளார்.[8] அது வருமாறு :

The Putra Kameshti Yaga is, it may be suggested, mentioned in Poem No. 74 by Arisilkizhar, a Non-Brahmin Poet. ...This reference to Putra Kameshti is very important. The question is very often raised whether the ceras who ruled over a country where the Marumakkal Tayam or matriarchal succession now reigns supreme, were

8. Prof T. P. Meenakshisundaranar, Forward to prof. Avvai Duraiswami Pillai's commentary on Patirrupathu, Published by S. S. I. B. P. W. Ltd.,

following the law of Makkal Tayam or patriarchal succession, as their colleaques the Colas and the Pandyas did, or were following the law of Marumakkal Tayam, as followed by the kings of Malayalam today. The wife of the King under the Marumakkal Tayam is never called the Queen. In Patirruppattu, every cera king is praised as the husband of the chaste consort. But this does not help us to decide the issue raised. The Putrakameshti poem, however, conclusively proves, it was the son of the consort that becomes the king, thus establishing beyond doubt the patriarchal succession of these Kings. There is one other difficulty, for the Patikam speaks of the mothers of these Kings as "Velavikoman Pathuman Devi" etc. it is this kind of expression that has really created the confusion. Devi ordinarily means a wife, this phrase will then denote a wife of a Velir chief Pathuman etc. How can the wife of a chief be also wife of the Cera King? This leads some scholars to assume that the succession was matriarchal where the mother of the ruling prince is never the wife of a king. But as this theory runs counter to the explicit statement of the Putra Kameshti poem, one has to explain the word according to Thiru T. V. Sadasiva Pandarathar as meaning "daughter", a usage made clear by such phrases as Ceran Ma Devi, Pancavan Ma Devi, all wives of colas and not of ceras or Pandyas. Or Ceran Ma Devi etc. may be an ellipticral short hand expression for "The great Cola queen the daughter of the Pandya or Cera". Names like Sentan Korran or Kiran Korran etc. mean Korran son of Centan or Kiran. Therefore Patuman Madevi may mean the queen, the daughter of Pathuman. One is justified in referring to the usage of the Imperial Cola inscriptions in view of the close kinship that exists between the Meykkirtis

of the later colas and the Palikams of Patirrupattu, as explained by Thiru T. V. Sadasiva Pandarathar in his short introduction to the present commentary.''

(Introduction to Prof. Avvai Duraiswamy Pillai's commentary on Patirrupattu).

**மக்கட்டாயமே என்ற கருத்தே முடிபானது**

தேவி என்ற சொல் மகள் என்ற பொருளிலும் வழங்கும் என்பதும், சிலப்பதிகார உரையாசிரியர் அரும்பதவுரைகாரர் 'இளங்கோ வேண்மாள்' — பெயர் என்று குறிப்பிட்டிருத்தலும், 'வேளாவிக் கோமான் பதுமன்றேவி' என்ற தொகைநிலைத் தொடர், வேளாவிக் கோமான் மகளான பதுமன்றேவி என விரிந்து பொருள் தரும் என்பதும், இளங்கோவடிகள்,

**குமரியொடு வடவிமயத்**
**தொருமொழிவைத் துலகாண்ட**
**சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்றுச்**
**சோழன்மக ளீன்ற மைந்தன்**
**செங்குட்டுவன்**

—*சிலம்பு; வாழ்த்துக்காதை : உரைப்பாட்டுமடை : 1.*

என்று தம் நூலில் தம் தமையன் பிறப்பைத் தெளிவுபடக் கூறியிருப்பதும், செங்குட்டுவனுக்குச் சோழன் மைத்துன முறையினனாதலும், சேரன் மனைவியரே உடன்முடி கவித்தற்குரிய தேவியராதலும், சேரர் மனைவியர் அரசுக்குரிய புதல்வரையுடையராதலும், சேரரின் வேறொரு கிளையினரான அதிகமான்களும் மக்கட்டாயிகளாகக் காணப்படுதலாலும், தொல்காப்பியம் மக்கட்டாய முறையையே கூறுவதனாலும், சேரர் சிலாசாசன வழக்கும் சேரர் தாய முறை மக்கட்டாயமே என்பதற்குச் சான்று பகர்வதனாலும் இன்ன பிறவற்றாலும் சேரர் மக்கட்டாயிகளே என்னும் கொள்கை வலியுறும்.

1936 ஆம் ஆண்டில் 'சங்க காலச் சேரமன்னர்கள்' (Cera kings of the Sangam Period) என்னும் தலைப்பில் அரியதோர் ஆராய்ச்சி நூலினை ஆங்கிலத்தில் எழுதிய திருவனந்தபுரத்து உயர்நீதி மன்றத்தின் அந்நாளைய நீதிபதி திரு. கே. ஜி. சேஷஅய்யர் அவர்கள் சேரமன்னர்கள் மருமக்கட்டாயத்தினர் அல்லர் என்றும், தந்தைக்குப்பின் மகன் என்றில்லாமல் மாமனுக்குப் பின் மருமகன் ஆட்சிக்கு வந்தனன் என்று கூறுவது வரலாற்றிற்கு ஒரு சிறிதும் இயைபுடைத்தன்று என்றும் கூறுவர்.[9]

(It is quite certain that succession among Sangam ceras was not regulated by Marumakkal tayam law... Reading the relevent portions, therefore, carefully, we see there is no warrant for saying that there is any trace in them to suggest that the succession was not linear, from father to son, lent was collateral, from uncle to nephew—pp. 71 & 74)

## அரசியல், சமுதாய நிலை

டாக்டர் மு. ஆரோக்கியசாமி அவர்கள் பழந்தமிழ் அரசு குறித்தும் சமுதாயம் குறித்தும் தம் நூலில் (The Classical age of the Tamils) பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.[10]

"The Tamil polity of those days was monarchial; but society had not departed from its tribal mooring and it was a society governed by Kings and chieftains who warred quite often among themselves. But Society itself was a fairly peaceful society well versed in the art of

9. K. G. Sesha Aiyar, Cera kings of the Sangam period, pp. 71 & 74.

10. Dr. M. Arokyaswami. The Classical age of the Tamils, p. 5.

manufacture and indulging in extensive trade with enough leisure and inclination to practice fine arts like Poetry and Music. The religious attachement of those people were not marred by bigotry but qualified by an uninihibited tolerance... The civilization of the Tamils of the Sangam age had reached a stage which prevent its being completely dominated or effected by any foreign culture, including that of the Aryans. —Introduction

## சேரமன்னரின் அரச நீதி

கோபம், காமம் மிகுந்த கண்ணோட்டம், அச்சம், பொய்ச்சொல், அன்பு மிகுந்திருத்தல், கடுமையாகத் தண்டித்தல் முதலான செயல்கள் அறமாகிய சக்கரம் சுழலத் தடையாக நிற்கும் வழிக்கற்களாகும் என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது:

**சினனே காமங் கழிகண் ணோட்டம்**
**அச்சம் பொய்ச்சொ லன்புமிக வுடைமை**
**தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத்**
**தறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்.**

—மூன்றாம் பத்து; 2 : 1-4.

"சேரன் நாட்டை நல்ல முறையில் ஆளுகின்ற காரணத்தினால் நல்ல திருவுடைத்தாக அவன் நாடு பொலிகின்றது; விளைவு தப்பாமல் வாய்க்கின்றது; மக்கள் துன்பமில்லாத வாழ்வு வாழ்கின்றனர்''. இவ்வாறு பாலைக் கௌதமனார் பல்யானைச் செல்கெழு குட்டுவனின் ஆட்சி மேம்பாட்டினை நயமுறக் கிளத்துகின்றார் (3; 1:30-31).

## சேரமன்னரின் பண்பு நலன்கள்

நிலம், நீர், வளி, விசும்பு என்ற நான்கு பூதங்களை அளந்து காணல் அருமையாதல் போலச் சேரவேந்தரின் ஆற்றலினையும் அளந்துகாணல் அரிது என்பர் குமட்டூர்க்

கண்ணனார். நாள், கோள், திங்கள், ஞாயிறு முதலிய சுடர்கள் போன்று மன்னன் விளக்கமுடையவனாக உள்ளனர். பாரதகாலத்து அக்குரன் போன்ற கொடைப் பண்பைப் பெற்றுள்ளனர். தும்பைப் பூ சூடி வந்த பகைவரைப் போரில் பொருது நின்று மாற்றரசர் பெருமையை மாய்த்தவர்கள்; கூற்றுக் கடவுளான எமனே வந்தாலும் தம் கோட்பாட்டினின்று மாறா மனவுறுதியுடையவர்கள். வலிய தடக்கை சான்ற வீரர் குடிப் பெருமக்களுக்குக் கவசமாக உள்ளனர். விண்ணோரும் வெட்கும் அழகுச் செவ்வியுடைய தம் உரிமை மகளிர்க்கு நற்கணவர்களாக வாய்த்தவர்கள். யானைப் படைகள் பலவற்றைக் கொண்டு படையை ஏராகக் கொண்டு உழும் உழவராகவும், பாடிப் பரிசு பெறும் பாடினிக்கு வேந்தராகவும் உள்ளனர்.

நிலநீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரி யையே
நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுந்த வீரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
அக்குர னனைய கைவண் மையையே
அமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்ப்பீட ழித்த செருப்புகன் முன்ப
கூற்றுவெகுண் டு வரினு மாற்றுமாற் றலையே
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ
பல்களிற்றுத் தொகுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையே ருழவ பாடினி வேந்தே.

— இரண்டாம் பத்து; 4:1-17.

நெடியோன் போன்று நல்ல புகழ்வாய்ந்தவர்கள் (நெடியோன் அன்ன நல்லிசை 2; 5: 39) பெருந்தவற்றினைப் பகைவர் செய்திருந்தாலும் அவர் பணிந்து திறை தருவாராயின் அவற்றைக் கொண்டு அவரை விடுப்பவர் சேர மன்னர் என்பதும் பதிற்றுப்பத்தால் தெரிய வருகின்றது.

**புரைவது நினைப்பின் புரைவதோ யின்றே**
**பெரிய தப்புந ராயினும் பகைவர்**
**பணிந்துதிறை பகரக் கொள்ளுநை.**

—இரண்டாம் பத்து; 7 : 1-3

அரசியலை முறையே செலுத்திய பேரரசர் வழித்தோன்றல் என்று பாலைக் கௌதமனார் பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் புகழ்கின்றார். அவர் கருத்துப்படி அரசியல் முறைமையாவது பின்வருமாறு:

வரம்புகடந்த சினமும், அளவுகடந்த காமமும், கைகடந்த கண்ணோட்டமும், பகைவர்க்குப் பெரிதும் அஞ்சுதலும், வாய்மையின் இகந்து பொய்ச்சொல் புகறலும், தொர்புடையார் மாட்டு அளவிறந்த அன்புடைமையும், கையிகந்த தண்டஞ் செய்தலும், இவை போல்வன பிறவும் இவ்வுலகத்தே அறமறிந்து செய்யும் அரசு முறை நடத்தற்கு இடையீடாய்த் தீது விளைவிப்பனவற்றைத் தன் நாட்டின் கண் இல்லையாக்கி, அறத்தையே மிகுதியும் செய்து, தன்னாட்டில் வாழ்பவர் தம்முட் பிறரைத் துன்புறுத்தாமலும், தமக்கு இயைபில்லாத பிறர்க்கு உரித்தான பொருளைச் சிறிதும் விரும்பாமலும், குற்றமில்லாத அறிவுடையராய்ச் செம்மை நெறிக்கண் வழுவுதலின்றி, தம்பால் அன்புசெய்து வாழும் வாழ்க்கைத் துணைவியைப் பிரியாமல், தாம் ஈட்டியவற்றைப் பலர்க்கும் பகுத்தளித்துத் தாமும் உண்டு இனிது வாழ வெறிதே மூத்த யாக்கையும் நோயும் இலராய் மிக்கு நிலவ, கடலும் காடும் தம்மிடத்தே யுண்டாகும் பொருள் பலவும் உதவ அரசியலை முறையே செலுத்தினர் பல்யானைச் செல்கெழு

குட்டுவனின் முன்னோர் என்று பாலைக் கௌதமனார் பாராட்டுகின்றார். இப்பாடற் பகுதியால் சேரமன்னர் செங்கோற் சிறப்பின் மாண்பு புலனாகின்றது:

**தீதுசே ணிகந்து நன்றுமிகப் புரிந்து**
**கடலுங் கானமும் பலபய முதவப்**
**பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது**
**மையி லறிவினர் செவ்விதி னடந்துதம்**
**அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்**
**மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய**
**ஊழி யுய்த்த வுரவோ ரும்பல்.**

—மூன்றாம் பத்து; 2 : 5-11.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் மக்கள் நல்லொழுக்கத்திலே நாட்டமுடையவர்களாக நிலைக்கச் செய்கிறான்; திருமாலை வழிபடும் நற்பழக்கத்தை அவன் குடிமக்கள் கொண்டுள்ளனர்; மக்களைத் தமக்குரிய நல்லொழுக்கத்திலே நிலைநிறுத்துதல் ஆண்கடனாதலின் சேரமன்னன் 'ஆண்கடன் நிறுத்த' ஆண்டகையாகின்றான். வருத்தமுற்ற குடிமக்களின் நல்லொழுக்கத்தினை இனிது நிலவச் செய்யும் இவனது செயல் 'துளங்கு குடி விழுத்திணை திருத்திய' செயலாகப் புலவர் காப்பியாற்றுக் காப்பியனாரால் பொருத்தமுறக் குறிப்பிடப்படுகின்றது.

பிறிதொரு பாடலிலும் இம்மன்னனின் செயலினைப் புலவர் 'வான்புகழ் வுயர்ந்த நல்ல புகழானது உலகமுள்ளளவும் தான் உளதாமாறு நிலைபெற, வீழ்ந்த குடியினரை உயரப் பண்ணிய வெற்றி பெறுதற்குக் காரணமான செய்கை' என்று பாராட்டுவர்:

**துளங்குகுடி விழுத்துணை திருத்தி முரசுகொண்டு**
**ஆண்கடன் இறுத்த நின்பூண்கிளர் வியன்மார்பு.**

—நான்காம் பத்து; 1: 13-14

பிறிதுமொரு பாடலிலும் இம்மன்னனின் 'துளங்குகுடி திருத்திய வலம்படுவென்றி' பாராட்டப்பட்டுள்ளது. திசை முழுதும் சென்று விளங்கித் தோன்றும் சால்பு, நடுவு

தலைமை, நூசிப் படையினைப் போர்க்களத்திற்கு ஆற்றலுடன் நடத்திச் சென்று பகைவரை அழித்து ஆண்டுப் பெற்ற அரிய பொருள்களைப் பாணர் முதலிய இரவலரின் பெரிய சுற்றத்தினர் உவப்படைய அவர் இனி வேண்டா என அமையு மெல்லைவரை வழங்கிப் பின் எஞ்சிய பொருளால் தன்னிட முற்றும் நிரம்பவுடைய பெருஞ் செல்வமும், தளர்ந்த குடியிலுள்ளாரை அத்தளர்ச்சி நீக்கி முன்னைய நிலைக்கண்ணே உயர்த்தி நிறுத்திய வெற்றி என்று சேரமன்னனின் செம்மாந்த பெருவாழ்வினைத் திறம்பட வடித்துக் காட்டுகின்றார் கவிஞர் காப்பியாற்றுக் காப்பியனார்.

**மாண்டனை பலவே போர்மிகு குருசில் நீ**
**மாதிரம் விளக்குஞ் சால்புஞ் செம்மையும்**
**முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற**
**மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று**
**துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப**
**ஈத்தான் றானா விடனுடை வளனும்**
**துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்.**

—நான்காம் பத்து; 2: 1-7

பகைவர்க்குச் சேர வேந்தன் நிரம்பவும் துன்பத்தைத் தருகிறான்; அதே நேரத்தில் பாணர் முதலான தன்னை அண்டிய இரவலர்க்கு நிரம்பவும் நல்ல கலன்களை வாரி வழங்குகின்றான். மேலும் அவன் நற்குணங்களால் நிறைந்து, பணிய வேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து, ஐம்புலனும் அடங்கிய குற்றமில்லாத தலைவனாக உள்ளான். வீழ்ந்த குடியினரை உயர்த்தும் உயர் பண்பு இவன்மாட்டு நன்கு பொருந்தியுள்ளது:

**பகைவ ராரப் பழங்க ணருவி**
**நகைவ ரார நன்கலஞ் சிதறி**
**ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்**
**வான்றோய் நல்லிசை யுலகமொ டுயிர்ப்பத்**
**துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்.**

—நான்காம் பத்து; 7: 3-7.

பல்வகைப்பட்ட வளங்களும் தம்மிற் கலந்துள்ள நாட்டை அதன் வளம் பலவும் செம்மையுற வருதற்கேற்பத் திருத்திச் செம்மை செய்தவன் என்று களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் கவினுறப் பாராட்டுவர் காப்பியாற்றுக் காப்பியனார். மேலும் இச்சேரலர் வேந்தர் பரிசில் மாக்களின் செல்வமாகவும், பாணர்கள் இருக்கும் நாளோலக்கமாகவும், வாள்நுதல் கணவனாகவும், போர் வீரர்க்கு ஆண்சிங்கம் போன்றவனாகவும் பாராட்டப்படுகின்றான்:

**வளந்தலை மயங்கிய பைதிரந் திருத்திய**
**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்**
**எயின்முகஞ் சிதையத் தோட்டி ஏவலிற்**
**றோட்டி தந்த தொடிமருப் பியானைச்**
**செவ்வுளைக் கலிமா வீகை வான்கழற்**
**செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே**
**பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை**
**வாணுதல் கணவ மள்ள ரேறே.**

—நான்காம் பத்து; 8: 3-10.

நுகர்தற்கு இனிய பல பொருள்களைப் பெற்ற வழியும், அவற்றைத் தனித்தனியாக நுகர்வோம் என்று விரும்பாத கெடாத நெஞ்சத்தோடு, பிறர்க்குப் பகுத்துண்ணும் உணவைத் தொகுத்தளித்த ஆண்மையுமுடையவனாதலால் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைப் பிறர்க்குப் பயன் உண்டாக வாழ்கிறான் எனப் பாடுவார் காப்பியாற்றுக் காப்பியனார்.

**இனியவை பெறினே தனித்தனி நுகர்கேம்**
**தருகென விழையாத் தாவி னெஞ்சத்துப்**
**பகுத்தூண் டொகுத்த வாண்மைப்**
**பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.**

—நான்காம் பத்து; 8: 13-16.

சேரன் செங்குட்டுவன் நல்ல நெற்றியையுடைய இளங்கோ வேண்மாட்குக் கணவனாகக் குறிக்கப் பெறுகிறான்.

......... நன்னுதல் கணவ,

— 5; 2:7.

இதனால் சேரமன்னர் தம் பட்டத்துப் பெருந்தேவியிடம் கொண்டிருந்த அளவற்ற அன்பு புலப்படும்.

வழங்கும் கொடையினையும் போரிடும் வினையினையும் ஒப்ப விரும்பியிருக்கின்ற காரணத்தால் பகைவராயினாரும் தம் மனத்தெழுந்த வியப்பினைத் தாங்காது புகழ்ந்து பாராட்டும் கெடாத கல்வியறிவு ஒழுக்கங்களையுடையவனாகச் சேரன் செங்குட்டுவன் பரணராற் பலபடப் பாராட்டப்பட்டுள்ளான்.

**இகல்வினை மேவலை யாகலிற் பகைவரும்**
**தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவிற்**
**றொ லையாக் கற்ப.**

—ஐந்தாம் பத்து; 3: 29-31.

செங்குட்டுவன் எதனையும் எளிதில் ஈதலையன்றித் தனக்கென அரியவற்றை யோம்புதலைக் கல்லாத வாய்மையுடையவன் என்று இசைத்தொழில் வல்ல இளைஞர்கள் பாராட்டும் பண்பினன் ஆவன். தன்னிடத்து நட்புச் செய்தோர்க்கும் தன் உரிமை மகளிர்க்கும் வணங்கிய மென்மையினையும், பகைவர்க்கு வணங்காத ஆண்மையினையும் உடையவன் என்றும் புலவராற் பாராட்டப் பெறும் பண்பு நலன் நிறைந்தவன் ஆவன்.

**கல்லா வாய்மைய னிவனெனத் தத்தம்**
**கைவல் இளையர் நேர்கை நிரைப்ப**
**வணங்கிய சாயல் வணங்கா வாண்மை.**

—ஐந்தாம் பத்து; 8: 7-9.

பூக்கள் விரிந்த புனலையுடைய ஆறுகள் மூன்றும் கூடிய முக்கூடலோடு சேரன் செங்குட்டுவன் உவமித்துப் பேசப் பட்டுள்ளான். மூன்று ஆறுகள் கூடுமிடத்து மூன்றிடத்துப் பொருள்களும் ஒருங்கு தொகுவதுபோல், கடல் பிறக்

கோட்டிக் கடல்படு பொருளும், சேரநாடுடைமையால் மலைபடுபொருளும், பழையன் முதலியோரை வென்று காவிரி நேர்கிழக்கோடும் நாடுடைமையால் அந்நாட்டுப் பொருளும் ஆகிய மூவகைப் பொருளும் ஒருங்கு தொக ஈட்டு கின்றமையின் சேரன் இவ்வாறு முக்கூடலோடு உவமிக்கப் பட்டான்.

**காவிரி யன்றியும் பூவிரி புனலொரு**
**மூன்றுடன் கூடிய கூட லனையை.**

—ஐந்தாம் பத்து; 10 : 6-7.

பகைவர் சேரனை வெல்லல் அருமை கருதிப் பணிந்து குன்றாத புது வருவாயினையுடைய தம் நாட்டிடத்தேயுள்ள அரிய செல்வமாகிய கலங்களைத் திறையாகச் செலுத்தப் பெற்று வருகிறான்.

**கன்மிசை யவ்வுங் கடலவும் பிறவும்**
**அருப்ப மமைஇய வமர்கடந் துருத்த**
**ஆண்மலி மருங்கி னாடகப் படுத்து**
**நல்லிசை நனந்தலை யிரிய வொன்னார்**
**உருப்பற நிரப்பினை.**

—ஐந்தாம் பத்து; 10 : 12-16.

கற்பு மேம்பாட்டிற்குரிய மாண்புகள் அனைத்தும் ஒருங்கே பெற்ற நங்கைக்குக் கணவனாகவும், நற்பண்பு களால் நிறைந்த சான்றோரைப் புரக்கும் தலைவனாகவும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் காக்கைபாடினியார் நச்செள்ளையாரால் கிளத்தப்பட்டுள்ளான்.

**ஆன்றோள் கணவ சான்றோர் புரவல.**

—ஆறாம் பத்து ; 5: 1.

வெண்மையான ஊன் கலந்தமைந்த சோற்றை உண்ணும் மழவருக்கு மெய்புகு கவசம் போன்றவன் என்றும், குடநாட்டவர்க்குத் தலைவன் என்றும், கொடி கட்டிய தேரையுடைய அண்ணல் என்றும் மேலும் இம் மன்னன் பாராட்டப்படுகின்றான்.

**வாலூன் வல்சி மழவர் மெய்ம்மறை**
**குடவர் கோவே கொடித்தேர் அண்ணல்.**

—*ஆறாம் பத்து;* **5 : 8-9.**

*பரிசில் மாக்களின் சிறுகுடியின் மிடிமை நீங்கி வளம் பெருக உபகரிக்கும் — மேற்கில் சேரர்குடியில் மேம்பட்ட விலை வீரர்க்கு மெய்புகு கருவி போல்பவன் என்றும், வீறும் பெருங் கொற்றமுமுடைய வேந்தர்க்கெல்லாம் வேந்தா யுள்ளவன் என்றும், தன்னைத் தஞ்சம் என வந்தடைந் தோர்க்குக் காப்பாயிருப்பவன் என்றும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பாராட்டப்படுகிறான்.*

**இரவன் மாக்கள் சிறுகுடி பெருக**
**உலகந் தாங்கிய மேம்படு கற்பின்**
**வில்லோர் மெய்ம்மறை வீற்றிருங் கொற்றத்துச்**
**செல்வர் செல்வ சேர்ந்தோர்க் கரணம்.**

—*ஆறாம் பத்து;* **9 : 7-10.**

*கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாடுமுகத் தான் பாரியைப் பற்றிய குறிப்பையும் பதிற்றுப்பத்துள் வைக்கின்றார். பெருவிறலும், ஓவியத்தில் எழுதியது போன்ற வேலைப்பாடமைந்த நல்ல மனையின் கண்ணே இருக்கும் பாவை போன்ற நல்ல அழகும் நலமும் உடை யாட்குக் கணவனும் உன்னமரத்துப் பகைவனும் எமக்கு அரசனும் புலர்ந்த சாந்தினையுடைய அகன்ற மார்பி னனும், குன்றாத ஈகைக் கோட்பாட்டால் பெரிய வள்ளி யோனுமாகிய பாரி என்று, பொய்யா நாவிற் கபிலர் பாரியை பாராட்டுகின்றார்.*

**பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்**
**வாடை துரக்கு நாடுகெழு பெருவிறல்**
**ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்**
**பாவை யன்ன நல்லோள் கணவன்**
**பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்**

**புன்கா லுன்னத்துப் பகைவன் என்கோ**

**.............................................**

**ஈத்தது இரங்கான் ஈத்தொறு மகிழான்**
**ஈத்தொறு மாவள் ளியன்.**

—*ஏழாம் பத்து;* 1 : 1-5 & 12-13.

*'பார்ப்பாரை யன்றிப் பிறரைப் பணிதல் இல்லை. உயிரொத்த நண்பர்க்கல்லது பிறருக்குக் கண்ணோடி அஞ்சுதலில்லை. சாந்துபூசி மணங்கமழும் மார்பு, உரிமை மகளிர்க்கு இன்பந் தருதற்கு விரித்துக் காட்டுவதன்றிப் பிற பகைவர்க்குக் காட்டுதலில்லை. நலி வகைகள் தம் இயல்பில் திரிந்து கெடுங்கால மெய்தினும் நின் வாயாற் சொல்லிய சொல் பொய்படுவதை நீ அறிவாய்.'*

*இவ்வாறு செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாராட்டுவர்.*

**பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே**
**பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ**
**நட்டோர்க் கல்லது கண்ஃணஞ் சலையே**
**வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்**
**மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே**
**நிலந்திறம் பெயருங் காலை யாயினும்**
**கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே.**

—*ஏழாம் பத்து;* 3 : 1-7.

*மேலும் அவன் பகைவரை வஞ்சியாது எதிர்பொருது வென்ற காஞ்சித் திணைக்கமைந்த வீரர்க்குத் தலைவன் என்றும், வில் வீரராகிய சான்றோர்க்கு மெய்புகு கருவி போன்றவன் என்றும். தன்னை அடைந்தோர்க்குச் செல்வமாகப் பயன்படுபவன் என்றும், செவ்விய அணிகளை அணிந்த சேரமாதேவியின் கணவன் என்றும், பாண் குடும்பங்களைப் புரப்பவன் என்றும், பரிசிலர்க்குச் செல்வமாய் இருப்பவன் என்றும், பூணாரமணிந்து விளங்கும் புகழ் நிறைந்த மார்பினன் என்றும் கபிலரால் மேலும் பாராட்டப்படுகின்றான்:*

**சேணாறு நறுநுதற் சேயிழை கணவ**
**பாணர் புரவல பரிசிலர் வெறுக்கை**
**பூணணிந்து விளங்கிய புகழ்சான் மார்ப.**

—ஏழாம் பத்து ; 5: 10-12.

போரில் பட்டு வீழும் பிணங்கள் பெருகி மலைபோலக் குவியப் பொருதலால் பகைவர் நாடு குடிவளம் குன்றிக் கெடுதலால், அவ்வாறு அப்பகைவர் நாட்டில் கெட்டோருடைய குடிகளை வாழச் செய்த வெற்றி வேந்தனாக மேலும் செல்வக் கடுங்கோ வாழியாதன் கூறப்படுகின்றான்.

**படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்**
**கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே.**

—ஏழாம் பத்து; 9: 9-10.

"நின்போல் நின் முன்னோரும் தெளிவாக மாறாத கொள்கையை உடையவர்களாயிருந்தமையால் இவ்வணுச் செறிந்த நிலவுலகத்தை இனிது ஆண்டார்கள்" என்று கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனைக் குறிப்பிடுவர்.

**நின்போல், அசைவில் கொள்கைய ராகலின்**
**அசையாது**
**ஆண்டோர் மன்றவிம் மண்கெழு ஞாலம்.**

—ஏழாம் பத்து ; 9: 11-12.

செல்வக்கடுங்கோ வாழியாதன் விளையாட்டானும் பொய் கூறுதலையில்லாத வாய்மையினையும், பகைவர் தம் புறத்தே யிகழ்ந்து கூறும் சொற்களை ஏறிட்டுக் கொள்ளாத குற்றம் நீங்கிய அறிவினையும், பூணாரமணிந்த மார்பினையும் உடையவனாய் உள்ளான். மேலும் நாணம் நிறைந்து, பெரிய மடன் என்னும் குணம் நிலைபெற்று, கற்புநெறிக் கண்ணே தங்கின, மணம் கமழும் ஒளி பொருந்திய நெற்றியினையுடைய உயர்ந்தவட்குக் கணவனாகவும் உள்ளான். போர்க்களத்தில் வெற்றி ஈட்டிக் கொற்றவையை மகிழ்வித்தான்.

நட்பமைந்த சான்றோர்க்குப் பணிந்தொழுகின்றான். பகைவர்க்கு வணங்காத ஆண்மையினையுடையவனா யுள்ளான். இளந்துணையாகிய மக்களைக் கொண்டு முதியராகிய பெரியோர்க்குரிய தொண்டினைச் செய்வித்து தொன்றுதொட்டு வரும் தன் கடமையினைச் செவ்வனே ஆற்றுவிக்கின்றான் செல்வக்கடுங்கோ வாழியாதன்.

**வலம்படு வான்கழல் வயவர் பெரும**
**நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்**
**புறஞ்சொற் கேளாப் புரைதீ ரொண்மைப்**
**பெண்மை சான்று பெருமட நிலைஇக்**
**கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்**
**புரையோள் கணவ பூண்கிளர் மார்ப**
**தொலையாக் கொள்கை சுற்றஞ் சுற்ற**
**வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி**
**உயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை**
**வணங்கிய சாயல் வணங்கா வாண்மை**
**இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்**
**தொல்கட னிறுத்த வெல்போ ரண்ணல்.**

—ஏழாம் பத்து ; 10; 11-12

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை அவனுக்கு முன்னே அவன் குடியில் விளங்கிய முன்னோர்களுக்குப் பாதுகாப்பாயிருந்து, மக்கட் கூட்டத்தைப் புரத்தற்கு வேண்டும் நெறிமுறைகளை அறிவுறுத்தும் அறமே காணும் உள்ளத்தையுடைய அமைச்சர் போன்ற சூழ்ச்சி வன்மை படைத்த இயல்புடையவன்; ஆனால், இதனை அறியாமை காரணமாகப் பகைவர் அறியார் ஆயினர் என்றார் அரிசில் கிழார்.

**காவல் எதிரார் கறுத்தோர் நாடுநின்**
**முன்றிணை முதல்வர்க் கோம்பின ருறைந்து**
**மன்பதை காப்ப வறிவு வலியுறுத்து**
**நன்றறி யுள்ளத்துச் சான்றோ ரன்னநின்**
**பண்புநன் கறியார் மடம்பெரு மையிற்.**

—எட்டாம் பத்து ; 2: 3-7.

அறிவுடையோரை யெண்ணினாலும், அஃது இல்லாத மடவோரை யெண்ணினாலும், பிறருக்கு நீ உவமமாக வாய்ப்பதன்றி, நினக்குப் பிறர் உவமமாகாத ஒப்பற்ற பெருமையுடைய வேந்தன் என்று மேலும் இம்மன்னன் அரிசில்கிழாரால் பாராட்டப்பட்டுள்ளான்.

**உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்**
**பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப்**
**பிறருவம மாகா வொருபெரு வேந்தே.**

—எட்டாம் பத்து ; 3:1-3.

அவனுடைய செல்வமும் வீரமும் கொடையும் மக்கள் ஆராய்ச்சியெல்லையைக் கடந்தன என்றும் பாராட்டுகின்றார் புலவர்.

**நின், வளனு மாண்மையுங் கைவண் மையும்**
**மாந்தர் அளவிறந் தன.**

—எட்டாம் பத்து ; 3:11-13.

அருமறைப் பொருளை அறிவர் உரைப்பக் கேட்டு. அவர் உரைத்த விரதங்களை மேற்கொண்டு தவிரா தொழுகி, அறிவு ஒழுக்கங்களால் உயர்ந்த நன் மக்கள் மனமகிழும்படி வேள்விகளைச் செய்து முடித்தவன் என்று மேலும் இவன் புகழப்படுகின்றான்.

**கேள்வி கேட்டுப் படிவ மொடியாது**
**வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்ப.**

—எட்டாம் பத்து ; 4:1-2,

இவன் போர்க்களத்தில் உயிரைப் போற்றுவதில்லை என்றும், இரவலர் நடுவண் கொடை போற்றுவதில்லை யென்றும் பாராட்டப்படுகின்றான்.

**உயிர்போற் றலையே செருவத் தானே**
**கொடைபோற் றலையே யிரவலர் நடுவண்.**

—எட்டாம் பத்து ; 9:1-2.

மேலும் இவன் பெரியோர்களைத் தமராகப் பேணிக் கொண்டு, ஆற்றலாற் சிறியராயினாரையும் புறக்கணியாது

அருள் செய்கின்றான். மெய்ம்மை மொழியால் விளக்கம் பொருந்திய செவ்விய நாவினன்; வணங்காதாரை வலியழித்த ஆண்மையன்; தொடியணிந்த மகளிர் தோளினைக் கூடுதலால் குழைந்த மாலையணிந்த மார்பினன். எல்லாத் திசையினும் சென்று பரவியிருக்கும் இவன் புகழ்கள் கனவினும் தம்மை விரும்பி வேண்டும் பிறரைச் சென்று சேராவாயின. அத்தன்மையனவாகிய அளத்தற்கரிய குணஞ் செயல்களையுடையையாயிருக் கின்றான்.

**பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி**
**நின்வயிற் பிறந்த நல்லிசை கனவினும்**
**பிறர்நசை யறியா வயங்குசெந் நாவிற்**
**படியோர்த் தேய்த்த வாண்மைத் தொடியோர்**
**தோளிடைக் குழைந்த கோதை மார்ப**
**அனைய வளப்பருங் குரையை.**

—எட்டாம் பத்து 9:; 3-8.

நிலவுலகத்தே நிறுவப்பட்ட நல்ல இசையும் கேடில்லாத கல்வியும் உடையவன் இவன்.

**நிலவரை நிறீஇய நல்லிசை**
**தொலையாக் கற்ப**

—எட்டாம் பத்து; 10: 16-17.

இளஞ்சேரலிரும்பொறையின் கொடைமாட்சியும் படைமாட்சியும் பெருங்குன்றூர் கிழாரால் இனிதுறக் கிளத்தப்படுகின்றன. பாடி வருவார்க்கு வரையாது வழங்குதலின் பலகாலும் கொண்ட வழியும் குறையாத செல்வத்தையும், பகைவர் பலகாலும் பொருதழித்தவழியும் குறையாத சேனை மறவரையும், அறிவாலமைந்த புலவர் கொடை, செங்கோன்மை, சால்பு, வீரம் என்ற இவற்றால் விரும்பிப் புகழ்தலால் கெடாத நல்ல புகழையும், மாற்றார் மண்ணைப் போருடற்றிக் கைக்கொள்ளுதலால் வரும் செல்வத்தையுடையவன் என்று சேரமான் சிறக்கப் பேசப்பட்டுள்ளான்.

பாடுநர், கொளக் கொளக் குறையாச் செல்வத்துச்
செற்றோர்
கொலக் கொலக் குறையாத் தானைச் சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பு மறனும்
புகன்று புகழ்ந் தசையா நல்லிசை
நிலந்தரு திருவின் நெடியோய் நின்னே.

—ஒன்பதாம் பத்து; 2: 12-16.

தெளிந்த நீரைக் கொண்டிலங்கும் சந்தன மரங்கள் மிதந்துவரும் வானியாற்றின் நீரைக்காட்டிலும் தெளிவான குளிர்ந்த மென்மையை யுடையவன் என்று மேலும் இவன் சிறப்பிக்கப்பட்டுள்ளான்:

கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்
புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்
சாந்துவரு வானி நீரினும்
தீந்தண் சாயலன் மன்ற தானே,

—ஒன்பதாம் பத்து; 6: 9-13.

இளஞ்சேரலிரும்பொறை அரசியல் முறை கோடாது ஆளுதலால் நாள்தோறும் நாட்டவரெல்லாம் அவனைத் தொழுது பரவுகின்றனர்; உயர்ந்த நிலைமையினையுடைய தேவருலக வாழ்விற்குரிய ஒழுக்கத்தாலுயர்ந்த சான்றோர் அவனைப் பரவி வாழ்த்துகின்றனர்.

நன்பல் லூழி நடுவுநின் றொழுகப்
பல்வே லிரும்பொறை நின்கோல் செம்மையிற்
நாளின் நாளின் நாடுதொழு தேத்த
உயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே.

—ஒன்பதாம் பத்து; 9: 8-13.

இளஞ்சேரலிரும்பொறை நெஞ்சிலே தண்ணிய அன்புடையனாதலால் தண்ணீரையொத்துள்ளான்; அளத்தற்கரிய சூழ்ச்சியுடையனாதலால் பெரிய ஆகாயத்தை

யொத்துள்ளான்; இரவலர் அளவின்றிக் கொள்ளுவதலுற்ற வழியும் செல்வம் குறைவு படாமையால் கடலை யொத்துள்ளான்.

**அளப்பரு மையின் இருவிசும் பனையை**
**கொளக்குறை படாமையின் முந்நீர் அனையை**
**பன்மீ னாப்பண் திங்கள் போலப்**
**பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை.**

—ஒன்பதாம் பத்து; 10: 15-18.

இதுகாறும் கூறியவற்றால் சேரவேந்தரின் பண்பு நலன்கள் பலவும் தெள்ளிதிற் புலனாகக் கண்டோம்.

இனிச் சேரவேந்தர்தம் படைமாட்சியினை விளங்கக் காண்போம்.

## படைமாட்சி

சேரமன்னர்கள் நால்வகைப் படையினையும் நலமுறப் பெற்றிருந்தனர். அக்காலத்தே சேரர் வீரம் செறிவுடைய தாயிருந்தது. தமிழ்நாடு மட்டுமின்றிப் பிற நாடுகளிலும் சேரர் படைவீரம் மதிக்கப் பெற்றது. யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படையின் மாட்சி களும் பதிற்றுப்பத்தில் பாங்குறப் பேசப்பட்டுள்ளன.

நாற்படையின் நலத்தினைப் பாலைக்கௌதமனார் பின்வருமாறு பாங்குறக் கிளத்துவர். தலையாட்டத்தை யணிந்து விளங்கும் குதிரைகள், இழையணிந்து விளங்கும் யானை, தேர்ச்சீலைகளால் விரிந்து தோன்றும் தேர்கள், போர் செய்வதற்கென முற்பட்ட போரை விரும்பும் வீரர்கள் ஆக இந்நால்வகையும் பொருத்தமுற அமைந்ததே நால்வகைப் படை என நவில்வர் பாலைக் கௌதமனார்:

**உளைப்பொலிந்த மா**
**இழைப்பொலிந்த களிறு**
**வம்புபரந்த தேர்**
**அமர்க் கெதிர்ந்த புகன்மறவர்,**

—மூன்றாம் பத்து; 2 : 17-20.

பிறிதொரு பாடலிலும் (3; 5) பாலைக் கௌதமனார் நாற்படையினைச் சுட்டுகின்றார். கடுங்கண் யானை, படைஞர், கடும்பரி, நெடுந்தேர் என்ற மொழிகளில் நாற்படையினை நலமுறச் சுட்டுகின்றார்.

காப்பியாற்றுக் காப்பியனார் நான்காம் பத்தில் சிவந்த பிடரியினையுடைய குதிரைமீதிவர்ந்தும், நீண்ட கொடியினையுடைய தேர்மீதேறியும், முகபடாம் அணிந்து விளங்கும் கண்டார்க்கு அச்சத்தைத் தோற்றுவிக்கும் புள்ளி பொருந்திய நெற்றியினையுடைய பொன்னரிமாலையணிந்த யானையினுடைய வலிமை பொருந்திய கழுத்தின் மீதிருந்தும் போர்த் தொழிலில் கூறப்படும் அறத்துறை மாறாத வீரரது வலி கெட வெற்றி கொள்வதாகக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைப் பாராட்டு முகத்தான் நாற்படையின் நலத்தினைப் பாங்குற மொழிந்துள்ளார்.

**செவ்வுளைய மாவூர்ந்து**
**நெடுங்கொடிய தேர்மிசையும்**
**ஓடைவிளங்கு முருகெழு புகர்நுதற்**
**பொன்னணி யானை முரண்சே ரெருத்தினும்**
**மன்னிலத் தமைந்த....................**
**மாறா மைந்தர் மாறுநிலை தேய.**

—நான்காம் பத்து; 4 : 4-9.

முதலாவதாக யானைப் படையின் சிறப்பினைக் காண்போம். யானைப்படை பின்வருமாறு சிறப்புறக் கிளத்தப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | பழிதீர் யானை | —2 ; 1 : 18 |
| 2. | போர்வல் யானை | —3 ; 1 : 17 |
| 3. | கடுங்கண் யானை | —3 ; 5 : 2 |
| 4. | பொன்னணி யானை | —4 ; 4 : 7 |
| 5. | பெருங்கை மதமா | —5 ; 3 : 4 |
| 6. | வினைநவில் யானை | —9 ; 2 : 4 |
| 7. | தொழில்நவில் யானை | —9 ; 4 : 4 |
| 8. | பெருநல் யானை | —9 ; 10 : 57 |

மேலும் இரண்டு பதிற்றுப்பத்துப் பாடல்கள் 'வினை நவில் யானை' என்றும், 'தொழில்நவில் யானை' என்றும் பெயர் அமைந்திருக்கக் காண்கிறோம். இவற்றா லெல்லாம் சேரர் யானைப் படையின் செம்மை நலம் புலனாகக் காணலாம்.

யானை நெற்றியில் 'ஓடை' எனப்படும் முகபடாம் அணிந்து வெற்றி வீறும் மருப்புடன் பொலிவதாகவும், யானையின் எருத்தத்தில் மன்னன் மாண்புடன் வீறார்ந்த கோலம் கொண்டு வீற்றிருப்பதாகவும் புலவர் ஒருவர் பாடு கின்றார். போரில் வல்ல யானை என்றும், மதம் பெருக்கும் யானை என்றும், காண்பதற்கு அச்சத்தை விளைவிக்கும் யானை என்றும் யானை கூறப்படுகின்றது. மேலும் உரல் போன்ற கால்களையும், வெண்மையான கொம்புகளையும், நீண்ட துதிக்கையினையும் கொண்ட தாகவும் உள்ள ஆண்யானையைக் காட்டி யானை வேட்டுவர் புதிதாகப் பெண் யானைகளைப் பிடிப்பதாகவும் கூறப்படுகிறது.

கட்டுத்தறியோடு பிணிப்புண்டற்கு இடந்தராது, குத்துக்கோல் பலவற்றையும் சிதைத்து, உயர்ந்து பறக்கும் பருந்தினது நிலத்திடத்தே வீழும் நிழலைச் சினந்து பாயும் யானைகள் என்று அரிசில் கிழார் குறிப்பிடுவர். மேலும் கொங்கர்களுடைய பசுக்கள் பரந்து செல்வது போன்று கணக்கற்ற யானைகள் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் சேனையில் மிகுந்திருந்ததாகப் புலவர் குறிப்பிடுவர்.

> கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
> உகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
> சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்கர்
> ஆபரந் தன்ன பல்செலவிற்
> யானைகாண் பலவன் றானை யானே.
>
> —எட்டாம் பத்து; 7 : 8-12

பல்வகைக் கொடிகள் அசைகின்ற வலியினையுடைய பகைவரை மோதிச் சென்று பெரும்போர்களை யழித்த தாகச் சேரரின் யானைப்படை பேசப்படுகின்றது. மேலும் 'வினைநவில் யானை' என்ற தொடர் 'போர்த் தொழிலிலே நன்கு பயிற்சி பெற்றுள்ள யானைகள்' என்ற பொருளினைத் தருகின்றது. மதம் பொழிந்து மிக்க சினம் கொண்டு மதநதியின் பொருட்டு வண்டு மொய்க்குந் தலையினையுடையவாய், மதவெறி தெளிவிப்பான் வேண்டிப் பெண்யானைகளைப் புணர்த்தப் புணர்ந்தும் தெளியாது திரிவதாக யானைப் படை கூறப்படுவதனை நோக்கச் சேரரின் யானைப் படையின் தறுகண்மையும் வெற்றிச் சிறப்பும் தாமே போதருகின்றன.

**பல்கொடி நுடங்கு முன்பிற் செறுநர்**
**செல்சமந் தொலைத்த வினைநவில் யானை**
**கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி**
**வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல.**

—ஒன்பதாம் பத்து; 2 : 3-6.

படையெடுத்து முன்னேறிச் செல்லுமாறு வீரரை ஏவுகின்ற, குறுந்தடியால் புடைக்கப்படுவதால் முழங்கும் தோலாற் போர்த்தலுற்ற முரசமானது கண்ணிடத்தே குமுறி முழங்குவதுபோல, கார்காலத்து மேகமானது முழங்கினாலும் கட்டுத்தறியை வீழ்த்துக் கட்டறுத்துக் கொண்டு நெற்றியை மேலே நிமிர்த்தெழும் போர்த் தொழிலில் நன்கு பயிற்சி பெற்ற யானைப் படை என்று சேரரின் யானைப்படையினைப் பெருங்குன்றூர் கிழார் பலபடப் பாராட்டிப் பேசுகின்றார்.

**எடுத்தேறேய கடிப்புடை யதிரும்**
**போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்குக்**
**கார்மழை முழக்கினும் வெளில்பிணி நீவி**
**நுதலணந் தெழுதருந் தொழினவில் யானை.**

—ஒன்பதாம் பத்து; 4 : 1-4.

போரிற் சேரர்க்கு நல்வலம் (வெற்றி) வழங்குகின்ற காரணத்தால் 'பெருநல் யானை' என்றே பாராட்டு கின்றார் பெருங்குன்றூர் கிழார்.

இவ்வாறு யானைப்படை சேரர்க்குப் போரில் பெரு வெற்றி நல்கியது. 'வேழ முடைத்து மலைநாடு' என்றபடி சேரர் ஆண்ட கடன்மலைநாட்டில் 'உம்பற்காடு', 'வேழக் காடு' எனும் ஊர்கள் யானையின் மிகுதியினை அந்நாளில் உணர்த்தி நின்றன.

அடுத்து, குதிரைப் படையின் சிறப்பினைக் காண்போம்:

| | | |
|---|---|---|
| 1. | உளைப்பொலிந்த மா | —3 ; 2 : 17 |
| 2. | கடும்பரி | —3 ; 5 : 12 |
| 3. | செவ்வுளைய மா | —4 ; 4 : 4 |
| 4. | செவ்வுளைக் கலிமா | —4 ; 8 : 7 |
| 5. | எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி | —7 ; 2 : 3; 8 : 4 : 9 |
| 6. | பாய்ந்தாய்ந்த மா | —7 ; 9: 7 |
| 7. | ஆய்மயிர்க் கவரிப் பாய்மா | —9 ; 10 : 36 |

என வரூஉந் தொடர்கள்கொண்டு பிடரிமயிரினை யுடையதும், பாய்தல் வல்லதுமாகிய குதிரை என்பது பெறப்படுகின்றது. யானைப்படைக்கு அடுத்த நிலையே குதிரைப்படைக்குத் தரப்பட்டது என்பதும் புலனாகின்றது. யானைப்படையின் பெருமை, ஆற்றல் முதலியன சிறப்பாகப் பலவிடங்களிலும் பேசப்பட்டிருக்கக் குதிரைப்படையின் பெருமையும் ஆற்றலும் ஒருசில பாடல்களில் மேலோட்ட மாகக் கூறப்பட்டிருப்பது கொண்டு இம்முடிவுக்கு வர வேண்டியுள்ளது.

தேர்ப்படை இன்னும் ஒருபடிக் குறைவாகவே கூறப் பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | வம்புபரந்த தேர் | —3: 2: 19 |
| 2. | நெடுந்தேர் | —3; 5: 13 |
| 3. | வடிமணி நெடுந்தேர் | —6; 2: 2 |

தேர்ச்சீலைகள் தொங்கவிடப்பட்ட தேர் என்றும், நெடிய பெரிய தேர் என்றும், வடிக்கப்பட்ட மணிகள் கட்டிய தேர் என்றும் மேற்காணும் குறிப்புகளால் தேர்ப் படை பற்றிய செய்தி ஓரளவு விளக்கமுறுகின்றது.

இனி, காலாட்படை என வழங்கும் படைவீரர்களின் மேம்பாட்டினையும் அஞ்சாமை இயல்பினையும், வெற்றிச் சிறப்பினையும் விளங்கக் காண்போம்.

முதற்கண் சேரர் தானைச் சிறப்பினைக் காண் போம். போரில் வல்லதும், கோபம் மிக்கதும், கடல்போல் பரந்ததும், கொலக் கொலக் குறைவு படாததும் சேரர் சேனையாம் என்பது தெரியவருகிறது.

1. **போரடு தானை** —2;1: 16; 3; 3: 10
2. **ஒல்லார் யானை காணின் நில்லாத் தானை** —6; 4: 16-17
3. **செருமிகு தானை** —7; 3: 12
4. **கடல்போல் தானை** —7; 9: 3
5. **கொலக்கொலக் குறையாத் தானை** —9; 2: 13
6. **உரவுக் கடலன்ன தாங்கருந் தானை** —9; 10: 31

இனி, படைமறவர் பற்றிக் கூறப்படுவன வருமாறு:

1. **அமர்க்கெதிர்ந்த புகன்மறவர்** —3; 2: 20
2. **உரும்பின் கூற்றத் தன்ன (நின்) திருந்துதொழில் வயவர்** --3; 6: 13- 14
3. **பெருஞ்சமந் ததைந்த செருப்புகன் மறவர்**—3; 10: 41
4. **ஆய்ந்து தெரிந்த புகன்மறவர்** —7; 9: 8

போரில் வல்லவர், போரை விரும்புநர், ஆராய்ந் தெடுத்த நல்மறவர் என்றெல்லாம் சேரர் படைமறவர் பெருமை விளங்க உரைக்கப்பட்டுள்ளது.

சேரர் படையினை நடத்திச் செல்லும் தானைத் தலைவனாம் சேரமன்னனின் வீரமும் பின்வருமாறு பாராட்டப் பட்டுள்ளது:

1. போர் பீடழித்த செருப்புகன் முன்ப
கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற்றலையே
—2;4: 9-10

2. படையே ருழவ —2; 4: 17

3. சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலின் —3; 7:1

4. காலன் அனைய கடுஞ்சின முன்ப —4; 9:8

5. தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல் —4; 10: 16

6. சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவன்
—5; 3: 10-11

7. பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்
புன்கா லுன்னத்துப் பகைவன் எங்கோ —7; 1: 5-6

8. துப்புத்துறை போகிய கொற்ற வேந்தே —7; 2: 9

9. உய்தல் யாவது நின்னுடற்றி யோரே —9; 4: 13

10. கொற்றத் திருவின் உரவோர் உம்பல் —9; 10: 24

இவற்றால் சேரர் போர்க்களத்தில் செரு மேம்படுதலில் வல்லவர் என்பதும், கூற்றுவனே எதிர்த்து வரினும் மாற்றும் ஆற்றல் உடையவர் என்பதும், படையையே ஏராகக் கொண்டு உழும் உழவர் என்பதும், அவர்கள் கோபித்துப் பார்த்த பகுதிகள் உறுதியாக அழிந்தன என்பதும், எமன் போன்று போரில் கடுஞ்சினம் கொள்பவர் என்பதும், போரில் முன்னின்று போர் உடற்றும் தூசிப் படையினை நிரம்பவுடையவர் என்பதும், பலமொழி பேசும் நாடுகளையும் அழிக்கும் ஆற்றல் உடையவர் என்பதும், உன்னமரம் கரிந்து காட்டித் தோல்வியினை முன்கூட்டி உரைத்தாலும் அதற்கு அஞ்சாது படையெடுத்துச் சென்று போரில் வெற்றி பெறுபவர் என்பதும், வன்மையில் மிக்கவர்

என்பதும், அவரோடு போரிட்டவர் பிழைத்தல் அரிது என்பதும், வெற்றித் திரு விளங்க வாய்க்கப் பெற்ற வன்மையோர் என்பதும் விளங்குகின்றன.

**படைவீரர் தறுகண்மை**

யானையின் துதிக்கையினை அஞ்சாமை மேற்கொண்டு துண்டிக்கின்றனர்.

**தடக்கை யானைத் தொடிக்கோடு துமிக்கும்**
**எஃகுடை வலத்தர்நின் படைவழி வாழ்நர்.**

—ஆறாம் பத்து ; 1: 29-30

மண்ணால் புனையப்பட்ட மதிலை வெற்றி பெற்றுக் கடந்தல்லது நாளை உணவு உண்ணமாட்டோம் என்று வஞ்சினம் கூறுகின்றனர்.

**இன்றினிது நுகர்ந்தன மாயி னாளை**
**மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்லது**
**உண்குவ மல்லேம் புகாவெனக் கூறிக்**
**கண்ணி கண்ணிய வயவர்...**

—ஆறாம் பத்து ; 8: 5-8

ஊன் வெட்டிய மரத்துண்டு போன்ற உடம்பில் போர்ப்புண் பெற்ற வடுநிறைந்த யாக்கையராய் உள்ளனர்.

**எஃகா டூனங் கடுப்பமெய் சிதைந்து**
**சார்ந்ததெழில் மறைத்த சான்றோர்.**

—ஏழாம் பத்து; 7: 17-18

மேலும் வீரரைச் சான்றோர் எனக் கூறும் சொல் வழக்கும் நாம் பதிற்றுப்பத்தில் காண்கிறோம்.

எத்தனை நாள்கள் கழியினும் உழிஞை சூடி மதிலை முற்றுகையிட்ட சேரர் படை வீரர் மதிலைக் கைப்பற்றி யல்லது உணவு உண்ணுதலில்லை என நெஞ்சுறுதி கொண்ட மறவராயுள்ளனர்.

**வெவ்வரி நிலைஇய வெயிலெறிந் தல்லது**
**உண்ணாது அடுக்கிய பொழுதுபல கழிய**
**நெஞ்சுபுகல் ஊக்கத்தர்.**

—ஏழாம் பத்து : 8: 5-7

களிறுகள் பாசறையெல்லையிற் பரந்து இயங்க, விரைந்து செல்லும் குதிரைகள் வீரர்களைச் சுமந்து அவர் குறிப்புவழிச் செல்ல, விளங்குகின்ற கொடிகள் அசையத் தேர்கள் நாற்றிசையும் சுழன்று திரிய, பகைவேந்தர் தம் நகர்ப்புறத்தே முற்றுகையிட்டுத் தங்கினும் சிறிதும் நடுக்க மில்லாதவராய், தமக்குரிய இடங்கட்குக் காவல் கொள்ளாத வலிமையினையுடையராகிய வீரர், பெரிய இருள் பரவிய இராக் காலத்தும், தம் தோளிலணிந்த வீரவளை ஒளி திகழ, தோளிடத்தே பிணிக்கப்பட்ட மீகை யினையுடையராய்ப் போரிற் புண்பட்டு வீழ்தலை விரும்பும் வேட்கையராய்ப் போர் விருப்பம் மிகுந்து வஞ்சின மொழிகள் கூறி, தாம் கூறிய வஞ்சினம் தப்பாமல் வாய்க்கத் தாம் பிறந்த குடிக்குக் கெடாத நல்ல புகழை நிலைநிறுத்துதற்குப் பாடுபட்டுழைக்கின்றனர். இவ்வாறு சேரர் மறவர் பெருமையும் வீரமும் செயலும் பெருங் குன்றூர் கிழாரால் விளங்கக் கூறப்படுகின்றன.

**களிறுபாய்ந் தியலக் கடுமா தாங்க**
**ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப**
**அரசுபுறத் திறுப்பினு மதிர்விலர் திரிந்து**
**வாயில் கொள்ளா மைந்தினர் வயவர்**
**மாயிருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்**
**தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளும்**
**முடிதல் வேட்கையர் நெடிய மொழியூஉக்**
**கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமார்**
**இடாஅ ஏணி வியலறைக் கொட்ப.**

—ஒன்பதாம் பத்து; 1:6-14.

போரில் மார்பிற்பட்ட புண்களைத் தைக்குங் காலத்து அப்புண்ணின் குருதியிலே மூழ்கி மறைந்தெழுகின்ற நெடிய வெண்மையான ஊசியினாலாகிய நீண்ட தழும்பும் பரந்த வடுவும் பொருந்திய மார்பினையும், அம்புகளால் புண்பட்ட உடம்பினையுடையராய்ப் பொர வந்தாரோடு தும்பை

சூடிப் பொருவதல்லது, அன்னர் அல்லாத பிறருடன் தும்பை சூடாமல் புறக்கணித்துப் போய்ப் போருடற்றும் போர் மாட்சியுமுடையராகிய சான்றோர் என்று சேரர் மறவர் சிறக்கக் கூறப்பட்டுள்ளனர்.

...... நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசே ருடம்பினர் நேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி.

—ஐந்தாம் பத்து; 2:3-6.

இதனால் சேர மறவர் விழுப்புண் பட்டாரோடன்றிப் பிறரொடு போரிடுவதற்கு விரும்பாதவர் என்பதும், பிறர் எதிர்த்தவழி வீறின்றெனத் தும்பை சூடாது, அவரைப் புறக்கணித்தொதுக்கி ஒத்தாரோடு பொருத சிறப்பினர் என்பதும் விளங்குகின்றன.

எஃகம்

படைவீரர் 'எஃகம்' எனப்படும் வேலினைப் போரிற் பயன்படுத்தினர். இவ் எஃகம் சிவந்த வாயுடையதாகவும், புலால் நிணம் தின்று நாற்றத்தையுடையதாகவும், புலித் தோலால் இயன்ற உறையினுள் இருப்பதாகவும் வயிரம் பாய்ந்த பிடியுடையதாகவும், குதிரை வீரர் கையிற் கொண்டு பகைவர்மீது ஓச்சுவதோர் படைக்கருவியாகவும் விளங்கியதென்பது தெரியவருகின்றன.

1. செவ்வாய் எஃகம் விலங்குநர் அறுப்ப. — 2; 1:7
2. புலியுறை கழித்த புலவுவாய் எஃகம். — 3; 4:2
3. ஆய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு
காழெஃ கம்பிடித் தெறிந்து. — 9; 10:36-37.

குடை

அரசரின் வெண்கொற்றக்குடை விண்தோய்ந்த உயர முடைத்து எனப் பேசப்பட்டுள்ளது.

விசும்புதோய் வெண்குடை — 2; 7:13

### கொடி

மன்னர் தம் கொடி மாண்புறப் பறப்பதாகக் கூறப்படுகின்றது. பாசறை மீது மன்னர் கொடி பறப்பதாகக் குறிப்பு வந்துள்ளது.

உரவுக் களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை
— 9; 8:17

### முரசம்

சேரரின் முரசம் பலவிடங்களிற் பேசப்பட்டுள்ளது. பகைவரை வென்று கடம்ப மரத்தால் முரசு செய்யப்பட்டது என்பதும், பகைவர் துயிலின்றி நடுங்க அம்முரசம் காரணமாக உள்ளது என்பதும், முரசினைப் படைவீரர் செந்தினையுடன் குருதியினை அளைந்து பலி தூவுகின்றனர் என்பதும், முரசுடைய வேந்தரையும் சேர மன்னன் வெற்றி கொள்கிறான் என்பதும், இடியெனச் சேர வேந்தரின் வீர முரசு முழங்குகின்றது என்பதும் நாம் முரசு பற்றிப் பதிற்றுப் பத்தால் அறியவரும் செய்திகளாகும்.

1. பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய வேஎய்
வெண்றெறி முழங்குபணை செய்த — 2; 1:12-14
2. முரசுமுழங்கு நெடுநகர் அரசுதுயில் ஈயாது
— 2; 2:7
3. கடம்பறுத் தியற்றிய வலன்படு வியன்பணை
— 2; 7:5
4. உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
மண்ணுறு முரசங் கண்பெயர்த்து — 2; 9:6-7
5. முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழ
— 4; 4:10
6. ........ செருமிக்கு
உருமென முழங்கு முரசு — 9; 10: 55-56

## போர் பற்றிப் பதிற்றுப்பத்தால் அறியலாகும் செய்திகள்

பதிற்றுப்பத்தில் ஆனிரை கவரும் வெட்சிப்போர் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருக்கவில்லை. 'வட்கார் மேற் செல்லும் வஞ்சி' பற்றிய செய்திகள் விரிவாக இடம் பெற்றுள்ளன. ஒரு நாட்டின்மீது படை நடத்திச் செல்லும் வேந்தனுடைய படை மறவர்கள் முதலில் தங்கள் முரசத்திற்குச் செந்தினையையும் குருதியையும் பலியாகத் தூவி வழிபடுவர்; குருதியால் அந்த மயிர்க்கண்ணைத் துடைப்பர். பின்னர்க் குறுந்தடி கொண்டு முழக்கி ஓசையெழுப்புவர். உடனே வீரர்க்கு மனவெழுச்சி மிகும்; அவர்களிடையே போர் ஆரவாரம் உண்டாகும்.

**உருவச் செந் தினை குருதியொடு தூஉய்**
**மண்ணுறு முரசங் கண்பெயர்த் தியவர்**
**கடிப்புடை வலத்தர் தொடித்தோ ளோச்ச.**

—இரண்டாம் பத்து; 9:6-8.

பகைவர்தம் காவல் மரத்தினை அறுத்து அவ்வடிமரம் கொண்டு முரசு செய்தல் சேரவேந்தர் இயல்பாகும். மாக்கடல் நடுவே குறும்பு செய்த கடற் பகைவர்தம் காவல் மரமான கடம்பினை வெட்டி வீழ்த்தி அதனால் செய்யப் பட்ட வெற்றி முரசுக்குப் போர்வீரர் திரும்பப் போந்து அரிய பலியினையிட்டுப் பரவக் குறுந்தடி கொண்டு அம் முரசின்கண்ணில் அறைந்து தொடியணிந்த தோளுடைய வீரர்கள் இயக்குகின்றார்கள். போரில் வெற்றி நல்கிய முரசத்தைப் பண்டையோர் வணங்கினர் என்பது இதனால் விளக்கமுறுகின்றது.

**துளங்குபிசி ருடைய மாக்கட னீக்கிக்**
**கடம்பறுத் தியற்றிய வலன்படு வியன்பணை**
**சூடுநர் பெயர்த்துவந் தரும்பலி தூஉய்க்**
**கடிப்புக் கண்ணு றூஉந் தொடித்தோ ளியவர்.**

—இரண்டாம் பத்து; 7: 4-7.

யானை மறவர் யானை எருத்தத்தின் (கழுத்து) மீது அமர்ந்து படைக்கருவிகள் தாங்கிச் செல்வர். மன்னன், நெற்றிப்பட்டத்தையும் (ஓடை) பொன்னரி மாலையையும் அணிந்து பொலிந்து தோன்றும் யானையின் மீது இவர்ந்து செல்வான்.

**ஓடை விளங்கு முருகெழு புகர்நுதற்**
**பொன்னணி யானை முரண்சே ரெருத்தினும்**
**......... ....................**
**அரைசுபடக் கடக்கு மாற்றல்.**

—நான்காம் பத்து; **4: 6-11.**

குதிரை வீரர்கள் வேகமாக ஓடும் சிவந்த பிடரி மயிரினையுடைய குதிரைகள் மீதமர்ந்து படைக்கலன் ஏந்திப் போர்முகம் செல்வர்.

**செவ்வுளைய மாவூர்ந்து** **—4; 4:4.**

**ஆய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு**
**காழெஃ கம்பிடித் தெறிந்து.** —9; 10:36-37

தேர்ப்படை மறவர் நீண்ட கொடியினையுடைய தேர்கள்மீது ஏறிச் செல்வர்.

**நெடுங்கொடிய தேர்மிசையும்.** **—4; 4:5.**

காலாட்படையினர் வாள், வேல், வில் முதலிய படைக் கருவிகளை ஏந்திப் போர்க்களம் சேர்கின்றனர்.

அரசனிடம் பல்வகைப் படைகளும் பாங்குறப் பொலிந்து விளங்கும். அவற்றுள் முதலாவதாகச் சொல்லப்படும் படை கூளிப்படை (Poineers; sappers and miners) எனப்படும். அது பகைப்புலம் சென்று அங்குள்ள பொருள்களைச் சூறையாடும்; தன்னைப் பின்பற்றி வரும் படைகளுக்கு ஒழுங்கான வழியமைத்துச் செல்லும். இக்கூளிப்படையின் பின்னரே, புலித்தோலால் செய்த உறையில் வாளைச் செருகியுள்ள வாட்படை

வீரரும் வேற்படை வீரரும் பிற படை மறவரும் அணி வகுத்துப் போர்க்களம் செல்வர்.

**கொள்ளை வல்சிக் கவர்காற் கூளியர்**
**கல்லுடை நெடுநெறி போழ்ந்துசுர னறுப்ப**
**ஒண்பொறிக் கழற்கால் மாறா வயவர்**
**திண்பிணி யெஃகம் புலியுறை கழிப்ப.**

—இரண்டாம் பத்து; 9: 1-4.

இக்கூளிப்படையினை அடுத்துச் செல்லும் படை தார் அல்லது தூசிப்படை என்று கூறப்படும். இத் தூசிப்படை மறவர், மனவெழுச்சியும் தறுகண்மையும் மிக்கவர். பகைவரோடு போர்க்களத்தில் அஞ்சாது போருடற்றுவர். பகைப்புலத்திற்கு எரியூட்டுவர்; பகைவர் நாட்டு மக்கள் மனத்தில் அச்சத்தைத் தோற்றுவித்து அவர்களுக்கு மாறாத மனக்குழப்பத்தை விளைவிப்பர்.

**மைந்துமலி பெரும்புக ழறியார் மலைந்த**
**போரெதிர் வேந்தர் தாரழிந் தொராலின்.**

—மூன்றாம் பத்து; 3: 16-17.

மாற்றுப்படைகள் இரண்டும் சமவெளியில் போரிடும். தும்பைப்பூ மாலையைச் சூடிப் போர் செய்வர். மன்னர் பொன்னால் இயன்ற தும்பைப் பூமாலையைச் சூடுதல் மரபு. புற்றின்கண் அடங்கிய பாம்புபோல் ஒடுங்கியிருக்கும் அம்புகளையும், வளைதலையுடைய வில்லையும், களிறுகளைக் கொல்வதால் நுனி மடிந்த வேலையுமுடைய வீரர்கள் மனவெழுச்சி மிக்கவர்கள்.

**பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்**
**புற்றடங் கரவி னொடுங்கிய வம்பின்**
**நொசிவுடை வில்லி னொசியா நெஞ்சிற்**
**களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்**
**விழுமியோர் துவன்றிய வன்கண் நாட்பின்.**

—ஐந்தாம் பத்து; 5: 1-5.

மதிலை வளைத்துச் செய்யும் போர் 'உழிஞை' என்று கூறப்படும். மதிலைக் கைப்பற்ற மன்னன் பொன்னால் செய்த உழிஞைப்பூ மாலையைச் சூடுவான். மன்னனின் மாவீரர்கள் உழிஞைப் பூக்களால் ஆகிய அழகிய மாலையைச் சூடுவர்.

**சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடி.** —7; 3: 8.

அகமதிலைப் பற்றச் செல்வோர் அதன் எதிரேயுள்ள செண்டு வெளியில் (Plain) காத்தூன்றும் பகைவீரரை வெல்ல வேண்டும். கணைய மரம் செறிக்கப்பட்ட உயரிய நிலையினையுடைய மதில்வாயிலிடத்தே தூங்குமாறு கட்டிய வில்லினது அம்பு செலுத்தும் வன்மையோடு பொருந்திய விழுமிய சிறப்புடைய ஐயவித்துலாமும், காவற்காடும், ஆழ்ந்த அகழியும், நெடிய மதிலிடத்தே நிரல்பட வமைத்த பதணமும் உடைய அகப்பா என்னும் அரணைச் சேரன் வென்ற செய்தி ஒரு பாடலில் சிறக்க உரைக்கப்பட்டுள்ளது.

**துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை**
**ஓங்குநிலை வாயில் தூங்குபு தகைத்த**
**வில்விசை மாட்டிய விழுச்சீ ரையவிக்**
**கடிமிளைக் குண்டு கிடங்கின்**
**நெடுமதில் நிரைப் பதணத்**
**தண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த**
**பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ.**

—மூன்றாம் பத்து; 2: 21-27.

திருவள்ளுவர் பொருட்பாலில் அரசியலைப் பற்றிக் கூறவந்தவிடத்து இறைமாட்சி அதிகாரத்தின் முதற் குறளில், படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு அரண் ஆறும் உடையவனே அரசருள் ஏறு என்று குறிப்பிட்டுள்ளார்.

**படைகுடி கூழமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு.** —திருக் : 381.

(He who possesses these six things, an army, a people, wealth, ministers, friends and a fortress, is a lion among kings —Rev. Drew & John Lazarus),

'அரண்' என்றே ஓர் அதிகாரத்தைத் திருவள்ளுவர் வைத்திருப்பதிலிருந்து அரணின் அவசியத்தினை அறியலாம். அரண் எனப்படுவது மணிபோல் தெளிந்த நீருடைய அகழியும், வெளிநிலமும், மலையும், அழகிய நிழலுடைய காடும் உடையது என்றும் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

**மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்**
**காடும் உடைய தரண்.** —திருக்: 742.

(A fort is that which has everlasting water, plains, mountains and cool shady forests—Rew. Drew and John Lazarus).

பதிற்றுப்பத்தில் புலவர்கள் வருணித்துள்ள கோட்டை இத்தகு சிறப்புகளைக் கொண்டுள்ளதாகத் தெரிய வருகின்றது.

கோட்டைக் கதவு மிகவும் வலிமையுடையதாயிருக்கும்; இருப்பாணிகளால் இறுகப் பிணிக்கப்பட்டுக் கதவின் பின்புறம் வலிமை வாய்ந்த கணைய மரம் குறுக்குச் சட்டமாக வைக்கப்பட்டிருக்கும். இக்கதவுகளைப் பிளக்க யானைகளை வீரர் ஏவுவர். யானைகள் தம் கொம்புகளால்—தந்தங்களால் அவ்வலிய கதவினைப் பிளக்க முயலும். அம்முயற்சியில் சிற்சில சமயம் அவற்றின் கொம்புகள் முறிவதும் உண்டு. மேலும் கோட்டை வாயிலில் பகைவரை மகளிராக்கி அவர் அணிந்து கொள்வதற்குச் சிலம்பும் தழையும் பந்தும் கட்டித் தொங்க விடும் மரபும் உண்டு என்பதலை யறியலாம்.

**செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கும்**
**எந்திரத் தகைப்பின் அம்புடை வாயிற்**
**கோள்வல் முதலைய குண்டுகண் ணகழி**
**வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை.**

—ஆறாம் பத்து; 3 : 6-9.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரரும் பகைவரைப் பெண்களாகப் பாவித்துக் கோட்டைவாயிலில் அவர் அணிந்து கோடற்குச் சிலம்பும் தழையும் பந்தும் கட்டித் தொங்கவிடும் வழக்குண்மையை,

**செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி**
**வரிப்புனை பந்தொடு பாவை தூங்க.**

—திருமுருகு; 68-69.

என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் கோட்டை வாயிலில் அம்புகளை எய்யும் எந்திரப் பொறிகள் அமைந்திருக்கும். இவ் எந்திரப் பொறிகள் சிலப்பதிகாரத்தில் விளங்க உரைக்கப் பட்டுள்ளன. இவ் எந்திரப் பொறிகள் யவன நாட்டிலே யிருந்து இங்குக் கொண்டுவரப்பட்டுத் தமிழ்நாட்டுப் போர்களில் பயன்படுத்தப்பெற்றன என்பர் அறிஞர்.

**எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில்** —7; 3 : 7.
**ஆரெயில் அலைத்த கல்கால் கவணை** —9; 8 : 18.

என்ற தொடர்கள் இதனை யுணர்த்தும்.

கோட்டையைச் சூழ்ந்துள்ள அகழிகளில் கொடிய முதலைகள் விடப்பட்டிருக்கும் செய்தி,

**கோள்வல் முதலைய குண்டுகண் அகழி** —6; 3 : 8.

என்ற தொடரால் பெறலாகின்றது.

கோட்டைகள் வளைவு வளைவாகக் கட்டப்படும் என்பதும், அவை வானளாவி உயர்ந்திருக்கும் என்பதும் அறியப்படுகின்றன.

**வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை.** —6; 3 : 9.

மதிலைக் கைப்பற்ற உழிஞை சூடிச் செல்லும் வீரர் கோட்டைக்கு வெளியே அமைந்துள்ள காவற்காட்டினை முதற்கண் அழிப்பர். பின்பு முதலைகள் உறையும் கொடிய ஆழமான அகழியைக் கடப்பர். மதிலைக் காக்கும் வீரர் மதிலைக் கைப்பற்றும் வீரரோடு கைகலந்து பொருதுவர். உழிஞை சூடிய வீரர் அவரை வென்று மதில்மேல் ஏறுவர். அடுத்த வேளை உணவு கோட்டையைக் கைப்பற்றி உள் நுழைந்த பின்னரே என வஞ்சினம் கூறி மனஞ்செருக்கிப் போராற்றுவர்.

**வெவ்வரி நிலைஇயே வெயிலெறிந் தல்லது**
**உண்ணா தடுக்கிய பொழுதுபல கழிய**
**நெஞ்சுபுக லூக்கத்தர்**

— ஏழாம் பத்து; 8 : 6-7.

**இன்றினிது நுகர்ந்தன மாயின் நாளை**
**மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்லது**
**உண்குவ மல்லேம் புகாவெனக் கூறி**

—ஆறாம் பத்து; 8 : 5-7.

சேரநாட்டு வீரர் வெள்ளிய பனந்தோட்டிலே நல்ல நிறமான பூக்களை விரவி நிறம் விளங்கத் தொடுத்தணி கின்றனர் என்றும், அவர் வாளினது வாயால் வடுப்பட்ட உடம்பினர் என்றும், இடிபோல் பகைவரைத் தாக்கப் படைக்கலன்களைக் கையிலேந்தி வருபவர் என்றும் காக்கை பாடினியார் பாராட்டுவர்.

**வெண்டோட் டசைத்த ஒண்பூங் குவளையர்**
**வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்**
**செல்லுறழ் மறவர்தங் கொல்படைத் தரீஇயர்.**

—ஆறாம் பத்து ; 8: 2-4.

இத்தகைய ஆற்றல் சான்ற வீரமறவர்கள் மதிலின்கண் போர் செய்வர். மதிற்போரில் வெற்றி பெற்றவுடன் ஆரவாரத்துடன் உழிஞைப்பூ மலைந்த வீரர் அகநகர்க்குள் நுழைவர். அங்குத் தம்மோடு மாறுபாடு கொண்டு

மலைந்த வீரரை வென்று அழகிய நகருக்கு அழல் (எரி) ஊட்டுவர்; நகரைக் கொள்ளையிடுவர்.

கடிமிளைக் குண்டு கிடங்கின்
நெடிமதில் நிலைஞாயில்
அம்புடை யாரெயில் உள்ளழித் துண்ட
அடாஅ வடுபுகை யட்டுமலர் மார்பன்.
—இரண்டாம் பத்து; 10: 18-21.

கோட்டையைத் தமக்குரியதாகக் கைப்பற்றிக் கொள்ளவேண்டும் என்ற முற்றுகையில் நால்வகைப் படைகளும் கோட்டையைச் சூழ்ந்துகொள்ளும் என்றும், கோட்டையின் உள்ளேயிருப்பவர் வெளியில் வர இயலாத படி அம்முற்றுகை அமைந்திருக்கும் என்றும், கிடுகு (கேடயம்) ஏந்திய படை மறவரும் வேற்படை வீரரும் வாட்படை வயவரும் குதிரைப் படையினரும் யானைப் படையினரும் மதிலின் பக்கத்தே மிக நெருங்கிச் சென்று தமது முற்றுகையைப் பலப்படுத்திப் பயனுள்ளதாக்குவர் என்றும் கபிலர் ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார்.

இழையணிந்து எழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு
மழையென மருளும் மாயிரும் பஃறோல்
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை யாரெயில் புடைபட வளைஇ
வந்துபுறத் திறுக்கும். —ஏழாம் பத்து; 2: 1-5.

கோட்டை மதில்களில் எந்திரப் பொறிகள் அமைந்து அச்சம் தருவன எனக் கண்டோம். ஆனால் கண்டார் விரும்பத்தகும் ஓவியங்களும் கோட்டை மதில்களையடுத்து நீண்ட பெருமனையிடத்தே நெடிய சுவர்களில் வரையப் பட்டிருக்கும் எனக் குறிப்பு வந்துள்ளது.

நெடுமண் இஞ்சி நீணகர் வரைப்பின்
ஓவுறழ் நெடுஞ்சுவர். —ஏழாம் பத்து; 8: 16-17.

கோட்டைக்கு வெளியேயுள்ள பகைவர் ஊர்கள் தீப் பற்றி எரியும். கோட்டையின் உள்ளிருப்பவர்கள் உண் பதற்கு உணவுப்பொருள்கள் செல்லாமல் தடுத்து நிறுத்தப் படும்.

ஊரெரி கவர வுருத் தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த், தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயில்
ஆரெயிற் றோட்டி வெளவினை.

—எட்டாம் பத்து; 1: 9-13

கோட்டை முற்றுகையுள் சிக்கிய மன்னன் மான முடையனாயின் போரிட்டு மடிவான்; இன்றேல் மதிலை வளைத்த மன்னனுக்குத் திறைதந்து பணிந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வான்.

வணங்க லறியா ருடன்றெழுந்து

—ஒன்பதாம் பத்து; 4 : 14.

புனல்பொரு கிடங்கின் வரைபோல் இஞ்சி
அணங்குடைத் தடக்கையர் தோட்டி செப்பிய
பணிந்துதிறை தருபநின் பகைவர்.

—ஏழாம் பத்து; 2: 10-12.

பெரிய தப்புந ராயினும் பகைவர்
பணிந்துதிறை பகரக் கொள்ளுநை

—இரண்டாம் பத்து; 7: 2-3.

அறியா தெதிர்ந்து துப்பிற் குறையுற்றுப்
பணிந்துதிறை தருபநின் பகைவர்

—ஆறாம் பத்து; 9: 11-13.

பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறை கொண்டு பெயர்தி.

—எட்டாம் பத்து; 1 : 33-24.

சில சமயங்களில் களிறுகளைத் திறையாகப் பெற்று மன்னன் சினந் தணிவான்;

**தொன்றுதிறை தந்த களிற்றொடு**

—ஏழாம் பத்து; 6 : 7.

சில சமயங்களில் பகைவேந்தர் களிறோடு பொற்கலங்களும் தந்து சேரவேந்தனின் சினத்தைத் தணிவித்து அவன் ஏவல் கேட்கின்றனர்.

**ஒளிறுவாள் வயவேந்தர்**
**களிறொடு கலந்தந்து**
**தொன்றுமொழிந்து தொழில்கேட்ப.**

—ஒன்பதாம் பத்து; 10: 6-8.

**பாசறை**

இனிப் பாசறைச் செய்திகளாகப் பதிற்றுப்பத்து கொண்டு அறிவனவற்றைக் காண்போம்.

போர்மேற் சென்ற மன்னன் படையுடன் தங்கியிருக்கும் காட்டின் நடுவேயுள்ள இடம் 'பாசறை' எனப்படும். பாசறைக்கு நடுவில் மன்னனின் இருக்கை அமைந்திருக்கும். பாசறையில் வீரர்கள் எப்போதும் காவல் இருந்த வண்ணம் இருப்பர். யானைப்படைகள் ஒரு பக்கமும், குதிரைப்படைகள் ஒரு மருங்கும், தேர்ப்படைகள் பிறிதோர் பக்கமும், காலாட் படையினர் ஒரு பக்கமும் பாடிவீட்டில் (பாசறையில்) தங்கியிருப்பர். மன்னனின் மாண்புசார்ந்த வெற்றியை வாழ்த்திப் பாடிப் பரிசில் பெற வேண்டுமென்று பாணரும் புலவரும் கூத்தரும் பொருநரும் பாசறைக்கண் தங்கியிருப்பர். விறலியரும் பாணரும் மன்னன் மாற்றாரிடைக் காட்டிய மாசிலாத வீரத்தினைப் புகழ்ந்து பாடி நல்ல அணிகலன்களைப் பரிசிலாய்ப் பெறுவர். போர்க்களத்தில் வெற்றி பெற்று வாகை சூடிய வேந்தனைச் சிறக்கப் பாடி மகிழ்விப்பர்.

**மின்னிழை விறலியர் நின்மறம் பாட**
**இரவலர் புன்கண் தீர நாடொறும்**
**உரைசால் நன்கலம் வரைவில வீசி.**

—ஆறாம் பத்து; 4: 6-8.

போரிலே வெற்றி பெற்ற மன்னன் பகைவர் நாடுகளை அழித்து ஆங்குக் கிடைக்கும் பொருள்களைப் பரிசிலர்க்கு வழங்குவான்.

..................................பன்மா
நாடுகெட வெருக்கி நன்கலந் தரூஉநின்
போரருங் கடுஞ்சின மெதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

—ஒன்பதாம் பத்து; 3: 6-9.

பாணர்க்கு வழங்குவதோடன்றித் தன் வெற்றிக்கு வாய்ப்ப உழைத்த படைவீரர்களுக்குப் பொற்கட்டிகளையும் பிற உயரிய பரிசில்களையும் நெஞ்சாரக் கொடுப்பான்.

நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி
அழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி
கட்டளை வலிப்ப நின்தானை யுதவி
வேறுபுலத் திறுத்த வெல்போர் அண்ணல்.

—ஒன்பதாம் பத்து; 1: 15-18.

போரிற் தோற்ற வேந்தனின் காவல் மரத்தைத் தடிந்து, அம்மரத்தைக் கொண்டு போரில் வெற்றி வாகை சூடிய அரசன் முரசு செய்து கொள்வது அந்நாளைய வழக்கமாகும்.

பலர்மொசிந் தோம்பிய வலர்பூங் கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்.

—இரண்டாம் பத்து; 1:12-14.

படைவீரர் அம்முரசத்தினைச் செந்தினையும் குருதியும் தூவி வழிபடுவர்; நீராட்டுவர்.

கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை
ஆடுநர் பெயர்ந்துவந் தரும்பலி தூஉய்.

—இரண்டாம் பத்து; 7: 5-6.

**செங்கள விருப்பொடு கூல முற்றிய**
**உருவச் செந்தினை குருதியொடு தூஉய்**
**மண்ணுறு முரசங் கண்பெயர்த்து.**

*—இரண்டாம் பத்து ;* **9:5-7.**

*போர்க்களத்தே ஊது கொம்புகளும் வலம்புரிச் சங்கங்களும் முழங்கி வீரர்க்கு ஊக்கத்தினை நல்கும்:*

**கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க**
**வயங்குகதிர் வயிரமொடு வலம்புரி யார்ப்பப்**
**பல்களிற் றினநிரை புலம்பெயர்ந் தியல்வர**
**அமர்க்கண் அமைந்த அவிர்நிணப் பரப்பு.**

*—ஏழாம் பத்து ;* **7:5-8.**

*மேலும் முரசின் ஓசையும் தண்ணுமை முழங்கும் ஒலியும் போர்க்களத்தே கேட்கும்.*

**எடுத்தே றேய கடிப்புடை யதிரும்**
**போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்கு.**

*—ஒன்பதாம் பத்து:* **4:1-2.**

**போர்ப்புறு தண்ணுமை யார்ப்பெழுந்து நுவல.**

*—ஒன்பதாம் பத்து ;* **4:15.**

*பாசறையில் பல்வகை இசைக்கருவிகள் இனிதாக முழங்குவதோடு கலந்து, முரசும் முழங்கும்.*

**விரவுப்பணை முழங்கு நிரைதோல் வரைப்பின்**
**உரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை.**

*—ஒன்பதாம் பத்து ;* **8:16-17.**

*மன்னர்கள் அந்நாளில் மண்ணாசை காரணமாகப் போர் செய்யவில்லை. தன்னுடைய அரசநிலை(Sovereignty) மதிப்புக் காரணமாகவே போரிட்டனர். நிலையாமை உணர்வினை அவர்கள் போரிடுங் காலத்தும் மறப்பதில்லை.*

**நோய்த்தொழில் மலிந்த வேலீண் டழுவத்து**

..............................

**காஞ்சி சான்ற செருப்பல செய்து.**

*—ஒன்பதாம் பத்து :* **4:16-19.**

படையெடுக்கும் அரசர் தாம் மேற்கொள்ளும் போரில் வெற்றி கிடைக்குமா என்பதைக் கழங்கிட்டுப் பார்த்தல் மரபாகும்.

**எல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந.**

—4; 2:8.

மேலும் உன்னமரம் போர்க்குச் செல்லும் வீரர்க்கு வெற்றி கிடைப்பதாயின் தழைத்தும், தோல்வி வருவதாயின் கரிந்தும் காட்டும் என்பர். செல்வக்கடுங்கோ வாழியாதன் 'உன்னத்துப் பகைவன்' (7; 1:16) என்று கபிலரால் பாராட்டப்படுகிறான்.

வேந்தன் போரில் வெற்றி பெற்ற பிறகு தன் வெற்றிக்குக் காரணமாக இருந்த வீரர்க்கு நல்லுணவினை விருந்தாக நல்கி, இசை விருந்தும் அவர் இனிமையாக நுகர்தற் பொருட்டு ஏற்பாடு செய்வான்.

**ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்**
**பெருஞ்சமந் ததைந்த செருப்புகன் மறவர்**
**உருமுநில னதிர்க்குங் குரலொடு கொளைபுணர்ந்து**
**பெருஞ்சோ றுகுத்தற் கெறியும்.**

—மூன்றாம் பத்து ; 10:40-43.

போரில் தோற்ற படைவீரருட் சிலர் வெற்றி பெற்ற வேந்தன் படையில் சேருவதும் உண்டு என்பது,

**ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி**
**நீகண் டனையே மென்றனர்.**

—ஏழாம் பத்து ; 3: 13- 14.

போருக்குச் செல்லும்போது சேரவேந்தர் அயிரை மலைக் கொற்றவைத் தெய்வத்தினைப் பரவினர். அது போது சேரநாட்டு வீரர் தம் விழுப்புண்ணில் சொரியும் குருதி கலந்த சோற்றுத் திறளைப் படைத்து வெற்றி தரும் அணங்காம் அயிரைமலைக் கொற்றவையை வணங்கி வழிபட்டனர்.

**குருதி விதிர்த்த குவவுச்சோற்றுக் குன்றோடு**
**உருகெழு மரபின் அயிரை பரைஇ.**

—ஒன்பதாம் பத்து ; 8: 11- 12

*போரிலே தோற்றோடாத வீரமும், தோற்றோடும் பகைவர்மீது படைக்கலன்களை ஒச்சாத ஆண்மையுங் கொண்டு, சேரநாட்டு வீரர் துலங்கினர்.*

**பிறர்க்கடி யொதுங்காப் பூட்கை யொள்வாள்.**

—8; 10-8.

**புறங்கொடை யெறியார்நின் மறப்படை கொள்ளுநர்.**

—4; 8: 1: 33

*இத்தகு ஆற்றல் சான்ற சேரர்படை மறவர் பகைவரின் கரும்பு விளையும் கழனிகள், விடத்தேரை மரங்களுடன், கரிய உடையென்னும் மரங்கள் நெடிது வளர்ந்தோங்க, கவைத்த தலைமயிரினையுடைய பேய்மகள் கழுதினை யூர்ந்து திரிய, பரந்த நெருஞ்சி முள் மிகுந்த நீறுபட்ட போர்க்களத்தின் புழுதி படிந்து பொலிவிழந்து மக்களும் விலங்குகளும் செய்யும் ஆரவாரம் இல்லையாக வொழிந்தன.*

**பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்**
**நாடுகவின் அழிய நாமந் தோற்றிக்**
**கூற்றடூ நின்ற யாக்கை போல**
**நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்**
**விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்**
**திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்**
**கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்கத்**
**தாதெரு மறுத்த கலியழி மன்றத்**
**துள்ள மழிய வூக்குநர் மிடறபுத்**
**துள்ளுநர் பனிக்கும் பாழாயினவே.**

—இரண்டாம் பத்து ; 3: 9- 19.

*பகைவர் நாடு இவ்வண்ணம் பாழாகச் சேரர் ஓம்பிய செல்வவளம் மிக்க நாடோவெனில் மாற்றார் படையெடுப்*

பரே என்னும் அச்சம் சிறிதும் இன்றி அமைதியில் திளைத்து மகிழ்கிறது. நல்ல சேற்றில் எருதுகள் இழுக்கும் வண்டிச் சக்கரம் புதையுண்டு போக, அச் சேற்றினின்றும் சக்கரத்தைத் தூக்க முயலும் வண்டியோட்டிகள் எழுப்பும் ஆரவாரம் தவிர வேறு பூசல்கள் ஏதும் அறியாத நன்னாடாக—புதுவருவாய் உடைத்தான காமர் கவினில் துலங்கும் நாடாக — செந்தமிழ் புரந்த சேரமன்னர் காத்தோம்பிய நாடு துலங்கிற்று.

**அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப**
**நல்லெருது முயலு மளறுபோகு விழுமத்துச்**
**சாகாட் டாளர் கம்பலை யல்லது**
**பூச லறியா நன்னாட்**
**டியாண ரறாஅக் காமரு கவினே.**

—மூன்றாம் பத்து; 7: 12-16.

மிளகை உரலில் இட்டு உலக்கையால் இடிப்பது போன்று பகைவர் தலைகளை உரலில் இட்டு இடிக்கும் செய்தி பரணரால் கூறப்பட்டுள்ளது.

**... .................... தெவ்வர்**
**மிளகெறி யுலக்கையி னிருந்தலை யிடித்து.**

—ஐந்தாம் பத்து; 1: 20-21.

இச் செய்தி வெளியிடும் செயல் கொடுமை நிறைந்த தாக உளது.

இதுகாறும் கூறியவற்றால் சேரர்தம் சிறந்த வீரப் பண்பும், நாற்படை பற்றிய செய்திகளும், அக்காலப் போர் முறையும், பாசறைச் செய்தியும் இன்ன பிற புறத்துறைச் செய்திகளும் விளக்கமாக அறியப்பட்டன. கொடை மடத்தில் சேர வேந்தர்கள் சிறந்திருந்தமை போன்றே படைமடத்திலும் பல்லாற்றானும் சிறப்புற்றிருந்தனர் என்பது பதிற்றுப்பத்துப் பாடல்களால் தெள்ளிதிற் புலனாகின்றது.

## ஆட்சி அலுவல்கள்

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்று ஐம்பெருங்குழு, எண்பேராயம் பற்றிய குறிப்போ, செய்திகளோ பதிற்றுப்பத்தில் இல்லை. அமைச்சர் தானைத் தலைவர் பற்றிய சிறு குறிப்பு மட்டும் பதிற்றுப்பத்துப் பாடல்களில் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

## வேள்வி போற்றல்

சேரவேந்தர் வேள்விகளைப் போற்றி வேட்டனர். அரிய மறைப் பொருளை அறிஞர் உரைப்பச் செவ்விதின் கேட்டனர். அவர் உரைத்த விரதங்களை விடாது கடைப் பிடித்தனர். அறிவு ஒழுக்கங்களால் உயர்ந்த நன்மக்கள் மனம் மகிழும்படி வேள்விகளை ஆற்றி முடித்தனர்.

**கேள்வி கேட்டுப் படிவ மொடியாது**
**வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்ப.**

—எட்டாம் பத்து; 4: 1-2.

பெருஞ்சேரல் இரும்பொறை தன் புரோகிதனைத் துறவு மேற்கொள்ளும்படி செய்தான். கொடை, மன அமைதி, செல்வம், மகப்பேறு, தெய்வ உணர்வு முதலியன தவமுடையார்க்கு உண்டாகும் என்பதனை அறிவுறுத்தி அப்புரோகிதனை மன்னன் தவம் செய்யுமாறு வேண்டிக் காட்டிற்கு அனுப்பினான்.

**.......................... நின்வயின்**
**முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை**
**வண்மையு மாண்பும் வளனு மெச்சமும்**
**தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென**
**வேறுபடு நனந்தலை பெயரக்**
**கூறினை பெருமநின் படிமை யானே.**

—எட்டாம் பத்து; 4: 23-28.

பல்யானைச் செல்கெழு குட்டுவன் தன்னைப் பாடிய பாலைக் கௌதமனார் என்னும் அந்தணப் புலவரும் அவர்

மனைவியும் சுவர்க்கம் பெறும் பொருட்டுப் பெரும் பொருள் செலவிட்டுப் பத்துப் பெருவேள்விகளைத் தக்காரைக் கொண்டு வேட்பித்தான் என்று அவனைப் பற்றிய பதிகம் கூறுகின்றது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் வேதியர்க்குப் பசுக்களோடு குடநாட்டில் ஓர் ஊரும் வழங்கினான் என்று பதிக வழி அறிகின்றோம். இச்செய்திகளால் சேரநாட்டில் வேதநெறி தழைத்து ஓங்கிய உண்மையினை உணரலாம்.[11]

## சமயச் செய்திகள்

முனிவர்கள் பிற உயிர்களுக்குத் தீங்கு நினையாதவர்; வாய்மை தவறா நெறியினர். பிறர் தம்மை மதித் தொழுகும் ஆற்றலினர். அவர்கள் அரசர்களை வேள்வி யியற்றப் பணித்தனர். அம்முனிவர் 'கடவுளர்' எனக் கூறப்பட்டனர்.

> சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்று
> ஐந்துடன் போற்றி யவைதுணை யாக
> எவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
> காலை யன்ன சீர்சால் வாய்மொழி
> உருகெழு மரபிற் கடவுள் பேணியர்
> கொண்ட தீயின் சுடரெழு தோறும்
> விரும்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி.
>
> —மூன்றாம் பத்து; 1: 1-7

மேலும் உண்ணா நோன்பினை நோற்கும் விரதியர் கோவில் மணி அடித்ததும் விடியற் காலையில் குளிர்ந்த நீர்த்துறைக்குச் சென்று நீராடுவர். பின்னர்த் திருமாலின் திருவடிகளில் விழுந்து வணங்கி அப்பெருமானை வாழ்த்தி நிற்பர்.

> தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
> உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
> வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்

11. டாக்டர் மா. இராசமாணிக்கனார், தமிழ் மொழி- இலக்கிய வரலாறு, பக். 233.

**கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்**
**அலங்கற் செல்வன் சேவடி பரவு**
**நெஞ்சுமலி வுவகையர் துஞ்சுபதி பெயர.**

—நான்காம் பத்து; 1: 5-10.

இவ்வடிகளுக்கு உரையெழுதும் பதிற்றுப்பத்தின் பழைய வுரைகாரர் இங்குக் குறிப்பிடப்பட்ட திருமால் திருவனந்த புரத்துத் திருமால் என்று உரை எழுதியுள்ளார். சங்க கால முதலே திருவனந்தபுரத்துத் திருமால் புகழ் பெற்று வருபவர் என்பது இதனால் அறியப்படுகின்றது.

தாம் மேற்கொண்ட போரில் வெற்றி பெற அயிரை மலையில் அணிபெற வீற்றிருக்கும் அணங்காம் வெற்றி தரும் கொற்றவையைச் சேர மன்னர் பணிந்தேத்தினர். சேரர் படைவீரரும் தம் குருதி கலந்த சோற்றுத் திரளைப் படைத்து அயிரைமலைக் கொற்றவையை வழிபட்டனர்.

**குருதி விதிர்த்த குவவுச் சோற்றுக் குன்றோடு**
**உருகெழு மரபின் அயிரை பரைஇ.**

—ஒன்பதாம் பத்து; 9: 11-12.

மேற்கூறிய செய்திகள் எல்லாம் நாம் சமயச் செய்திகளாகப் பதிற்றுப்பத்து கொண்டு அறிவனவாகும்.

## பழைய செய்திகள்

முருகன் பிணிமுகம் என்னும் யானையின் மீது ஊர்ந்து சென்றமை,

**கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு**

— 2; 1:6.

தலையெழு வள்ளல்களில் ஒருவனும் பாரதத்தில் குறிக்கப்பட்டவனுமாகிய அக்குரன் என்பானின் ஈகைத் தன்மை,

**அக்குரன் அனைய கைவண் மையையே.**

— 2; 4:7.

ஆகிய இரண்டு செய்திகளே பதிற்றுப்பத்துள் இடம் பெற்றுள்ள பழைய கதைச் செய்திகளாகும்.

இவ்விரு இடங்களிலும் சேர அரசர் வீரத்திற்கும் கொடைக்குமாகப் பாராட்டப்பட்டுள்ளார்கள்.

**வாழ்த்து வகைகள்**

பதிற்றுப்பத்துப் பாடிய புலவர் பெருமக்கள் சேர மன்னரைப் பலவாறு வாழ்த்தினர்.

''நீ உன் முன்னோரைப் போலப் புகழை நிலைநிறுத்தி வாழ்வாயாக.''

**கடலக வரைப்பினிப் பொழில்முழு தாண்டநின்**
**முன்றிணை முதல்வர் போல நின்றுநீ**
**கெடாஅ நல்லிசை நிலைஇத்**
**தவாஅ லியரோவிவ் வுலகமோ டுடனே.**

—இரண்டாம் பத்து; 4: 19-22.

''உலகத்தார் நலனுக்காக நீ வாழ்வாயாக.''

**நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென.**

— 2; 5:24.

''உன்னைப் பெற்றெடுத்த தாயின் அழகிய வயிறு வாழ்வதாகுக.''

**வயிறுமா சிலீஇயரவ னீன்ற தாயே.**

— 2; 10:28.

''நீ நின் மனைவியோடு ஆயிரம் வெள்ளம் காலம் வாழ்க.''

**வேயுறழ் பணைத்தோ ளிவளோடு**
**ஆயிர வெள்ளம் வாழிய பலவே.**

—மூன்றாம் பத்து 3; 1:38.

''நின் வளம் வாழ்வதாகுக.''

**பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே.**

— 3; 4:30.

''நின் வலிமை கெடாது நிலைபெறுவதாகுக; நின் பெருவளம் நீடு வாழ்வதாகுக.''

**வீயா யாணர் நின்வயி னானே**
**தாவா தாகு மலிபெறு வயவே**
**.......................**
**செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே.**

—*நான்காம் பத்து;* 6:2 & 14.

''உலகில் வாழும் மக்களின் ஆக்கத்தின் பொருட்டு நின் வாழ்க்கையும் வளனும் வாழ்க.''

**வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை**
**வாய்மொழி வாயர் நின்புக ழேத்த.**

—*நான்காம் பத்து;* 7: 1-2.

''நின்னுடைய பெயர் வாழ்வதாகுக; நீ காஞ்சியம் பெருந்துறை மணலினும் பல வாழ்நாட்களைப் பெற்று வாழ்க.''

**பல்பொறி மார்பநின் பெயர்வா ழியரோ**
**.......................**
**காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே.**

—*ஐந்தாம் பத்து;* 8: 12 & 18.

''வாழ்க நின் கண்ணி; மிகச் சிறிது காலமேனும் துறக்க உலகுக்குச் செல்லாமல் இவ்வரச வாழ்க்கையிலேயே நிலை பெற்று நின்று நெடுங்காலம் வாழ்வாயாக.''

**உள்ளியது முடித்து வாழ்கநின் கண்ணி**
**.......................................**
**உயர்நிலை யுலகத்துச் செல்லா திவணின்று**
**இருநில மருங்கின் நெடிது மன்னியரோ.**

—*ஆறாம் பத்து;* 4: 2 & 10-11.

''நின் வாழ்நாள் சென்று கெடாது ஒழிவதாகுக.''

**வேண்டுவ வளவையுள் யாண்டுபல கழியப்**
**பெய்துபுறந் தந்து பொங்க லாடி**
**விண்டுச் சேர்ந்த வெண்மழை போலச்**
**சென்றா லியரோ பெரும.**

—*ஆறாம் பத்து;* 5: 13-16.

"வாழ்க நின் கண்ணி" எனப் பலவிடங்களில் அரசன் வாழ்த்தப்படுகிறான். (6: 2: 27; 6; 4: 2; 6; 6: 3; 6; 9: 13).

"ஆம்பல் என்னும் எண்ணும், பல ஆயிரங்களாகப் பெருகிய வெள்ளம் என்னும் எண்ணும் ஆகிய ஊழிகள் நீ வாழ்வாயாக."

அடையடுப் பறியா வருவி யாம்பல்
ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே.
—ஏழாம் பத்து; 3: 19-21.

"அயிரை என்னும் நெடிய மலையைப் போல நீ வாழும் நாள் குறையாது பெருவதாகுக."

அயிரை நெடுவரை போலத்
தொலையா தாகநீ வாழு நாளே.
—எட்டாம் பத்து; 10: 23-27.

கடவு ளயிரையி னிலைஇக்
கேடில வாக பெருமநின் புகழே.
—எட்டாம் பத்து; 9: 18-19.

"நினக்குத் தெய்வத்தால் வரையறுக்கப்பட்ட வாழ் நாள் முழுவதும் இனிது வாழ்வாயாக."

.......................... வாழ்க நின் னூழி.
—எட்டாம் பத்து; 1: 24.

"நீ ஞாயிறு போலப் பலநாள் விளங்குவாயாக."
ஞாயிறு போல விளங்குதி பன்னாள்.
—ஒன்பதாம் பத்து; 8:38.

"நீ, அருந்ததி போலும் கற்புடைய நின் மனைவியுடன் அழகுற விளங்கி நோயற்று வாழ்வாயாக"

வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையுங் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே.
—ஒன்பதாம் பத்து; 9: 17-20.

"உலக மக்கள் கூறும் திங்கள், யாண்டு, ஊழி, வெள்ளம் என்பவை முறையே நின் வாழ்நாளின் நாள்' திங்கள், யாண்டு, ஊழி என்பனவாக நீடுக."

நின்னாள், திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக யாண்டே
ஊழி யனைய வாக வூழி
வெள்ள வரம்பின வாக.

—ஒன்பதாம் பத்து; 10: 51-54.

இவை போன்று வேறு முடியுடையரசர்கள் எவரும் உள்ளங் குளிரப் புலவர்களால் சிறக்க வாழ்த்தப் பெற்றிலர் என்பதைப் பழந்தமிழ் இலக்கியத்தினைப் படிப்போர் உணர்வர். இதுகொண்டு சேர மன்னர்தம் ஆட்சிச் சிறப்பும், பண்பு மேம்பாடும், கொடை வண்மையும் நன்கு உணரப்படும்.

# 3. சேரர் கொடை வளம்

வேந்தர்க்கு வெற்றியை விளைவிப்பது வீரம்; புகழி னையும் மாறா மனமகிழ்ச்சியினையும் அளிப்பது ஈரம் என்னும் கொடைப்பண்பு ஆகும். தமிழ் மன்னர்பால் வீரமும் ஈரமும் குறைவறக் குடிகொண்டிருந்தன. வீரம் விளைவித்த மன்னர்களே ஈர நெஞ்சம்—இரவலர்பால் இளகிய நெஞ்சம் வாய்ந்த மன்னர்களாக விளங்கிக் கொடைப் பண்பைப் போற்றியிருக்கிறார்கள். தொல் காப்பியனார் 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' எனச் சேர சோழ பாண்டியர் ஆண்ட தமிழகத்தைக் குறிப் பிட்டுள்ளார்.

மேலும், திருவள்ளுவர் தம்

> **வழங்குவது உள்வீழ்ந்த கண்ணும் பழங்குடி**
> **பண்பின் தலைப்பிரிதல் இன்று.**
>
> —திருக். 955.

என்ற குறளுக்கு உரையெழுதப் புகுந்த பரிமேலழகர், "பழங்குடி என்பதற்குத் தொன்றுதொட்டு வருகின்ற குடி" என்று உரையெழுதி, "தொன்றுதொட்டு வருதலாவது, 'சேர சோழ பாண்டியர்' என்றாற் போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்" என்று விளக்க வுரையும் கண்டுள்ளார். தொல்காப்பியனார் கருத்தும், பரிமேலழகரின் திருக்குறள் உரை விளக்கமும் பண்டைத் தமிழ் அரசரின் ஈகைத் திறத்தினை எடுத்தியம்ப வல்லன வாகும்.

திருவள்ளுவர் 'ஈகை' என்றே ஓர் அதிகாரம் வகுத்துள் ளார். 'வறியார்க் கொன்றீவதே ஈகை' என்றும், 'மேலுலகம் இல்லெனினும், ஈதலே நன்று' என்றும் ஈதலின் சிறப்பினை நன்கு விதந்தோதியுள்ளார்.

மேலும், 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தில்,

> **அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்**
> **எஞ்சாமை வேந்தற் கியல்பு.**
>
> —திருக்; 382.

என்று குறிப்பிட்டுள்ளார். வேந்தர்க்கு வேண்டுவன திண்மையும் கொடையும் அறிவும் ஊக்கமும் ஆகிய நான்கு பண்புகளாகும் என்பது இதனால் தெரிய வருகின்றது. அஞ்சாமைக்கு அடுத்த நிலை ஈகைக்கு வழங்கப்பட்டிருப்பது நுண்ணிதின் அறியத்தக்கது. மேலும் இதே அதிகாரத்தின் இறுதிக் குறள் வருமாறு:

> **கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
> **உடையானாம் வேந்தர்க் கொளி.**
>
> — திருக்; 390.

இக்குறளில் வேந்தர்க்கு எல்லாம் விளக்காக வேண்டுமெனில் ஓர் அரசன் வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும், யாவர்க்கும் தலையளி செய்தலும், முறை செய்தலும், தளர்ந்த குடிகளைப் பேணலுமாகிய நான்கு செயல்களையும் உடையவனாக விளங்குதல் வேண்டும் என்பது வற்புறுத்தப்படுகிறது.

இவ்வாறு அரசர்க்கே உரியதெனச் சிறப்பாக நுவலப் படும் ஈகைப் பண்பினைப் பண்டைநாளைச் சேர மன்னர் சிறக்கப் பெற்றிருந்தனர் என்பதனைப் பதிற்றுப்பத்து எனும் சங்க நூல் கொண்டு நன்கு தெளியலாம்.

பதிற்றுப்பத்துப் பாடல்களின் கீழே காணப்பெறும் பதிகங்கள் வழி அந்நாளையச் சேர மன்னர்தம் கொடைப் பெருமையினை உணரலாம். ஆயினும் பதிகம், பாடல் களைப் பாடிய புலவர்களால் பாடப்பட்டது அன்று என்றும், பிற்காலப் புலவர் ஒருவர் எழுதிச் சேர்த்திருக்க வேண்டும் என்றும் அறிஞர் பலர் கருத்துக் கொள்கின்றனர். எனவே இக்கட்டுரையின்கண் பதிகவழியன்றிப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் வழிப் புலனாகும் சேர வேந்தரின் ஈகை வளத்தினைக் காண்போம்.

உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

— திருக்; 756.

என்ற குறட்கருத்துப்படி பகைவரைப் போரில் வென்று திறையாகக் கொள்ளும் பொருள் வேந்தனுக்கு உரிய பொருள், வருவாய் வகையில் ஒன்றென்பது புலப்படுகிறது. சேர மன்னர்களோ வீரத்தில் மிகவும் வல்லவர்கள். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்,

இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச்சென்று
கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின முன்பின் சேரன்.

—இரண்டாம் பத்து ; 10:2-4.

என்றும்,

செங்குட்டுவன்,

..................நீர்புக்குக்
கடலொடு உழந்த பனித்துறைப் பரதவ.

—5 ; 8:3-4.

என்றும்,

வடதிசை எல்லை இமயம் ஆகத்
தென்னங் குமரியொடு ஆயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமம் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ.

—ஐந்தாம் பத்து ; 3:7-11.

என்றும்,

குடக்கோ இளஞ்சேர லிரும்பொறையை,

வேந்தரும் வேளிரும் பின்வந்து பணியக்
கொற்றம் எய்திய பெரியோர் மருக.

என்றும் கூறப்படுவதிலிருந்து சேர மன்னர்களின் செரு மேம்பாட்டினையும், வீரவென்றிச் சிறப்பினையும் நன்கு விளங்கக் காணலாம்.

இரண்டாம் பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் சிறக்கப் பாடியுள்ளார். அவர் பாடல்கள்வழிச் சேரனின் வீரமும் ஈரமும் ஒருங்கே புலனாகின்றன.

பசியால் வருந்திய இரவலர் கூட்டம் காடும் மலையும் கடந்து, துன்பம் பலபட்டுச் சேரன் தலைவாயிலை அடைகிறது. அவர்களுக்குச் சேரன், அரிவாளால் அறுத்த வெள்ளிய நிணத்தோடு கூடிய ஆட்டிறச்சியை நல்ல வெண்ணெலால் ஆக்கிய சோற்றிலே கலந்த உணவினையும், நல்ல கள்ளின் தெளிவினையும் கொடுத்தான் என்று குறிப்பிடுகின்றார்.

**எஃகுபோழ்ந்து அறுத்த வால்நிணக் கொழுங்குறை**
**மையூன் பெய்த வெண்ணெல் வெஞ்சோறு**
**நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி.**

—இரண்டாம் பத்து ; 2:16-18.

பருந்தின் கரிய சிறகு போன்று கருமை கொண்டும் கிழிந்தும் இருந்த கந்தல் உடையை நீக்கிப் பட்டுடை (நூலாக்கலிங்கம்) வழங்கினான். மகளிர்க்கு உணவோடும் உடையோடும் நல்ல ஒளிவிடும் அணிகலன்களையும் அளித்தான் என்று மேலும் குறிப்பிடுகின்றார் குமட்டூர்க் கண்ணனார்.

**நீர்ப்படு பருந்தின் இருஞ்சிற கன்ன**
**நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை**
**நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ**
**வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்**
**வசையின் மகளிர் வயங்கிழை யணிய**
**அமர்புமெய் யார்த்த சுற்றமொடு**
**நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.**

—இரண்டாம் பத்து ; 2:19-25.

பிறிதொரு பாடலில் புலவர் குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை அக்காலத்தில் கொடையில் சிறந்திருந்த அக்குரனோடு உவமிக்கின்றார்.

**அக்குரன் அனைய கைவண் மையே.** —2; 4:7.

'படையேருழவன்' என்றும் 'பாடினிவேந்தே' என்றும் 'வயவர் வேந்தே' என்றும், 'பரிசிலர் வெறுக்கை' என்றும், 'பசும்பிணி மார்ப' என்றும் கூறிச் சேர வேந்தனின் வீரப் பண்பினையும் ஈரப்பண்பினையும் ஒருங்கே புலப்படுத்து கின்றார் புலவர்.

இம்மண்ணுலகில் வாழ்கின்ற உயிர்களுக்குத் தயங்காது வழங்குதலில் அவன் வல்லவனாய் உள்ளான் என அவன் கைவண்மையை மேலும் புகழ்கின்றார் புலவர்.

**மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க்கு எஞ்சாது**
**ஈத்துக் கைதண்டாக் கைகடுந் துப்பில்**
**புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி.**
—இரண்டாம் பத்து ; 5:35-37.

'வருநர்க்கு வரையாது பொலங்கலந் தெளிர்ப்ப' என்ற தொடரால் குமட்டூர்க் கண்ணனார் சேரனின் ஈர நெஞ் சத்தினை இன்புறக் கிளத்தி மகிழ்கின்றார். புலவர் புகழப் புகழைத் தன்பால் நிலைநிறுத்தி வாழ்கிறான் சேரன். கூத்தர்க்குக் குதிரையும், யானையும் தேரும் குறைவற வாரி வழங்குகின்றான் சேரன்.

**புலவர் ஏத்த ஓங்குபுகழ் நிறீஇ**
**விரியுளை மாவும் களிறும், தேரும்**
**வயிரியர் கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி.**
—இரண்டாம் பத்து ; 10:14-16.

இவ்வண்ணம் வாரி வழங்கும் வள்ளற்றன்மையைக் 'கொடைக்கடன் அமர்ந்த கோடா நெஞ்சு' என்று போற்றிப் புகழ்கின்றார் புலவர். 'வயிறு பசி கூர ஈயலன்' என்ற தொடரும் சேரனின் மாண்ட கொடைப் பெருமை யினையே குறிப்பிடுகின்றது. இவற்றிற்கெல்லாம் முடி மணியாக,

**மாரி பொய்க்குவ தாயினும்**
**சேரலாதன் பொய்யலன் நசையே.**
—இரண்டாம் பத்து ; 8:11-12.

என்ற அடிகள் மாரி — மழையோடு சேரலாதனின் கொடைப்பண்பினை ஒப்பிட்டு நோக்கி, மாரி பொய்ப் பினும் சேரலாதன் ஒரு நாளும் பொய்க்கமாட்டான் என்பதனை எடுத்துக்காட்டுகின்றன.

இவ்வாறு இரண்டாம் பத்து இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனின் ஈகைத் திறத்தினை இனிதுறக் கிளத்து கின்றது.

அடுத்து, பல்யானைச் செல்கெழு குட்டுவனின் ஈகைப் பண்பினைக் காண்போம். பாலைக் கௌதமனார் 'நன்கலந் தருஉம் மண்படு மார்ப' என்று மன்னனின் கொடைப் பண்பினைப் போற்றியுள்ளார். மேலும் அவர் 'போரடுதானைப் பொலந்தார்க் குட்டுவனே! மழை பெயலைப் பொழியாது மறந்தவழியும் நீ பெருவிருந்து அளிக்கவல்லை. அரிசியைக் குற்றிக் குற்றிப் பூண் தேய்ந்த உலக்கையினையும், அடைச்சேம்பு போன்ற சோறு சமைக்கும் மடாவினையும், கூர்மையான வாள் கொண்டு கொத்துதலால் ஊனும் குருதியும் படிந்து கோரமாய்ச் சிவந்து தோன்றும் மரக்கட்டையினையும் நின் அட்டிற் சாலையிற் காண்பார் மதி மருளும். உண்பாரும் தின்பாரும் எண்ணிக்கை மிகவும் உடையவராக உன் தலைவாயில் வந்தாலும் நீ புரந்தரும் விருந்துவளம் குன்றாத புதுமை கொண்டு பொலிவதாகும். இத்தகு விருந்து வளத்திற்குக் காரணமாக அமைந்திருக்கும் உன் செல்வவளம் என்றும் வாழ்வதாக' என்று குட்டுவனின் குன்றாத கொடை வளத்தைக் குறையாத சொற்களால் குறிப்பிடுகின்றார் பாலைக்கௌதமனார்.

**உண்மருந் தின்மரும் வரைகோள் அறியாது**
**குரைத்தொடி மழுகிய வுலக்கை வயின்றோ**
**றடைச்சேம் பெழுந்த வாடுறு மடாவின்**
**எஃகுறச் சிவந்த வூனத் தியாவரும்**
**.......................................**
**பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே.**

—மூன்றாம் பத்து; 4 : 18-22, 30.

மேலும் இப்புலவரே பிறிதொரு பாடலில் நாடுவறங் கூர்ந்து பைதல் அற்று வற்கடம் எய்திய வறுமை மிகுந்த காலையிலும் வற்றாத வண்மையுடையோனாய் ஓம்பா ஈகையினை உளமார மேற்கொள்ளுபவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்று போற்றுகின்றார். "இலை உதிர்ந்து வாடிப்போன உன்னமரத்தின் பொலிவற்ற சிறு சிறு கிளைகளிலே சிள்வீடென்னும் வண்டுகள் ஒலிக்கின்றன. நிலம் பசுமையற்று வளம் மாறிப்போன காலம். அந் நிலையில் இசைக்கருவிகளைச் சுருக்கிக் கட்டிய பையோடு ஊர்ப் பொதுவிடங்களை அடைந்து, கூத்தரும் பாணரு மாகிய பரிசிலர்கள் மறுகுகளின் சிறைக்கண்ணே நின்று பாடுவர். அவர்தம் கடும்பசி நீங்கக் களிப்புடன் உதவு வான் சேரன். பொன்னாலாகிய அணிகலன்கள் பலவற்றை அவர்களுக்கு வழங்கி அவர்களை மகிழ்விப்பான். அவற்றை மகிழ்வோடு புனைந்த கூட்டம் 'நெஞ்சுமலி உவகையோடு' ஆடிப்பாடும். அவ்வமயம் சேரவேந்தன் சிறிதே நறவுண்டு சிறுமகிழ்ச்சியோடு இருப்பினும் பெரும் விலைபோகும் அணிகலன்கள் பலவற்றை வயிரிய மாக்களுக்கு வாரி வழங்கி மகிழ்வான்.

**அலந்தலை யுன்னத் தங்கவடு பொருந்திச்**
**சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து**
**நிலம்பை தற்ற புலங்கெடு காலையும்**
**வாங்குபு தகைத்த கலப்பைய ராங்கண்**
**மன்றம் போந்து மறுகுசிறை பாடும்**
**வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்**
**பொன்செய் புனையிழை பொலியப் பெரிதுவந்து**
**நெஞ்சுமலி வுவகையர் உண்டுமகிழ்ந் தாடச்**
**சிறுமகி ழானும் பெருங்கலம் வீசும்**
**போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ.**

—மூன்றாம் பத்து; 3 : 1-10.

'வருநர் வரையார் வார வேண்டி விருந்துகண் மாறாது உண்இய பாசவர்' சேரநாட்டில் வாழ்ந்தனர் என்பது பதிற்றுப்பத்தால் நாம் அறியும் செய்தியாகும்.

அடுத்தபடியாக, களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் கொடைப் பண்புகளாகக் காப்பியாற்றுக் காப்பியனார் குறிப்பிடுவனவற்றைக் காண்போம்.

நான்காம் பத்தின் முதற்பாடலிலேயே சேரவேந்தனை வரையாத வள்ளன்மை மிகுந்த வண்டன் என்பானோடு ஒப்பிட்டுப் பேசுகின்றார் புலவர்.

**வெண்டிரை முந்நீர் வளைஇய வுலகத்து**
**வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து**
**வண்டன் அனையைமன் நீயே.**

—நான்காம் பத்து; 21-23.

காப்பியாற்றுக் காப்பியனார் நார்முடிச் சேரலைப் 'பரிசிலர் வெறுக்கை' என்றும் 'பாணர் நாளவை' என்றும் கூறி, அவன் தன் அளக்கலாகாக் கொடைப் பண்பினைக் காட்டுகின்றார். தனக்கு இனிமை நிறைந்த பொருள்கள் கிடைத்தாலும் அதனைத் தானே தனித்து, நுகராது, பிறருக்குப் பகுத்துத் தந்து பாண்கடன் ஆற்றுகின்றான் நார்முடிச்சேரல் என்பதனை நயம்பட மொழிகின்றார் புலவர்.

**இனியவை பெறினே தனித்தனி நுகர்கேம்**
**தருகென விழையாத் தாவில்நெஞ் சத்துப்**
**பகுத்தூண் தொகுத்த வாண்மைப்**
**பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.**

—நான்காம் பத்து; 8 : 13-16.

இதனால் 'செல்வத்துப் பயனே ஈதல்' என்பதனையும், 'இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் இனிதெனத் தனித் துண்ணாமையே சால்பு' என்பதனையும் நன்கு அறிந் திருந்தவன் நார்முடிச் சேரல் என்பதனையும், தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெருந்தகையோன் அவன் என்பதனையும் இனிதின் அறியலாம்.

விறலி நார்முடிச் சேரலை நண்ணினால் பகைவர் நாட்டிலிருந்து கைப்பற்றிய 'தொழில்புகல் யானை' பல

மற்றை நல்குவன் என்பதனையும் காப்பியாற்றுக் காப்பியனார் கவினுறக் கிளத்தியுள்ளார்.

> செல்லா யோதில் சில்வளை விறலி
> ......................
> காடுதலைக் கொண்ட நாடுகாண் அவிர்சுடர்
> அழல்விடுபு மரீஇய மைந்திற்
> றொழில்புகல் யானை நல்குவன் பலவே.
>
> —நான்காம் பத்து; 10:21-31.

ஐந்தாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய சேரன் செங்குட்டுவனைப் பரணர் அவன் கொடைப் பண்பெல்லாம் அழகுற விளங்கும் வண்ணம் வருணித்துள்ளார். 'ஓம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து கோடியர் பெருங்கிளை வாழ' அருள் சுரக்கும் நெஞ்சினன் செங்குட்டுவன் என்பதனைப் பரணர் பாடியுள்ளார். மேலும், அருவி வற்றிப் பெருவளம் சுருங்கிய காலையில் வானம் வளமான மழையைச் சொரிந்தது போலத் தன்னை அடைந்தவர்களுக்கு வாரி வழங்கி, நகைவர் ஆர நன்கலஞ் சிதறும் பண்பினன் செங்குட்டுவன் என்பதனையும் குறிப்பிட்டுள்ளார். விறலியர் பெண் யானைகளையும், கொண்டி மள்ளர் கொல் களிறுகளையும், அகவலர்கள் குதிரைகளையும், வயிரியர் கள்ளினையும் பெறுகின்றனர் எனச் சேரன் செங்குட்டுவனின் கொடைவன்மை சிறப்பித்துப் பேசப் பட்டுள்ளது.

> உறுவர் ஆர ஓம்பாது உண்டு
> நகைவர் ஆர நன்கலஞ் சிதறி
> ......................
> பாடு விறலியர் பல்பிடி பெறுக
> ......................
> கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
> ......................
> அகவலன் பெறுக மாவே

.......................

**நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்**
**உண்டெனத் தவாஅக் கள்ளின்**
**வண்கை வேந்தேநின் கலிமகி ழானே.**

—ஐந்தாம் பத்து; **3:19-36.**

இப்பாட்டின் இறுதி அடியில் சேரன் செங்குட்டுவன் கையினைப் பரணர் 'வண்கை' எனப் புகழ்ந்திருப்பதனைக் காண்க. மேலும் அவன் போர்க்களத்தில் முயற்சியால் பெற்ற பெரிய பொருள்களையும் அருமையுடைத்தென்று எண்ணாமல் தன்னைப்பாடி வந்த புலவர்க்கு வாரி வழங்கி விடுகின்றான் என்று பரணர் புகன்றுள்ளார்.

**பெரிய வாயினும் அமர்கடந்து பெற்ற**
**அரிய வென்னாது ஓம்பாது வீசி**
**கலஞ்செலச் சுரத்தல் அல்லது கனவினும்**
**களைகென வறியாக் கசடில் நெஞ்சம்.**

—ஐந்தாம் பத்து; **4:3-6.**

கரவாது கொடுத்துண்ணும் சேரனின் கொடை நெஞ்சத்தினைப் பரணர் 'கசடில் நெஞ்சம்' என்று பொருத்தமுறக் குறிப்பிட்டுள்ளார். சேரனைப் பாடிய இழையரும் குழையரும் நறுந்தண் மாலையரும், மகளிரும் போரில் வெல்லும் குட்டுவனைக் கண்டால் பெயர்ந்து பிறிதோரிடம் செல்லமாட்டார்கள் என்று புலவர் புகழ்ந்துரைத்துள்ளார்.

**வெல்புகழ் குட்டுவன் கண்டோர்**
**செல்குவம் என்னார் பாடுபு பெயர்ந்தே.**

— ஐந்தாம் பத்து; **6:13-14.**

தான் மேற்கொள்ளும் ஒவ்வொரு போரிலும் செங்குட்டுவன் வெல்கிறான். உடனே பரிசிலர் களிற்றினைப் பரிசிலாகப் பெறுகிறார்கள். நன்னுதல் விறலியர் அவன் வெற்றிச் சிறப்பிற்காக அவன் தொன்னகரில் ஆடிப்பாடி மகிழ்கின்றனர்.

**அட்டா னானே குட்டுவன் அடுதொறும்**
**பெற்றா னாரே பரிசிலர் களிறே**
**... ... ... ... ... ... ... ... ... ... ...**
**பாண்டில் விளக்குப் பரூஉச்சுடர் அழல**
**நன்னுதல் விறலியர் ஆடும்**
**தொன்னகர் வரைப்பின் அவன் உரையா னாவே.**

—ஐந்தாம் பத்து; 7: 1-8.

பாணர்களுக்குப் பொற்றாமரைப் பூவினையும், ஒளி பொருந்திய நெற்றியினையுடைய விறலியர்க்கு ஆரத்தினையும் அளிக்கின்றான் செங்குட்டுவன்.

**பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி**
**ஒண்ணுதல் விறலிலர்க்கு ஆரம் பூட்டி.**

—ஐந்தாம் பத்து ; 8: 1-2.

பகைவர் நாட்டிலே திறையாகப் பெற்ற பொருள் களையெல்லாம் எளிதில் பாணர் பாடும் பாடல்களுக்குப் பரிசாக அளித்துவிடுகின்றான் செங்குட்டுவன் என்று பரணர் வியந்து பாடுகின்றார்.

**ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்**
**கொள்ளாப் பாடற்கு எளிதின்நீ ஈயும்**

—ஐந்தாம் பத்து ; 8: 5-6.

கூட்டம் கூட்டமாக விறலியர்குழாம் செங்குட்டுவன் தன் அரண்மனை சென்று, சுற்றத்துடன் விருந்துண்கிறார்கள்.

**யாமுஞ் சேறுக நீயிரும் வம்மின்**
**துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்**
**கொளைவல் வாழ்க்கைநுங் கிளையினிது உணீஇயர்**

—ஐந்தாம் பத்து; 9: 1-3.

மேலும் செங்குட்டுவன் தனக்கு என ஒருவகைச் சோறும் பரிசிலர்க்கு என ஒருவகைச் சோறும் சமைக்குமாறு தன் ஏவலரைப் பணிக்கின்ற வழக்கம் இல்லையென் பதனைப் பரணர்,

சோறுவேறு என்னா ஊன்றுவை அடிசில்.
—5; 5: 5-13.

என்று நயம்படக் கிளத்திக் கூறியுள்ளார்.

இனி, ஆறாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதனிடத்துக் காக்கைபாடினியார் கண்ட கொடை வள மாண்பினைக் காண்போம்.

போர்க்களத்தில் அஞ்சாது எதிர்நின்று பகைவரைக் கொன்று வெற்றி கொண்ட இடியன்ன வன்மை பெற்ற கைகள், இரப்போர் புன்கண் தீர ஈதற்பொருட்டு மட்டுமே கவியக் கற்றிருந்தன. எத்துணை அரும்பொருளாயினும் அதனை எவரிடத்திலுமிருந்தும் ஏற்பதற்கு அவர் கைகள் கூசி நின்றன. இதனை,

நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
இரப்போர்க்குக் கவிதல் அல்லதை இரைஇய
மலர்பறி யா.
—ஆறாம் பத்து; 2 : 11-13:.

என்னும் அடிகள் விளக்கா நிற்கின்றன.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இரப்பவர்தம் வறுமை நோய்க்குப் பகைவனாக விளங்கினான் அவர்தம் வறுமையைப் போக்கும் பொருட்டு, நாடோறும் நல்ல பல அணிகலன்களை அரியனவென்று பொருட்படுத்தாது வாரி வழங்கினான். இத்தகு வள்ளன்மை உள்ளம் வாய்த்த காரணத்தினால் புலவர்கள் அவனுக்குப் பாராட்டு மொழிகள் பல பகன்றார்கள். இவ்வாறு இசை மேம்பட்டமையால் திசைபோய அவன்தன் வண்மையைக் கேள்வியுற்றே, தாம் அவனைக் காணவந்ததாகக் கவினுறக் கவிதையில் வடித்துக் காட்டுகின்றார் காக்கை பாடினியார் நச்செள்ளையார்.

வள்ளியை என்றநின் காண்குவந் திசினே
..........................................
இரவலர் புன்கண் தீர நாடொறும்

**உரைசால் நன்கலம் வரைவில வீசி**
**அனையை ஆகல் மாறே.**

—ஆறாம் பத்து; 4 : 1-9.

இவ்வாறு கொடைமடம் கொண்ட கோமகனின் நாட்டில் வறுமையும் தங்குமோ! வறுமை வற்றி வளம் நிறைந்தது அவன் திருநாட்டிலே. 'இல்லை' என இரப்போர் இல்லையாயினர்; ஆயினும் இரவலர் வாரா வைகலை அவன் சிறிதும் விரும்பவில்லை. எனவே பிற நாடுகளிலிருந்து இரவலர்களைத் தேரில் கொணர்ந்து, அவர்களுக்கு வேண்டுவனவற்றை விரும்பிக்கொடுத்து அவர்களை மாறா மகிழ்ச்சியில் திளைக்கச் செய்தான் மன்னவர் பெருந்தகை.

**வாரார் ஆயினும் இரவலர் வேண்டித்**
**தேரில் தந்தவர்க்கு ஆர்பதன் நல்கும்**
**நகைசால் வாய்மொழி இசைசால தோன்றல்.**

—ஆறாம் பத்து; 5 : 10-12.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனிடத்துக் கண்ட கொடை மடத்தின் சிறப்பு இம்மட்டும் அன்று, இதற்கு மேலும் புலனாகின்றது பிறிதொரு பாட்டிலே. 'இளங் குழந்தைகளைப் பெற்றெடுத்த சிலம்பணிந்த மகளிர்—ஆன்ற அறிவும், அடங்கிய கொள்கையும், திருந்திய நல்லிசையும் கொண்ட மகளிர்—ஊடற் கோலத்தோடு ஊடிய காலையில் துளிர்த்த கண்ணீருக்கு அவன் பெரிதும் அஞ்சினான். ஆயினும் அதனைக் காட்டிலும் இரவலர் புன்கண்ணீர்க்குப் பெரிதும் கவன்றான்' என்று விறலியாற்றுப் படையில் வைத்து விளங்கப் பாடுகின்றார் புலவர்.

**இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த**
**வளங்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை**
**ஆன்ற அறிவில் தோன்றிய நல்லிசை**
**ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்**
**இரவலர் புன்கண் அஞ்சும்**
**புரவெதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே.**

— ஆறாம் பத்து; 7 : 10-15.

மேலும் அவன் நாட்டில் சிறுகுடி மக்களாக வாழ்ந்த இரவலர்களின் வாழ்வு பொருள்வளம் கண்டு சிறக்க வழிபல வகுத்துக் கொடை போற்றினான் என்பதனை,

**இரவன் மாக்கள் சிறுகுடி பெருக**
**உலகந் தாங்கிய மேம்படு கற்பின்**
**.........................**
**பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய**
**மலையவும் கடலவும் பண்ணியம் பகுக்கும்.**

—*ஆறாம் பத்து*; 9 : 7-8; 14-15.

காதல் வாழ்வினும் ஈதல் வாழ்விற்கு ஒருபடி சிறப்பினை வழங்கிய காவலன் ஈண்டுச் சிறுகுடி மக்கள் பெருங்குடி மக்களாக வளம் பல கண்ட வகை கூறப்படுகின்றது.

கொலைவினை கொண்ட சேனையும் இகல்வினை கொண்ட மன்னனும் பாணர்குடி வாழத் தண்டாது தரும் தகுதி பெற்றுள்ளனர்.

**கொலைவினை மேவற்றுத் தானை தானே**
**இகல்வினை மேவலன் தண்டாது வீசும்**
**செல்லா மோதில் பாண்மகள் காணியர்.**

—*ஆறாம் பத்து*; 10:1-3.

சங்க இலக்கியப் பாடல்களில் மிகுந்த அளவு பாடல்கள் பாடிய பெரும்புலவர் கபிலராவர். அவர் பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனைச் சிறக்கப் பாடியுள்ளார். புலர்ந்த சாந்தும் புலரா ஈகையும் மலர்ந்த மார்பும் உடையவன் மாவண் பாரி என்றும், அவன் முழவு மண்புலர, இரவலர் இணைந்து வருந்த வாராத சேட்புலம் படர்ந்தனன் என்றும் உருக்கத்தோடு கூறி, 'அளிக்கென இரக்கும் உள்ளத்தோடு யான் வரவில்லை; உன் புகழை எஞ்சியும் யான் கூறமாட்டேன்' என்ற குறிப்போடு சேர வேந்தனின் செம்பொருட்கொடை நெறியினைச் செவ்வி தின் கிளத்துகின்றார் 'பொய்யா நாவிற் கபிலர்.'

போரிலே அரிதாகப் பெற்ற பொருள்களைத் தன்னைத் தேடிவரும் இரவலர்க்கு வாரி வழங்குகின்றான் வண்மை நெஞ்சம் சார்ந்த வாழியாதன். அதுபோது "இவற்றை நாம் வைத்துக்கொள்ளாமல் கொடுத்துவிட்டோமே" என நினைத்து வருந்தவில்லை. கொடுக்குந் தோறும் மகிழவும் மாட்டான். கொடுக்கும் பொழுதெல்லாம் கிள்ளிக் கொடுக்காமல் அள்ளிக் கொடுப்பான்" என்று அழகுறக் கபிலர் பாடுகின்றார்.

**புலர்ந்த சாந்திற் புலரா ஈகை**
**மலர்ந்த மார்பின் மாவண் பாரி**
**முழவுமண் புலர இரவலர் இனைய**
**வாராச் சேட்புலம் படர்ந்தோன்! அளிக்கென**
**இரக்கு வாரேன்! எஞ்சிக் கூறேன்**
**ஈத்தது இரங்கான், ஈத்தொறும் மகிழான்**
**ஈத்தொறும் மாவள் ளியன்.**

—ஏழாம் பத்து ; 1:7-14.

வறியரைக் கண்டால் வல்லே விரைந்து பொருள் வழங்குவான் என்றும், மழையினும் பெரும்பயன் பொழி வான் என்றும், 'பாணர் புரவலன்' என்றும், 'பரிசிலர் வெறுக்கை' என்றும் 'சேறுசெய் மாரியின் அளிக்கும்' சாறுபடு திருவினன் என்றும் பலவாறு செல்வக் கடுங்கோ வாழியாதன் புலவரால் புகழப்பட்டுள்ளான்.

இரவலர்க்குத் திறையாக வந்த களிற்றினையும், அம்பண அளவை நெல்லினையும் ஆர்பதமாக நல்குவன் என்றும் கபிலர் வாழியாதனின் வரையாத ஈகையுள்ளத் தினை உளமாரப் பாராட்டுகின்றார்.

**தொன்றுதிறை தந்த களிற்றொடு நெல்லின்**
**அம்பண வளவை விரிந்துறை போகிய**
**ஆர்பதம் நல்கும் என்ப.**

—ஏழாம் பத்து ; 6:7-9.

"கல்லுயர் நேரிமலைக்குரிய பொருநனும் சான்றோர் பெருமகனுமான செல்வக்கடுங்கோவாழியாதனைப்

பாடிச் சென்றால், கடனறிமரபிற் கைவல் பாணனாகிய நீ கொடுமணம் என்னும் ஊரிற் செய்யப்படும் வேலைப்பாடு மிகுந்த பொற்கலங்களையும், பந்தர் என்னும் ஊரிற் கிடைக்கும் நல்ல முத்துகளையும் நின் சுற்றத்தாருடன் பெறுவாய்'' என்று பாணாற்றுப்படை யமைந்த பாடலில் கபிலர் செல்வக் கடுங்கோவின் மடங்காத கொடை நெஞ்சத்தினைக் கவினுறப் பாடியுள்ளார்.

**கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு**
**பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்**
**கடனறி மரபிற் கைவல் பாண!**
**தென்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை!**
**.................. ..................**
**பறைபண் ணழியும் பாடுசால் நெடுவரைக்**
**கல்லுயர் நேரிப் பொருநன்**
**செல்வக் கோமாற் பாடினை செலினே.**

—ஏழாம் பத்து ; 7:1-4&21-23.

இவ்வாறு செல்வக் கடுங்கோ வாழியாதன் அரசாட்சி நிழலில் மக்கள் 'நாமம் அறியா ஏம வாழ்க்கை' வாழ்வதாகக் கபிலர் கூறும் திறனை நினையுந்தொறும் நெஞ்சு உவக்கின்றது.

கபிலர்க்குச் செல்வக் கடுங்கோ வாழியாதன், சிறுபுறம் என நூறாயிரம் காணம் கொடுத்தான் என்றும், நன்றா என்னும் குன்றேறித் தன் கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிப் பரிசாகக் கொடுத்துப் போற்றிப் புகழ்ந்தான் என்றும் ஏழாம் பத்தின் பதிகம் பகருகின்றது. பெருங்குன்றூர் கிழார் பாடிய ஒன்பதாம் பத்தில்,

**அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய**
**மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்**
**உவலை கூராக் கவலையில் நெஞ்சின்**
**நனவிற் பாடிய நல்லிசைக்**
**கபிலன் பெற்ற ஊரினும் பலவே.**

—ஒன்பதாம் பத்து ; 5:9-13.

எனவரும் பகுதி கொண்டு, கபிலர் ஊர்கள் பலவற்றைப் பரிசிலாகப் பெற்றார் என அறியலாம்.

அடுத்து, எட்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் பெருஞ்சேரலிரும்பொறையின் கொடைப் பண்புகளை அரிசில்கிழார் வழிநின்று காண்போம். பெருஞ்சேரல் இரும்பொறையின் வளமும், ஆண்மையும் கொடைச் சிறப்பும், சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையினை யுடையன.

**வளனும் ஆண்மையும் கைவண் மையும்**
**மாந்தர் அளவிறந் தன.**

—எட்டாம் பத்து : 3:12-13.

மேலும் நாளவை யன்றியும், பகைவர் நடுவின்கண் அமைந்த பாசறையின் கண்ணும் ஆடிப்பாடி வரும் இரவலர்க்கு, களிறும் குதிரையும் கணக்கின்றிக் கொடுக்கும் கொடைப் பண்புடைய கோடா நெஞ்சினன் பெருஞ்சேரல் இரும்பொறை என்று அரிசில்கிழார் அழகுறப் பாராட்டி யுள்ளார்.

**இரந்தோர் வாழ நல்கி இரப்போர்க்கு**
**ஈதல் தண்டா மாசிதறு இருக்கை**
**கண்டனென் செல்கு வந்தனென்.**

—எட்டாம் பத்து ; 6:7-9.

வரையாது வாரி வழங்கும் இவன் கைவண்மையினை,

**கொடை போற்றலையே இரவலர் நடுவண்.**

— 8; 9:2.

என்று கூறியிருப்பதும், பதிகம் அரும்பெறல் மரபின் அரசக் கட்டிலையே அரிசில்கிழார்க்கு உவந்தளித்த நெஞ்சினன் இவன் என்று கூறுவதனையும் உன்னி நோக்கின் பெருஞ்சேரலிரும்பொறையின் கொடைப் பெருமிதம் குன்றிலிட்ட விளக்கென ஒளிரா நிற்கும்.

இறுதியாக, ஒன்பதாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையின்

ஈர நெஞ்சத்தினைக் காண்போம். பெருங்குன்றூர் கிழார் பாடிய இப்பத்தால் மன்னனின் மாண்புயர்ந்த கொடைப் பண்பு வெளிப்படுகின்றது.

'பாடுநர், கொளக் கொளக் குறையாச் செல்வம்' உடையவன் சேரன் என்பதனை முதற்கண் தெரியப்படுத்து கின்றார் புலவர். இல்லோர் துன்பம் தொலைய ஈர நெஞ்சோடு நல்கும் நயனுடையன் நனந்தலை யுலகத்தில் நல்லிசையை நிலைநிறுத்திய இச்சேரன் என்பதனை விளங்க உரைக்கின்றார் பொல்லாங்கு அறியாது வடியா நாவின் வல்லாங்கு பாடும் பெருங்குன்றூர் கிழார்.

**நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து**
**இல்லோர் புன்கண் தீர நல்கும்**
**நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்**
**பாடுநர் புரவலன் ஆடுநடை அண்ணல்.**

—ஒன்பதாம் பத்து; 6 : 5-8.

'நீரினும் தீந்தண் சாயல'னாகிய இளஞ்சேரல் இரும்பொறை பாடினிக்கு நன்கலம் நல்கும் நயனுடைய நெஞ்சினன். ஆற்றினைக் கடக்க உதவும் வேழக் கரும்பினும் வல்லவன்.

**சென்மோ பாடினி நன்கலம் பெறுகுவை**
**சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து**
**தெண்கடன் முன்னிய வெண்டலைச் செம்புனல்**
**ஒய்யு நீர்வழிக் கரும்பினும்**
**பல்வேற் பொறையன் வல்லனால் அளியே.**

—ஒன்பதாம் பத்து; 7 : 1-5.

வேழக்கரும்பு ஒருவன் ஆற்றினைக் கடக்கும்வரைதான் பயன்படும்; ஆயினும் சேர மன்னன் புலவர்க்கும் மற்றவர்க்கும் எப்பொழுதும் உதவும் இளகிய ஈகை நெஞ் சினனாக உள்ளான் என்பதனை இப்பகுதியால் புலவர் எடுத்துக்காட்டும் நயம் அறிந்து மகிழத்தக்கதாகும்.

'வருநர் வரையாச் செழும்பல் தாரம், கொளக்கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப' என்றும், 'ஈரம் உடைமையின் நீரோர் அனையை' என்றும், 'கொளக்குறை படாமையின் முந்நீர் அனையை' என்றும் குடக்கோ இளஞ் சேரல் இரும்பொறையின் ஈகைப்பண்பினை இனிமையுறப் புலப்படுத்தியுள்ளார் பெருங்குன்றூர் கிழார் என்னும் புலமைச் சான்றோர்.

இவ்வாறு பதிற்றுப்பத்து என்னும் சங்கத் தமிழ் நூலில் சேர வேந்தர் எண்மரின் இனிய ஈகை வளம் இனிமையுற இயம்பப்பட்டுள்ளது. பாடல்களை இயற்றிய புலவர் பெரு மக்கள் பெற்ற பரிசில்களைப் பதிகவழி அறியும்பொழுது சேர வேந்தரின் கொடை வளத்தினைக் கண்டு வியக்கத் தோன்றுகின்றது. வீரத்தின் விளைநிலமான அவர் தம் நெஞ்சமே, ஈரத்தின் பிறப்பிடமாகவும் துலங்கிய செம்மை அறிந்து போற்றத்தக்கது.

# 4. பதிற்றுப்பத்து காட்டும் சமுதாய வாழ்க்கை

சேர நாடு இயற்கை வளம் நிறைந்த நாடு; நீர் வளமும் நில வளமும் ஒருங்கியைந்த நாடு. குன்றாத விளையுளைச் செய்வோரும் அறவோரும் கேடில்லாத செல்வமுடையோரும் ஒருங்கியைந்து வாழ்வதே நாடு[1] என்றும், அளவிறந்த பொருளுடைமையால் பிற நாட்டவராலும் விரும்பத்தக்கதாய், கேடின்மையோடு கூடி மிக விளைவதே நாடு[2] என்றும், பிற நாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி, அதன் மேல் தன்னரசனுக்கு இறைப் பொருள் முழுவதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடு[3] என்றும், மிக்க பசியும் நீங்காத நோயும் புறப்பகையும் இன்றி இனிது நடப்பதே நாடு[4] என்றும், பகைவரால் கெடுதல் அறியாததாய், ஒருகால் அரிதிற் கெட்டதாயினும் அப்பொழுதும் தன் வளம் குன்றாததே தலைசிறந்த நாடு[5] என்றும், தங்கண் வாழ்வார்

---

1. தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. — திருக்குறள்; நாடு: 1

2. பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு. — திருக்குறள்; நாடு : 2

3. பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.
— திருக்குறள்; நாடு : 3

4. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு. — திருக்குறள்; நாடு : 4

5. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை.
— திருக்குறள்; நாடு : 5

தேடி வருந்தாமல் அவர்பால் தானே அடையும் செல்வத்தை உடையவற்றையே நூல் வல்லார் நாடு என்பர்[6] என்றும், நாட்டிற்கு அழகு என்று நூலோர் சொல்வன நோயின்மையும், செல்வம், விளைவு, இன்பம், காவல் முதலியன உடைமையும் ஆகும்[7] என்றும் திருவள்ளுவர் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கும் நாட்டிற்குரிய நல்ல இலக்கணங்களுக்கெல்லாம் சேர நாடு சான்றாகத் துலங்கியதனைப் பதிற்றுப்பத்துப் பயில்வார் நுண்ணிதின் உணர்வர்.

**இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற் குறுப்பு.**[8]

என்ற குறட்பாவின்கண் குறிப்பிடப்பட்டுள்ள நாட்டிற்கு உறுப்பாவன சேர நாட்டில் திகழ்ந்திலங்கின.

மக்கள் வாழ்வு வளம்பட அமைய சேரநாடு எவ்வாறு வளங்கள் பல நிறைந்து விளங்கியது என்பதனை முற்படக் காண்போம். சேர நாட்டில் நெய்தல், குறிஞ்சி, முல்லை, மருதம் ஆகிய நான்கு நிலப் பொருள்களும் ஒருங்கே விளைந்து, வளம் மலிந்து காணப்பட்டது என்பதனைக் குமட்டூர்க் கண்ணனார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

**கடலவும் கல்லவும் யாற்றவும் பிறவும்**
**வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு**
**விழவுஅறு பறியா முழவுமிழ் மூதூர்.**[9]

இதனால் சேரநாடு கடல்படு பொருள்களையும், மலைபடு பொருள்களையும், ஆறுபடு பொருள்களையும் அழகுறப் பெற்று மிளிர்ந்ததோடு, பிற நாட்டுப் பொருள்களும் அந்

---

6. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரும் நாடு. — திருக்குறள்; நாடு : 6
7. பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.
— திருக்குறள்; நாடு : 8
8. திருக்குறள்; நாடு : 7.
9. பதிற்றுப்பத்து; 2 ; 5 : 16-18.

நாட்டில் வந்து அங்காடியில் குவிந்து கிடந்தன என்பது பெறப்படுகின்றது. 'பிறவும்' என்ற சொல்லால் பெறப் படும் குறிப்புப் பெரிதும் சேர நாட்டு வளத்தைச் சிறப்பிப்ப தாகும். மேலும் அந்நாட்டு மக்கள் இடையறாத விழாக் களைக் கொண்டாடி மகிழ்கின்றனர். மூதூர்களில் முழவு இசை முழங்குகின்றது. பொன்னை மிகவுடைய கடை வீதிகள் பொலிந்து விளங்குகின்றன. வெற்றி முரசும் கொடை முரசும் மாறாது முழங்குகின்றன. பகை முதலிய வற்றால் துன்புறுதலில்லாத நலம் பல நிறைந்த நல் வாழ்க்கையினையுடையவராய் மக்கள் உள்ளனர். உண்மையே உரைத்துப் புலனைந்தும் அடங்கி ஒழுக்க மேம் பாடுடைய நிரயத்தின் நீங்கிய அறநாட்டமும் வேட்கையு முடைய பெரியோர் நல்லறங்களையே நாளும் நாடிச் செய் கின்றனர். அவரும் அவர்தம் சுற்றமும் வாழும் ஊர்கள், பகை பசி பிணி முதலியன இன்மையின் குற்றங் கொள்ளா தனவாய் உள்ளன. அவ்வூர்களில் வாழும் மக்கள் பிழைப்பு நோக்கிப் பிற பதி பெயராத தன்மையராய் உள்ளனர். வாழ்க்கையில் நுகர வேண்டுவனவற்றை விடாது நுகர் கின்றனர். ;நோய் சிறிதுமின்றியும், புதுவருவாயினை யுடைத்தாயும் நாடு நாடாக உளது. உண்ணத் தகுவன வற்றை நிரம்பவுண்டதனால் நாத்தடித்து, குழறும் மழலை நாவினால் மெல்லிய சொற்களை வழங்கும் யாழ் முதலிய இசைக் கருவிகளை இனிதாக இயக்கும் இயவர் 'இவ் வுலகத்தோர் பொருட்டு நீ வாழிய' என்று நாட்டின் நல்லிறைவனாம் சேர மன்னனை வாழ்த்துகின்றனர். இவையெல்லாம் நிகழக் காரணம் சேர மன்னன் பலரும் புகழ்ந்து பாராட்டும் பண்பினனாய், நாட்டு மக்களை நலமுறக் காத்தோம்பும் பண்பில் மேம்பட்டு விளங்குதலால் ஆகும் எனப் புலவர் குமட்டூர்க் கண்ணனார் பாங்குற மொழிந்துள்ளார்:

**கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமத்துச்**
**சீர்பெறு கலிமகி ழியம்பு முரசின்**

..................................

**போர்வல் யானைச் சேர லாத**
**நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென**
**உண்டுரை மாறிய மழலை நாவின்**
**மென்சொற் கலப்பையர் திருந்துதொடை வாழ்த்த**
**வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்**
**செய்த மேவ லமர்ந்த சுற்றமொடு**
**ஒன்றுமொழிந் தடங்கிய கொள்கையென்றும்**
**பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி**
**நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர்**
**மேயின ருறையும் பலர்புகழ் பண்பின்**
**நீபுறந் தருதலின் நோயிகந் தொரீஇய**
**யாணர்நன் னாடுங் கண்டுமதி மருண்ட னென்.**[10]

இப் பகுதி கொண்டு சேரவேந்தன் குடிபுறங் காத்தோம்பும் குன்றாச் சிறப்பும், அந் நாட்டு மக்கள் வாழும் வளமான வாழ்க்கையும் வகையுறக் காணலாம்.

சேரர் காக்கும் நாடு நோயும் பசியும் நீங்கி இன்பம் பூத்து இலங்குகின்றது என்பதனை இதே புலவர் பிறிதொரு பாடலில் புலப்படுத்தியுள்ளார். இஃது இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் காத்தோம்பிய நாடு இருந்தவாறாகும்;

**நோயொடு பசியிகந் தொரீஇப்**
**பூத்தன்று பெருமநீ காத்த நாடே.**[11]

மேலும் அவர் ஆனிரைகள் புல்மேயும் கொல்லைகள், ஆரல்மீன் பிறழ்ந்துலாவும் நீர் நிரம்பிய வயல்களாயின என்றும், பன்றிகள் தம்முடைய மருப்புக்களாற் கிண்டிப் புழுதியாக்கிய புலம், ஏரால் உழுதலை வேண்டாதே காலாற் குழப்பி விதை விதைக்கும் வயல்களாயின என்றும், கரும்பு நிற்கும் பாத்திகளிற் பூத்த நெய்தற் பூக்கள்

---

10. பதிற்றுப்பத்து ; 2 ; 19 : 19-34.
11. பதிற்றுப்பத்து ; 2 ; 3 : 27-28.

பெருத்த கண்களையுடைய எருமைக் கூட்டத்தைப் பிறவிடத்திற்கு மேய்ச்சல் வேண்டிச் செல்லாவாறு தடுக்கும் வயல்களாயின என்றும், இளம்பெண்கள் கூடி ஒலிமிக்க துணங்கைக் கூத்தாடும் இடங்கள் வளைந்த தலையை யுடைய முதிய பசுக்கள் ஆம்பலை மேயும் இடங்களாயின என்றும், தழைத்த தென்னைகளும், பறவையினங்கள் பாங்குறக் கூடியொலிக்கும் மருத மரங்களும், கால்வாய் களையுடைய பூம்பொய்கைகளும் உடைமையால் புலவர் பாடும் புகழ் பெற்ற செல்வம் பொருந்திய ஊர்களை யுடைய நாடு என்றும் சேரநாட்டு வளத்தைச் சிறக்கப் பாடியுள்ளார்:

தொறுத்தவயல் ஆரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு வுழாதுவித்துநவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையின் நிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்
ஒலிதெங்கின் இமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின் நாடு.[12]

பாலைக் கௌதமனாரும் இதே போக்கிலேயே இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் காத்தோம்பிய நாட்டினைக் கவினுறக் கிளத்துகின்றார்:

யாண்டு பிழைப் பறியாது பயமழை சுரந்து
நோயின் மாந்தர்க் கூழி யாக[13]

என்றும்,

கடலுங் கானமும் பலபய முதவ[14]

என்றும்,

12. பதிற்றுப்பத்து ; 2 ; 3 : 1-10.
13. பதிற்றுப்பத்து ; 3 ; 1 : 30-31.
14. பதிற்றுப்பத்து ; 3 ; 2 : 6.

வயங்குகதிர் விரிந்து வானகஞ் சுடர்வர
வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயங்கெழு பொழுதோ டாகிய நிற்பக்
கலிழுங் கருவியொடு கையுற வணங்கி
மன்னுயிர் புரைஇய வலனேர் பிரங்கும்
கொண்டற் றண்டளிக் கமஞ்சூன் மாமழை
காரெதிர் பருவ மறப்பினும்
பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே [15]

என்றும்,

செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யரிதுநின் னகன்றலை நாடே [16]

என்றும்,

கோடை நீடக் குன்றம் புல்லென
அருவி யற்ற பெருவிறற் காலையும்
நிவந்துகரை யிழிதரு நனந்தலைப் பேரியாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீ இயர்
உவலை சூடி யுருத்துவரு மலிர்நிறைச்
செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யரிதுநின் னகன்றலை நாடே [17]

என்றும் பாலைக் கௌதமனார் குறிப்பிடுவதனின்றும் பொய்யாது பெய்யும் மழையும் நோயில்லாது வாழும் மக்களும் உடைய நாடு சேரநாடு என்பதும், நெய்தலும் முல்லையும் பயன் பல பயக்கும் நாடு சேரநாடு என்பதும், கார், பருவ மழையினைப் பொழிய மறப்பினும் நீங்காத புதுவருவாயினை உடைய நாடு சேரநாடு என்பதும், வேனிற்காலம் நீட்டித்தலால் குன்றங்கள் பொலிவழிந்து தோன்ற, அருவிகள் நீர் வற்றி யுலர்ந்த பெரிய வறட்சிக் காலத்தும், கரை அளவும் உயர்ந்து, நீர் பெருக்கெடுத்து வழிந்தோடும் அகன்ற பேரியாறு பாயும் சிறப்புப்

15. பதிற்றுப்பத்து ; 3 ; 4 : 23-30.
16. பதிற்றுப்பத்து ; 3 ; 8 : 13-14.
17. பதிற்றுப்பத்து ; 3 ; 8 : 14.

பொருந்திய அகன்ற புலத்தில் விலங்கினங்கள் புல் மேய்தல் வேண்டி விடப்பட்ட கரம்பு நிலத்தில் உண்டாகிய வெடிப்புகளில் நீர் நிறைந்து தேக்குமாறு இடந்தொறும் பரந்து மிகுதல் வேண்டித் தழைகளைச் சுமந்து சினமுற்று வருவது போலும் பேராரவாரத்தோடு வரும் பேரி யாற்று வெள்ளத்தின் சிவந்த நீரின் ஆரவாரமல்லது, சேரநாட்டின் வாழும் மக்கள் உயிர்கட்குக் கொடுமை செய்யும் போர்ப் பூசல் இல்லை என்பதும் அறியப்படு கின்றன.

பல்யானைச் செல்கெழு குட்டுவன் காக்கும் சேரநாடு குவளைப் பூவினை முழுதாக அணியும் விளங்குகின்ற மகளிரை உடைத்தாயுளது. ஆம்பல் பூவினை இடை யிடையே தொடுத்த தழைகளை யுடுத்து, கள்ளுண்ணும் இயல்பினரான இசை இயக்கும் இயவர் தங்கியிருக்கும், நீர் நிலைக்கு அணித்தேயிருக்கும் மருத மரத்தின் மீதேறித் தெளிந்த தம் விளிக் குரலை இசைப்பர். வயலருகே உள்ள சோலைகளில் தங்கும் பசிய மயில்கள் அம் மகளிர் இசைக்கு இயைந்து ஆடுதலால் எழும் ஆரவாரமும், புனல் மதகுகளைத் தாக்கி எழுப்பும் ஆரவாரமும், நன்செய் நிலச்சேற்றில் இறங்கிவிட்ட வண்டிச் சக்கரத்தினை, அவ் வண்டியினைச் செலுத்து வோர் வண்டியிற் பூட்டியுள்ள எருதுகளை உரப்பும் ஆரவாரமும் அல்லாது, வேறே போர் ஆரவாரம் ஏதும் கேட்டறியாத குன்றாத நல்ல புதுவருவாயினை உடைய நாடாகிய பகைவர் தேயங்கள் பல்யானைச் செல்கெழு குட்டுவன் சினந்து நோக்குதலாற் சீரழிந்தன என்று புலவர் பாடுகிறார்.

**சிதைந்தது மன்ற நீ சிவந்தனை நோக்கலின்**
**தொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி**
**அலர்ந்த வாம்பல் அகமடி வையர்**
**சுரியலஞ் சென்னிப் பூஞ்செய் கண்ணி**
**அரிய லார்கையர் இனிதுகூடு இயவர்**

துறைநணி மருத மேறித் தெறுமார்
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்
பழனக் காவிற் பசுமயி லாலும்
பொய்கை வாயிற் புனல்பொரு புதவின்
நெய்தல் மரபி னிரைகட் செறுவின்
வல்வா யுருளி கதுமென மண்ட
அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப
நல்லெருது முயலு மளறுபோகு விழுமத்து
சாகாட் டாளர் கம்பலை யல்லது
பூசல் அறியா நன்னாட்டு
யாணர் அறாஅக் காமரு கவினே.[18]

பல்யானைச் செல்கெழு குட்டுவனின் நாட்டில் மருதவளம் சிறந்து விளங்குகின்றது. அவன் நாட்டு மகளிர் அவலை எறிந்து உலக்கையை வாழை மரத்தில் சார்த்தி வைத்துவிட்டு வள்ளைப் பூக்களைக் கொய்வான் வேண்டி வயலில் இறங்குவர் என்றும், அவ் வயல்கள் பருத்த கதிர்களினால் வளைந்துள்ள நாட்கள் கொண்டு தாழ்ந்து சாய்ந்து கிடக்கும் தன்மையுடையன என்றும் பாலைக் கௌதமனார் குறிப்பிடுகின்றார்:

அவலெறிந்த உலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்
முடந்தை நெல்லின் விளைவயல்.[19]

மேலும் அந்நாட்டில் எல்லாக் காலங்களிலும் கரும்பு பயிரிடப்பட்டு அறுவடை செய்யப்படுகிறது என்பதனையும் குறிப்பிடுமுகத்தான் மருத வைப்பின் மாறா வளமும் யாணரும் மனங்கொள்ளும் வகையில் கிளத்தப்பட்டுள்ளன.

கால மன்றியுங் கரும்பறுத் தொழியாது.[20]

---

18. பதிற்றுப்பத்து ; 3 ; 7.
19. பதிற்றுப்பத்து ; 3 ; 9 : 1-3.
20. பதிற்றுப்பத்து ; 3 ; 10 : 14.

அடுத்து, காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடிய ஆறாம்பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் நாடு அழகுறக் கூறப்பட்டுள்ளது. நெய்தல் வளஞ் செறிந்த அவன் நாட்டினைப் புலவர்,

> **வண்பிணி யவிழ்ந்த கண்போல் நெய்தல்**
> **நனையுறு நறவின் நாடுடன் கமழ**[21]

என்ற அடிகளில் புலப்படுத்தியுள்ளார். மேலும் அவரே பிறிதொரு பாட்டில், தாழை மடல் அவிழ்ந்து மணம் பரப்பும் கடற்றுறையும் குளிர்ந்த கடற் பரப்பும் கொண்ட நல்ல நாடு ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் நாடு என்று அகமகிழ்ந்து பாராட்டியுள்ளார்.

> **கமழுந் தாழைக் கானலம் பெருந்துறைத்**
> **தண்கடற் படப்பை நன்னாடு.**[22]

புன்செய் நிலங்களை யுழுது பயிர் செய்தும் வலிய கையினையுடைய உழவர்குடிப்பெருமக்கள், கழுத்தில் கட்டிய மணிகள் ஒலிக்கும்படியான கடாக்களைக் கொண்டு ஏர் பூட்டி உழுது கலப்பையின் கொழுச் சென்ற படைச்சாலின் பக்கத்தே அசைகின்ற ஒளிர்கதிர்களை யுடைய அழகிய மணிகளைப் பெறும் அகன்ற இடம் அமைந்த ஊர்கள் சேரநாட்டில் நிறைந்துள்ளன என்று காக்கை பாடினியார் கவினுறப் பாடுகின்றார்:

> **புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்**
> **சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி**
> **நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்**
> **அலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்**
> **அகன்கண் வைப்பின் நாடு.**[23]

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனிடத்து, நாடும் காடும் பள்ளமும் மேடும் என்ற பல்வேறு வகைப்பட்ட அகன்ற

---

21. பதிற்றுப்பத்து; 6 ; 1 : 17-18.
22. பதிற்றுப்பத்து; 6 ; 5 : 5-6
23. பதிற்றுப்பத்து; 6 ; 8 : 15-19.

நாடுகளிலிருந்து வந்து தொக்கனவும், மலையிடத்தனவும் கடலிடத்தனவுமாகிய பொருள்களும் நிறைந்துள்ளன என்பர் காக்கை பாடினியார்:

**பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய**
**மலையவுங் கடலவும் பண்ணியம் பகுக்கும்.**[24]

மாறாத விளைவினை நல்கும் வயல்களால் நீங்காத புதுவருவாயினை யுடைத்தாயுள்ளது சேரநாடு என்பது,

**மறாஅ விளையுள் அறாஅ யாணர்** [25]

என்ற அடியினால் பெறப்படுகின்றது.

முரம்பு நிலத்திலும் உழுது பயரிடுவோர், விளங்குகின்ற ஒளிக்கதிரையுடைய அழகிய மணிகளைப் பெறுவர் என்றும், அத்தகு இடமகன்ற ஊர்களை உடைத்தாயுள்ளது செல்வக் கடுங்கோ வாழியாதனுடைய நாடு என்றும் 'பொய்யா நாவிற்' கபிலர் குறிப்பிடுவர்:

**............... செம்பரன் முரம்பின்**
**இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன்கண் வைப்பின் நாடுகிழ வோனே.** [26]

எட்டாம் பத்தில் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை அரிசில் கிழார் பாடியுள்ளார். தொகுதி கொண்ட மழை மேகம் நாற்றிசையும் காலிறங்கித்தண்ணிய மழையைப் பெய்ததாக, மிகுதியாக விதைத்தற்கேற்பப் பரந்த உழுநிலங்களை யுடைய சிலவாகிய ஏர்களையுடைய உழவர், குளிர்ந்த நீர்த்துறையில் மலர்ந்துள்ள பகன்றைப் பூவாற் றொடுத்த அழகுடைய மாலையை வெளுக்கப்பட்ட வெள்ளாடையைப் போலத் தலையிற் சூடிக் கொண்டு உழும் படைச்சாலிடத்தே

---

24. பதிற்றுப்பத்து; 6 ; 9 : 14-15.
25. பதிற்றுப்பத்து; 6 ; 10 : 8.
26. பதிற்றுப்பத்து; 7 ; 6 : 18 - 20.

விளங்குகின்ற கதிர்களையுடைய அழகிய மணிகளைப் பெறுகின்ற இடமகன்ற ஊர்கள் பொருந்திய நாடு என்று அரிசில் கிழார் சேர நாட்டின் செல்வ வளனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

> ...................... கால்கொண்டு
> கருவி வானந் தண்டுளி சொரிந்தெனப்
> பல்விதை யுழவிற் சில்லே ராளர்
> பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
> கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி
> இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
> அகன்கண் வைப்பின் நாடு...[27]

சேர நாட்டின்கண் அமைந்துள்ள கொல்லிமலையின் வளம் பெருங்குன்றூர் கிழாரால் பின்வருமாறு கூறப் பட்டுள்ளது.

> முழவி னமைந்த பெரும்பழ மிசைந்து
> சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்
> தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்
> காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
> கலிமகிழ் மேவலர் இரவலர்க் கீயும்
> சுரும்பார் சோலைப் பெரும்பெயர்க் கொல்லி. [28]

காந்தட்பூவால் தொடுத்த கண்ணி சூடிய செழித்த குடிப்பிறந்த செல்வ மக்கள் முழவு போன்றமைந்த பெரிய பலாப்பழத்தையுண்டு விழாக் கொண்டாடினாற்போல, புதுமையினையுடைய கரிய அழகிய மூங்கிற் குழாயிடத்தே பெய்து முதிர்வித்த இனிய கள்ளைக்குடித்து, ஆரவாரத்தை யுடைய மகிழ்ச்சியை விரும்பி, இரப்போர்க்கு வேண்டுவன நல்கும் வண்டுகள் பொருந்திய சோலை சூழ்ந்த பெரிய பெயரையுடைய கொல்லி என்பது இப்பகுதியால் பெறப் படுகின்றது.

---

27. பதிற்றுப்பத்து; 8 ; 6 : 9 - 15.
28. பதிற்றுப்பத்து; 9 ; 1 : 19 - 24.

நுண்ணிய மணல் சான்ற அடைகரையை யுடைக்கும் அலைகளையுடைய குளிர்ந்த கடற்பகுதிக்குத் தலைவன் என்று இளஞ்சேரல் இரும்பொறை போற்றப்படுகிறான்:

**உறுகா லெடுத்த வோங்குவரற் புணரி**
**நுண்மண லடைகரை யுடைதரும்**
**தண்கடற் படப்பை நாடுகிழ வோயே.**[29]

மழை உரிய காலத்திலே தப்பாது பொழிகிறது; காட்டிடத்தே தொகுதி கொண்ட இளமை பொருந்திய பிணைமான்கள் தத்தம் ஆணொடு கூடி இனிது செல்கின்றன; பறவைகளும், வண்டினமும் மரக்கிளைகளிலிருந்து ஆரவாரிக்கின்றன. பழங்களும் கிழங்குகளும் பலரும் பலவும் உண்டலாற் குறைவு படாதனவாயுள்ளன. பசுமந்தைகள் புல்லை மேய்ந்து மகிழ்ச்சியுடன் உலாவுகின்றன. வறுமையென்னும் வாட்டத்தை யறியாத வளம் பொருந்திய சிறப்பினால் பெரிய பலவாகிய புதுப் புதுக் கூலங்கள் பெருக நாடு நாடாக விளங்கிற்று என்று பெருங்குன்றூர் கிழார் இளஞ்சேரல் இரும்பொறை விருந்தோம்பிய நாட்டினை இனிதின் கிளத்துவர்:

**வானம் பொழுதொடு சுரப்பக் கானம்**
**தோடுறு மடமா னேறுபுணர்ந் தியலப்**
**புள்ளு மிஞிறு மாச்சினை யார்ப்பப்**
**பழனுங் கிழங்கு மிசையற வறியாது**
**பல்லா னன்னிரை புல்லருந் துகளப்**
**பயங்கடை வறியா வளங்கெழு சிறப்பிற்**
**பெரும்பல் யாணர்க் கூலங் கெழும.**[30]

மேலும், பெருங்குன்றூர் கிழார், விண்மீன்களும் கோள்களும் தத்தமக்குரிய இடத்தே நிற்க மழை தப்பாது சேர நாட்டிற் பொழிந்து செல்வ வளத்தை மிகுவிக்கின்றது என்றும் கூறியுள்ளார்.

---

29. பதிற்றுப்பத்து; 9 ; 8 : 40-42.
30. பதிற்றுப்பத்து; 9 : 1-7.

மீன்வயி னிற்ப வானம் வாய்ப்ப. [31]

இதுகாறும் கூறியவாற்றான் சேரநாடு நானில வளமும் நன்கியைந்தது என்பதும், மழை வளம் மட்டின்றிக் கொண்டிருப்பது என்பதும், மக்கள் புதுவருவாய் காரணமாக மாறா மகிழ்ச்சியில் திளைத்து விழவயர்ந்து வாழ்வர் என்பதும் விளங்க அறியப்பட்டன.

## மக்கள் வாழ்க்கை

சேர நாட்டு மக்கள் பிறர் பொருளைச் சிந்தையாலும் விரும்பாதவர்கள்; குற்றமற்ற அறிவு சான்ற நெஞ்சினர்; செம்மையின் இகவாது நன்மைக்கண் தங்குபவர்கள்; அன்பு நெறி பற்றி அருள் நெறி நிற்பவர்கள்; பகுத்துண்டு பல்லுயிரோம்பும் பண்பினர்; கடமை நினைந்து பணியாற்றிய செம்மை சிறந்த வாழ்வினர். விழவு மலிந்த வீர வாழ்வினர். மலையிலே பிறந்து கடலிலே கலக்கும் நீர் நிறைந்த ஆற்றில் நிகழ்த்தப்படும் இனிய புனலாட்டு விழாவும், சோலையிடத்தே தங்கி இனிதிருந்து செய்யும் வேனில் விழாவுமுடைய பெரிய அழகிய வாழ்க்கையினை விரும்பிச் சூழும் சுற்றத்தாருடன் இன்பப் பகுதி பலவும் துய்க்கும் செல்வ மக்கள் சேர நாட்டில் மிகுதியும் உள்ளனர்:

நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும்
மலிபுனல் நிகழ்தரும் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமொ டுண்டினிது நுகரும். [32]

மேலும், போரில்லாக் காலங்களில் சேர நாட்டு வீரர், பகைப்புலத்தே பகைவர் ஊர்ந்துவந்த களிற்றினைக் கொன்று கொணர்ந்த அவற்றின் வெண்கோடுகளைக்

31. பதிற்றுப்பத்து; 9 ; 9 : 10-1.
32. பதிற்றுப்பத்து; 5 ; 8 : 13-16.

கள்ளிற்கு விலையாகத் தந்து, கள்ளைப் பெற்று மகிழ்ந்து, அச்சத்தை அறியாத இன்பமே நுகரும் வாழ்க்கையை யுடைய உத்தர குருவில் வாழும் மக்களைப் போல நாடோறும் இனிய உவகை பொருந்தி வாழ்கின்றனர்:

**வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு**
**கட்கொடி நுடங்கு மாவணம் புக்குடன்**
**அருங்கள் நொடைமை தீர்ந்துபின் மகிழ்சிறந்து**
**நாம மறியா வேம வாழ்க்கை**
**வடபுல வாழ்நரிற் பெரிமதர்ந் தல்கலும்**
**இன்னகை மேய பல்லுறை பெறுப.**[33]

சேர நாட்டின் கொல்லிமலைச் சாரலில் வாழும் மக்கள் முழவு போன்ற பெரிய பலாப்பழத்தை உண்டு, மூங்கிற் குழாயிற் பெய்து முற்றிய கள்ளை அருந்தி, ஆரவாரம் மிகுந்து விழாவயர்கிறார்கள்; இரவலர்க்கு வழங்குகிறார்கள்:

**முழவி னமைந்த பெரும்பழ மிசைந்து**
**சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்**
**தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்**
**காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்**
**கலிமகிழ் மேவலர் இரவலர்க் கீயும்.**[34]

பூண் தோய்ந்த உலக்கை கொண்டு உலையிலிடும் அரிசியைத் தீட்டுகின்றனர். அடையினையுடைய சேம்பு போன்று சோறு சமைக்கும் பெரும்பானையுளது. கூரிய வாள் கொண்டு ஊனை வெட்டுதலால் ஊனும் குருதியும் படிந்து சிவந்து தோன்றும் மரக்கட்டை காண்பார் மதியை மருள்விக்கின்றது. உண்ணவும் தின்னவும் வருவார்க்குச் சோறு குறைவுபடாது வழங்கப்படுதலின் சமையல் இடையறாது நடந்துகொண்டிருக்கின்றது. இத்தகு புது வருவாயினை உடையதாகச் சேர நாடு திகழ, மக்களும் 'யாவரும்

---

33. பதிற்றுப்பத்து; 8; 8 : 9-14.
34. பதிற்றுப்பத்து; 9; 1 : 19-23.

கண்டு மதிமருளும் வாடாச் சொன்றி' மிசைந்து வாழ்கின்றனர் :

> உண்மருந் தின்மரும் வரைகோ ளறியாது
> குரைத்தொடி மழுகிய வுலக்கை வயின்றோ
> றடைச்சேம் பெழுந்த வாடுறு மடாவின்
> எஃகுறச் சிவந்த வூனத் தியாவரும்
> கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி.[35]

மருத வளம் நிறைந்த விரிந்த விளைபுலங்களாகிய கழனியின் கண்ணே மீன் இரை நோக்கி நிற்கும் நாரைகளை ஓட்டும் மகளிர் இரவு பகலென்ற இரு போதுகளிலும் தாமணிந்துள்ள பசிய பொன்னாற் செய்த இழைகளைக் களையாமல், புதிய புதிய குரவைக் கூத்தினை நிகழ்த்தி மகிழ்வர்.

> மருதஞ் சான்ற மலர்தலை விளைவயிற்
> செய்யுள் நாரை யொய்யு மகளிர்
> இரவும் பகலும் பாசிழை களையார்
> குறும்பல் யாணர்க் குரவை யயரும்.[36]

இரவும் பகலும் அணிகளைக் களையாமல் மகளிர் எந்நேரமும் அணிகலன்கள் அணிந்து அழகுற விளங்கும் செயல் அந்நாட்டு மகளிரின் செல்வ வளனைச் சிறக்கக் குறிக்கக் காணலாம்.

## உணவு வகைகள்

அரிவாளாற் பிளந்து அறுக்கப்பட்ட வெள்ளிதாகிய ஊனினது கொழுவிய இறைச்சியும், ஆட்டிறைச்சி பெய்து சமைத்த வெண்ணெல்லின் வெண்சோறும் உண்டு, தேனை மூங்கிலடத்தே பெய்து, அதனுள் இஞ்சிப் பூ முதலிய மலரரும்புகளை யிட்டுப் பக்குவம் செய்து தெளிவித்துக் கொள்ளும் தேறலினை மாந்தி மகிழ்கின்றனர் சேர

35. பதிற்றுப்பத்து ; 3; 4 : 18-22.
36. பதிற்றுப்பத்து ; 8; 3 : 4-9.

நாட்டு மக்கள் என்பது குமட்டூர்க் கண்ணனார் கூற்றால் தெரியவருகின்றது.

> எஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
> மையூன் பெய்த வெண்ணெல் வெஞ்சோறு
> நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி.[37]

"கள்ளை உண்பீராக; சோற்றைச் சமைப்பீராக; தின்னப்படும் ஊன் கறியை அறுப்பீராக; புழுக்குதற்குரிய கறி வகைகளை உலையில் ஏற்றுவீராக" என்ற பாணன் கூற்றால் கள், சோறு, இறைச்சி, கறிவகைகள் உணவின் கூறுகளாக அந்நாளில் துலங்கின என்பது தெளிவு.

> உண்மின் கள்ளே அடுமின் சோறே
> எறிக திற்றி ஏற்றுமின் புழுக்கே.[38]

அடுத்து, ஊனை வெட்டும் மனைமேல் வைத்துக் கொத்தித் துண்டித்த நல்ல நிணம் பொருந்திய இறைச்சி வேகவைத்துத் தாளிதம் செய்யுந்தோறும் கடலொலி போன்று அமையாது ஒலித்தது என்று பாலைக் கௌதமனார் பாடுவது கொண்டு இறைச்சி யுணவு அந்நாளில் மக்கள் உணவில் பெற்ற இடம் தெளிவாகப் புலனாகின்றது:

> ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை
> குய்யிடு தோறு மானா தார்ப்ப.[39]

பாலைக் கௌதமனார் என்னும் இவ் அந்தணப் புலவரே இப்பாட்டிலேயே கள்ளுணவைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்:

> ஆர்வளம் பழுனிய வையந்தீர் சிறப்பின்
> மாரியங் கள்ளின்.[40]

---

37. பதிற்றுப்பத்து; 2; 2 : 16-18.
38. பதிற்றுப்பத்து; 2; 8 : 1-2.
39. பதிற்றுப்பத்து; 3; 1 : 10-11.
40. பதிற்றுப்பத்து; 3; 1 : 16-17.

மழை போல் கள் சொறியப்படுகின்றமையால் கள் மக்கள் வாழ்வில் பெற்ற இடம் பெரிது என்பது தெரிய வருகின்றது.

தன்னிற் கலந்த சிவந்த ஊன்கறி தோன்றாதவாறு செய்த, துவரையால் அரைக்கப்பட்ட வெள்ளிய துவையலையும், வெண்மையான இறைச்சி கலந்தமைத்த சோற்றையும் சேர நாட்டு மழவர் குலப் பெருமக்கள் உண்பதாகக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் குறிப்பிடுவர்:

> **செவ்வூன் தோன்றா வெண்குவை முதிரை**
> **வாலூன் வல்சி மழவர்.**[41]

இதுகாறும் கூறியவற்றால் சோறும் இறைச்சியும் மக்கள் உணவு என்பதும், கள் குடி வகை என்பதும் விளக்க முறுகின்றன.

**உடை**

அக்கால மக்களின் உடை குறித்த குறிப்பு இரண்டாம் பத்தில் இடம் பெற்றுள்ள பாடல் ஒன்றால் புலனாகின்றது.

மழையால் நனைந்த பருந்தினுடைய ஈரம்பட்ட சிறகை யொப்பக் கிழிந்த, மண்படிந்து மாசேறிய கந்தை யாகிய உடையை நீக்கி, நூற்கப்படாத நூலாகிய பட்டா லியன்ற ஆடையை வாலிதாக இடுப்பில் உடுத்திக் கொள்ள இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இரவலர்க்கு ஈந்ததாகக் குறிப்பு வந்துள்ளது:

> **நீர்ப்படு பருந்தின் ஈர்ஞ்சிற கன்ன**
> **நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை**
> **நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ.**[42]

---

41. பதிற்றுப்பத்து; 6; 5 : 7-8.
42. பதிற்றுப்பத்து; 2; 2 : 19-21.

**அணிகள்**

(i) ஒள்ளிழை மகளிர்[43]

(ii) வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை[44]

(iii) வளைக்கை மகளிர்[45]

(iv) வெண்கை மகளிர்[46]

(v) சேயிழை மகளிர்[47]

(vi) இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி அவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்.[48]

(vii) பாய லின்மையிற் பாசிழை ஞெகிழ
.......................................
செவ்விரல் சிவந்த வவ்வரிக் குடைச்சூல்
அணங்கெழில் அரிவையர்.[49]

(viii) ................................ மகளிர்
இரவும் பகலும் பாசிழை களையார்[50]

(ix) புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்
சாந்துவரு வானி நீர்[51]

---

43. பதிற்றுப்பத்து; 2 ; 3 : 21.
44. பதிற்றுப்பத்து; 2 ; 4 : 14-15.
45. பதிற்றுப்பத்து; 2 : 9-2.
46. பதிற்றுப்பத்து; 3 : 9-6.
47. பதிற்றுப்பத்து; 5 : 3-2.
48. பதிற்றுப்பத்து; 5; 6 : 1-4.
49. பதிற்றுப்பத்து; 7; 8 : 15, 18-19.
50. பதிற்றுப்பத்து; 8; 3 : 5-6.
51. பதிற்றுப்பத்து; 9; 6 : 10-12.

மேற்காணும் குறிப்புகள் அக்கால மகளிர் அணிகலன்கள் அணிந்து அழகுற விளங்கினர் என்பதைக் காட்டும்.

**மகளிர்**

பதிற்றுப்பத்து முழுவதும் மகளிர் அழகும் பண்பும் செயலும் பாராட்டப்படுவதனைக் காணலாம்.

சுருண்டு கருத்த கூந்தலும் வளைந்த மூங்கில் போன்ற தோளும் உடைய குற்றமில்லாத மகளிர் என்று அவர்கள் போற்றப்படுகின்றனர்:

> **வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்**
> **வசையின் மகளிர்.** [52]

அடுத்து அவர்கள் ஒளிவிடும் அணிகலன்களை அணிந்து அழகுற விளங்குவதாகக் கூறப்பட்டுள்ளனர்:

> **ஒள்ளிழை மகளிர்.** [53]

விண்ணுலகத்து மகளிர் தம் நலத்தால் தமக்கு நிகராதல் வேண்டித் தம்முள் மாறுபட்டு இகல் கொள்ளும் மெய்ந்நலமும், விளங்குகின்ற தலைக்கலனால் மறைப்புண்ட வண்டு மொய்க்கும் கூந்தலும், நீராடுதலால் நெய்ப்புற்ற கூந்தல் ஒடுங்கிய செவியிடத்தே பெய்த வளைந்த குழையும் உடையவர்களாக மகளிர் சிறப்பிக்கப் பெற்றுள்ளனர்:

> **வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்**
> **வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்**
> **ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை.** [54]

மகளிர் மகிழ்ச்சியோடு விளையாட்டில் ஈடுபடுவது பிறிதொரு பாடலில் பேசப்படுகின்றது. வயலித்தே

---

52. பதிற்றுப்பத்து ; 2 ; 2 : 22-23.
53. பதிற்றுப்பத்து ; 2 ; 3 : 21.
54. பதிற்றுப்பத்து ; 2 : 13-15.

மகளிர் அவலிடித்த உலக்கையை வாழைமரத்தில் சார்த்தி விட்டு, வளையல் அணிந்த இளைய மகளிர் வள்ளைப் பூக்களைப் பறிப்பதில் ஈடுபடுகின்றனர்:

**அவலெறிந்த உலக்கை வாழைச்சேர்த்தி**
**வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்**
**முடந்தை நெல்லின் விளைவயல்.**[55]

பிறிதொரு பாடலில் வளையல் அணியாத இள மகளிர் பேசப்படுகின்றனர். வளையல் அணியாத அவ் இளைய மகளிர் வெள்ளிய சிறு பறவைகளை யோப்பித் திரிகின்றனர்; இடையறாத விழாக்களில் மனம் களிக்கின்றனர்:

**வெண்கை மகளிர் வெண்குரு கோப்பும்**
**அழியா விழவு.**[56]

மகளிர் தம் இயற்கைக் கூந்தலோடு செயற்கை மயிரினையும் இட்டுப் புனைந்த செய்தி ஐந்தாம் பத்தில் அமைந்துள்ள பாடலொன்றால் அறியப்படுகின்றது. கவரிமான் மயிர் கலந்து முடித்த கொண்டையினையும், கரிய மேகம் போன்ற கூந்தலினையும், ஊசலாடும் விருப்பத்தினையும், செவ்விய இழைகளையுமுடைய மகளிர், உரல் போன்று பெரிய காலையும் ஒளிவிடும் கொம்பையும் பெரிய கையையும் மதம் நிறைந்த நடையையும் உடைய யானைகளை விரும்பிக் குழியில் அகப்பட்டுக் கொள்ளும் பிடிகளின் தொகையினை ஒன்று இரண்டு என்று விரல் விட்டு எண்ணத் தொடங்கிப் பின் அவற்றின் தொகை எண்ணிக்கைக்கு அடங்காமையால் எண்ணு முறையைக் கைவிடுகின்றனர்:

**கவரி முச்சிக் கார்விரி கூந்தல்**
**ஊசன் மேவற் சேயிழை மகளிர்**

---

55. பதிற்றுப்பத்து ; 3 ; 9 : 1-3.
56. பதிற்றுப்பத்து ; 3 ; 6 : 6-7.

**உரல்போற் பெருங்கா லிலங்குவாண் மருப்பிற்**
**பெருங்கை மதமாப் புகுதரி னவற்றுள்**
**விருந்தின் வீழ்பிடி யெண்ணுறு முறைபெறா.**[57]

பரணரின் இப் பாடலால் அக்காலத்துப் பெண்களுக்கிருந்த அஞ்சாமை தெரியவருகின்றது. பிறிதொரு பாடலில் பரணர் மகளிரின் அழகுச் செவ்வியை அழகுறப் புனைந்துள்ளார். இழையினையும் குழையினையும் நறிய தண்ணிய மாலையினையும் ஒளிமிக்கு விளங்குகின்ற தொடியைச் செறிவாக அணிந்த முன் கையினையும், ஒளி மிகுந்து திகழும் அழகிய மணிமாலை கிடந்து விளங்கும் மார்பினையும், வண்டு மொய்க்கும் கூந்தலைக் கொண்டையாக முடித்து அழகு பிறங்க ஒளிரும் பாடல் மகளிர் பேரியாழில் பாலைப் பண்ணை அமைத்துப் பகைவர்க்குப் பணியாத முறைமையுடன் கூடிய உழிஞைச் செயலைப் புகழ்ந்து பாடுகின்றனர்:

**இழையர் குழையர் நறுந்தண் மாலையர்**
**சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்**
**திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்**
**வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்**
**தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்**
**பணியா மரபின் உழிஞை பாட.**[58]

பொய்யா நாவிற் கபிலர் பிரிவுத் துயரத்தை ஆற்றாது காதல் மகளிர் கொள்ளும் வருத்தத்தினை அப்படியே படம்பிடித்துக் காட்டுகின்றார். தலைவனின் பிரிவாற்றாது உறக்கம் கொள்ளாது, தாம் அணிந்துள்ள பசிய இழைகள் நெகிழ்ந்து நீங்க உடல்மெலிந்து, உயரிய மண்ணால் செய்யப்பட்ட மதில் சூழ்ந்த நீண்ட பெரிய மனையிடத்தே ஓவியத்தில் தீட்டிக் காட்டப்படுவதினும் மேம்பட்ட நெடிய சுவரில், தலைவன் பிரிவின்கண்

57. பதிற்றுப்பத்து ; 5 ; 3 : 1-5.
58. பதிற்றுப்பத்து ; 5 ; 6 : 1-6.

மீண்டு போந்து கூடுதற்குக் குறித்த நாள்கள் பலவும் எழுதியெழுதி இயல்பாகவே சிவந்து தோன்றும் விரல் மேலும் சிவந்து தோன்ற, அழகிய வரிகளையும் சிலம்பை யும் காண்பாரை வருத்தும் அழகையும் கொண்டு அரிவையர் துலங்குவதாக ஓர் அழகிய சித்திரமே தீட்டித் தலைவி, தலைவன் பிரிவால் கொண்ட ஆராத் துயரினைப் புலப்படுத்துகின்றார்:

> பாய லின்மையிற் பாசிழை நெகிழ
> நெடுமண் இஞ்சி நீணகர் வரைப்பின்
> ஓவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச்
> செவ்விரல் சிவந்த வவ்வரிக் குடைச்சூல்
> அணங்கெழி லரிவையர்.[59]

தலைவனைப் பிரிந்த தலைவி அவன் பிரிந்த நாட் களைச் சுவரில் கோடிட்டுக் குறித்துவருதல் மரபென்பது,

> நாளிழை நெகுஞ்சுவர் நோக்கி நோயுழந்து
> ஆழல் வாழி தோழி[60]

என வரும் அகப்பாட்டானும் அறியலாம்.

வயல் வளம் சார்ந்த மருத நிலங்களில் நீர் நிறைந் துளது. நீரில் காணும் மீனை உண்ணும் பொருட்டு நாரைகள் பறந்து வந்து அமர்கின்றன. அந் நாரைகளை ஒலியெழுப்பி ஓட்டுகின்றனர் பெண்கள். அவர்கள் செல்வ மகளிர். இரவானாலும் பகலானாலும் அவர்கள் தாம் அணிந்துள்ள பசிய அணிகலன்களை அகற்றுவதில்லை. அந் நாட்டில் புதுவருவாய் மிகுதி. எனவே மகளிர் மகிழ்வுடன் குரவைக் கூத்து நிகழ்த்தி மகிழ்கின்றனர். இப்படி ஓர் அழகிய சித்திரத்தினைத் தீட்டிக் காட்டு கின்றார் புலவர் அரிசில் கிழார்:

---

59. பதிற்றுப் பத்து ; 7 ; 8 : 15-19.
60. அகம் ; 61 ; 4-5.

**மருதஞ் சான்ற மலர்தலை விளைவயற்**
**செய்யு ணாரை யொய்யு மகளிர்**
**இரவும் பகலும் பாசிழை களையார்**
**குறும்பல் யாணர்க் குரவை யயரும்.** [61]

மகளிர் நீராடும் நேர்த்தியினைக் காட்டுகின்றார் பெருங்குன்றூர் கிழார். ஓடக்கோல் நிற்கமாட்டாத ஆழ முடைத்தாயினும் ஆண்டுள்ள வானியாற்று நீரில் மகளிர் பாய்ந்து விளையாடுகின்றனர். அதுபோது அவர்கள் காதில் அணிந்து கொண்டிருந்த பொன்னாற் செய்த குழையானது ஆற்று நீரின் ஆழத்தில் விழுந்துவிடுகின்றது. இருப்பினும் சந்தன மரங்கள் மிதந்துவரும் வானியாறு தெளிவான நீரைக் கொண்டுள்ள காரணத்தால் மகளிர் காதினின்றும் கழன்று விழுந்த அப் பொற்குழை மேலே நன்றாகத் தெரிகிறது. எனவே வானியாற்று நீர் பளிங்கு போல் தன்னகத்துப்பட்ட பொருளை இனிது புலப் படுத்தும் என்பது பெறப்படுகின்றது:

**கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்**
**புனல்பாய் மகளிர் ஆட வொழிந்த**
**பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்.**
**சாந்துவரு வானி நீர்.** [62]

புனலிற் பாய்ந்தாடும்பொழுது மகளிர் காதிற் செறிக்கப்பட்டிருக்கும் குழை நீரில் விழுதல் இயல் பென்பதனை,

**வண்ட லாயமொ டுண்டுறைத் தலை இப்**
**புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை.** [63]

என்னும் பெரும்பாணாற்றுப் படை அடிகளால் அறியலாம்.

---

61. பதிற்றுப் பத்து ; 8 ; 3 : 4-7.
62. பதிற்றுப்பத்து ; 9 ; 6 : 9-12.
63. பெரும்பாணாற்றுப்படை ; 311-312.

## அரசமாதேவி

அரசமாதேவியின் பண்புகள் பதிற்றுப் பத்தில் அழகுறச் சித்திரிக்கப்பட்டிருக்கக் காணலாம். தேவ உலகத்தில் வாழும் மகளிரும் அரசமாதேவியின் அழகு கண்டு மாறுபாடு கொள்கின்றனர். இழைகள் மறைந்திருக்கும் தலைமுடியில் வண்டுகள் தங்கியுள்ளன. அலை அலையாகச் சுருண்ட கூந்தலும் வளைந்த குழையும் கொண்டு அரசமாதேவி காட்சி தருகின்றாள்:

**வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்**
**வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்**
**ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை.**[64]

மேலும் அவள் ஆறிய கற்பும், அடக்கம் பொருந்திய மென்மையும், ஊடற் காலத்திலும் இனிமையான மொழிகளையே பகரும் இனிய முறுவலும், அமுதம் நிரம்பிய சிவந்த அழகுத் திருவாயும், உள்ளத்து வேட்கையை ஒளிப்பின்றிக் காட்டும் அமர்த்த கண்களும், ஒளிவிளங்கு நெற்றியும், அசைந்த நடையை யுடையவளுமாகச் சேரனின் பட்டத்துத் தேவி காட்சியளிக்கின்றாள். புலவர் தீட்டும் அவ் வழகு ஓவியம் வருமாறு:

**ஆறிய கற்பின் அடங்கிய சாயல்**
**ஊடினும் இனிய கூறும் இன்னகை**
**அமிர்துபொதி துவர்வாய் அமர்த்த நோக்கிற்**
**சுடர்நுதல் அசைநடை.**[65]

சேரமான் வினைமேவிய உள்ளத்தனாய்ப் பாசறையின் கண் தங்கியிருக்க, அவன் பிரிவை ஆற்றாத தலைவி பகற் பொழுதில் அவன் பிரிவைப் பெரிதும் ஆற்றியிருந்து, இரவின்கண் அரிதாகத் துயில் பெறுகின்றாள். அரிதாகப் பெற்ற அவ் வுறக்கத்தில் சிறு மகிழ்ச்சி காரணமாக

---

64. பதிற்றுப்பத்து ; 2 ; 4 : 13-15.
65. பதிற்றுப்பத்து ; 2 ; 6 : 10-14.

உயிரைத் தாங்கி மனைக்கண் உறையும் பெரிய சால்பும், உடல் சுருங்கியதனால் எழும் அலரால் நாணம் நிறைந்த உடம்பும் ஒளி பொருந்திய நெற்றியும் உடையவள் என்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வாழ்க்கைத் துணைவி கூறப்பட்டுள்ளாள்:

எல்லும் நனியிருந் தெல்லிப் பெற்ற
அரிதுபெறு பாயற் சிறுமகி ழானும்
கனவினுள் உறையும் பெருஞ்சால் பொடுங்கிய
நாணுமலி யாக்கை வாணுதல் அரிவை.[66]

மண்ணுதல் செய்யாத நிலையிலும் நறுமணமே கொண்டு, மண்ணிய வழி முல்லை மலரின் நறுமணங் கமழும் தாழ்ந்த கரிய கூந்தலையும் குளத்தில் நாளத்தின் நீங்கியன போல இரவுப்போதிலும் மலர்ந்து நின்று, அழகிய முகத்திடத்தே சுழலும் பூப்போன்ற பெரிய மதர்த்த குளிர்ந்த கண்ணையும், அசைந்த காந்தள் பூத்து விளங்கும் கரையையுடைய நீர் வரும் யாற்றின் கரை மருங்கே நின்ற மூங்கிலை ஒத்த பருத்த தோளையுமுடைய தேவியாகப் பல்யானைச் செல்கெழு குட்டுவனின் பட்டத்துத் தேவி பாராட்டப் பெறுகின்றாள்.

மண்ணா வாயின் மணங்கமழ் கொண்டு
கார்மலர் கமழுந் தாழிருங் கூந்தல்
ஒரீஇயன போல விரவுமலர் நின்று
திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்
அலங்கிய காந்தள் இலங்குநீர் அழுவத்து
வேயுறழ் பணைத்தோள் இவள்.[67]

களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் பக்கல் அமர்ந்த பட்டத்துத் தேவியும் காப்பியாற்றுக் காப்பியனாரால் கவினுறக் கிளத்திக் கூறப்பெற்றுள்ளாள். வண்டு மொய்கத் தழைத்த கூந்தலையும், மனையறத்திற்குரிய

---

66. பதிற்றுப்பத்து ; 2; 9 : 11-14.
67. பதிற்றுப்பத்து ; 3; 1 : 32-37.

அறம் பலவும் கற்றுத் தெளிந்த அறிவும் செயலும் உடைய கற்பும், காதிலணிந்த குழைகட்கு விளக்கத்தை நல்கும் ஒளி பொருந்திய நெற்றியையும், தான் அணிந்த பொன்னாற் செய்த இழைகட்கு விளக்கந் தரும் மேனியையும், அழகிய வளைந்த உந்தியையுமுடைய பழைய பெருமனையிடத்தே உறையும் அரசமாதேவி, விண்ணுலகத்தே இயங்கும் மகளிருள்ளே சிறந்தவளான சிவந்த விண்மீனாகிய அருந்ததி போன்ற கற்பினள் என்று புலவரால் பலபடப் பாராட்டிப் பேசப் பெறுகின்றாள் :

........................ வண்டுபட
ஒலித்த கூந்தல் அறஞ்சால் கற்பின்
குழைவிளக் காகிய வொண்ணுதற் பொன்னின்
இழைக்குவிளக் காகிய வவ்வாங் குந்தி
விசும்புவழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்த
செம்மீன் அனையநின் தொன்னகர்ச் செல்வி.[68]

சேரன் செங்குட்டுவனின் பெருந்தேவியாகிய இளங்கோ வேண்மாள் பெரும் புலவர் பரணரால் சிறப்பாகப் பாராட்டப் பெற்றுள்ளாள்.

"பூசிய சந்தனம் புலரவும், நெற்றியிலிட்ட பொட்டும் கண்ணிலிட்ட மையும், பிறவு வண்ணங்கள் நீங்க, பல்வகையாகக் கை புனையப்பட்ட அழகு பொருந்திய வரிகளையுடைய வண்டினம் ஒலிக்கும் நின் (செங்குட்டுவன்) மார்பினால் பிணிக்கப்பட்ட மகளிரது விரிந்த மெல்லிய கூந்தலாகிய மெல்லிய படுக்கையிலே கிடந்து, மிக வருத்தம் பயக்கும் காம வேட்கை மிகுதலால் மார்படைய முயங்கும் முயக்கத்தால் இராப்பொழுதைப் பயன் கொள்ளும் முறைமையினையுடைய சிறு துயிலும் பெறாதொழியுமாறு பன்னாளும் கழியுமோ?" என்று மன்னனைப் பார்த்துப் புலவர் பரணர் பாடும் பாட்டால் கூடற்காலத்தில் அரசமாதேவி பெறும் நிலை வருணிக்கப்படுகின்றது.

68. பதிற்றுப்பத்து ; 4; 1 : 23-28.

.................. சாந்துபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற
வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து
கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொண் மரபின் மென்பிணி யவிழ
வெண்பல கழியுமோ பெரும பன்னாள்.[69]

*பெண்பாற் புலவராம் காக்கை பாடினியார் நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பட்டத்துத் தேவி அவன் மீது கொண்ட ஓர் அழகிய ஊடல் நாடகத்தை உணர்ச்சித் ததும்பக் குறிப்பிட்டுள்ளார்.*

*ஒளிர்கின்ற கால் விளக்கின் திருவிளங்கும் ஒளியிலே, முழவு முழங்க ஆடும் துணங்கைக் கூத்தின்கண் கை பிணைந் தாடும் மகளிர்க்குக் கைகோத்துக் கொள்ளும் புணையாகச் சிலைத்தலையுடைய வலிய ஏற்றினைப் போலச் சேரமான் முதற்கை கொடுத்தனன். அசைகின்ற மாலையையும் பரந்த தேமலையும் குளிர்ந்த இமைகள் பொருந்திய குளிர்ந்த கண்களையும் பெரிய இயல்பையுமுடைய அரசனின் உரிமை மனைவி ஊடல் கொண்டாள். எனவே, ஒள்ளிய இதழ் விரிந்த பூவை நிகர்த்த அடிகளிலே அணிந் துள்ள இரண்டாகிய பல மணிகள் கோத்த கிண்கிணி யானவை சிறிய பாட்டின்கண் கிடந்து ஒலிக்க, கரையை அலைக்கும் நீர்ப் பெருக்கால் அசையும் தளிர் போலத் தான் கொண்ட வெகுளி காரணமாக வாயிதழ் துடிப்ப நடுங்கி நின்று, மன்னன்மேல் எறிதற்காக வோச்சிய சிறிய செங்குவளை மலரை, ஒருவரிடமும் சென்று இரந்து அறியாத மன்னன் மனம் நெகிழ ஈவாயாக என இருகையும் விரித்து இரக்கவும் அதற்கு உடன்படாது சிவப்பும் ஆறாது, 'நீ என்பால் அன்புடையன் அல்லை' என்று கூறி அவ்விடத் தினின்றும்—அரசன் முன்னின்றும் நீங்கினாள் :*

---

69. *பதிற்றுப்பத்து ; 5; 10 : 16-21.*

சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து
முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாகச்
சிலைப்புவல் லேற்றிற் தலைக்கை தந்துநீ
நளிந்தனை வருத லுடன்றன ளாகி
உயவுங் கோதை யூரலந் தித்தி
ஈரிதழ் மழைக்கட் பேரிய லரிவை
ஒள்ளித ழவிழகங் கடுக்குஞ் சீறடிப்
பல்சில கிண்கிணி சிறுபர டலைப்பக்
கொல்புனற் றளிரி னடுங்குவன ணின்றுநின்
எறிய ரோக்கிய சிறுசெங் குவளை
ஈயென விரப்பவும் ஒல்லாள் நீயெமக்கு
யாரை யோவெனப் பெயர்வோள்.[70]

*சிறு செங்குவளை யென்றதற்குத், ''தான் எறிதற் கோக்கிய சிறியதொரு செங்குவளையெனச் சிறுமையால் அவள் மென்மை கூறிய சிறப்பான் இதற்குச் சிறு செங் குவளையென்று பெயராயிற்று'' என்று கூறுவர் பதிற்றுப் பத்தின் பழையவுரைகாரர்.*

*இம்மையிற் புகழும் மறுமையிற் பேரின்பமும் பயக்கும் பெறலரும் பேறு மக்கட்பேறு.*

இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்[71]

*என்று அகப்பாடல் மக்கட்பேற்றின் சிறப்பினை அழகுறக் காட்டும்.*

பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற[72]

*என்றார் திருவள்ளுவர்.*

---

70. *பதிற்றுப்பத்து;* 6; 2 : 13-24.
71. *அகம்;* 66 : 1-4.
72. *திருக்குறள்; மக்கட்பேறு :* 1.

இளமையும் துணையாகும் தன்மையுமுடைய மக்களாகிய நற் செல்வத்தைப் பெற்றெடுத்த வளமை பொருந்திய சிலம்பையும், அடக்கத்தால் உயர்ந்த ஒழுக்கத்தையும், நிறைந்த அறிவையும், குணஞ் செயல்களால் உண்டாகிய கெடாத புகழையுமுடைய ஒள்ளிய நெற்றியினராகிய காதல் மகளிர், புலவியாற் சீறி நோக்கும் பார்வையினர் என்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் அருமைத் துணைவியின் ஊடற் குறிப்பினை மேலும் காக்கை பாடினியார் பிறிதொரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்:

**இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த**
**வளங்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை**
**ஆன்ற வறிவிற் றோன்றிய நல்லிசை**
**ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்.**[73]

ஓவியத்தில் எழுதியது போன்ற வேலைப்பாடமைந்த நல்ல மனையின்கண்ணே யிருக்கும் பாவை போன்று நல்ல அழகும் குணமும் உடையவள் என்று செல்வக் கடுங்கோ வாழியாதனின் செல்வ மனைக்கிழத்தியைக் கபிலர் குறிப்பிட்டுள்ளார்:

**ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்**
**பாவை யன்ன நல்லோள் கணவன்.**[74]

இது மட்டுமன்று; செல்வக் கடுங்கோ வாழியாதன் இத்தகு நலம் நிறைந்த மனைவிக்குக் கணவன் என்று குறிப்பிடப் பெறுகின்றான். மனைவி வழிக் கணவனுக்குப் பெருமை தோன்றுவதனை 'நல்லோள் கணவன்' என்ற தொடர் விளக்கி நிற்றல் காண்க. திருமுருகாற்றுப்படையிலும் நக்கீரர் பெருமான் திருமுருகப் பெருமானைக் குறிக்குமிடத்து,

---

73. பதிற்றுப்பத்து; 6; 7 : 10-13.
74. பதிற்றுப்பத்து; 7; 1 : 3-4.

**மாசில் கற்பின் வாணுதல் கணவன்**[75]

என்று குற்றமற்ற கற்பும் ஒளி பொருந்திய நெற்றியுமுடைய தெய்வயானையின் கணவன் என்றே கூறிப் பெண்ணிற்குப் பெருமை தந்துள்ளார்.

பிறிதொரு பாடலிலும் கபிலர் செல்வக் கடுங்கோ வாழியாதனை இம் முறையிலேயே பாராட்டியிருக்கக் காணலாம்.

இழையணிந்து உயர்ந்த ஒப்பனை செய்தாற் போல் வருகின்ற இளமுலையினையும், மாட்சிமைப்பட்ட வரி களையுடைய அல்குலினையும், அகன்ற கண்ணினையும், மூங்கிலைப் போன்ற அழகிய பெரிய மூட்டுக்கள் பொருந்திய தொடியணிந்து பிறங்கும் பருத்த தோளினை யும், அழகிய கடவுளரையும் ஏவல் கொள்ளும் கற்பினை யும், சேய்மைக் கண்ணும் சென்று மணம் கமழும் நறிய நெற்றியினையும் செவ்விய அணிகலன்களையும் உடை யாட்குக் கணவன் என்று சேரமன்னன் சிறப்பிக்கப் பெறுவதனைக் காணும்போது, சேரமாதேவி பல்வகை நலனும் நிறைவும் பாங்குறக் கொண்டு மிளிர்ந்தாள் என்பது அங்கை நெல்லிக் கனியெனப் புலனாகின்றது:

**பூணணிங் தெழிலிய வனைந்துவர லிளமுலை**
**மாண்வரி யல்குன் மலர்ந்த நோக்கின்**
**வேய்புரை பெழிலிய விளங்கிறைப் பணைத்தோட்**
**காமர் கடவுளு மாளுங் கற்பிற்**
**சேணாறு நறுநுதற் சேயிழை கணவ.**[76]

பிறிதொரு பாடலில் செல்வக் கடுங்கோ வாழியாதன், நாணம் நிறைந்து, பெரிய மடன் என்னும் குணம் நிலை பெற்று, கற்புநெறிக்கண்ணே தங்கின, மணம் கமழும் ஒளி நிறைந்த நெற்றியினையுடைய உயர்ந்தவட்குக் கணவன் என்று கபிலரால் பாராட்டப் பெற்றுள்ளான்:

75. திருமுருகாற்றுப்படை; 5.
76. பதிற்றுப்பத்து; 7; 5 : 6-10.

**பெண்மை சான்று பெருமட நிலை இக்**
**கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்**
**புரையோள் கணவ.**[77]

திருமகட்குரிய உருவும் பிற நலங்களும் பொருந்திப் பிறப்பொன்றினால் மட்டும் வேறுபட்ட நல்ல தோளினையும், ஒடுங்கிய சுருள் என்னும் பகுதியான கூந்தலினையும் உடையவள் என்று அரிசில் கிழார் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் இல்லக் கிழத்தியைப் பாராட்டியுள்ளார்:

**நலம்பெறு திருமணி கூட்டு நற்றோள்**
**ஒடுங்கீ ரோதி யொண்ணுதல்.**[78]

ஒன்பதாம் பத்துப் பாடிய பெருங்குன்றூர் கிழார் இளஞ்சேரல் இரும் பொறையிடம் ஒருகால் பின்வருமாறு மொழிந்தார்:

"இருவாட்சிப் பூக்களுடன் பச்சிலையைத் தொடுத்தணிந்து, மின்னலை உமிழ்ந்தாற் போன்ற ஒளி திகழும் அணிகளையுடைய தோழியர் கூட்டம் புடைசூழவுள்ள, தன் நிறம் மறையும்படியான வண்டு மொய்க்கும் கூந்தலும், முன் மயிரின் சுருள் தவழும் ஒளி பொருந்திய நெற்றியும், முறையே பூவாலும் ஒளியாலும் அழகு மிகுதிப் படுமாறு, வளைந்த குழையொடு பொருத நோக்கினையும், தன் பெருங்குணங்கட்கு ஏற்ப அமைந்த மென்மை வாய்ந்த சொல்லினையும், அழகிய முகத்தையும் மாட்சிமைப்பட்ட அணிகலன்களையுமுடைய அரிவையாகிய நின் தேவியைக் காண்பதற்காக ஒரு நாளேனும் நின்னுடைய குதிரை பூட்டிய தேரில் ஏறுவாயாக."

**பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து**
**மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத்**

---

77. பதிற்றுப்பத்து; 7; 10 : 14-16.
78. பதிற்றுப்பத்து; 8; 4 : 16-17.

தன்னிறங் கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதி யொண்ணுத லணிகொள
பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய வொருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்.[79]

இப்பகுதியில் அரசமாதேவியின் அழகு நலம் தோற்று தல் காணலாம்.

பெருங்குன்றூர் கிழாரும் கபிலர் போன்றே இளஞ்சேர லிரும்பொறையின் இல்லக்கிழத்தியின் மாண்புகளைப் புகன்று, பின் அத்தகு நல்லாளுக்குக் கணவனே என்று இளஞ்சேரலிரும்பொறையை விளித்துப் பாடியுள்ளார்.

"ஓவியத் தெழுதினாற் போன்ற உருவமைந்த நெடிய அரண்மனைக் கண்ணே கொல்லிப்பாவை போலும் அழகுத் திரட்சியமைந்த உரிமை மகளிரின் நடுவே, திசையெல்லாம் ஒளி விளங்கக் கரிய வானத்தே உயர்ந்து செல்லும் கதிரவன் போலப் பல காலம் விளங்கி வாழ்வாயாக!......... கற்புடைமையாலுண்டாகிய நல்ல புகழானது நெடுந் தொலைவு சென்று பரவிய செவ்விய இழைகளை யணிந் தாட்குக் கணவனானவனே! நீ நெடிது வாழ்வாயாக!"

ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்ப்
பாவை யன்ன மகளிர் நாப்பண்
.................................
சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ.[80]

தன் மனைவியின் கற்பு பிறரால் புகழப்படும் கற்பாதலின், அக் கற்பினை யுடையாட்குக் கணவன் என்ற வழி அரசனுக்குப் பெருமிதம் தோன்றுதல் காண்க.

பிறிதொரு பாடலிலும் அரச மாதேவியின் கற்பு மேம்படப் பேசப்பட்டுள்ளது. அரசனை வாழ்த்து முகத்தான் புலவர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

79. பதிற்றுப்பத்து; 9; 1 : 25-32.
80. பதிற்றுப்பத்து; 9; 8 : 28, 29-36.

"நின்மாட்டு அன்பாலொடுங்கிய மனம் குற்றப்படாது, கனவிலும் நின்னைவிட்டுப் பிரிய ஒருப்படாத உறை யுளொடு, தண்ணிதாகவுள்ள மயிர்ச்சாந்து தடவப்பட்டு நெய்ப்புப் புலராத கூந்தலையும் மணமகளிர் கற்பால் வழிபட்டு நோக்கி, பின்னரும் தன்னை நோக்கித் தம் வாழ் நாளெல்லையை யறியும் நோக்கத்துக்கேற்ப விளங்கும் ஒளியையுடைய அருந்ததி போலும் கற்பினையும், ஒளி பொருந்திய நெற்றியினையு முடைய அரிவையாகிய நின் மனைவியுடன் அழகுற விளங்கி நீ எஞ்ஞான்றும் நோயின்றி வாழ்வாயாக!"

..................... நின்மாட்டு
அடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
கனவினும் பிரியா வுறையுளொடு தண்ணெனத்
தகர நீவிய துவராக் கூந்தல்
வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையும் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே. [81]

இப் பகுதிகொண்டு அரசமாதேவியின் அழகுச் செவ்வியும் கற்பு மேம்பாடும் ஒருங்கே சிறந்து பொலி வதைக் காணலாம்.

ஒன்பதாம் பத்தின் இறுதிப் பாடலில் 'அரசமாதேவியின் கணவனாக விளங்கும் பேறு பெற்றவனே' என்று இளஞ் சேர லிரும்பொறை பாராட்டப் படுவதனைக் காணலாம்.

சேரமாதேவியின் அழகு நலம், செழுமையான பல வூர்களையுடைய வளமிக்க பல குளிர்ந்த வயல்களைக் கொண்ட காவிரியாற்றால் வளமுறப் படைக்கப்பட்ட நல்ல நாட்டுக் கவினுக்கு உவமிக்கப்படுகின்றது. தொழில் வளம் பொருந்திய சிலம்பினையும், அடக்கத்தைப்

---

81. பதிற்றுப்பத்து; 9; 9 : 13-20.

பொருளாகக் கொண்ட கொள்கையினையும், சினங் கொள்ளுத லில்லாத அறக் கற்பினையும், யாவரும் தெளிய விளங்கும் நல்ல புகழினையும், வண்டு வந்து மொய்க்கும் கூந்தலினையும், ஒள்ளிய தொடியையு முடையவளாக அரசனின் பேருந்தேவி பேசப்பட்டுள்ளாள். அத்தகு மங்கை நல்லாளுக்குக் கணவனே என்று இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர் கிழார் என்னும் சங்கத் தமிழ்ப் புலவர் பாராட்டுமொழி பகன்றுள்ளதனை,

செழும்பல விருந்த கொழும்பஃ றண்பனை
காவிரிப் படப்பை நன்னா டன்ன
வளங்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை
ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை
வண்டார் கூந்தல் ஒண்டொடி கணவ. [82]

இதுகாறும் கூறியவற்றால் சேரர்க்கு வாய்த்த வாழ்க்கைத் துணைவியரின் அழகு நலனும், அன்பு மாட்சியும், ஆறிய கற்பும், அடக்க மேம்பாடும், பண்பு நலனும், பலர்புகழ் சிறப்பும் நன்கு புலனாகக் காணலாம்.

### விறலியர்

விறல் என்றால் சத்துவம் என்று உரை யெழுதுவர் பேராசிரியர். விறலியர் என்றால் திறல் பட ஆடுவோர். என்பது பொருள். இவர்கள் அக்காலக் கலையுலகப் பெரு மக்களில் ஓர் அங்கம் ஆவர். இவர்களில் ஆண்கள் கூத்தர் என வழங்கப்படுவர். மன்னனையோ வள்ளலையோ நாடிச் சென்று தம் வறுமை நீங்க அவர்களைப் பாடிப் பரிசில் பெறுவர்.

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும். [83]

---

82. பதிற்றுப்பத்து; 9; 10 : 46-50.
83. தொல்; பொருளதிகாரம்: புறத்திணைஇயல். 36.

என்று தொல்காப்பியனார் விறலியாற்றுப் படைக்கு வழிவகுத்துள்ளார். தாம் பெற்ற பெருவளம் பிறரும் பெற வேண்டும் என்ற பெருநோக்கிலே செயல்பட்ட இவர்தம் நெஞ்சப்பாங்கு போற்றுதற்குரியதாகும். வளம் பெற்றவன் முன்னர்த் தான் உழன்ற வறுமைத் துன்பத்தை மறவாது, தற்போது வாட்டமுறுபவனுக்கு வளம் காண வழி சொல்வது என்பது உயரிய உள்ளத்தின் உயர் குணமே யன்றோ!

இம்முறையில் சிறப்புப்பெறும் விறலியர் பதிற்றுப் பத்துள் பத்துப் பாடல்களில்[84] பேசப்பட்டுள்ளனர்.

விறலியர் இயற்கையில் நல்ல அழகு சான்றவர் ஆவர். உடல் வனப்பு மிகுந்த அவர்கள் செயற்கைப் புனைவும் கொண்டு நலமுறத் திகழ்ந்தனர் என்பதனை,

> **இருள்வண ரொலிவரும் புரியவிர் ஐம்பால்**
> **ஏந்துகோட் டல்குன் முகிழ்நகை மடவரற்**
> **கூந்தல் விறலியர்**[85]

என வரூஉம் பகுதியினால் அறியலாம். இருண்டு கடைகுழன்று தழைத்து முடியவிழ்ந்து ஐவகையாய் முடிக்கப் படும் கூந்தலையும், உயர்ந்த பக்கத்தையுடைய அல்குலையும், முகிழ்த்த முறுவலையும், இளமைத்தன்மையினையும் உடையவர்களாக விறலியர் இப்பாட்டிற் சித்திரிக்கப்பட்டுள்ளனர்.

இவ் விறலியர் ஆடுகின்ற சிறையையுடைய கின்னரப் பறவையை இசையால் வென்ற யாழ் நரம்பின் இசையுடன் ஒன்றாய் இயைந்து செல்லும் இனிய மிடற்றால் பாடிப்

---

84. (1) 2; 8 : 4-6. (2) 5; 3 : 21-22. (3) 5; 7: 6-8 (4) 5; 9 : 2. (5) 6; 1 : 10, 11; 19-20. (6) 6; 4 : 3-6. (7) 6; 7 : 5-6. (8) 6; 8 : 1. (9) 7; 1 : 16-18. (10) 8; 8 : 1-6.

85. பதிற்றுப் பத்து; 2; 8 : 4-6.

பிடியானைகள் பலவற்றைப் பரிசிலாகப் பெறுவதாகப் பரணர் கூறியுள்ளார்:

**ஆடுசிறை யறுத்த நரம்புசேர் இன்குரற்**
**பாடு விறலியர் பல்பிடி பெறுக.**[86]

மேலும் இவ்விறலியர், மலை மேலிருந்து விழும் அருவி போல மாடங்களின் மேலிடத்திலிருந்து காற்றால் அலைக்கப்படும் கொடிகள் அசையும் தெவிடத்தே நெய் சொரியப்படும் விளக்குச் சுரையின்கண் எரிக்கப்படும் நெய் வழியுமாறு பெய்து நிரப்புதலால் கால் விளக்கினது பருத்த திரியானது பேரொளி காட்டி எரியா நிற்க, நல்ல நெற்றியையுடைய விறலியர் கூத்தாடுகின்றதாகப் பரணர் பிறிதொரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

அசைகின்ற கூந்தலையும் அஞ்சுகின்ற இயல்பினையுமுடையவர் விறலியர் என்று விறலியரைப் பரணர் இன்னொரு பாடலில் கிளத்தியுள்ளார்:

**துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்.**[87]

காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்னும் பெண்பாற் புலவர் நடந்தும் அசைந்தும் ஆடலியற்றும் விறலியைக் குறிப்பிட்டுள்ளார். ஒளி திகழும் நெற்றியினையும், மடப்பம் பொருந்திய பார்வையினையும், மிகுந்த ஒளி விளங்கும் பற்களையும், அமுதம் போன்ற சொற்களைச் சொல்லும் சிவந்த வாயினையும், அசைந்த நடையினையுமுடைய விறலியர் என்று அவர் விறலியரை வருணித்துள்ளார்:

**இயலின ளொல்கின ளாடு மடமகள்**
**வெறியுறு நுடக்கம் போலத் தோன்றி**
**... .......................................**

---

86. பதிற்றுப் பத்து; 5; 3 : 21-22.
87. பதிற்றுப் பத்து; 5; 9 : 2.

**சுடர்நுதன் மடநோக்கின்**
**வாணகை யிலங்கெயிற்**
**றமிழ்துபொதி துவர்வாய் அசைநடை விறலியர்.**

அவரே பிறிதொரு பாடலில், அகன்ற சந்து பொருந்திய வளையினையும், மூங்கில் போன்ற பருத்த தோளினையும், குளிர்ந்த கண்களையும், உயர்ந்தெழு தலையும், தொய்யில் எழுதப்பட்டு வருதலுமுடைய இளமுலையினையும், பூத்தொழில் செய்யப்பட்ட உடையணிந்த அல்குலையும், வண்டு பாய்ந்தொலிக்கும் கூந்தலையும், மின்னுகின்ற இழையினையுமுடையவர்களாக விறலியரை வருணித்துள்ளார்.

**வீங்கிறைத் தடைஇய வமைமருள் பணைத்தோள்;**
**ஏந்தெழின் மழைக்கண் வனைந்துவர லிளமுலைப்**
**பூந்துகி லல்குற் றேம்பாய் கூந்தல்**
**மின்னிழை விறலியர்.**[89]

இவர்கள் அரசனின் மறப்புகழைப் பாடுவதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.[90]

சிலவாகிய வளைகளை யணிதலும், மென்மையான நிலத்திடத்தவாகிய வழியிலே சிறிய காலடிகளால் நடந்து செல்வதும் விறலியின் செயலாகப் பேசப்பட்டுள்ளது:

**மெல்லிய வருந்திற் சீறடி யொதுங்கிச்**
**செல்லா மோதில் சில்வளை விறலி.**[91]

விறலியர் செயல் ஆடுவது என்பதும், பாணர் பொருநர் செயல் பாடுவது என்பதும், இவ்விரு செயல்களும் பரிசிலின் பொருட்டே அமைவன என்பதும் புலனாகின்றன:

---

88. பதிற்றுப்பத்து; 6; 1 : 10-11 & 19-21.
89. பதிற்றுப்பத்து; 6; 4 : 3-6.
90. பதிற்றுப்பத்து; 6; 4 : 12-17.
91. பதிற்றுப்பத்து; 6; 7 : 5-6.

**ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்.**[92]

நிலாப் போன்று வெண்மையாக ஒளிவிடும் வேலின் வென்றியினைப் பாடியாடுவதாகவும், முழவிசைக் கேற்பத் தாளம் அறுத்திசைத்துப் பாடியாடுமிடம் விழாக்களம் போன்ற மன்னனின் திருவோலக்க மன்றம் என்றும் கபிலர் தம் பாடலொன்றில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்:

**நிலவி னன்ன வெள்வேல் பாடினி**
**முழவிற் போக்கிய வெண்கை**
**விழவின் அன்னநின் கலிமகி ழானே.**[93]

பெருஞ்சேரல் இரும்பொறையிடம் ஆற்றுப்படுத்தி அரிசில்கிழார் ஒரு பாடல்[94] பாடியுள்ளார். அப்பாடலில், ஆடுமிடத்து வளை பலவாக இருந்தால் அவை ஒன்றனோடு ஒன்று மோதி உடைய ஏதுவாக இருத்தலின் விறல்படப் பாடியாடு மகளான விறலி சில்வளையே அணிதல் குறித்து 'சில்வளை விறலி' என அழைத்துள்ளமையினைக் காணலாம்.

இவ்வாறு பத்துப் பாடல்களில் விறலியரின் வனப்பும் செயலும் பதிற்றுப் பத்துள் விளங்க உரைக்கப்பட்டுள்ளன.

## கோடியர்

கோடியர் என்போர் கூத்தராவர். இவர்கள் விழாக் காலங்களில் கூத்தர் ஊர்க்கண் முழவோசையினை முழக்க, அம் முழவோசையின் தாளத்திற்கேற்ப வீரர் கூடி ஆடுகின்ற ஒரு மரபான கேளிக்கை நிகழ்ச்சி கிளத்தப் பட்டுள்ளது:

**விழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்**
**கோடியர் முழவின் முன்ன ராடல்**
**வல்லா னல்லன்.**[95]

---

92. பதிற்றுப்பத்து; 6; 8 : 1.
93. பதிற்றுப்பத்து; 7; 1 : 16-18.
94. பதிற்றுப்பத்து; 8; 8 : 1-6.
95. பதிற்றுப்பத்து: 6; 6 : 1-3.

## ஆரியர்

ஆரியர் ஒரே ஒரு பாடலிற் குறிப்பிடப் பெற்றுள்ளனர். இவர்கள் இமயமலைச் சாரலில் நிறைந்து வாழ்வதாக இயம்பப்பட்டுள்ளனர்:

**ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்.**[96]

## அகவலன்

அகவலன் எனபபடுவோன் பாணன் ஆவன். அகவலனைப் பற்றிய குறிப்பும் ஒரே பாடலில் தான் வந்துள்ளது. இவர்கள் கணுக்களையுடைய நுண்ணிய கோலை ஏந்திக்கொண்டு, ஊர் மன்றத்தேயிருந்து பாடற்குரிய தலைவன் புகழ்களை யெண்ணி, தெருக்களின் இருமருங்கும் சென்று தலைவன் பொருது வென்ற போர்க்கள வெற்றியை வாழ்த்திப் பாடிக் குதிரைகளைப் பரிசிலாகப் பெறுவர் என்ற செய்தி பரணர் பாட்டால் புலனாகின்றது:

**மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்**
**நிண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்**
**அகவலன் பெறுக மாவே.**[97]

## அந்தணர்

அந்தணரைப் பற்றியும் ஒரே ஒரு பாடலில்தான் குறிப்புக் காணக் கிடக்கிறது. இவர்கள் மறையோதுதல், வேள்வி செய்தல், இவை இரண்டனையும் பிறரைச் செய்வித்தல், வறியவர்க்கொன்று வழங்கல், தமக்கு ஒருவர் கொடுத்ததை ஏற்றுக் கொள்ளுதல் என்ற தொழில் ஆறனையும் செய்தொழுகி, அற நூற் பயனை விரும்பி வாழ்வதாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர்:

---

96. பதிற்றுப்பத்து; 2; 1 : 23.
97. பதிற்றுப்பத்து; 5; 3 : 26-28.

ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றலென்று ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி.[98]

## இசை

பதிற்றுப்பத்தில் ஐந்து இடங்களில்[99] இசை பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. முத்தமிழில் ஒரு பகுப்பான இசைத்தமிழை அந்நாளில் பாணரும் பாடினியும் கூத்தரும் பொருநரும் வளர்த்தனர்; வேந்தர், குறுநில மன்னர்கள், மக்கள் முதலியோர் ஆதரவு அவர்கட்கிருந்தது. யாழ் பற்றிய குறிப்பும் இவண் இடம் பெற்றிலங்கக் காணலாம்.

இசை எழும்புவதற்கு நரம்புக் கட்டு முறுக்குடைய தாயிருக்க வேண்டும். இனிய இசையினை வளைவமைந்த கோட்டினையுடைய நல்ல யாழ் எழுப்புகின்றது. ஏவல் இளையர் அவ்வியாழினைச் சுமந்து வருகின்றனர். பண்ணொடு பொருந்துமாறு அமைந்த முழாவும், ஒருகண் மாக்கிணையும், பிற இசைக் கருவிகளும், மூங்கிற்கணுவை யிடைவிட்டறுத்துச் செய்யப்படும் பெருவங்கியம் என்னும் இசைக் கருவியும் ஒருங்கே சேர்த்து ஒருபுறத்தே கட்டிய காவடியின் மறுபக்கத்தே பாடற்றுறைக்கு வேண்டிய கருவியெல்லாம் கூடின பொதியினைச் சுமந்தவராய் இசைத்துறையினைக் கற்று வல்லமை பெற்ற இளைய வர்கள் தாம் செல்லும் வழியில் தீங்கு வாராமைக்கு வேண்டிக் கடவுளைப் பரவிச் செல்கின்றனர்:

புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுனிய
வணரமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவும்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்
கைவல் இளையர் கடவுட் பழிச்ச.[100]

---

98. பதிற்றுப்பத்து; 3; 4 : 6-8.
99. பதிற்றுப்பத்து; 5; 1 : 1-6; 5; 6 : 5-6; 6; 7 : 7-9; 7; 5 : 14-15; 7; 6 : 1-3;
100. பதிற்றுப்பத்து; 5; 1 : 1-6.

இழையினையும் குழையினையும் மாலையினையும் அணிந்து முன் கையில் தொடியினைச் செறித்து, மணி மாலை கிடந்து விளங்கும் மார்பும், வண்டு மொய்க்கும் கூந்தலும் உடைய பாடல் மகளிர், நரப்புத் தொடையினையுடைய பேரியாழின்கண் பாலைப் பண்ணையமைத்து உழிஞை வெற்றியை உளம் உவந்து பாடுகின்றனர்:

**இழையர் குழையர் நறுந்தண் மாலையர்**
**சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்**
**திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்**
**வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்**
**தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்**
**பணியா மரபின் உழிஞை பாட.**[101]

காக்கைபாடினியார் நச்செள்ளையார் தழிஞ்சித் துறையைப் பாலைப் பண்ணமைத்துப் புகழ்ந்து பாடும் பாணரைக் குறிப்பிட்டுள்ளார். பாணர் கையில் பேரியாழ் உளது. தாழக் கட்டிய நரம்பினையுடைய அப்பேரியாழைக் கண்ட அளவிலேயே கைவிரலால் வாசிக்க வேண்டும் என்னும் வேட்கை தோன்றுகின்றது. பேரியாழில் பாலைப் பண் எழுப்பப்படுகின்றது. குரல் என்னும் நரம்பொடு புணர்த்த இனிய இசையில் தழிஞ்சி யென்னும் புறத்துறைப் பொருளாக அமைந்த பாட்டினைப் பாணர்கள் பாடுகின்றனர்:

**பாணர் கையது பணிதொடை நரம்பின்**
**விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்**
**குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி.**[102]

ஏழாம் பத்திலும் பாலை யாழே பேசப்படுகின்றது. இனிய இசை தொடுத்தலையுடைய நரம்பினால் அமைந்த பாலை யாழை இயக்குதலில் வல்லவனொருவன் அழுகைச் சுவைக்குரிய உறுப்பினையுடைய பாலைப்பண்கள் எல்லா

---

101. பதிற்றுப்பத்து; 6 5; : 1-6.
102. பதிற்றுப்பத்து; 6; 7 : 7-9.

வற்றையும் ஒவ்வொன்றாக மாறிமாறி யிசைத்தாற்போலச் சேறுண்டு பண்ணும் மழைபோலக் களிப்பு மிகுவிக்கும் கள் செல்வக் கடுங்கோ வாழியாதனால் இரவலர்க்கு இனிதே வழங்கப்படுகின்றது என்பதனைக் கபிலர் குறிப்பிட்டுள்ளார்:

> **தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்**
> **பையு ளுறுப்பிற் பண்ணுப் பெயர்ந்தாங்குச்**
> **சேறு செய் மாரியி னளிக்கும் நின்**
> **சாறுபடு திருவி னனைமகி ழானே.**[103]

கபிலரின் பிறிதொரு பாடலிலும் பாலைப் பண்ணைப் பற்றிய செய்தியினையே காண்கிறோம்.

வளைந்த கரிய தண்டினையுடைய, இனிய இசைக்குரிய நரம்புகளால் நிறைந்த, இசையின்பத்திற்கு இடமாகவுள்ள பேரியாழிடத்தே பாலைப்பண்ணை யெழுப்பிச் செல்வக் கடுங்கோ வாழியாதனை நினைந்து பரிசில் நோக்கோடு முதுவாய் இரவலன் செல்வதாகக் குறிப்பிட்டுள்ளார்:

> **வாங்கிரு மருப்பிற் றீந்தொடை பழுனிய**
> **இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப்**
> **படர்ந்தனை செல்லு முதுவா யிரவல.**[104]

இவ்வாறு இசைபற்றிய குறிப்புகள் வருமிடங்களில் பெரும்பகுதியும் பாலைப்பண்ணே குறிக்கப் பெற்றிருத்தல் ஈண்டு நோக்கற்குரியதாகும்.

### துணங்கைக் கூத்து

இதுகாறும் இசைபற்றிக் கண்டோம். முத்தமிழின் பிறிதொரு பகுதியான கூத்து குறித்துப் பதிற்றுப்பத்தில் அமைந்துள்ள குறிப்புகளைக் காண்போம். துணங்கைக் கூத்தைப் பற்றிய செய்திகள் ஐந்து பாடல்களில்

---

103. பதிற்றுப்பத்து; 7; 5 : 14-17.
104. பதிற்றுப்பத்து; 7; 6 : 1-3.

வந்துள்ளன. துணங்கை என்பது மகளிர் கைபிணைத் தாடும் ஆடல் என்று அடியார்க்குநல்லார் குறிப்பிடுவர்.

இளைய மகளிர் கூடி ஒலி மிக்க துணங்கைக் கூத்தயர்வர். அப்போது அவர்கள் அணிந்துள்ள தழை யுடையினின்றும் உதிர்ந்த ஆம்பற்பூவினை வளைந்த தலையையுடைய முதிய பசுக்கள் மேய்கின்ற இடங்களாக அவர்கள் துணங்கைக் கூத்தயர்ந்த இடங்கள் ஆயின என்று குமட்டூர்க் கண்ணனார் குறிப்பிட்டுள்ளார்:

**கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்**
**வளைதலை மூதா வாம்ப லார்நவும்.**[105]

அரண்களின் கதவுகளைக் காக்கும் வன்மை மிகுந்த கணைய மரத்தை யொக்கும் பகைவர் நாடுகளைப் போரிலே பெறும் வலியமைந்த திண்ணிய தோள்களை உயரத் தூக்கி வீசி, பிணங்கள் குவிந்து உயர்ந்து கிடக்கும் போர்க்களத்திலே முன்னே பல காலங்களிற் பன்முறை துணங்கைக் கூத்தைச் சேரன் செங்குட்டுவன் நிகழ்த்தினான் என்று பரணரால் குறிப்பிடப் பெறுகின்றான்:

**நாடுகெழு தாயத்து நனந்தலை யருப்பத்துக்**
**கதவங் காக்குங் கணையெழு வன்ன**
**நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப்**
**பிணம் பிறங் கழுவத்துத் துணங்கை யாடி.**[106]

ஆறாம்பத்தில் காக்கைபாடினியார் நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கும் அவனுடைய மனைவிக்கும் இடையே ஏற்பட்ட ஊடலை விளக்குமுகத் தான் ஊடல் தோன்றியதற்குரிய காரணமே துணங்கைக் கூத்தால் வந்த வினையென்று குறிப்பிட்டுள்ளார்.

ஒளிர்கின்ற கால் விளக்கின் திரு விளங்கும் ஒளியிலே முழவு முழங்க ஆடும் துணங்கைக் கூத்தின்கண் கைபிணைந்

105. பதிற்றுப்பத்து; 2; 3 : 5-6.
106. பதிற்றுப்பத்து; 5; 2 : 9-12.

தாடும் மகளிர்க்குக் கைகோத்துக் கொள்ளும் புணையாகச் சிலைத்தலையுடைய வலிய ஏற்றினைப் போல முதற்கை கொடுத்து ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் செறிந்து சென்றமையால் அவன் கோப்பெருந்தேவி அவன்பால் ஊடல் கொண்டாள் என்ற செய்தி நாடகப் பாங்கிலே காக்கைபாடினியார் நச்செள்ளையாரால் நன்கு விளக்கப் பெற்றிருக்கக் காணலாம். அப்பாடற் பகுதி வருமாறு:

**சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து**
**முழாவுமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாகச்**
**சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ**
**நளிந்தனை வருத லுடன்றன ளாகி.**[107]

போரில் வெற்றி பெற்ற வேந்தன் வீரருடன் துணங்கை யாடுதல் மரபு. இம்முறையில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் போர்க்களத்திற் பகைவருடன் பொறாதுவென்று வீரருடன் கைபிணைந்தாடும் துணங்கைக் கூத்தாடியதாகக் காக்கைபாடினியார் குறிப்பிட்டுள்ளார்:

**ஓடாப் பூட்கை மறவர் மிடறப**
**இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்பக்**
**குருதி பனிற்றும் புலவுக்களத் தோனே**
**துணங்கை யாடிய வலம்படு கோமான்.**[108]

'வென்றாடு துணங்கை' என்ற தலைப்பிலேயே எட்டாம் பத்தில் ஒரு பாடல் அமைந்துள்ளது, இப்பாட்டும் போர்க்களத்தே வீரர் ஆடும் துணங்கையைக் குறிப்பிடு கின்றது. பகைப்படையிலுள்ள வீரர் அழிந்தோடவும், பகை வேந்தர்கள் போர்க்களத்தில் பட்டு வீழவும் அப் பகைவரைக் கொன்று பின்னர்த் தோளையுயர்த்திக் கை வீசியாடிய வென்றாடு துணங்கையினையுடையராய்ச் சேரனின் வீரர் துலங்கினர் என்று அரிசில் கிழார் மொழிவர்:

---

107. பதிற்றுப்பத்து; 6; 2 : 13-16.
108. பதிற்றுப்பத்து; 6; 7 : 1-4.

**மன்பதை பெயர வரசுகளத் தொழியக்**
**கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை.**[109]

இதுகாறும் கூறியவற்றால் துணங்கைக் கூத்து இரு வகைப்படும் என்பதும், மகளிர் தம்முள்ளே கைபிணைந் தாடுவது ஒன்றும், போர்க்களத்தே வெற்றி பெற்ற வேந்தன் தன் வீரருடன் கைபிணைந்தாடுவது பிறிதொன்று என்றும் தெரிய வருகின்றன.

## இமயம்

இமயமலை இரண்டு பாடல்களில் குறிக்கப்பெற்றிருக் கின்றது.

முருக்க மரங்கள் செறிந்த மலையிடத்தே இரவில் கண் வளரும் கவரிமான்கள், பகற்போதில் தாம் மேய்ந்த நரந்தம் புற்களையும் அவை வளர்ந்திருக்கும் பரந்து விளங்கும் அருவியோரங்களையும் கனவிற் கண்டு மகிழ்தற்கு இடமான, ஆரியர் நிறைந்து வாழும் பெரிய புகழையுடைய இமயம் என்று இமயமலை இரண்டாம் பத்துள் முதற் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது:

**கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி**
**பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும்**
**ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்.**[110]

முனிவர்கள் இருந்து தவஞ் செய்யும் இடங்கள் — கடவுளர் விரும்பி யுறையும் இடங்கள் — இவற்றைக் கொண்டுள்ள கற்களாலுயர்ந்த நெடிய மலை இமயமலை என்பதும், அம்மலை தமிழ் நாட்டின் வடபாலுள்ளது என்ற குறிப்பும் பரணர் பாட்டில் இடம் பெற்றுள்ளன:

**கடவுள் நிலை இய கல்லோங்கு நெடுவரை**
**வடதிசை யெல்லை யிமய மாக.**[111]

---

109. பதிற்றுப்பத்து; 8; 7 : 3-4.
110. பதிற்றுப்பத்து; 2; 1 : 21-23.
111. பதிற்றுப்பத்து; 5; 3 : 6-7.

### குமரி

இமயமலை வடவெல்லையாகக் குறிப்பிடப் பெறும் இடங்களில் குமரியும் உடன் தமிழ் நாட்டின் தென்னெல்லையாகக் குறிப்பிடப் பெறுகின்றது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மாற்றார் மறம் சாய்க்கும் மறமாண்பினைக் குறிப்பிடவந்த குமட்டூர்க் கண்ணனார் இமயமலை தொடங்கித் தெற்கின் கண்ணுள்ள குமரி வரை அமைந்து கிடந்த நிலப்பரப்பில் ஆளும் மன்னர்களில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வீரமேம்பாட்டில் இணையற்றவன் என்று குறிப்பிடக் காண்கிறோம்:

**ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்**
**தென்னங் குமரியொ டாயிடை**
**மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.**[112]

சேரன் செங்குட்டுவனின் வீரத்தினை விளங்கப் பாட வந்த பரணர், இமயத்தினை வடதிசை எல்லையாகவும், குமரியினைத் தென் திசை எல்லையாகவும் கொண்ட நிலப் பரப்பில் வாழும் பகையரசர்கள் அனைவரையும் முரசு முழங்கிய போரிலே புகழமைந்த அவ்வரசர்களின் நாட்டை வென்று, அவ்வாறு புகழ்தற்கேதுவாகிய பழைய நலத்தைக் கெடுத்தான் என்று குறிப்பிட்டுள்ளார்:

**வடதிசை யெல்லை யிமய மாகத்**
**தென்னங் குமரியொ டாயிடை யரசர்**
**முரசுடைப் பெருஞ்சமம் ததைய வார்ப்பெழச்**
**சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த**
**போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ.**[113]

### கடவுளர் முருகன்

இரண்டாம் பத்தின் முதற் பாடலிலேயே முருகக் கடவுள் குறிப்பிடப் பெறுகின்றார் பாட்டின் தொடக்கமே,

---

112. பதிற்றுப்பத்து; 2; 1 : 23-25.
113. பதிற்றுப்பத்து; 5; 3 : 7-11.

ஏன் பதிற்றுப்பத்தின் தொடக்கமே முருகப்பெருமான் சூரனைக் கொன்ற வரலாறாக அமைந்துள்ளது. மலை போல் எழும் வெள்ளிய அலைகளும், காற்றால் அலைக்கப் படும் நீரும் மிக்க பெரிய இடப் பரப்பினையுமுடைய கரிய கடலுக்குள் சென்று பிறரை வருத்துதலையே யியல்பாக வுடைய அவுணர்கள் தமக்கு அரணாக நின்று பாதுகாவலைச் செய்யும் சூரவன்மாவினுடைய மாமரத்தினை வேருடன் வெட்டிக் குறைத்த மிக்க புகழும் கடிய சினமும் விறலு முடைய செவ்வேள் பிணிமுகமென்னும் யானையின் மேல் ஏறிச் சிறப்பயர்ந்த செம்மைச் செயல் திறம்படக் கூறப் பட்டுள்ளது:

> வரைமருள் புணரி வான்பிசி ருடைய
> வளியாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
> நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
> அணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ்
> சூருடை முழுமுதல் தடிந்த பேரிசை
> கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு.[114]

எனவே பதிற்றுப்பத்துக் காலத்திலேயே முருகன் பெருமை உணரப்பட்ட பான்மையை அறியலாம்.

## திருமால்

நான்காம்பத்தின் ஒரு பாடலில் திருமால் வழிபாடு விளங்க உரைக்கப்பட்டுள்ளது.

கடல் சூழ்ந்த உலகில் வாழும் மக்கள் தம் தலைமேற் கைகூப்பி ஒருங்கு கூடிச் செய்யும் பேராரவாரம் எட்டுத் திசையிலும் சென்று எதிரொலித்தது. தெளிந்த ஓசையுடன் மணி இயக்கப்பட்டு அவ் மணியோசை கல்லென்ற ஓசை யினை எழுப்புகின்றது. இம் மணியோசையினைக் கேட்டு உண்ணா நோன்பினை மேற்கொண்ட விரதியர் குளிர்ந்த நீர்த் துறைக்குச் சென்று படிந்து நீராடி, திருவீற்றிருக்கும்

114. பதிற்றுப்பத்து; 2; 1 : 1-6.

மார்பின்கண் வ்ண்டு மொய்த்து விளங்கும் கொத்துக் களாற் றொடுத்த துளசி மாலையை யணிந்து, காண்போர் கண் கூசுமாறு ஒளிதிகழும் ஆழிப்படையினைக் கையிலே கொண்டு விளங்கும் செல்வனான திருமாலின் செவ்விய அடியில் விழுந்து வணங்கி, நெஞ்சு நிறைந்த மகிழ்ச்சி யுடையவராய் அவரவர் தாம்தாம் இனி துறையும் ஊர் கட்குத் திரும்பிச் செல்கின்றனர்:

**குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த**
**மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்**
**கைசுமந் தலறும் பூசன் மாதிரத்து**
**நால்வேறு நனந்தலை யொருங்கெழுந் தொலிப்பத்**
**தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென**
**உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி**
**வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்**
**கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்**
**அலங்கற் செல்வன் சேவடி பரவி**
**நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதி பெயர.** [115]

இப்பாடலில் திருமால் விரும்பி மார்பிலணியும் துளசிக் கொத்து குறிப்பிடப் பெற்றிருப்பதால் இப்பாட்டின் பெயரும் 'கமழ்குரல் துழாய்' ஆயிற்று "தனித்தனிப் பூக்களாக எடுத்துத் தொடுக்கப்படாது கொத்துக் கொத்தாக வைத்துத் தொடுக்கப்படும் சிறப்பும், மிகச் சிறிதாகிய தன்னகத்தும் தன்னைச் சூழ்ந்திருக்கும் இலைகளி னகத்தும் ஒரொப்ப மணங்கமழும் மாண்பு முடைய துழாயை **கமழ்குரற்றுழாய்** எனச் சிறப்பித்த செம்மை கருதி, இப்பாட்டிற்கு இது பெயராயிற்று" என்பர். [116] "நாறாத பூவுடையதனை மிக நாறுவதொன்று போலச் சாதி பற்றிச் சொன்ன சொற் சிறப்பான் இதற்குக்

---

115. பதிற்றுப் பத்து; 4; 1 : 1-10.
116. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை. பதிற்றுப் பத்து மூலமும் உரையும். ப. 136.

கமழ்குரற் றுழாயென்று பெயராயிற்று'" என்பர் பதிற்றுப் பத்தின் பழையவுரைகாரர். இங்குக் குறிப்பிடப் பெற்றிருக்கும் செல்வன், 'திருவனந்தபுரத்துத் திருமால்' என்றும் குறிப்பிடுவர்.

## பேய்

பேய் பற்றிய சிந்தனையும் சங்க காலத்தே இடம் பெற்றிருக்கக் காணலாம். பேய் மகளைப் பற்றிய குறிப்பு இரண்டு பாடல்களில் வந்துள்ளது.

நல்ல வளம் செறிந்த நன் செய் நிலங்கள் பகைவரால் பாழ் செய்யப்பட்டவுடன் பொலிவற்றுத் தோன்றுகின்றன. அங்கு முறுக்கியது போலும் காயையுடைய விடத்தேரை மரங்களும், கரிய உடையென்னும் மரங்களும் நெடிது வளர்ந்தோங்குகின்றன. அப் பாழிடங்களில் தலைமயிர் காய்ந்து செம்பட்டையாய் இருபிளவாய் நிமிர்ந்து நிற்கும் தலையினைக் கொண்ட பேய்மகள் கழுதையின் மேல் ஊர்ந்து திரிகின்றாள்.

> **நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்**
> **விரிபூங் கரும்பின் கழனி புல் லெனத்**
> **திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்**
> **கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க**
> **ஊரிய நெருஞ்சி நீறாடு பறந்தலை.** [117]

போரில் வீரர் பொருது போர்க்களத்தே வீழ்ந்து படுகின்றனர். அங்குப் பெரிய சிறகுகளையுடைய பருந்துகள் பிணங்களின் குருதியையுண்ண வட்டமிட்டுப் பறக்கின்றன, தலை வெட்டுப்பட்டுக் குறையுடலாக நிற்கும் முண்டமாக நிற்கும் சதைப் பொதியினைத் தின்பதற்கு உலறிய தலையும், பிறழ் பல்லும், பேழ் வாயும், சுழல் விழியும், சூர்த்த நோக்கும், பிணர் வயிறும் கொண்ட அழகிய வடிவில்லாத பேய்மகள் காண்பார்க்குப் பேரச்சத்தினைத் தோற்றுவித்து நெஞ்சு நோவச் செய்கின்றது.

---

117. பதிற்றுப் பத்து : 2; 3 : 12-16.

**அமர்க்கண் அமைந்த அவிர்நிணப் பரப்பிற்**
**குழூஉச்சிறை யெருவை குருதி யாரத்**
**தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொ**
**டுருவில் பேய்மகள் கவலை கவற்ற.** [118]

இவ்விருபாட்டானும் பேய்மகளின் அஞ்சத்தக்க தோற்றமும், அருவருக்கத்தக்க செயலும் கூறப்பட்டன.

## வான சாத்திர அறிவு

நம் முன்னோர் அறிவில் மேம்பட்டவர்கள். அந் நாளிலேயே வான சாத்திர அறிவு வாய்க்கப்பெற்றிருந்தனர். புறநானூற்றின் சில பாடல்களில் நம் முந்தையோரின் வான சாத்திர அறிவு கூறப்பட்டிருக்கக் காணலாம். பதிற்றுப்பத்துள்ளும் மூன்று பாடல்களில்[119] வான சாத்திரக் குறிப்புகள் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

செவ்வாய் என்னும் கோளும் வெள்ளி என்னும் கோளும் சேர்ந்தால் மழை பெய்யாது என்ற செய்தி ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. செவ்வாய் சென்றவிடத்து வெள்ளி செல்லாமையால் வேண்டும் புலங்களில் வேண்டுங் காலங்களில் மழை பொழிகின்றது என்ற குறிப்பு,

**அழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது**
**மழைவேண்டு புலத்து மாரி நிற்ப**[120]

என்ற பாடற் பகுதியான் விளங்குகின்றது.

பிற கோளினும் நாளினும் வெள்ளி மிக்கவொளியுடைய கோளாகும். இக்கோள் வானத்தில் நேர் கிழக்கே தோன்றாமல் சிறிது வடக்கே ஒதுங்கித் தாழ்ந்து விளங்குகின்றது. மழை வளந்தரும் கோள்களில் அதுவே தலைமை

---

118. பதிற்றுப்பத்து ; 7; 7 : 8-11.
119. பதிற்றுப்பத்து ; 2: 3 : 25-26 2; 3; 4 : 23-25 3. 7; 9 : 13-17.
120. பதிற்றுப்பத்து ; 2; 3 : 25-26.

பெற்ற கோளாகும். ஆயினும் ஏனைக் கோள்களும் கூடி யிருந்தாலன்றி மழை வளம் நன்கு சிறவாது. இக்கருத்தினை உள்ளடக்கிய பாடற்பகுதி வருமாறு:

**வயங்குகதிர் விரிந்து வானகஞ் சுடர்வர**
**வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி**
**பயங்கெழு பொழுதோ டாநிய நிற்ப.**[121]

வெள்ளி மற்றக் கோள்களுடன் கூடி நின்று மழை பொழியா நின்ற சிறப்பால் இப்பாடலுக்குச் 'சீர்சால் வெள்ளி' என்ற பெயர் அமைந்தது.

நிலத்தில் மிகுந்த விளைபொருள்கள் விளைய, ஞாயிற்றின் வெம்மை தணிந்து தண்மை நிலவ, உலகிற்கு நல்ல பயனைச் செய்யும் வெள்ளியென்னும் கோள் மழைக்குக் காரணமாகிய ஏனை நாட்கோளுடனே சென்று நிற்ப, வானத்தில் மழை முகில்கள் நிரம்பப் பரவி நல்ல மழையைப் பெய்வது காரணமாக நல்ல வளம் நாட்டில் நிறையச் செல்வக்கடுங்கோ வாழியாதன் நாடு துலங்கு வதாகக் கபிலர் பெருமான் பாடுவர்:

**நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப்**
**பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப**
**விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர**
**நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த.**[122]

வானத்தையும் அளந்து கண்ட அறிவு நம் முன்னோ ருடையது என்று கண்டு வியக்கத் தோன்றுகின்றது.

**வானமளந்து மளந்த வண்டமிழ் வாழியவே**
என்று பாரதியார் பொருத்தமுறப் பாடினார்.

## கடல் வாணிகச் சிறப்பு

தமிழ்நாடு பண்டு கடல் கடந்த நாடுகளோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. எகிப்து, ரோம், சால்டியா

---

121. பதிற்றுப்பத்து; 3; 4 : 23-25.
122. பதிற்றுப்பத்து; 7; 9 : 13-16.

முதலிய நாடுகளோடும், சீனப் பேரரசுடனும், ஜாவா, சுமத்ரா முதலிய தீவுகளுடனும் தமிழ்நாடு வாணிபப் பொருள்களை இறக்குமதி ஏற்றுமதி செய்து வந்தது. பதிற்றுப்பத்தின் ஒரு பாடலில் இத்தகு வாணிகத்தைப் பற்றிய சிறு குறிப்பு இடம் பெற்றுள்ளது. பெருங்கடலைக் கடந்து சென்று மீளுதலால் பழுதுற்ற மரக்கலத்தின் பழுது போக்கி முன்போல வலியுடைத்தாக்கும் கடல் வாணிகர் என்ற குறிப்பு, கடல் வாணிகச் சிறப்பினை விளக்குவதாக உள்ளது:

**பெருங்கடல் நீந்திய மரம்வலி யுறுக்கும்**
**பண்ணிய விலைஞர்.**[123]

## பழக்கவழக்கங்கள்

### கள்குடி

பழந்தமிழரிடையே கள் குடிக்கும் வழக்கம் இருந்ததாகச் சங்க இலக்கியங்களால் அறியலாம். கள் குடித்து மகிழ்தல் அந்நாளில் ஒரு சிறப்பாகக் கருதப்பட்டது. பகைப் புலத்தில் கைப்பற்றிய யானையின் வெண்கோட்டினை எடுத்துக் கொண்டு, கள் விற்கும் கொடியசையும் கடைவீதி சென்று யானைத் தந்தத்திற்கீடாகக் கள்ளைப் பெற்றுக் குடித்து மகிழ்கிறார்கள் என்றும் உத்தரகுரு என்னுமிடத்தில் வாழ்பவர் போன்று அச்சமின்றி இன்பமே துய்த்து வாழ்கிறார்கள் என்றும் சொல்லப்பட்டுள்ளது:

**வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு**
**கட்கொடி நுடங்கு மாவணம் புக்குடன்**
**அருங்கள் நொடைமை தீர்ந்தபின் மகிழ்சிறந்து**
**நாம மறியா வேம வாழ்க்கை**
**வடபுல வாழ்நரிற் பெரிதமர்ந் தல்கலும்**
**இன்னகை மேய பல்லுறை பெறுப.**[124]

---

123. பதிற்றுப்பத்து; 8; 6 : 4-5.
124. பதிற்றுப்பத்து; 7; 8 : 9-14.

வித்தியது முளையாத களர் நிலத்தே தொழிலினைச் செய்யும் மறவர், மருத வளஞ் சான்ற மென்பாலில் நல்ல விளைவு உண்டாதலை அறிந்து அவரொடு பொர, அது போது போரில் தோற்கும் மருபுல வினைஞர் தம்பால் உள்ள வரகும் கொள்ளும் தண்டமாகத் தருவர். அத் தண்டப்பொருளை விற்றுக் கள் குடிப்பர் மென்பாலில் வாழும் உழுதொழில் வினைஞர் என்று அரிசில்கிழார் குறிப்பிடுவர்:

**வண்புலந் தழீஇய மென்பால் தோறும்**
**மருபுல வினைஞர் புலவிகல் படுத்துக்**
**கள்ளுடை நியமத் தொள்விலை கொடுக்கும்** [125]

## வேள்வி

சங்க காலத்திலேயே வேள்வி இயற்றும் வழக்கம் வேந்தரிடை இருந்ததென்பதனைப் புறநானூற்றுப் பாடல் கொண்டு அறியலாம். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி முதலிய சங்ககாலச் சோழ பாண்டியர் வேள்வி வேட்டதன் சிறப்பால் பாராட்டப்பட்டிருக்கக் காணலாம்.

செல்வக்கடுங்கோ வாழியாதன், குன்றாத கோட்பாட்டினையுடைய சான்றோராகிய சுற்றத்தார் நீங்காது சூழ, போர்க்களத்தே பகைவரை வென்று செய்யும் கள வேள்வியால் வெற்றிக் கடவுட்குப் பலியூட்டி அக்கடவுளை மகிழ்வித்ததோடு, வீரருலகத்து வாழும் சான்றோரை அவர் செய்த வீரச் செயல்களைப் புலவர் பாட இருந்து கேட்குமாற்றால் மகிழ்வித்தான் என்றும் கபிலரால் செல்வக்கடுங்கோ வாழியாதன் சிறப்பிக்கப்பட்டுள்ளான்:

**தொலையாக் கொள்கைச் சுற்றஞ் சுற்ற**
**வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி**
**உயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை.** [126]

---

125. *பதிற்றுப்பத்து;* 8; 5 : 8-10.
126. *பதிற்றுப்பத்து;* 7; 10 : 12-14.

நட்பமைந்த சான்றோர்க்குப் பணிந்தொழுகும் மென்மையினையும், பகைவர்க்கு வணங்காத ஆண்மையினையுமுடைய இளந்துணையாகிய மக்களைக் கொண்டு முதியராகிய பெரியோர்க்குரிய தொண்டினைச் செய்வித்து, அதன்வழி தொன்று தொட்ட தனது கடமையினை ஆற்றுவதாகச் செல்வங்கடுங்கோ வாழியாதன் கபிலரால் குறிப்பிடப் பெற்றுள்ளான்:

**வணங்கிய சாயல் வணங்கா வாண்மை**
**இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்**
**தொல்கட னிறுத்த வெல்போ ரண்ணல்.**[127]

ஈண்டு 'முதியர்ப் பேணித் தொல்கடன் இறுத்தல்' என்ற தொடர்க்கு விளக்கம் வேண்டப்படுகிறது. முதுமையுற்ற சான்றோர்க்கும் முனிவரர்க்கும் தாம் பெற்ற இளந்துணை மக்களைக் கொண்டு அவர்க்குத் தள்ளாமை வந்துற்ற காலத்தில் வேண்டுவன புரிந்து உதவுதல் ஓர் ஆண்மகனின் கடன் என்று அன்று போற்றப்பட்டதாக அறிகிறோம். மாறாக, முதியர் என்றது பிதிரர்கள் என்றும், அவர்க்கு இல்வாழ்க்கை நெறிநின்றார் ஆற்ற வேண்டிய கடன், மக்களைப் பெறுதல் என்னும் கொண்டு, இளந்துணைப் புதல்வர்ப் பேற்றால் முதியராகிய பிதிரர்க்குரிய பழங்கடனை இறுத்தல் மரபு என்பர். வேறு சிலர் தாய்மாமன் முதலாயினோர்க்குச் செய்யுங் கடன் தொல்கடன் என்றும், தந்தையர்க்குச் செய்யுங் கடன் பிதிர்க்கடன் என்றும் கூறுப. ஆனால் மகப்பேற்றால் பிதிரர்கடன் கழிப்பது என்பது வடவர் கொள்கையாகும். ஏனெனில் மகப்பேறு பிதிர்க்கடனிறுக்கும் வாயில் என்று திருவள்ளுவர் கூறியிருக்கவில்லை. மேலும், முதுமை கண்ட சான்றோர்க்கும் முனிவர் கட்கும் தாம் பெற்ற இளந்துணை மகாரைக் கொண்டு தொண்டு செய்யவிருக்கும் செயல் இராமாயணம் பாரதம் முதலிய

127. பதிற்றுப்பத்து; 7; 10 : 20-22.

இதிகாசங்கள் வழியும் புலனாகக் காணலாம். மேலும் இன்றும் இளைய மணமக்களை மணம் புணர்ந்த ஞான்று வாழ்த்தும் முதியோர் "விரைய மக்களைப் பெற்றுத் தருக; அவர்கள் கையினால் தண்ணீர் அருந்தினால் எங்கள் உயிர் அமைதியுறும்" என்று வாழ்த்தும் வழக்குண்மையை நோக்கத் தமிழ்ப் பண்பாட்டிற்கியைந்த விளக்கத்தினைப் பெறுகிறோம். மேலும், கடற்பிறக் கோட்டிய செங்குட்டுவனைக் காசறு செய்யுட்பாடிய பரணர்க்கு, அவன்தன் மகன் குட்டுவன் சேரலைக் கொடுத்த செய்தி பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பதிகத்தால் விளக்க முறுவதால் சேரவேந்தர் மரபிற்கு இயைந்த இச் செய்தி இனிதுறப் புலனாகக் காணலாம்.

அடுத்து, எட்டாம்பத்தில் மான்தோலைத் தூய்மை செய்து போர்த்துக் கொண்டு வேள்வி செய்யும் செயல் கூறப்பட்டுள்ளது.

பெருமலைகளை யடைந்து அவற்றிடத்தும், சிறுசிறு மலைகளையடைந்து அவற்றிடத்தும் தேடிக் குற்றமற மான் இலக்கணம் ஆராய்ந்து கொள்ளும் அறிவினோர், சிதறிக் கிடத்தலையுடைய பசிய பொறிகளையும், கவைக் கோற் போலக் கிளைத்தலையுடைய கொம்பினையும், புள்ளியினையுமுடைய மானைக் கொண்டு, அதன் உட்புறத்துத் தசையினைக் களைந்து, ஏனை அழுக்கு களையும் போக்கி, எஞ்சி நின்ற ஒளிவீசுகின்ற வட்டமாக அறுத்த தோலின் விளிம்பிலே இனமாகச் சேரக்கட்டி, கூர்மையுடைய ஊசியால்தொழில் வல்லோன் உட்புறத்தே மணிகளைப் பதித்து அழகுற அணி செய்து சூடுதற்குரிய நிலைமையினை உறுவித்து ஒளி திகழ்கின்ற தோற்றத்தைப் பெறுவித்தலால் விசும்பிலே பருந்தானது ஊனென்று கருதி யதனை யுற்றுக் கவர்தற்கு நினையுமாறு நலம் பெற்ற உயரிய அத் தோற்பணியாகிய மணியை அணி கின்ற நல்ல தோளினையுடையவளாகத் தகடூர் எறிந்த

பெருஞ்சேரல் இரும்பொறையின் தேவி குறிப்பிடப் பெற்றுள்ளாள்:

புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்
தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
எஃகுடை யிரும்பி னுள்ளமைத்து வல்லோன்
சூடு நிலையுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
நலம்பெறு திருமணி கூட்டு நற்றோள்
ஒடுங்கீ ரோதி யொண்ணுதல். [128]

இப் பகுதியினால் வேள்வி செய்தற்கண், அதனைச் செய்வோர் நல்லிலக்கணம் அமைந்த புள்ளிமானின் தோலைத் தூய்மை செய்து போர்த்துக் கொள்வர் என்பதும், வேள்வி செய்வோன் மனைவி அம் மான் தோலை வட்டமாக அறுத்து அதனைச் சுற்றிலும் முத்துக் களையும் பிற வுயரிய மணிகளையும் கட்டி, நடுவே மாணிக்க மணிகளைத் தைத்துத் தோளிடத்தே அணிவள் என்பதும், அரசமாதேவி அத்தகு தோலுடையை அணிந்தனள் என்பதும் அறியப்படுகின்றன.

மேலும், நாடு காத்தற்கு வேண்டும் அரசியலறிவு வகை பலவும் முற்றக் கற்றுத் துறைபோகிய சிறப்பும் நிறைந்த நன்மகனை இந் நிலவுலகத்து வாழ்வார் பொருட்டுப் பெற்றுத் தந்ததாக அரிசில்கிழார் குறிப் பிட்டுள்ளார். அரிசில் கிழாரின் இந்தக் குறிப்பு மிகவும் இன்றியமையாத தென்றும், இக்குறிப்பின் வழி சேரவேந்தர் மக்கட்டாயமே உடையவர் என்பதும் அறியப்படுவதாக அறிஞர் கூறுவர்.[129]

---

128. பதிற்றுப்பத்து ;4 : 10-17.

129. The Putra Kamesti Yaga is, it may be suggested, mentioned in poem No. 74 by Arisilkizhar, a Non Brahmin poet......... The Putrakamesti poem,

## வாழ்வின் முடிவு

இறந்தவரைப் புதைப்பதும் எரியூட்டுவதுமாகிய இருவகை வழக்கமும் அந்நாளில் இருந்தது. மன்னர் இறந்த வழி அவர் உடலை மண்ணாற் செய்த பானைக்குள் வைத்துப் புதைப்பது மரபு என்பதும் பின்வரும் பகுதியால் தெரியவருகின்றது.

**ஒழுகை யுய்த்தோய் கொழுவில் பைந்துணி**
**வைத்தலை மறந்த துய்த்தலை கூகை**
**கவலை கவற்றுங் குராலம் பறந்தலை**
**முரசுடைத் தாயத் தரசுபல வோட்டித்**
**துளங்குநீர் வியலக மாண்டினிது கழிந்த**
**மன்னர் மறைத்த தாழி**
**வன்னி மன்றத்து விளங்கிய காடே.**[130]

தாழி என்பது முதுமக்கள் தாழி என்பதும், வன்னி மன்றம் என்பது, சுடலை நோன்பிகள் மடையிட்டுப் பரவுமிடம் என்பதும் தெரியவரும். கூகை குரலெழுப்பி வருத்தும் இடம் இடுகாடு என்பதும் பெறப்படும்.

இவ்வாறு இன்னும் பல பழக்கவழக்கங்கள் பதிற்றுப் பத்தில் இடம் பெற்றிலங்கக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் பதிற்றுப்பத்துக் காலத்தில் வாழ்ந்த பழந்தமிழரின் சமுதாய வரலாறு ஒருவாறு காணப்பட்டது.

---

however, conclusively proves, it was the son of the consort that becomes the king, thus establishing beyond doubt the patriarchal succession of these kings.

—Prof. T. P. Meenakshisundaranar—Introduction to the edition of Patirruppattu by Thiru Avvai S. Duraiswami Pillai.

130. *பதிற்றுப்பத்து*; 5; 4 : 17-23.

# 5. பதிற்றுப்பத்தின் இலக்கியநயம்

சேரமன்னர் பற்றிய பாடல்களின் தொகுதி பதிற்றுப் பத்தாகும். பத்துப் பத்து அகவற்பாக்களால் அமைந்த பத்துப் பகுதிகளைக் கொண்ட நூல் ஆதலின் இது பதிற்றுப்பத்து எனப் பெயர் பெறலாயிற்று. ஒவ்வொரு சேரமன்னரைக் குறித்துப் பாடப் பெற்றமையின் இந்நூல் பத்துப் பகுதிகளாகக் கொள்ளத் தக்கது. இதிலுள்ள பத்துப்பத்துக்களும் 'முதற்பத்து', இரண்டாம் பத்து' என்று இவ்வாறு எண்ணால் பெயர் பெற்றுள்ளன. இதனைத் தொகுத்தார், தொகுப்பித்தார் பற்றி யாதொன்றும் அறியக்கூடவில்லை. நூலின் முதற்பத்தும், பத்தாம் பத்தும் பிரதிகளில் மறைந்து போயின.

ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப் பத்தைப் பாடினார், அதன் பாட்டுடைத் தலைவர், அவர் செய்த அரும்பெருஞ் செயல்கள், புலவருக்கு அவர் அளித்த பரிசில் முதலிய செய்திகளைக் குறிப்பிடும் பதிகம் உள்ளது. இப்பதிகங்கள் ஆசிரியப்பாவில் தொடங்கி, கட்டுரையாக முடிவு பெறுகின்றன. இவை சாசனங்களில் காணப்பெறும் மெய்க்கீர்த்திகளைப் போன்ற அமைப்பை உடையன. இவை, தொகுத்தார் காலத்திற்குப் பிந்தியும், இதன் உரையாசிரியர் காலத்திற்கு முந்தியும், தோன்றியதாதல் வேண்டும் என்பது சில ஏதுக்களால் புலனாகின்றது.

இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று உள்ளது. இதனை எழுதியவரைப் பற்றிய செய்திகள் ஒன்றும் அறியக்கூட வில்லை.

இப்பழைய உரை, ஒவ்வொரு செய்யுளின் கருத்தையும் விளக்கி, 'இதனால் இன்னது கூறப்பெற்றது' என்று சுட்டுகின்றது. இங்ஙனம் உரையாசிரியர் எழுதியுள்ள தொடர்களையே சுருக்கி, ஒவ்வொரு பாட்டின் தொடக்

கத்திலும், தலைப்பு இடம் பெற்றுள்ளது. இவை பாடலின் உள்ளுறைப் பொருளைப் பொதுமையாக உணர உதவுவனவாம்.

ஒரு சில செய்யுட்களில் சில சீர்களும் அடிகளும் சிதைந்து போயின. நாலாம் பத்துச் செய்யுட்கள் மட்டிலும், ஐங்குறு நூற்றிலுள்ள பதினெட்டாம் பத்தைப் (தொண்டிப்பத்து) போல், அந்தாதியாக அமைந்துள்ளன.

பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பாட்டிலும் வருணனைச் சிறப்புக்கு உயிராக உள்ள சொற்றொடர் ஒன்று அப்பாட்டின் பெயராக வழங்குகின்றது. மற்றொரு சிறப்பியல்பு, ஒவ்வொரு பாட்டுக்கும் வண்ணமும் தூக்கும் குறிக்கப்பட்டுள்ளமை ஆகும். இக்குறிப்புகள் பதிற்றுப் பத்து இசையோடு பாடப் பெற்றுவந்த நூல் என்பதைத் தெரிவிக்கின்றன.

"பதிற்றுப்பத்துக் காலத்தில் சேரநாடு கடம்பர் குறும்பு ஒழிந்திருந்தது. வடபகுதியில் வானநாடு வரம்பு செய்யப் பட்டிருந்தது. கிழக்கிலிருந்த கொங்கு நாடும் சேரர் ஆட்சியில் இருந்தமையின் அதன் எல்லையில் வாழ்ந்த அதியரும் மறவரும் சோழரும் அடங்கி இருந்தனர்."

"புலவர்கள், அரசர்கள் இசையும் கூத்துமாகிய இன்பத் துறைகளில் ஈடுபட்ட காலத்து அவர்களைத் தெருட்டிக் கடமைக்கண் கருத்தூன்றச் செய்தனர். அரசர் போர் மேற்கொண்ட காலத்து அவர் உள்ளத்தில் அருள் தோன்று மாறு பாடிப் பகைவர் தேயம் உய்யக் கொண்டனர்."

"ஏனைத் தொகை நூல்களைவிட இந்நூற்கண் வரும் பாட்டுக்கள் பொருள் நிறைந்து, சொற்செறிவு மிகுந்து, ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டிருத்தலின் தமிழ் கற்போர் இதனை 'இரும்புக் கடலை' என இயம்புவதுண்டு."[1]

---

1. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை — கலைக்களஞ்சியம்—ஆறாம் தொகுதி. பக்கம் 718.

பதிற்றுப்பத்து எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. பதிற்றுப்பத்துப் பாடிய புலவர்கள் எண்மராவர். இவர்கள் பாடல்களுள் கவிதைநலம் கெழுமிய சுவைப் பகுதிகள் பல உள. ஆழ்ந்த உணர்ச்சி, அரிய கற்பனை, தெளிந்த வடிவம், உயரிய குறிக்கோள் முதலியன கொண்டு இவர் தம் கவிதைகள் சிறந்து காண்கின்றன. பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பாட்டும் அப்பாடலுள் வந்துள்ள தொடரா லேயே பெயரிட்டு வழங்கப்படுகின்றது. பதிற்றுப்பத்தின் கவிதைவளம் குறித்துப் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:[2]

"The Sangam poets caught the spirit of the poetic moment and enshrined it in the most appropriate and correct poetic phrase, afraid of spoiling its effect by an elaboration. Brevity is the life of their poetry. This explains why the anthologies of the Sankam verses are arranged according to the length of verses as 'Kurum Tokai' Nedum Tokai 'Ainkurunuru' etc; In every poem there is the heart of life centre—a beautiful phrase which is the very quintessence of the poem and this phrase, by common acceptance and appreciation, becomes, according to Sankam usage, the very name of the verse. This is seen in every one of the verses in the present work."

இக்கூற்றுக்குச் சான்றாகப் பதிற்றுப்பத்தில் ஒரு பாடலை எடுத்துக்கொண்டு அப் பாட்டின்கண் இடம் பெற் றுள்ள ஓர் உயிர்நாடியான தொடர் எவ்வாறு அப்பாட்டின் தலைப்பாகப் பொருத்தமுற அமைந்துள்ளது என்பதனைக் காண்போம். மூன்றாம் பத்தினைப் பாடியவர் பாலைக் கௌதமனார் ஆவர். இப்பத்து, பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பற்றியதாகும். இப்பத்தின் இரண்டாவது

2. Introduction to Thiru. Avvai S. Duraiswami Pillai's edition on Patirruppattu, p. 8.

பாடலின் தலைப்பு, 'கயிறுகுறு முகவை' என்பதாகும். இப்பாட்டு, பல்யானைச் செல்கெழு குட்டுவன் கொங்கு நாட்டை வென்று அடிப்படுத்திய வென்றித் திறலை விளங்க உரைப்பதாகும். இப்பாட்டில் கொங்குநாட்டின் வறட்சி குறிப்பிடப்படுகின்றது. கொங்குநாடு ஆற்றுநீர் வளம்அவ்வளவாக இல்லாத நாடு ஆகும். எனவே கொங்கு நாட்டு மக்கள் கிணறுகளில் ஊறும் ஊற்றுநீர் வளத்தையே நம்பி வாழ்ந்தனர். கொங்குநாட்டிற்கே உரிய தலையாய செல்வம் கால்நடைச் செல்வமாகும். மேட்டுநிலத்தாலான கொங்குநாட்டில் பசுக்களுக்கு நீர் கிடைத்தல் அரிது. எனவே உழைப்புத்திறனும் முயற்சி அருமையும் உடைய உடைய கொங்கர்கள் கூரிய இரும்புக் கோடாரிகளைக் கொண்டு நிலத்தை அகழ்ந்து ஆழமான கிணறுகளைத் தோண்டுவர். நீண்ட கயிறுகளில் பிணைக்கப்பட்ட சிறிய முகவைகளைக் கட்டி ஆழ்ந்த கிணற்றினின்றும் நீர் முகப்பர். பசுக்கூட்டங்கள் நீர் முகந்துவரும் முகவை களைக் கண்ட உடனே நீர்வேட்கை கொண்டு அவற்றின் குளுமையும் நீர்மையும் நோக்காது அம்முகவைகளை மொய்க்கும் அவ்வாறு மொய்க்கும் பசுக்களுக்குக் கொங்கு நாட்டின் மக்கள் நீர்முகந்து தருவர். இவ்வாறு நீர் நல்குவது பெரிதன்றித் தன் கயிற்றையே நின்று வாங்கப் படும் முகவை என்ற பொருளினைத் தரும் **கயிறு குறுமுகவை** என்ற தொடர் கொங்குநாட்டின் நீர்வளத்தி அருமையினையும், நீர் வேட்கை கொண்ட ஆநிரையின் நிலையினையும் விளக்குதலால் இப்பாட்டுக் 'கயிறுகுறு முகவை' என வழங்கப்பட்டது.

The consideration of the literary names of the poets has revealed the characteristic feature of the Sangam poetry, trying to express the quint-essence of a poetic situation in a concentrated phrase of a few words. Each of the poems of 'Patirruppattu' is named after its arresting phrase which compels us, by its poetic beauty, to

contemplate on its imaginative wealth. An illustration will make the point clear. 'Kayirukuru mukavai' is the name of the second verse in the third ten by 'Paalai-k-kau temanar'. The phrase occurs in that very verse describing the heroic exploits of Palyanai-c-celkelu Kuttuvan' against the 'Konku country'-a land of deserted rocks yieldiang a handful of water many many feet below the surface. The country however was rich in its cattle wealth and its people were sturdy warriors prepared to do anything for their cattle. They hewed down those rocks to their very depths, made them yield what little they could and swarmed round the wells to bale the water up with tiny vessels from these holes with the help of very long ropes. It was into this land of waterless rocks and against these sturdy warriors of mother Earth, struggling ever against unkind Nature, making the rocky deserts flow with milk that the Cera led his expeditions to a victorious consummation. The phrase 'Kayiru Kuru Mukavai' tiny vessels of ever drawing strings 'brings out vividly all these before our minds' eye. All the verses of Patirrupattu' have such self-luminous gems embedded in them and each one of them is named after such poetic phrase. So this remark applies to all the verses in 'Patirruppattu'

இவ்வாறு பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பாடலும் பொருள் நயமும் சுவை நயமும் கொண்டு திகழ்கின்றது.

**நாடகக்காட்சி**

படிப்பவர் கண்முன்னே நாடகக்காட்சி போல் நிகழ்ச்சிகளைக் கொணர்ந்து நிறுத்துவதில் சங்கப்புலவர்கள் — பதிற்றுப்பத்துப் பாடிய புலவர்கள் வல்லவர்கள். சான்றாக ஒன்று காண்போம்:[3]

3. பதிற்றுப்பத்து: 52

சேரநாட்டில் ஒருநாள் துணங்கைக் கூத்து நிகழ்ந்தது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மகளிர்க்குத் தலைக்கை கொடுத்துத் துணங்கைக் கூத்தாடி மகிழ்ந்து வீடு திரும்பினான். அவன் வீட்டில் அவன் உரிமை மனைவி அரசி, ஊடல் கொண்டு நின்றாள். வேற்றுமைகளிரோடு கைபிணைந்து ஆடிய அவன் செயல் அவள் நெஞ்சில் சினத்தையும் வெறுப்பையும் விளைத்தது. அசைந்த கோதையும் பரந்த தேமலும் குளிர்ந்த கண்ணும் பெரிய இயல்பும் கொண்ட அவள் சினக்குறிப்பை வெளியிட்டாள். மலரிதழ் ஒத்த அவளின் வண்ணச் சீரடிகள் அவள் நடந்தபோது அவள் நெஞ்சிற் கொண்ட சினத்தைப் புலப்படுத்தின. அவள் காலில் அணிந்திருந்த கிண்கிணிகள் தேம்பின. அலையால் தாக்கப்பட்ட தளிர் போலும் அவள் அசைவுற்றாள். சினத்தால் வாயிதழ் துடித்தாள். தன்பால் இவ்வளவு மாற்றம் ஏற்பட அரசனை நன்றாக ஒறுக்க வேண்டும் என எண்ணினாள். ஒரு சிறு செங்குவளை மலரை எடுத்து அவன்மீது எறிய ஓங்கினாள். அவனோ அரசியின் சினத்திற்கு எதிர்சினம் காட்டாமலும், அவள் ஊடலுக்கு எதிர் ஊடல் செய்யாமலும் அமைதியாக நின்று அவள்மாட்டுக் கொண்ட அன்பெல்லாம் தன் கண்ணிலும் முகத்திலும் தேக்கிக் காட்டி முறுவல் ஊட்டி அவள் கைம்மலரில் கொண்ட சிறு செங்குவளை மலரை அன்புக் கொடையாகத் தனக்கு அளித்து விடுமாறு பணி மொழி கூறி மணிக்கை ஏந்தி யாரையும் எப்பொழுதும் ஏற்றறியாத அவன் இரந்து நின்றான். அதுபோது அரசி சினம் தணியாதவளாய் 'நீ எமக்கு யாரையோ?' என்று கூறி அவ்விடம்விட்டு அகன்றாள். இந்தச் செய்திகளை ஒரு நாடகக்காட்சி போலக் கேட்போர் படிப்போர் அகக் கண்ணில்பட்டு இன்பம் பெருக்கெடுக்கக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்னும் புலமை மெல்லியலார் பாட்டோவியம் தீட்டிக் காட்டியுள்ளார்.

## இயற்கை வருணனை

நாட்டுவளத்தைப் பாடும் கவிஞர்கள் இயற்கையின் இனிய செவ்வியினை நயமுறக் கிளத்தியுள்ளனர். மருத நிலத்தின் அழகினை வருணிக்க வந்த பாலைக்கௌதமனார் பின்வருமாறு வயல்சான்ற மருதவளத்தினை வடித்துக் காட்டியுள்ளார்.[4]

வயல்வெளிகளில் மருத மரங்கள் ஓங்கிவளர்ந்துள்ளன. அம்மரக்கிளைகளில் புள்ளினங்கள் பல தங்கி ஒலிக்கின்றன. செறிவினை உடைய இடமகன்ற மணல்மலிந்த பெருந்துறைக்கண் விளையாடும் இளமகளிர் காஞ்சிமரத்தின் பூவினையும் தளிரையும் பறித்தலால் அம்மரங்கள் சிதைந்த நிலையில் காட்சி தருகின்றன. முருக்க மரங்கள் தாழ்ந்த பூக்களைச் சொரிதலால் அவை உயர்ந்த நெருப்புப்போலத் தோன்றுகின்றன. அடைகரையில் சங்குகளும் நாரைகளும் செவ்விய வரிகள் தாங்கிய நாரையினப் பறவைகளும் திரிகின்றன. கழனிக்கு வயிலாக உள்ள குளங்களைச் சார்ந்த விளைநிலத்தின் நீர்ப்பரப்பில் நெருப்புப் போலும் பூவினை உடைய செந்தாமரை மலர்கள் மலர்ந்துள்ளன. வளையணிந்த விளையாட்டுப் பெண்கள் பறிக்காமையால் தானே மலர்ந்த ஆம்பல் எங்கும் நிறைந்துள்ளன. இத்தகு கண்ணுக்கினிய காட்சிகள் நிறைந்து நீங்காத புதுவருவாயினைக் கொண்டு சேரநாடு மருதவளத்தினை மாண்புறக் கொண்டு துலங்குகின்றது. இவ்வாறு பற்பல இயற்கைக்காட்சிகளைக் கவிஞர்கள் வருணித்துக் காட்டியுள்ளனர்.

## ஒலிநயம்

புலவர்கள் கையாளும் சொற்கள் கேட்போர் செவிகளில் ஒலிநயம் ஊட்டக்கூடியவை. சில தொடர்கள் படிக்கின்ற பொழுதே பாவோசையும் ஒலிநயச் சிறப்பும்

---

4. பதிற்றுப்பத்து; 23 : 18-25.

கொண்டு துலங்குதலைக் காணலாம். சில தொடர்கள் வருமாறு:

' பாடல்சான்ற பயங்கெழு வைப்பின்' [5]
' விழவறு பறியா முழவிமிழ் மூதூர்' [6]
' துலங்குகுடி திருத்திய வலம்படு வென்றி' [7]
' காலன் அனைய கடுஞ்சின முன்ப' [8]
' காடுதலைக் கொண்ட நாடுகாண் அவிர்சுடர்' [9]
' கடவுள்நிலைஇய கல்லோங்கு நெடுவரை' [10]
' வடதிசை எல்லை இமைய மாகத்
தென்னங் குமரியொடு ஆயிடை அரசர்' [11]
' வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை' [12]
' வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்' [13]
' ஓவத் தன்ன வினைபுனை நல்லில்' [14]
' நாமமறியா ஏம வாழ்க்கை' [15]
' தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்' [16]
' பாடுநர் கொளக்கொளக் குறையாச் செல்வம்' [17]

---

5. பதிற்றுப்பத்து; 13 : 9.
6. ,, 15 : 18.
7. ,, 32 : 7.
8. ,, 39 : 8.
9. ,, 40 : 29.
10. ,, 43 : 6.
11. ,, 43 : 7-8.
12. ,, 48 : 9.
13. ,, 58 : 3.
14. ,, 61 : 3.
15. ,, 68 : 12.
16. ,, 70 : 22.
17. ,, 82 : 12.

'செற்றோர் கொலக்கொலக் குறையாத் தானை' [18]

'நாடல் சான்ற நயனுடை நெஞ்சு' [19]

'ஓவத் தன்ன உருகெழு நெடுநகர்' [20]

## சொல்லாட்சி

தூய சொற்கள்—வடமொழிக் கலப்பற்ற சொற்கள்—பதிற்றுப்பத்தில் நிறைந்திலங்கக் காணலாம். ஐம்பூதங்களைக் குறிப்பிடவந்த கவிஞர்

நீர்நிலம் தீவளி விசும்பொடு ஐந்தும்
அளந்துகடை அறியினும் அளப்பருங் குறையே [21]

என்று நீர், நிலம், தீ, வளி, விசும்பு எனத் தூயதமிழ்ச் சொற்களையே குறிப்பிட்டிருப்பதையும், நேர்கிழக்கு அல்லது சரியான கிழக்கு என்பதனைச் செங்குணக்கு [22] என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளதனையும் காணலாம்.

## சொல்லழகு

'சிதைந்தது மன்ற நீ சிவந்தனை நோக்கலின்' [23]

என்ற தொடர் நடையழகினை நலமுறக் கிளத்தும். மேலும்

ஈரம் உடைமையின் நீரோர் அனையை
அளப்பருமையின் இருவிசும்பு அனையை
கொளக்குறை படாமையின் முந்நீர் அனையை [24]

என்றும்,

18. பதிற்றுப்பத்து; 82 : 13.
19. ,, 86 : 7.
20. ,, 88 : 28.
21. ,, 34 : 15-16.
22. ,, 50 :
23. ,, 37 :
24. ,, 90 :

நின்னாள் திங்கள் அனையவாக, திங்கள்
ஆண்டோர் அனைய வாக, ஆண்டே
ஊழி அனைய வாக, ஊழி
வெள்ள வரம்பின வாகஎன உள்ளிக்
காண்குவந்திசின் யானே [25]

என்றும் பெருங்குன்றூர்கிழார் பாடியுள்ள தொடர்கள் நடைமாட்சியினை நன்கு சிறப்பிப்பனவாம்.

## உவமைகள்

எண்பது பாடல்களில் ஏறத்தாழ எண்பத்தைந்து உவமைகள் [25] அமைந்து பொருள் நயம் பயந்துநிற்பதனைப் பதிற்றுப்பத்தில் காணலாம். தொல்காப்பியனார்.

---

25. பதிற்றுப்பத்து; 90 :

25அ. 1 : 7-9; 2 : 3-4; 11 : 1; 11 : 6; 11 : 9-10; 12 : 5-7; 13 : 11-12; 14 : 7; 14 : 18-20; 15 : 39; 16 : 2; 21 : 4; 21 : 34-35; 21 : 37; 23 : 23-24; 24 : 21-22; 25 : 11; 26 : 13-14; 30 : 2; 30 : 27; 31 : 20; 31 : 27-28; 35 : 7-8; 36 : 5-6; 39 : 5-6; 41 : 20-21; 42 : 3-4; 43 : 3-4; 43 : 18-19; 44 : 1-2; 51 : 1-2; 51 : 35-36; 52 : 3-4; 58 : 4; 59 : 5-7; 61 : 3; 61 : 4; 61 : 5-6; 61 : 17-18; 62 : 1-2; 62 : 10; 64 : 12-14; 64 : 17; 65 : 8; 65 : 14-16; 66 : 4; 66 : 12-13; 69 : 1-2; 69 : 3-4; 69 : 11-12; 70 : 24-25; 70 : 26-27; 71 : 23-24; 72 : 6-7; 72 : 14-15; 74 : 3; 74 : 9; 76 : 4-5; 76 : 12-13; 77 : 10-11; 78 : 1-2; 78 : 12-14; 78 : 18-19; 80 : 13; 80 : 3-4; 81 : 26: 81 : 19; 81 : 1-3; 84 : 1-3; 84 : 11-13; 85 : 4-6; 88 : 28-30; 88 : 35; 88 : 37-38; 88 : 32-33; 89 : 19-20; 90 : 17-18; 90 : 31; 90 : 33-35; 90 : 47; 90 : 56.

**வினைபயன் மெய் உருஎன்ற நான்கே**
**வகைபெற வந்த உவமத் தோற்றம்** [26]

என்று உவமைகள் பிறக்கும் நிலைக்களத்தினை நான்காகக் குறிப்பிட்டுப் போந்தார். இந்த அடிப்படையில் பதிற்றுப் பத்தின் உவமைநயங்கள் ஒன்றிரண்டு காண்போம்.

## வினை (Action)

சிரல்பறவை நீர்நிலையில் மீனைத் தம் அலகால் கொத்தி எடுத்துச் செல்லும் செயல், மார்பின் புண்ணைத் தைய்த்த நீண்ட ஊசியின் செயலோடு ஒப்பிடப்பட்டுள்ளது.[27] மேலும் கடல்அலைகள் கரையை மோதிமோதி உடைந்து எழுப்பும் ஒலி இடியின் முழக்கத்திற்கு ஒப்பிடப் பெற்றுள்ளது.[28] மறவர் பகைவரைப் போர்க்களத்தில் அழிக்கும் செயல் இடியின் அழிவுச் செயலோடு ஒப்பிடப் பெற்றுள்ளது.[29] பிறிதோரிடத்தே இடியோசை, முரசி லிருந்து எழும் ஓசையோடு ஒப்பிடப்பெற்றுள்ளது.[30] காற்று வேகமாக அடிப்பதுபோலப் போரில் குதிரைகள் விரைவாகப் பறந்து செல்கின்றன.[31] பலியைப் பெற்றுச் செல்லும் எமன்போலச் சேர மன்னன் பகைவரிடமிருந்து திறை பெற்று மீள்கின்றான்.[31அ] மலையினின்று இழிந்து வரும் அருவியின் அசைவு காற்றில் அசைந்தாடும் கொடியை ஒத்துள்ளது.[31ஆ] யமனைப் போன்று கொலைத் தொழில்

---

26. தொல்; உவமையியல்: நூ. 1.
27. பதிற்றுப்பத்து; 42 : 3-4.
28. ,, 51 : 1-2.
29. ,, 58 : 4.
30. ,, 66 : 4.
31. ,, 80 : 13.
31அ. ,, 71 : 23-24.
31ஆ. ,, 25 : 11.

குறிக்கும் மறவர் உளர்.[31இ] இவ்வாறு வினை உவமைகள் பல பதிற்றுப்பத்துள் வந்துள்ளன.

**பயன்**

எமன் கொன்ற உடம்பு போன்று சேர மன்னன் கண் சிவந்து பொருதழித்த ஊர்கள் பொலிவற்றுக் காண்கின்றன.[32] சேர மன்னனின் ஈகை அக்குரனின் ஈகையோடு ஒப்பிடப்பட்டுள்ளது.[33] அவனது புகழ் திருமாலின் புகழோடு ஒப்பிடப்பெற்றது.[34] சேரமாதேவி அழகு நலம் அருந்ததியின் அழகு நலத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளது.[35]

**மெய்**

மலர் போன்று குளிர்ந்தும் விரிந்தும் மகளிர் கண்கள் துலங்குகின்றன.[35அ] மூங்கில் போலும் பருத்துத் தோள்கள் விளங்குகின்றன.[36] கணையமரம் போன்று வீரர்களின் தோள்கள் வன்மையாக விளங்குகின்றன.[37] உரல் போன்று யானையினுடைய பெரிய கால்கள் தோற்றமளிக்கின்றன.[38] மலைபோலும் உயர்ந்து கோட்டை மதில்கள் நிற்கின்றன.[39] மலைபோன்று யானைகள் பருத்துத் தோன்றுகின்றன.[40]

**உரு**

போர்க்களத்தில் பகைவரின் குருதிச்சேறு குங்குமக் குழம்புபோலத் தோற்றமளிக்கின்றது.[41] நெருப்புப்

---

31இ. பதிற்றுப்பத்து; 26 : 13-14.
32. ,, 13 : 11-12.
33. ,, 14 : 7.
34. ,, 15 : 39.
35. ,, 31 : 28.
35அ. ,, 21 : 35.
36. ,, 21 : 37.
37. ,, 31 : 20.
38. ,, 43 : 3.
39. ,, 62 : 10.
40. ,, 69 : 1.
41. ,, 11 : 9-10.

போலும் தாமரை செந்நிறம் கொண்டு திகழ்கின்றது.[42] நீலமணி போன்று நெய்தல் மலர் காட்சி அளிக்கின்றது.[43] அந்திமாலையில் தோன்றும் செவ்வானம் போன்று போர்க் களம் குருதி கொப்புளித்துக் காட்சி தருகின்றது.[44] நெருப்பு ஒளி விடுவதுபோலக் குதிரையின் பிடரிமயிர் தோன்று கின்றது.[45]

இவ்வாறு பல உவமைகள் பாங்குற மிளிர்ந்து பதிற்றுப் பத்து இலக்கிய நயங் கெழுமிய பாடல்களைக் கொண்டு வற்றாத கற்பனைச் சுவையுடனும் வளமான கருத்துச் செறிவுடனும் காட்சி அளிக்கின்றது.

---

42. பதிற்றுப்பத்து; 23 : 25.
43. ,, 30 : 2.
44. ,, 35 : 7-8.
45. ,, 2 : 3.

பகுதி 2

# எட்டுத்தொகை

## 1. நற்றிணை

ஒன்பது அடி முதல் பன்னிரண்டு அடிவரையுள்ள நானூறு அகப்பாடல்களைக் கொண்டது; சிறப்புப் பற்றி நல் என்ற அடைபெற்றது. இதைத் தொகுப்பித்தவன் பாண்டிய மன்னன் பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி என்பவன். தொகுத்த புலவர் யார் என்பது தெரியவில்லை. இயற்கைப் பொருளைப் புலவர்கள் நுட்பமாகக் கண்டறிந்து பாடிய பாடல்களை நற்றிணையில் காணலாம். இயற்கைப் பொருளை உவமைகளாகக் கூறும் திறனும், தக்க இடங்களில் நீதிகளை அமைத்துப் பாடும் சிறப்பும் முதற்பொருளையும் உரிப் பொருளையும் கூறும் வாயிலாக இயற்கைக் காட்சிகளை வருணிக்கும் திறமும் நற்றிணைப் புலவர்களிடையே நாம் காணும் சிறப்பாகும். நற்றிணையில் சேரநாட்டு இலக்கியமாகத் திகழ்பவை இருபத்திரண்டு பாடல்களாகும்.[1] இதன்கண் இடம் பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்புகள், பழக்க வழக்கங்கள், இயற்கை வருணனை, உவமைகள், அகப்பொருள் நுட்பம் முதலியவற்றை இனிக் காண்போம்:

### வரலாற்றுக் குறிப்புகள்

நற்றிணை சங்க இலக்கியத்தைச் சார்ந்த அகப் பொருள் நூலாயினும் அதில் வரலாற்றுக் குறிப்புகள்

---

1. நற்றிணை; 8, 9, 18, 35, 48, 105, 113, 118, 167, 185, 195, 202, 224, 237, 256, 318, 337, 346, 381, 384, 391, 395.

ஆங்காங்கே விரவி வந்துள்ளன. அக்காலத்தில் செய்திகள் புனைவு இன்றிக் கூறப்பட்டிருப்பதால் அரிய வரலாற்றுண்மைகளை நாம் அறிய முடிகின்றது. சேரநாட்டு ஊர்களைப் பற்றியும் சில பாடல்களில் குறிக்கப்படுகின்றது. தொண்டி என்னும் நகரைப் பற்றிய குறிப்புகள் மூன்று இடங்களில் வந்துள்ளன. திண்ணிய தேரையுடைய சேரனின் தொண்டி என்றும்[2], கானற்சோலை சூழ்ந்த தொண்டி என்றும்[3], கல்லென்ற ஒலியையுடைய புள்ளினம் வாழும் கானற்சோலைகளையுடைய தொண்டி நகர் என்றும்[4] கூறப்படுகின்றது.

அடுத்து மாந்தை என்னும் கடற்கரை நகர் இரண்டிடங்களில் சுட்டப்படுகின்றது.[5] சோழன் வெற்றிபெற்ற கழுமலம் என்னும் போரும் பங்குனிவிழா மிகச் சிறப்பாக நடைபெறும் உறையூரும் உள்ளிவிழா நடைபெறும் வஞ்சியும் குறிக்கப்படுகின்றன.[6]

சேர அரசர்கள் செய்தியே பெரும்பாலும் கூறப்படுகின்றது. திண்ணிய தேர்களை உடைய சேரனைப் பற்றியும்[7], மூவன் என்னும் குறுநில மன்னனின் வலிமையை அடக்கி அவனுடைய பற்களைப் பிடுங்கித் தன்னுடைய கோட்டைக்கதவில் பதித்த சேரமான் கணைக்கால் இரும்பொறையைப் பற்றியும்[8], குட்டுவன் சேரலது குடமலைச் சுனையிலுள்ள கரிய இதழை உடைய குவளை பற்றியும்[9]

---

2. நற்றிணை; 8 : 9.
3. ,, 18 : 4.
4. ,, 195 : 5.
5. ,, 35 : 7.
6. ,, 234 : 6-9.
7. ,, 8 : 9.
8. ,, 18 : 2-5.
9. ,, 105 : 7-8.

உதியஞ்சேரல் சினந்து சென்ற ஒலிக்கின்ற இடத்தையுடைய போர்க்களத்தின்கண்ணே களம் பாடுநருடன் வாச்சியம் வாசிப்போர் விரைவாக ஊதுகின்ற ஆம்பல் என்னும் பண்ணையுடைய இனிய புல்லாங்குழல் பற்றியும்[10], மெலியாமல் சிறுவர் ஏறுகின்ற பொறையனது புகழமைந்த கொல்லிமலை பற்றியும்[11], யானையும் நெடிய தேரும் உடைய குட்டுவன் பகைவேந்தரைக் கொன்ற போர்க்களத்தின் கண்ணே அவனது வெற்றிமுரசு அதிர்வது பற்றியும்[12] கூறப்படுகின்றது.

கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய ஆய் அண்டிரன் தன்னுடைய நாளோலக்கத்தில் இரவலர் பரிசிலாகப் பெறும் அழகமைந்த தேர்களைப் பற்றியும்[13], இரவலர் வரும்பொழுது அவர்கட்குக் கொடுப்பது கருதி ஆய் அண்டிரன் சேர்த்துவைத்த யானைத்திரள் பற்றியும்[14] குறிக்கப்படுகின்றது.

நெடுமான் அஞ்சி குளிர்ந்த உள்ளத்தோடு இரவலர்களுக்குத் தேர்களைப் பரிசு கொடுக்க இருக்கின்ற நாளோலக்கம் பற்றிக் குறிக்கப்படுகின்றது.[15]

கொண்கானத்திலுள்ள நன்னனது நல்ல நாட்டிலிருக்கின்ற பொலிவு பொருந்திய ஏழில் மலையைப் பற்றிச் சுட்டப்படுகின்றது.[16] சேரனின் கொல்லிமலையில் தேவதச்சனால் எழுதப்பட்ட கொல்லிப்பாவையினைப் பற்றிக் கூறப்படுகின்றது.[17]

---

10. நற்றிணை; 113 : 9-11.
11. ,, 185 : 6-7, 346 : 8-9.
12. ,, 395 : 4-5.
13. ,, 167 : 2-4.
14. ,, 237 : 7-8.
15. ,, 381 : 6-9.
16. ,, 391 : 5-7.
17. ,, 185 : 3-10.

பாணர் குதிரைகளைப் பரிசிலாகப் பெற்ற செய்தியும் குறிக்கப்படுகின்றது.[18]

## பழக்கவழக்கங்கள்

நற்றிணையில் தமிழர் அக ஒழுக்கம் கூறப்படுகின்றதேனும் ஆங்காங்கே அவர்தம் பழக்கவழக்கங்களும் இடம் பெறக் காணலாம். தமிழர்கள் அக்காலத்தில் திறம்பட ஓவியம் தீட்டக் கற்றிருந்தனர் என்பது ஓவிய எழுது கோலை உவமையாகக் காட்டுவதிலிருந்து உணரலாம்.[19]

கார்த்திகைத் திங்களில் ஒரு திருநாளில் விளக்குகள் ஏற்றி வரிசையாக வைப்பது வழக்கம் என்று விளங்குகின்றது.[20] எருமை மேய்ந்த மலைப்பச்சையின் இலைகள் ஒண்கொடி அணியும் மகளிர் கலன்களை அணிதற்குப் பயன்படும் என்ற பழக்கத்தை உணரலாம்.[21] கடலில் பாய்ந்து விளையாட்டு அயர்வர் பெண்கள் என்பது தெரிகின்றது. அவர்கள் கழித்துப்போடும் மலர்களைப் பெற்றம் (பசு) தின்னும். தின்ற பசு இசையையுடைய மாலையில் புலந்திரும்பும்.[22]

பண்டைத் தமிழகத்தில் விழாக்கள் நடைபெற்றதைச் சில பாடல்கள் உணர்த்துகின்றன. சோழன் தலைநகரான உறையூரின்கண் பங்குனித் திங்களில் உத்திர நாளில் விழா நடைபெறும். சேரனின் வஞ்சியில் கொங்கு நாட்டினர் மணிகளை இடையில் கட்டிக்கொண்டு தெருவில் ஆடும் விழா உள்ளிவிழா எனப்படும். இவ்விழாக்களில் ஆரவாரம் மிகுதியாக இருக்கும்.[23]

---

18. நற்றிணை; 185 : 3-4.
19. ,, 118 : 7-8.
20. ,, 202 : 9.
21. ,, 391 : 5.
22. ,, 395 : 6-8.
23. ,, 234 : 8-9.

## இயற்கை வருணனை

சுவைபடச் சொல்ல வேண்டுமானால் கற்பனை மனம் வேண்டும். கற்பனை மனம் உள்ளவர்களுக்குப் பொருள் களை வருணிக்கும் ஆற்றல் தன்னால் வரும். இயற்கைக் காட்சிகளை வருணித்துள்ள அழகை நற்றிணையில் காணலாம்.

கருநிறமான குன்றில் வெண்ணிறமான அருவி ஒன்று தோன்றுகின்றது. அந்தக் குன்று பெரிய ஒற்றைக் கொம்பு உடைய யானை போல் தோன்றுகின்றது[24] எனவும் புலியோடு போர் செய்து அதனால் சிவந்து புலால் நாற்றம் பெற்றது ஆண் யானையின் கொம்பு எனவும், அந்தக் கொம்பினுள் இருந்த பல முத்துக்கள் ஒலிக்குமாறு வேங்கை மரத்தின் பருத்த அடிமரத்தை முறித்தது எனவும், கன்றோடு பெண் யானையைத் துதிக்கையால் தழுவிய வாறே சென்று வேங்கை மரத்தின் பொன் போன்ற பூங்கொத்துக்களில் உள்ள தேனீக்கள் ஓடுமாறு செய்து அவற்றைத் தந்து உண்ணச் செய்து பாதுகாக்கும் எனவும்[25] மலை சார்ந்த வழிகள் வருணிக்கப்படுகின்றன.

காட்டில் கோங்க மரங்களில் மலர்கள் மலர்ந்து விளங்கும் காட்சி கார்த்திகைத் திருநாளில் ஏற்றப்படும் விளக்குகளின் நீண்ட வரிசை போன்றது[26] என்றும், மாவின் அரும்புகளைக் கோதி உண்டு மகிழ்கின்ற குயில்கள் பாடும் நறிய தண்ணிய பொழில் மிகவுடையன காடுகள்[27] என்றும் கூரிய நுனியையுடைய களாவின் மலர் ஒருங்கே மலர்ந்து மணங்கமழவும் பிடாமலர் முறுக்குவாய் நெகிழ்ந்து மலரவும், மேகம் தான் செய்ய வேண்டிய மழை பெய்தலைச் செய்யத் தொடங்கிய அழகிய கார்ப்

---

24. நற்றிணை; 18 : 8-10.
25. ,, 202 : 1-7.
26. ,, 202 : 9.
27. ,, 9 : 10-12.

பருவத்தில் இளைய பிணைமானைப் புணர்ந்த கரிய பிடரியினையுடைய கலைமான் உள்ளே வயிரமுற்றிய வேலமரத்தின் தாழ்ந்த கிளையினாற் பல்கிய—காண்போர் கண்ணைக் கவர்ந்து கொள்ளும் வலிபொருந்திய நிழலிலே தங்கி இருக்கும் குளிர்ச்சியற்ற காடு என்றும்[28] காடு பற்றி நற்றிணையில் வருணிக்கப்படுகின்றன.

இளவேனிலைப் பற்றி எழிலொழுக வருணிக்கப்படுகின்றது. ஆற்றங்கரையிலுள்ள மாமரத்தின் அசைகின்ற கிளைகள் தழைத்தமையால் தளிர்மிக்கு அழகு பொருந்திய குளிர்ந்த நறிய சோலைகளில் தன் காதற் சேவலோடு கூடியுறையும் சிவந்த கண்ணையுடைய கரிய குயிற்பேடை ஒன்றனை ஒன்று விரும்பி எதிரெதிர் இருந்து கூவி மகிழும் பூக்கள் நிரம்பிய இளவேனில்[22] என்றும் மாவின் பூங்கொத்து மீதிருந்து குயிலின் சேவலும் பேடையும் எதிரெதிர் அமர்ந்து, "ஓ, தலைவனும் தலைவியுமாய் அமைந்து புணர்ந்துடையீர், பிரியாதீர், இன்னும் பல படியும் புணருங்கோள்" என்று தம் இனிய குரலால் இசைத்திடும் இன்பமுடைய இளவேனில்[30] என்றும் தீட்டப்படுகின்றது. தலைவன் செல்லும் பாலை நில வழியின் வறட்சி பற்றிக் கூறப்படுகின்றது. உலர்ந்த கொடிகள் பின்னிக்கொண்டு கிடக்கும் முன்பொருந்திய அடியினையுடைய இலவ மரத்தின் விளங்குகின்ற கிளைகளை அசைத்து முறியுமாறு வீசி வெவ்விய காற்று மோதும் மூங்கில்கள் நிறைந்த பகுதியில் விரைந்த செலவினையுடைய பிடியானை தன் கன்றொடு கூடி நின்று வருந்த, நெடுந்தூரம் நீர் சிறிதும் இன்றி வற்றிய நிழலில்லாத அவ்விடங்கள் கடத்தற்கரிய கவர்த்த வழிகளை உடையன எனப்படுகின்றது.[31]

---

28. நற்றிணை; 256 : 6-11.
29. ,, 118 : 1-4.
30. ,, 224 : 4-6.
31. ,, 105 : 1-6.

## உவமைகள்

எதையும் எளிதில் விளங்க வைத்து உள்ளத்தில் அழுந்தப் பதிய வைப்பதற்கு உவமை பயன்படுகின்றது. அதைப்போல இது என்றால் அதில் ஒரு தனி அழகு இருக்கின்றது. நற்றிணையில் வரும் தலைவியின் கண்களுக்கு நல்லதோர் உவமை பொருத்திக் காட்டப்படுகின்றது. தலைவியின் கலங்கிய நிலையில் அழுகையால் பனித்துக் கிடக்கின்றன. அதற்கும், பலவாகிய இதழ்கள் பொருந்திய குவியாது விரிந்திருக்கும் நெய்தற்பூ, நெற்கதிரை அறுக்கும் களமருடைய கூரிய வாள் அரிதலால் நீரில் நனைந்து தண்ணீர் துளித்துத் தோன்றுவதும்,[32] குவளையின் நீர் வடிகின்ற ஒளி பொருந்திய மலர் தோன்றுவதும்[33] உவமைகளாகக் காட்டப்படுகின்றன.

அந்தத் தலைவியின் அழகுக்கு மாந்தை நகர் உவமை காட்டப்படுகின்றது.[34] காதலால் கொல்லும் அவளுக்குக் கொல்லிப்பாவை உவமை காட்டப்படுகின்றது.[35] தலைவி வாய்விட்டு அழுது கலங்கிய வருத்தம் ஆம்பல் என்னும் பண்ணையுடைய இனிய புல்லாங்குழல் இசையெடுத்தாற் போல் அமைந்தது எனப்படும்.[36] அவள் நெஞ்சின் நடுக்கத்திற்குக் கரையை மோதி ஓடுகின்ற கான்யாற்றின் இடிகரை வேர்கள் எல்லாம் அடைபட்டுத் தோன்றிக் காற்றால் அலையும் மாமரத்தின் அழகிய தளிர் உவமிக்கப்படுகின்றது.[37] கள்ளுண்டார்க்கு அக் கள்ளால் உண்டாகும் களிப்பு நிற்குங்காலும் கண்சிவந்து காட்டும் வேறுபாடு

---

32. நற்றிணை; 195 : 6-8.
33. ,, 391 : 8-10.
34. ,, 35 : 7, 395 : 9.
35. ,, 185 : 11.
36. ,, 113 : 11-12.
37. ,, 381 : 3-5.

போன்றது காதலால் உடலில் ஏற்படும் மாறுதல் எனப் படுகின்றது.[38]

நெய்தல் மலர் நெற்போரின்கண் மகளிர்கண்போல மலரும் எனப்படுகின்றது.[39] ஓவியம் எழுதுவோரது ஒள்ளிய செவ்வரக்கின் குழம்பிடைத் தோய்த்த எழுது கோல் போல் தலையிலே துய்யினையுடைய பாதிரி எனப் பொருத்தமாகக் குறிக்கப்படுகின்றது.[40] புல்லிய இதழை யுடைய கோங்கினது மெல்லிதாய் விரிந்த உட்குடைவான பூக்குவியலில் தோன்றும் செம்மீன் என நினையுமாறு மலர்ந்து தோன்றும்.[41] காட்டிலே கோங்க மலர்கள் நிரம்பிப் பூத்து அணிசெய்கின்றன. இந்தக் காட்சி கார்த்திகைத் திங்களிலே ஏற்றும் ஒளியையுடைய நீண்ட விளக்குகளின் வரிசைபோலத் தோன்றுகின்றதாம்.[42]

வானத்திலே உலகத்தில் வாழும் உயிர்கள் மகிழ்ச்சி யடைவதற்காக மழைபொழியத் தோன்றும் மேகங்கள், ஆய் அண்டிரன் பரிசில் வழங்கச் சேர்த்து வைத்த யானைத் திரள் போன்று விளங்குகின்றன.[43] மழை பெய்வதற்காக மேகங்கள் மேலெழுந்து மயங்கி வருதல் பரிசிலர்க்குத் தேர்களை வாரி வழங்குவதற்காக வள்ளல் திருவோலக் கத்திற்கு வந்து வீற்றிருத்தல் போன்றது.[44]

கருநிறமான குன்றில் வெண்ணிறமான அருவி ஒன்று தோன்றுகிறது. அந்தக் குன்று பெரிய ஒன்றைக் கொம்

38. நற்றிணை; 35 : 11-12.
39. ,, 8 : 8.
40. ,, 118 : 7-8.
41. ,, 48 : 3-4.
42. ,, 202 : 9-11.
43. ,, 237 : 7-10.
44. ,, 381 : 7-10.

புடைய யானைபோல் தோன்றுகின்றது.[45] கடல் அலைகள் ஒலித்தல், போர்க்களத்தில் முரசு ஒலித்தலைப் போன்று விளங்குகின்றதாம்.[46] பெரியோர்கள் தாம் வழிபடும் தெய்வத்தைக் கண்முன்னே தோன்றக்கண்டாற்போலக் களவின்கண் பலவகையில் அலைந்து வருந்திய துயர் தீருமாறு தலைவியின் நல்ல மெல்லிய தோள்களைப் பெறல் உளதாம்.[47]

மரங்களுடைய நிழலில் தோன்றும் புள்ளிகள் புலியினது புள்ளிகள்போல் விளங்கினவாம்.[48]

## அகப்பொருள் நுட்பம்

சங்க இலக்கியத்தில் அகத்துறைப் பகுதியே மிகுதியும் காண்கின்றோம். நற்றிணை ஓர் அகப்பொருள் இலக்கியம். இதில் பொதிந்துள்ள அகப்பொருள் நுட்பங்கள் சுவை மிகுந்தவை.

ஒருவரைப் பார்த்ததும் அவருடைய கண்கள்தாம் முதலில் எவரையும் கவரும். தலைவியின் கண் என்றால் சொல்லவும் வேண்டுமா? கண்டோர் நிலைத்த துன்பமுறு தற்கு ஏதுவாகிய அரிபரந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் என்றும்[49], பல்கிய பெரிய அழகமைந்த அமர்த்த கண்கள் என்றும்[50] கூறப்படுகின்றன. பிரிவுக்காலத்தில் அக்கண்கள் கலங்கி அழும் தோற்றம் எவ்வளவு இரங்கத்தக்கதாக இருக்கும். குவளை மலர் போன்ற பெரிய அமர்த்தலை யுடைய குளிர்ச்சியுற்ற கண்கள் என்றும்[51], நெய்தல்பூ நீரில்

---

45. நற்றிணை; 18 : 8-10.
46. ,, 395 : 4-6.
47. ,, 9 : 1-2.
48. ,, 391 : 2.
49. ,, 8 : 1.
50. ,, 256 : 2.
51. ,, 391 : 8-10.

நனைந்து தண்ணீர் துளித்துத் தோன்றுவது போன்று கண்ணீரால் நனைந்து நீர் துளித்து அழுதுநிற்கும் கண்கள் என்றும்[52] கூறப்படுகின்றன. அவளுடைய[53] நுதலும் முலையும்[54] அல்குலும்[55] கூந்தலும்[56] மேனியும்[57] நன்கு சிறப்பித்துக் கூறப்படுகின்றன.

அகப்பொருள் தலைவி எத்துணை மென்மையானவள்? வழிநடந்த வருத்தம் தீர நிழலைக் கண்டால் நெடும் பொழுது அங்கே தங்கியும் மணலைக் கண்டால் சிற்றில் புனைந்து விளையாடியும் மெல்லமெல்லச் செல்வாயாக[58] என்று அவளிடம் கூறுவதால் அறியலாம்.

காதல் எவ்வளவு உயர்ந்தது, விழுமியது, சிறந்தது, வலியது என்றும் குறிக்கப்படுகின்றது. கொண்கான நாட்டின்கண் உள்ள நன்னனது நல்ல நாட்டில் இருக்கின்ற பொலிவு பொருந்திய ஏழில் மலையைத் தாம் பெறுவதா யினும் நின்னைவிட்டுப் பிரிபவர் யார் எனத் தலைவன் தலைவியிடம் குறிப்பிடுவதால் உணரலாம்.[59]

அகமும் மிக நுட்பமானது. அந் நுட்பத்தை நுட்பமாக விளக்குவன உள்ளுறையும் இறைச்சியும்! இவை இரண்டும் நற்றிணைப் பாடல்களில் ஏற்ற இடங்களில் பொருந்த அமைந்து இன்பம் பயக்கின்றன. பொங்கி எழுகின்ற அலைகளால் அலைத்து ஒதுக்கப்பட்ட நீண்ட மணல் பரந்த கரையில் நிற்கும் நாவல் மரத்தினின்றும் உதிர்ந்த கரிய

---

52. நற்றிணை; 195 : 7-9.
53. ,, 167 : 11.
54. ,, 9 : 6.
55. ,, 8 : 2.
56. ,, 364 : 10-11.
57. ,, 8 : 3.
58. ,, 9 : 7-9.
59. ,, 391 : 6-10.

கனியைக் கண்டு தன் இனத்து வண்டு என்று பிறழக் கருதிச் சூழ்ந்த தும்பியைப் பழமென்றே நினைந்து நண்டொன்று வந்து பற்றிக் கொண்டதனால் வருந்தி அத்தும்பி இசைக்கும் இசையினைக் கேட்டு இரைதேடித் திரியும் நாரை வரக் கண்டு தான் கண்ட நாவற்கனியை அஞ்சிக் கைவிட்டு நீங்கும் நீர்த் துறை[60]; இஃது ஓர் அழகான இயற்கை ஓவியம். ஆனால் இதில் உள்ளுறை அமைந்து இன்பந் தோற்றுவிக்கின்றது. நாவற்கனி தலைவியாகவும், தும்பி தோழியாகவும், நண்டு தவறு இழைக்கும் சுற்ற மாகவும், இரைதேடித் திரியும் நாரை தலைவனாகவும் உவமிக்கப்படுகின்றன. கனியைத் தும்பி மொய்த்தல் தலைவியைத் தோழி சார்ந்திருப்பதாகவும், நண்டு கைப் பற்றிக் கொள்ளுதல் சுற்றத்தினர் தலைவியை இற்செறிப்ப தாகவும், நாரை வரக் கண்டு நண்டு கனியை விடுதல் தலைவன் வரவுகண்டு தலைவியின் இற்செறிப்பொழித்து அவனுக்கு மணமுடிப்பதாகவும் காட்டப்படுகின்றன. இது போல் பிற பாடல்களிலும் வருகின்றன.[61]

கன்றுடனே இளம்பிடியை அணைத்த நீண்ட கையை யுடைய களிற்றுயானை தேனைத் தொடுகின்ற ஈக்கள் எல்லாம் ஒடுமாறு அவ்வேங்கையின் பொன்போன்ற பூங்கொத்தால் ஆகிய உணவைப் பாதுகாத்து நின்றும் ஊட்டும்.[62] இதில் இறைச்சிப்பொருள் அமைந்து நயம் காட்டுகின்றது. வேழம் தலைவனாகவும், இளம்பிடி தலைவியாகவும், கன்று மக்களாகவும் உவமிக்கப்படு கின்றன. கன்றோடு பிடியைத் தழுவிய வேழம் கவளம் ஊட்டுவதைப் போன்று காதலியோடு இல்லறம் நிகழ்த்தி அவளிடத்துப் பிறந்த மக்களுடனே அவளையும் பாது காத்துக் கொள்ளுவேன் எனக் கூறும் காதலன் கூற்று

60. நற்றிணை; 35 : 1-6.
61. ,, 195 : 2-4, 391 : 4-5, 395 : 6-8.
62. ,, 202 : 4-6.

குறிக்கப்படுகின்றது. பிற பாடல்களில் பல இடங்களில் இறைச்சிப் பொருள் அமைந்துள்ளன.[63]

நோய் செய்து அந்த நோய்க்கும் மருந்தாவாள் என்று திருக்குறள் தலைவியைப் பற்றிக் குறிப்பிடும். காம நோய்க்கு மருந்தெனப்படும் தலைவி என்கிறது நற்றிணை.[63] தலைவி தரும் காமநோய் தாங்கொணாத் துன்பத்தை அளிக்கின்றது தலைவனுக்கு. அவள் தன்னைக் கொலையே செய்கின்றாள் என்று புலம்புகின்றான் தலைவன்.[65] தலைவனைப் பார்த்து, நீ யார்? எமக்கு நீ என்ன வேண்டும்? ஆராய்ந்தால் நட்புடையாரைப் போலவும் அல்லை. அயலான் ஆயினை என்று கிளக்கின்றாள் தலைவி.[66] அகப்பொருளில் ஊடல் ஓர் அழகு அன்றோ?

தலைவியுடன் வாழும் வாழ்க்கையினும் சிறந்த ஒன்று உண்டோ? தலைவர் பொருள் தேடிச் செல்கின்றாரே? அவளுடைய அழகிய கூந்தலில் அணைந்து துயிலும் இன்பத்தினும் அப்பொருள் பெரிதோ? வாழ்க்கை அவளிடமா? அப்பொருளிடமா? அவளிடம் பெறும் இன்பமே அருமையான பெறற்கு அரிய பெரிய பயன் என்கிறது பாடல்.[67]

63. நற்றிணை; 48 : 3-6, 105 : 1-3, 105 : 4-5, 113 : 1-3, 167 : 2-4, 167 : 8-9, 185 : 3-4, 185 : 8-9, 195 : 5, 318 : 7-9, 384 : 1-4.
64. ,, 384 : 9-11.
65. ,, 185 : 12.
66. ,, 395 : 1-2.
67. ,, 337 : 8-9.

# 2. குறுந்தொகை

எட்டுத் தொகை நூல்களில் குறுந்தொகை நாலடிச் சிற்றெல்லையையும் எட்டிப் பேரெல்லையையும் உடைய நானூறு அகவற்பாக்களைக் கொண்டதாகும். குறுந் தொகை எட்டுத் தொகை நூல்களில் முதலில் தொகுக்கப் பட்டது என்பர் அறிஞர். இதற்கு, குறுந்தொகையிலுள்ள சொற்றொடர் காரணமாகப் பேர்பெற்ற புலவர்கள் அப் பெயராலேயே பிற தொகை நூல்களில் வழங்கப்பெறு கின்றனர்; ஆசிரியப்பா, கலிப்பா, பரிபாடல் என்னும் மூன்று வகை யாப்புகளால் ஆன எட்டுத்தொகை நூல் களை முறையே செய்யுட்களைத் தொகுக்கத் தொடங்கிய வர்கள் முதலில் ஆசிரியப் பாக்களில் தனியாக உள்ள அகப்பாட்டுகளைத் தொகுத்து அடியளவால் மூன்று பிரிவாக்கி, குறைந்த அளவையுடைய குறுந்தொகையை முதலில் செப்பம் செய்தார்கள் என்பது ஒரு வகையில் இயல்புடையதாகவே தோன்றுகின்றது என்பர் டாக்டர் உ. வே. சாமிநாதைய்யர் அவர்கள்.[1]

குறுந்தொகையில் கடவுள் வாழ்த்துச் செய்யுள் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் இயற்றப்பட்டது. அது முருகனைப் பற்றிய பாடல். இந்நூலினைத் தொகுப் பித்தார் இன்னார் என்று தெரியவில்லை. பூரிக்கோ என்பவர் ஆதரவால் இந்நூல் தொகுக்கப்பட்டது. இந் நூலை இருநூற்று ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். பத்துப்பாடல்களின் ஆசிரியர் பெயர் காணப்படவில்லை. பிற தொகை நூல்களைக் காட்டிலும் பிற்கால உரை யாசிரியர்களால் குறுந்தொகையே மிகுதியாக எடுத்தாளப்

1. குறுந்தொகைப் பதிப்பு; முகவுரை: பக். 10.

பட்டுள்ளது. நூற்று அறுபத்தைந்து செய்யுட்களே பிறநூல் உரைகளில் மேற்கோளாகக் காட்டப் பெறாதவையாகும். இந்நூல் 'நல்ல குறுந்தொகை' என்று பாராட்டப்படுகிறது.

"இச்செய்யுள்களில் காணப்படுவனவாகிய தலைவன் தலைவியரிடையே காணப்படும் அன்பு முறைகளில் அவர் இல்லறம் நடத்தும் முறை முதலியன உலகியலைச் செம்மைப்படுத்தும் தன்மையின." சங்க காலப் புலவர் பெருமக்களின் கவியாற்றலை அறிந்துகொள்வதற்கு குறுந்தொகை ஒரு சிறந்த கருவி ஆகும். இதன்கண் அகநூற்றைப் போல முதல் கருப்பொருள்களைப் பற்றிய செய்திகள் விரிவாகக் காணப்படவில்லை; திருக்குறளைப் போல அறவே நீக்கப்படவுமில்லை. இலக்கண அமைதி நன்குடையதாகி விரிவும் சுருக்கமும் இன்றி இயற்கைக் காட்சிகளின் எழில் நலங்களையும், அகனைந்திணை யொழுக்கங்களையும், பண்டைக்கால நாகரிகச் சிறப்பையும், வேறு பல அரிய பொருள்களையும் விளக்கிக் கொண்டு நிற்பது இக்குறுந்தொகை. எண்பத்தேழு மரஞ்செடி கொடிகளைப் பற்றியும், இருபத்தைந்து வள்ளல்களைப் பற்றியும், ஆறு (6) மலைகளைப் பற்றியும், இரண்டு ஆறு களைப் பற்றியும், ஒன்பது ஊர்களைப் பற்றியும் அவ்வவ் வற்றின் இயல்புகளை நன்றாக உணர்ந்து குறுந்தொகைப் புலவர்கள் வெளிப்படுத்தி உள்ளார்கள். தமிழர்தம் களவு, கற்பு ஆகிய அகத்திணை ஒழுக்கங்களைக் குறுந்தொகை அழகுற விளக்குகிறது. அக்காலத் தமிழ் மக்களின் வழக்கங்கள், வாழ்க்கை நிலை, நாகரிகம், அரசியல் முதலியவைகளை ஒருவாறு அறிந்து கொள்வதற்குக் குறுந்தொகை உதவுகிறது. அறம், பொருள், இன்பம், வீடு பற்றிய நீதிகள் குறுந்தொகையில் அங்கங்கே அமைந்து விளங்குகின்றன. நூற்று எழுபத்து நான்கு உவமைகள் குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளன. தாம் பாடிய பாவடித் தொடரினாலும் உவமையாலும் பெயர் பெற்றவர்களாகப் பதினெட்டுப் புலவர்கள் பெயர்கள் காணப்படு

கின்றன. அக்கால வரலாற்றுக் குறிப்புகள் குறுந்தொகையில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

குறுந்தொகையில் இருபத்து நான்கு பாடல்கள் சேர நாட்டைப் பற்றிய குறிப்பினை நமக்குத் தருகின்றன.[2]

## தலைவியின் அழகு

கொல்லிக் கண்ணன் என்னும் புலவர் தலைவியின் அழகினை மரந்தை என்னும் நகருக்கு ஒப்பிட்டுள்ளார்.[3] சேரமானெந்தை பாடிய பாடலில் தலைவியின் ஒளிவிடும் நெற்றி, மலைப் பக்கத்தில் வளர்ந்துள்ள வெண்கடப்ப மரம் வேனிற் காலத்தே மலர்ந்து மணம் கமழ்வது போன்று நறுமணமுங் கொண்டு திகழ்கிறது என்று குறிப்பிட்டுள்ளார்.[4] பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலை வழியில் காட்டிடையே தழைத்த வளைந்த கிளைகளையுடைய வெட்சியினது முறுக்கு அவிழ்ந்த பலவாகிய பேரரும்புகள் மணக்கின்ற கரிய கூந்தல் என்று தலைவியின் கூந்தல் மணத்தினைப் புலப்படுத்தியுள்ளோம்.[5] மோசிகீரன் என்னும் புலவரால் தலைவி மேனியின் மணமும் தன்மையும் (குளிர்ச்சி) பொதிய மலையின் வேங்கை, காந்தள் மலர்களின் மணத்தோடும், ஆம்பல் மலரின் குளிர்ச்சியோடும் ஒப்பிட்டுப் பேசப்பட்டுள்ளன.[6] பரணர் தலைவியின் அழகினைக் கண்டோர் நெஞ்சங் கலங்கி மயங்கி வீழ்ந்து உயிர்விடச் செய்யும் இயல்புடைய கொல்லிப் பாவையின்

---

2. பாடல்கள்: 16, 22, 31, 37, 80, 84, 89, 91, 109, 124, 128, 135, 137, 166, 179, 209, 231, 238, 243, 262, 268, 283, 398.
3. குறுந்தொகை; 34: 6-7.
4. ,, 22: 3-5.
5. ,, 209: 4-7.
6. ,, 84: 3-5.

அழகிற்கு உவமை கூறியுள்ளார்.[7] குன்றியன் தம் பாடல் ஒன்றில் தலைவியின் நலத்தினைத் 'தொண்டி' என்னும் கடற்கரை நகரத்து நலத்தோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.[8]

## வரலாற்றுக் குறிப்புகள்

குறுந்தொகைப் பாடல்கள் ஆங்காங்கே சில வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டுள்ளன. நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் கொண்ட பாடல்கள் ஆயினமையின் நெடிய வரலாற்றுக் குறிப்புகளுக்குக் குறுந்தொகையில் இடமில்லை.

குட்டுவனது படைவீரர்கள் பகைவரைக் கொன்று ஆரவாரிக்கின்றனர். அவ் ஆரவார ஒலியினைக் கேட்டு அந் நெய்தல் நிலத்தின் கடலோரத்தே வாழும் வண்டாழ்ங் குருகு என்னும் பறவைக் கூட்டங்கள் அஞ்சி நடுங்கின. இந் நெய்தற் கடற்கரையோரம் குட்டுவனுக்குரிய மரந்தை என்னும் நகரம் இருந்தது.[9] கொடிய போரில் பலவேற் படைகளையுடைய எழினியென்னும் உபகாரி தனக்குரிய நிரையைக் கைக்கொண்ட பகைவரிடத்திலிருந்து ஆநிரையை மீட்டுக் காத்தான்.[10] இவ் எழினியை அதியமான் அஞ்சி என்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் சொல்கிறார்.[11] இச் செய்தியின் உண்மை அகநானூற்றின் இரண்டு பாடல்களானும் அறியப்படும்.[12] மேலும் இச் செய்தி இப்பொழுது கிடைக்கும் தகடூர் யாத்திரைச் செய்யுட்களாலும் வலியுறப் பெறுகின்றது என்பர் டாக்டர்

7. குறுந்தொகை; 89: 4-7.
8. ,, 238: 4-5.
9. ,, 34: 4-7.
10. ,, 80: 4:7.
11. குறுந்தொகைப் பதிப்பு; பக்: 184.
12. அகநானூறு; 105; 10-15; 372 : 9-11.

உ. வே. சாமிநாதையர் அவர்கள்.[13] மோசிகீரன் என்னும் புலவர் ஆய் என்னும் வள்ளல் தோள் வளையையுடையவன் என்றும், அவனுக்குரிய பொதிய மலையில் மேகங்கள் தவழ்ந்து கொண்டிருக்கும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.[14]

பரணர் தாம் 'பாடும் பாடல் ஒவ்வொன்றிலும் யாரை யேனும் புகழாமலும் அக்காலத்து நிகழ்ந்த கதை எதை யேனும் அமையாமலும் இரார்' என்று அறிஞர் குறிப் பிடுவர். இவர், பெரிய அணிகலத்தை அணிந்த சேரனுக் குரியது அச்சந்தருதல் மிக்க கொல்லி மலை என்றும், அம்மலையிலுள்ள கரிய கண்களையுடைய தெய்வம், அம் மலையின் மேற்குப் பக்கத்தில் நல்ல இயலையுடைய பாவையை எழுதியுள்ளது என்றும் குறிப்பிட்டுள்ளார்.[15]

ஒளவையார் அதியமான் அஞ்சியின் ஈகைச் சிறப்பினை ஒரு பாடலில் இனிதுறக் கிளத்தியுள்ளார். காலமும் இடமும் பெறுவார் தகுதியும் நோக்கி யொழியாமல் எப்பொழுதும் கொடுக்கும்—மேகம் போன்று கைம்மாறு கருதாத வண்மையையுடைய கையினையும், விரைந்த செலவையுடைய ஆண் யானைகளையும், உயர்ந்த தேர் களையும் உடையவன் அதியமான் அஞ்சி என்று அஞ்சியின் கொடைப் பண்பினையும் படைப்பெருமையினையும் பாராட்டியுள்ளார்.[16] புலவர் குன்றியன், தலைவியின் அழகிற்குத் தொண்டி நகரை உவமையாகக் கூறியிருக்க, பரணம் அத்தொண்டி மேல் கடற்கரையில் அமைந்த பட்டினம் என்றும், அத்தொண்டி திண்மையாகிய தேரை யுடைய சேரனுக்கு உரிமையுடையதென்றும் குறிப்பிட்டுள் ளார்.[17] கூடலூர் கிழார் என்னும் புலவர், மரந்தை

---

13. குறுந்தொகைப் பதிப்பு; பக்: 184.
14. குறுந்தொகை; 84: 3-5.
15. ,, 89: 4-5.
16. ,, 91: 5-8.
17. ,, 128: 1-3.

கடற்கரைப் பட்டினம் எனக் குறிப்பிடுமுகத்தான், அக் கடற்றுறைப் பட்டினத்தில் நீர்த்துறையில் அலைகள் அடித்து வந்த மீன்களை ஒதுக்கிவிட்டு, வெள்ளிய சிறகை யுடைய நாரையின் கூட்டங்கள் தாமே முயன்று அயிரை மீனைப் பெற்று உண்கின்றன என்று குறிப்பிட்டுள்ளார்.[18]

இவ்வாறு எட்டுப்பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

## மகளிர் விளையாட்டு

சில பாடல்களில் மகளிரின் பொழுதுபோக்கு விளை யாட்டுகள் சுட்டப்பட்டுள்ளன. மகளிர் துணங்கைக் கூத்தினை அயர்வர் என்ற செய்தி ஆதிமந்தியார் பாடலால் அறியப்படுகின்றது.[19] மகளிர் பச்சை அவலை இடித்த வயிரம் பொருந்திய உலக்கையை அழகிய கதிரையுடைய நெற் பயிரையுடைய வயலினது வரப்பாகிய அணையிலே படுக்க வைத்துவிட்டு ஒளிவிடும் வளையையுடைய பெண்கள் விளையாடுகின்றனர் என்று குன்றியன் என்னும் புலவர் குறிப்பிட்டுள்ளார்.[20] நம்பி குட்டுவன் என்னும் புலவர், ஒள்ளிய வளையையுடைய பெண்கள், மானின் குளம்பைப் போன்ற பிளவையுடைய இலைகளையுடைய அரும்பினது, குதிரைக் கழுத்திலிடும் மாலையின் கண் உள்ள மணியைப் போன்ற ஒள்ளிய பூவை வலிய அலர்த்தி னிட்டு விளையாடத் தொடங்குகின்றனர் என்று குறிப் பிட்டுள்ளனர்.[21] ஔவையார், ஆம்பல் மலரின் புறவித ழொடித்த முழுப் பூவைச் செருகி, புதுவெள்ளம் வரப் பெற்ற நீர்த்துறையை விரும்பிப் புனல் விளையாட்டிற்குப் பரத்தையர் செல்வதாகக் குறிப்பிட்டுள்ளார்.[22]

---

18. குறுந்தொகை; 166 : 1-3.
19. ,, 31.
20. ,, 238 : 1-3.
21. ,, 243 : 1-3.
22. ,, 80 : 1-3.

இவ்வாறு மகளிர் விளையாட்டு நிகழ்ச்சிகள் குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளன.

**யானை**

வற்றிய பாலையிலும் வற்றாத அன்பினைப் புலவர் நயமுற எடுத்துரைப்பர். பாலை நிலத்தில் பெண் யானையினது பசியை நீக்குதற்பொருட்டுப் பெரிய துதிக்கையையுடைய ஆண் யானை மெல்லிய கிளைகளையுடைய யாமரத்தின் பட்டையை உரித்து அதன் நீரைப் பருகச் செய்யும் அன்பின என்று புலவர் பாலைபாடிய பெருங்கடுங்கோ பாடியுள்ளார்.[23]

உயர்ந்த மலைப்பக்கத்தில் இனிய தேனிறாலைக் கிழித்த பசிய மூங்கில்களின் குருத்தைத் தின்ற ஆழ்ந்த வாயையுடைய பேதைமையையுடைய யானையினைக் குட்டுவன் கண்ணன் என்னும் சேரநாட்டுப் புலவர் தம் பாடலொன்றில் குறிப்பிட்டுள்ளார்.[24]

**பாலை**

கடத்தற்கரிய பாலை வழியின் வெம்மையும் பிறவும் புலவர் பாடல்களில் ஆங்காங்கு இடம் பெற்றுள்ளன. 'விண்டொட நிவந்த விலங்குமலைக் கவான்'[25] 'வானத்தைத் தொடும்படி உயர்ந்த குறுக்கிட்ட மலையின் அடிவாரம்' என்று பாலை நிலத்து மலை வருணிக்கப்பட்டுள்ளது. அறச் சிந்தனையாளர் வழிப் போவாரது உயிரைத் தாங்கற்குரிய அறத்தைச் செய்யும் நெல்லி மரத்தினைப் பாலை நிலத்து வழியோரமாக நட்டுள்ளனர். அந்நெல்லியின் அழகிய பசிய காய்கள் வலிமையுடைய புலிக் குட்டிகள் கொள்ளற்குரிய இடத்தில் உதிர்ந்து

---

23. குறுந்தொகை; 37 : 2-4.
24. ,, 179 : 4-7.
25. ,, 262 : 6.

உருளுகின்றன. அவ்விடத்தே கடத்தற்கரிய மலையுளது. இவற்றைக் கடந்து தலைவன் பொருள் தேடச் செல்கிறான் என்று பாலைபாடிய பெருங்கடுங்கோ குறிப்பிட்டுள்ளார்.[26] பிறிதொரு பாடலில் அப்புலவர், எப்பொழுதும் கூற்றுவனைப் போன்ற கொலைத் தொழிலைச் செய்யும் வேலையுடைய மறச்சாதியார் வழியினிடத்தே தங்கி, வழிப்போவாரைக் கொல்கின்றனர் என்றும், அப்புலாலைப் பருந்துகள் ஆர்வத்தோடு எதிர்நோக்கி நிற்கின்றன என்றும், அப்பாலை வழியில் நீரே இல்லையென்றும் பாலையின் கொடுமையினை நெஞ்சுருகும் வண்ணம் குறிப்பிட்டுள்ளார்.[27]

## உவமைகள்

உவமை நயங்கெழுமிய பாடல்கள் பத்து குறுந்தொகையில் இடம் பெற்று உள்ளன.[28]

அரும்பின் இலை, மானின் குளம்பைப் போன்று பிளந்துள்ளதாக நம்பி குட்டுவன் என்னும் புலவர் குறிப்பிட்டுள்ளார்.[29] சங்கப் புலவர்கள் இயற்கைப் பொருள்களைக் கூர்ந்து நோக்கி (Keen observation) ப் பாட்டோவியம் தீட்டுவதில் வல்லவர் என்பது இதனால் அறியப்படும். பாலை பாடிய பெருங்கடுங்கோ, பெரிய ஆண் யானையினது அடிச்சுவடு, கரும்பு நட்ட பாத்தியைப் போன்று அகன்றது என்ற குறிப்பைத் தந்துள்ளார்.[30] இவரே பிறிதொரு பாடலில் மகளிர் கண்ணிற்குக் கயல்

26. குறுந்தொகை; 209 : 1-4.
27. ,, 283 : 5-8.
28. ,, 16, 80, 89, 91, 128, 243, 262, 283, 398.
29. ,, 244 : 1-2.
30. ,, 262 : 7-8.

மீனை உவமையாக்கிக் கூறியுள்ளார்.[31] பரணர் தலைவியினைக் கொல்லிக் குடவரையில் எழுதப்பட்ட பாவையோடு ஒப்பிட்டுள்ளார்.[32]

நல்லறிவினை இழக்கச் செய்யும் காமத்தினைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ வில்லிலிருந்து எய்யப்பட்ட அம்புபோல் நெடுந்தூரத்தில் விழுந்து அழிவதனோடு ஒப்பிட்டுள்ளார்.[33] மேலும் அவர் தலைவியைக் கண்டும் காணாது செல்லும் தலைவன் செயல் அயலாருடைய சுடுகாட்டை வெறுத்துக் காணாது செல்லும் ஒருவர் செயலோடும் உவமித்துள்ளார்.[34]

பாலை வழியில் ஆறலைகள்வர் இரும்பினாற் செய்யப்பட்ட தம் அம்பைச் செப்பஞ் செய்யும்பொருட்டுத் தம் நக நுனியிலே புரட்டுதலால் உண்டாகிய ஒலி, சிவந்த காலையுடைய ஆண் பல்லி தன் துணையாகிய பெண் பல்லியை அழைக்கும் ஓசையுடன் ஒப்பிடப்பட்டுள்ளது.[35] பாலை பாடிய பெருங்கடுங்கோ காட்டும் உவமை இது. எழினி தன் ஆநிரையைத் தன் பகைவரிடமிருந்து காப்பது போலத் தலைவி தலைவனைத் தன் உறவினர் உதவியுடன் தன்னோடு தலைவன் பொய்கைக் கரைக்கு வருவதினின்றும் தடுப்பாளாக என்று பரத்தையொருத்தி பகர்வதாக உவமை நயங்கெழும் ஔவையார் தம் பாடலொன்றில் குறிப்பிட்டுள்ளார்.[36] நெடுந்தேரினையுடைய அஞ்சி போர் மேற்கொண்டுள்ள போர்முனைக்கு அருகில் வாழும் மக்கள் அமைதியுடன் உறங்கும் நாட்கள் சிலவேயாகுதல் போலத் தலைவன்பாற் சென்ற நெஞ்சினை

---

31. குறுந்தொகை; 398 : 3.
32. ,, 89 : 4-7.
33. ,, 231 : 4-6.
34. ,, 16 : 1-4.
35. ,, 80 : 4-7.
36. ,, 91 : 5-8.

யுடைய தலைவி உறங்கும் நாளும் சிலவேயாகும் என்று பிறிதொரு பாடலில் ஔவையார் உவமை நயம் காட்டியுள்ளார்.[37]

பாலை வழியில் ஆறு பார்த்து அலைக்கும் கொலை மறவராம் மறச் சாதியினரின் தொழிலைக் கூற்றத்தின் செயலோடு ஒப்பிட்டுப் பாடியுள்ளார் பாலை பாடுதலில் வல்ல பாலை பாடிய பெருங்கடுங்கோ.[38]

கீழ்க்கடல் அலைக்கு அருகிலுள்ளதாகிய—முதுமையால் சிறகுகள் நீங்கப் பெற்ற நாரை, சேரனது மேல் கடற்கரையிலமைந்த தொண்டி யென்னும் பட்டினத்தில் கடற்றுறையின் முன்னுள்ள அயிரை மீனைப் பெறும் பொருட்டுத் தலையை மேலே எடுத்தாற்போல, நெடுந் தூரத்திலுள்ளவளும் பெறற்கரியவளுமாகிய தலைவியைத் தலைவன் அடைய நினைக்கின்றான் என்று பரணர் தம் பாடலொன்றில் உவமை கூறியுள்ளார்.[39]

## உயரிய குறிக்கோள்கள்

ஆடவர்க்குத் தாம் மேற்கொண்ட தொழிலே உயிரென்றும், மகளிர்க்கு அவ்வாடவரே உயிரென்றும் அந்நாளில் கருதப்பட்டன. தலைவன் பொருள்வயிற் பிரிய நேரும்போது அப்பிரிவினை எண்ணும் தலைவி, தலைவனைப் பிரிந்த தலைவியர்க்கு இனிய வீடும் இன்னாமை தரும் என்று குறிப்பிடுகின்றாள்.[40] தலைவியை விட்டு அவள் புலப்பப் பிரியும் நிலை தனக்கேற்படுமானால் இரவலர் யாசிக்க வாராத நாட்களாக அமைவதாக என்று தலைவன் குறிப்பிடுவதாக ஒரு பாடல் வந்துள்ளது[41] இதனால் கொடைப் பண்பும் நெஞ்சும் வாய்ந்த தமிழர் அறச் சிந்தை தெரிய வருகின்றது. முன்னோரால் சேமித்து

---

37. குறுந்தொகை; 283 : 5.
38. ,, 128.
40. ,, 135 : 1-2.
41. ,, 337.

வைக்கப்பட்ட பொருளை அழிப்போர் பிறரால் செல்வரென்று கருதப்படமாட்டார். தாமாக ஈட்டிய பொருளை இல்லாதார் முன்னோர் ஈட்டிய பொருளின் பயனைத் துய்த்து வாழ்தல் இரத்தலைக் காட்டிலும் இழிவுடையது என எண்ணினார்கள். இத்தகு சிறந்த குறிக்கோள்களைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

## பழக்கவழக்கங்கள்

தலைவனைப் பிரிந்து தலைவியர் தனியே வீட்டில் உறைவதை இனிமையற்றதாகக் கொண்டனர் என்று பாலை பாடிய பெருங்கடுங்கோ குறிப்பிட்டுள்ளார்.[42] இக் கருத்தையே கம்பர் இராமன் சீதையை விட்டுக் காடு செல்லத் துணிந்தபோது உன் பிரிவைக் காட்டிலும் காடு வருத்துமோ எனக் குறிப்பிட்டுள்ளார்.[43] மகளிர் மாலையில் தம் கையால் நெய்யை வார்த்து விளக்கை ஏற்றுகின்றனர். பெறுதற்கரிய தலைவர் மாலைக் காலத்தில் வர விருந்தயர்ந்து மகிழ்கின்றனர்.[44] தலைவன் வேட்டைமேற் செல்லும்போது தன்னுடன் நாயையும் அழைத்துச் சென்று காட்டில் கடமா என்னும் ஒருவகை விலங்கை அலைத்து வேட்டையாடுவான்.[45] உப்பு வாணிகர்கள் கூட்டங் கூட்டமாக வாணிகஞ் செய்யப் புறப்படுவர்.[46]

## அகப்பொருள் நுட்பம்

குறுந்தொகை அகப்பொருள்நயம் கெழுமிய பாடல்கள் பல நிறைந்தது. ஈண்டு ஒரு சில காண்போம்:

---

42. குறுந்தொகை; 124 : 2-4.
43. கம்பராமாயணம்; அயோத்தியா: நகர்நீங்கு படலம், 226.
44. குறுந்தொகை; 398 : 2-0.
45. ,, 179 : 1-3.
46. ,, 124 : 1-2.

தலைவன் பிரிந்தால் தலைவி கண்களில் நீர் நிறைந்து நெகிழ்ச்சியடைவாள்.[47] கள்ளி மரங்கள் அடர்ந்த காட்டைக் கடந்து சென்ற தலைவன் தன்னை ஒருஞான்று எண்ணிப் பார்க்கமாட்டானா என்று தலைவி துயருறுவாள்.[48] தலைவியைத் தலைவன் மணம் செய்யாது தாழ்த்தவிடத்து ஊரில் அலர் எழும். அவன் வரைவொடு புகுந்த வழி அலர் ஒழிந்து ஊரார் அவன் மணம் செய்து கொள்ளும் இனிய செய்தியினைக் கேட்டு இன்புறுவர்.[49]

தலைவன் தலைவியைப் பிரியேன் என்று சூளுரைப்பான். ஒருஞான்று பிரிந்தபொழுது தலைவி, 'தொண்டி நகர அழகு போன்ற நீ நுகர்ந்த என் அழகுச் செவ்வியினைத் திருப்பித் தந்துவிட்டு, நீ என்பால் முதற்கண் செய்த சூளினை — சபதத்தினைத் (பிரியேன் — பிரியின் தரியேன்) திரும்பப் பெற்றுச் செல்வாயாக' என்பாள்.[50]

தலைவன் தலைவியை விட்டு நீங்கிச் செல்லும் காட்டு வழியில் ஆண் யானை தன் பெண் யானையின் பசியை நீக்கும் பொருட்டு யாமரத்தின் பட்டைகளை ஒடிக்கும் அன்புக் காட்சியினைக் காண்பர் என்று நுட்பமாகக் குறிப்பிட்டுத் தலைவனும் தலைவிபால் அன்பு பெரிதும் உடையவன் என்றும், ஆதலின் நல்குவன் என்றும் குறிப்பிடுகின்றாள்.[51] தலைவி தான் களவொழுக்கத்தில் ஈடுபட்ட காலையில் செவிலித்தாய் முயங்க நேரிட்டால் 'பெரிதும் வியர்த்தேன்' என்று கூறித் தன் வெறுப்பைப் புலப்படுத்துவாள்.[52] தலைவன் பிரிவால் தலைவியின் நுதல்

---

47. குறுந்தொகை; 22 : 1-2.
48. ,, 16 : 1-5.
49. ,, 34 : 1-3.
50. ,, 238 : 4-5.
51. ,, 37.
52. ,, 84 : 1-2.

கவினிழந்த செயலை நம்பி குட்டுவன் ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.[53] இரவில் உறக்கம் வாராத தலைவி, 'நெய்தல் நிலத் தலைவனை யான் இதுபோது நினைக்க வில்லை; எனவே என் கண்கள் படிந்து உறங்குவதாக என்று நயமாகக் குறிப்பிடுவள்.[54] தலைவனது வரவினால் இன்பம் உண்டாயினும் வரும் வழியில் நிகழும் ஏதம் நினைந்து அச்சமும், அவன் வாராமையின் அவனைக் காணாத் துன்பமும் உண்டாதலின் தலைவி பிரிந்து செல்கின்றீரோ எனத் தலைவனிடம் செப்பும் ஆற்றலும் இழந்து, மீண்டும் வருவீரோ என்று கேட்டலையும் செய்யாது நிற்கும் இக்கட்டான நிலைமையினைக் கருவூர்ச் சேரமான் சாத்தனார் என்னும் புலவர் குறிப்பிட்டு, தலைவியுடன் இடையீடின்றி உடனுறை வதற்கு விரைந்து வரைந்து கொண்டு வாழும் இல்லற நிலையே தக்கது என்ற நுட்பக் கருத்தையும் உள்ளடக்கி ஒரு பாடலைத் தந்துள்ளார்.[55]

இவ்வாறு குறுந்தொகைப் பாடல்களில் அகப்பொருட் நுட்பங்கள் பல அமைந்துள்ளன. அப்பாடல்கள் தமிழரின் அகவாழ்க்கையின் சிறப்பினை அங்கை நெல்லிக்கனியெனக் காட்டி நிற்கின்றன.

---

53. குறுந்தொகை; 109 : 2-4.
54. ,, 243 : 4-5.
55. ,, 268.

## 3. ஐங்குறு நூறு

ஐந்திணைகளில் ஒவ்வொன்றுக்கும் குறைந்த அடிவரையறை பெற்ற நூறு நூறு பாடல்களைத் தனித்தனிப் பெற்றுள்ளமையால் 'ஐங்குறு நூறு' இப்பெயர் பெற்றது. இதில் அமைந்த பாடல்கள் அகவற்பாவின் கீழ் எல்லையாகிய மூன்று அடிச் சிறுமையும் ஆறு அடிப் பேரெல்லையையும் கொண்டவை.

நூலுக்குப் புறம்பாகிய கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற வரிசையில் இதன் ஐந்து பகுதிகளும் உள்ளன. இவற்றைப் பாடியவர்கள் முறையே ஓரம் போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் என்னும் ஐவராவர்.

ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துப் பாடல்கள் கொண்ட பத்துப் பகுதிகளாக உள்ளது. இவற்றுள் ஒவ்வொன்றும் பத்து என்று குறிக்கப்படுகிறது. ஒவ்வொரு பத்தும் தனித் தனியான கட்டுக் கோப்பு உடையது. இது பொருளமைப்பினாலேயோ, இதனுள் அமைந்த பத்துப் பாடல்களிலும் ஆட்சி பெறும் ஏதேனும் ஒரு சொல்லினாலேயோ, பெயரிடப்பட்டிருக்கின்றது. 'களவன் பத்து', 'மஞ்ஞைப் பத்து,' 'தெய்யோப் பத்து' முதலியன சொல்லாட்சியினால் பெற்ற பெயர்கள். 'பருவம் கண்டு கிழத்தி உரைத்த பத்து', 'தோழி வற்புறுத்த பத்து' முதலியவை பொருளமைப்பால் பெற்ற பெயர்கள். 'வேட்கைப் பத்து, 'அன்னாய்ப் பத்து' முதலியன சொல்லாட்சியும் பொருளமைதியும் பொருந்தியவை.

இத்தொகையைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்றும், தொகுப்பித்தார் யானைக்

கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையார் என்றும், நூலிறுதியில் உள்ள பழங்குறிப்பினால் தெரியவருகின்றது.

## யாய் வேட்டவை

"காவல் பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற் பொருட்டு நெல்பல பொலிக; இரவலர்க்கு ஈதற் பொருட்டுப் பொன் மிகப் பொலிக" என்றும், "வயல்கள் வளங்கொண்டு விளைவதாகுக; நாள்தோறும் இரவலர் வந்து பொருள் பெறுவாராக" என்றும், "ஆநிரைகள் பால் வளம் சுரப்பதாக, எருமைகள் பல மிகுவதாகுக" என்றும், "பகைவர்கள் தம் பெருமிதம் இழந்து புல்லரிசிச் சோறு உண்பாராகுக; பார்ப்பார் மறை ஓதுவாராகுக" என்றும், "பசி இல்லை ஆகுக; நோய் நெடிது நீங்குக" என்றும் "வேந்தன் பகைமை ஒழிக; அவன் பல்லாண்டுகள் வாழ்க" என்றும், "அறச் செயல்கள் மிக ஓங்குக: அறத்தின் நீங்கிய பாவம் முற்றவும் கெடுக" என்றும், "அரசன் முறையினைச் செய்க; களவு முதலிய குற்றங்கள் நிகழாதொழிக" என்றும், "நன்று மிகவும் பெருகுக; தீமை சிறிதும் இல்லையாகுக" என்றும், "மழை தப்பாது பொழிக; வளங்கள் நிறைய வாய்ப்பதாகுக" என்றும் தாய் விரும்பி வேண்டினாள்.[1]

## உள்ளுறை உவமம்

வெளிப்படையானன்றிக் குறிப்பாற் பொருளைப் புலப்படுத்தும் உவமை, உள்ளுறை உவமம்[2] எனப்படும். இவ்வுள்ளுறை கருப்பொருளில் தெய்வம் ஒழிந்த பொருளை இடமாகக் கொண்டுவரும் என்று தொல்காப்பியனார் குறிப்பிட்டுள்ளார்.[3]

---

1. ஐங்குறு நூறு; வேட்கைப் பத்து: 1. 10.
2. தொல்; அகத்திணை இயல்: 48 "உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்."
3. தொல்; அகத்திணை இயல்: 47.

(Ullurai is a kind of implied simile divised for exclusive use in Ainthinai) It is arranged from the fauna and fiora of any region, technically called Karupporul —Dr. V. S. P. Manickam, The Tamil concept of Love page 124).

ஐங்குறுநூற்றில் மருதத்திணைப் பாடல்கள் பல வற்றுள்ளும் உள்ளுறை இடம் பெற்றுள்ளது.

> ' பல்லிதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்
> தண்டுறை ஊரன்[4]

என்ற தொடரில் உள்ளுறைப் பொருள் அமைந்துள்ளது. பலவாகிய இதழ்களால் சிறப்புடை நீல மலரோடு நெய்தல் மலர் நிகர்க்கும் ஊரன் என்றதனால் சிறப்புடைய கருங்குவளை மலருடனே சிறப்பில்லாத நெய்தல் மலரை நிகர்க்கும் ஊரன் எனப் பேசப்படுதலால் குலமகளிரோடு பொது மகளிரை மனத்திற் கொள்பவன் என்னும் குறிப்புப் பெறப்பட்டுத் தலைமகனின் இழிந்த ஒழுக்கம் சுட்டிக் காட்டப் பெற்றதாம்.

இவ்வாறு சில பாடல்கள் வேட்கைப் பத்தில் உள்ளுறைப் பொருள் பொருந்தி வந்துள்ளன.

## இறைச்சி

"இறைச்சிப் பொருள் என்பது உரிப்பொருளின் புறத்த தாகித் தோன்றும் பொருள்"[5] என்றும், "இறைச்சிப் பொருள்வயிற்றோன்றும் பொருளும் உள"[6] என்றும் தொல் காப்பியனார் இறைச்சி குறித்துக் குறிப்பிட்டுள்ளார். '(Suggestive meaning conveyed indirectly by reference to the distinctive features of the tract of land'—Tamil Lexicon; Volume: 1 page 366).

---

4. ஐங்குறுநூறு; வேட்கைப்பத்து: 2: 4-5.
5. தொல்; பொருளியல்: 35.
6. ,, ,, 36.

'வித்திய உழவர் நெல்லொடு பெயரும்
பூக்கமல் ஊரன்'[7]

என்ற தொடரால்—"விளைவு கருதி வித்திய உழவர் வளைந்து முதிர்ந்துள்ள நெல்லைக் கொண்டு பெயரும் ஊரன் என்றதனால்—தலைமகன் பின்வரும் பரத்தையர்க்கு வேண்டுவன புரிந்து அக்காலத்து நுகர்ச்சிக்குச் சமைந்துள்ள பரத்தையரைக் கூடி ஒழுகுகின்றான் என்ற உள்ளுறையும், இனி விளைவு வேண்டி விளைத்த உழவர் அவ்வாறே விளைந்த நெல்லைக் கொண்டு பெயரும் ஊரனாயினும் இல்லறப் பயனை வேண்டி இவளை மணந்த பின் அது பெருமை ஒழுகியது. என்னை (என்ன) என இறைச்சிப் பொருளும் தோற்றியது.''

இவ்வாறு பல இறைச்சிப் பொருள்கள் ஐங்குறு நூற்றில் இடம் பெற்றுள்ளன.

'பூத்த கரும்பில் காய்த்த நெல்லில்
கழனி ஊரன்[8]'

என்ற தொடரில் உள்ளுறைப் பொருள் அமைந்துள்ளது. பூத்துப் பயன்படாக் கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையும் உடைய ஊரன் என்றது, ஈன்று பயன் படாப் பொதுமகளிரையும், மகப்பயந்து பயன்படும் குலமகளிரையும் ஒப்பநினைப்பான் என்ற குறிப்பு அமைந்துள்ளது. தோழியின் கூற்றாக வரும் இப்பத்துப் பாடல்களிலும் உள்ளுறை இறைச்சிப் பொருள்கள் பொருந்திச் சுவைநயம் தருகின்றன.

---

7. ஐங்குறுநூறு; வேட்கைப்பத்து, பாட்டு 3 : 4-5.
8. ஐங்குறுநூறு; வேட்கைப்பத்து 4 : 4-5.

# 4. கலித்தொகை

எட்டுத்தொகை நூல்களுள் பாவின் பெயரைப் பெற்ற நூல்கள் பரிபாடலும் கலித்தொகையுமாகும். தொல் காப்பியனார் அகத்திணையாகிய அகப்பொருட் செய்தி களைப் பாடுதற்கு உரிய தகுதி வாய்ந்த பாவாகக் கலிப்பா வினையும் பரிபாட்டினையும் குறிப்பிட்டுள்ளார்.[1] கலிப் பாவின் சிறப்பு ஓசைநயம் விரவி வருதலாகும். சங்கத்தார் தொடுத்த கலிப்பாட்டு[2] நூற்றைம்பது என்று பேராசிரி யரும், இறையனார் அகப் பொருள் உரையாசிரியரும்[3] குறிப்பிட்டுள்ளனர். ஏனைய தொகை நூல்களிற் போலப் பாடல்களில் சிதையும் குறைவும் இன்றிக் கலித்தொகை கடவுள் வாழ்த்துச் செய்யுளோடு நூற்றைம்பது பாடல் களைக் கொண்டு விளங்குகின்றது. இதைத் தொகுத்தவர் நல்லந்துவனார். தொகுப்பித்தவர் யாரென்று தெரிய வில்லை. இந்நூற்றைம்பது பாடல்களும் ஐந்து திணை யாகப் பகுக்கப்பட்டுப் பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக் கலி, முல்லைக்கலி, நெய்தற்கலி என வழங்கப்படுகின்றன. இவற்றைப் பாடுபவர்கள் முறையே பெருங்கடுங்கோ, கபிலர், மருதனிளநாகனார், நல்லுருத்திரன், நல்லந்து வனார் என்னும் ஐவர் என்று வெண்பா ஒன்று கூறு கின்றது.[4]

---

1. தொல்; அகத்திணை இயல் : 53.
2. தொல்; செய்யுளியல்: 149, 153, 154, 160 உரை.
3. இறையனார் அகப்பொருள்: நூ. 1.
4. பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
   மருதனிளநாகன் மருதம் அருஞ்சோழன்
   நல்லுருத்திரன் முல்லை நல்லந்துவன் நெய்தல்
   கல்விவலார் கண்ட கலி.

கலித்தொகையை முதன் முதலாகக் கி. பி. 1887-ல் பதிப்பித்த இலங்கைத் தமிழ் அறிஞர் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் 'நல்லந்துவனார் கலித்தொகை' என்றே குறித்துள்ளார். பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள், நெய்தற் பகுதியின் ஆசிரியராகக் குறிக்கப்பட்ட நல்லந்துவனாரே ஏனைய பகுதிகளுக்கும் ஆசிரியராய் இருத்தல் கூடும் என்றும், ஐவர் பாடியதாகக் குறிப்பிடும் வெண்பா மிகப் பிற்பட்ட காலத்தது என்றும், நூலின் நடை, அமைப்பு, போக்கு முதலிய சில தனி இயல்புகளைக் கவனித்தாலும் இஃது ஒரே ஆசிரியர் இயற்றியதாகும் என்றே கொள்ளத் தக்கது என்றும் கருதுகின்றார். குறிப்பிலிருந்தும் இக்கருத்து வலிமையுறுகிறது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

But whether (he Nallanthuvanar) was also the auther of the other sections, we have no means of determining. The style and dictions and certain other peculiarities indicate that he was most probably the author of the entire work. However a stanza is qutted ascribing the fire sections of work, to five different authors. This stanza is not found in manuscript and therefore of modernorigin.[5]

பாண்டிய மன்னனைக் குறித்தும், அவன் தலைநகராகிய கூடல் குறித்தும், வையை ஆறு குறித்தும், திருமருத முன்றுறை குறித்தும் நிறைந்த செய்திகள் கலித்தொகையில் இடம் பெற்றிருக்கச் சேர சோழ நாடுகளைப் பற்றிய குறிப்பு இந்நூலில் ஒன்றும் இல்லை என்ற கருத்து ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. எனவே இந்நூல் 'மதுரை நகரைச் சார்ந்தெழுந்த பாடல்களையே கொண்டது' என்று கூறுவர்.[6]

5. Prof. S. Vaiyapuri Pillai, History of Tamil Language and Literature, page 27.
6. கலைக்களஞ்சியம்; மூன்றாந் தொகுதி: பக்கம் 335.

பாவகையாலும் பொருள் வகையாலும் சொல் வகையாலும் இந்நூல் பிற தொகை நூல்களோடு வேறுபடுகின்றது. கலித்தொகைப் பாடல்களில் புராணக் கதைக் குறிப்புகள் பலவாகவும் பிற தொகை நூல்களில் காணப்படாத காமன் வழிபாடு பற்றிய செய்தியும், மொழி வளர்ச்சியில் பிற்காலத்தவையாகக் கருதப்படும் சில சொற்களும் ஒத்த அன்புடைய காதலனின் வாழ்வே அன்றி ஒத்த அன்பில்லாத மக்களின் உறவு பற்றிய கைக்கிளை, பெருந்திணைப் பாட்டுக்களும் உள்ளன.

நாடக முறையில் காதல் நிகழ்ச்சிகள் அமைந்திருப்பதோடு இனிய ஓசை அமைதியும் பாடல்களில் துலங்குகின்றன. இக்கலிப்பாக்கள் எல்லாம் சங்கு திரண்டு முரண்டெழும் ஓசை போன்ற தழைந்து இன்பம் பயக்கும் ஓசை நயம் உடையன என்றும், பாடல்களின் பொருள் வளமும் கருத்து மாண்பும் அளவிடற்கரிய சிறப்பினை உடையன என்றும், உவமங்களின் மாட்சியும் இணையற்ற சிறப்பினை உடையன என்றும் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.[7]

கலித்தொகையின் காலம் சங்க இறுதிக் காலமான கி.பி. 300 என்றும் பாண்டிய நாட்டுப் புலவர் ஒருவரால் பாடப் பெற்றிருத்தல் வேண்டும் எனக் கொள்வது மிகவும் பொருத்தமானது என்றும் டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள் கருதுகின்றார்கள்.[8]

பாலைக் கலிப் பாடல்கள் முப்பத்தைந்தாகும். இதனைப் பாடியவர் பெருங்கடுங்கோ ஆவர். இவர் சேர அரச மரபினர் என்பர்.[9] ஆயினும் பாடல்களில் சேர

---

7. கலித்தொகைச் சொற்பொழிவுகள்; பக்கம் 11.
8. தமிழ்மொழி இலக்கிய வரலாறு; சங்க காலம் முதற் பதிப்பு : 1963 பக்கம் 199.
9. டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்; குறுந்தொகைப் பதிப்பு. பாடினோர் வரலாறு பக்கம் 156.

நாட்டைப் பற்றிய குறிப்பில்லை. மாறாகப் பாண்டிய நாட்டைப் பற்றியும் வையை பற்றியும் கூடலில் நிகழும் புலவர் கூட்டுப் பற்றியும் (தமிழ்ச்சங்கம்) குறிப்புகள் வந்துள்ளன.

பாலைக் கலியில் இடம் பெற்றுள்ள இதிகாசக் கருத்துகள், அரசியல் செய்திகள். மதுரை வையை பற்றிய குறிப்புகள், பழக்க வழக்கங்கள், இயற்கை வருணனை, உவமைகள், அகப்பொருள் நுட்பம் முதலியவற்றைக் காண்போம்.

## இதிகாசக் கருத்துகள்

கலித்தொகையில், குறிப்பாகப் பாலைக் கலியில் இதிகாசக் குறிப்புகள் கையாளப்பட்டுள்ளன. படைத்தல் தொழிலுக்குரிய அயன் முதலான தேவர்கள் வேண்டிக் கொண்டதற்கு இணங்க, வஞ்சனை செய்யும் இயல்புடைய அவுணரை வலியடக்க மூன்று கண்ணை உடைய இறைவன் மூன்று எயிலையும் சினந்து எரித்தான்.[10] முக்கண்ணன் மீண்டும் மழு ஏந்தி எரிக்கும் இயல்பினன் என்பதும் சுட்டப் படுகின்றது.[11]

அருந்ததி போல் எல்லாருந் தொழுதேத்தும் கற்புடையாள் என்று தலைவி மேம்படுத்தப்படுகின்றாள்.[12] பாரதக் கதை யொன்றும் பாலைக் கலியில் குறிக்கப்படுகின்றது. திருதராட்டினனுடைய மகன் துரியோதனன் சூழ்ச்சியாலே ஐவரென்று உலகம் புகழும் தருமன் முதலானோரை அரக்கு மாளிகையில் அடைத்து நெருப்பிட்டான்.[13]

---

10. கலித்தொகை; 1 : 1-5
11. ,, 1 : 6
12. ,, 1 : 21
13. ,, 24 : 1-4

புராணக் குறிப்பொன்றும் பொதிந்துள்ளது. கடலிடத்து நின்ற மாமரத்தைப் பிளந்து போகுமாறு தடித்த வெற்றி வேலையுடைய முருகன் என அச்செய்தி வந்துள்ளது.[14]

கலப்பைப் படையினைக் கொண்டவன் என்று பலராமனைப் பற்றிக் கூறுகின்றது ஒரு பாடல்.[15]

## அரசியல் செய்திகள்

ஊரும் ஆறும் பாண்டி நாட்டிற்குரியவையே. கையாளப்பட்டதைப்போல் ஒரு பாடலில் பாண்டிய மன்னனின் வாய்மை தவறாப் பண்பு சுட்டப்படுகின்றது.[16] படையெடுத்த நாடு பாழ்பட்டதைக் கண்டு அரசன் வருந்துவான் என்று ஒரு பாடலில் சொல்லப்பட்டுள்ளது.[17] கண்ணோடாது முறை வழங்குவான் அரசன் என்று ஒரு பாடலில் சொல்லப்பட்டுள்ளது.[18] அதே பாலைக் கலியில் தான் அரசனின் கொடுங்கோன்மை பற்றியும் குறிப்புகள் வந்துள்ளன.[19] நயனில்லா அமைச்சன் சொல் நச்சிய அரசனின் கொடுங்கோல் என்றும், குடிமக்கள் கூக்குரலிட்டு அழ வரி வாங்கும் கொடுங்கோல் என்றும், முறைகெட்ட மன்னவன் கீழ் வாழும் மக்கள் கலங்கும் கலக்கம் என்றும் கொடுங்கோன்மை குறிக்கப் படுகின்றது.

அரசன், தன்னுடைய நிழலில் வாழும் நாட்டினர்க்கு ஊறு நேர்ந்தால் அந்நாட்டினையும் காத்திடுவான் எனக் குறிக்கப்படுகின்றது.[20]

---

14. கலித்தொகை; 26 : 15-16
15. ,, 35 : 1.
16. ,, 34 : 24-25.
17. ,, 4 : 12.
18. ,, 7 : 15-17.
19. ,, 7 : 10-2; 9 : 5-7; 33 : 14-15.
20. ,, 25 : 11-2; 25 : 15-6, 25 : 19-20.

போர் மேற் சென்ற புரவலன் வாகை சூடி வலம் வருவான்; அவ்வமயம் களிறு மீதும், குதிரை மீதும், தேர் மீதும் இவர்ந்து வருவான் எனப் புகழப் படுகின்றான்.[21] இருபெரும் வேந்தர் முட்டிப் போரிடும் போது இடை நின்று போர் தணித்தலும் உண்டு எனப் பாலைக்கலி கூறுகின்றது.[22] வேந்தன் சினந்து படை கொண்டால் பகைநாடு அழிவது திண்ணம் என்றோர் இடத்தில் கூறப்படுகின்றது.[23]

## மதுரை, வையை பற்றிய குறிப்புகள்

பாலைக்கலியில் பாண்டிய நாட்டுத் தலைநகராம் மதுரை பலபடப் புகழப்பட்டுள்ளது. சேர நாட்டுப் புலவர் எழுதியதாகச் சொல்லப்படும் பாலைக் கலியில் சேரநாட்டு ஊர் எதுவும் சிறப்பிக்கப்படலாம் என்று நாம் எதிர்பார்க்க, பாண்டிய நாட்டு ஊர் சிறப்பிக்கப்படுவதோடு பாண்டியன் வையையும் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

கூடல் என்றும்,[24] வென்வேலான் விழும்பி உறையும் குன்று என்றும்[25] அளவிலாப் புகழுடைய கூடல் என்றும்[26] நிலத்துள்ளார் புகழும் நீண்ட மாடங்கள் விளங்கும் கூடல் என்றும்[27] உயர்ந்த கூடல் என்றும்[28] மதுரை பல இடங்களில் சிறப்பிக்கப்படுகின்றது.

பரத்தையர் திரளோடு மனம் விரும்பப் பாய்ந்தாடும் வையை[29] என்றும், அறல் மணல் உண்டாகி ஒழுகும்

---

21. கலித்தொகை; 30 : 9-10; 13-15, 17-18.
22. ,, 23 : 11-13.
23. ,, 12 : 1.
24. ,, 26 : 12.
25. ,, 26 : 16.
26. ,, 29 : 11.
27. ,, 34 : 17.
28. ,, 30 : 25.
29. ,, 26 : 20.

வையை [30] என்றும், மணல் திட்டுகள் நிரம்பிய வையை [31] என்றும் வையை ஆறு சுட்டப்படுகின்றது.

## பழக்க வழக்கங்கள்

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதுகின்றான். அது கேட்டுப் புலம்பும் தோழி அவனுடைய செலவினை நாளும் புள்ளுமே விலக்கிடும்; நாங்கள் விலக்க வேண்டியதில்லை என்கிறாள். நாள் பார்த்தலும், புள் நோக்கலும் ஆகிய பழக்க வழக்கங்கள் இருந்தன என்று புலனாகின்றது. [32] தொழில் மாட்சிமைப்பட்ட ஒருவகைக் கைக்கச்சினைப் போர்க்கோலத்தில் அணிந்திருந்தனர். போர்க் கால உடையில் இது ஒரு பழக்கம். [33] அந்தணர் உறியிலே தங்கின கமண்டலத்தையும், முக்கோலையும் முறையாகத் தோளிலே வைத்து வெயில் வருத்தம் தடுக்கக் குடை ஏந்திச் செல்வர் என்பதால் அவர்தம் பழக்க வழக்கம் விளங்குகின்றது. [34] அந்தணர் வேள்வி இயற்றுவர் என்பதும் குறிக்கப்படுகின்றது. [35] சகுனம் பார்க்கும் பழக்கம் இருந்தது என்பது மனையிடத்துப் பல்லி தலைவன் வரவுக்குப் பொருந்த ஒலி எழுப்புவதும், இடக்கண் துடிப்பதும் கொண்டு அறியலாம். பல்லி கூறுவதும் இடக்கண் மகளிர்க்குத் துடிப்பதும் நல்ல சகுனங்கள் என்பது அவர்தம் நம்பிக்கை. [36] கணவனைத் திரும்பப் பெற வேண்டுமானால் பிற தெய்வத்தைத் தொழுதல் சாலும் எனத் தேவந்தி கூறியபோது 'பீடன்று' என அதை விலக்கிய

---

30. கலித்தொகை; 29 : 16.
31. ,, 23 : 9.
32. ,, 4 : 9.
33. ,, 6 : 9.
34. ,, 8 : 1-4.
35. ,, 35 : 25:26.
36. ,, 10 : 20-22.

கண்ணகியைப் போல இங்குத் தலைவன் பிரிவெண்ணி வாடுந் தலைவி அவர் செல்லுங் காட்டின் அருமை மாறி இனிது திரும்பிய மற்றத் தெய்வங்களைத் தொழலாமோ என ஏங்க, பிற தெய்வம் தொழல் வேண்டா, உன் கற்பின் வலிமையாகிய அறமே அவர் இடுக்கணைக் களையும் என்று தோழி கூறுவதில் இருந்து கற்புடை மகளிர் கடவுளர் தொழார் என்னும் பழக்கத்தை அறியலாம்.[37] தலைவன் தலைவியின் தோளில் ஆர்வம் மிகக் கொண்டு தொய்யில் எழுதுவான் அன்புடை நேரத்தில் என்பது குறிக்கப்படு கின்றது.[38] நறிய கூந்தலை விரும்பி நீவுவான்.[39]

பெண்கள் மணலிடத்து வண்டல் இழைத்து ஆடும் விளையாட்டும்,[40] காமனுக்கு எடுக்கப்படும் திருவிழாவும் அவ்விழாவில் பரத்தையரோடு தலைவன் ஆடுவதும்[41] குறிக்கப்படுகின்றன. அந்தக் காமன் திருவிழா இளவேனிற் பருவத்தில் நிகழும்.[42] காதலன் காதலிக்குத் தூது அனுப்பும் செய்தியும், தூது வருவார்க்குத் தகுந்த விருந்து செய்வர் என்பதும் உணர்த்தப்படுகின்றன.[43] திருக்குறளிலும் காதலின் தூதாக வந்த கனவினுக்கு என்ன விருந்து செய்வது என்று காதலி திகைப்பதைக் காணலாம். தலைவியைப் பிரிந்திருக்கும் தலைவன் குறித்த காலத்தில் குதிரை பூட்டிய தேருடன் வந்து சேருவான் என்பதை அறியலாம்.[44]

---

37. கலித்தொகை; 15 : 18-22.
38. ,, 17 : 2-3.
39. ,, 20 : 6.
40. ,, 28 : 5.
41. ,, 29 : 13-14.
42. ,, 35 : 8-10.
43. ,, 31 : 18-19.
44. ,, 33 : 22-24.

## இயற்கை வருணனை

பாலைக்கலியில் வழியின் கொடுமை பெரிதும் பேசப் படுகின்றது. பாலைநில வறுமை உள்ளத்தைத் தாக்கும் வண்ணம் புனையப்பட்டுள்ளது. கணிச்சிப்படையுடைய கடவுள் சினந்து மூன்று எயிலையும் எரித்தால் உதிர்வதைப் போல் ஞாயிறு சுடுகையினால் போவோர்க்கு வழியில்லாமல் வரையிணைந்து கிடக்கும் வழி எனப்படும்.[45] தலைவன் செல்லும் இடைச்சுரத்தில் நீரில்லாச் சுனையில் வாடி வதங்கும் கிளைகளோடு கிடக்கும் மலர்களும், மரத்தில் படர்ந்து பிரிந்துவிட்ட வாடிய கொடிகளும், வதங்கிய தளிர்களும் இருந்து வறட்சியை மிகுதிப்படுத்தின என்கிறார் புலவர்.[46]

கொள்ளுதற்கு ஒரு பொருளும் இல்லாராயினும் அவரைத் தம் அம்பாலே வீழ்த்தி அவர் பதைப்பதைக் கண்டு மகிழும் கடுங்கண் மறவர் வாழும் இடைச்சுரம். அம்புபட்டுப் பதைத்தோடுவதைத் தொடர்ந்து சென்று கொல்வர் மறவர். இக்கொடுமையைக் கண்டு பறவை களும் பறப்பதற்கு அஞ்சும் அந்தச்சுரம் என்று பாலைக்கலி கூறுகின்றது.[47]

யானைத் திரளும் மற்ற விலங்குகளும் மறவரும் மயங்கித் திரிவதாலே வழிகள் தூறுகளால் மறைந்துவிட்ட இடைச்சுரம் என்கிறது ஒரு பாடல்.[48] வழிச் செல்வோரை ஆறலைகள்வர் அம்பெய்து கொல்கையில் அவர்களுடைய நீர் வேட்கையால் நாவினை நனைப்பதற்கு ஒரு சொட்டு நீரும் இல்லாமல் தவிக்கவும் அவர்கள் கண்களில் திரண்டு நிற்கும் நீர்த் துளிகளே உருண்டு வாயில் விழும் கடுமையான

---

45. கலித்தொகை; 1 : 6-8.
46. ,, 2 : 8-9, 13-14, 16-17.
47. ,, 3 : 3-6.
48. ,, 4 : 1-3.

பாலை வழி என்கிறது ஒரு பாடல்.[49] தண்ணீர் இன்மை யான் கானல் நீரைத் தேடி ஓடும் களிறுகள்.[50] யானைகள் ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள் போலக் கொம்பு களை ஊன்றிக் கையை நிமிர்ந்து நிலத்தே கிடக்கும்.[51] யானைக் கன்று கலக்கிய சிறிது நீரைப் பிடியுண்ணுமாறு செய்து பின்னர் உண்ணும் களிறு; மடப்பெடையின் வருத்தத்தை மென்சிறகால் ஆற்றும் புறவு; நிழல் இல்லாது வருந்திய மடப்பிணைக்குத் தன் நிழலைத் தந்து மகிழும் கலை என்று கொடிய பாலை வழியில் குளிர்ந்த அன்புக் காட்சிகளைப் பற்றிக் கூறப்படுகின்றது.[52] மறவர் கொன்ற வழிப்போக்கரின் உடல்களை இலைகள் மறைத்திருக்கும். தண்ணீர் இருக்கும் என்று வேட்கையோடு யானைத்திரள் வற்றிய சுனையில் துதிக்கை இடவும், வெயிற்சூடு பொசுக் கிடத் திசைதோறும் வழி மயங்கி ஓடும் சுரம் எனப்படு கின்றது.[53]

கானல் நீரை நச்சி ஓடும் மான் கூட்டங்களும், கொதிக்கும் மலைகளும், ஊனின்றி வருந்தும் மந்திகளும், நீரின்றிச் சேற்று ஈரத்தை மட்டும் சுவைத்துப் போகும் உயிரைப் பிடித்து வைக்கும் யானைகளும் நிரம்பிய மழை யில்லா வெஞ்சுரம் என்கிறது ஒரு பாடல்.[54] மறவர்கள் வழிச் செல்வோரிடம் உள்ள பொருளைக் கொண்டு அவர்கட்குப் புண்ணைக் கொடுப்பர் என்கிறது ஒரு பாடல்.[55]

---

49. கலித்தொகை; 5 : 1-6.
50. ,, 6 : 1-3.
51. ,, 7 : 3-6.
52. ,, 10 : 8-9, 12-13, 16-17.
53. ,, 11 : 1-7.
54. ,, 12 : 1-9.
55. ,, 14 : 7-9.

சில சிறிய சொற்களில் பாலையின் அரிய இயல்புகள் விளக்கப்பட்டுள்ளன.

**பகல்முனி வெஞ்சுரம்**[56]
**நூங்கழல் வெஞ்சுரம்**[57]
**சுடர்காய் சுரம்**[58]
**நெடுமலை வெஞ்சுரம்**[59]

இளவேனிலைப் பற்றிப் பாலைக்கலியில் அழகொழுகப் பல இடங்களில் திறம்படப் புனையப்பட்டுள்ளது. பல வரிகளுடைய வண்டுகள் புத்தம் புதிய மலர் ஊதப் பறந்திடும் பருவம் எனப்படுகின்றது இளவேனில்.[60] மராம், செருந்தி, காஞ்சி, ஞாழல், இலவம் ஆகிய பூக்கள் மரங்களில் அழகு செய்யப் பிரிந்தார்க்கு வருத்தமும் பிணைந்தார்க்கு மகிழ்ச்சியும் அளித்து வருகின்றது.[61] மக்கள் தழைக்கவும், மணமுள்ள மௌவல் முகை அவிழவும், அறல்மணல் ஆற்றில் தாதும் தளிரும் உதிர்ந்து அழகு செய்யவும் இளவேனில் வந்துற்றது என வருணிக்கப்படுகின்றது.[62] மரங்களில் கிளைகள் தோறும் வேண்டும் தாது உண்டு மகிழ வண்டுகள் பறந்து வரும் வளப்பம் நிறைந்து விளங்கும் இளவேனில்.[63] ஆறுகள் அழகு பெற ஓடவும், தாமரை மலர்கள் பூத்திடவும் முன்பனிக்கும் பின் பனிக்கும் மேலாய் நின்ற இளவேனில் எனப்படுகின்றது.[64] முல்லை மலர்கள் பூத்துக் குலுங்க, பசந்தவர் பைதல் நோய் தணித்து இன்னுயிர் மருந்தாகிக்

---

56. கலித்தொகை; 18 : 5.
57. ,, 19 : 6.
58. ,, 21 : 20.
59. ,, 23 : 21.
60. ,, 25 : 2.
61. ,, 25 : 1-8.
62. ,, 26 : 1-8.
63. ,, 29 : 1-4.
64. ,, 20 : 1-7.

காதலர் தூதாக வந்தது இளவேனில்.[65] குளங்கள் நீர் நிறைந்து பூக்களால் அழகு பெறவும், முருக்கு இதழ்கள் காம்பினின்றும் கவிழ்ந்து விழவும், மரங்கள் எல்லாம் அரும்புகள் ஈன்று பல மணிகளைச் சூடினாற்போல் பூக்களைச் சூடவும் காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது தாதவிழ் இளவேனில் வந்தது எனப் புனையப் படுகின்றது.[66] இளவேனிற் காலத்தில் நீர் இற்று ஒழுகும் எனத் தெரிகின்றது.[67] சுரும்புகள் ஒலிக்க வண்டுகள் ஆரவாரிக்கும் படியாகக் கொம்புகளினின்றும் பல மலர்கள் ஆற்றிலே வரும்படி இனிமை பொருந்திய இளவேனில் என்கிறது ஒரு பாடல்.[68] சோம்பல் இல்லாதவன் செல்வம் பெருகுமாறு போல மரங்கள் பூப் பெருக்கவும், அச் செல்வத்தை உண்பாரது நுகர்ச்சிபோல அம்மரங்களிலே தேனையுண்டு மிஞிறுகள் ஆரவாரிக்கவும், கரிய நிறத்தை உடையவன் மேனிபோலத் தளிரை ஈனவும், அந்நிறத்தில் பரந்த சுணங்குபோல அந்தத் தளிரின் மேலே தாது விழவும், அந்த மலர் பரந்த சோலையை அணுகிப் பளிங்குபோலும் நீரினை உடைய குளங்கள் வற்றாது நிற்பவும், பூப் பரந்த துறைகளை அணுகி நுண்மணலைக் கோலஞ் செய்து அறுதியையுடைய நீர் ஒழுகவும் என இளவேனில் வருணிக்கப்படுகின்றது.[69] கரிய குயில்கள் கூவ விளங்கும் இளவேனில், குழவி வேனில் எனப்படுகின்றது.[70]

## வாடை, மாலை, இரா, சின்மழை, பனி, வையை

வாடையைப் பற்றிய குறிப்பும் வந்துள்ளது. வாடை வந்து துன்பந்தரும் என்றும், அணிகள் குளிரும்படியாக

65. கலித்தொகை; 31 : 14-18.
66. ,, 32 : 1-8.
67. ,, 32 : 20.
68. ,, 33 : 1-7.
69. ,, 34 : 1-7.
70. ,, 35 : 8-9.

வாடை வரும் என்றும் கூறப்படுகின்றது.[71] தேனை உண்ணும் கரிய தும்பியினது யாழோசையை ஒத்து முழங்குகின்ற ஓசை நடக்கும் மாலைக் காலம் என்றும், நெடிய நிலாவையுடைய இராக் காலம் என்றும், தோள்கள் குளிரால் நடுங்குமாறு துவற்றுகின்ற சிலவாகிய மழையும் முகை போலும் வெள்ளிய பல்லின் நுனிகள் தம்மிற் பொரும்படி முதிர்ந்த கடிய பனி என்றும் முறையே மாலை, இரவு, தூறல், பனி ஆகியவை கூறப்படுகின்றன.[72] வையையின் வனப்பு ஓரிடத்தில் வருணிக்கப்படுகின்றது.[73]

## அகப்பொருள் நுட்பம்

கலித்தொகை ஓர் அகப்பொருள் நூல். அகப்பொருள் செய்திகள் செறிந்த முறையில் சிறந்த வகையில் உள்ளம் கவரும் தன்மையவாய்ப் பாலைக் கலியில் கூறப்படுகின்றன. தலைவன் பிரிவைத் தாங்காது தவிக்கும் தலைவியின் உணர்ச்சி உள்ளமே பாலைக் கலிக் கவிதைகள். அழுத கண்ணும் ஆற்றாத நெஞ்சுமாய்ப் பாலைக்கலியில் தலைவி நம் நெஞ்சை ஈர்க்கின்றாள். அவள் அழகு எவரையும் அயர வைக்கும்.

**எல்வளை[74]**
**நலம்பெறும் சுடர்நுதாள்[75]**
**கிளி புரை கிளவியாய்[76]**
**கொடுங்குழாய்[77]**

---

71. கலித்தொகை; 28 : 12-13, 30 : 11-12.
72. ,, 28 : 16-17, 30 : 19-20, 30 : 15-16.
73. ,, 27 : 1-7.
74. ,, 12 : 10.
75. ,, 12 : 14.
76. ,, 12 : 18.
77. ,, 12 : 18.

**புனை யிழாய்**[78]
**ஒளியிழாய்**[79]
**ஒள் நுதால்**[80]
**சுடரிழாய்**[81]
**நலம்பூத்த நிறம்**[82]
**தொன்னலம்**[83]
**மையெழில் மலருண் கண்**[84]

என்பவற்றாலும் அசோகன் தளிர் போன்ற நிறத்தாலும்[85], தீங்கதிர் மதி போன்ற திருமுகத்தாலும்[86], குவளை மலர்க் கண்களாலும்[87] புனையப்பட்டுள்ளது. அவள் வகையெழில் வனப்பு மிகுந்தவள்.[88] இந்த உயர்ந்த தலைவியை விட்டுத் தலைவன் ஏனோ பிரிய நினைக்கின்றான். அவன் பிரிந்தால் அவள் வாழ மாட்டாள்[89] எனத் தோழி தலைவனுக்குச் செலவழுங்க வேண்டும் என அன்போடு பலவாறு குறிப்பிடு கின்றாள். அப்படித் தலைவன் பிரிந்தால் தலைவி எப்படிப் போவாள் என்பதைப் பாலைக்கலி உள்ளம் உருகுமாறு கூறுகின்றது. பிரிவை உணர்த்திய அளவிலே முன் கையிலிருந்து வளைகள் கழலவும், கண்ணீர் இமை

78. கலித்தொகை; 15 : 9.
79. ,, 15 : 13.
80 ,, 34 : 12.
81. ,, 34 : 20.
82. ,, 26 : 10.
83. ,, 26 : 14.
84. ,, 26 : 17.
85. ,, 14 : 12.
86. ,, 14 : 16.
87. ,, 14 : 20.
88. ,, 16 : 13.
89. ,, 1 : 13; 2 : 6; 4 : 18-19.

யினின்றும் பெருகவும், பின்னர் இமை நிறையும்படி நிற்கவும்,காம நோயாலே பொலிவழிந்த நுதலினையுடைய தலைவி அயலில் உள்ளார் அறமின்றிக் கூறும் அம்பலுக்குக் கூசவும், நீ செல்லும் வழியின் வறுமையை எண்ணித் தன் எழில் நலம் இழக்கவும் புலம்பி நிற்கின்றாள்.[90]

பொருள் நாடிப் பிரிகின்றான் தலைவன். 'பூவையினும் பெரிதோ பொருள்' எனத் தோழி தலைவனுக்கு எடுத்துரைக்கின்றாள். அரிய காட்டைக் கடந்து நீர் தேடும் பொருளினும் யாங்கள் உமக்குச் சிறந்தவர்கள் என்பதை நீரே அறிவீர் என்கின்றாள் தோழி.[91] பிரிவைத் தாங்கும் ஆற்றல் தலைவிக்கு இல்லை. எனவேதான் ஒரு நாள் ஒரு பொழுது கூட்டம் இடையீடுபட நீர் பிரிவீராயின் உயிர் கொண்டு இருப்பாளோ? இராள். ஆதலால், தலைவ! நின் பொருள் வேட்கையைப் பிணித்த செலவினைத் தவிர்வாயாக' என்கின்றாள் தோழி.[92] அப்படியும் தலைவன் செலவு மேற்கொண்டால் தலைவி என்ன ஆவாள் என்பதைப் பற்றித் தோழி உள்ளம் தைக்குமாறு கூறுகின்றாள்.

இவளைப் பாதுகாத்தலைக் கைவிட்டு நீ நயந்த அச்சுரத்திலே செல்வது எந்நாளிலோ அந்நாள் இவளுடைய பெறுதற்கரிய உயிரைக் கொண்டுபோம்[93] என்றும், நீரால் நீக்கப்பட்ட மலர் அந்த இராக்காலம் மட்டுமேனும் வாடாமல் கிடக்கும். அவ்வளவும் தலைவி உயிர் வாழாள்[94] என்றும் கூறுகின்றாள் தோழி.

தலைவன் செல்லும் இடமெல்லாம் தானும் வருவதாகக் கூறுகின்றாள் தலைவி. சீதை இராமனிடம்

---

90. கலித்தொகை; 2 : 1-5.
91. ,, 4 : 3-5.
92. ,, 3 : 23-25.
93. ,, 4 : 18-19.
94. ,, 4 : 15.

சொன்னதைப்போல் இருக்கின்றது இந்தச் சித்திரத்தாள் பேச்சு. அந்த வழியில் வரும் துன்பத்திற்கு எம்மையும் துணையாகக் கொண்டு நும்மொடு போதலை ஆராயின் அதுவல்லது எமக்கு வேறோர் இன்பமும் உண்டோ என்கிறாள்.[95]

பொருள் கருதிப் போக விரும்பும் தலைவனைப் பார்த்துத் தோழி நீ கருதின தேயத்துச் சென்று முயன்று தேடும் பொருள் இன்பந் தருதலே அன்றி இவள் இனிய உயிரைத் தருதலைச் செய்யுமோ என்கின்றாள்.[96]

வினைவெஃகி நீ செலின் விடும் இவள் உயிர் என்று தலைவியைப் பற்றிக் குறிப்பிட்டதும் வினைமேற் சேறலை விட்டுவிட்டான் தலைவன். கழன்ற வளைகள் கையைக் கவ்வுமாக என்கிறாள் தலைவியிடம் தோழி, இந்தக் களிப்பான செய்தியைக் கூறி![97]

உடன் வருவேன் என்று கூறிய தலைவியிடம் தலைவன் உன் அழகில் சிவந்த அடிகள் கறுத்துப் போகாவோ.[98] அரிமாவின் முழக்கம் கேட்டு அஞ்சுவை அல்லையோ?[99] இடைச்சுரப் பெருங்காற்று எழில் நலத்தை வாட்டும் அல்லவோ[100] என்கின்றான். இதிலிருந்து தலைவியின் மென்மை புலப்படுகின்றது.

இடைச்சுரக்காடு இன்னல் மிக்கது என்று கூறியதற்குக் காரணம் அவளை இங்கேயே விட்டு நீங்கவேண்டும் என்பதால் அல்ல; அதைக் கேட்டு அவள் அதைக் கேட்டு நடுங்கும் அழகினைக் காணவேண்டும் என்பதற்காகத்

---

95. கலித்தொகை; 5 : 9-11.
96. ,, 6 : 20-21.
97. ,, 9 : 21.
98. ,, 12 : 11-13.
99. ,, 12 : 17.
100. ,, 12 : 21.

தான் என்று தலைவன் தலைவியிடம் நகைச்சுவை யோடு விளையாடுகின்றான்.[101]

இளமையும் காமமுமே இன்பம்; இவைபெற்றார் வேறு வளம் எது பெறவேண்டும் என்றும்,[102] களவொழுக்கம் நிகழ்ந்த காலத்தில் கூறியதெல்லாம் பொய்யாய் இருப்பதை யான் அறிய மாட்டேன்; வீட்டார் அலர் தூற்ற வெளியே காட்டைக் கடந்து செல்லத் துணிந்து விட்டாய்; நீ நல்ல மகன் அல்லன் என்பதை உறுதியாக அறிந்தேன் என்றும்[103] தோழி கூறிப் பார்க்கின்றாள்.

போகும் வழியில் உன்னைப் போகவிடாமல் தடுக்கும் ஓர் அவலச் செய்தி. தலைவி இறந்தாள் என்பதே அந்தத் தாங்கொணாத் துன்பம் எனச் சாவினை நுட்பமாகக் கூறிப் பார்க்கின்றாள்.[104] நீர் செல்லும் வழியில் ஏற்றின் பின் நீங்காமல் திரியும் பிணையைக் காண்பது இலையோ? என்னையும் உடன் அழைத்துச் செல்க என்று மன்றாடிப் பார்க்கின்றாள்.[105] ஆனால் தலைவனோ

**வினையே ஆடவர்க்கு உயிரே**

என்றும்,

**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்**

என்றும் கோட்பாடு கொண்டவன் ஆதலால் எவ்வாறோ வினைமேற் சென்று விடுகின்றான்.

பிரிவுக் காலத்தில் பேதை நெஞ்சம் எவ்வாறெல்லாமோ பிதற்றுகின்றது. தண்ணீர் குடிக்கப்பட்ட

---

101. கலித்தொகை; 12 : 25-27.
102. ,, 17 : 7-8.
103. ,, 18 : 1-6.
104. ,, 18 : 11-13.
105. ,, 19 : 21-23.

எச்சிலாற் பயன்படாத குடை ஓலையை ஒப்பர்[106] என்றும், குடியிருப்பார் போகிய பாழுரை ஒப்பர்[107] என்றும், முடிப்பார் முடித்துப் போகட்ட பூவை ஒப்பர்[108] என்றும் பிரிவுக் கால நிலையைப் பற்றிப் புலம்புகின்றாள். அக் காலத்தே தலைவியின் தோற்றம் அழிந்து காணப்படும் என்பதைப் பாலைக்கலி குறிப்பிடுகின்றது.[109] இதுவரை போராடினாலும் போவது உறுதி என அவன் புறப் பட்டதும் அவன் வினை முடியவேண்டும். வெற்றியுடன் என அதற்காக வருந்துகின்றாள் அருமையான அந்தத் தலைமகள்[110]. என்னே அன்பு!

அன்பின் பெருமை கலந்த காதலின் முழுமை ஓரிடத்தில் காட்டப்படுகின்றது. தலைவன் செல்லும் கொடிய இடைச்சுரம். அவ்வழியில் அன்புடைய நெஞ்சங் களை விலங்குகளிடையில் காண்கின்றான், அவன். காட்டகத்தே, யானைக் கன்றுகள் தாயும் தந்தையும் உண்ண வேண்டுமென்று கருதாது கலக்கிய சிறிய நீரை முதலில் பிடியை உண்ணுமாறு ஊட்டிப் பின்பு களிறு உண்ணும் அன்பினை என்றும்[111] காட்டிலே நிழலே இல்லை; வெம்மை கொளுத்துகின்றது; மடப்பத்தை யுடைய பெடைகள் வெம்மையால் கிளைத்த வருத்தத்தைத் தஞ் சிறகை விரித்து அதன் நிழலிலே புறவுகள் குளிர்ச்சி யூட்டும் அன்பினை என்றும்[112], மூங்கில் சூடேறிவிட்ட முதிர்ந்த வெயில், இனிய நிழலில்லாததால் வருந்திய

---

106. கலித்தொகை; 18 : 11-23.
107. ,, 19 : 12-23.
108. ,, 22 : 13.
109. ,, 25 : 10, 25 : 14, 25 : 18.
110. ,, 34 : 15, 19, 11.
111. ,, 11 : 6-9.
112. ,, 11 : 10-13.

பிணைக்குத் தன் நிழலைத் தந்து மகிழும் கலைமான் வாழும் அன்பினை என்றும்[113] புனையப்படுகின்றது.

சென்று விட்டவினை பற்றியே எப்போதும்
அவளுக்குச் சிந்தனை.
சேயார்கட் சென்ற என் நெஞ்சு·[114]

தொழநிலை நெகிழ்ந்தார்கண் தோயும் என் ஆருயிர்[115]

என்பதால் இதனை அறியலாம்.

காமநோய் எத்தன்மையது என்பது பற்றிக் கலித்தொகை கூறுகின்றது. நினைக்கும்பொழுதெல்லாம் நெஞ்சழியும் வருத்தத்தையுடையது காமநோய்.[116] தனக்கு மட்டுமே காம நோய் துன்பந் தரும் என்று கருதும் தலைவிக்குத் தலைவரும் இந்நோய் தாங்க மாட்டார் எனத் தோழி உணர்த்தும் நுட்பம் உன்னி மகிழ்த்தக்கது.[117]

பாலைக் கலியில் உடன் போக்குப் பற்றிய செய்தியும் இடம் பெற்றுள்ளது. தலைவனும் தலைவியும் கூடிச் சென்றுவிட்டனர் என்பதறிந்து அவர்களைத் தேடிச் செல்லும் செவிலியின் கூற்று நயமிக்கது.[118] அவளது புலம்பலுக்கு மலையிலே பிறந்தாலும் சந்தனம் அதற்கு என்ன பயன் தரும்[119]. நீரிலே பிறந்தாலும் முத்து நீருக்கு என்ன செய்யும்[120]. யாழிலே பிறந்தாலும் இசை அதற்கு

113. கலித்தொகை; 11 : 14-17.
114. ,, 28 : 10.
115. ,, 28 : 18.
116. ,, 34 : 22.
117. ,, 27 : 22-23.
118. ,, 8 : 6-8.
119. ,, 8 : 12-14.
120. ,, 8 : 15-17.

என்ன செய்யும்[121] என்று தாய்க்கும் மகளுக்கும் உள்ள உறவை விளக்கும் நயம் மிகச் சிறந்தது.

தெய்வந் தொழாத கற்பின் செல்வி இந்தத் தலைவி.[122] பிரிவுக்கு முன்னால் தலைவன் தலைவியைப் புகழ்வான் என்பது குறிக்கப்படுகின்றது.[123] பிரிவுக் காலத்தில் தலைவியின் சொல்லைக் கேளாமல் தலைவனை நாடிச் செல்கின்றது அவள் நெஞ்சம்[124] என நயம்படப் புலப்படுத்துகின்றது பாடல்.

காதல் தூதராக இளவேனில் வருகின்றது[125] என ஒரு பாடலில் சுட்டப்படுகின்றது. தலைவன் வருவேன் என்று சொல்லிச் சென்ற காலமும் வந்துவிட்டது; தலைவனைக் காணோமே என ஏங்கும் ஏக்கம் நன்கு புலப் படுத்தப்பட்டுள்ளது.[126] முழுக்க முழுக்க நுதல் பசந்து விடுகின்றது; ஒரேயடியாய்த் தோள் மெலிந்து விடு கின்றது.[127]

தலைவியின் புலம்பல் மிகுதியாகிவிட்டது. "காதலர் நம்மிடத்துக் காதலின்று நீங்கினரோ? அன்றிக் காதலுண்டாயிருக்க ஒருதூதொடு கூறிவரவிடும் வார்த்தை யைச் சிறிது மறந்தாரோ? அவர் நம்மிடத்து நிகழ்த்தும் காதலையும் நாம் இறந்துபடாமல் இருந்து காண் போமா? நம்மை இங்ஙனம் துறந்தவர் அவ்விடங்களிலே இருந்து விடுவரோ? இவற்றுள் முடியுங் காரியம் எது

---

121. கலித்தொகை; 8 : 18-20.
122. ,, 15 : 7-8, 15-16.
123. ,, 23 : 8-5.
124. ,, 22 : 18-19.
125. ,, 25 : 25.
126. ,, 35 : 9-11.
127. ,, 35 : 12-13.

தான்?[128] என் நெஞ்சு மலையிடத்தே போனவருடைய வார்த்தையினாலே தோன்றிய காமத் தீயாலே என்னுடைய முலையெல்லாம் காந்தா நிற்கும்[129].

தலைவன் குறித்த காலத்தே வருவான் என்பதைத் தோழி நயம்படச் சாற்றுகின்றாள். என் நெஞ்சு அவர் குறித்த நாள் வந்து நின்அழகைக் கெடுத்தலும் உண்டென்றும் கருத்து. நூற் கேள்வியினையுடைய அந்தணர் செலுத்தும் யாகத்திடத்துப் புகைபோல நெட்டுயிர்ப்புக் கொள்ளும்[130].

தலைவியின் காதல் எத்தன்மையதாம்? மறத்தல் அரிதாகிய வேட்கையையுடைய காதல்[131] என்கின்றது பாடல். பொற்குடத்திற்குப் பொட்டிட்டது போன்றது இது.

## உவமைகள்

ஒரு பொருளைச் சுவையுடன் உணர்த்தவல்லது உவமை. உவமை இலக்கியத்தின் பேரழகு. ‘‘உவமைகள் புலவர்களின் நுண்ணிய நோக்கினையும் ஓவிய உணர்வினையும் புலப்படுத்த வல்லது’’[132] என்கிறார் டாக்டர் மு. வ. சங்க இலக்கியங்கள் சிறப்பான உவமைகளைப் பொருத்தமாகப் பெற்றுள்ளதைக் காணலாம். பாலைக் கலியில் உவமைத் திறன், படிக்க இன்பம் ஊட்டுவதாகவும், எண்ணிட விருந்து நல்குவதாகவும் அமைந்துள்ளது.

தலைவியின் கண்ணைப் பற்றிப் பல இடங்களில் உவமை சொல்லப்பட்டிருக்கின்றது. இரண்டு கண்களுக்கு அழகிய நீலநிறமான இரண்டாகிய மலர்கள் ஒப்புமை

---

128. கலித்தொகை; 35 : 18-21.
129. ,, 35 : 16-17.
130. ,, 35 : 22-24.
131. ,, 1 : 9.
132. கலைக்களஞ்சியம்; ஐந்தாம் தொகுதி. பக். 480.

காட்டப்படுகின்றன.[133] அந்தக் கண்களுக்கு, அவை சொட்டும் சூடான நீருக்கு அருமையான உவமை கையாளப்படுகின்றது. எரிகின்ற திரிகான்ற நெய்போலச் சுடும்படி நீரைத் துளிக்கின்றனவாம் கண்கள்.[134] கூடியிருக்குங் காலத்துச் செவ்வியைத் தோற்றுவித்து மலரை ஒத்த தகைமையினை உடையவாய்ச் சிறிதுபொழுது தலைவன் பிரியுங் காலத்து அவன் பழியைத் தூற்றி அழுகின்ற கண்கள் என்கிறது ஒரு பாடல். இந்தக் கண்கள் புறங் கூறுவாருடைய உறவுக்கு இயைத்துக் காட்டப்படுகின்றன.[135] தலைவன் பிரிவால் வாடும் தலைவி ஆற்றா நிலையில் அவளது கண்கள் கலங்கி அழும் நிலைக்கு நாடாளும் முறைமை தளர்ந்த அரசன்கீழ் இருந்த குடிமக்களின் கலக்கம் உவமிக்கப்படுகின்றது.[136]

தலைவியின் பல் சில இடங்களில் தகுந்தவாறு உவமிக்கப்படுகின்றது. முள்ளை மாறுபடுகின்ற முனையினையுடைய நாணல் முனை போலும் எயிறு என்றும்[137], மணமுள்ள மௌவல் முகையை ஒத்த வெள்ளிய பல் என்றும்[138], நறிய முல்லை முகை யொத்த செறிந்த பல் என்றும்[139] கூறப்படுகின்றது.

தலைவியின் மேனியழகு முகில் துளியைச் சொரியப் பட்ட தளிரை யொத்தது என்கிறது ஒரு பாடல்.[140] தலைவியின் மேனி நிறம் அசோகினது அழகையுடைய

133. கலித்தொகை; 13 : 2.
134. ,, 14 : 20-21.
135. ,, 24 : 15-16.
136. ,, 33 : 14-15.
137. ,, 3 : 13.
138. ,, 13 : 3.
139. ,, 21 : 9-10.
140. ,, 12 : 19.

தளிரை யொக்கும் எனப்படுகிறது.[141] மாமை நிறம் எனப் பொதுவாய்ச் சொல்லுவதிலும் குறிப்பிட்டுச் சொல்வது சிறப்பாக இருக்கிறது. இத்துணைச் சிறந்த தலைவியின் எழில் நலம் எப்படி அழிகின்றது என்பதைச் சில பாடல்கள் இயம்புகின்றன. நிறைமதி நாடோறும் ஒழுகத் தேய்வதுபோல் தலைவியின் அழகுநலம் தலைவன் பிரிவிலிருந்து நாடோறும் கெடுகின்றதாம்.[142] தலைவியை விட்டுத் தலைவன் நீங்கினால் நீண்ட நிழலினின்ற தளிர் போல அவள் அழகு வெளுத்துவிடுகின்றதாம்.[143] தலைவன் அளித்தலை நீங்குங் காலத்துத் தலைவியின் அழகு வானந் துளிமாறு பொழுது இவ்வுலகங் கெடுமாறு போலக் கெடும் என்கிறது ஒரு பாடல்.[144]

பசலை வந்து பற்றுகின்றது தலைவியை. பாலைக்கலி இதைப் பற்றிப் பொலிவுறப் பகர்கின்றது. மறுவற்ற மதிமேல் முகில் படருந் தன்மைபோல் மறுவிலா ஒளியுடைய முகத்தே பசப்புப் பரவுமாம்.[145] பிறிதோரிடத்தில், அவளுடைய திருமுகம் இனிய கதிர்களுடைய திங்களை ஒக்கும்; அந்த முகத்தில் பாம்பு சேர்ந்த திங்களைப் போலப் பசப்புப் பரந்திடும் எனப்படுகின்றது.[146]

பாலை வந்தவுடன் பருவ அழகு கெடும் அல்லவா? வளைகள் முன் கையினின்றும் கழன்று ஓடுகின்றனவாம்! அசைகின்ற இதழினையுடைய கோடல்பூ ஊழ்த்து விழுவது போல் அழகிய ஒளி பொருந்தின வளைகள் இறையினின்றும்

---

141. கலித்தொகை; 14 : 12.
142. ,, 16 : 7-8.
143. ,, 19 : 17.
144. ,, 24 : 28-29.
145. ,, 6 : 7-8.
146. ,, 14 : 16-17.

கழன்று விழுமாம்.[147] செல்வமுள்ள காலத்துச் சேர்ந் திருந்து அவருடைய செல்வத்தை நுகர்ந்து அது நீங்கிய வுடன் அவர்க்கு ஒன்றை உதவுதல் இல்லாத அறிவிலா ருடைய உறவுபோல் தலைவர் பிரியாதிருக்கும் காலத்தில் கையில் செறிந்தும், பிரிந்த போழ்து தோள் மெலிகை யினாலே கழன்றும் விளங்கும் இயல்பின வளைகள் என்கின்றது ஒரு பாடல்.[148] சுற்றங் கெட வாழ்பவன் ஆக்கம் பொலிவு அழியுமாறு போலப் பொலிவிழந்து தோள்கள் வளை கழன்று விடும் என்கிறது பிறிதோ ரிடத்தே.[149]

நிலை கெட்டால் நெஞ்சம் புலம்புமன்றோ! தலைவி நெட்டுயிர்க்கின்றாள். அந்த நெட்டுயிர்ப்பு அந்தணர் செலுத்தும் யாகத்திடத்துத் தோன்றும் புகை போன்று விளங்குகின்றதாம்.[150] தலைவியின் நடுக்கம் அச்சம் அமைந்த பகைவரின் நடுக்கத்தை ஒத்திருக்கின்றதாம்.[151]

தலைவியைப் பற்றிய ஓர் ஓவியமே பாலைக் கலியில் தீட்டப்பட்டுள்ளது. அந்த அருமை ஓவியத்திற்குப் பெருமை சேர்ப்பது போல அவளுடைய கற்பு பற்றிக் கூறப்படு கின்றது. அருந்ததிபோல் தொழுது வணங்கத் தக்க கற்பினள் தலைவி என்கிறது பாடல்.[152]

தலைவன் பிரிந்து சென்று விட்டான். அந்த ஏக்கத்தில் தலைவி எழில் குன்றிக் கிடக்கின்றாள். தலைவியின் தனிமை விழா நடத்த மறுநாள் அந்த இடம் வெற்றெனக்

---

147. கலித்தொகை; 6 : 15-16.
148. ,, 24 : 17-20.
149. ,, 23 : 18-19.
150. ,, 35 : 25-26.
151. ,‘ 29 : 21.
152. ,, 1 : 21.

கிடப்பதுபோல இருக்கின்றது என்கிறது பாடல்.[153] அரசால் அலைத்தலைப் பெற்ற நாடு பாழ்பட்டு வருந்து வதைப் போலவும்[154], தாமரைப் பொய்கையுள் நீரால் நீக்கப்பட்ட மலர் வாடுவது போலவும் எனத் தலைவியின் தனிமை நிலை ஒப்பிடப்படுகின்றது.[155]

தலைவன் செல்லும் வழியின் வெம்மை மிகுதியாக எரிக்கின்றது. ஞாயிற்றின் வெம்மை, மூன்று கண்ணை யுடைய இறைவன் மூவெயிலை எரிக்கச் சினந்ததைப் போலவும்[156], கொடுந் தொழிலைச் சூழ்ந்த அரசனது கொடுங்கோல் போலவும்[157], யாவரிடத்தும் உலக ஒழுக்கத்தைக் கடந்து தீங்கு செய்து பின்பு புகழில்லையான வனுடைய முடிவுக் காலத்து அவன் கிளையே யன்றி அவனுங் கெடுமாறு போலவும் விளங்குகின்றது என்கிறார் புலவர்.[158]

ஞாயிற்றின் வெம்மை சுடும் வழியின் கொடுமை பற்றியும் கூறப்படுகின்றது. குடிமக்கள் கூக்குரலிட்டுப் புலம்பவும் கொலைத் தொழிலுக்கு அஞ்சாமல் வரிவாங்கும் செங்கோல் வளைந்த அரனுடைய குடை நிழலிற்றங்கிய உலகம் போலவும்[159], போர்த் தொழிலிலே மிகுகின்ற சினத்தையுடைய அரசன் சினந்து செற்றுவிட்ட பகைப் புலத்தை நெருப்புத் தின்றாற் போலவும்[160], வீமன் தன் சுற்றத்தோடு நெருப்புச் சூழந்த அரசுக்கு இல்லத்தை விட்டு வெளியேறினாற் போல மூங்கிற் புதர் பற்றி எரியுங்

153. கலித்தொகை; 4 : 10-11.
154. ,, 4 : 12-13.
155. ,, 4 : 14-15.
156. ,, 1 : 4-5.
157. ,, 7 : 1-2.
158. ,, 9 : 3-4.
159. ,, 8 : 5-7.
160. ,, 12 : 1-2.

காட்டிலிருந்து வேழம் தன் கிளையுடன் தப்பிச் செல்லும் கொடுமை போலவும்[161] பாலை நிலம் உவமிக்கப் படுகின்றது.

தலைவன் செலவழங்கிய தன்மைக்குச் சில உவமைகள் தரப்படுகின்றன. பரிக் கோலால் குத்தவும் தன் நெறியில் இல்லாத செலவு கடிய களிற்று ஒருத்தல் மெல்லிய யாழோசையின் எல்லையிலே தங்கினாற்போல, அன்புற்றுத் தாழ்ந்து குற்றேவல் மகளாகிய தோழி தன் கூற்றின் எல்லையிலே தங்கிப் போகாது ஒழிந்தார் என்பதும்,[162] உண்மை கூறிக் கழறும் கேளிரைப் போல, தலைவன் போக்கைத் தடுப்பன அவன் செல்லும் காடு என்பதும்[163], யாக்கையின் கண்ணே மருத்துவன் நுகர்வித்த மருந்து போல, தோழி கூறிய சொல் நல்ல மருந்தாகித் தலைவன் போக்கைத் தவிர்த்தது என்பதும் ஆகும்.[164]

தலைவன் குறித்த காலத்தில் திரும்பி வருவான் என்னும் நம்பிக்கையோடு இருக்கும் தலைவிக்கு அவனது விரைந்த செலவு கண் உறுகின்ற வருத்தத்தைக் கை நீக்குவஃது போலாம் என்பதும்[165] ஆகும்.

இளமை நிலையாமை, காலம் நிலையாமை இரண்டும் அழகிய உவமைகளால் விளக்கப்படுகின்றன. ஆற்று நீர் கழிந்தாற்போல என்றும்[166], நீர் நிறைந்த தடம் அந்நீர் நாள்தோறும் குறைவதைப் போலவும் என்று இளமை நிலையாமைக்கும்[167], முற்றின தாமரை முகைக்குக் கூற்ற

161. கலித்தொகை; 24 : 7-11.
162. ,, 1 : 26-97
163. ,, 2 : 21-22
164. ,, 16 : 18-20.
165. ,, 33 : 23-24.
166. ,, 19 : 13.
167. ,, 16 : 15-16.

மாகிய அலர்ச்சி அதன் குறைவிற்குக் காரணமானாற் போல என்பது கால நிலையாமைக்கும் உவமிக்கப்படுகின்றன.[168] பொருள் நிலையாமைக்கு நரம்பு அறுந்து போகும் யாழும், மனம் மாறும் திருமகளும், உயிரைக் கொள்ளும் அரசும் உவமைகளாகக் காட்டப்படுகின்றன.[169]

பாலைக்கலியில் விலங்குகளைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. மானின் உடம்பில் உள்ள புள்ளிகள் பொரி மலர்ந்தாற் போன்றவை என்றும்[170], யானையின் அடிகள் உரல் போன்றவை என்றும்[171], யானையின் மருப்பு பால் போன்ற வெண்மையுடையது என்றும் குறிக்கப்படு கின்றன.[172]

பாலைநிலத்து மறவர்களுடைய பார்வை புலி நோக்குப் போன்றதென்றும்[173], அவர்களுடைய வில்லில் எழும் நாண் ஒலி, சிங்கம் இடித்தாற் போன்றதென்றும்[174], அவர்கள் முகத்தில் சுருண்டிருக்கும் தாடி, ஆண் மானி னுடைய திருகி முறுக்குண்ட கொம்பு போன்றது என்றும் உவமிக்கப்படுகின்றன.[175]

இயற்கை வருணனை பாலைக் கலியில் எழிலுறத் தீட்டப்பட்டுள்ளது. படை வலி இல்லாத அரசனுடைய நாட்டிலே பகையரசன் படை வந்துவிடுமாறு போல தலைவன் இல்லாத தலைவியிடம் இளவேனில் வந்த தென்று உவமிக்கப்படுகின்றது.[176]

---

168. கலித்தொகை; 16 : 21-22.
169. ,, 7 : 11 : 14-
170. ,, 12 : 3.
171. ,, 12 : 6.
172. ,, 20 : 1
173. ,, 3 : 1
174. ,, 14 : 1.
175. ,, 14 : 5-6.
176. ,, 26 : 7-8.

ஆற்றிடைத் தோன்றும் அறல் மணலுக்கு அருமையான உவமைகள் காட்டப்படுகின்றன. கரையிலிருந்து விழுந்த தாலும் தளிராலும் நிரம்பிய ஆற்று மணலுக்குக் காதலரைக் கூடிய தலைவியின் கூந்தலும்[177], வளையினை யுடைய இளையோர் இழைத்த வண்டல் பாவையும் பூவும் கலந்து கிடந்தமையும்[178], அம்மணலில் ஒழுகும் நீருக்கு மகளிரின் ஐம்பால் கூந்தலும்[179] உவமை காட்டப் பெறு கின்றன. மணலிலே பல நிறத்தையுடைய வேங்கைப் பூக்களும் விழுந்து கிடந்தமைக்கு ஐம்பாலில் கிடந்த அணியும் பொன்மாலையும் உவமிக்கப்படுகின்றன.[180] பொருள்களின் அசையா நிலையில் புலனாகும் அழகைப் புனைந்து பாராட்டுதல் போலவே அசையும் நிலையில் அவற்றின் அசைவைப் புனைந்து பாடுதலும் உண்டு.

ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள் போல யானைகள் தங்கள் கொம்புகளை ஊன்றிக் கையை நிமிர்த்தி நிலத்தின்மேல் கிடக்கின்றன என்பதும்[181] செய்தற்கரிய தவங்களைச் செய்தவர்கள் குறைவற நுகரும் நுகர்ச்சி போல அரும்புகள் விரிந்தமையாத கொம்புகள் தோறும் தாம் விரும்பும் தாதைப் பொருந்தி உண்டு விரும்பி ஆர்க்கும் வண்டுகள் என்பதும்[182] அவ்வகையின.

மணியின் ஒளியைப் போன்ற ஐவகைக் கூந்தல், என்றும், குளத்தில் மலர்ந்த தாமரை அரும்பு போன்ற இளமுலை என்றும், பொற்றகடு போன்ற சுணங்கு என்றும்[183] அனிச்சப் பூப் போன்ற மென்மையிலே பழகிய அடிகள்

177. கலித்தொகை; 26 : 5-6.
178. ,, 28 : 5.
179. ,, 28 : 6.
180. ,, 31 : 3-5.
181. ,, 7 : 4-5.
182. ,, 29 : 1-3.
183. ,, 21 : 13-19.

கல்லைத் தீண்டினால் தோன்றும் தன்மை, தாமரைப் பூவினது அழகிய இதழ்கள் இங்குலிகம் தோய்ந்தாற் போன்று விளங்கும் என்றும்[184] தலைவியின் உறுப்புகள் புனையப்படுகின்றன.

குறித்த காலத்தில் வருவேன் என்று கூறிச் செல்லுகின்றான் தலைவன். அவன் கூறிய மொழியிடத்து உயிராகிய உண்மை கெடமாட்டார் என்பது, சித்திரம் எழுதுகின்றவன் உயிர்ப்புக் கொடுத்த பாவை, தான் அழியுமளவும் அக்குறிப்பு நிற்குமென உவமிக்கப்படுகின்றது.[185]

தலைவன் சொன்ன சொல் தவற மாட்டான் என்பதற்குப் பாண்டியனுடைய வாய்மை, உவமிக்கப்படு படுகின்றது.[186]

பூக்கள் மலரும் மலர்ச்சிக்குப் பல உவமைகள் கையாளப்படுகின்றன. தாமரையின் புதிய பூ, புணர்ந்தவர் முகம் போலப் பொலிவுறுகின்றது என்றும்[187], சோம்பல் இல்லாதவன் செல்வம் பெருகுவது போல மரங்களில் பூக்கள் மிகுகின்றன என்றும்[188], கரிய நிறத்தையுடையவள் மேனி போலத் தளிர்கள் தோன்றுகின்றனவென்றும்[189], அத்தளிரின் மேலே விழுகின்ற தாது அந்நிறத்தில் பரந்த சுணங்கு போன்றும்[190], தாதுகளை உண்ண வருகின்ற

184. கலித்தொகை; 12 : 11-12.
185. ,, 21 : 5-6.
186. ,, 3 : 24-25.
187. ,, 30 : 5.
188. ,, 34 : 1.
189. ,, 34 : 3.
190, ,, 34 : 3-4.

தும்பிகள் ஒலித்தல் விறலியின் இசை போன்றதென்றும் கூறப்படுகின்றது.[19]

நீர் நிறைந்த குளங்களில் தோன்றும் பூக்கள், ஆறு கண்களை விழித்துப் பார்த்ததைப் போல் இருக்கின்றது என்று கூறப்படுகின்றது.[192]

இரவுப்பொழுதுக்கு எண்ணற்ற உவமைகள் காட்டப் படுகின்றன. பசப்பு ஊர்வது போன்ற இரவு என்கின்றது ஒரு பாடல்.[193]

தலைவனுடைய தலைமை, ஞாயிறு போல விளங்கு கின்றது.[194]

191. கலித்தொகை; 35 : 4.
192. ,, 32 : 2.
193. ,, 32 : 14-15.
194. ,, 18 : 11.

# 5. அகநானூறு

எட்டுத் தொகையுள் ஒன்றான இது மற்ற ஏழு தொகை நூல்களை விட அளவால் பெரியதாகவும் அகப்பொருள் பற்றிய தொகை நூல்களுள் சிறந்ததாகவும் அதனாலேயே அகம் என்ற பெயரைப் பெற்றதாகவும் அளவால் குறுகிய அடிகளை உடைய நானூறு பாட்டுகளைக் கொண்ட குறுந்தொகைக்கு மாறாகப் பதின்மூன்று முதல் முப்பத் தோரடி வரையில் கொண்ட பாட்டுகள் நானூறைக் கொண்டதால் நெடுந்தொகை என்னும் பெயரை உடைய தாகவும் அகநானூறு விளங்குகின்றது. இந்நூலைத் தொகுத்தவர் மதுரை உப்பூரிகுடிகிழார் மகன் உருத்திர சன்மன். தொகுப்பித்தவன் புலமை நிரம்பிய — அக நானூற்றிலே ஒரு பாடலைப் பாடியுள்ள பாண்டிய மன்னனாகிய உக்கிரப்பெருவழுதி ஆவன். கடவுள் வாழ்த்துச் செய்யுளைத் தவிர்த்து நானூறு பாடல்களைக் கொண்ட இந்நூலில் முதல் நூற்று இருபது பாடல்கள் களிற்றியானை நிரை என்றும், அடுத்த நூற்று எண்பது பாடல்கள் கொண்ட பகுதி மணிமிடை பவளம் என்றும், இறுதி நூறு பாடல்களைக் கொண்ட பகுதி நித்திலக் கோவை என்றும் வழங்கும். இவ்வொவ்வொரு பகுதியும் தனி நூல் போலவே உரையாசிரியர்களால் எடுத்துரைத்து மேற்கோள் காட்டப் பெறுகின்றது. அதனாலேயே அகநானூற்று மிகச் சிறப்பாகப் போற்றிக் கற்கப்பட்டது என்னும் உண்மை விளங்குகிறது.[1]

பொருட் சிறப்புக் காரணமாகக் களிற்றியானை நிரை என்ற பெயரும், செய்யுளும் பொருளும் ஒத்த அமைப்பால்

---

1. டாக்டர் மு. வ; கலைக்களஞ்சியம்: முதல் தொகுதி, பக். 9

நித்திலக்கோவை என்ற பெயரும் வழங்கியதாகக் காரணம் கூறப்படும். ஆயினும் 'அறிஞர் ஒருவர் இவ்வரையறையின் இயைபு இன்ன என்பது நன்கு புலனாதல் இல்லை என்பர்.[2] மேலும் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்து திணைகளும் இதில் ஒரு முறை பற்றி அமைக்கப் பட்டுள்ள பொருத்தம் இந்நூலின் பிறிதொரு சிறப்பாகும். ஒற்றைப்படை எண்களையுடைய பாடல்கள் பாலைத் திணை பற்றியனவாகும். இரண்டும் எட்டுமாக வரும் எண்கள் குறிஞ்சித் திணை பற்றிய பாடல்களாக உள்ளன. நான்கு பதினான்கு என வருவன முல்லைத் திணைக் குரியன. ஆறு பதினாறு என ஆறாவது எண்ணாக உள்ளவை மருதத்திணை பற்றிய பாடல்களாகும். பத்து இருபது என்று பத்துப்பத்தான எண்கள் நெய்தல் திணைக்குரிய பாடல்களாகும். இவ்வகையான முறையில் ஐந்திணை அமைப்புத் தொகைநூல்களில் இந்நூலுக்கு மட்டுமே அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அகப்பொருள் பற்றி எழுந்த இந்நூலில் முதற் பொருள் கருப்பொருள் உரிப் பொருள் என்ற மூன்றும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. அகப் பொருள் நூலாயினும் இந்நூற் கண் வரலாற்றுக் குறிப்புகள் மிகப் பலவாக இடம் பெற்றுள்ளன. இந்நூல்களைப் பாடிய புலவர்கள் நூற்று நாற்பத்தைவராவர். மூன்று பாடல்களைப் பாடிய ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.[3] ஏனைய பாடல் களைப் பாடியோர் தொகை நூற்றுநாற்பத்திரண்டு.

காதலர்களின் அகனமர்ந்த காதல் உணர்ச்சி, தூய்மை யும் தியாகப் பண்பும் பொருந்திய அவர்கள் வாழ்க்கை, தலைவனின் கடமை தேரும் நெஞ்சம், தலைவன் மாட்டுக் கொண்ட தலைவி அன்பின் ஆழம், தலைவனின் பொருள்

---

2. இரா. வேங்கடாசலம் பிள்ளை; அகநானூற்றுச் சொற்பொழிவுகள்; தலைமை உரை, பக். 9.
3. அகநானூறு; 114, 117, 165.

தேடும் அரிய முயற்சி, தோழியின் அறிவாற்றல் நிறைந்த பேச்சு, ஐந்திணைகளின் வருணனை மக்களின் பழக்க வழக்கங்கள், நாகரிகம், பண்பாடு முதலான செய்திகள் எல்லாம் இந்நூற்களுள் பொதிந்து கிடக்கின்றன. "ஆற்றல் சான்ற உணர்ச்சிகள் அமைதியில் பொங்கிப் பீறிடுவதே சிறந்த கவிதை (Poetry is the spontaneons overflow of powerful feelings recollected in tranguility) என்ற ஆங்கிலக்[4] கவிஞரின் கூற்றின் உண்மையினை அக நானூற்றுப் பாடல்களில் அமைந்திருக்கக் காணலாம். 'காலத்தால் முற்பட்ட நூல்' என்றும் இஃது அறிஞர்களால் கொள்ளப்படுகிறது.[5]

அகநானூற்றில் சேரர்களைப் பற்றிய பாடல்களாக அறுபத்திரண்டு பாடல்கள் வந்துள்ளன.[6] இவற்றுள் பாலைத்திணையைப் பற்றிய பாடல்களே மிகுதியாகும். நாற்பத்தொரு பாடல்கள் பாலைத் திணைக்கு உரியனவாக உள்ளன.[7] அடுத்துக் குறிஞ்சித் திணையைக் கொண்டுள்ள

---

4. Wordsworth.
5. இரா. வேங்கடாசலம் பிள்ளை; அகநானூற்றுச் சொற்பொழிவுகள்: தலைமையுரை, பக்கம் 11-12.
6. அகநானூறு ; 5, 10, 15, 36, 45, 60, 62, 65, 69, 76, 77, 91, 93, 97, 99, 105, 111‹ 127, 135, 142, 143, 149, 152, 153, 155, 168, 173, 185, 197, 198, 199, 209, 212, 213, 222, 223, 235, 236, 258, 261, 267, 270, 290, 291, 303, 309, 311, 325, 337, 338, 347, 349, 352, 356, 359, 376, 379, 381, 389, 392, 396.
7. அகம் : 5, 15, 45, 65, 69, 67, 91, 93, 97, 99, 105, 111, 127, 135, 143, 149, 153, 155, 173, 185, 197, 199, 209, 213,

பாடல்கள் பதினொன்றாகும் மருதத்திணைக்குரியன வாக ஆறு பாடல்களும்,[8அ] நெய்தல் திணைக்குரியனவாக நான்கு பாடல்களும்[8ஆ] வந்துள்ளன. முல்லைத் திணையைப் பற்றி எழுந்த பாடல் ஒன்றும் இல்லை.

இனி நூற்கண் சென்று வரலாற்றுச் செய்திகள், பழக்க வழக்கங்கள், உவமைகள், உள்ளுறை, இறைச்சி, அகப் பொருள் நுட்பம் முதலியன பற்றிக் காண்போம்.

## வரலாற்றுக் குறிப்புகள்

அகநானூறு வரலாற்றுக் களஞ்சியம் எனலாம். அந்த அளவிற்கு வரலாற்றுண்மைகள் பொதிந்துள்ளன. நேற்றைய நிகழ்ச்சி இன்றைய வரலாறு, இன்றைய செய்தி நாளைய வரலாறு என்பதைப் போல அன்றைய நிகழ்ச்சி களாக அகநானூற்றில் வருவன இன்றைய வரலாறாக நமக்கு விளங்குகின்றன.

ஒன்று மொழிக்கோசர் எனப் புகழப்படுவோரைப் பற்றி மாமூலனார், மெய்ம்மொழியாற் சிறந்த பெரிய அணிகள் அணிந்த தலைமை கொண்ட கோசர்கள்[9] என்றும், அவர்களுடைய துளுநாட்டைப் பற்றி மயில்கள்

---

223, 235, 261, 263, 267, 291, 303, 309, 313, 325, 337, 347, 349, 359, 379, 381, 389.

8. அகநானூறு : 62, 142, 152, 168, 198, 212, 222, 258, 338, 352, 392.

8அ. ,, 36, 76, 236, 356, 376, 396.

8ஆ. ,, 10, 60, 270, 290.

9. ,, 5 : 2-3.

மிகுந்த சோலைகள் நிரம்பியது என்றும்[10] குறிப்பிடுகின்றார்.

ஆதிமந்தி என்பவள் சோழ அரசன் மகள். ஆட்டனத்தி என்னும் சேர அரசனை மணந்தாள் அவள். காவிரிநீர் வெள்ளத்தில் அத்தி அடித்துச் செல்லப்பட்டான். அவனைக் காணாமையால் துன்புற்றுக்[11] குழன்ற மயிரினை உடைய அத்தியைக் கண்டீரோ என அவன் காதலி ஆதிமந்தி அலறி,[12] அறிவு திரிந்து மயங்கி,[13] நாடுதோறும் ஊர்தோறும் சென்று என் தலைவனைக் கடல் கொண்டது போலும், புனல் கொண்டு ஒளித்தது போலுமெனக் கண்ணீர் விட்டுப் புலம்பிப்[14] புனலின்கண் விரும்பி ஆடக் காவிரி கவர்ந்து கொண்ட ஆட்டனத்தியைத்[15] தேடினாள். அவன் ஆடிய அழகினைக் கண்டு மயங்கியே காவிரி கவர்ந்து கொண்டதாகக் கற்பனைச் சுவையுடன் மொழிகின்றார் பரணர்.[16] கழார் என்னுமிடத்திலுள்ள துறையிடத்து நடந்த விழாவில் கரிகாலன் தன் சுற்றத்துடன் காண ஆட்டனத்தி ஆடினான் என்றும், காவிரி விழுங்கிய அவனைக் கடலிலிருந்து மருதி என்பாள் மீட்டுத் திசை தோறும் தேடியலைந்த ஆதிமந்தியிடம் கொடுத்தாள் என்றும் பரணர் வரலாற்றை முழுமைப் படுத்துகின்றார்.[17]

சேரனுடைய கொல்லி மலையைப் பற்றியும், அம்மலையில் தேவதச்சனால் மலையுச்சியில் அழகொழுக

---

10. அகநானூறு; 15 : 5-6,
11. ,, 45 : 12-15.
12. ,, 76 : 6-13.
13. ,, 135 : 4-6.
14. ,, 236 : 14-21.
15. ,, 376 : 3-11.
16. ,, 396 : 11-15.
17. ,, 222 : 5-12.

எழுதப்பட்ட பாவையைப் பற்றியும், அப் பாவை அண்டினாரைக் கொல்லும் தன்மையைப் பற்றியும்[18] பரணர் முதலான புலவர்கள் பாடியுள்ளனர்.

தமிழக மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் நிரம்ப இடம் பெற்றுள்ளன. சேர மன்னர்களைப் பற்றியன அறுபத்து நான்கு பாடல்கள் ஆகும்.

வானவரம்பன் என்பவன் கடற்போரில் வென்றவன். போர் முனையில் அரணைக் கலக்கும் வலியவன் என்பதும்[19] அவனுடைய ஊர் வெளியம் என்பதும்[20], அவனுடைய வளமான நாட்டிற்கு அப்பால் கொடிய வெம்மையான காடு உள்ளது என்பதும்[21] குறிக்கப்படு கின்றன. திண்ணிய தேர்களை உடைய பொறையன் என்பவன் தொண்டி நகருக்கு உரியவன்.[22] யானைப்படை யுடைய அவனுக்கு உரியது கொல்லிமலை[23]. பசும்பூண்களை அணிந்தவன்,[24] பகைவரது தேயம் பாழ்பட அழிப்பவன், பகைவரால் அணுகுதற்கு அரிய படையுடையவன்[25] என்பன உணர்த்தப்படுகின்றன.

மாந்தரம் பொறையன் கடுங்கோ என்பவன் புலவர் புகழுமாறு வாரி வழங்கும் வள்ளல் என்பதும், அளத்தற்கு அரிய சேனையினை உடையவன் என்பதும், அவனைப்

---

18. அகநானூறு; 62 : 12-16. 303 : 3-6. 338 : 12-14. 209 : 15-17. 213 : 15-17.
19. ,, 45 : 15-19.
20. ,, 359 : 5-7.
21. ,, 389 : 15-18.
22. ,, 60 : 7.
23. ,, 62 : 12-13, 338 : 12-14
24. ,, 303 : 3-6.
25. ,, 338 : 12-14.

பாடிச் சென்றோர், வறியோர் கலம் எப்போதும் நிறைவுற்று மகிழும் என்பதும் பரணர் குறிக்கும் செய்திகளாகும்.[26]

குட்டுவன் என்பவன் பசி என்பதனையே அறியாத மருதநிலத்து ஊர்கள் கொண்ட குடநாட்டுக்கு உரியவன்.[27] படை மிகுந்த அவனைப் பாரில் எதிர்க்க ஆளில்லாததால் கடல் பிறக்கோட்டி வெற்றி காண்கிறான். அவனது பாசறையில் பல மொழி மறவரும் இருந்தனர் என்பன அறியப்படும்.[28]

பிடரி மயிர் கொய்யப் பெற்ற குதிரைகளும், நல்ல தேர்களும் உடைய குட்டுவன் கழுமலம் என்னும் ஊர்க்கும் உரியவன்.[29] நீண்ட மருப்புகளை உடைய யானைப் படை மிகுந்த அவன் தொண்டித் துறைமுகத்திற்கும்[30], மாந்தை என்னும் ஊர்க்கும்[31] உரியவன். ஆரிய மன்னர்கள் அலறுமாறு அவர்களைத் தாக்கிப் பெரிய இமயமலையின் மீது வளைந்த விற்பொறியைப் பதித்து, கொடிய சினம் பொருந்திய பகை வேந்தரைப் பிணித்துவந்த சேரனும் அவனே.[32] சிலப்பதிகாரம் பகரும் சேரன் செங்குட்டுவன் இவனே.

ஈகையாகிய கடனை ஏற்றுக்கொண்ட கோட்டமில்லாத நெஞ்சினை உடைய உதியன் என்பவன் அட்டில் அறை ஓயாது ஒலி நிறைந்ததாயிருக்கும். இந்த உதியன், பெருஞ்சோற்று உதியன் சேரலாதனே என்பதற்கு இவன்

---

26. அகநானூறு; 142 : 1-6.
27. ,, 91 : 12-17.
28. ,, 212 : 12-21.
29. ,, 270 : 7-11.
30. ,, 290 : 12-14.
31. ,, 376 : 17-18.
32. ,, 396 : 16-19.

சிறப்பாகச் சோறு ஆக்கிப் படைக்கும் பண்பு குறிக்கப்படுவதிலிருந்து உணரலாம்.[32]அ சேரலாதன் என்பவன் கடலிடை இருந்த பகைவர்களை வென்று அவர்தம் காவல் மரத்தினை வெட்டி,[33] இமயத்தில் முன்னோரை ஒப்ப வில் இலச்சினையைப் பொறித்து, மாந்தை என்னும் தனது நகரத்தில் பகைவர் திறை செலுத்த அதனைக் குவித்து வைத்த பெருநிதியன்; நிலந்தின்னவிட்ட நிதியன் என்கிறார் மாமூலனார்.[34] இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இவனாகவும் இருக்கலாம்.

யானைப் படையும் தேர்ப்படையும் கொண்ட கோதை என்பான் கருவூருக்கு (வஞ்சி) உரியவன். ஆன் பொருனை ஆறு அவ்வூரினை ஒட்டிப் பாய்கின்றது.[35] அவன் வஞ்சியென்னும் கருவூரை மிகுந்த விழிப்புடன் பாதுகாக்கின்றான்.[36] களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பெருந்துறை என்னுமிடத்தில், முன்பு இழந்திருந்த நாட்டை நன்னன் என்பவனுடன் பொருது மீட்டான்.[37] குதிரைப் படை கொண்ட வானவன் எனபவனைத் தொலைவிலிருந்து கூத்தர் காண வருவர்.[38] பகைவருடன் போரிட்டு அவர்களுடைய அரண்களை அழிப்பதில் வென்றி மிக்கவன் வானவன் என்னும் சேர மன்னன்.[39]

### பாண்டிய மன்னர்கள்

தலையாலங்கானம் என்னும் ஊரிடத்தே பாண்டியன் நெடுஞ்செழியன், கூடி வந்து எதிர்த்த சேரன், சோழன்,

32.அ அகநானூறு; 168 : 6-8.
33. ,, 127 : 3-4, 347 : 3-5.
34. ,, 127 : 3-10.
35. ,, 93 : 19-21.
36. ,, 263 : 11-13.
37. ,, 199 : 18-23.
38. ,, 309 ; 9-11.
39. ,, 381 ; 13-17.

திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான் பொருநன் ஆகிய எழுவரையும் ஒரு பகலிலே வென்று வலியழித்து அவர்களுடைய முரசையும் வெண்குடையையும் கைப்பற்றினான்.[40] பசும்பூண் பாண்டியன் என்பவன் அறத்தினைக் கொண்ட செங்கோலாட்சியும், பகைவர் திறன் அழிக்கும் பேராற்றலும், பலரும் புகழும் திருவும் கொண்டு விளங்கினான்.[41] பகைவர்களுடைய அரண்கள் பலவற்றை வென்றவன். மதுரை மாநகரில் நாளங்காடி சிறப்புற விளங்குபவன் வழுதி என்னும் பாண்டியன்.[42]

## சோழர்கள்

கழார் என்னும் துறையின்கண் ஆட்டனத்தி ஆடிய ஆட்டத்தை விரும்பித் தன்னுடைய சுற்றத்துடன் அதனைக் கண்ணுற்றான் கரிகாலன்[43] என்கிறார் பரணர். சேர மன்னர்களுக்குரிய சிறப்புகள் சில குறிப்பிடப்படுகின்றன. குடந்தை நகரில் நிதியைச் சேர்த்து வைத்திருந்தனர்.[44] அவர்களுடைய உறந்தை நகரில் அறங்கூறும் அவையம் (நீதி மன்றம்) இருந்தது.[45] காவிரி ஆறு சோழர்களுக்குரியது.[46] போரில் வல்ல சோழர்களுடையது பண்டங்கள் குவிந்து கிடக்கும் பாக்கம் என்னும் கடற்கரை ஊர். ஆநிரை கவரும் வீரர்கள் தலைவன் அச்சோழன்.[47].

## குறுநில மன்னர்கள்

நன்னன் என்பவனைப் பற்றிப் பல செய்திகள் நவிலப் படுகின்றன. நன்னன் என இரண்டு மூன்று பேர் இருந்த

---

40. அகநானூறு; 36 : 12-33, 209 : 3-6.
41. ,, 338 : 1-5.
42. ,, 93 : 8-11.
43. ,, 376 : 4-5.
44. ,, 60 : 13-15.
45. ,, 93 : 1-5.
46. ,, 213 : 21-24.
47. ,, 338 : 17-20.

தாகத் தெரிகின்றது. பாழி என்னும் ஊருக்குத் தலைவன் என ஒருவனைக் குறிப்பிடுகின்றார் மாமூலனார்.[48] அவனது பாழியில் அச்சந் தரும் பேய் இருந்தது.[49] அவனே பிண்டன் என்பவனை வென்றான். பாரம் என்னும் ஊர்க்குத் தலைவன்; ஏழில் என்னும் நீண்ட மலைக்கு உரியவன்; அம்மலைக்கு அருகில்தான் பாழியும் இருந்தது என்பர் பரணர்.[50] அவனுடைய மலைகளில் பொன் கிடைத்தது.[51] களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் நன்னனைப் பெருந்துறையில் தோற்கடித்ததாகப் பாடுவர் கல்லாடனார்.[52] அரணைத் தாக்கி வென்று கவர்ந்த அணிகலன்களைப் பாடுநர்க்கு ஆராயாது அள்ளி வழங்கும் வள்ளன்மை மிகுந்தவன் நன்னன்.[53] புனல் நாட்டின்மீது வெகுண்டு எழுந்தான்; அவனுடைய பாழியின்கண் எதிர்த்துப் போரிட்ட ஆய் எயினன் தோற்றான் என்றும் கூறுவர் பரணர்.[54] நன்னனுக்குரியது பறம்பு மலை என்றும் பரணர் குறிப்பிடுகின்றார்.[55] பகையரசனுக்கு ஆற்றாது அரண் விட்டு அடவி சென்று சிலகாலம் இருந்து மீண்டும் போரெழுந்து வென்று தன் புகழை நிலைநாட்டியவன் நன்னன் என்று ஒருவனைப் பற்றிக் கூறுகின்றார் மோசி கீரனார்.[56] வியலூருக்கு உரிய நன்னன் வேண்மான் என்பவன் விறலியரோடு பாணரையும் புரந்தான் என்கிறார் மாமூலனார்.[57]

---

48. அகநானூறு; 15 : 10-12.
49. ,, 142 : 8-15.
50. ,, 152 : 10-13.
51. ,, 173 : 15-17.
52. ,, 199 : 18-20.
53. ,, 349 : 5-9.
54. ,, 396 : 1-3.
55. ,, 356 : 8-11, 18-20.
56. ,, 392 : 21-28.
57. ,, 199 : 18-20.

அரண் பல வென்று நல்ல அணிகலன்களைக் கொணர் வான் ஆய் என்பவன்.[58] ஆய் எயினன் என்பான் பாழி என்னும் ஊரினிடத்தே நன்னனை எதிர்த்துச் சென்றான். அங்கே மிஞிலி என்பவனால் கொல்லப்பட்டான் என்பர் பரணர்.[59] எழினி என்பவன் படை வீரர்களை ஏவி ஆநிரை களைக் கவர்ந்து வருமாறு செய்வான்[60]. கண்ணன் எழினி என்பான் மிகுந்த செல்வமும் படைவலியும் கொண்டவன். முதுகுன்றம் அவனுக்குரியது என்கிறார் மாமூலனார்.[61] களிறுகளும் அணிகளும் பரிசிலாக வழங்கும் பாரியின் பறம்பு அரணை மூவேந்தரும் முற்றியிருந்தபொழுது, உள்ளே உறைபவர் உணவின்றி வருந்தாவாறு கபிலர் என்னும் நல்லிசைப் புலவர் கிளிகளை வளர்த்து வெளி யிலிருந்து கதிர்களைக் கொண்டுவரச் செய்தார் எனப் பிற நூலில் கூறப்படும் வரலாறு இதில் இடம் பெறுகின்றது.[62]

அதியன் என்பான் அள்ளன் என்பவனுக்கு அவன் தந்த வெற்றிக்கு மகிழ்ச்சியுடன் பரிசாக நாடுநல்கினன் என் கிறார் மாமூலனார்.[63] வடதிசைக்கண் பாணன் என்னும் ஒரு தலைவனின் வளமான நாடு பற்றியும் அதில் உள்ள இடைச்சுரம் பற்றியும் பாடுகின்றார்.[64] அன்னி என்பான் திதியன் என்பவனுடன் குறுக்கைப் போர்க்களத்தில் பொருது புன்னை மரத்தின் அடியை வெட்டினான்; அப்போது கூத்தர் புகழ் முழக்கம் எழுப்பினர்.[65] மிஞிலி என்பவன் வாய்மை தவறாமல் நன்னன் பாழியில் இருந்து

---

58. அகநானூறு; 69 : 13-20.
59. ,, 396 : 1-6.
60. ,, 105 : 9-13.
61. ,, 197 : 5-8.
62. ,, 303 : 8-13.
63. ,, 325 : 7-9.
64. ,, 325 : 16-18.
65. ,, 45 : 8-12.

பேய்க்குப் பலியிட வெள்ளம் போன்ற சேனையுடனிருந்த அதிகனைக் கொன்றான்;[65அ] ஆய் எயினன் பாழியில் போரிட வந்தபோது அவனைக் கொன்றான் மிஞிலி.[66] இந்த இரண்டு செய்தியையும் பரணர் குறிப்பிடுகின்றார். அஃதை என்பவன் பரிசிலர்க்குக் களிறுகளையும் நல்ல அணிகளையும் வழங்குவான். அவன் நாளோலக்கத்தில் பறையடித்தவாறு பொருநர் புகுவர்.[67] புல்லி என்பவன் வேங்கட மலைக்கு உரியவன்.[68] மலையமான் திருமுடிக்காரி முள்ளூர் மன்னன். நல்ல புகழுடைய வல்வில் ஓரியைக் கொன்று அவனுடைய நாட்டைச் சேரர்க்கு அளித்தான்.[69] இருவரும் கடையெழு வள்ளல்களுள் குறிக்கப்படுகின்றனர் என்பது அறியத் தக்கது. பதினான்கு வேளிர் ஒருங்கு நின்று தாக்கிய காமூருக்குத் தலைவன் கழுவுள் என்பான்.[70] வேங்கடமலைக்கு உரியவர் தொண்டையர்.[71] அதற்கப்பால் உள்ளது வடுகரது நாடு.[72]

பிட்டன் என்பவன் சேரர்களின் படைத்தலைவன்; தப்பாத வாளினை உடையவன்.[73] குதிரை மலைக்குத் தலைவன். பரிசில் நம்பி வாழ்வோர்க்கு நல்ல அணிகளை நிரம்பத் தருபவன்.[74] சோழன் வழிவந்தவன்; வல்லம் என்னும் ஊருக்குத் தலைவன். அவன் நல்லவனாக மாறவும் அவனைப் பகைவர் பற்ற முயன்றனர் என்று குறிப்பிடுவர் பரணர்.[75]

---

65அ. அகநானூறு; 142 : 9-4.
66. ,, 369 : 1-6.
67. ,, 76 : 3-4.
68. ,, 209 : 8.
69. ,, 209 : 11-15.
70. ,, 135 : 10-14.
71. ,, 213 : 1-3.
72. ,, 213 : 8.
73. ,, 77 : 14-19.
74. ,, 143 : 9-16.
75. ,, 356 : 11-15.

## நகரமும் ஊரும்

சோழர்களுடைய குடந்தை நகரத்தில் பகைவர் நாடு திறையாகக் கொடுத்த நிதியம் காவலுடன் வைக்கப்பட்டிருக்கின்றது.[76] அறம் பொருந்திய நல்ல அவையினையுடைய சோழ நாட்டு நகரம் உறந்தை[77]. மருத மரங்களும் வயல்களும் நிரம்பிய கழாஅர் என்னும் ஊர்த் துறையின்கண் ஆடிய ஆட்டனத்தியின் கூத்தினைக் கரிகாலன் கண்டு மகிழ்ந்தான்.[78] சோழர் வழி வந்தவனுடையது நீண்ட கதிர்களை உடைய ஊர் நெல் மலிந்த வல்லம் ஆகும்.[79]

## சேர நாட்டு ஊர்கள்

திண்ணிய தேர்களை உடைய சேரனின் தொண்டி[80] என்றும், குட்டுவனுடைய தெளிந்த அலைப் பரப்புடைய தொண்டி [81] என்றும் தொண்டி சிறப்பிக்கப்படுகிறது. சேரனது செல்வம்மிக்க சிறந்த அகன்ற நகரம் கருவூர்[82]. சேரன் பாதுகாத்து ஆளும் வஞ்சி [83] வடதிசை ஆரியரை வென்று இமயத்து உச்சியில் வில் இலச்சினை பொறித்து அவரைப் பிணித்து வந்த குட்டுவனது வஞ்சி[84] எனக் குறிக்கப்படுகின்றது. யவனர்களது மரக்கலம் பொன்னொடு வந்து மிளகுடன் மீளும் வளம் பொருந்தியது முசிறிப்பட்டினம்.[85]

---

76. அகநானூறு; 60 : 13-15.
77. ,, 93 : 1-5.
78. ,, 376 : 3-5.
79. ,, 356 : 11-13.
80. ,, 60 : 7.
81. ,, 290 : 12-13.
82. ,, 93 : 20-21.
83. ,, 263 : 11-12.
84. ,, 396 : 16-19.
85. ,, 149 : 9-11.

நன்னகர் மாந்தை[86] என்றும் குட்டுவன் மாந்தை[87] என்றும் குறிக்கப்படுகிறது. குதிரைகளும் தேர்களும் கொண்ட குட்டுவனின் கழுமலம்[88] எனப்படும். வானவரம்பன் என்பவனின் ஊர் வெளியம்.[89] நீண்ட அடியுடைய ஈரப் பலாபழங்கள் நிறைந்தது ஒடுங்காடு.[90] பொன்னினை ஒத்த வாகை மரம் நிரம்பிய பெருந்துறை, மேற்குத் திசையின் கண் உள்ளது. அங்கு நடந்த போரில் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் நன்னன் என்பவனை வென்று இழந்த தன்னுடைய நாட்டினை மீட்டான்.[91] பொன்னைக் கொண்டு வரும் மரக்கலம் பெருந்துறை; அம்மரக்கலங்கள் தாக்குதலுக்கும் உள்ளாகும்.[92] அரண்கள் பல வென்ற படையினைக் கொண்ட வாடாத வேப்ப மாலை அணிந்த வழுதியின் கூடல் எனப்படுகின்றது மதுரை. அதன் நாளங்காடி மணம் நிறைந்தது என்றும் கூறப்படுகின்றது.[93] முறை வழுவாத நன்னனின் பாழி[94] என்றும், யாழின் இசை பொருந்திய தெருக்களை உடைய பாழி என்றும் அந்நகரில் ஆய் எயினன் என்பானும் மிஞிலி என்பானும் ஒருவருக் கொருவர் போருடன்று ஆய் எயினன் இறந்தான் என்றும் பரணர் பாடுகின்றார்.[95] பாரம் என்னும் ஊர் நன்னனுக்கு

---

86. அகநானூறு; 127 : 6.
87. ,, 376 : 17-18.
88. ,, 270 : 2-11.
89. ,, 395 : 6.
90. ,, 91 : 12.
91. ,, 199 : 19-23.
92. ,, 152 : 6-7.
93. ,, 93 : 8-11.
94. ,, 142 : 9.
95. ,, 396 : 3-6.

உரியது.[96] வயலைக்கொடி படர்ந்த வேலிகளையுடைய வயலூரர் நன்னன் வேண்மானுக்கு உரியது.[97]

## பழக்கவழக்கங்கள்

அகநானூறு அக்காலத் தமிழரது பழக்கவழக்கங்கள் பற்றிக் குறிப்புகள் நிரம்பிய நூல். மக்கள் வாழ்க்கையை ஒட்டிய இலக்கியத்திற்கு இந்தப்பான்மை என்றும் உண்டு. வட்டுக்காய்களைக் கொண்டு சிறுவர் ஆடும் விளையாட்டுப் பற்றியும்[98] மணல் மேட்டில் தம் ஆயத்தாரோடு மகளிர் வண்டல் இழைத்து ஆடும் விளையாட்டுப் பற்றியும்[99] ஆயத்தாருடன் மகளிர் பந்து ஆடுவது பற்றியும்[100] குறிக்கப் படுகின்றன.

நெல்லினால் சமைத்த வெண்சோறும் அயலை மீன் இட்டு ஆக்கிய புளிக்கறியும் கொழுமீன் கருவாடும் உணவாகக் கொள்ளப்பட்டன.[101] மீன் உணவு அவர்கள் வாழ்வில் பெரியதோர் இடத்தைப் பெற்றிருந்தது. அதற்காகப் பரதவர் மீன் பிடிக்கும் தொழிலினர்[102] என்பது சொல்லப்படுகின்றது. அக்காலத்தவர் வாணிகத்தில் பண்ட மாற்று முறையினைக் கையாண்டனர். யவனர் கொண்டு வந்த மரக்கலம் பொன்னுடன் வந்து மிளகொடு மீளும் எனப்படுகின்றது.[103] பகலில் விளங்கும் கடைவீதியாகிய நாளங்காடி[104] போற்றப்படுகின்றது.

---

96. அகநானூறு; 152 : 12.
97. ,, 97 : 12-13.
98. ,, 5 : 8-10.
99. ,, 60 : 9-11.
100. ,, 152 : 2-3.
101. ,, 60 : 4-6. 290 : 2-3.
102. ,, 10 : 10-13. 60 : 1-3.
103. ,, 93 : 9-10.
104. ,, 76 : 3-5.

அரசன் நாளவையில் அமர்ந்திருத்தலும் அப்போது களிறு அணிமணிகள் வழங்கும் பரிசிலைப் பற்றியும் கூறப்படுகின்றது.[105] வெற்றி பெறும் வேந்தன் பகையரசனுடைய முரசத்தையும் வெண் கொற்றக் குடையினையும் கைக்கொள்வான்.[106] அத்துடன் பகைவனின் காவல் மரத்தினையும் வெட்டி வீழ்த்துவான்.[107] கடற்போரில் சேரர் வல்லவராய் விளங்கினர் என்பது மறப்போர்க் குட்டுவன் கடல் கடந்து சென்று போரிட்டு வென்றான்[108] என்பதால் உணரலாம்.

மலையைக் குடைந்து போக்குவரத்திற்கு வழி செய்து கொண்டனர்.[109] கூத்தர் முழவு கொட்டும் பழக்கத்தினர்[110] என்பதும் தெரிய வரும். உப்பு வாணிகர் கூட்டமாகச் செல்வர்[111] என்பதும், பார்ப்பான் வெள்ளிய ஓலைச் சுருளுடன் தூது செல்வான்[112] என்பதும், வதுவை மணம் வழக்கில் இருந்தது[113] என்பதும் அறியலாகும்.

## இயற்கை வருணனை

கற்பனை இல்லாத இலக்கியம் சுவைக்காது. வருணனை இல்லாத கற்பனை வளம் பெறாது. அகநானூற்றில் இயற்கை வருணனை திணை அடிப்படையில் மிளிர்ந்து நிற்கின்றது. பாலையைப் பற்றி, குறிஞ்சியைப் பற்றி, மருதத்தைப் பற்றி, நெய்தலைப் பற்றி வருணிக்கப்படும்

105. அகநானூறு; 36 : 21-22.
106. ,, 127 : 3-4.
107. ,, 127 : 3-4.
108. ,, 212 : 14-21.
109. ,, 69 : 10-12.
110. ,, 155 : 13-15.
111. ,, 337 : 5-6.
112. ,, 337 : 7.
113. ,, 352 : 15-17.

பகுதிகள் சேர நாட்டுத் தொடர்புடைய பாடல்களில் இடம் பெற்றுள்ளன. ஆனால் முல்லை நில வருணனை மட்டுமே இல்லை என்பது குறிப்பிடத் தக்கது.

மருதம் கொழிக்கும் நிலத்தில்தான் பாலையும் ஒரு பக்கம் இருந்து வாடுகின்றது. அந்தப் பாலை வழியை மாமூலனார் எடுத்துப் புனைகின்றார். வளம் வாய்ந்த மலைப் பகுதியின் பயன் இல்லாது ஒழியுமாறு காய்கிறது ஞாயிறு. பொல்லாத ஞாயிறா அது? இல்லவே இல்லை. பகலைத் தந்து இருளை விலக்கும் பான்மையதுதான். ஆனால் ஒரேயடியாகக் காய்வதனால் வளமான பகுதி வறண்டு விடுகின்றது. அந்த மலையில் குதித்தோடும் அருவியும் இல்லை. அது நிரப்பிச் செல்லும் அச்சந்தரும் சுனைகள் காய்ந்து கிடக்கின்றன. வழக்கமாக அச்சுனையில் நீருண்ணும் ஆண் யானை தன் நீண்ட கையை விட்டுத் துழாவிப் பார்க்கின்றது. நீர் இருந்தால்தானே! வற்றிப் போன நேரம் போலும்! படர்ந்த பாசி மட்டும் இருக்கின்றது. அதனைத் தின்றுவிட்டு ஆண் யானை, அயர்வினைத் தரும் பசியோடு கூடிய பெண் யானையுடன் ஒரு பக்கத்தில் ஒடுங்கிக் கிடக்கின்றது. நீர் வற்றிப் போன அந்தப் பாலை வழியில் கொளுத்தும் வெயிலால் மூங்கில் கணுக்கள் எல்லாம் பிளந்து வெடித்துப் போகின்றனவாம்.[114] முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுக்கும் காட்சி இது.

மான்கள் கூட்டமாக ஒரு மரத்தின் கீழே தங்கியிருக்கின்றன. பாலைவனத்தில் வெயில் கொடுமை மிகுதியாக இருக்கும் காரணத்தால் எங்கும் நிழல் பெறாமல் அங்குத் தங்கி இருக்கின்றன. அங்கும் நிழல் என்று சொல்லத் தக்கது இல்லை. இலையற்று உலர்ந்த கிளைகளே மரத்தில் உள்ளன. அந்தக் கிளைகளில் சிலந்தி நூல் பின்னியிருக்

114. அகநானூறு; 91 : 1-7.

கின்றது. கிளைகளும் அசைகின்றன. அந்நிலையில் கிடைத்த பயனற்ற நிழலில் மான்கள் தங்கியிருக்கின்றன. பசிக்கொடுமை தாங்க முடியாமல் மரல் தின்கின்றன. மரலும் வாடி வதங்கி உள்ளது. அப்போது ஊசியின் திரண்ட முனைபோன்ற திண்ணிய பற்களை உடைய செந் நாய்கள் அவற்றைத் தாக்குகின்றன. மான்கள் அலறி ஓடுகின்றன. காற்றின் முன் பூளைப் பறத்தல்போல் மூலைக்கு ஒன்றாக ஓடுகின்றன. தன் இனம் காணாமற் போனது கண்ட கலைமான், கதிரவன் மறையும் மாலைப் பொழுது ஆனதும் அவற்றை ஒன்று சேர்ப்பதற்காகத் தன் ஆண் குரலால் அழைக்கிறது.[115]

குறிஞ்சி நிலக் காட்சிகள் அழகொழுகப் புனையப்படு கின்றன. குரங்கும் பலாப் பழமும் இணைத்துப் பாடப் படுகின்றன. பலாப்பழம் குரங்கு விரும்பும் இனிய உணவு. அதைத் தேடிப்பெறும் ஆண் குரங்கு தன்னோடு சேர்ந்து உண்பதற்காகத் தன் துணையை அழைக்கின்றது. இதைக் காணும் புலவரின் கலைமனம், அதன் எதிரே ஆடிவரும் மயிலைக் கண்டு மகிழ்கிறது. குரங்கின் கைக்குள் தழுவப் பட்டு நிற்கும் பலாப்பழம் முழவாக, குரங்கு முழவனாக மயில் விறலியாகக் காட்சி அளிக்கிறது.

வளைந்த பலாமரத்தில் குடம்போன்ற பெரிய பழம் ஒன்று பழுத்திருந்தது. குரங்குக் கூட்டத்திற்குத் தலைவனான ஆண் குரங்கு ஒன்று அதைத் தழுவிக் கொண்டுள்ளது. ஒலி செய்யும் அருவி விழும் பாறையின் பக்கமாக ஆடும் மயில் ஒன்று அதற்கு முன்னே செல் கின்றது. கூத்தர் திருவிழாக் கொண்ட ஊரில் விறலியின் பின்னே முழவு இசைப்பவன் செல்லுதல்போல் தோன்று கிறது, அந்தக் குரங்கின் காட்சி. அது அவ்வாறு பலாப் பழத்தைத் தழுவிக் கொண்டே உடன் உண்பதற்காகத்

---

115. அகநானூறு; 199 : 5-12.

தன் துணையான பெண் குரங்கைக் கூவி அழைக்கின்றது.[116]

மருத நிலம் வயல் சூழ்ந்து விளங்குவது. ஆறுகளும் பொய்கைகளும் நீர் நிறைந்து வளம் செய்கின்றன. ஆம்பல் தாமரை முதலிய மலர்களும், வரால் வாளை முதலிய மீன்களும், எருமை முதலிய விலங்குகளும், நாரை முதலிய பறவைகளும் இங்குப் புலவரின் கற்பனையைத் தூண்டுவன.

மருத நில வளத்தை விளக்க விரும்பிய நக்கீரர் ஒரு பாட்டில் வரால் மீனின் வலிமையையும் செருக்கையும் கூறி விளக்குகிறார். மீன் பிடிப்பவரின் தூண்டிலுக்கு வயப்படாமல் அதில் மாட்டியிருந்த இரையை மட்டும் தின்று பலவகைக் கொடிகளையும் சிதைத்து அவர்கள் தூண்டிலை இழுக்க இழுக்க வராமல் பொய்கையையே கலக்கி விடுகிறதாம். இந்தக் காட்சியைக் காட்டும் புலவர் இதற்கு உவமையாக மற்றொன்று எடுத்துரைக்கிறார். கயிற்றால் பிணித்து இழுக்கும்போது, இழுப்போரை அலைத்து ஆட்டும் சினம் கொண்ட எருதுபோல் அந்த வரால் கலக்குவதாகக் கூறுகிறார்.

பிளந்தாற்போன்ற வாயும் பல வரிகளும் உடையது பெரிய ஆண் வரால் மீன். மீன் பிடிப்பவரின் எறிந்த தூண்டிலில் தனக்கு எமனாக வந்த இரையை அது விழுங்கி விடுகிறது. உடனே அந்த இரும்பின் முனையில் அகப்பட்டுக் கொள்வதால் தப்பித்துக் கொள்ளப் போராடுகின்றது. ஆம்பலின் மெல்லிய இலை கிழியுமாறும் குவளையின் மலர்கள் பல சிதையுமாறும் பாய்ந்து மேலெழுகின்றது. அங்கே பின்னிக்கொண்டுள்ள வள்ளைக் கொடியைக் கலக்குகின்றது. தூண்டிலிட்டவன் இழுக்கிறான். அவன் இழுக்கவும் அது வரவில்லை. கயிறு இட்டுப் பிடிக்கும்போது

---

116. அகநானூறு; 352 : 1-7.

போராடும் சினம் மிக்க எருது போல் செருக்கு மிகுந்து விடியற்காலத்தில் குளத்தைக் கலக்குகின்றது.[117]

நெய்தல் என்னும் கடற்கரைப் பகுதி மற்ற நிலங்களைப் போல் வளம் இல்லாதது; ஆயினும் எந்த நிலப் பகுதியில் நீர் அற்றுப்போனாலும் கடல்வற்றுதல் இல்லை. ஆதலின் வறட்சி என்பது கடற்கரை அறியாதது.

கடற்கரையில் ஒரு துன்பக் காட்சியை எடுத்துரைக்கின்றார் நக்கீரர். பரதவச் சிறுவர் இட்ட வலையில் ஆண் நாரை ஒன்று அகப்பட்டுக் கொள்கிறது. அதன் துணையான பெண் நாரை தன் கூடுகளுள்ள பனை மரத்தில் உட்கார்ந்து வருந்துகிறது. கூட்டில் குஞ்சுகளைத் தழுவிய வாறு துயருற்று இரைதேடி உண்ணவும் மனம் இல்லாமல் வாடுகின்றது. இடையிடையே தன் துணையை அன்பான குரலில் கூவி அழைக்கின்றது.

கரிய குழம்பிய சேறு உள்ள வயலில் காலையில் வேட்டையாடச் செல்கின்றனர் சிறுவர் சிலர். கொழுமையான மீனை உணவாகக் கொண்ட அந்தச் சிறுவர்களின் (நுண்ணிய கயிற்றால் ஆகிய அழகிய) வலையில் அகப்படுகின்றது ஆண் நாரை. அதன் வருகையை எதிர்பார்த்து வருந்துகிறது பெண் நாரை. மாலை வேளையில் தனித்துத் தங்கியிருக்கும் போது இரையும் தின்னாமல் வருந்துகிறது. துன்பப்படும் குஞ்சுகளைத் தழுவிக் கொண்டு பனைமரத்தின்மேல் இருந்து அன்பு தோன்ற ஒலிக்கிறது.[118]

இந்த இயற்கைக் காட்சிகள் மனித வாழ்க்கையில் ஏற்படுத்தும் மாற்றம் குறிப்பிடத்தக்கது; உயர்ந்தது; போற்றற்குரியது. தமிழ் இலக்கியங்கள் முற்ற முடிந்த அளவிற்கு இயற்கையின் பின்னணியில் எழுந்திருக்கின்றன

---

117. அகநானூறு; 36 : 1-8.
118. ,, 290 : 1-7.

என்பர். (The influence of Nature as obtained in the Tamil land on poetry was final and far -reaching and for more decisive than the influence it has exerted on the poetry of any other people in the world)[119]

## அகப் பொருள் நுட்பம்

அகப்பொருள் நுட்பமானது; ஆனால் சுவையானது. அகப்பொருளில் இடம் பெறும் தலைவியும் தலைவனும் தோழியும் நற்றாயும் செவிலித்தாயும் முதலானோர் அருமையான வாழ்க்கைப் படைப்புகள். பேசாது புலம்பும் தலைவிக்குப் பேசியே ஆறுதல் ஊட்டும் தோழியின் அறிவுத் திறன், உலகக் கூர்மை திகைப்பூட்டும்.

தலைவியின் வனப்பைப் புகழ்ந்து கூறும் பாடல்கள் எண்ணில. அவளுடைய கண்ணையும் நுதலையும் கூந்தலையும் மேனி எழிலையும் புனைந்திடும் மிகச் சிறு சொற்றொடரிலும் அகப்பொருள் கருத்துகளை அமைத்து விடும் நுட்பத்தைக் கண்டு மகிழலாம். அவளுடைய பார்வை, கண்களின் பாவையை மறைத்து நிற்கும் நடுக்கந்தரும் குளிர்ந்த நீருடையது[120] எனப்படுகின்றது. குவளை மலர் போன்ற கண் என்றும், நீல மலர் போன்ற கண் என்றும் கூறிப் புகழப்பட்டவை பனிவார் கண்[121] எனச் சொல்லப்பட்டதில் தலைவன் பிரிவை எண்ணியதால் ஆற்றாமையும், அதனால் மிகும் அழுகையும் பேசாத வாயாகிய கண்கள் மூலம் பேசுகின்றன.

மலரின் வண்ணம் இழந்த கண்கள்[122] வளை நெகிழ்ந்த தோள்கள்[123] கவின் இழந்த தோள்[124] என்பவற்றால்

---

119. S. Thaninayagam ; Nature in Ancient Tamil Poetry : p. 40.
120. அகநானூறு; 5 : 21.
121. ,, 37 : 19.
122. ,, 197 : 1.
123. ,, 197 : 9.
124. ,, 209 : 1.

தலைவியைப் பசலை படர்ந்துள்ளது; தலைவன் பிரிந்துள்ளான்; வருவானோ மாட்டானோ என்ற ஐயத்தால் ஒளியிழந்த உறுப்புகள் போல் வாழ்க்கையிலும் நம்பிக்கை ஒளி குறைந்துள்ளது என்பது புலப்படுத்தப்படுகின்றது.

தலைவி மேல் தலைவன் கொண்டுள்ள காதல் எத்துணை அரியது என்பதை அகநானூற்று அடிகள் சுவையுடன் புலப்படுத்துகின்றன. பேயும் இயங்காத நள்ளிரவில் சென்று தலைவன் தலைவியைச் சந்தித்து மகிழ்ந்தான்[125] அரசன் கொல்லி மலையுச்சியில் தெய்வத்தச்சனால் எழுதப் பட்ட அழகிய பாவை போன்ற வனப்பு நிறைந்தவள்.[126]

அவள் அழகை, எழில் நலத்தை, வகையமை வனப்பைத் துறந்துவிட்டுப் பொருள்மேற் செல்ல யாருக்குத்தான் மனம் வரும்? களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இழந்த நாட்டை மீண்டும் நன்னனிடம் இருந்து பெற்றான். அந்த நாட்டின் வளத்தைப் பெறுவதாயிருந்தாலும் போகேன் என்கிறான். நள்ளென்யாமத்து நாடி வரவைத்து விடுகின்றது காதல். அவளுக்கு ஏற்பட்டிருக்கும் கட்டுக்காவல்—அந்த இற்செறிப்பு நன்னன் பாழி நகரக் காவல் போன்றதென்றும்[128] கொற்றச் சோழர் குடந்தை நகரில் நிதியை வைத்துக் காக்கும் காவல் போன்றதென்றும் நயம்படக் கூறப்படுகின்றது.[129] போன தலைவன் போனவன்தானோ? பொருளினுஞ் சிறந்தவள் என்று தோழியால் கூறப்படும் தலைவியினை நாடி மீண்டும் வருவானோ? நெஞ்சைக் கலக்குகின்றது நினைவு. வரலாற்று அகப்பொருள் செய்தியே இங்கே வந்து அமைந்து விளங்குகின்றது. ஆட்டத்தில் வல்ல ஆட்டனத்தியைக்

---

125. அகநானூறு; 62 : 6.
126. ,, 63 : 13-16.
127. ,, 199 : 22-24.
128. ,, 15 : 10-11.
129. ,, 60 : 13-15.

காவிரியாறு அடித்துச் செல்லவும் அவன் தலைவி இழந்ததை எண்ணி ஏங்கிப் புலம்பியதைப் போல் நெஞ்சம் கலங்குகின்றாள்.[130] அன்புடன் கூந்தலை நீவிவிடும் தலைவர்[131] இன்று பிரிந்து விட்டார். நாம் நோயுற்றுழந்து வாடினாலும் அவர் வினை முடித்து மீளுவாராக[132] என்றும் தலைவியின் சால்பினைப் பாலை பாடிய பெருங் கடுங்கோ உணர்த்துகின்றார். தலைவன் நெஞ்சம் நெகிழத்தக்கனவற்றைக் கூறி அன்பினால் உள்ளங்கலந்து என்றும் பிரியாமைக்குரிய சூளுறவு செய்வான். ஆனால் பொருளீட்டும் வேட்கையில் போயதென்ன? என்கிறாள் தலைவி.[133]

தோழி பெரிய சொல்லாற்றல் படைத்தவள். அறிஞர்க்கு விருந்தும், அறியாதார்க்குத் தெளிவும் விளைக்கும் ஆற்றல் மிகுந்த அறிவு நிறைந்தவள். தலைவியிடம், பேசும்போதும் சரி, தலைவனிடம் உரையாடும்போதும் சரி, தாயிடம் நயம்பட உரைக்கும்போதும் சரி எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படி எடுத்துச் சொல்லி எதையும் முடித்துவிடுபவள் அவள். தலைவர் வருவாரோ எனத் தவிக்கின்றாள், தலைவி. அவளை ஆற்றுவது எங்ஙனம்? மென்மையாக வெவ்விய உயிர்ப்பினை உயிர்த்து இரவும் பகலும் துன்பம் நலிய வருந்திப் பாம்பு விழுங்கிய திங்களைட்போல் நெற்றி ஒளியினை இழந்திடத் தலைவனை யன்றி வேறு ஆதரவு இல்லாத தலைவி இல்லில் தங்கி இருக்கப் பொருள் விரும்பிச் சென்றான் தலைவன். அவரோ உள்ளத்தைக் கவர்ந்தவர். பணமிழந்த பையைப் போன்று பாம்பு உடல் வாடிக் கிடக்கும் வறட்சி மிக்க காட்டிடத்தே ஆறலைப்போர் அம்பினை எய்தலால் இறந்துபட்டோராகிய புதியவர்களது பிளந்த புண்ணி

---

130. அகநானூறு; 45 : 13-14.
131. ,, 155 : 4.
132. ,, 155 : 5-6.
133. ,, 267 : 1-3.

னின்றும் இழியும் செந்நீரைக் குடித்துக் காகங்கள் ஒற்றராகச் செல்லும் மக்களைப்போல உள்ளடங்கிய குரலினவாய் மனையிடத்தே வந்து தங்கும் இடம் அது. அம்மலை வழி கடந்து சென்ற தலைவன் அருள் மிகுந்து வீடு திரும்புவான். தோழியின் மதி நுட்பம் இங்கே விளங்குகின்றது. வற்றிய பாலையில் வற்றாத அன்புடன் காகம் வீட்டிற்குத் திரும்பி வரும் காட்சியைக் கண்ட தலைவன் கண்டிப்பாக அன்பு கொண்டு திரும்புவர் என்பதால் தலைவிக்குத் தலைவர் வருவார் என்ற நம்பிக்கை ஊட்டி ஆற்றுவிக்கின்றாள் தோழி.[134] பாலை பாடிய பெருங்கடுங்கோ இந்த ஓவியத்தைப் படைத்துக் காட்டுகின்றார்.

தலைவியைத் தழுவிய தழுவலைத் தலைவன் நினைவு கூர்ந்து விடுகின்றான். தாங்குமா துயரம்? எப்படிப்பட்ட தழுவல்? மெய்யினுள் மெய்புகுத லொத்த கைகளால் விரும்பிக் கொள்ளும் மயக்கம்.[135] இதனினும் பெரிதோ பொருள் என்று தூக்கி எறிகின்றான் செலவு மேற்கொள்ளும் எண்ணத்தை!

அகநானூற்றுப் பாடல்கள் சில பற்றி உள்ளுறை அமைந்து அகப்பொருளை நுட்பத்துடன் விளக்குகின்றன. வெளிப்படையானன்றிக் குறிப்பாற் பொருளைப் புலப் படுத்தும் உவமம் உள்ளுறை[136] எனப்படும்.

(Indirect suggestion by which an author who does not propose to explicitly state his idea, endeavours, however to present it through the skilful employment of such telling comparisons as would help people to infer therefrom what he actually intended to convey)[137]

---

134. அகநானூறு; 313 : 1-10.
135. ,, 379 : 15.
136. தொல். பொ. 48.
137. Tamil Lexicon; p. 474.

பிளந்த வாயினையும் பல் வரிகளையுடைய பெரிய வரால் மீன் வளைந்த வாயினையுடைய தூண்டிலில் உள்ள தனக்குக் கூற்றமாகிய இறையினை விழுங்கி, ஆம்பலது மெல்லிய இலை கிழிய மேலெழுந்தும் குவளையின் அரும்பு மலர்ந்த பல மலர்களும் சிதையும்படி பக்கத்தே பாய்ந்தும் பிணக்கம் மேவிய அழகிய வள்ளைக் கொடியினைக் கலக்கியும் தூண்டிலிட்ட வேட்டுவன் இழுக்கவும் வாராமல் கயிறிட்டுப் பிடிக்கும் சினமிக்க ஏறுபோலச் செருக்குமிக்கு விடியற்காலத்தே குளங்களைக் கலக்கும் பூக்கள் பொருந்திய ஊரன்.[138] இங்கே ஓர் உள்ளுறை அமைந்து நயம் விளக்குகின்றது. வேட்டுவன் தூண்டிலில் கோத்த இரையை, நீர் நிலையின் கீழ்க்கிடந்த வாளை நுகர்ந்து தூண்டில் துவக்கி விடாது இலை கிழிய எழுந்து, குவளைப்பூ முறியப் பாய்ந்து, அக்குவளையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி, நாட்காலத்தே எல்லாருங் காணக் கயத்தை உழக்குகின்றாற்போல, பாணனுடைய நெஞ்சு வலிதாய்ப் புறம்பு மெல்லிதாயிருக்கின்ற இன்சொல்லாலே இன்பத்தை கலந்து நுகர்ந்து அப்பரத்தையர் தாய்மார் நெஞ்சவிழுந்த அவ்விடத்தை விடாத அன்புடனே போந்து, நாங்கள் நுமது நிறங்கண்டு வருந்த இங்கே வந்து குவளை மலர் சூழ்ந்த வள்ளைபோலும் எங்கள் சுற்றத்தார் மயங்க, அவர்களை வருத்தி, ஊரையெல்லாம் இப்படி எல்லாருமறியக் கலக்குவான் ஒருவன் அல்லையோ என்று தோழி உணர்த்துவதாகப் பொருள் விளங்குகின்றது.

மீன் பிடிக்கும் தொழிலில் தங்கிய தந்தைக்கு இளமகளானவள் மீன் கொண்டு வருவதற்கு முன்னே தான் உப்பு விற்ற நெல்லாலே ஆக்கப்பட்ட மூரல் வெண்சோற்றையும் புளிக்கறியையும் சொரிந்து கொழுமீன் தடியொடு கொடுப்பாள்.[139] இங்கே அமைந்துள்ள உள்ளுறைப் பொருளாவது

---

138. அகநானூறு; 36 : 1-8.
139. ,, 3-6.

தலைவியை மணந்து கொள்வதற்குத் தலைவன் செய்யும் முயற்சி, தந்தை மீன்பிடி தொழிலில் இறங்கி மீன் பிடித்துக் கொண்டிருப்பதும், தலைவியும் தோழியும் செய்யும் முயற்சி, இளமகள் தன் முயற்சியால் உப்பு விற்றுச் சோறு கொண்டு போதலும் எனப்படுகின்றன.

உள்ளுறையினைப் பற்றி டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் குறிப்பிடுவது கருதத்தக்கது. (As ullurai is formed out of Natural objects, it provides both the background and similitude in Aham poetry. At the same time ullurai brings out the all-round knowledge of the Poet and his keen observation of the similarities and dis-similarities in the sexual sphere between animals and human beings.)[140]

தலைவர் செல்லும் வழியிலும் அன்பான காட்சிகள் உண்டு. எனவே நம்மை மறந்துவிடுவார்; பொருளே பொருளாகப் போய் விடுவார் என்று எண்ண வேண்டா என்கிற தோழி அவர் சென்ற சுர நெறியில் காட்டும் சுவை யான அன்பினைக் கண்டு மகிழலாம். நிறைந்த சூலினை உடைய இளைய பிடியினைத் தழுவிக்கிடந்த வெள்ளிய கோட்டினையுடைய இனத்துடன் கூடிய களிறு, கன்று தம் மீது ஏறி இறங்கப் படுத்திருக்கும். இந்த அன்புக் காட்சி யைக் காணும் தலைவனுக்குக் குடும்பத்தின் நினைவு கண்டிப்பாக வரும்; வந்த நினைவு அவன் நெஞ்சை வாட்டாதோ? எனவே விரைந்து வருவார் என்ற நம்பிக்கையை ஊட்டுகின்றாள் தலைவி.

(The Sangam Poets have not only pointed landscapes as seenic backgrounds for the play of human love, but have also depicted their heroes and heroines as projecting their own personal feelings into Nature and discovering there, sometimes a sympathetic response to their emotions, at other times an unsympathetic repulse)[141]

---

140. The Tamil Conecpt of Love; pp. 231-232.

141. Dr. M. Varadarajan; The Treatment of Nature in Sangam Literature: p. 356.

முயன்று செய்ய வேண்டி சிறந்த பொருளைக் கடத்தற்கரிய பாலை வழியினைக் கடந்து சென்று எளிதிற் பெற்றாலும் தலைவியை விட்டுப் பிரிந்து வாரேன் எனத் தன் நெஞ்சிற்குச் செலவழுங்கினான்.[142]

சேரலாதன் கடலின் நடுவே இருந்த பகைவர்களை அவர் காவல் மரமாகிய கடம்பினை வென்று இமயத்தில் தன் இலச்சினையைப் பொறித்து மாந்தையெனும் ஊரில் உள்ள தனது முற்றத்தில் பகைவர் திறையாகக் கொடுத்த நல்ல அணிகலன்களுடன் பொன்னால் இயன்ற பாவையினையும் வயிரங்களையும் குவித்து நிலந்தின்னும்படி விட்டொழித்த பெரு நிதியத்தைப் போன்ற பொருளை ஒரு நாளில் ஒரு பகற்பொழுதில் பெற்றாலும் தாம் சென்றுள்ள அந்நாட்டில் குற்றமற்ற நம் காதலர் பிற்றை ஞான்று தங்காது வருவர்.[143] இந்த அகநானூற்றுச் செய்திகளோடு பட்டினப்பாலையின் தலைவன் முட்டில்லாத சிறப்பினை உடைய காவிரிப்பூம்பட்டினமும் தனக்குக் கிடைப்பதாக இருப்பினும் தன் காதலியை விட்டு நீங்கிப் பொருள்வயிற் செலவு ஒருப்படேன் என்று கூறிய காதலின் ஆழம் நினைவு கூரத் தக்கது.[144]

---

1. அகநானூறு; 149 : 5-7.
3. ,, 127 : 3-12
4. பட்டினப் பாலை; 218-220.

"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன்."

# 6. புறநானூறு

எட்டுத்தொகை நூல்களுள் புறப்பொருள் பற்றியன பதிற்றுப்பத்தும், புறநானூறும் ஆகும். புறமாவது ஒத்த அன்புடையாராலே அன்றி, எல்லாராலும் அனுபவித்து உணரப்பட்டு இஃது இவ்வாறு இருந்தது எனப் பிறர்க்குக் கூறப்படும் பொருளாகும். இந்நூற்கண் உள்ள நானூறு செய்யுட்களையும் பாடியவர்கள் ஒரு காலத்தாரல்லர்; ஓர் இடத்தாரல்லர். இத் தொகுப்பில் பாடப்பட்டோருள் முதலில் முடிவேந்தர்க்குரிய பாட்டுகளும், பின்னர், குறுநிலத் தலைவர்களுக்குரிய பாட்டுகளும், அவற்றின் பின் புறத்திணையை விளக்கும் சில துறைகளுக்குரிய பாட்டுகளும் இடம்பெற்று இறுதியில் முடிவேந்தர்களுக்குரிய பாட்டுகள் இடம் பெற்றுள்ளன. நல்லிசைப் புலமை மெல்லியலார் பலர் இத் தொகை நூலுள் நயங்கெழுமிய பாடல்களைப் பாடியுள்ளனர். பழந்தமிழ் மக்களின் வாழ்வினையும், பண்பாட்டுச் சிறப்பினையும், சிறக்க உணர்த்தும் நூல் இஃதெனலாம். பழந்தமிழ் நாட்டு வரலாற்றில் கருவூலமாக இந்நூல் திகழ்கிறது. தமிழரின் அரசியல் கொள்கைகள், வாணிக மேம்பாடு, சமயநிலை, அறிவுத்திறம், நாகரிக மேம்பாடு, கொடைச் சிறப்பு முதலியன எல்லாம் கொண்டு இந்நூல் மிளிர்கின்றது. புறப்பொருள் அமைதிகள் இந்நூலுள் விளங்க உரைக்கப்பட்டுள்ளன. இலக்கிய நயம் செறிந்த செய்யுட்கள் பல இந்நூலுள் இடம் பெற்றுள்ளதால், இந்நூல் தமிழ்ச்சுவை தேடும் மாணவர்க்கு ஓர் இலக்கியக் கேணி என்றும், பழமையைத் துருவுவார்க்குப் பல பொருள் நிறைந்த பண்டாரம் (treasury) என்றும், தமிழ்நாட்டுத் தொண்டர்க்கு விழுமிய குறிக்கோள் காட்டும் மணிவிளக்கு என்றும் அறிஞர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்[1]

---

1. திரு பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை; தமிழ் இன்பம் : ப. 22.

பாராட்டுவர். இந்நூற்கண் வழங்கும் சொற்களுள் தொண்ணூற்று நான்கு விழுக்காடுச் சொற்கள், நாட்டு மக்கள் பேச்சு வழக்கில் இன்றும் உள்ளன என்பர் அறிஞர்.[2]

புறநானூற்றுப் பாடல்களில் கற்பனைக் கூறுகளும், உயர்வு நவிற்சியும் மிகக் குறைவாதலின், வரலாற்று அறிஞர்கள் இந்நூலினைப் பண்டைத் தமிழர் வரலாற்றை அறிந்துகொள்வதற்குப் பெரிதும் துணை கொள்ளு கின்றனர். காலஞ்சென்ற ஜி. யு. போப் அவர்களுக்குத் தமிழில் அன்பு உண்டாவதற்கு முக்கிய காரணமாக இருந்தவற்றுள் இப்புறநானூறும் ஒன்றாகும்.

புறநானூற்றில் எழுபத்துநான்கு[3] பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்களில் அமைந்துள்ள சமுதாய வாழ்வு புறப்பொருட் செய்திகள், இயற்கை வருணனை அரசியல் செய்திகள், வரலாற்றுக் குறிப்புகள், கவிதைச் சிறப்பு, உவமைகள் முதலியவற்றினைக் காண்போம்:

## சமுதாய வாழ்வு

தங்கத் தமிழகத்தின் தலைசிறந்த நாகரிகத்தைத் தரணியெங்கும் பறைசாற்றும் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான புறநானூறு, தன்னகத்துப் புறக்கருத்துகளை மட்டுமேயன்றி, அன்றைய தமிழகத்தின் சேரநாட்டு மக்களது சமுதாய வாழ்வு, அரசியல் செய்தி, அவற்றினூடே வரலாற்றுக் குறிப்புகள், தலைசிறந்த உவமைகள், இயற்கை வருணனை, கவிநயம் ஆகியவற்றையும் புதைந்து வைத்துக் கொண்டிருக்கிறது. முதற்கண் புறநானூறு காட்டும் சேரர் சமுதாய வாழ்வினைக் காண்போம்.

---

2. கலைக்களஞ்சியம்; ஏழாம் தொகுதி: பக். 527.

3. 2, 5, 8, 11, 13, 14, 17, 20, 22, 48-50, 53, 54, 65, 74, 87-104, 127-140, 206, 207, 210, 211, 229-232, 235, 240, 241, 245, 282, 315, 343, 346, 367, 369, 374, 375, 380, 387, 390, 392, 396, 398.

## மக்கள் வாழ்வு

மன்னுயிரெல்லாம் தம்மை ஆளும் மன்னனுக்கு அஞ்சினவராய்,[4] நால்வேத நெறியினும், தம் நெறியினின்றும் திரியாத தன்மையாளராய்,[5] அருளும், அன்பும் உடையோர் மாட்டேயன்றி, ஏனையோரிடத்து மனம் ஒன்றாதவராய், உயர் வாழ்வு வாழ்ந்தனர்.[6] அந்தணர் செய்தற்கரிய கடனாகிய ஆவுதியைப் பண்ணும்; ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி என்ற முத்தீயை வளர்த்தனர்.[7]

## மழலைச் சிறப்பு

இளம்புதல்வர் வழங்குஞ் சொல்லோசையில் யாழினது இனிய ஓசை காணப்படாதாயினும் அவர்கள் சொல்வழிப் பிறக்கும் இன்பத்திற்கு யாழிசையின் இன்பம் நிகராகாது தாழ்வுபடும்[8] என்பதால் மக்கட்பேறு சிறப்பாகக் கருதப் பட்டது என அறியப்படுகிறது.

## விருந்தோம்பல்

அதியமான் நெடுமானஞ்சியை, ஔவையார் பாராட்டிக் கூறும்போது, எந்நாளும் செல்வமுண்டாயின் உணவு கொடுத்து, இல்லையாயின் உள்ளதைப் பலரோடு கூட உண்ணும் பெருந்தகையோன் என்று மன்னனின் விருந்தோம்பும் செய்கையைக் குறிப்பிடுகிறார்.[9] மற்றொரு பாடல், அகன்ற நீர்த்துறைக்கண் தம் வில்லால் வீழ்த்தப்பட்ட முள்ளம்பன்றியின் கொழுவிய ஊனும்,

---

4. புறநானூறு; 20 : 21.
5. ,, 2 : 8.
6. ,, 5 : 5-6.
7. ,, 2 : 22-23.
8. ,, 92 : 1-3.
9. ,, 95 : 6-7.

மலைப்பிளவுகளையும் குகைகளையுமுடைய மலைப் பக்கத்தே கிளை தழைத்து நிற்கும் சந்தனக்கட்டையும், புள்ளி பொருந்திய முகத்தையுடைய யானைக் கொம்பு மாகிய மூன்றையும், மிக்க நிறம் பொருந்திய வலிய புலி யினுடைய வரியமைந்த தோலின்மேற் குவித்து விருந் தினர்க்குக் கொடுக்கும் தன்மையர் ஆய் நாட்டு மக்கள்[10] என்று புலவர் ஒருவரால் விருந்தோம்பலின் தன்மை பேசப்படுகிறது.

## குறவர் வாழ்வு

சேரநாடு மலைநாடாகையால், அங்கு வாழ்ந்த மக்கள் குறிஞ்சி நில மக்கள் அல்லது குறவர் என அழைக்கப் பட்டனர். இம் மக்கள் குறிய இறப்பையுடைய சிறிய மனையின்கண், வளைந்த மூங்கிற் குழாயின்கண் வார்த் திருந்து முதிர்ந்த மதுவை நுகர்ந்து வேங்கை மரத்தை யுடைய முற்றத்தின்கண், பொன்னாற் செய்யப்பட்ட இதழையுடைய பசிய தும்பையுடனே, மிசையே அசைந்த தலையினையுடைய பனந்தோட்டைச் செருகி[11], சினத்தை யுடைய வீரர் வெறியாடும் குரவைக் கூத்தயர்வர்[12] என்று குறவர் வாழ்வு குறிப்பிடப்படுகிறது.

## யானை பிடிக்கும் முறை

இவர்கள் மலைவாசிகளாகையால், மலைகளில் மிகுதி யாகத் திரியும் யானைகளைப் பிடிப்பதும் இவர்களுடைய தொழில்களுள் ஒன்றாகும். அதற்கு இவர்கள், யானை வரும் வழியில் ஆழ்ந்த பள்ளஞ் செய்து அதன்மேல் மெல்லிய கழிகளைப் பரப்பி மணலைக் கொட்டி பொய்யே நிலம் போலத் தோன்றச் செய்து வைப்பர். அதனை யறியாது வரும் யானை அப்பள்ளத்தில் வீழ்ந்துவிடும்.

---

10. புறநானூறு; 374 : 11-15.
11. ,, 129 : 1-3.
12. ,, 22 : 20-22.

பின்னர்ப் பழகிய யானைகளைக் கொண்டு அதனைக் கொள்வர்.[13] இவ்வாறு யானைகளைப் பிடிக்கும் முறை ஒரு பாடலில் கூறப்படுகிறது.

## புலவர்களின் நிலை

அக்காலத்தில் புலவர்கள், புரவலர்களால் பெரிதும் போற்றப்பட்டாலும்; புலவர்கள் வாழ்க்கை வறுமையான வாழ்க்கையாகவே இருந்து வந்தது என்பது புறநானூறு காட்டும் உண்மை. ஒரு புலவர் உண்மையின் உடம்பு புலர்ந்து, கண் தெளிந்த நீரால் நிறைந்து, வியர்ப்புற்ற எனது பல சுற்றத்தோடு, பசிநோய் வருத்தும் பகை[16] என்றும், மற்றொரு புலவர் நாடோறும் உணவில்லாமை யான் இடந்தோறும் இடந்தோறும் மாறி அகழ்தலால், இல்லெலி மடிந்த பழைய சுவராகிய எல்லையையுடைய, பாலில்லாமையாற் பலபடி சுவைத்து முலையுண்டலை வெறுத்த பிள்ளையுடனே மனையின்கண் வறுமையுற்றி ருந்த எனது மனையாள்[15] என்றும் தமது பாடலில் வறுமை நிலையினைக் குறிக்கின்றனர்.

## வறுமையிலும் செம்மை

எனவே தம் வறுமையைப் போக்க வேண்டி, கொடையிற் சிறந்த பல புரவலரிடம் சென்று தம் வறுமை கூறி நிற்பர். அப்புரவலன் தக்க பரிசில் நல்காவிடினும் பரிசில் கொடுத்ததற்குக் காலம் தாழ்க்கினும், தான் பரிசில் வேண்டிச் சென்றதையும் மறந்து, மானமேலீட்டால் திரும்பி விடுவர் என்பது 'மரத்தைத் துணிக்கும் தச்சன் பயந்த மழுவுடைய கைத்தொழில் வல்ல மகார், காட்டிடத்துச் சென்றால் அக் காட்டகம் பயன்படுமாறு

13. புறநானூறு 17 : 14-19
14. ,, 136 : 6-9.
15. ,, 211 : 17-22.

அவர்க்கு எத்தன்மைத்து; எமக்கும் யாதொரு திசைக்கட் போகினும் அத்திசைக்கண் சோறு அத்தன்மைத்து' என்ற ஔவையார் பாடலும்[16], 'கண்ணாற் பருகுவது போலும் விருப்பமில்லாதவிடத்து, தம்மருகே கண்டு வைத்தும் கண்டறியாதார்போல உள்ளம் மகிழ வாராத தம்முகம் மாறித் தரப்பட்ட பரிசிலை, பிறிதோரிடத்துச் செல்ல முயலும் முயற்சியில்லாதோர் விரும்பாரல்லர்; இங்ஙனம் வருவீராகவென்று எதிர்கோடல் வேண்டும் தரமுடையார்க்கு உலகம் பெரிது; விரும்புவோரும் பலர். ஆதலால் மறம் பொருந்திய வலியையுடைய யாளியை யொப்ப, உள்ளம் மேற்கோளின்றித் தணியாது; உள்ளூரக் கனியாத வலிய பழத்தின் பொருட்டுச் சுழல்வோர் யார்தாம்!' என்ற பெருஞ்சித்திரனார் பாடலும்,[17] புலவர்களின் மான வாழ்க்கையையும், பெருமித வாழ்க்கை யையும் எடுத்தியம்புகின்றன.

## தமிழ்ப் புலவரிடம் அரசன் அன்பு

இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழையும் உடைய தமிழகத்தில், குருதிப்பலி கொள்ளும் விழுப்பத்தை யுடைய உட்குப் பொருந்திய வீரமுரசம் வைப்பதற் கென்று இருந்த முரசுகட்டிலில், அஃது முரசுகட்டில் என்று அறியாது அதில் படுத்து உறங்கிய மோசிகீரனார் என்னும் புலவரை, யாவரையும் போலக் குற்றம் புரிந்தவர் என்று கருதி வாளால் இருகூறு படுத்தாது. அங்ஙனம் படுத்துறங்கியவர் தமிழ்ப்புலவர் என்பதை யறிந்ததால், தண்டனைக்கு அவரை உட்படுத்தாதது மட்டுமில்லாமல், அவர் அருகே அமர்ந்து களைப்புத் தீருதற்பொருட்டு சாமரம் வீசிப் பணி செய்தான் ஓர் அரசன்:[18] இதனால்

---

16. புறநானூறு; 206 : 6-13.
17. ,, 207 : 2-11.
18. ,, 50 : 7-13.

அரசர்கள், தமிழ்ப் புலவர்களிடம் எத்தகைய அன்புகொண் டிருந்தனர் என்பது தெரிகிறது.

## பரிசில்பெற்ற புலவர் மற்றவரையும் ஆற்றுப் படுத்துதல்

சேரன் கோக்கோதை மார்பனிடம் பரிசில் பெற்று வந்த புலவர், தன்னெதிர்ப்பட்ட புலவரிடம் "கோதை யுடைய மார்பிற்கணிந்த கோதையானும், அக்கோதை யைப் புணர்ந்த மகளிர் சூடிய கோதையானும், கரிய கழியின்கண் மலர்ந்த நெய்தற்பூவானும், தேன்நாற நிற்கும் கானலையுடைய தொண்டியின் தலைவனாகிய எம்மரசனிடம் நீவிர் செல்வீராயின், முதிய வாய்மையை யுடைய இரவல; நீ அமரிக்கண் மேம்படுங் காலத்து, நினக்கு உளதாகிய புகழை மேம்படுத்துமவனைக் கண்டேம் யாமெனச் சொல்லி"[19] என்று ஆற்றுப்படுத்தும் பெருந் தன்மை 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதையே குறிக்கிறது.

இங்ஙனம் பிறரால் ஆற்றுப்படுத்தப்பட்ட பாணனும், பாடினியும் அரசனது வீரத்தைப் பாடி, தோற்றப் பொலிவுடைய சிறந்த பல கழஞ்சால் செய்யப்பட்ட, நன்மையையுடைய அணிகலத்தையும், விளங்கிய தழலின் கண்ணே ஆக்கப்பட்ட பொற்றாமரையாகிய வெள்ளி நாரால் தொடுத்த பூவையும் பெற்றனர்.[20]

## புலவரின் செல்வாக்கு

"எம்முடைய இறைவன் இருந்த ஓசையையுடைய பழையவூரிடத்து அதனையுடையவர்களைப்போல, காலம் பாராது அணுகி தலைமையுடைய நாளோலக்கத்தின் கண்ணே தலையெடுத்துச் செம்மாந்து சென்று புகுதல்,

---

19. புறநானூறு 48 : 5-9.
20. ,, 11 : 10-18.

எம்மைப் போலும் வாழ்க்கையுடைய இரப்போர்க்கு எளிது[21] என்று ஒரு புலவரின் கூற்றிலிருந்து, புலவர்களின் செல்வாக்கு நன்கு புலப்படுகின்றது.

## அரசன் இறந்தபின் கையற்றுப் பாடுதல்

தன்னைப் பல்லாற்றானும் போற்றிய புரவலன் இறந்துபட்டால், புலவர் தன் நிலையை எண்ணி, மன்னனின் நிலைக்கு இரங்கிக் கையற்றுப் பாடுவர். அதியமான் நெடுமானஞ்சி இறந்தபோது, ஔவையார், 'வெட்டிச் சுட்ட கொல்லை நிலத்துக் குறவனால் தறிக்கப் பட்ட துண்டம் போன்ற, கரிந்த புறத்தையுடைய விறகால் அடுக்கப்பட்ட ஈமத்தின்கண் எரிகின்ற ஒள்ளிய அழலின் கண் உடல்சுடச் சென்று அணுகினும் அணுகுக; அவ்வாறு அணுகாது போய், வறிதே ஆகாயத்தை உற ஓங்கினும் ஓங்குக; குளிர்ந்த சுடரையுடைய மதிபோலும் வெண் கொற்றக் குடையையுடைய ஒள்ளிய ஞாயிற்றையொப் போனது புகழ் மாயா''[22] என்றும், "எமக்ஃகம் பற்றாகிய எம்மிறைவன் எவ்விடத்துள்ளான் கொல்லோ; இனிப் பாடுவாரும் இல்லை, பாடுவார்க் கொன்றீவாரும் இல்லை''[23] என்றும் கையற்றுப் பாடுகிறார். மற்றொரு பாடலில் ஆய் இறந்தவுடன், குட்டுவன் கீரனார், "ஒள்ளிய தீச்சுட உடம்பு மாய்ந்துவிட்டது; பொலிவிழந்த கண்ணினை யுடையவராய், தம்மைப் பாதுகாப்போரைக் காணாது, ஆரவாரிக்கும் கிளையுடனே செயலற்று அறிவுடையோர் தம் மெய்யுணங்கிய பசியையுடையவராய், இனிப் பிறருடைய நாட்டின்கண் தலைப்படும் போக்கை யுடையவராயினார்''[24] என்று கையற்றுப் பாடுதலையும் காணலாம்.

---

21. புறநானூறு; 54 : 1-4.
22. ,, 231 : 1-6.
23. ,, 235 : 16-17.
24. ,, 240 : 10-14.

## இறந்தபின் எரித்தல்

கள்ளி வளரப்பட்ட புறங்காட்டுள், வெள்ளிடையில் மூட்டிய தீயை விளைக்கும் சிறிய விறகையுடைய படுக்கையின்கண் ஒள்ளிய அழலாகிய பாயலின் கண்ணே பொருந்தப் பண்ணி மேலுலகத்தே போயினாள் மடவாள்[25] என ஒரு பாடலில் குறிக்கப் பெறுவதால், இறந்தவர்களை எரிக்கும் பழக்கம் இருந்தது எனத் தெரிகிறது.

## வாணிபம்

உள்நாட்டு வாணிபமேயன்றி, கடல் கடந்து தோணிகளில் சென்று வெளிநாட்டு வாணிபமும் மேற்கொண்டிருந்தனர் சேரநாட்டு மக்கள். தாம் பெற்ற உப்பைக் கொடுத்து, அதற்கு ஈடாக நெல்லையும், தோணி நிறைய மிளகு மூட்டையைக் கொண்டு சென்று, அதற்கு ஈடாகப் பொன்னையும் பெற்று வந்தனர்[26] என்பது ஒரு பாடலால் அறிய வருகிறது.

## விஞ்ஞான அறிவும், வான சாத்திர அறிவும்

அணுச்செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின் கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென இயற்கை ஐம்பெரும் பூதங்களால் ஆக்கப்பட்டது என்றும்,[27] திசைகள் காற்றினால் இயங்கும்; ஆகாயம் காற்றில்லாத வெற்றிடம் எனவும்[28] கூறப்படுவதால், மக்கள் விஞ்ஞான அறிவும், வானசாத்திர அறிவும் ஒருங்கே உடையவராயிருந்தனர் எனத் தெரிகிறது.

---

25. புறநானூறு; 245 : 3-5.
26. ,, 343 : 1-6.
27. ,, 2 : 1-6.
28. ,, 20 : 3-4.

## நாள்கோள் அறிவு

'மேடவிராசி பொருந்திய கார்த்திகை நாளில் முதற் காலின்கண், நிறைந்த இருளையுடைய பாதியிரவின்கண் முடப்பனை போலும் வடிவையுடைய அனுடநாளில் அடியின் வெள்ளி முதலாக கயமாகிய குளவடிவுபோலும் வடிவையுடைய புனர்பூசத்துக் கடையில் வெள்ளி எல்லையாக விளங்க, பங்குனி மாதத்தினது முதற் பதினைந்தின் கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றும் சாய, அதற்கு எட்டாம் மீனாகிய மூலம் அதற்கெதிரே எழாநிற்க, அந்த உத்தரத்திற்குமுன் செல்லப்பட்ட எட்டாம் மீனாகிய மிருகசீரிடமாகிய நாண்மீன் துறையிடத்தே தாழக் கீழ்த்திசையிற் போகாது, வடதிசையிற் போகாது கடலாற் சூழப்பட்டது பூமிக்கு விளக்காக, முழங்காநின்ற தீர்ப்பரக்க, காற்றால் பிதிர்ந்து கிளர்ந்து ஒருமீன் வானத்தினின்றும் வீழ்ந்தது'[29] என்று கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இறந்த நாளைக் குறிக்கப் புலவர் ஒருவர் பாடுகிறார். இதனான் பங்குனித் திங்களில் நட்சத்திரம் வீழின் 'இராசபீடை' என்று கருதப்பட்டது என்பதும், நாள், கோள் பற்றிய அறிவில் மக்கள் தேர்ந்திருந்தனர் என்பதும் அறியப் படுகின்றன.

மேற்கூறியவையே யன்றி, சேர மகளிர் கடற்கரை மணலால் பாவை செய்தும், பாவைக்குப் பூவினால்அலங்கரித்தும், புனல் பாய்ந்து விளையாடியும்,[30] பொழுது போக்குவர் என்பதும், புலால் நாற்றத்தையுடையவாகிய செவ்விய தடியைப் பூ நாற்றத்தலாகிய புகையைக் கொளுத்தி அமைந்த வூனையும், துவையையும், கறியையும், சோற்றையும் உண்ணும் வழக்கமுடையவர்[31] மக்கள் என்பதும்,

---

29. புறநானூறு 229 : 1-12.
30. ,, 11 : 1-5.
31. ,, 14 : 12-14.

இம்மைச் செய்தது மறுமைக்காகும் என்ற மறுபிறப்பு நம்பிக்கை உடையவராயிருந்தனர்[32]; இறந்த வீரர்களுக்கு நடுகல் நட்டு வழிபட்டனர் என்பதும்,[33] நாரால் அரிக்கப் பட்ட தேறலை அருந்தினர் என்பதும்,[34] வச்சிராயுதத்தை யுடைய விசாயமாகிய கையையுடைய இந்திரனுக்குக் கோயில் அமைத்து வழிபட்டனர் என்பதும்,[35] முசிறி நகரையொத்த, நலஞ்சார்ந்த உயர்ந்த பொருள்களைக் கொண்டுவந்து கொடுப்பினும், வீரரல்லாதார்க்குத் தந்தையர் தம் மகளை மணம் செய்து கொடுக்கமாட்டார் என்பதும்,[36] சிறுவர்களுக்குக் காப்பாக புலிப்பல் தாலியை அணிந்தனர்[37] என்பதும் போன்ற சேரமக்களது சமுதாய வாழ்வினைப் புறநானூற்றின்கண் வரும் சேரரைப் பற்றிய எழுபத்துநான்கு பாடல்களும் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## புறப்பொருட் செய்திகள்

வீரத்தின் விளைநிலமாம் தமிழகத்தின் முதல் வேந்தர்களான சேரமன்னர் பகைதொறும் வெம்மையை யுடைய அரணை யழித்து வலியொடு எதிர்ந்தவருடைய புறக் கொடையைப் பெற்றனர். பிள்ளையிறந்து பிறப் பினும், தசைத்தடியாகிய மனை பிறப்பினும், அவற்றையும் ஆளல்லவென்று கருதாது வாளால் வெட்டியே புதைப்பர்.[38]

### போர்நிலை

பகைவரோடு பொருது போர்புரியும்போது, வன்கண் மையையுடைய கொலை யானையாலே காவலையுடைய

32. புறநானூறு; 134 : 1.
33. ,, 232 : 3.
34. ,, 232 : 4.
35. ,, 241 : 3.
36. ,, 343 : 10-13.
37. ,, 374 : 9.
38. ,, 74 : 1-2.

கணையமரத்தை முறித்து, இரும்பாற் செய்யப்பட்ட அழகு செய்த அங்குசத்தால் முன்னர்க் கடாவி, அது செய்யும் வினையைப் பின் வேண்டுமளவிலே பிடிக்கவும், வலிய நிலத்தைக் குந்தாலியால் இடித்துச் செய்த குழிந்த இடங்கின்கண் நீர்ப்பரப்பிதுன. ஆழமாகிய உயர்ச்சியைக் கருதி அதன்கட் செல்லாமல் மிகைத்த செலவினையுடைய குதிரையைக் குசைதாங்கி, வேண்டுமளவிலே பிடிக்கவும், அம்பறாத்தூணி பொருந்திய முதுகையுடையராய், தேர் மேலே நின்று, வில்லினது வலிய நாணாற் பிறந்த வடுப் பொருந்தும்படி அம்பைச் செலுத்தவும், வீரப்போர் புரிவர்[39] என்று ஒரு பாடல் போர்நிலையைப் பற்றிக் குறிக்கின்றது.

## போருக்குச் செல்லும் நிலை

போருக்குச் செல்லும்போது மன்னன், கையில் வேலையும், காலில் வீரக்கழலையும், உடம்பின்கண் வேர்ப்பையும், மிடற்றின்கண் ஈரம் புலராத பசிய புண்ணையும், பகைவர் தொலைதற்கேதுவாகிய வளரும் இளைய பனையினது உச்சிக்கண்ணே வாங்கிக்கொள்ளப் பட்ட ஊசித்தன்மையைப் பொருந்திய வெளிய தோட்டையும், வெட்சியினது பெரிய மலரை வேங்கையொடு விரவியும், சுருண்ட கரிய மயிர் பொலிவுறச் சூடியும், சினத்தையுடைய கண்ணனாய்ப் புறப்பட்டுச் செல்வன்[40] என்று அதியமானின் போர்க்கோலத்தை ஔவையார் காட்டுகின்றார்.

இங்ஙனம் சினத்துடன் சென்று, அம்போடு வேல் தைத்து உருவுமிடமாகிய போர்க்கள முழுதும் தானே சென்று நிற்பன். அரிய தலைமையையுடைய பெரிய பாணரது அகலிய மண்டையின்கண் துளையையுருவி, இரப்

39. புறநானூறு 14 : 1-9.
40. ,, 100 : 1-6.

போர் கையுள்ளும் தைத்துருவி தன்னாற் புரக்கப்படும் சுற்றத்தாரது புல்லிய கண்ணிற் பாவை ஒளிமழுங்க அழகிய சொல்லை ஆராயும் நுண்ணிய ஆராய்ச்சியை யுடைய அறிவினையுடையோர் நாவின்கண்ணே போய் வீழ்ந்தது, அவனது அரிய மார்பகத்தில் தைத்த வேல்.[41] இது காஞ்சித் திணைக்குரிய துறைகளுள் 'இன்னனென் றிரங்கிய மன்னை' என்ற துறையின் பாற்படும்.

மற்றொரு பாடலில் தன்னைக் குறித்துவரும் மாற்றார் படையை எதிரேற்றற்குக் கிளர்ந்தெழும் மாலையணிந்த மார்பைத் தம்முடைய அரிய கடனையாற்றுதல் வேண்டிப் பகைவர் எறிதலால் அம்பும் வேலும் மொய்த்து உடம்பும், கட்டினாகாத உயிரும் கெட்டன[42] எனக் கூறப்படுவ தால், இது 'செஞ்சோற்று நிலை' என்னும் துறையின் பாற்படும்.

## அதியனின் வீரம்

அதியமானின் வீரத்தைப் பாராட்டும் ஔவையார், 'நெடுமான் அஞ்சியேந்திய வாள்போரில் உழந்து உருவிழந் துளது; மேல்மடை கலங்கி நிலை திரிந்துளது; களிறுகள் பகைவர் களிற்றுத் திரளொடு பொருது தொடி கழிந் துள்ளன; குதிரைகள் போர்க்களக் குருதியிற் றோய்ந்து குளம்புகள் மறுப்பட்டுள்ளன; அவன் பகைவர் எறிந்த அம்புகளால் துளையுண்ட கேடயத்தை வைத்துள்ளான். அவனொடு போர்புரிந்து வெற்றிபெறுவார் ஒருவரும் இல்லை.[43] அதியனது யானைப் படையைக் கண்ட பகை வேந்தர் தத்தம் மதில் வாயில்கட்குப் பழைய கதவுகளை மாற்றிப் புதுக்கதவுகளை நிறுத்திப் புதிய கணைய மரங்களை அமைக்கின்றனர்; குதிரைப் படையைக் கண்டவர் காவற்காட்டின் வாயில்களைக் கவைத்த வேல

41. புறநானூறு; 2235 : 10-15.
42. ,, k82 : 4-9.
43. ,, 97 : 1-17.

முட்களைப் பெய்து அடைக்கின்றனர்; வேற்படை கண்டவர் தம் கேடகங்கட்குப் புதிய காம்பும் கைந்நட்டும் செறிக்கின்றனர்; மறவரது பெரும்படை கண்டவர் தம்தம் தூணிகளில் அம்பையிடக்கிக் கொள்கின்றனர். என்றாலும் பகைவரது வயல்வளம் செறிந்த நாடு அதியனின் கூற்றத் தனைய வீரத்தினால் பாழாகிவிடுகிறது.[44] இப்பாடல் அரசனது வெற்றியைக் குறிப்பதால், வாகைத் திணையுள் அடங்கும்.

## திறை செலுத்துதல்

பெரிய போர்க்களந்தோறும் வெள்ளிய வாயையுடைய கழுதையாகிய புல்விய நிரையைப் பட்டியுழுது, வெள்ளை வரகும், கொள்ளும், வித்தும் விதைக்கும் வென்றியை யுடைய மன்னர்களுக்குத்[45] தோற்ற பகைமன்னர் பணிந்து திறை தந்து, தம் சுற்றத்தை ஓம்புவர்.[46] இத்தன்மையைக் 'குறுவஞ்சி' என்னும் துறையாக, புறப்பொருள் வெண்பா மாலை கூறுகிறது.

## மரன வாழ்வு

இருபெரும் வேந்தர் பொருது போர்புரிந்தபோது, பகைவன் எய்த அம்பு முதுகின் வழியாகப் பாய்ந்து மார்பில் புண் ஏற்பட்டமையான், அதற்கு நாணி வடக்கிருந்து உயிர் துறந்தான் சேரமான் பெருஞ்சேரலாதன்.[47] வயிற்றின்கண் தீயையாற்ற வேண்டி, கேளல்லாத கேளிர் காலந் தாழ்த்துக் கொண்டுவந்த நீரை யுண்ணாமல், உயிர் துறந்தான் சேரமான் கணைக்காலிரும்பொறை.[48] அதி யனது நாட்டின்கண்ணே எறிகோலுக் கஞ்சாது அதனை

44. புறநானூறு 98 : 1-14.
45. ,, 392 : 8-10.
46. ,, 22 : 25-27.
47. ,, 65 : 9-11.
48. ,, 74 : 4-7.

ஓச்சுந் தோறும் உடன்றெழும் பாம்புபோலச் சீறியெழும் வீரரும், மன்றிக்கண் கட்டப்பட்ட போர்ப்பறை காற்றாலசைந்து இசைக்குமாயின் 'போர் வந்துவிட்டது போலும்' என்று பொருக்கென எழும் தலைவனும் உளன்[49] என்று ஒரு பாடலில் கூறப்படுகிறது.

அரசர் களத்தில் இறக்காமல், நோயால் இறந்துபடினும், தமது ஆசைத்தன்மையை மறந்து அவர் வாளாற் படாத குற்றம் அவரிடத்தினின்றும் நீக்கவேண்டி அறத்தை விரும்பிய கோட்பாட்டையுடைய நான்கு வேதத்தையுமுடைய அந்தணர், நல்ல பசிய தருப்பைப் புல்லிலே கிடத்தி, நல்ல பூசலிலே பட்ட வீரக்கழலினையுடைய வேந்தர் செல்லும் உலகத்திலே செல்கவென்று வாளோக்கியடக்கும்[50] உயர் கொள்கையை அக்காலத் தமிழ்மக்கள் கொண்டிருந்தனர் எனப் புறநானூறு காட்டுகிறது.

## கொடைச் சிறப்பு

*ஆய்:* ஆய் அண்டிரனுடைய அரசவையில் ஆடச் செல்லும் மகள் அணுகினல்லது, பெருமை பொருந்திய அரசர் அணுகுதல் அரிது. 'பிறர்க்கீயாது தாமே தமித்துண்டு தம்வயிறு நிரப்பும் ஏனைச் செல்வர் மனைகளிற் காணப்படும் ஆரவாரமும், பொலிவும், தன்பாலுள்ள களிறனைத்தையும் இரவலர்க்கு நல்கி இழையணிந்த மகளிரொடு புல்லிதாய்த் தோன்றும் ஆய் அண்டிரனது திருமனைக்கண் காணப்படா[51] என்றும், அவன் இரவலர்க்கீத்த யானைகளின் எண்ணிக்கை, வானத்தில் பூக்கும் விண்மீன்களின் தொகையையும்,[52] கொங்கர்ப்போரில் பகைவர் புறங்கொடுத்து ஓடுமாறு ஆய் விடுத்த வேல்களின்

---

49. புறநானூறு; 89 : 5-9.
50. ,, 93 : 4-11.
51. ,, 127 : 3-10.
52. ,, 129 : 5-9.

எண்ணிக்கையையும் எஞ்சி நிற்பதாகும்.[53] இம்மைச் செய் வன மறுமைக்காகும் என்ற எண்ணத்தையுடையவன் ஆய் அலன்.[54] மன்றத்தின்கண் பரிசிலரைக் காணின் கன்றுடனே கறை பொருந்திய அடியையுடைய யானையை அணி யணியாகச் சாய்த்துக் கொடுக்கும் மலைநாடன்.[55] தன்னைப் பாடிவருநர்க்குப் புரவியும். களிறும், தேரும், தன்னுடைய ஊரும் முதலான யாவற்றையும் தயங்காது கொடுப்பவன்[56] என்று ஆயினது கொடைத்தன்மை பல பாடல்களில் பேசப்படுகின்றது.

## அதியமான் நெடுமானஞ்சி

சிறிய இலைகளைக் கொண்ட தீஞ்சுவைமிக்க நெல்லியை உண்டவர் நெடிது வாழ்வர் என்று உணர்ந் திருந்தும், தான் உண்டு வாழ எண்ணாது, தன்னுடைய புலவர் ஔவைக்கு ஈந்த பெருந்தகையாளன்.[57] சிறிய அள வினையுடைய மதுவைப் பெறின் எங்களுக்கே தருவன்; பெரிய அளவினையுடைய மதுவைப் பெறின் அதனை யாம் உண்டு பாட, எஞ்சியதைத் தானுண்பான்; மிக்க அளவினை யுடைய சோற்றினை அன்போடு கூடிய ஊன்தடியுளதாகிய இடமுழுதும் எங்களுக்கு அளிப்பன்'[58] என்று ஒரு பாட லிலும், மற்றொரு பாடலில், 'யான் அவன்பால் அணுகின், என் இடையிலிருந்த பழமையான நீர்ப்பாசிபோல் சிதர்ந் திருந்த ஆடையை நீக்கி, அழகிய பகன்ற மலர் போன்ற புத்தாடை கொடுத்து, களிப்பினைத் தரும் கள்ளோடும், அமிழ்து போன்ற சுவையுடைய ஊன் துவையலோடு கூடிய சோற்றை வெள்ளியாலாகிய வெள்ளிய கலத்தே பெய்து

---

53. புறநானூறு; 130 : 3-7.
54. ,, 134 : 1-4.
55. ,, 135 : 10-13.
56. ,, 240 : 1-3.
57. ,, 61 : 9-11.
58. ,, 235 : 1-6.

உண்பித்ததோடு, ஊர்க்கு முன்னிடமான மன்றத்தில் தங்கியிருந்த உழவெருதுகளைக் கொண்டு உழுது விளைவித்த செந்நெல்லை நெற்போரோடே கொடுத்து, கொள்ளத் தக்க இப்பரிசிலைப் பெற்றுக் கொள்க என்று சொல்லிக் கொடுத்தான்'[59] என்று அதியனின் கொடைத் தன்மையைப் புகழ்ந்துரைக்கின்றார்.

## நாஞ்சில் வள்ளுவன்

நாஞ்சில் நாட்டையாண்ட வள்ளுவனைக் கூறுமிடத்து, ஔவையார், வளையணிந்த கையையுடைய விறலியர் மனைப் பக்கத்தின்கண் பறித்த இலைக்குமேல் தூவுவதாக, யாங்கள் சில அரிசி வேண்டினேமாக, உடனே அவன் எம் வறுமையைப் பார்த்தலேயன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கி, பெரிய அரண் சூழ்ந்த மலைபோல்வதொரு யானையை யளித்தான்,[60] என்று கூறுகிறார்.

## கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்

இவன் தன்னை நாடி வருநர்க்கு மலைபடு பொருளும், கடல்படு பொருளும் கலந்து அளக்கும் தன்மையன்[61] என ஒரு பாடல் அறிவிக்கின்றது.

## செல்வக்கடுங்கோ வாழியாதன்

இரவலரது சிறுமை கண்டு இகழ்ந்து நோக்காது, தன் பெருமையும், தகுதியும் நோக்கி, மலைபோன்ற களிறுகளும், கொய்யப்பட்ட தலையாட்டமணிந்த குதிரைகளும், மன்றிடம் நிறைந்த ஆனிரைகளும், மனைக்கண் இருந்து பணிபுரியும் களமரும் நெற்போர்க்களங்களுமாகிய

---

59. புறநானூறு; 390 : 13-23.
60. ,, 140 : 3-8.
61. ,, 343 : 7-9.

அவற்றைக் கனவென்று இரவலர் மயங்குமாறு நனவின்கண் நல்குபவன் [62] என ஒரு பாடல் குறிக்கிறது.

## அதியமான் பொகுட்டெழினி

தன்னை நாடிவரும் இரவலரின் பாசினது வேர் போற் கிழிந்த உடையினைக் களைந்துவிட்டு, நுண்ணிய புதிய ஆடையினை அணிவித்து, தேளினது கடுப்புப் போல் நாள்படப் புளிப்பேறிய கள்ளை, பொன்கலத்தில் பெய்து உண்மினென்று கூறி விருந்துபசரிக்கும் தன்மையன் [63] எனத் தெரிகிறது.

## வாட்டாற்று எழினி

நீர்வளஞ் செறிந்த வாட்டாறென்னும் ஊர்க்குரியவ னாகிய எழினியாதன், கொழுவிய துண்டமாகிய ஆட்டிறைச்சியும், வளவிய பூந்தேறலாகிய கள்ளையும், குறுமுயலின் தசை விரவித் தந்த நறிய நெய்யையுடைய சோற்றையும், திறந்து பின் மூடுதற்கு மறந்தொழிந்த நெற்கரிசையிடத்து, அவரவர் வேண்டுமளவும் முகந்து கொள்ளப்படும் உணவுப் பொருளும் இரவலர்க்கு நல்குவன் [64] என்று மாங்குடிகிழார் பாடுகிறார்.

## சேரமான் வஞ்சன்

இரவலரது வரவையறிந்து, அவரது பழைய ஆடையைக் களைந்து, புகைபோன்ற புத்தாடையை அணிவித்து, அவரது உண்கலத்தில் தெளிந்த கள் தெளிவைப் பெய்து, தான் உண்ணும் துண்டித்த மானிறைச்சியாகிய வறுத்த பொரிக் கறியையும், கொக்கின் நகம்போன்ற முரியாத நெல்லரிசிச் சோற்றையும், அவர்

62. புறநானூறு; 387 : 20-27.
63. ,, 392 : 11-19.
64. ,, 396 : 13-24.

சுற்றத்தார் உண்ண, அவன் மார்பிலணிந்த பல மணிகள் விரவிக் கோக்கப்பட்டு ஒளிவிளங்கும் மாலையும், அவன் மேனிக்கண் கிடந்து விளங்கும் பூவேலை செய்யப்பட்ட உடைகளையும் அவன் புகழ் எங்கும் பரவ நல்கினான்[65] சேரமான் வஞ்சன்.

இங்ஙனம் சேர மன்னர்கள் அனைவரும், வீரத்திலும், மானத்திலும் சிறந்து விளங்கியது மட்டுமன்றி, கொடையிலும் மேம்பட்டிருந்தனர் என்பது புறநானூறு காட்டும் உண்மை.

## இயற்கை வருணனை

புறக்கருத்துகளைக் கூறும் புறநானூற்றில் இயற்கையைப் பற்றிய வருணனைகளும் ஆங்காங்கே இடம் பெறுகின்றன. அகப்பாடல்களில் இயற்கை வருணனை இடம் பெற்ற அளவிற்குப் புறப்பாடல்களில் அவ்வளவாக இடம்பெறவில்லை என்பர் அறிஞர்.[66]

### ஞாயிற்றின் தோற்றமும் மறைவும்

கடற்கண் தோன்றும் ஞாயிறு, பின்னும் வெளிய தலைபொருந்திய திரையையுடைய மேல்கடற்கண்ணே மூழ்கும்.[67] அன்றியும் பகற்பொழுதைத் தனக்கெனக் கூறு படுத்தியும், திங்கள் மண்டிலத்திற்கு முதுகிட்டுப் போயும், தெற்கும் வடக்குமாகிய இடங்களில் மாறிமாறி வந்தும், மலையின்கண்ணே வெளிப்படாது காத்தும், அகன்ற பெரிய ஆகாயத்தின்கண்ணும் பகற்பொழுது பல கிரணங்களையும் பரப்பியும் தன் கடனைச் செவ்வனே ஆற்றி வருவது ஞாயிறு [68] என ஒரு பாடல் பகருகின்றது.

---

65. *புறநானூறு; 398 : 16-29.*
66. Dr. M. Varadarajan; The Treatment of Nature in Sangam Literature: p. 14.
67. ,, 2 : 9-10.
68. ,, 8 : 7-10.

## மான் பிணைகள் உறங்குதல்

சிறிய தலையையுடைய மறிகளையுடையவாகிய பெரிய கண்ணையுடைய மான்பிணைகள், அந்திக் காலத்தே அந்தணர் செய்தற்கரிய கடனாகிய ஆவுதியைப் பண்ணும் முத்தீயாகிய விளக்கின்கண்ணே, பொற்சிகரங்களையுடைய இமயமலையும், பொதியின் மலையும் போன்று துயிலுகின்றன.[69] மற்றொரு பாடல், நரந்தையையும் நறிய புல்லையும் மேய்ந்த கவரிமா, குவளைப் பூவையுடைய பசிய சுனையின் நீரை நுகர்ந்து, அதன் பக்கத்தவாகிய தகர மரத்தினது குளிர்ந்த நிழலின்கண் தனது பிணையுடனே தங்கும்[70] என்று மான்கள் இணையாக இருப்பதைக் கவின் பெறக் காட்டுகின்றார் ஒரு புலவர்.

## நால்வகை நில வருணனை

முரிந்த வளையை யொப்ப மலர்ந்த வெண்காந்தட் பூ இலை தழைத்த குளவியுடனே நாறும் மலைச்சாரற்கண் மறத்தையுடைய புலி சீறி நிற்கும்போது, எதிரில் மானினம் நில்லாது ஓடும்.[71] வரம்பைச் சேர்ந்து வளையும் நெற்கதிர் சுழலும் கழனியொடு மிக்க நீர்ப்பாக்கத்தையுடையது மருதநிலமாகிய நாடு.[72] இங்கு நிலத்தின்கட் குளிர்ந்த பண்டத்தையுடைய சகடத்தினது ஆழ்ச்சியைப் போக்குவதற்குப் புனல் கொழிக்கப்பட்ட மணல் பரப்பவும், கல் பிளக்கவும் நடக்கவல்ல மிக்க மனச்செருக்கினையுடைய பகடுகள் நிரம்ப உள்ளன.[73] குளிர்ச்சியையுடைய நீரையுடைய துறையின்கண் பகன்றையினது தேனைப் பொருந்

---

69. புறநானூறு; 2 : 21-23.
70. ,, 132 : 4-6.
71. ,, 90 : 1-3.
72. ,, 98 : 19-20.
73. ,, 90 : 7-9.

திய பெரிய மலர்கள் பூத்துள்ளன.[74] காடுகளில், நெடுங் கோட்டினையுடைய யானைகள் மிகுந்து இருக்கும்.[75] சுரத்தின் வழியோ ஞாயிறு சுடப்பட்டதாக வெம்மை மிகுந்த வழியாக உள்ளது.[76] அகன்ற புனத்தின்கண் கிளி மருவியுள்ளது.[77] நெய்தல் நிலமாவது கடலும், கடலைச் சார்ந்த இடமுமாகும். கடல் நீரின் கீழே மீன்கள் உலவு வதாகவும், நீரின் மேற்பரப்பில் குவளையுந் தாமரையு மாகிய மலர்கள் மகளிர் கண்போன்று மலர்ந்திருப்ப தாகவும், கழிகால்களாற் சூழப்பட்ட நெல் விளைந்து கிடக்கும் வயலின்கண், அரித்த ஓசையையுடைய பறையை முழக்குவதால் கதிர் கவரவரும் கிளி முதலிய புள்ளினங்கள் வெருட்டியோட்டப்படுவதாகவும், நீர்மிக்க கடற்கரைக் கண் குவியும் மணலையள்ளித் தூவும் குளிர் காற்றினால் மெல்லிய சிறகுகளோடு கூடிய புள்ளினங்கள் நீந்திச் செல் வதாகவும் ஒரு பாடலில் மாங்குடிகிழார் குறிப்பிடு கின்றார்.[78] மீனினங் கலித்த துறை[79] என்றும் மற்றொரு பாடல் குறிக்கின்றது.

**யானை வருணனை**

களிற்றைப் பற்றிய வருணனை புறநானூற்றில் அகல இடம் பெற்றுள்ளது. நீறு படிந்த நறிய கபோலத்தை யுடைய பூவேலை செய்யப்பட்ட பட்டமணிந்த பருத்த கழுத்தையுடையவாய் வேறு வேறாகப் பரந்து சென்று வேந்தர்களுடைய காவற்காட்டின் அயலிடத்தே பரவி யுலவும் உயர்ந்த கோடுகளையும், பெரிய சருச்சரை பொருந்திய பெரிய கையையுடையவாய் திருந்திய தொழில்

---

74. புறநானூறு 235 : 18.
75. ,, 131 : 4.
76. ,, 136 : 18.
77. ,, 138 : 9.
78. ,, 396 : 1-6.
79. ,, 138 : 3.

செய்யவல்ல யானைகள் என்று ஒரு பாடலும்,[80] மற்றொரு பாடல், 'அசைந்த பெருங்கையுடனே தலையெடுத்து நடக்கும் உயர்ந்த நடையையுடையனவும், அந்நடைக்கேற்ப ஒன்றற்கொன்று மாறுபட்டொலிக்கும் மணியுடனே உயர்ந்த கோட்டினையுடையனவும், பிறை வடிவாக இடப் பட்ட மத்தகத்துடனே சினம்பொருந்திய பார்வையுடை யனவும், பரந்த அடியுடனே பரிய கழுத்தையுடையனவும், தேனழிந்த மலைபோல தேனீயொலிக்கும் மணநாறும் மதத்துடனே புண்வழலை வடியும் பெரிய தலையையுடை யனவுமாகிய வலிமிக்க இளங்களிறு என்றும்[81] யானை யைப்பற்றி அழகாக வருணிக்கின்றன.

## கருவூரின் வருணனை

கருவூரானது சேரரது தலைநகரமாக வஞ்சியென்று வழங்கப்பட்டது. இதனைப் பற்றிக் குறிக்கையில் ஒரு புலவர், 'நுண்ணிய மயிரையுடைய திரண்ட முன் கையினையும், தூய ஆபரணத்தையுமுடைய பேதை மகளிர் வண்ட லிழைத்த சிற்றின்கட் செய்த பாவைக்கு, வளைந்த கோட்டுப் பூவைப் பறித்து, குளிர்ந்த ஆண்டொருந்தத்து நீரின்கட் பாய்ந்து விளையாடும் வானைமுட்டிய புகழினை யும், வென்றியையுமுடைய வஞ்சி[82] என்று குறிக்கின்றார்.

## தொண்டியின் வருணனை

குலை தாழ்ந்த கோட்புக்க தெங்கினையும், அகன்ற கழனியையும், மலையாகிய வேலியையும், நிலாப்போன்ற மணலையுடைய அகன்ற கடற்கரையையும், தெளிந்த கழியிடத்துத் தீப்போலும் பூவினையுமுடைய குளிர்ந்த தொண்டி என்றும், கரிய கழியின்கண் மலர்ந்த நெய்

80. புறநானூறு; 387 : 6-11.
81. ,, 22 : 1-8.
82. ,, 11 : 1-6.

தலானும், தேன்நாறா நிற்கும் கானலையுடைய தொண்டி[83] என்றும் குறிப்பிடப்படுகின்றது.

## நாஞ்சில் வருணனை

நாஞ்சில் வள்ளுவனைப் பற்றிப் பாடும்போது, நாஞ்சில் நாட்டின் இயற்கை வருணனையைப் பற்றிய குறிப்பு வருகிறது. இங்கு நீர் நிறைந்த பள்ளத்தின்கண் விதைத்த வித்து நீரின்மையாற் சாவாது கரும்புபோலத் தழைக்கும்; மழையால் முகந்து சொரியப்பட்ட நீர் கோடை காயினும் மகளிர்கண் போன்ற குவளை முதலிய மலர் பூக்கும்; கரிய தாளையுடைய வேங்கை மலரின் நாடோறும் அப்பொன் போலும் பூவைச் சுமந்து மணிபோலும் நீர் கடற்கட் செல்லும்;[84] செவ்விய மலைப் பக்கத்தையுமுடைய நாடு. மேலும் மேலே விசும்பிலிருந்து மழை பொழிந்த நீர் கடற்குட் சென்று முத்தாகும்; நறுமணம் கமழும் மலை மல்லிகையோடு கூதாளி தழைத்து விளங்க, தீவிய சுளைகளையுடைய பலாமரங்கள் நிறைந்த நாடாகவும் விளங்குவது நாஞ்சில் நாடு.[85]

## புறங்காட்டு வருணனை

கள்ளியையுடைய பாழிடமாகிய புறங்காட்டுள், பொந்தாகிய தான் வாழுமிடத்து, போழ்ந்தாற்போலும் வாயலகையுடைய பேராந்தை சுட்டுக்குவியென்று செத்தோரை அழைப்பதுபோலக் கூவும்,[86] எனப் புறங்காட்டின் வருணனையும் காணப்படுகிறது.

## போர்க்கள வருணனை

போர்க்களமாவது, பெரிய தலைகளை வெட்டிச் சாய்த்து மூளையும் நிணமும் குழம்பிய, கண்டார்க்கு

---

83. புறநானூறு 17 : 9-13; 48 : 3-4.
84. ,, 137 : 5-12.
85. ,, 380 : 6-19.
86. ,, 240 : 7-9; 245 : 3.

அச்சம் பயக்கும் பிணங்களாலும் குருதிப்பெருக்காலும் அவற்றைத் தின்னக் கூட்டமாகச் சுற்றியுள்ள பேய் மகளிர் நரி, பேய் முதலியவைகளாலும், காவலையுடைய பூதங்களாலும் பொலிந்து இருக்கும்[87] எனக் குறிக்கிறது ஒரு பாடல்.

### வைகறை வருணனை

திங்களின் நிலவொளி மறைய வெள்ளியாகிய விண்மீன் எழுந்து விளங்க, பலவகையாகக் கட்டப்பட்டு மாண்புற்ற நல்ல பெருமனைகளில், பொறிகள் பொருந்திய மயிரையுடைய கோழிச் சேவல் விடியற்போதின் வரவறிந்து கூவ, பொய்கைக் கண் கூம்பியிருந்த பூக்களின் முகை இதழ் விரிந்து மலர, பாணர் தாம் கைதேர்ந்த சிறிய யாழை முறைமை யறிந்து இசைக்க இரவுப்போது முடிந்து வைகறைப் பொழுதாயிற்று[88] என்ற வைகறை வருணனை கருத்தைக் கவர்வதாய் உள்ளது.

இவையேயன்றித் திங்களைப் பசுமையான கதிர்களையுடையது[89] என்றும், முதலையானது கலங்குகின்ற காலளவான அளவிற்பட்ட நீருள்ளே யானையைக் கொன்று வீழ்க்கும் தன்மையது[90] என்றும் குறிப்புக் காணக்கிடக்கின்றது.

## அரசியல் செய்திகள்

**சேரரின் செங்கோல்:** பால் தன் இனிமையொழிந்து புளிப்பினும், பகல் இருளினும், ஞாயிறு தன் விளக்கமொழிந்து இருளினும், நான்கு வேதத்தினது ஒழுக்கம் வேறுபடினும் வேறுபாடில்லாத சூழ்ச்சியையுடைய மந்திரிச்

87. புறநானூறு; 369 : 14-17.
88. ,, 398 : 1-6.
89. ,, 231 : 4.
90. ,, 104 : 2-4.

சுற்றத்தையுடையவராய்,[91] மடியா வுள்ளத்தையும், பொருளைப் பாதுகாவாது வழங்கும் வண்மையையும் கொண்டவராயும்,[92] அருளையும், அன்பையும் நீக்கி பாவஞ்செய்தாரை நீங்காத நரகத்தைத் தமக்கு இடமாகக் கொள்பவரோடு பொருந்தாதவராய்,[93] தீத்தொழிலைப் போக்கி, கோலைச் செவ்விதாக்கி, ஆறிலொன்றாகிய இறையையுண்டு, நடுவு நிலைமையைச் செய்து, தடையின்றாக வுருண்ட ஒளியையுடைய சக்கரத்தால் நில முழுதையும், சேரமன்னர் ஆண்டனர்[94] என்பது புறநானூறு காட்டும் நுட்பம்.

## பகைவர் திறை செலுத்துதல்

தம்மொடு மாறுபட்ட மன்னர்களிடம், தம்மிடமுள்ள பெரும்படையுடன் சென்று போர்புரிந்து அவர்களை வெற்றி கொள்வதால், பகை மன்னர்கள் தத்தம் குடிகளைக் காக்க வேண்டி, பெரும் பொருளைத் திறையாகச் செலுத்துவர். இதனால் பெரும் புகழினை மட்டுமன்றி, பெரும் பொருளையுடைய செல்வ நாட்டையுடையவராயுமிருந்தனர்[95] சேரர்.

## முரசுகட்டிலில் படுப்போர்க்கு உரிய தண்டனை

குற்றந்தீர வலித்துப் பிணித்த, வாரப்பட்ட வாரையுடைய, குருதிப்பலி கொள்ளும் விருப்பத்தையுடைய, வீரமுரசம் பெரிதும் தூய்மையுடனும், பக்திச்சிரத்தையுடனும், எண்ணெயினது நுரையை முகந்தாற்போன்ற மெல்லிய பூவையுடைய முரசு கட்டிலின் மேல் வைத்திருப்பர். வெற்றித் திரு வீற்றிருக்கும் கட்டிலின்மேல் வேறு

---

91. புறநானூறு; 2 : 17-20.
92. ,, 8 : 4-5.
93. ,, 5 : 5-7.
94. ,, 17 : 5-8.
95. ,, 387 : 11-13; 22 : 24-28.

பிறர் இருந்து உறங்குவது பெருங்குற்றமாகக் கருதப்பட்டு, அவ்வாறு செய்வோர் கொலைத் தண்டனைக்குரியராவர் என்றும் விதிக்கப்பட்டிருந்தது. எனவே வெற்றிக்கு அடிகோலும் வீரமுரசம் சேரரது ஆட்சியில் புனிதப் பொருளாகக் கருதப்பட்டு வந்தமை[96] தெளிவு.

## புலவரைப் பேணும் விருப்பினன் அரசன்

கன்றை மேவிய ஆனிரை மேய்ந்த காட்டிடத்தே பிறிதொன்றால் ஏதமின்றிக் கிடப்பவும், சுரத்தில் நடத்தலால் வெம்மையுற்ற காலினையுடைய வழிப்போவார் தாம் வேண்டியவிடத்தே தங்கவும், களத்தின்கண் நிறைந்த நெற்பொலி காவலின்றியே கிடப்பவும், எதிரில் நின்று தடுக்கும் பகையைத் துரந்த நிலங்கலங்காத செவ்விய ஆட்சியினையும் உடைய சேரமன்னர், தம்மை நாடி வந்த புலவர்கள், தம் புகழையும், நாட்டின் புகழையும் தீந்தமிழால் பாட, உடனே அவர்பால் பெருவிருப்புக் கொண்டு, அவர்களது சிறுமையை நோக்காது, தம் உயர்வை மதியாது, புலவர்களுக்கு வேண்டுமளவு, பகைவர் தமக்குத் தந்த திறைப்பொருளை ஈந்து, அவர்களை எப்போதும் மகிழ்வுடன் அனுப்புவர்.[97] இரவலர்க்கீதலை தம்மாட்சியின் ஒரு கூறாகவே கருதினர். உலகம் வறுமை யுறுதலையுடைய காலமாயினும், பாதுகாத்தலை மேற்கொண்டனர்.[98]

## தருமமே தலைகாக்கும் என்ற தன்மை

புலவர்கள் ஒரு நாள் சென்றாலும், பல நாள் தொடர்ந்து சென்றாலும் தலைநாள் போன்ற விருப்பினை யுடையவர்களாய்,[99] பொருள் வேண்டி இரந்து நின்ற

---

96. புறநானூறு; 50 : 5-9.
97. ,, 230 : 1-4.
98. ,, 103 : 11-12.
99. ,, 101 : 1-3.

பார்ப்பனருக்கு அவருக்கு நனைந்த கை நிறையும்படி, பொற்பூவும் பொற்காசும் நீர்வார்த்துக் கொடுத்து, பசிய இழையணிந்த மகளிர் பொன்வள்ளங்களில் எடுத்துக் கொடுத்த நாரால் வடிக்கப்பட்ட சுட்டெளிவையுண்டு களித்து, இரவலர்க்கு அவர் வேண்டிய அரிய பொருள் களைக் குறைவறக் கொடுத்து, இவ்வுலகில் வாழ்வதற்கென வரையறுக்கப்பட்ட நாள் முழுதும் நன்றாக வாழ்தலாகிய நல்வினையன்றி, இறக்கும்போது உயிர்க்குத் துணையாவது வேறே யாதும் இல்லை[100] என்ற உயர் கொள்கை யுடையவராயிருந்தனர்.

எனவே சேரர்களது அரசாட்சி, வீரத்துக்கும், செங்கோன்மைக்கும், நடுவுநிலைமைக்கும், கொடைத் தன்மைக்கும் இலக்கணமாக இருந்தது என்று புறநானூறு அறிவிக்கின்றது.

## வரலாற்றுக் குறிப்புகள்

புறநானூற்றிலுள்ள சேரரைப் பற்றிய பாடல்களுள் பழைய வரலாற்றைப் பற்றிய குறிப்புகள் அருகிலே காணப்படுகின்றன.

### பெருஞ்சோற்றுதியன் சேரலாதன்

சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், அசைந்த தலையாட்டமணிந்த குதிரையையுடைய பாண்ட வருடனே சினந்து, நிலத்தைத் தம்மிடத்தே கொண்ட பொற்பூந்தும்பையையுடைய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் பொருது போர்க்களத்தின்கண் பட்டபோது, பெருஞ்சோறாகிய மிக்க உணவை இரு படைக்கும் வரையாது வழங்கினான்[101] என்றதாகக் குறிப்பு, முரஞ்சியூர் முடிநாகனார் என்னும் புலவரால் ஒரு பாடலில் குறிக்கப் பெறுகிறது.

---

100. புறநானூறு; 367 : 4-9.
101. ,, 2 : 13-16.

## அதியனின் முன்னோர் கரும்பு கொணர்ந்தனர்

அதியமான் நெடுமானஞ்சியைப் புகழ்ந்து பாடும் ஔவையார், 'தேவர்களைப் போற்றி வழிபட்டும், அவர்களுக்கு வேள்விக்கண் ஆவுதியை யருந்துவித்தும், பெறுதற்கரிய முறைமையையுடைய கரும்பை விண்ணுலகத்தினின்று இவ்வுலகத்தின்கண் கொண்டுவந்து தந்தும், கடலுக்குப்பட்ட நிலத்தின் கண்ணே சக்கரத்தை நடாத்திய பழைய நிலைமை பொருந்திய முறைமையுடைய குடியிற் கண் தோன்றினவன் அதியமான்[102] என்று குறிக்கின்றார். இங்ஙனமே அதியனின் மகன் அதியமான் பொகுட்டெழினியைப் பாடும்போதும், கடற்கு அப்புறத்ததாயுள்ள நாட்டிலுள்ள பெறற்கரிய அமுதம் போன்ற கரும்பை இந் நாட்டிற்குக் கொண்டுவந்தவனுடைய பெரிய வழித் தோன்றல்[103] என்று கூறுவதினின்றும், அதியனின் முன்னோர் வேற்று நாட்டினின்றும் கரும்பு கொணர்ந்த வரலாறு நமக்குப் புலனாகின்றது.

## எழுவரை வென்ற அதியன்

பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழலினையும், பெரிய பனந்தோடாகிய தாரினையும், ஏழிலாஞ்சினையையும் பெற்ற அதியமான் நெடுமானஞ்சி, போரை விரும்பி யொலிக்கும் ஓசைபொருந்திய முரசினையுடைய பகையரசர் எழுவரும் தன்னொடு போர்புரிய எதிர்த்துவந்தபோது, தான் ஒருவனே நின்று போரின்கண் வென்று தன் ஆற்றலைத் தோற்றுவித்தான்.[104] இவ்வாறு பெருஞ்சிறப்பெய்தியும் அமையாது கோவலூர்மேற் படையெடுத்துச் சென்று அதற்குரிய வேந்தனை வென்று வாகை சூடினான்.

---

102. புறநானூறு; 99 : 1-4.
103. ,, 392 : 19-21.
104. ,, 99 : 8-11.

### பரணர் பாடினார்

இவ்வென்றியை யறிந்த ஆசிரியர் பரணர் அவனுடைய போர் வெற்றியை அழகொழுகும் தமிழாற் பாடிச் சிறப் பித்தார்.[106]

### ஆய் அண்டிரன்

ஆய்அண்டிரனது யானைக்கொடைச் சிறப்பைப் பற்றிக் கூறும் ஒரு புலவர், 'நீ கொடுத்த தலைமையையுடைத் தாகிய யானையை யெண்ணின், நீ கொங்கரை மேற்கடற் கண்ணே ஓட்டப்பட்ட நாளில் அவர் புறங்கொடுத்தலால் தம்மிடத்தினின்றும் பெயர்த்துப் போகப்பட்ட வேலினும் பலவாகும்'[106] என்று கூறுவதால், ஆய் அண்டிரன் கொங்கரோடு போர் புரிந்து, அவரை மேற் கடற்கண்ணே புறங்கொடுத்து ஓடச் செய்தான் என்பது புலனாகும்.

### நாட்டின் எல்லை

தெற்கே கன்னியாகுமரியும், வடக்கே இமயமும், கிழக்குத் திசையும், மேற்குத் திசையும் கடலாற் சூழப்பட்ட எல்லையாக, நடுவுபட்ட நிலத்துக் குன்றமும், மலையும் காடும், நாடும் என இவற்றையுடைத்ததாய் சேரர் காலத் தமிழகம் விளங்கியது[107] என ஒரு பாடல் அறிவிக்கின்றது.

### கருவூர்

கருவூர் சேரருக்குச் சொந்தமான தலைநகரம். இது வஞ்சி யென்று அக்காலத்தில் அழைக்கப்பட்டது. இவ்வூரின் மதிலைச் சுற்றி ஆன் பொருநை என்னும் ஆறு ஓடின தாகவும், வானை முட்டிய புகழினையும், வென்றியையு

105. புறநானூறு; 99 : 11-12.
106. ,, 130 : 5-7.
107. ,, 17 : 1-4.

முடைய ஊராகக் கருவூர் விளங்கியது[108] என்றும் ஒரு பாடல் அறிவிக்கின்றது.

## தொண்டி

குளிர்ந்த தொண்டியானது குலைதாழ்ந்த கோட்புக்க தெங்கினையும், அகன்ற கழனியையும், மலையாகிய வேலியையும், நிலாப்போன்ற மணலையுடைய அகன்ற கடற்கரையையும், தெளிந்த கழியிடத்துத் தீப்போலும் பூவினையுமுடையதாய்ச் சேரர் ஆட்சிக்குட்பட்டதாய்[109] விளங்கியது.

## நாஞ்சில்

அங்ஙனமே நாஞ்சில் மலையும், நாஞ்சில் நாடும் சேரற் குரியதாக இருந்தது. செவ்விய மலைப்பக்கத்தையுடைய நாஞ்சிலில் பொன்போலும் பூவைச் சுமந்து, மணிபோலும் நீர் கடற்கட் செல்லும்[110] எனக் குறிக்கப்படுகிறது.

## சேரமான் கணைக்கால் இரும்பொறை

சேர மன்னனாகிய இவன், ஒரு பொழுது சோழன் செங்கணானோடு திருப்போர்ப்புறத்துப் பொருது, போர் முடிவில் சோழனால், சேரன் பற்றுக்கோட்பட்டு, குடவாயிற் கோட்டத்துச் சிறையில் அடைக்கப்பட்டான். அவ்வாறிருக்கையில் ஒரு நாள் சேரமான் நீர்வேட்கை யுற்றுக் காவலர்களை நீர் கொணருமாறு பணித்தான். அவர் அவன் பணியை அவமதித்துச் சில நாழிகை கழித்துக் கொணர்ந்து கொடுக்க, அதையுண்ணாது 'குழவியிறப்பினும்' என்ற பாடலைப் பாடிவிட்டு உயிர் துறந்தான்[111] என்ற செய்தி குறிக்கப் பெறுகிறது.

---

108. புறநானூறு; 11 : 5-6.
109. ,, 17 : 9-13.
110. ,, 137 : 10-12.
111. ,, 74 : 1-7.

## புராணக் குறிப்பு

மேற்காட்டிய வரலாற்றுக் குறிப்புகளினூடே, பால் போலும் பனி பிறை ஆதல்போலப் பொலிந்த திருமுடியினையும், நீலமணி போலும் கரிய திருமிடற்றினையுமுடையவன் சிவன் [112] என்ற புராணக்குறிப்பும் காணப் படுகிறது.

## சேரரின் துறைமுகம் முசிறி

சேரர்களுக்குத் தலைசிறந்த துறைமுகமாக முசிறி விளங்கியது என்றும், அத்துறைமுகத்தில் வெளிநாட்டுப் பொருட்கள் பலவும் கப்பலின் மூலம் வந்து இறங்கிச் சேர நாட்டின் வாணிபத்தைச் சிறப்புறச் செய்தது என்றும் [113] ஒரு பாடலில் குறிக்கப்படுகிறது.

## கவிதைச் சிறப்பு

**விளக்க ஓவியம்:** மன்னன் ஆட்சியைக் கூறும்போதும், இயற்கையைப் பற்றிய வருணனைகளைச் சித்திரிக்கும் போதும், வரலாற்றுக் குறிப்புகளைத் தரும்போதும், உவமைகளைக் கையாளும்போதும், புலவர் பயன்படுத்தும் அடிகள் பல நம் உள்ளத்தைக் காந்தம்போல், கவர்ந்து இழுக்கின்றன. ஒழுங்கான நுண்ணிய மயிரையுடைய திரண்ட முன்கையினையும், தூய ஆபரணத்தையுமுடைய பேதை மகளிர், [114] கோடேந்திய அல்குலினையும், குறிய வளைகளையுமுடைய உரிமைமகளிர், [115] மான்போன்ற மருட்சி பொருந்திய கண்ணர் [116] என்று வருணித்துக் கூறுமிடத்துப் பெண்ணையும், சிறிய தலையையுடைய மறிகளையுடைய

---

112. புறநானூறு; 91 : 5-6.
113. ,, 343 : 10-11.
114. ,, 11 : 1.
115. ,, 11 : 2; 240 : 4.
116. ,, 374 :10.

வாகிய, பெரிய கண்ணையுடைய மான்பிணைகள்[117] எனும்போது, மானின் தோற்றத்தையும், கோடு முற்றிய கொல் களிறு,[118] கருமையான கண்களுடைய களிறு[119] இரும்புபோன்ற முகத்தையுடைய கருமையான கைகளை யுடைய கொல்லுங்களிறு[120] எனும்போது, பெரிய யானையின் தோற்றத்தையும், குற்றந்தீர வலித்துப் பிணித்து வாரப்பட்ட வாரையுடைய, கருமரத்தாற் செய்தலான் இருட்சி பொருந்திய பக்கம் பொலிவு பெற, மயிலினது தழைத்த நெடிய பீலியால் தொடுக்கப்பட்ட ஒள்ளிய பொறியையுடைத்தாகிய நீலமணி போலும் நிறத்தையுடைய தாரை, பொற்றளிரையுடைய உழிஞை யுடனே பொலியச் சூட்டப்பட்டு, குருதிப் பலிகொள்ளும் விருப்பத்தையுடைய உட்குப் பொருந்திய முரசம்[121] என வருணிக்கும்போது, முரசின் கம்பீரமான உருவப் பொலி வையும், பசிய இழையால் தொடுக்கப்பட்ட தலைக் கண்ணியையும் மாசுண்ட உடையையும், மடித்த வாயையு முடைய இடையன்[122] எனும்போது, இடையனின் உருவத்தையும் புலவர்கள் அழகிய ஓவியங்களாகத் தீட்டிக் காட்டுகின்றனர். நெஞ்சில் அவ்வுருவங்களை அழகிய அடிகளின்மூலம் பதிய வைக்கின்றனர்.

## கவிநயம்

சேரமான் மாந்தரஞ்சேர லிரும்பொறையினைக் குறுங்கோழியூர் கிழார் பாராட்டும்போது, 'பெரிய கடலினது ஆழமும், அகன்ற உலகத்துப் பரப்பும், காற்றி

117. புறநானூறு; 2 : 21.
118. ,, 17 : 17.
119. ,, 14 : 1.
120. ,, 369 : 1-2.
121. ,, 50 : 1-5.
122. ,, 54 : 10-11.

யங்குந் திசையும், வடிவின்றி நிலைபெற்ற ஆகாயமும் என்னும் சொல்லப்படுபவற்றை வரையறுத்தறியினும், நினது அறிவும், ஈரமும், பெருங்கண்ணோட்டமும் வரை யறுத்தற்கரியவை[123] என்று கூறுவது சுவைமிக்கதாக உள்ளது. அங்ஙனமே, அவன் நாட்டில் சோறு படைக்கும் நெருப்புடனே, செஞ்ஞாயிற்றினது வெம்மையல்லது வேறு வெம்மையை மக்கள் அறியார்;[124] இந்திர வில்லல்லது பகைவரது கொலைவில்லை யறியார்;[125] கலப்பையல்லது வேறு படைக்கலமும் அறியார்;[126] அவனுடைய நாட்டின் கண் வேட்கை நோயுற்ற பெண்டிர் விரும்பி ஊன் உண்ணினல்லது பகைவர் உண்ணப்படாத பெறுதற்கரிய மண்ணையுடையவர்[127] என்று, அவன் ஆட்சி போரற்று, எதிர்க்கும் பகையின்றி, அமைதியான ஆட்சியாக விளங் கியது என்றும், அவன் நாட்டுப் பெண்கள் தம் கணவருடனே சேர்ந்து இன்பமான இல்லற வாழ்வை நடாத்தியதால் மகப் பேறுற்று, வாழ்வின் பயனை நுகர்ந்தனர் என்றும் மிகவும் நயமாகக் கூறுவது படித்து இன்புறற்குரியது.

## ஒருசொல் பல பொருள்

கோதையுடைய மார்பிற்கணிந்த கோதையானும், அக்கோதையைப் புணர்ந்த மகளிர் சூடிய கோதை யானும்,[128] என்று சேரமான் கோக்கோதை மார்பனைப் பொய்கையார் பாடும்போது 'கோதை' என்ற ஒரு சொல்லையே திரும்பத் திரும்பக் கையாள்கிறார்.

---

123. புறநானூறு; 20 : 1-5.
124. ,, 20 : 7-9.
125. ,, 20 : 10.
126. ,, 20 : 11.
127. ,, 20 : 14-15.
128. ,, 48 : 1-2.

## விறலியின் தோற்றம்

மணிக்கோவையாகிய அணியாற் பொலிந்த ஏந்திய பக்கத்தினையுடைய அல்குலினையும், மடப்பத்தினையும், மையுண்ட கண்ணினையும், ஒளிதங்கிய நுதலினையுமுடைய விறலி என்று அரசனிடம் பரிசில் பெற்று வரும் போது பொலிந்து தோன்றும் விறலியைக்[129] காட்டும் புலவர், அதற்கு முன் பூப்போலும் வடிவினையுடைய மையுண்ட கண்கள் பசப்ப, தோள் மெலிய, காவினது ஒருதலைக்கண்ணே பதலை தூங்க, ஒருதலைக்கண்ணே துளையை யகத்தேயுடைய சிறிய முழாவைத் தூங்கும் பரிசு தூக்கி, இடுவோரின்மையான் ஏலாது கவிழ்ந்த என் மண்டையை இட்டு மலர்த்த வல்லார் யார்[130] எனச் சொல்லி சுரத்திடத்தே யிருந்த, பரிசில் பெறுதற்குமுன் இருந்த வறுமை நிலையையும் காட்டுவது, சிறந்த முரண்பாடாக அமைந்துள்ளது.

ஓர் அரசன் தன்னிடத்தேயுள்ள எல்லா யானைகளையும், தன் உரிமை மகளிரின் எல்லா அணிகலன்களையும், தன்னை நோக்கி வந்த இரவலர்க்கு அளித்து விட்டமையான், அவன் தறிகள் களிறுகள் இலவாகிய புல்லிய பக்கத்தையுடையன என்றும், பிறிதோர் அணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை யணிந்திருந்தனர்[131] மகளிர் என்றும் கூறுகிறார். எனவே மங்கல நாணாகிய தாலி எந்நாளும் கழற்றப் படாதது என்பது நயமாகக் கூறப்படுவது காண்க!

மற்றும், அவனது ஊர்ப்பொதுவின்கண் பலவினது பெரிய கோட்டின்கண் வாழும் மந்தி பரிசிலர் தூக்கி வைக்கப்பட்ட மத்தளத்தினது ஓசை இனிய தெளிந்த கண்ணைப் பலாப்பழமென்று கருதித் தட்டினவிடத்து, அதன்கண் வாழும் அன்னச் சேவல்கள், அவ்வோசைக்கு

---

129. புறநானூறு; 89 : 1-2.
130. ,, 103 : 1-4.
131. ,, 127 :5.

மாறாக எழுந்து ஒலித்தன[132] என்று கூறுவது நகைப்பிற்கிடமாக இருத்தலோடு, படித்துச் சுவைத்தற்கினிய கற்பனையாகவும் இருக்கிறது.

இன்னொரு பாடலில், இதே புலவர், மன்னன் வருபவர்க்கெல்லாம், யானையைப் பரிசாகக் கொடுத்தலான் 'நினது நாட்டின்கண் இளையபிடி ஒரு கருப்பத்தில் பத்துக் கன்று பெறுமோ' என்று வியந்து கேட்கிறார்.[133] யானை ஒரு சூலுக்கு ஒரு கன்றுதான் ஈனுமேயன்றிப் பல கன்றுகளை யீனாது; யானைகளின் தொகை மிகுதி கண்டே இவ்வாறு கூறுகிறார்.

அன்றியும், வடதிசைக்கண் இமயமலையும், தென்திசைக்கண் ஆய்குடியும் இல்லையாயின், இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் கீழ் மேலதாகிக் கெடும்[134] என்று கூறுவதும் அறிந்து இன்புறத்தக்கது.

## நெஞ்சைப் பிணிக்கும் சொற்கள்

சேரமான் மாந்தரஞ்சேர லிரும்பொறை மறைந்தவுடன், ஒரு புலவர் 'உலகிற்குக் காவலாகிய வெண் கொற்றக்குடை கால் துணிந்து உலறவும், காற்றுப்போலும் இயலையுடைய மனஞ் செருக்கிய குதிரைகள் கதியின்றிக் கிடக்கவும், தனக்குத் துணையாகிய மகளிரையும் மறந்து தேவருலகம் சென்றானே[135] என்றும், அதியனின் பிரிவை யாற்றாத ஔவையார், 'அவனை யின்றிக் கழிகின்ற மாலையும், காலையும் இனி இல்லையாகுக'[136] என்றும் கூறும் சொற்கள் நம் நெஞ்சைப் பிணிக்க வைப்பதோடு, நம்மையும் அவர்கள் பிரிவிற்குக் கண்ணீர் விடுமாறு செய்கின்றன.

---

132. புறநானூறு; 128 : 1-4.
133. ,, 130 : 1-2.
134. ,, 132 : 7-9.
135. ,, 229 : 20-24.
136. ,, 232 : 1-2.

## முரண் தொடை

அதியமான், சிறுசோற்றின் கண்ணும் மிகப்பல கலத்தோடுங்கூட உண்பன்; பெருஞ்சோற்றின் கண்ணும் மிகப் பல கலத்தோடுங்கூட உண்பன் என்று, சிறு பெரு என்று முரண்தொடை அமையக் கூறுகிறார்[137] ஔவையார்.

இவையேயன்றி, சிறிய இலைகளையுடையது நெல்லித் தீங்கனி என்பதும், திண்ணிதாக[138] வலித்துக் கட்டப் பட்ட முரசம் இழும் எனும் ஓசையுடன் முழங்கும் என்பதும், பகைவனை[139] நோக்குதலால், சினத்தால் சிவந்த கண்கள் தன்னுடைய சிறுவனை நோக்கும்போதும் சிவந்தன என்று கூறுவதும்,[140] செம்மையான நாவையுடையவர் புலவர் என்பதும், கூற்றத்தை[141] அறனில்லாதவன் என்றும், கண்ணில்லாதவன்[142] என்றும் கூறுவதும், நாகலோகத்தைப்[143] போன்ற நிலவட்டம் தன்னுடைய தெனவுரிமை கொள்ளப்பட்டவாயினும் வேந்தர் தாம் இறக்குங்கால் அவரோடே மறைந்தொழியாமல் நின்று அவர்க்குப் பின்வரும் வேந்தர் ஒரு தொடர்புமில்லாத வேற்று நாட்டவராயினும் அவர்க்குரியதாய்விடும் என்றுரைப்பதும்[144], இளநிலவு திகழும் பனி சொரியும்

---

137. புறநானூறு; 235 : 4-5.
138. ,, 91 : 9.
139. ,, 93 : 1.
140. ,, 100 : 10-11,
141. ,, 140 : 2.
142. ,, 230 : 11.
143. ,, 240 : 5.
144. ,, 367 : 1-3.

விடியற்காலமென்று பகர்வதும்[145] மிகச் சிறந்த உள்ளங் கவர் அடிகள் என்பதில் ஐயமில்லை!

## உவமைகள்

புறநானூற்றில் சேரர்களைப் பற்றிக் குறிப்பு வரும் பாடல்கள் 74 ஆகும். இவற்றில் ஏறத்தாழ 73 உவமைகள் அமைந்திருக்கக் காணலாம்.[146] உவமைகள் பல திறத்தன. சொல்லவந்த கருத்தை எடுத்து விளக்குவன. கவிதைச் சிறப்பினை மிகுவிப்பன. இந்த உண்மைகளையெல்லாம் புறநானூற்றின்கண் அமைந்துள்ள உவமைகளில் பரக்கக் காணலாம். உவமையின் ஒரு சில கூறுகள் இங்கு விளக்கப் படுகின்றன.

## இயற்கையும் மன்னனும்

அணுச்செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென ஐவகைப்பட்ட இயற்கையினது தன்மை போல, மன்னன் பகைவர் பிழை செய்தால் அப்பிழையைப் பொறுத்தலும், அப்பிழை பொறுக்குமளவு அல்லவாயின்

---

145. புறநானூறு; 392 : 3.
146. ,, 2 : 1-8; 5 : 1; 8 : 1-10; 13 : 14; 13 : 5-7; 14 : 17-19; 17 : 14-23; 17 : 33-39; 22 : 5-6; 22 : 10-12; 22 : 14-17; 22 : 14-17; 22 : 22-23; 50 : 6-7; 50 : 12; 53 : 1; 54 : 13-14; 65 : 6-11; 87 : 3-4; 89 : 5-6; 90 : 1; 90 : 10; 91 : 5-7; 94 : 1-3; 94 : 4-5; 100 : 7-8; 101 : 6-8; 102 : 6-7; 102 : 5-6; 104 : 3-4; 127 : 1; 129 : 69; 132 : 3; 133 : 5-7; 135 : 5; 136 : 1-5; 136 : 13; 137 : 8; 137:10; 137:11;

அவரை யழித்தற் குசாவும் உசாவினது அகலமும், அவரை யழித்தற்கேற்ற மனவலியும், சதரங்க வலியும், அவ் வாற்றால் அவரை யழித்தலும், அவர் வழிபட்டால் அவர்க்குச் செய்யும் அருளுமுடையவனாயிருத்தல் வேண்டும் என்று கூறப்படுகிறது. எனவே நிலம் பொறுமைக்கும், ஆகாயம் சூழ்ச்சிக்கும், வலிக்கு வளியும், தெறலுக்குத் தீயும், அளிக்கு நீரும் உவமையாகக் கூறப்பட்டுள்ளன.[147]

## யானை பிடித்தலும், பகைவர் நாடு பிடித்தலும்

யானைவரும் வழியில் சூழ்ந்த பள்ளஞ் செய்து அதன் மேல் மெல்லிய கழிகளைப் பரப்பி, மணலைக் கொட்டி பொய்யே நிலம்போலத் தோன்றச் செய்து, அதன்மூலம் குழியை யறியாது வீழ்ந்த யானையைப் பின்னர் பழகிய யானைகளைக் கொண்டு அதனைப் பிணித்துக்கொள்வது போல், மன்னர் தம்முடைய பகையரசனைச் சூழ்ச்சியால் வெல்லுதலோடு, முன்பு அவரால் அழிக்கப்பட்டுப் பின்பு தம்மரசு வெளவாது அவரது வரவு பார்த்திருந்த அரசரைத் தம்முடன் சேர்த்துக்கொண்டு, அவர்களின் உதவி கொண்டு பகையரசரை வென்று அவன் நாட்டைப் பிடித்தல் வேண்டும் என்று கூறுவதால் பழகிய யானை களைக் கொண்டு சூழ்ச்சியால் யானையைப் பிணித்தலை,

---

138 : 11; 139 : 13-15; 207 : 8-11; 210 : 14-15; 211 : 1-6; 229 : 27; 230 : 7-9; 230 : 12-16; 231 : 1-2; 231 : 5; 231 : 6; 235 ; 18-20; 315 : 4-8; 315 : 6-7; 343 : 10-11; 367 : 1; 367 : 12-14; 369 : 1-10; 369 : 19-21: 369 : 23-27; 374 : 1-3; 375 : 1-2; 375 : 4; 375 : 13-14; 387 : 1-4; 390 : 3-4; 390 : 21-22; 392 : 1; 392 : 4-5; 392 : 13-14; 396 : 26-28; 398 : 11-11; 398 : 12.

147. புறநானூறு; 2 : 1-8.

பகைமன்னரைத் தான் முன்பு வெற்றிகொண்ட மன்ன ருடன் சேர்ந்து பிணித்தலுக்கு உவமையாகக் கூறப்படு கின்றது.[148]

## சிவனும் அதியனும்

நீண்ட நாள் உயிர் வாழவைக்கக் கூடிய நெல்லிக் கனியை அதியன் ஔவையாருக்கு அளித்தபோது, அவனை வாழ்த்து முகத்தான் அவர் 'பால்போலும் பிறைநுதலாற் பொலிகின்ற மேனியையும், கருமையான கண்டத்தினையும் உடைய சிவபெருமான் எந்நாளும் அழியாது இருத்தல் போல, நீயும் இவ்வுலகில் அழியாது வாழ்வாயாக'[149] என வாழ்த்துகின்றார்.

## யானையும், அதியமானும்

ஊரின்கட் சிறுபிள்ளைகள் தனது வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட் படியும் பெரிய களிறு அவர்க்கு எவ்வாறு எளிதாய் இனிதாகுமோ, அவ்வாறே அதியமான் எமக்கு இனியனாக உள்ளான். மற்று அதனுடைய அணைதற்கரிய மதம்பட்ட நிலைமை எவ்வாறு இன்னாதாம் அதுபோல, அவன் பகைவர்க்கு இன்னாதான் என்று கூறுவதால், மதம் பிடிக்காத யானையின் தன்மை அதியமான் புலவர்களிடம் காட்டும் இனிய தன்மைக்கு உவமையாகவும், மதம் பிடித்த யானையின் இன்னாத தன்மை, அதியமான் பகைவர்களிடம் கொள்ளும் சினத்தின் தன்மைக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன.[150]

---

148. புறநானூறு; 17 : 14-13.
149. ,, 91 : 5-7.
150. ,, 94 : 1-5.

## திங்களும், வெண்குடையும், ஞாயிறும் புகழும்

வெண்மையான குளிர்ச்சி பொருந்திய திங்கள் அரசனின் செம்மையான ஆட்சிக்கும், ஒளிக்கதிர்களுடன் உலகை விளக்கும் ஞாயிறு அரசனின் உலக முழுதும் பரந்த புகழுக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன.[151]

மேலும், பெண்களின் கண் குவளை மலருக்கும்,[152] தெளிந்த நீர் மணிக்கும்,[153] வழியில் செல்வோரது பொருளைப் பறிக்கும் கள்வர், குரங்குக்கும் உவமையாகக்[154] கூறப்படுகின்றன.

---

151. புறநானூறு; 231 : 5-6.
152. ,, 137 : 8.
153. ,, 137 : 11.
154. ,, 136 : 13.

பகுதி 3

# பத்துப்பாட்டு

சங்க நூல்களில் ஒன்றான பத்துப்பாட்டில் சேரர்களைப் பற்றிய செய்திகள் அவ்வளவாக இடம்பெறவில்லை எனலாம். ஒன்றிரண்டு செய்திகளே சேரர்குறித்து அறியப் படுகின்றன.

பொருநராற்றுப் படையில்,

**முரசுமுழங்கு தானை மூவருங் கூடி**
**அரசவை இருந்த தோற்றம் போல[1]**

என்று முடத்தாமக் கண்ணியார் பண்டைய வேந்தர்களான சேர சோழ பாண்டியரை ஒருங்கே குறிப்பிட்டுள்ளார். நச்சினார்க்கினியரும் இவ்வடிகளின் உரையில் முரசு முழங்குதானை மூவர் சேர சோழ பாண்டியர் என்று குறிப்பிட்டுள்ளார்.

பெரும்பாணாற்றுப் படையிலும் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

**மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்**
**முரசு முழங்குதானை மூவர்[2]**

என்று சேர சோழ பாண்டியரைக் குறிப்பிட்டுள்ளார். சிறுபாணாற்றுப்படையில் சேரரும் அவர் தம் தலைநகராகிய வஞ்சியும் ஒருங்கே குறிப்பிடப்பெற்றுள்ளனர்.

"கொழுவிய மீன்துணிய நடந்து வளவிய இதழை உடைத்தாகிய செங்கழுநீர்ப்பூவைத் தின்ற பெரிய

---

1. பொருநராற்றுப்படை, 53-54.
2. பெரும்பாணாற்றுப்படை; 32-33.

வாயை உடைய எருமை, பசிய மிளகுக்கொடி படர்ந்த பலாவின் நிழலிலே மஞ்சளினது மெல்லிய இலை, தனது மயிரை உடைய முதுகைத் தடவ, எருமை முற்றாது இளைய தேன் நாறமென்று அசையிட்டுக் காட்டுமல்லிகையாகிய படுக்கையிலே துயில்கொள்ளும் மேற்றிசைக் கண்ணுள்ள நிலமாகிய சேரநாடு''[3]

என்று சேரநாட்டின் இயற்கைவளம் இனிதுறக் கிளத்தப் படுகின்றது.

மேற்புலத்தைக் காவல் செய்கின்ற சேரர் குடியிலுள் ளோன் பகைவருடைய வடக்கின்கண் உள்ளதாகிய நிலத்திடத்தே நிற்கும் இமயத்தின்கண்ணே வளையும் தன் விற்கொடியைப் பொறித்தவனும் கணையமரத்தை வெல்லும் திணிந்த தோளினையும் விரைந்துசெல்லும் தேரினையும் உடைய குட்டநாட்டிற்குத் தலைவன் குட்டுவன்[4] என்றும் சேரமன்னன் பேசப்படுகின்றான்.

### வஞ்சி

வஞ்சிமாநகர் பெருகுகின்ற நீரையும் கோபுரவாயிலை யும் உடைய நகரம் என்பது சிறுபாணாற்றுப்படையால் பெறப்படுகின்றது.[5]

மதுரைக்காஞ்சியில் சேரனுடைய நாளோலக்க இருப்புக் குறிப்பிடப்பெறுகின்றது.

''கண்கள் வளைந்த பறையினை உடைய கூத்த ருடைய சுற்றம் சேர வாழ்த்தும் குளிர்ந்த கடல்சேர்ந்த நாட்டை உடையவனாகிய ஒள்ளிய பனந்தாரை உடைய சேரனுடைய பெரிய நாளோலக்க இருப்பிலே

3. சிறுபாணாற்றுப்படை; 41-47.
4. சிறுபாணாற்றுப்படை; 47-49.
5. சிறுபாணாற்றுப்படை; 50.

எல்லாக் கலைகளையும் உணர்ந்த சீரியோர் திரண்டு அவன் கேட்பத் தருக்கங்களைக் கூறி விரும்புதல் கொண்ட ஆரவாரத்தினை மாங்குடி மருதனார் குறிப்பிட்டுள்ளார்.[6]

மதுரைக்காஞ்சியில் பிறிதோரிடத்தில் பெயர் குறிப்பிடப்பெறாத சேர சோழரைப் பாண்டியன் நெடுஞ் செழியன் வென்ற செய்தி சுட்டப்பட்டுள்ளது.[7]

சேரன் செம்பியன் முதலிய எழுவரோடு மாறுபட்டு நெடுஞ்செழியன் பொருதமை நச்சினார்க்கினியருடைய உரையால் தெரியவருகின்றது.[8]

பாண்டியன் நெடுஞ்செழியனொடு பொருத எழுவர் சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் எனும் எழுவர் என்பது

"ஆலங்கானத் தஞ்சுவரஇறுத்து
அரசுபட அமருழக்கி
முரசுகொண்டு களம்வேட்ட
அடுதிறல் உயர்புகழ் வேந்தே"[9]

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரையால் விளங்குகின்றது.

சேரரைப் பற்றிப் பத்துப்பாட்டால் நாம் அறியும் செய்திகள் இவையே ஆகும்.

---

6. மதுரைக்காஞ்சி; 523-526.
7. மதுரைக்காஞ்சி; 55-56.
8. நெடுநல் வாடை; 188 உரை.
9. மதுரைக்காஞ்சி; 127-130.

# பதினெண் கீழ்க்கணக்கு

கடைச்சங்க காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியோடு முடிவடைவதாக அறிஞர்கள் கருது கின்றனர். மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பல்லவர் ஆட்சியின் தோற்றமும் அவர்தம் ஆதிக்கமும் மேலோங்கலாயின. சங்க இலக்கியங்களில் பல்லவர் பற்றிய சிறுகுறிப்பும் கிடைக்கவில்லை; ஆதலால் பல்லவர் இந்த மண்ணில் தங்கள் ஆட்சியை நிறுவும் முன்னரே சிறப்பு வாய்ந்த தமிழ்ச்சங்கம் செயலற்றுப்போனது என அறிகின்றோம். ஏறத்தாழ கி. பி. 250 அளவில் தமிழர் களுடைய வரலாற்று நிலையைப் பற்றி அறிந்துகொள்ள இயலாத வண்ணம் ஒரு பெரும் தேக்கநிலை ஏற்பட்டது. இத்தேக்கநிலை கி. பி. 6 ஆம் நூற்றாண்டு இடைப்பகுதி வரை நீங்கவில்லை. இந்தக் காலப்பகுதி தமிழகத்தின் 'இருண்ட காலம்' எனக் குறிப்பிடப் பெறுகிறது. தமிழர் களின் மொழி மற்றும் பண்பாட்டிற்கு முற்றிலும் எதிரான தொடர்பற்ற நாடோடிக் கூட்டமாகிய களப்பிரர்களின் வருகையும் பல்லவப் பேரரசினுடைய ஆட்சி விரிவும் தமிழகத்தில் வடமொழி, பிராகிருதம், பாலி முதலான மொழிகள் வளர்ச்சி பெறுவதற்குத் தூண்டுகோலாய் இருந்தன. மேலும் இவை சமண, பௌத்த மதங்களும் தந்திர சாத்திர வழிபாட்டு முறையும் பரவுவதற்கு ஊக்க மளித்தன. தமிழ்மொழி இலக்கிய வளர்ச்சி குன்றியது. இருப்பினும் இந்த இடைப்பட்ட பகுதியில் சமண, பௌத்த மதங்களில் காணப்பட்ட நற்கருத்துகளின் விளைவாக ஏற் பட்ட விழிப்புணர்வு காரணமாகத் தமிழில் செய்யுள்

வடிவிலான பல நீதி இலக்கியங்கள் தோற்றம் கொண்டன. அவற்றிலிருந்து பதினெட்டு நூல்களைத் தேர்ந்தெடுத்து ஒரு தொகுப்பாக ஆக்கினர். அத்தொகுப்பே நாளடைவில் பதினெண்கீழ்க்கணக்கு என்னும் பெயரைப் பெற்றது.

இந்தத் தொகுப்பைச் சார்ந்த நூல்கள் பாடற்பொருள், பாடல் அமைப்பு, மொழிநடை ஆகிய கூறுகளில் சங்க இலக்கியத்தினின்று மாறுபட்டு இருந்தன. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் பொய்கையார் என்னும் புலவரால் இயற்றப்பெற்ற 'களவழி நாற்பது' என்னும் நூல் போரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. இந்நூலில் சேர அரசன் ஒருவனின் போர்த்திறம், இலக்கிய ஈடுபாடு, ஈகைத்தன்மை ஆகியவை இடம் பெற்றுள்ளன. எனவே இவ்வியலில் களவழி நாற்பது என்னும் இந்நூல் ஆய்வுப் பொருளாகின்றது.

# களவழி நாற்பது

பழந்தமிழ் இலக்கியங்களைப் பாட்டு, தொகை, கீழ்க் கணக்கு எனப் பிரிப்பர். பத்துப்பாட்டையும் எட்டுத் தொகையையும் அடுத்துப் பதினெண் கீழ்க்கணக்கு நூல் கள் சிறப்புடையனவாகும். தமிழ்விடுதூது ஆசிரியர்,

...... ...................... —மூத்தோர்கள்
**பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்**
**கேடில் பதினெட்டுக் கீழ்க்கணக்கும்**[1]

எனக் குறிப்பிடுகின்றார். பதினெண் கீழ்க்கணக்கு என்னும் வழக்கினை மயிலைநாதரும்,[2] பேராசிரியரும்,[3] நச்சினார்க் கினியரும்[4] தாம்தாம் எழுதிய நன்னூல், தொல்காப்பிய உரைகளில் குறித்துள்ளனர். கீழ்க்கணக்கு[5] என்றும் நச்சி னார்கினியர் தம் உரையில் சில இடங்களில் சுட்டியுள்ளார். எனவே கீழ்க்கணக்கு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் வழக்குகள் பழமையானவை என்பது புலப்படும். பன்னிரு பாட்டியல், அடி நிமிர்ந்து வரும் அகவல் முதலியவற்றால் இயன்றது மேற்கணக்கு என்றும், அடிநிமிர்வு இல்லாத வெண்பாவினால் வருவது கீழ்க்கணக்கு என்றும் கூறு கின்றது.[6] மேலும் அது அறம் பொருள் இன்பம் பற்றித்

---

1. தமிழ்விடு தூது; 56.
2. நன்னூல்; நூ. 387, உரை.
3. தொல்; செய்யுள் : 470, 547 உரை.
4. தொல்; செய்யுள் : 235 உரை.
5. தொல்; செய்யுள் : 149, 158 உரை.
6. **அகவலுங் கலிப்பாவும் பரிபாடலும்**
**பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறா**
**மிகுத்துடன் றொடுப்பன மேற்கணக் கெனவும்**
**வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்**
**எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே.**

— பன்னிருபாட்டியல்; 346

திறம்படவுரைப்பது கீழ்க்கணக்கென்றும் குறிப்பிடுகின்றது. தொல்காப்பியனார் கூறும் 'அம்மை' என்னும் வனப்பினுள்[8] கீழ்க்கணக்கு நூல்களைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் அடக்கியுள்ளனர்.

கீழ்க்கணக்கு என்பது, வணிகர்கள் நாளும் தம் வாணிக நிலையங்களில் நிகழும் வரவு செலவுகளைக் குறிக்கும் கணக்கு என்றும், கைக்குறிப்பு (Hand book) என இக் காலத்து அது வழங்கும் என்றும் அறிஞர் உரைப்பர்.[9] 'எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே' என்று திருநாவுக்கரசநாயனார் வழங்கும் தொடரில்[10] கீழ்க்கணக்கு என்னும் சொல் பயின்று வந்துள்ளது. இக் கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டாகும்.[11] இந்நூல்களைச் சங்கம் மருவிய நூல்கள் என்று பழைய உரையாசிரியர்கள் வழிவழி மொழிந்து வருகின்றனர். தொல்காப்பிய உரையாசிரியர் பேராசிரியர் தம் உரைப்பகுதியில், 'பதினெண் கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்தும் ஆறடிக்கும் ஏறாமல் செய்யுள் செய்தார் பிற சான்றோரும்' என்று குறிப்பிட்டுள்ளார். நச்சினார்க்கினியரும்[12] தம் தொல்காப்பிய

---

7. அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
அறம்பொருள் இன்ப மடுக்கி அவ்வத்
திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்.
— பன்னிருபாட்டியல்; 348.

8. தொல்; செய்யுள் : 235.

9. திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை; பதினெண் கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள்: தலைமையுரை, ப. 10.

10. திருநாவுக்கரசர் தேவாரம்; 5 : 21, 8.

11. ''நாலடி நாண்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இந்நிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு''

12. தொல்; செய்யுள் : 175.

உரையில் நெடுநல்வாடை[13] அடிகளை எடுத்துக்காட்டி அந்நூலாசிரியரைப் பிற்சான்றோர் என்று குறிப்பிடுகிறார். இவற்றால் பிற்சான்றோர் என உரையாசிரியர்கள் குறிப்பிடும் பதினெண்கீழ்க்கணக்கு நூல் ஆசிரியர்கள் பாட்டு தொகைகளைப் பாடியோருக்குப் பிற்பட்டவர் என்பது தெளிவாகிறது.

கீழ்க்கணக்கு நூல்களுள் புறப்பொருள் நிகழ்ச்சியாகிய போர்ச்செய்தி பற்றிக் கூறுவது களவழிநாற்பது ஒன்றேயாம். ஏர்க்களம் பற்றியும் போர்க்களம் பற்றியும் பாடப் பெறும் பாடல்கள் களவழி எனப்படும் என்பது தொல்காப்பிய[14]த்தால் அறியப்படும். நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் சூத்திர உரையில்[15] 'களவழி நாற்பது புலவர் களவழியைத் தோற்றுவித்தது' என்று குறிப்பிட்டு, 'ஓஒ உவமன்'[16] எனத் தொடங்கும் இந்நூற் செய்யுளையும் மேற்கோள் காட்டியுள்ளார்.

காலத்தால் முற்பட்ட உரையாசிரியரான இளம்பூரணர் களம் பாடியதற்கு இக்களவழிச் செய்யுளையே எடுத்துக்காட்டியுள்ளார். இந்நூலில் உள்ள நாற்பது பாடல்களும் 'களத்து' என்ற சொல்லை இறுதியில் கொண்டு முடிகின்றன. 'களத்து' என்று முடிவதனாலும் போர்க்கள நிகழ்ச்சிகளைச் சிறப்பித்துள்ளமையினாலும் 'களவழி' என்றும், பாடல் தொகை அளவினால் 'களவழி நாற்பது' என்றும் இந்நூல் வழங்கப்பெறுவதாயிற்று. பிற்காலத்துப் பரணி நூல்களில் களம்பாடியது என்னும் பகுதி இந்நூலை ஒட்டிய வளர்ச்சியெனலாம். போர்க்களமாகிய இடத்தைச் சுட்டி எழுந்ததே இந்நூல் என்பது தண்டியலங்

---

13. நெடுநல்வாடை; 153-156.
14. தொல்காப்பியம்; புறத்திணையியல் : 21.
15. ,, ,,
16. களவழிநாற்பது; 36.

கார[17] உரையாலும், இலக்கணப்பாட்டியலாலும்[18] அறியப் படுகின்றது.

## வரலாற்றுச் செய்திகள்

இந்நூலின் இறுதியில் காணப்பெறும் குறிப்பு பின் வருமாறு:

'சோழன் செங்கணானும் கணைக்காலிரும்பொறையும் போர்ப்புறத்துப் பொருது உடைந்துழி, சேரமான் கணைக் காலிரும்பொறையைப் பற்றிக்கொண்டு, சோழன் சிறை வைத்துழி, பொய்கையார் களம்பாடி, வீடுகொண்ட கள வழி நாற்பது' என்னும் குறிப்பு உள்ளது. இதிலிருந்து, சோழன் செங்கணான் போர் என்னும் இடத்தில் கணைக் காலிரும்பொறையோடு போரிட்டான் என்பதும், போரில் சோழன் வெற்றி பெற்று, சேரமான் கணைக்காலிரும் பொறையைச் சிறைப்படுத்தினான் என்பதும் அப்பொழுது பொய்கையார் என்பார் சோழனது வெற்றியைப் புகழ்ந்து பாடிச் சேரனைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார் என்பதும் தெரிய வருகின்றன.

நூலுள் சோழனுடைய பெயர் புனனாடன்[19], நீர் நாடன்[20], காவிரிநாடன்[21] காவிரிநீர் நாடன்[22], செம்பியன்[23] என்று பொதுப்படையாகச் சுட்டப்படுகிறதே யன்றி அவனது இயற்பெயர் குறிக்கப்படவில்லை.

---

17. தண்டியலங்கார உரை; 5.
18. இலக்கண விளக்கப் பாட்டியல் : 851.
19. களவழிநாற்பது : 1, 9, 10, 14, 16, 20, 25, 26, 27, 28, 31, 36, 37, 39.
20. ,, 3, 8, 17, 22, 32, 41.
21. ,, 7, 12, 35.
22. ,, 24.
23. ,, 23, 33, 38.

செங்கண்மால்[24], செங்கண் சினமால்[25] என்பன சோழன் செங்கணான் பெயரைச் சுட்டியன என்று கொள்ளாமல் பூவைநிலை வகையால் சோழனைச் சேய் என்று சுட்டி யுள்ளதுபோல இங்கும் திருமாலாகக் குறிக்கப்பட்டுள்ளது என்றே கொள்ளவேண்டும் என்பர் அறிஞர்.[26] இது போன்றே சோழனோடு பொருத சேரனின் இயற்பெயர் சுட்டப்படவில்லை. ஒரே ஒரு பாடலில் வஞ்சிக்கோ[27] எனக் குறிக்கப்பட்டு மற்றப் பாடல்களில் பகைவரைக் குறிக்கும் பல்வேறு சொற்களால் சேரன் குறிக்கப் பட்டுள்ளான். 'கொங்கரை அட்ட களத்து' என்ற தொட ரால்[28] கொங்கர் சேரனுக்குத் துணையாக வந்து போரிட்ட செய்தி புலப்படும். சோழன் சேரனைச் சிறை செய்தான் என்ற இறுதிக் குறிப்புக்கு மாறாக 'வஞ்சிக்கோ அட்டகளத்து' என்ற தொடர் சோழன் சேரனைப் போர்க் களத்தில் கொன்றதாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. களவழி நாற்பதின் பழைய உரையும் இத்தொடருக்கு 'வஞ்சிக் கோவைக் கொன்ற களத்து' என்று குறிப்பிட்டுள்ளது. 'போர்' என்ற இடத்தில் இப்போர் நடந்தது என்ற நூலின் அடியில் காணப்படும் இறுதிக் குறிப்புக்கேற்பப் போர்நடந்த இடத்தைப் பற்றிய குறிப்பு நூலினுள் இல்லை ஆயினும் 'காவிரிநாடன் கழுமலம் கொண்ட நாள்' என்ற குறிப்பால்[29] இந்தப் போரின் இறுதியில் சோழன் கழுமலம் என்ற ஊரைத் தனக்குரியதாக்கிக் கொண்டான் என்பது தெரியவரும்.

களவழி நாற்பதின் ஆசிரியர் பொய்கையார் களவழி நாற்பது பாடிச் சேரனைச் சிறையிலிருந்து விடுவித்தார்

---

24. களவழிநாற்பது; 4, 5, 11.
25. ,, 15, 21, 29, 30, 41.
26. பதினெண்கீழ்க்கணக்கு; எஸ். ராஜம் பதிப்பு: பக். 406.
27. களவழிநாற்பது : 39.
28. ,, 14.
29. ,, 36.

என்றே கலிங்கத்துப்பரணி[30], மூவருலா[31], தமிழ்விடு தூது[32] முதலிய பின்னூல்கள் அறிவிக்கின்றன.

களவழிக் கவிதை பொய்கை உரைசெய்ய உதியன்
கால்வழித் தளையை வெட்டி அரசிட்ட அவனும்

என்பது கலிங்கத்துப்பரணி.

மேதக்க பொய்கை கவி கொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திவனும்
—விக்கிரம சோழனுலா : 19-20.

அணங்கு, படுத்துப் பொறையானைப் பொய்கைக்குப் பண்டு
கொடுத்துக் களவிழிப் பாக் கொண்டேன்
—குலோத்துங்க சோழனுலா : 19-20.

நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் கால் தளையை விட்டகோன்
—இராசராச சோழனுலா: 18.

என வருவன மூவருலாப் பகுதிகள். தமிழ்விடுதூது,

சேரமான் தன்னடிக்கு அண்டு தளை விடுத்தாய்; ஏழ் தளைஉன்
பொன்னடிக்கு உண்டு என்பது என்ன புத்தியோ!

என்று சிலேடை நயம்படக் கூறுகிறது.

செய்கை அரிய களவழிப் பா முன் செய்த
பொய்கை ஒருவனால் போம் தரமோ—சைய
மலைச்சிறை தீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக்
கொலைச் சிறை தீர் வேந்துக்குழாம்?

---

30. கலிங்கத்துப்பரணி; 182.
31. விக்கிரமசோழன் உலா; 14; குலோத்துங்க சோழன் உலா : 19-20. இராசராச சோழன் உலா : 18.
32. தமிழ்விடு தூது; 56.

என வரும் ஒரு பழம் பாடலை நச்சினார்க்கினியர் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.

இங்ஙனம் பிற நூல்களும், தனிப்பாடலும், நூல் இறுதியிலுள்ள குறிப்பை ஒத்து அமைதலின், பொய்கையார் களவழிநாற்பது பாடிச் சேரமானைச் சிறையிலிருந்து விடுவித்தார் என்ற செய்தி உண்மையொடுபட்டதாகலாம்.

இச் செய்திக்கு மாறுபட்டதொரு குறிப்பு, 'குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாட்டின்[33] பழைய குறிப்பில் காணப் படுகிறது. அது,

**'சேரமான் கணைக்காலிரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போர்ப்புறத்துப் பொருது, பற்றுக் கோட் பட்டு,**
**குடவாயிற் கோட்டத்துச் சிறையில் கிடந்து, 'தண்ணீர்தா' என்று, பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண் டிருந்து,**
**உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு' — என்பது.**

இக் குறிப்பில் பொய்கையாரைப் பற்றிய செய்தியும், சிறைவீடு கொண்ட குறிப்பும் இல்லை. களவழிக் குறிப்பிற்கு மாறாக, சேரமான் கணைக்காலிரும்பொறை சிறைக்கோட்டத்தில் கிடந்து மானத்தால் இறந்து பட்டதாகக் காணப்படுகிறது. களவழிக்குறிப்புடன் இது மாறுபட்டது அன்று என்று காட்ட முற்பட்டோரில் சிலர், 'துஞ்சிய' என்பதற்கு வேறு வகையாகப் பொருள் கூறலாயினர். டாக்டர் உ. வே. சாமிநாதையர் 74ஆம் புறப்பாட்டின் அடிக்குறிப்பில், 'துஞ்சிய என்பதற்கு மூர்ச்சித்த என்று பொருள் கொள்ளவேண்டும்போலும்!' என்று குறித்துள்ளார். மேலும், தமது 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற நூலில், 'துஞ்சிய என்ற சொல் இறந்த என்றபொருளையே மிகுதியும் தருவதாயினும் இங்கு

---

33. புறநானூறு; 74.

மூர்ச்சித்த என்று பொருள் கொள்ளவேண்டும்' என்று குறித்துள்ளார் என உறுதியாக எழுதியுள்ளார்.[34] இ. வை. அனந்தராமையர், 'துஞ்சிய என்பதற்கு உறங்கிய என்று பொருள் கொள்ளலாம்' என்பர்.[35] துஞ்சிய என்பது இறந்த என்னும் பொருளிலேயே மிகுதியாக வருதலின், இங்கும் இறந்த என்று பொருள் கோடலே நேரிதாம்.

தமிழ் நாவலர் சரிதையில், 'சேரன் கணைக்காலிரும் பொறை செங்கணானால் குணவாயிற் கோட்டத்துத் தளைப்பட்ட போது பொய்கையாருக்கு எழுதி விடுத்த பாட்டு' என்று குறிப்பிட்டு, 'குழவி இறப்பினும்' என மேற் குறித்த புறப்பாடலைக் கொடுத்து, அதன் பின்னர், 'இது கேட்டுப் பொய்கையார் களவழி நாற்பது பாடச் செங்கணான் சிறைவிட்டு அரசளித்தான்' என்று அந் நூலைத் தொகுத்தவர் எழுதியுள்ளார். இதனால், இந் நூலாசிரியர் புறநானூற்றுக் குறிப்பையும், களவழி நாற்பதின் குறிப்பையும் ஒன்றாக இணைக்க முயன் றுள்ளார் என்பதும் புலனாம்.

அகநானூற்றுப் பாடல் ஒன்றில்[36] சோழன் ஒருவன் கணையன் என்பானை வென்று கழுமலம் கொண்ட செய்தி வந்துள்ளது. இதன் பழைய உரை, 'நன்னன் முதலாயினார் சேரர் படைத்தலைவர்; கணையன் சேரன் படை முதலி; முன் சொன்னவர்க்குப் பிரதானி. கழுமலம் ஓர் ஊர்' என்று குறித்துள்ளது. பிறிதோர் அகப்பாடலில்[37] கணையன் என்ற பெயருடைய மல்லன் ஒருவன் குறிப்பிடப் பெறுகிறான். இந்த இரு பாடல்களிலும் சுட்டப்பெறும்

34. சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் : ப. 94.
35. களவழிநாற்பது; அனந்தராம ஐயர் பதிப்பு, முகவுரை: ப. 12.
36. அகநானூறு; 44.
37. ,, ; 386.

கணையன் என்பானுக்கும் கணைக்காலிரும்பொறைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. 'கணையன் அகப்படக் கழுமலம் தந்த' என்பது கணைக்காலிரும்பொறையோடு தொடர்புடையது போலக் காணப்படினும் அப்பாடலில் குறித்த செய்திகள் தெளிவின்றி யிருக்கின்றன. இது களவழி நாற்பது குறிக்கும் போரைக் குறித்ததாகக் கொள்ள முடியாது.

சோழனுக்கும் சேரனுக்கும் போர்நிகழ்ந்த இடமாகிய போர் என்பது பற்றித் தெரியவரும் செய்திகளை நோக்கு வோம். இந்த ஊர் சோழ நாட்டில் உள்ளது எனச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

அகநானூற்றுப் பாடல்[38] ஒன்றிலும் நற்றிணைப் பாடல் ஒன்றிலும்[39] பழையனுக்கு உரியதாகப் போர் என்ற ஊர் குறிக்கப்படுகிறது. இப்பழையன் சோழனுக்குக் கீழ்ப் பட்ட ஒரு தலைவன் ஆவன். இவனுக்கு உரியதாகக் கூறப்பெறும் போர் என்னும் ஊர் நீர்வளம் நிறைந்தது என்பதும், சோழநாட்டில் உள்ளது என்பதும் மேற்குறித்த செய்யுட் பகுதியால் அறியலாம். திருப்போர் என்பதில் திரு என்பதை அடைமொழியாகக் கொள்ளல் வேண்டும். இங்ஙனம் கொள்ளாது திருப்போர் என்பதே ஊர்ப் பெயர் என்றும், அது திருப்பூர் என இக்காலத்து வழங்கும் கொங்குநாட்டு ஊராக இருக்கலாம் என்று கருதுவாரும் உண்டு.[40] போர் என்னும் பழையனது ஊர் நீர்வளம் செறிந்தது என்று அகநானூற்றுப்பாடல் குறிப்பதனால், அது போர் நிகழ்தற்கு ஏற்ற இடமாதல் இல்லை. எனவே அது சேரனுக்குரித்தான ஓர் ஊராக இருத்தல் கூடும். புறப்பாடல் ஒன்றில் பழைய குறிப்பு 'சேரமான்

38. அகநானூறு; 326.
39. நற்றிணை; 10.
40. பதினெண்கீழ்க்கணக்கு; எஸ். ராஜம் பதிப்பு: ப. 408.

குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளியொடு போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்து, ஆரம் கழுத்தன்னதாக உயிர் போகாது கிடந்தானைக் கழாத்தலையார் பாடியது' என்று உள்ளது. இக்குறிப்பினால் போர் என்னும் களம், சேர சோழ நாடுகளுக்கு இடைப்பட்டதாய், இரு பேரரசர்களும் வழிவழியாகப் போர் செய்தற்கு மேற்கொண்ட இடமாக அமைந்திருந்தது போலும்!

குலோத்துங்க சோழன் உலாவின் பழைய உரையில், 'களவழி கொண்டோன் தஞ்சை விசயாலயன்' என்பது குறிக்கப் பெற்றிருக்கிறது. எனவே, விஜயாலயன் காலமாகிய கி.பி. 850 களவழிநாற்பதின் காலம் என்பர் திரு. வையாபுரிப்பிள்ளை.[41] மேலும் அவர் பெருங்கதையிலும் சிந்தாமணியிலும் வரும் ஒரு சில கருத்துகள் இந்நூலோடு பெரிதும் ஒத்துள்ளமையும் கவனிக்கத் தக்கது. யாவற்றையும் கூர்ந்து நோக்கின், இது பிற்காலச்சோழர் காலத்தில் தோன்றிய நூலாதல் கூடும் என்று ஊகிக்கலாம் என்பர்.[42]

ஆயினும், சோழன் செங்கணான், சேரன் கணைக்காலிரும்பொறை பொய்கையார் ஆகிய மூவரும் கடைச் சங்க காலத்தவரே என்று திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார்[43] அவர்களும், திரு டி. வி. சதாசிவப் பண்டாரத்தார்[44] அவர்களும் கூறுவர்.

## பொய்கையார்

களவழிநாற்பது பாடியவர் பொய்கையார் என்பவராவர். இவரது பெயர் இயற்பெயரா, காரணப் பெயரா

---

41. இலக்கிய மணிமாலை; ப. 113.
42. History of Tamil Literature, p. 98.
43. களவழி நாற்பது; கழகப் பதிப்பு, முகவுரை: ப. 6.
44. தமிழ் இலக்கிய வரலாறு I; ப. 71-72.

என்பது துணியக் கூடவில்லை. காரணப் பெயராயின், இவரைப் பொய்கை நாட்டில் தோன்றியவர் என்றோ, அல்லது பொய்கை ஊரினர் என்றோ கொள்ளலாம். சேரன் பொருட்டு இவர் களவழிநாற்பது பாடலின் இவரும் சேரநாட்டைச் சார்ந்தவராகலாம். சங்கத் தொகை நூல்களில் மூன்று பாடல்களைப் பாடியவரும் சேரமான் கோக்கோதை மார்பனைப் புகழ்பவரும் ஆகிய பொய்கையார் இவருக்கு முந்தியவராதல் வேண்டும். அப் பொய்கையார் தொண்டி என்னும் ஊரைச் சார்ந் தவர்.

**கோதை மார்பின் கோதை யானும்......**
**கள் நாறும்மே கானல் அம் தொண்டி**
**அஃது எம்ஊரே; அவன் எம் இறைவன்**[45]

என்பது அவர் வாக்கு. அவர் பாடிய நற்றிணைப் பாடலிலும்[46] தொண்டியைப் பற்றிய குறிப்பு உள்ளது.

முதலாழ்வார் மூவருள் ஒருவராகிய பொய்கை யாழ்வார் மேற்குறித்த இருவரினும் வேறுபட்டவர். அவர் தொண்டைநாட்டுக் கச்சிப் பதியினர். இவரே களவழி நாற்பதின் ஆசிரியர் என்பர் பேராசிரியர் மு. இராகவ ஐயங்கார்.[47] ஆனால்

**'மால் அடியை அல்லால்மற்று எண்ணத்தான்**
**ஆமோ இமை'**[48]

என்றும்,

**'திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன்'**[49]

என்றும்,

---

45. புறநானூறு; 48.
46. நற்றிணை; 18.
47. ஆழ்வார்கள் காலநிலை; ப. 43
48. நாலாயிர திவ்யப் பிரபந்தம் : 31.
49. ,, : 64.

'மாயவனை அல்லால் இறையேனும் ஏத்தாது
என்நா'[50]

என்றும்,

திருமால் பக்தியில் அவர் விஞ்சி நிற்பவர். அப்படிப் பட்டவர், சோழ மன்னனைப் பாடியிருக்க மாட்டார் என்பர். ஆனால் திருமங்கையாழ்வார் திருநாறையூர் பதிகத்தில்[51] கோச்செங்கணானைப் புகழ்வதால் பொய்கை யார் ஆழ்வாரே என்பர் பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி.[52] பதினெண்கீழ்க்கணக்கிலும் வழங்காத வட சொற்கள் பல அவரது அந்தாதியில் உள்ளன. யாப் பருங்கல விருத்தியுரையில் பொய்கையார் வாக்காகச் சில பாடல்கள் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றுள்ளன. பன்னிரு பாட்டியலில் பொய்கையார் பெயரால் சில சூத்திரங்கள் உள்ளன. இந்த இரு நூல்களிலும் குறிக்கப் பெற்றவர் முன் குறித்த மூவரினும் வேறானவர் என்றே கொள்ள இடமுண்டு. எனவே, பொய்கையார் என்னும் பெயருடையார் பலர் பல்வேறு காலத்தில் வாழ்ந்துள்ளமை புலனாம். அவர்களுள் களவழிநாற்பது பாடிய பொய்கை யாரை இடைக்காலத்தில், சீவகசிந்தாமணி, பெருங்கதை ஆசிரியர்களின் காலத்தை ஒட்டி வாழ்ந்தவராகக் கொள்ளலாம்.

## நூலாராய்ச்சி

போர்க்களத்தின் கொடுமை, யானைப்போர், தீரர் களின் நெஞ்சுரம் முதலியன மிகச் சிறப்பாகப் பேசப் பட்டுள்ளன. இவையெல்லாம் பொருத்தமான உவமை (apt similes) வழி விளக்கப்படுகின்றன. இந்நூல், இடைக் கால ஆங்கிலத் துன்பியல் நூல்களிற் காணப்படும்

---

50. நாலாயிர திவ்யப் பிரபந்தம்; 94.
51. பெரிய திருமொழி; 6.
52. The Colas; p. 52.

ஒரு வகையான நகை (Satire) யினை நினைவூட்டுகின்றது என்றும், பிற்காலப் பரணி நூல்களுக்கு வழி காட்டியாய் அமைந்ததென்றும் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் குறிப்பிடுவர்.[53]

## போர்க்கால வருணனை

### யானை விளைத்த வீரம்

களவழிநாற்பதில் பாதிக்கு மேற்பட்ட பாடல்கள் யானை விளைத்த வீரத்தை விளங்கக் குறிப்பிடுகின்றன.[54] யானையோடு யானை வந்து நெருக்குகின்றன. போர்க் களத்தில் யானைகள் மன்னர் குடைகளை அழித்துப் பாய்கின்றன; அவை புகுந்த இடமெல்லாம் பிணங்கள் விழுகின்றன.[55] சிவந்த உதிரச் சேற்றில் செல்லும் யானைகள் வெகுண்டு தரையை மிதித்தலால் இடங்கள் குழிகின்றன.[56] போர்க்களத்தில் தேரைச் சிதைத்து அத்தேரின் உருளையினை யானைகள் சுமந்தெழுந்தன.[57] பகைவரின் குருதி படிந்து கருங்குன்று போன்ற யானைகள் செங்குன்றாக மாறி நிற்கின்றன.[58] கடிய அம்புகள்

---

53. A History of Tamil Literature; p. 62.
"His work often reminds us of the kind humours which one meets with in the medieval English tragedies. The Parani Literature of later times received its inspiration from this poem."
54. களவழி நாற்பது; 1, 2, 3, 4, 6, 7, 8, 10, 11, 12, 13, 14, 15, 16, 19, 21, 22, 23, 25, 27, 30, 31, 35, 37, 38, 48, 41.
55. ,, 25.
56. ,, 27.
57. ,, 4.
58. ,, 7.

பாய்ந்து யானைகளின் உடலில் ஊடுருவி மலைகளில் குருவிக்கூட்டங்கள் மொய்த்திருப்பதை ஒத்துள்ளன.[59] பல அம்புகள் எவ்வுறுப்புகளிலும் பாய்தலால் யானைகள் தளர்ந்து வருந்துகின்றன.[60] இடைவிடாத அம்புகள் தைக்கப்பெற்ற யானைகள் தீயின் நிறம்[61] போன்ற உதிரத்தை ஒழுக்குகின்றன. துதிக்கைகள் துண்டிக்கப்பட்டு பவளத்தைச் சொரியும் பையைப்போல ஒளியுடைய சிவந்த உதிரத்தை உமிழ்ந்தன.[62] வெட்டுப்பட்ட யானைகள் இடி விழுந்த பாம்பைப் போலப் புரண்டன. யானை களின் கொம்பின் நடுவே விட்டெறிந்த வேல் அதன் காம்பு குளித்தலால் வேலின் கடைமணி விளங்க யானை களெல்லாம் மூன்று கொம்புகளை உடையவாயின.[63] மார்பில் வேல்கள் அழுந்திப் புண்மிகுந்து யானைகள் தளர்ந்தன; பண்டை வலி இழந்தன.[64] வீரர்களின் வாளால் துண்டிக்கப்பட்ட யானையின் கைகள் நிலத்தில் விழுந்து கிடக்கும் குடைகளின் அருகே கிடக்கும் காட்சி சந்திரனைத் தீண்டுகின்ற பாம்பை ஒத்தன.[65] போர் வீரர்களின் படைக்கலங்களால் தாக்குண்டு உதிர இருளில் மூழ்கி எழுந்த யானைகள் செக்கர் வானத்துக் கரிய மேகத்தை ஒத்தன.[66] வீரர்கள் எறிந்த வேலினால் யானையின் நெற்றி பிளந்தது.[67] வேல்கள் குளித்த யானைகள் வீழ்ந்து கிடந்த காட்சி உருக்கம் நிறைந்த

---

59. களவழி நாற்பது; 8.
60. ,, 10.
61. ,, 14.
62. ,, 13.
63. ,, 19.
64. ,, 21.
65. ,, 22.
66. ,, 23.
67. ,, 31.

தாய் இருந்தது.[68] வெள்ளியால் செய்த வெள்ளிய கலப்பையால் நிலத்தை உழுதல் போலப் போர்க்களத்தில் யானைகள் முகம் கவிழ்ந்து நிலத்தைச் சேர்ந்தன.[69] மேலும் அவைகள் வீரர்கள் எறிந்த வேலால் குத்தப்பட்டுக் கால்கள் தளர்ந்து செவிகளைச் சாய்த்து விழுந்து கிடந்த காட்சி பெரிய நிலமகள் உபதேசிக்கும் உபதேச மொழி களைக் கேட்டலை ஒத்தன.[70] பகையரசர்கள் சிந்திய உதிர வெள்ளம் கொம்புகளையுடைய யானைகளை இழுத்தன.[71] வெள்ளத்தைப் போல் பரந்த உதிர வெள்ளம் இறந்த யானைகளை இழுத்துச் சென்றது.[72]

சேரனுக்கு யானைப்படைகள் மிகுதியான காரணத் தால் போரில் பொருத செயலும் அழிந்த நிலையும் விளங்க வருணிக்கப்பட்டன. போர்க்களத்தில் இடி போன்று ஒலிக்கிறது முரசு;[73] மேகத்தின் முழக்கம் போலவும் முழங்குகின்றது.[74] போர்க்களத்தில் பகைவரின் உதிரத்தில் படிந்துண்ட காகங்கள் தம் கருநிறத்தை இழந்து செந்நிறத்தைப் பெற்றன.[75] குதிரைகள் உதைத்த தால் பகைவரின் குடைகளெல்லாம் கீழ்மேலாயின.[76] அவை வீரமுடையவரால் நடத்தப்பட்டு மனம் செருக்கி யானைகளின் மத்தகத்தில் பாய்ந்தன.[77] அழகிய மேனியையுடைய நிலமகள் சிவந்த போர்வையைப் போர்த்தவள் போலச் செந்நிற மெய்தினாள்.[78]

---

68. களவழி நாற்பது; 35.
69. ,, 40.
70. ,, 41.
71. ,, 37.
72. ,, 30.
73. ,, 2.
74. ,, 3.
75. ,, 5.
76. ,, 36.
77. ,, 16.
78. ,, 32.

வேலுடன் வாளும் போர்க்களத்தில் வீசிச் சுழன்றன.[79] குதிரை வீரர்களைக் காலாட்படையினர் வென்று காலைத் துணித்தனர். வெட்டுண்ட கால்கள் நிலத்தில் விழுந்தன.[80] போரில் இருதரப்பினரும் எதிர்த்துப் பொருது படைகளை வீசுதலால் வீழ்ந்த குருதி கார்த்திகை விழாவில் தோன்றும் விளக்கினை ஒத்தன.[81] போர்க்களத்தில் இறந்தவர்களுடைய பிணக்குவியலை உதிரவெள்ளம் இழுத்துச் சென்றது.[82] கழுகுகள் சிறகுகளை விரித்து உதிரத்தோடு பிணங்களைக் கொள்ளை கொண்டு சென்றன.[83] வீரர்கள் வாளால் எறிதலால் பூமியில் கரிய தலைகள் புரளுகின்றன.[84] அறுபட்ட வீரர்களின் நீண்ட கைகளை நரிகள் தமது வாயில் கவ்விச் செல்கின்றன.[85] பருந்தின் சேவல்களும் இதே செயலைச் செய்கின்றன.[86] விழுந்து பட்ட வீரர்களின் குடல்களையும் குறுநரிகள் கவ்விக் கொண்டு இழுக்கின்றன.[87] மரங்கள் மிகுந்த சோலையில் காற்று வேகமாக வீச அதற்கு அஞ்சி வேறு வேறாக ஓடும் மயிலின் கூட்டம்போலக் கணவனை இழந்த பெண்கள் நான்கு திசைகளிலும் சிதறி ஓடினர்.[88]

இவ்வாறு களவழிநாற்பதில் போர்க்களம் மிகக் கொடுமையாக வருணிக்கப்பட்டுள்ளது.

---

79. களவழி நாற்பது; 33.
80. ,, 9.
81. ,, 17.
82. ,, 18.
83. ,, 20.
84. ,, 24.
85. ,, 28.
86. ,, 26.
87. ,, 34.
88. ,, 29.

## பாடலின் அடி வரையறை

களவழி நாற்பதில் 41 பாடல்கள் அடங்கியுள்ளன. அவற்றுள் நான்கு அடிகளைக் கொண்ட பாடல்கள் இருபத்திரண்டாகும்,[89] ஐந்து அடிகளால் இயன்ற பாடல்கள் பதினேழாகும்.[90] ஆறு அடிகளைக் கொண்ட பாடல்கள் இரண்டாகும்.[91]

## பகைவரைக் குறிப்பிடும் சொற்கள்

அடங்கார்[92], உடற்றியார்[93], ஒன்னார்[94], காய்ந்தார்[95], கூடார்[96], செற்றார்[97], தப்பியார்[98], துன்னார்[99], தெவ்வர்[100], தெவ்வேந்தர்[101], நண்ணார்[102], நேரார்[103], பொருந்தார்[104], புல்லார்[105], மாற்றார்[106],

---

89. களவழி நாற்பது; 3, 4, 5, 7, 9, 10, 13, 14, 15, 18, 19, 20, 25, 27, 29, 30, 30, 31, 32, 37, 38, 39, 40.
90. ,, 1, 2, 6, 8, 11, 12, 16, 17, 21, 23, 24, 26, 33, 34, 35, 36, 41.
91. ,, 22, 28.
92. ,, 30.
93. ,, 18.
94. ,, 31.
95. ,, 32.
96. ,, 12, 22, 41.
97. ,, 23.
98. ,, 1, 3, 5.
99. ,, 38.
100. ,, 10, 26, 33, 37.
101. ,, 6.
102. ,, 8, 24, 28.
103. ,, 9, 20.
104. ,, 7.
105. ,, 4.
106. ,, 36.

மைந்திகந்தார்[107], மேவார்[108] என்னும் சொற்கள் பகைவரைக் குறிக்கப் பொய்கையார் இந்நூலில் கையாண்டுள்ளார் என்பது அவருடைய சொல்லாற்றல் திறனையும் கூரிய அறிவு மேம்பாட்டினையையும் புலப்படுத்தி நிற்கும்.

## சோழனைக் குறிக்கும் தொடர்கள்

சேய்[109], செங்கண்மால்[110], செங்கட்சினமால்[111], புனல்நாடன்[112], புனல்நீர்நாடன்[113], நீர்நாடன்[114], காவிரிநாடன்[115], செம்பியன்[116], செழியன்[117] என்னும் பெயர்களால் சோழன் குறிக்கப்பெறுகின்றான்.

## சேரனைக் குறிக்கும் தொடர்கள்

'புனல்நாடன் கொங்கரை அட்டகளத்து'[118], 'புனல் நாடன் வஞ்சிக்கோ அட்ட களத்து'[119] என்ற தொடர்கள் கொண்டு, சேரமன்னனுடன் சோழமன்னன் போரிட்டு வென்றான் என்பது குறிப்பிடப்படுகின்றது.

## கழுமலத்தில் போர் நடந்ததற்குச் சான்று

'காவிரிநாடன் கழுமலம் கொண்ட நாள்' என்ற தொடர் கொண்டு கழுமலம் என்னுமிடத்தில் போர்

---

107. களவழி நாற்பது; 11.
108. ,, 25, 27, 36.
109. ,, 13, 18, 34.
110. ,, 4, 5, 11.
111. ,, 15, 21, 29, 30, 40.
112. ,, 1, 2, 9, 10, 14, 16, 20, 25, 26, 27, 28, 31, 36, 37, 39.
113. ,, 8, 17, 22, 32, 41.
114. ,, 3, 19.
115. ,, 7, 12, 35.
116. ,, 23, 33, 38.
117. ,, 6.
118. ,, 14.
119. ,, 39.

நிகழ்ந்தது என்றும் அப்போரில் சோழன் வெற்றிபெற்றான் என்றும் தெரியவருகின்றன. இக்கழுமலம் கொங்கு நாட்டிலோ கொச்சி நாட்டிலோ இன்றிருத்தல் வேண்டுமென்றும், கொச்சிநாட்டில் கணையனூர் என்ற பெயரால் வழங்கும் ஒரு பேரூர் இன்று உளது என்றும் கூறுவர். மேலும் கழுமலம், குட்ட நாட்டில் வாழ்ந்தவனும் சேர வேந்தற்குத் தானைத்தலைவனுமாக விளங்கியவனிடம் இருந்தது. குடவாயிற் கீரத்தனார் அகநானூற்றுப் பாடலொன்றில்[120] கழுமலம் கணையன் ஆட்சியில் இருந்தது என்று சுட்டுகின்றார். இக் கழுமலம் சேரர்க்குரியதென்பது பிறிதோர் அகநானூற்றுப் பாட்டால்[121] தெரியவருகிறது. திருவிதாங்கூர் கல்வெட்டுகள் இக் கழுமலப் போரில் கலந்து பொருத நன்னனேற்றை முதலியோர்க்குரிய ஊர்ப் பெயர்களைக்[122] குட்டநாட்டுக் குரியவாகக் குறிக்கின்றன. இதனால் இக்கழுமலம் குட்டநாட்டின்கண் விளங்கிய ஊர் என்றும் அதுவே கணையனுக்குப்பின் கணையனூர் எனப் பெயர் பெற்றதென்றும் பேராசிரியர் ஔவை. துரைசாமிப் பிள்ளை அவர்கள் குறிப்பிடுவர்.

## நாற்படை

யானைப்படை பற்றிய குறிப்பு இருபத்தைந்து பாடல்களிலும்[123], குதிரைப் படை பற்றிய குறிப்பு இரண்டு பாடல்களிலும்[124], தேர்ப்படை பற்றிய குறிப்பு ஒரு

---

120. அகநானூறு; 44.
121. ,, ; 270.
122. T. A. S. Vol. III பக். 10, 20.
123. களவழி நாற்பது; 1, 2, 3, 4, 6, 7, 8, 10, 11, 12, 13, 14, 15, 16, 19, 21, 22, 23, 25, 27, 30, 31, 35, 37, 38, 40, 41.
124. ,, 16, 36.

பாடலிலும்[125], காலாட்படை பற்றிய குறிப்பு ஒன்பது பாடல்களிலும்[126] களவழி நாற்பதில் இடம் பெற்றுள்ளன.

## படைவீரர் மறம்

வீரர்கள் யானையின் துதிக்கையை வெட்டுகின்றனர்.[127] குதிரையினை ஊக்கத்துடன் செலுத்தி ஆரவாரத்தினை எழுப்புகின்றனர்.[128] நேருக்கு நேர் நின்ற பகைவர்களை வெட்டிச் சாய்க்கிறார்கள்.[129] யானையின் நெற்றியினை வேலால் பிளக்கிறார்கள்.[130] வீரர் வெட்டு கையினாலே தரையில் விழுந்து புரளும் தலைகள் சோலையில் பெருங்காற்று புகுந்து அலைக்கழிப்பதைப் போன்று உள்ளது.[131] வீரர் இங்குமங்கும் ஓடிப் பகைவீரர்களின் கைகளைத் துணிக்கின்றனர்.[132] போர்க்களத்தில் தோற்று ஓடாத உயர்ந்த குறிக்கோளும் மனம் செருக்கிய பெருமையும் உடையவர்கள் அவர்கள்.[133] யானைப்படைகளை வீரர்கள் குத்தி நிலத்தில் சாய்க்கிறார்கள்.[134] குதிரைமேல் வரும் வீரர்களைக் காலற்று விழச் சாய்க்கிறார்கள்.[135]

---

125. களவழி நாற்பது; 4.
126. ,, 13, 16, 17, 23, 24, 26, 28, 31, 41.
127. ,, 13.
128. ,, 16.
129. ,, 17.
130. ,, 23, 31.
131. ,, 24.
132. ,, 26.
133. ,, 28.
134. ,, 41.
135. ,, 9.

## படைக்கலங்கள்

குடை: அக்காலத்தில் அரசர்க்கு வெண்கொற்றக்குடை இருந்த செய்தி மூன்று பாடல்களால் தெரியவருகிறது. கொல்லும் தொழில் வல்ல யானைகள் குடையை முறிக்கின்றன.[136] அவ்வெண்கொற்றக்குடை துண்டிக்கப்பட்ட யானையின் துதிக்கையை அடுத்து நிலத்தில் விழுந்து கிடக்கின்றன.[137] வெள்ளைக் குடைகள் காம்பு முறிந்து செந்தசையை முகந்து செம்பஞ்சுக்குழம்பு பெய்த வட்டில் போன்று காட்சி தருகின்றன.[137(a)]

கொடி: யானைகளின்மேல் கொடி பறந்தன. யானைகள் துதிக்கை வெட்டப்பட்டு நிலத்தின்மீது புரண்டபோது அவைகளின் மீதிருந்த கொடிகள் வானத்தைத் தடவுவதுபோல் விளங்கின.[138]

முழவு: பெருமை பொருந்திய முழவு என்ற செய்தி ஒரு பாடலால் புலப்படுகின்றது.[139]

முரசு: இடிபோல் ஒலிக்கும் முரசு[140], மேகம்போல் ஒலிக்கும் முரசு[141], பூந்தார் புனையப்பட்ட முரசு[142],

---

136. களவழி நாற்பது; 15.
137. ,, 22.
137(a) ,, 39.
138. ,, 25.
139. ,, 20.
140. ,, 2.
141. ,, 3.
142. ,, 32.

வலியிழந்த பகைவர் போர்க்களத்தில் போகவிட்ட முரசு ன்று முரசு பலவாறாகப் பேசப்பட்டுள்ளது.[143]

**எஃகம்:** தெரிந்தெடுக்கப்பட்ட வேல்[144], நீண்ட வேல்[145], ஒளிவிடுகின்ற வேல்[146] என்றெல்லாம் வேல் பேசப்பட்டுள்ளது.

**கணை:** தெரிந்தெடுக்கப்பட்ட கணை[147], கண்ணைப் போன்ற கொடிய கணை[148], பலவாகிய கணை[149], ஒழிதல் இல்லாத கணை[150] என அம்பு குறிப்பிடப் பட்டுள்ளது.

**வாள், வேல், கேடகம்:** ஒளிவிடுகின்றன வாள்[151] என்று வாளும் வெற்றி பொருந்திய வேல்[152], பெருமை சான்ற வேல்[153] என்று வேலும் தடக்கையில் தாங்கிய கேடகம்[154] என்று கேடகமும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**கார்த்திகை விழா:** கார்த்திகை மாதத்தில் விளக்கேற்றி

---

143. களவழி நாற்பது; 11.
144. ,, 5.
145. ,, 13.
146. ,, 34.
147. ,, 5.
148. ,, 8.
149. ,, 10.
150. ,, 12.
151. ,, 22.
152. ,, 23.
153. ,, 35.
154. ,, 28.

வீட்டினை அலங்கரிக்கும் செய்தி ஒரு பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளது.[155]

## உவமைகள்

நெஞ்சை அள்ளும் நீர்மையினவாய்க் களவழி நாற்பதின் ஒவ்வொரு பாடலும் ஓர் உவமையினைக் கொண்டு திகழ்கின்றது. சான்றாகச் சில காண்போம்:

போர்க்களத்தில் பகைவரின் உதிரத்தில் படிந்துண்ட காகங்கள் தம்முடைய இயல்பான கருநிறத்தை இழந்து செம்போத்துப் பறவையின் புறத்தை உடையவாகிச் சிச்சிலிக் குருவி போன்ற வாயை உடையவாயின.[156] துதிக்கை வெட்டப்பட்டு நிலத்தில் புரளும் யானைகள் இடியால் தாக்குண்ட பாம்பைப் போலப் புரண்டன.[157] கருங்குன்று போன்ற யானை சிவந்த ரத்தத்தில் படிவதால் செங்குன்றை நிகர்த்தன.[158] போர்க்களத்தில் பொய்கைக் கரை உடைந்து நீர்பரந்த இடமெல்லாம் நெய்தல் பூக்களின் நடுவே வாளை மீன்கள் பிறழ்தல்போல வேலுடன் வாளும் பிறழ்ந்தன.[159] குதிரைமேல் இருந்த வீரர்களைக் கீழ்நின்ற காலாட்கள் சென்று துணித்த அளவில் காலுக்கு இட்ட செருப்போடு அறுபட்ட வீரக்கழலணிந்த கால்கள் பெரிய கடலுள் இரையில்லாத சுறாமீன்கள் பிறழ்வதை ஒத்தன.[160] போர்வீரர்கள் துணித்த கைகளைத் தம் வாயில் கவ்விக் கொண்டு மேலெழுந்த சிவந்த பருந்தின் சேவல்கள் பாம்பைக் கவ்விக்கொண்டு வானில் பறந்து செல்லும்

---

155. களவழி நாற்பது; 17.
156. ,, 5.
157. ,, 13.
158. ,, 7.
159. ,, 33.
160. ,, 9.

கருடனைப்போல் தோன்றின.[161] போரில் மலைகள் கலங்கப் பாயும் மலைகளைப்போல யானைகள் பாய்வதால் அவற்றின்மீது கட்டப்பட்டுள்ள கொடிகள் மேலெழுந்து வானத்தைத் துடைப்பதை ஒத்து விளங்கின.[162] போரில் இருதிறத்தினரும் எதிர்த்துப் பொருதுப் படைக்கலங்களை வீசுதலால் கொட்டிய குருதி கார்த்திகை விழாவில் தோன்றும் விளக்கினை ஒத்தன[163].

இவ்வாறு பல பாடல்கள் அமைந்து இந்நூலானது நல்ல உவமை நயத்துடன் சொற்செறிவும் பொருட் செறிவும் கொண்டு துலங்குகின்றன.

---

161. களவழி நாற்பது; 26.
162. ,, 25.
163. ,, 17.

# காப்பியங்கள்

காப்பியம் என்பது ஒரு நிகழ்ச்சியையோ அல்லது பல நிகழ்ச்சிகளையோ உள்ளடக்கிய நீண்டதொரு கதையாகும். இது பெரும்பாலும் பேரரசர் மற்றும் சிற்றரசர்களின் வீர தீரச் செயல்களை எடுத்துக் கூறுவதாக அமையும். மேலும் காப்பியமாவது சொல்லப்பட்டிருக்கின்ற முறையாலும், மொழி நடைச்சிறப்பினாலும் ஒரே சமயத்தில் படிப்பவர் களுடைய கவனத்தை ஈர்க்கக் கூடியது. காப்பியம் ஏதேனும் ஒரு நீதியைப் புகட்டுவதாக அமையும்; அது அவ்வாறு அமையவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. காப்பிய முடிவு எதிர்பாராத ஒரு துன்ப அல்லது இன்ப நிகழ்ச்சியோடு முடியலாம். உலகில் தோன்றியுள்ள பெரும்பான்மையான காப்பியங்கள் மரபுவழிப்பட்ட இக் காப்பிய இலக்கணத்திற்கு ஏற்றதாக இருக்கின்ற நிலையில் சிலப்பதிகாரக் காப்பியம் மரபு வழிக் காப்பிய இலக்கணத் திலிருந்து சிற்சில மாறுதல்கள் பெற்று இலங்குகின்றது. அது நீண்ட காப்பியமன்று; வர்ஜிலின் ஏனியட் காப்பியத் தில் பாதியளவே உடையது. பேரரசர் அல்லது சிற்றரசர் வாழ்க்கை குறித்த காப்பியமன்று; பொதுமக்களுள் ஒரு வரது வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நீண்ட கதைப் போக்கில் கூறுகின்றது. இந்நூல் வலிமை வாய்ந்த அரசனின் தீரச்செயல்களைக் கூறவில்லை. சிலப்பதிகாரம் மனிதக் குறைபாடுகளைக் கொண்ட அதே நேரத்தில் சிறந்த பண்பாடும் நல்ல குணங்களும் உடைய வசதி நிறைந்த இளம் வாணிகன் ஒருவனின் வாழ்க்கையில் நேர்ந்த ஊழ் வினைப் பயனை வலியுறுத்துகின்றது. அடக்கமும், அழகும், நாணமும் உடைய பன்னிரண்டு வயதுப் பெண்ணான கண்ணகி, கோவலனுக்கு மனைவியாகின்றாள்; சிறந்த

அழகும் நல்ல குணமும் உடைய நாட்டிய மங்கையான மாதவி, காப்பியத்தில் அறிமுகமாகின்ற நிலையிலேயே கோவலனைத் தன்பால் ஈர்த்து விடுகின்றாள். காப்பியப் போக்கிலே தலைமை மாந்தர் என்னும் நிலை கோவலனிடமிருந்து கண்ணகியைச் சென்று அடைகின்றது. கண்ணகி கற்புத் தெய்வமாக உயர்த்தப்பெறுகின்றாள்; அமைதி வாய்ந்த அவள் தனது கணவன் கொலை செய்யப்பட்டதற்கு நீதி வேண்டிப் பாண்டியன் நெடுஞ்செழியன் அவையிலே வழக்காடும் பொழுதும், மதுரையைத் தீக்கிரையாக்கும் பொழுதும் இதுவரை சந்தித்து இராத கதைத் தலைவியாக உயர்கின்றாள். காப்பிய முடிவிலே கண்ணகி பெண்களுக்கிடையே கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாக ஒளிர்கின்றாள். இந்நிலையில் இக்காப்பிய ஆசிரியரான இளங்கோவடிகளின் தமையனான சேரன் செங்குட்டுவன் கங்கைக்கரையில் வடதிசை மன்னர்களோடு பொருது சிறப்புப் பெறுகின்றான். ஆனால் அச்சிறப்பினைக் கண்ணகியின் தியாகத்திற்கும் பத்தினிக்கோட்டம் அமைப்பதற்கும் காணிக்கை ஆக்குகின்றான். இதனால் சிலப்பதிகாரம் குடிமக்கள் காப்பியம் எனப் போற்றப் பெறுவதைக் காண்கின்றோம்.

சிலப்பதிகாரமென்ற இக்காப்பியம் மற்ற இலக்கியம் போன்றதன்று. இக்காப்பியம் நம் நினைவில் பதியும் வண்ணம் இனிய பாடல்களையும் நாட்டிய மங்கை ஒருத்தியின் கலை நயமிக்க நாட்டியத்தையும், கிராமப்புற மக்களின் கூத்தையும் கொண்டு திகழ்கின்றது. தமிழுக்கே உரித்தான இயல், இசை, நாடகம் என்ற மூன்று கூறுகளையும் இக்காப்பியம் பெற்றிருப்பதால் இதனை 'முத்தமிழ்க் காப்பியம்' என அழைப்பர்.

இவ்வியல் கண்ணகியின் அவல வாழ்க்கை என்னும் நாடகத்தில் சேரநாடும், சேர அரசரும், சேரநாட்டு மக்களும் பங்கேற்ற முறைமையினை வலியுறுத்துகின்றது.

பகுதி 1

# 1. சிலப்பதிகாரம் காட்டும் அரசியல் வரலாறு

சிலப்பதிகார காலத்தில் தமிழ்நாட்டைச் சேர சோழ பாண்டியர் என்ற முப்பெரு வேந்தர்கள் ஆண்டுவந்தனர். சேர நாட்டின் தலைநகர் வஞ்சி. சேரன் செங்குட்டுவன் அங்கிருந்து சேரநாட்டினை ஆண்டு வந்தான். சோழர் தலைநகரம் புகார் ஆகும். கரிகால் வளவனுக்குப் பின்னர் மாவண்கிள்ளி அல்லது கிள்ளிவள்வன் ஆண்டு வந்தான். மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய நாட்டை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆண்டு வந்தான். பாண்டியர்களது கடற்கரைப் பட்டினமான கொற்கையில் நெடுஞ்செழியனின் இளவல் வெற்றிவேற்செழியன் இளவரசனாக இருந்து வந்தான். தமிழ்நாட்டை அடுத்த ஆந்திர நாட்டில் சதகர்ணிகள் எனப்படும் நூற்றுவர் கன்னர் ஆண்டு வந்தனர். வடநாட்டில் பாலகுமரன் மக்களாகிய கனக விசயர் ஆண்டு வந்தனர். இலங்கைத் தீவினைக் கயவாகு மன்னன் ஆண்டு வந்தான்.

சேர சோழ பாண்டியர்களுடைய இலச்சினை முறையே வில் புலி கயல் ஆகியனவாம். பனையும் ஆத்தியும் வேம்பும் முறையே அவர்களுக்குரிய மாலைகளாகும். சிலப்பதிகார காலத்தே மூவேந்தருள் சேரன் செங்குட்டுவனே படை வலிமையால் மேம்பட்டு விளங்கினான். அவனுடைய ஆணை நாற்புறமும் சென்றது. சோழர் முடி குறித்து உரிமை பாராட்டி ஒன்பதின்மர் கலகம் செய்தபோது அவர்களை ஒடுக்கிச் சோழர் சிம்மாசனத்துக்கு உரியவனா

கிய அவன் மைத்துனன் கிள்ளிவளவனுக்கே வழங்கினான்.[1] மேலும் பல வெற்றிகளும் செங்குட்டுவன் பெற்றிருந்தான். இவ்வெற்றிகள் சோழ பாண்டியரினும் தனித்ததோர் தலைமையினை அவனுக்கு நல்கியது. எனவேதான் அவன் வடநாட்டுச் செலவுச் செய்தியை அவன் தானைத்தலைவனாம் வில்லவன் கோதை,

> **வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்**
> **தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் கயற்புலி**
> **மண்டலை யேற்ற வரைக**[2]

என்று கூறுவதிலிருந்தும் இவ்வுண்மையினை நாம் அறியலாம்.

தந்தைக்குப் பின் அவனுடைய மூத்தமகன் முடிசூடும் மக்கள்தாயக் கொள்கையே சிலப்பதிகார காலத்தில் நிலை பெற்றிருந்தது எனலாம்.[3] மருமக்கள் தாயக் கொள்கை அந்நாளில் சேரர் பரம்பரையில் நிலவியது என்போர் கூற்றுப் பொருந்தா உரை என்பது சிலப்பதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளது. இளங்கோவடிகளே இந்நுணுகிய அரசியல் உண்மையினைச் சிலப்பதிகாரத்தின் இறுதியில் இடம்பெற்றிருக்கும் வாழ்த்துக்காதையில் வடித்துக் காட்டுகின்றார். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் இரு மருங்கே ஒருநாள் அரசமன்றத்தில் மூத்தமகன் செங்குட்டுவனும் இளையமகன் இளங்கோவடிகளும் வீற்றிருந்தனர். அதுபோது அங்கு வந்த நிமித்திகன் ஒருவன் ''இமயவரம்பனுக்குப் பின்னர் அரியணை ஏறும் அமைவும் தகுதியும் பொருந்தியவன் இளங்கோவே'' என்று மொழிந்தனன். இதனைக் கேட்ட இளங்கோ சினந்து ''மூத்தோனிருக்க இளையோன் முடிபுனைவது முறையன்று'' என்று கூறிச்

---

1. சிலப்பதிகாரம்; நீர்ப்படைக்காதை : 117-123.
2. ,, ,, : 170-172.
3. M. Srinivasa Iyengar, Tamil Studies, pp. 272-273.

செங்குட்டுவனின் துன்பம் தீர அன்றே துறவு மேற்கொண்டார். இச்செய்தியினைத் தேவந்தி மேல் திகழ்ந்து தோன்றிய பத்தினிக் கடவுள் பாங்குடன் மொழியக் காண்கிறோம்.[4]

அரசன் தலைநகரத்திலிருந்து ஆட்சி நடத்தியபோது அவனுக்குப்பின் பட்டம்பெறும் உரிமையுடைய மகன் அல்லது இளவல் பிறிதொரு நகரில் இருந்து இளவரசுப் பட்டம் பூண்டு ஆட்சியில் பழகி வந்தான். இதனை நெடுஞ்செழியன் இறப்பிற்குப் பின் அவனுடைய இளவல் கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் பாண்டிய நாட்டின் முடிபுனைந்து நன்மாறன் என்னும் மறுபெயர் தரித்துக் கொண்டதினின்றும் அறியலாம்.[5]

மன்னவனே நாட்டின் தலைவன்; நாற்படைகளுக்கும் தலைவன். கோன் ஆட்சி நிலவிய அந்நாளில் எல்லையில்லாத அதிகாரம் அவனிடம் குவிந்து கிடந்தது. மக்கள் அவனை மாண்புற மதித்தனர், ஏழ்பிறப்பிலும் அவன் தாழ் நிழலில் வாழ விழைந்தனர். நாட்டில் பாடும் பாடல்கள் மன்னன் மக்களிடம் பெற்ற செல்வாக்கினை உணர்த்துகின்றன. மன்னன் மக்கள் மனம் மகிழச் செங்கோலோச்ச வேண்டும் என விரும்பினான். மழைவளம் குறைவுபட்டால், உயிர்கள் நோயால் மடிந்தால் மன்னனையே மக்கள் பழிப்பர் என்று நினைந்து செங்குட்டுவன் அரசகுடியில் பிறத்தல் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளுதலே ஆகும் என மொழிந்த மொழி, ஷேக்ஸ்பியர் Uneasy lies the head that wears the Crown' என்று குறிப்பிட்டுள்ளதோடு ஒப்புநோக்கத்தக்கதாகும். கொடுங்கோல் அரசனுக்கு இளங்கோவடிகள் கொடிய வேனிலை உவமையாகக் கூறியுள்ளது சிந்திக்கத் தக்கது[6]. கொடுங்கோல் மன்னனின் ஆட்சியை மக்கள் வெறுத்தார்கள் என்பதனைக் கோவலன், கண்ணகி,

---

4. சிலப்பதிகாரம்; வரந்தரு காதை : 170-184.
5. ,, ; நீர்ப்படைக் காதை : 124-138.
6. ,, ; காட்சிக் காதை : 100-104.

கவுந்தியடிகள் மூவரும் நிலவொளியில் மதுரைக்கு வழி நடப்பதாக முடிவு செய்து, சூரியன் மறையும்பொழுதை எதிர்பார்த்திருந்ததனோடு ஒப்பிட்டுள்ளமையை நோக்கி அறிகிறோம்.[7] வேனிற்காலத்தில் நிலம் வளமற்ற செயல் கொடியவரின் பேச்சைக் கேட்டுக் கொற்றவன் முறை கொடிய செயலுக்கு ஒப்பு என மாங்காட்டு முறையோன் கூறுவதனாலும் அறியலாம்.[8] மக்கள் கடவுளோடு மன்னனை ஒப்ப மதித்தார்கள் என்பது நன்கு புலனாகின்றது. கோயில் என்ற சொல் இறைவன் உறையும் திருக்கோயிலையும் அரசன் உறையும் அரண்மனையையும் ஒருங்கே உணர்த்த வல்லதாகும். இறைவன் என்ற சொல் கடவுளையும் மன்னனையும் ஒப்பக் குறிப்பதோர் உயரிய சொல்லாம்.

அரசன் தனக்கு ஆட்சியில் துணை புரிவதற்கு ஐம்பெருங் குழு,[9] எண்பேராயம்[10] என இருபெருங் குழுக்களைப் பெற்றிருந்தான். அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் என்ற ஐவரும் ஐம்பெருங்குழுவினர் ஆவர்.[11] கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், நளிபடைத்தலைவர், யானைவீரர், இவுளி மறவர் என்னும் எண்மரும் எண்

---

7. சிலப்பதிகாரம்; புறஞ்சேரியிறுத்த காதை : 15-16.
8. ,, காடுகாண் காதை : 60-66.
9. ,, இந்திரவிழவூரெடுத்த காதை:157; மற்றும் கால்கோட்காதை : 38.
10. ,, இந்திரவிழவூரெடுத்த காதை:157; மற்றும் கால்கோட்காதை : 38.
11. ஐம்பெருங்குழு: "அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தவாத்தொழிற்றூதுவர், சாரணரென்றிவர்,பார்த்திபர்க் கைம்பெருங் குழுவெனப் படுமே" எனுமிவர்.
— அடியார்க்கு நல்லார் உரை (சிலம்பு: இந்திர விழவூரெடுத்த காதை : 157-160)

பேராயத்தினராவர்.[12] இவர்களேயன்றி கருமவினைஞர், கணக்கியல் வினைஞர், தரும வினைஞர், தந்திர வினைஞர், பெருங்கவி முதலான அரசியல் அதிகாரிகளும் ஆட்சித் துறையில் அரசனுக்குத் துணை புரிந்தனர். அரசன் ஆட்சி அலுவலை இக்குழுவினரைக் கலந்தே ஆற்றி வந்தான். அமைச்சர் முதலான அரச அலுவலர் மந்திரச்சுற்றம்[13] என வழங்கப்பெற்றனர்.

செங்குட்டுவன் அமைச்சன் அழும்பில்வேள், திருவள்ளுவர் குறிப்பிடுவது போன்று அமைச்சுக்குரிய அறிவு நிரம்பப் பெற்றவன்.

**கருவியும் காலமும் செய்கையும் செய்யும்**
**அருவினையும் மாண்ட தமைச்சு.**[14]

அழும்பில்வேள்[15] நுட்பமான அறிவுடன் நாட்டு நிலையையும் நன்கு அறிந்தவன். எனவேதான் செங்குட்டுவன் வடநாட்டுச் செலவினை வஞ்சிமாநகரில் பறையறைந்தாலே போதும், ஒற்றர் வழி பகைவர் அறிந்துகொள்வர் எனக் கூறினான்.[16] இதனால் பிறநாடுகளில் மறைந்து வாழ்ந்து அவ்வப்போது தம் அரசனுக்குச் செய்திகளை அனுப்புவது ஒற்றர்தம் வேலை என்பது புலப்படுகிறது. 'வடவரசரை வென்றே திரும்புவேன்' என்று தனது

12. எண்பேராயம் :—"கரணத்தியலவர், கருமகாரர், கனகச்சுற்றங் கடைகாப்பாளர், நகரமாந்தர், நளிபடைத்தலைவர், யானைவீரரிவுளி மறவர், இனையரெண்பே ராயமென்ப" எனுமிவர்.
—அடியார்க்கு நல்லார் உரை(சிலம்பு; 5:157-160)
13. சிலம்பு; கொலைக்களக் காதை : 137.
14. திருக்குறள்; அமைச்சு : 1.
15. சிலம்பு ; காட்சிக்காதை : 177. ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை.
16. சிலம்பு; காட்சிக்காதை : 173-177.

அரசவையில் செங்குட்டுவன் வஞ்சினம் புகன்றபோது அவனது சினத்தைத் தணித்தவன் புரோகிதனே ஆவான்.[17] அவன் ஆசான் எனவும் அழைக்கப்பட்டான். செங்குட்டுவனின் காலாட்படைகளுக்குத் தலைமை தாங்கி வடபுலத்தின் மேல் படை நடத்தி ஆரிய அரசரை வென்று வாகை சூடியவன் வில்லவன்கோதை எனப்படுபவன். தூதுவர் எனப்படுவோர் தம் அரசர் இட்ட கட்டளைகளைப் பிறநாட்டு அரசர்க்குக் கொண்டு சென்றனர். போர்க் காலங்களில் அரசனுடன் இருந்து அவனிடும் கட்டளைகளை நிறைவேற்றி வந்தனர். செங்குட்டுவன் தூதுவர்களுக்குத் தலைமை தாங்கியவன் சஞ்சயன் எனப்படுபவன்.[18] இவன் செங்குட்டுவனிடமிருந்து நூற்றுவர் கன்னரிடம் சென்று அவர் துணையினைப் பெற்று செங்குட்டுவன் படைகள் கங்கையாற்றைக் கடத்தற்குரிய மரக்கலங்களைச் சமைக்கச் செய்தான்.[19] தூதுவர் சட்டையும் தலைப் பாகையும் அணிந்திருந்தனர்.[20] இதனால் அவர்கள் கஞ்சுக முதல்வர் எனவும் அழைக்கப்பட்டனர். பாண்டியன் கொடுத்த திறைப்பொருள்களைத் தான் பெற்றுக் கொண்டமைக்கு அடையாளமாகத் தன் முத்திரையிட்ட கடிதத்தை இக் கஞ்சுக முதல்வர் மூலமே செங்குட்டுவன் அனுப்பினான்.[21] அரசனுக்குக் கண் போன்ற ஒற்றர் சாரணர் எனச் சிலப்பதிகாரத்தில் வழங்கப் படுகின்றனர். இவர்கள் பிறநாட்டில் கலந்துரைந்து தம் அரசனுக்கு இன்றியமையாத அரசியல் செய்திகளை அனுப்பி வைப்பர்.[22]

---

17. சிலம்பு; கால்கோட் காதை : 19-24.
18. ,, ,, :
19. ,, ,, : 145-155.
20. ,, ,, : 138 உரை 'சட்டையிட்ட பிரதானர்'
21. ,, ,, : 166-175.
22. ,, காட்சிக் காதை : 175-176.

அரசனுக்குரிய வருவாய்த் துறைகளாகத் திருவள்ளுவர்,

உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்[23]

என்று குறிப்பிடுவர். செங்குட்டுவன் பாண்டிய மன்னரிடமிருந்து திறை பெற்றமை முன்பே கூறப்பட்டது. குன்றக் குரவர்கள் யானைவெண்கோடு, அகிலின் குப்பை, மான் மயிராகிய வெண்சாமரை, தேன்குடங்கள், சந்தனக்குறை, சிந்தூரக்கட்டி, அஞ்சனத்திரள், அணியரிதாரம், ஏலவல்லி, இருங்கறிவல்லி, கூவைக்கிழங்கினீறு, கொழுங்கொடிக் கவலை, தெங்கின்பழம், தேமாங்கனி, பச்சிலைமாலை, பலவின் பழங்கள், வெள்ளுள்ளி, கரும்பு, பூங்கொடி, கமுகின் செழுங்குலைத்தார், பெருங்குலைவாழையின்இருங் கனித்தார், ஆளியின் குட்டி, அரியின் குருளை, புலியின் குட்டி, யானைக்கன்று, குரங்குக்குட்டி, வளைந்த அடிகளையுடைய பிள்ளைக்கரடி, மலையிற் பாய்ந்து விளையாடும் வருடைமான், மடமான் மறி, கத்தூரிக் குட்டி, மாசறு நகுலம், பீலிமஞ்ஞை, நாவியின்பிள்ளை, கானக்கோழி, தேன்மொழிக்கிள்ளை முதலிய மலைபடு பொருள்களைச் செங்குட்டுவன் அடிகளில் வைத்து வணங்கி இறை செலுத்தியமையைக் குன்றக் குரவையால் அறியலாம்.[24] தம் நாட்டிலிருந்து வெளிநாட்டிற்குச் செல்லும் பொருள்களுக்கும் வெளிநாட்டிலிருந்து உள்நாட்டில் இறக்குமதியாகும் பொருள்களுக்கும் சுங்கவரி விதிக்கப்பட்டது. அரசருடைய பிறந்த நாளில் பகையரசர் சிறைவீடு செய்யப்பட்டனர்.[25] செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எடுத்து விழாக் கொண்டாடிய நாளில் 'மக்கள் வரி தவிர்க்க' ஆணை பிறப்பித்தான்.[26] பிற்காலத்தில் முதற்குலோத்துங்க சோழன்

---

23. திருக்குறள்; பொருள் செயல் வகை : 5.
24. சிலப்பதிகாரம்; காட்சிக் காதை : 37-54.
25. ,, நடுகற் காதை : 195-196.
26. ,, ,, : 203-204.

மக்கள் சுங்க வரியை நீக்கி, 'சுங்கம் தவிர்த்த சோழன்' எனப் பாராட்டப் பெற்றமை பிற்காலச் சோழர் வரலாற்றால் புலனாகும். அரசன் தவறு செய்யாத ஒருவனைச் சிறையில் அடைத்தால் காளிகோயில் கதவும் மூடிக்கொள்ளும் என்பது பாண்டிய அரசனுடைய ஏவலாளர் சிலர் அரசனுக்குத் தெரியாமல் வார்த்திகன் என்பானைச் சிறையிலடைத்தபோது நேரிட்டதை அறியலாம். உண்மை உணர்ந்த பாண்டியன் அறியா மக்களால் தன் அரசநீதி நெகிழ்ந்ததைப் பொறுத்தருளுமாறு வார்த்திகனிடம் வேண்டினான். உடனே திறவாதிருந்த காளிகோயிற் கதவு திறந்தது. அதுகண்ட அரசன் சிறையிலிருந்தோரை விடுதலை செய்தான்.

மக்கள் நலமே மன்னனின் கருத்தாக இருந்தது. மக்கள் நலனுக்காக அவன் பல நற்பணிகளைப் புரிந்தான். பூம்புகார் நகரில் நான்கு திசைகளிலும் காவல் தெய்வம் அமைந்து அந்நகரைக் காத்தது. இருவகை மன்றங்கள் அவ்வூரில் இலங்கின. இருவகை மன்றங்களில் ஒன்றான இலஞ்சி மன்றத்தில் ஒரு பொய்கை இருந்தது. அப் பொய்கையில் கூனர், தொழுநோயர் முதலாயினோர் மூழ்கின அளவிலே தம் பழுதுபட்ட தோற்றம் நீங்கி நல்யாக்கையினைப் பெற்றனர். அம்மடுவை வலம் வந்து மூழ்கி நலம் பெற்றனர், நன்மக்கள் பலர். இலஞ்சி மன்றத்தை அடுத்து இன்னொரு மண்டபம் இருந்தது. அங்கு ஒளியுமிழும் கல் ஒன்று நடப்பட்டிருந்தது. வஞ்சனையால் மருந்தூட்டப்பட்டுப் பித்தேறினவரும், நஞ்சை உண்டு நடுக்கம் எய்தினவரும், கொடிய விடமுடைய பாம்பால் கடிக்கப்பட்டோரும் அத்தூணை வலம் வந்தால் விடம் நீங்கித் துன்பத்தினின்றும் விடுபடுவர் என்ற நம்பிக்கை நிலவியது. இம்மன்றங்களெல்லாம் கடவுட்டன்மை உடையன போலக் கூறப்பட்டாலும், மக்கள் உற்ற நோய்களை நீக்க ஆங்காங்கே தற்காலத்து மருத்துவ நிலையங்கள் இருத்தல் போல, அக்காலத்து மன்னனால்

மக்களுக்கென நிறுவப்பட்ட மருத்துவ மன்றங்கள் எனக் கொள்ளலே சால்புடையதாகும்.

அரசர் நீதிமுறையுடன் அரசாண்டனர். 'பாண்டிய நாட்டில் கரடி கொடும்புற்றைத் தோண்டாது. வேங்கைப் புலி மான் கூட்டத்தை மடிவிக்காது. பாம்பும் சூரும் முதலையும் இடியும் சார்ந்தவர்க்குத் துன்பம் விளைவிக்கமாட்டா. ஏனெனில் தென்னவன் நாட்டில் செங்கோன்மை திகழ்ந்து தோன்றுகின்றது' என்று பாண்டியனின் அரசியலைக் கோவலன் பாங்குறப் புகழ்ந்து பேசினான்.[27] நாட்டு மக்களுக்கு நீதி வழங்கும் மன்றம் 'அறங்கூர் அவையம்' எனப்பட்டது. அம்மன்ற நிகழ்ச்சிகளில் ஐம்பெருங் குழுவினர் பெரும்பங்கு வகிப்பர். மக்கள் நேரில் சென்று அரசனிடம் நீதி வேண்டி நேரே நிற்பதும் உண்டு. கண்ணகி வழக்குரை காதையில் அரசனிடம் நீதி வேண்டி நேரே சென்றாள். 'கள்வனைக் கொல்லுதல் கடுங்கோலன்று' என்று பாண்டியன் மொழிந்தான். இறுதியில் தம்மீதே குற்றம், நீதி தவறிவிட்டோம் என உணர்ந்த பாண்டியன்,

**பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட**
**யானோ அரசன் யானே கள்வன்**

எனக் கூறி அரியணை மீதிருந்து தரையில் வீழ்ந்து உயிர் துறந்தான்.[28] மாறுவேடம் தாங்கி மக்கள் நலனை அறியச் சென்ற பாண்டியன் ஒருவன் பின்னால் பொற்கைப் பாண்டியன் எனத் தன் நீதி நிலைத்த ஆட்சியால் அறியப் படுகின்றான்.[29]

பூம்புகார் நகரில் சதுக்கப் பூதங்களில் ஒன்று தவவேடம் புனைந்து அதற்குரிய ஒழுக்கங்களை மேற்கொள்ளாது

---

27. சிலப்பதிகாரம்; புறஞ்சேரியிறுத்த காதை : 5-10.
28. ,, வழக்குரை காதை : 73-78.
29. ,, கட்டுரை காதை : 42-53.

உலகை ஏமாற்றித் திரியும் போலித் துறவிகள், செங்கோல் அரசனுக்கு எதிராகச் சதி செய்யும் அமைச்சர், பிறன்மனை நயக்கும் பேதையர், பொய்ச்சான்று கூறுவோர், புறம் கூறுவோர் முதலியவர்களைப் பெருங்கயிற்றால் கட்டி நாலுகாத தூரம் கேட்கும்படிப் பேரொலி எழுப்பித் துன்புறுத்தினதாகச் சிலப்பதிகாரத்தில் சொல்லப் பட்டுள்ளது. புகார் நகரத்துப் பாவை மன்றத்தி லிருந்த பாவை, அரசனுடைய செங்கோல் தவறினாலும் அறங்கூறும் அவையோர் நடுவுநிலைமை நீங்கி ஒருபாற் கோடி நீதி கூறினாலும் அந்நிகழ்ச்சியை நாவால் கூறாது கண்ணால் நீருகுத்துக் கூறியது எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.

யானை, குதிரை, தேர், காலாட்படை என்னும் நால்வகைப் படைகளும் அக்கால அரசனிடம் இருந்தன.[30] செங்குட்டுவன் வடநாடு சென்றபொழுது அவனுடன் யானை நூறும், குதிரை பதினாயிரமும், பண்டங்கள் ஏற்றிய வண்டி இருபதினாயிரமும் நாடகக் கணிகையர் நூற்று இருவரும், நகைச்சுவை வழங்குவோர் நூற்றுவரும், வாத்தியம் வாசிப்போர் இருநூற்றெண்மரும், அரச அதிகாரிகள் பதினாயிரமரும் உடன்சென்றதாக இளங்கோ வடிகள் குறிப்பிட்டுள்ளார்.[31] இப்படைகள் செல்லும் பொழுது மலைகளின் முதுகுகள் நெளிவதுபோல இருந்தன என்றும், படை நடை பூமியில் அழுந்திச் சென்று சுவடிட்டன என்றும் இளங்கோவடிகள் மேலும் குறிப்பிடுவர்.[32] செங்குட்டுவனிடம் பெரியதொரு கடற்படை இருந்த தென்றும் அதுகொண்டு அவன் கடற்குறும்பு செய்த கடம்பர்களைப் பொருது வென்று அடக்கினான் என்றும் சிலப்பதிகாரம் செப்புகின்றது.[33]

---

30. சிலப்பதிகாரம்; கால்கோட் காதை : 86-87.
31. ,, ,, : 128-138.
32. ,, ,, : 80-82.
33. ,, காட்சிக் காதை : 187.

தம் ஆணையை ஏற்றுக்கொள்ளாத அரசர்களை அல்லது தம் வீரத்தை இழித்தும் பழித்தும் பேசிய மன்னர்களை அடக்க மன்னன் படையெடுத்துச் சென்றான்.[34] நல்ல முழுத்தத்தினைக் கணி எடுத்து உரைப்பான்.[35] கணி குறித்த நல்ல பொழுதில் அரசன் போருக்குப் புறப்பட முடியவில்லையானால் தன் வெண்கொற்றக் குடையையும் வாளையும் யானை மீதேற்றி அத்திசை நோக்கிப் புறவீடு செய்தல் அக்கால மரபென்பதைக் கரிகால்வளவனும்[36] சேரன் செங்குட்டுவனும்[37] தங்கள் வெண்கொற்றக் குடையினையும் வாளினையும் நல்ல அமையம் பார்த்து வடதிசை நோக்கிவிட்ட செயல்களால் அறியலாம். இதனை 'நாட்கோள்' என்றும், 'குடை மங்கலம்' என்றும் இலக்கணம் கூறும்.[38] போருக்குப் புறப்படு முன்பு படைகளுக்கு அரசன் பெருஞ்சோறு வழங்குவான்.[39] இது 'பெருஞ்சோற்றுநிலை'[40] எனப்படும். பெருஞ்சோற்றினை உண்டு மகிழ்ந்த படைகள் வஞ்சி சூடிப் போருக்குப் புறப்படும்.[41] போரில் தும்பை மலைந்த வீரர் இறுதியில் வாகை சூடுவர்.[42] போரில் தோற்ற அரசர்கள் வெற்றி பெற்ற வேந்தனுக்குப் பலவகையான பொருள்களைத் திரையாகக் கொடுத்து வணங்குவர். செங்குட்டுவனுக்கு வச்சிர நாட்டு

---

34. சிலப்பதிகாரம்; கால்கோட் காதை : 156-162.
35. ,, ,, : 25-31.
36. ,, இந்திரவிழவூரெடுத்த காதை : 90-92.
37. ,, கால்கோட் காதை : 43-45.
38. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; புறத்திணையியல் : 13.
39. சிலம்பு; கால்கோட்காதை : 48-49.
40. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; புறத்திணையியல் : 8.
41. சிலம்பு; கால்கோட் காதை : 50-51.
42. ,, ,, : 219.

அரசன் முத்துப்பந்தரையும், மகதநாட்டு மன்னன் பட்டி மண்டபத்தையும், அவந்தி வேந்தன் தோரண வாயிலையும் திரைப்பொருளாகத் தந்தனர்.[43]

போரில் வீரங்காட்டி வெம்போர் புரிந்தவர்களுடைய ஆற்றலைப் பாராட்டி அவர்களுக்குப் பெரிய பட்டங்களை யும் போரில் விழுப்புண் பட்டு இறந்த வீரர்களின் சந்ததி யார்க்குப் பொருள், நிலம் முதலியவற்றையும் அரசர் கொடையாகக் கொடுத்தனர். காவாநாவிற் கனகவிசயரை வென்ற பின்பு கங்கையின் தென்கரையில் தங்கிய சேரன் செங்குட்டுவன், போரில் விழுப்புண் பெற்று வீரசொர்க்க மடைந்தவர், தலையும் தோளும் அறுபட்டு இறந்தவர், சுற்றத்தினரும் மகளிரும் உடன்மடிய இறந்தவராகிய இவர்களுடைய மைந்தர்களையும், முன்னணிப் படையாம் தூசிப்படையில் நின்று வெற்றி கண்டவர்களையும், மாற்றார்களுடைய தேர்வீரர்களைக் கொன்று குவித்தவர் களையும், பகைவர்களுடைய தலைகளைக் கொய்திட்டவர் களையும், மார்பில் விழுப்புண் பட்டவர்களைத் துரத்தி வெற்றி கண்டவர்களையும், தம்பால் 'வருக' என்று அழைத்து அவர்களுடைய வெற்றியை விம்மிதத்தோடு பாராட்டிப் பொன்னாலாகிய வாகைப்பூக்களை மிகுதி யாகக் கொடுத்து, குளிர்ந்த நஞ்சை நிலமும் வழங்கிப் பெருமைப்படுத்தினான்.[44] போரில் தோற்ற அரசர்களைச் சிறைப்படுத்துதல் அக்கால வழக்காகும். செங்குட்டுவனு டைய வடநாட்டுப் போரில் தோற்றோடிய பகைவர் துறவி களாகவும், கூத்தர்களாகவும், சடைமுடியராகவும், இசைப் புலவர்களாகவும் வேடம் புனைந்து தப்பியோட முயன்ற போது அவர்களைச் செங்குட்டுவன் சிறைப்படுத்தித் தன் நாட்டுக்குக் கொண்டு வந்தான்.[45] தோற்றோடியவரை, சடைமுடி புனைந்தோரைச் சிறைப்படுத்தி வருதல் தகாத

---

43. சிலம்பு; நீர்ப்படைக் காதை : 36.
44. ,, ,, : 25-47.
45. ,, ,, : 177-191.

செயலென்று சோழனும்[46] பாண்டியனும்[47] சொல்லினர் என்பதும் சிலப்பதிகாரத்தால் அறியப்படுகிறது. வெள்ளணி நாளில்[48]—அரசனின் பிறந்த நாளில் எருதுகள் உழவொழியும்.[49] பகை மன்னர்கள் விடுதலை செய்யப் பெறுவர்.[50] அந்நாளில் பகையரசர் விருந்தின் அரசர்களாகவும் மாறி விருந்தினர் மாளிகையில் மகிழ்ந்துறைதலும் உண்டு.[51] மேலும் தம் பெருமையை உணர்ந்து பணிந்த பகைவர்களைத் தம் நண்பர்களெனக் கொண்டு மன்னர்கள் நடாத்துவதும் உண்டு.[52] சிலப்பதிகார காலத்தில் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் என்ற நால்வகைச் சமயங்களும் தமிழ்நாட்டில் பரவியிருந்தன. ஒரு குடும்பத்தைச் சார்ந்தவர் பல்வேறு சமயங்களை மேற்கொண்டு ஒழுகினர். ஆனாலும் சமயப்பொறையுடன் அமைதி காத்தனர் வீடும் நாடும் சமயப் பூசலின்றித் திகழ்ந்தது. வடநாட்டுச் செலவுத் தொடக்கத்தில் செங்குட்டுவன் தன் குலதெய்வமாகிய சிவபெருமானை வணங்கி அவன் அடிகளைத் தலைமேல் தாங்கி யானையின் மீது அமர்ந்து புறப்பட்டான்.[53] அதே நேரத்தில் திருவனந்தபுரத்துத் திருமால்கோயில் அர்ச்சகர் அக்கோயில் பிரசாதத்தைச் செங்குட்டுவன் கையில் கொடுக்க, செங்குட்டுவன் அதனை மறுக்காது வாங்கித் தோளில் மகிழ்வுடன் அணிந்து கொண்டான்.[54] இது செங்குட்டுவனுடைய சமயப் பொறையினைக் காட்டுவதோடு அக்கால சமய நிலை

---

46. சிலம்பு; நடுகற் காதை : 90-93.
47. ,, ,, : 104-108.
48. ,, நீர்ப்படைக் காதை : 212-250.
49. ,, ,, : 227-229.
50. ,, நடுகற் காதை : 195.
51. ,, ,, : 197-198.
52. ,, ,, : 199-202.
53. ,, கால்கோட்காதை : 54-57.
54. ,, ,, : 62-67.

யினையும் புலப்படுத்துகின்றது எனலாம். தமிழ்நாட்டின் மூன்று தலைநகரங்களிலும் ஒவ்வொரு கடவுளர்க்கும் கோயில்கள் இருந்தன.[55] பல சமயவாதிகளும் தத்தம் சமயப் பெருமைகளை விளக்கிச் சொற்பொழிவு ஆற்றினர்.[56]

சிலப்பதிகாரத்தில் இயலிசை நாடகமென்னும் முத் தமிழும் பேசப்படுகின்றது. செங்குட்டுவன் வடநாடு சென்றபொழுது அவனுடன் கூத்தரும் சென்றனர். வஞ்சி நகருக்குத் திரும்பிய பின்னர் செங்குட்டுவன் மனைவியுடன் நிலாமுற்றத்தில் வீற்றிருந்தபோது பறையூர் வாழும் கூத்தச் சாக்கையன் சிவபெருமான் திரிபுரம் எரித்த காலையில் உமையம்மையை இடப்பக்கத்தே கொண்டு ஆடிய 'கொட்டிச்சேதம்' என்னும் கூத்தினைக் கண்டு களித் தான். சிவந்த அடிகளிலுள்ள தண்டை ஒலிக்கவும், சிவந்த கைகளிலுள்ள பறை முழங்கவும், கண்கள் ஆயிரம் திருக்குறிப்புக்களைக் காட்டவும், சிவந்த சடை பறந்து திசைகளில் பரவவும், பாடவும் அசையாது, தோல்வளை நடுங்காது, மேகலை ஒலியாது, நீண்டகுழை அசையாது, கூந்தல் அவிழாது உமையம்மையை இடபபக்கத்தே கொண்டு இறைவன் ஆடிய கூத்தினைப் பறையூர் கூத்தச் சாக்கையன் ஆடக் கண்டு அகமகிழ்ந்த செங்குட்டுவன் அவனுக்குப் பரிசில் நல்கிப் பெருமைப்படுத்தி அனுப் பினான்.[57]

சோழ மன்னன் மாதவி, அரங்கேறி நடனம் நிகழ்த்திய பின்னர் 'தலைக்கோல் அரிவை' என்ற பட்டம் வழங்கி அதனோடு ஆயிரத்து எண் கழஞ்சு பொன்னும் மாலை யொன்றும் அளித்து, அவ்வாடற் கலைஅரசியைப் பாராட்டி னான்.[58]

---

55. சிலம்பு; இந்திரவிழவூரெடுத்த காதை : 169-178.
56. ,, ,, : 181.
57. ,, நடுகற் காதை : 42-78.
58. ,, அரங்கேற்று காதை : 159-163.

சங்க இலக்கியங்கள் போரில் பொருது மடிந்த வீரர்க்கு நடுகல் எழுப்பப்படுவதைக் குறிக்கின்றன.[59] ஆனால் சிலப்பதிகாரம் முதன் முதலாகக் கண்ணகியாகிய பெண்ணிற்கு— பத்தினிக் கடவுளுக்குக் கோயிலெடுக்கும் நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றது. பத்தினிப் பெண்டிர் நிறைந்த நாடு மழை பொய்க்காது வளம் நிறையும் என்றும், மன்னர் கொற்றம் சிதையாது நிலைக்கும் என்றும் கவுந்தியடிகள் பத்தினிப் பெண்டிர் பெருமையைப் பாங்குற எடுத்து மொழிந்தார்.

மக்கள் அரசநீதி காரணத்தால் அச்சமின்றி இனிது வாழ்ந்தனர். புகார் நகரத்தின் வெள்ளிடை மன்றத்தில் அளவும், நிறையும், எண்ணும் குறிக்கப்பட்ட பொதிகள் குவிந்து கிடந்தன. அவற்றைக் காப்போர் இல்லை. அந்நகருக்கு வந்த புதியவர் யாவராயினும் அங்குள்ள பொதிகளை எடுத்துச் சென்றால் அவர்கள் அவைகளைச் சுமந்து திரிந்து கழுத்துக் கடுக்க வருந்த வேண்டுமே யொழிய அப்பொதிகளை யாரும் வாங்க மாட்டார். எனவே களவினால் பொருள் ஈட்டி இனிது வாழலாம் என்ற எண்ணம் அந்நாளில் மக்கள்பால் இல்லை.

மக்கள் மன்னரை மதித்து ஒழுகினர். நானில மக்களும் தங்கள் வழிபடு கடவுளர்க்கு விழவெடுத்து குரவையாடும்பொழுது அக்கூத்தின் இறுதியில் தம் அரசன் வெற்றி பெறவேண்டும் என்று வாழ்த்தினர்.[60] மண வாழ்த்திலும் அரச வாழ்த்தே இறுதியாக இலங்கியது.[61] ஆய்ச்சியர் மூவேந்தரையும் திருமாலாகக் கூறினர். வட நாடு சென்ற செங்குட்டுவன் பிரிவால் வருந்திய மக்கள்

---

59. அகநானூறு; 67 : 8-10, 131 : 8-11.
புறநானூறு; 221 : 11-13.
60. சிலம்பு; குன்றக் குரவை : 26.
61. ,, மங்கல வாழ்த்துப் பாடல் : 64-68.

அவன் வடபுலத்தினின்றும் வாகைசூடி வருகின்றான் என்பதைக் கேட்டதும் பெரிதும் மகிழ்ந்தனர். இவ்வாறு போரில் வெற்றி பெற்ற பேரரசர்களுக்குரிய பனம்பூ மாலை[62] ஆத்திமாலை[63] வேம்புமாலை[64] ஆகியவற்றைப் புலவர்கள் புகழ்ந்து பாடினர். எங்கும் மகிழ்ச்சி ஆரவாரமே நிறைந்திருந்தது. சிலப்பதிகாரத்தில் காணலாகும் இவை போன்ற செய்திகளால் அக்கால ஆட்சிமுறை சீரும் சிறப்பும் பெற்றுச் செம்மை நலம் பெறத் துலங்கியது என்பதனைத் தெள்ளிதின் அறியலாம்.

---

62. சிலம்பு; வாழ்த்துக் காதை : 28.
63. ,, ,, : 26.
64. ,, ,, : 27.

## 2. சிலப்பதிகாரம் காட்டும் சமுதாய வரலாறு

கவிதை மக்கள் வாழ்க்கையின் உரைகல் என்பர் அறிஞர். மனிதர் வாழ்க்கையில் கண்டதையும் துய்த்ததையும் கவிதை வெளிப்படுத்துகின்றது என்பர். சுருங்கச் சொன்னால் கவிதை மக்கள் வாழ்க்கையினை வடித்துக் காட்டும் ஏடு எனலாம். ஒரு நூல் அந்த நூல் எழுந்த காலத்தின் பிரதிநிதி எனலாம். எனவே ஒரு காலத்து நூலில் அந்தக் காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையினை உள்ளவாறே காணலாம்.[1] பிற்கால இலக்கியங்களில் சில புனைந்துரைகள் புகுந்தாலும், பழைய இலக்கியங்களாகிய சங்க இலக்கியங்கள் உள்ளதை உள்ளவாறு எடுத்துக் கூறுதலில் வல்லனவாகும்.[2] சங்க காலத்தை யொட்டி யெழுந்த சிலப்பதிகாரத்திலும் வரம்பு கடவாத கற்பனையினையும் மனித வாழ்வை உள்ளவாறே விளக்கியிருக்கும் மாண்பினையும் காணலாம்.

தமிழின் தொன்னூலாகிய தொல்காப்பியம் இலக்கண நூலேயாயினும் அந்நூலின் ஒரு பகுதியான பொருளதிகாரம் மக்கள் வாழ்வினை வடித்துக் காட்டக் காணலாம். தொல்காப்பியனார் கூறுகின்ற வாழ்க்கைக் கூறுகள் பண்டைத் தமிழரின் வாழ்வியற் பாங்கினை உணர்ந்து கொள்வதற்குத் துணை செய்கின்றன எனலாம்.

தொல்காப்பியனார் நிலங்களை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாகப் பிரித்தார்.

---

1. William Henry Hudson, An Introduction to the Study of Literature, p. 2.
2. டாக்டர் மு. வரதராசன், நற்றிணைச் செல்வம், முன்னுரை ப. 5 மற்றும் குறுந்தொகைச் செல்வம், ப. 9-10.

அவர் பாலையினைத் தனி நிலமாகக் கொள்ளவில்லை. முல்லையும் குறிஞ்சியும் வேனிற் காலத்தில் மழையற்ற நிலையில் வெயிலின் கொடுமையினால் வளங் குறைந்த தாகத் திரிந்த நிலப்பரப்பு பாலை என வழங்கப்பட்டது.[3]

சங்க இலக்கியங்கள் எனப் போற்றப்படும் பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் தொகைநூல்களாகும். எட்டுத்தொகை நூல்களில் அமைந்துள்ள பாக்கள் பலரால் பல சமயத்தில் பாடப் பெற்றனவாகும். தனித் தனிப் பாக்களின் தொகுதிகளாகச் சங்க இலக்கியம் அமைந்துள்ள பான்மையினால் இப்பாக்களை இன்ன இன்ன நிலத்திற் குரியன என்று எளிதாகப் பிரித்துக் கூறினர். அகப் பாடல்கள் அனைத்தையும் நிலத்தாலும் ஒழுக்கத்தாலும் பிரித்துக் கூறும் மரபு தொன்றே தொடங்கிவிட்டது. பாட்டில் வரும் நில வருணனை, குறிப்பிடப் பெற்றும் ஒழுகலாறு இவற்றைக் கொண்டு ஒரு பாட்டினை இன்ன நிலத்திற்குரியது என எளிதிற் பகுத்துணர்ந்து விடலாம்.

தனிப் பாடல்களைப் பொறுத்தமட்டில் அமைந்துள்ள இவ்வுண்மை, தமிழில் முதற்கண் எழுந்த தொடர்நிலைச் செய்யுளாம் — காப்பியமாம் சிலப்பதிகாரத்திற்கும் பொருந்தி வரக் காணலாம்.

இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம் முப்பது 'காதைகள்'[4] கொண்டதாகும். இவற்றின் சில காதை களில் முழுக்க முழுக்க அந் நிலத்து மக்களின் வாழ்வு, அவர்தம் கடவுள் கொள்கை, வழிபாடு, அவ்வவ் நிலத்திற் படு பொருள்கள், ஆடல்பாடல்கள் முதலியனவற்றை விளங்க எடுத்துரைதுள்ளார். அக்காலத்து வழங்கிய நாட் டுப் பாடல்களைக் கவியரங்கேற்றிய பெருமை—தம் காவி யத்தில் தக்க இடந்தந்து போற்றி வாழ வைத்த பெருமை

3. சிலப்பதிகாரம்; காடுகாண் காதை : 64-66.
4. A 'Kātai' is that which contains a story.

இளங்கோவடிகளையே சாரும். பண்டைத் தமிழ் மக்களின் ஆடல் பாடல்களைக் கதையின் இடையே புகுத்திக் கதையோடு இணைய வைத்து நமக்குப் பழந்தமிழ் மரபினைக் காட்டுகின்றார் இளங்கோவடிகள். 'கதையையும் இந்நில மக்கள் வாழ்க்கையையும் பிரித்துக் காண்பது இயலாது' என்பர் ஆராய்ச்சியாளர்.[6]

குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கையினைக் 'குன்றக் குரவை' தெற்றெனக் காட்டுகிறது. குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் குறவர் என அழைக்கப்பட்டனர். அவர்கள் குறிஞ்சித் தெய்வமான முருகனை வழிபட்டனர். இக் குறவர்கள் குரவைக் கூத்தாடினர்; கொடிச்சியர் பாடி மகிழ்ந்தனர். தினைப்புனங்களில் வந்து படியும் கிளிகளையும் பறவைகளையும் தட்டை கொண்டு ஓட்டினர்.[7] தினைக்கதிர்களை உரலில் இட்டுக் குற்றும் பெண்கள் வள்ளைப் பாட்டுப் பாடினர். சிலர் தெய்வம் பராவினர். குறவர் மலைமீது கட்டியிருந்த தேன் கூடுகளிலிருந்து தேன் எடுத்தனர். பரண் மீதிருந்து பறவைகளை யோட்டித் தினைப்புனம் காத்தனர் சில குறவர். அருவி நீரில் பெண்கள் குளித்து மகிழ்ந்தனர்.[8] யானைப் பாகர் குழியில் விழுந்த புதிய யானைகளைப் பிடிக்க ஒலி எழுப்பினர்.

மலைபடு பொருள்களாகச் சிலப்பதிகாரத்திலிருந்து நாம் அறிவன வருமாறு: யானை வெண்கோடு, அகிலின் குப்பை, மான் மயிராகிய வெண்சாமரை, தேன்குடங்கள், சந்தனக்குறை, சிந்தூரக்கட்டி, அஞ்சனத்திரள், அணியரி தாரம், ஏலவல்லி, இருங்கறிவல்லி, கூவைக்கிழங்கினூறு,

---

5. டாக்டர் மு. வரதராசன், இளங்கோவடிகள், ப. 57.
6. மு. சண்முகம், சிலப்பதிகாரக் கட்டுரைகள், ப. 122.
7. சிலம்பு; குன்றக் குரவை : 1.
8. ,, காட்சிக் காதை : 26-34.

கொழுங்கொடிக்கவலை, தெங்கின்பழம், தேமாங்கனி, பச்சிலைமாலை, பலவின் பழங்கள், வெள்ளுள்ளி, கரும்பு, பூங்கொடி, கமுகின் செழுங்குலைத்தார், பெருங்குலை வாழையின் இருங்கனித்தார், ஆளியின்குட்டி, அரியின் குருளை, புலியின்குட்டி, யானைக்கன்று, குரங்குக்குட்டி, வளைந்த அடிகளையுடைய பிள்ளைக்கரடி, மலையிற் பாய்ந்து விளையாடும் வருடைமான், மடமான் மறி, கத்தூரிக்குட்டி, மாசறு நகுலம், பீலிமஞ்ஞை, நாவியின் பிள்ளை, கானக்கோழி, தேன்மொழிக் கிள்ளை.

திருச்செந்தூர், திருச்செங்கோடு, சுவாமிமலை என்னும் திருத்தலங்களில் எழுந்தருளியுள்ளவன் முருகன் என்றும், அவன் கடலினுட் சென்று மாமர வடிவில் நின்ற சூரனைக் கொன்றவர் என்றும் கூறி அவர்கள் முருக வேளைப் போற்றிப் பாடிப் பரவினர்.[9]

குன்றக் குறவனைக் காதலித்த குறமகள் தன் தலைவன் தன்னைத் திருமணம் செய்து கொள்ள விரைந்து வாராமை யினால் அவனையே நினைந்து நினைந்து மெலிந்து போனால், அம் மெலிவு கண்ட தாய் அஃது முருகனால் வந்த நோய் என்று முடிவு செய்து, முருகனுக்கு விழா வெடுக்க முருகன் கோயில் பூசாரியை அழைத்து வெறியாட் டயர ஏற்பாடு செய்வாள். அவள் மெலிவின் உண்மைக் காரணம் உணராது வேலன் வருவானாயின் அவன் மடவன்; அவன் (பூசாரி) வேண்டுகோட்கிணங்கி ஆலமர் செல்வன் புதல்வன் வருவானாயின் அவன் அவனினும் மடவன் என்று கூறித் தோழி உண்மையைப் பிறர்க்கு உணர்த்தினாள் (அறத்தொடு நின்றாள்). தலைவி தான் விரும்பிய கணவ னையே மணக்க முருகன் அருள் சுரக்கவேண்டும்; பிழை மணம்—பிறரை மணந்து கொள்ளவேண்டிய நிலை ஏற் படுதல் கூடாது என்று வேண்டினாள்.[10] தலைவன் பலரறி

9. சிலம்பு; குன்றக் குரவை : 8.
10. ,, ,, : 11-20.

யும் மணத்தை விரைவில் மேற்கொள்ள வேண்டும் என்று விரும்பினாள். இவ்வாறு வரும் குன்றக் குரவைச் செய்திகள் சங்க இலக்கியத்தின் அகப்பாடல்களில் காணும் செய்திகளைப் பெருமளவில் ஒத்துள்ளன எனலாம்.

## முல்லை நிலத்து மக்கள் வாழ்வு

முல்லை நிலத்தில் வாழ்வோர் ஆயர் எனப்படுவர். சிலப்பதிகாரத்தில் வரும் மாதரி ஆயர்குலப் பெண்ணாவள். அவள் வாழ்க்கையும் ஆய்ச்சியர் குரவையால் அறியலாகும் செய்திகளும் முல்லைநில மக்களின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுவனவாகும். பசுவினைப் பாதுகாத்து பால்கறந்து பிறருக்குப் பயனுற அளிக்கும் அவர்களுடைய தொழில் குற்றமற்ற தொழில் என்று இளங்கோவடிகள் பாராட்டுகின்றார். பசுக்களை வளர்த்தலேயன்றி ஏறுகளையும் அவர்கள் வளர்த்தனர். எழுவகையான ஏறுகளின் பெயர்களை இளங்கோவடிகள் காரி, நெற்றிச்சுட்டியுடையது, மல்லன்மழவிடை, நுண்பொறிவெள்ளை, பொன் பொறி வெள்ளை, வென்றிமழவிடை, தூநிற வெள்ளை என்பனவற்றைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வேறுகளை ஆயர் விரட்டிவிடுவர். ஏறுகளை அடக்கி வீரத்தினை வெளிப்படுத்திய காளைக்கே தங்கள் மகளிரை ஆயர்கள் மணம் செய்து கொடுத்தனர். இத்தகைய திருமண முறை பழமை சான்றது என்பதனை முல்லைக்கலியில் வரும் சில பாடல்கள் கொண்டும் அறியலாம்.

முல்லைநிலக் கடவுள் கண்ணனாவர். ஆயர் மகளிர் தங்கள் வாழ்க்கையில் ஏதாவது தீய நிகழ்ச்சிகளுக்குரிய அறிகுறிகள் கண்டால் கண்ணனை வழிபட்டுக் குரவைக் கூத்தயர்வர். ஒரு பெண்ணைக் கண்ணனென்றும், பிறிதொருத்தியைப் பலராமன் என்றும், வேறொருத்தியைப் பின்னை என்றும், மற்றும் பிற மகளிரை வேறு பெயரிட்டும் கோலம் செய்வித்துக் குரவையாடி மகிழ்தல் அவர்தம் இயல்பாகும். ''கண்ணன் கன்றைக் குறுந்தடியாகக் கொண்

டெறிந்து விளங்கனியை உதிர்த்தான்; கொல்லையில் நின்ற குருந்த மரத்தை ஒடித்தான்; யமுனை ஆற்றங்கரையில் நீராடிய கோபியர்களின் ஆடைகளை ஒளித்து வைத்தான்; அவன் இப்பொழுது வந்தால் அவன் வாயால் முல்லையந் தீங்குழல் கேட்டு மகிழலாம்'' என்று பாடி ஆடி மகிழ்ந் தார்கள்.[11]

## மருத நில மக்கள் வாழ்வு

வயலும் வயலைச் சார்ந்த நிலமான மருதத்தில் வாழ்ந்த மக்கள் வேளாளர் எனப்படுவர். வான்பொய்ப் பினும் தான் பொய்யாக் காவிரியாறு அவர்கள் வாழ்க் கையை வளப்படுத்தியது;[12] அவர்கள் உழு தொழிலுக்குப் பழுது வராமல் பாதுகாத்தது. நாளும் செல்வவளம் செழிக்கச் செய்தது. குடகுமலையிலிருந்து புறப்பட்டு அகில், சந்தனம் முதலிய நறுமணம் நிறைந்த கட்டை களைச் சுமந்துவந்து காவிரியாறு புகார்த்துறையில் கடலில் புகுந்தது. காவிரியின் இருமருங்கும் இருந்த கழனிகளில் செந்நெல்லும் கரும்பும் செழிக்க வளர்ந்திருந்தன. நீர் நிலைகளில் தாமரைக்காடுகள் பூத்துக் குலுங்கின. கம்புட் கோழி, கணைகுரல்நாரை, செங்காலன்னம், பைங்கால் கொக்கு, கானக்கோழி, உள்ளான் முதலிய பறவைகள் பேரொலி எழுப்பின. சேற்றில் சிக்கிய எருமை தினவெடுத்த தனது முதுகால் பிரிக்கட்டின்மீது உராய அதனின்றும் பலவகைப்பட்ட நெற்கள் சரிந்தன. அதனைக் கண்ட பள்ளரும் களமரும் அவ்வெருமையை அதட்டி ஓட்டினர். கடைசியர் செங்கயற் கண்களும் வளையணிந்த தோள் களும் உடையவராவர். அவர்கள் வயல்களில் களைகளைக் களைந்து நாற்று நட்டனர். காலையில் கூந்தலில் அணிந்த

---

11. சிலம்பு; ஆய்ச்சியர் குரவை. (19)
12. ,, கானல்வரி : 4 மற்றும் கடலாடு காதை : 30-31.

பூக்களைக் களைந்து நடவு முடிந்தபின் முடிநாற்றை நறுக்கிச் சூடிக்கொண்டனர். அவர்களுடைய உடம்பில் சேறு ஆங்காங்கு விளங்கின. மயக்கும் கள்ளை உண்டு அவர்கள் பண்ணோடு இயையாத பாக்களைப் பாடிக் களித்தனர். உழவர்கள் நெற்கதிர், அறுகம்புல் முதலிய வற்றை மாலைகளாகக் கட்டித் தங்கள் கலப்பையிற் சூட்டி கடவுளைத் தொழுது ஏர்மங்கலமாகச் சில பாடல் களைப் பாடிச் சேறுபட்ட வயல்களை உழுதனர். அவர்கள் பாட்டொலி உலகையே இரு கூறாக்குவதுபோல் ஒலித்தது. விளைந்த நெற்பயிர்களை அறுத்துக் களத்தில் குவித்துக் கடாவிட்டுக் கூளத்தினின்றும் நெற்கதிர் மணிகளைப் பிரித்து நின்றனர். அதுபோது தங்கள் செயலில் சோர்வு ஏற்படாவண்ணம் முகவைப் பாட்டுகளைப் பாடி மகிழ்ந் தனர். கிணைப்பொருநர் மாடு, பயிர், உழுதொழில் வாழ்க்கை முதலியன பெருகவேண்டும் எனப் பாடினர்.

''பலகுடை நீழலும் தங்குடைக்கீழ் காண்பர் நெற்கதிர் விளைக்கும் உழவர்'' என்று திருவள்ளுவர் குறிப்பிடுவர். மேலும் அவர் தாம் பிறரிடம் சென்று இறவாமல் தம்மிடம் இரந்து வந்தவர்க்கு ஒன்று ஈயும் தகுதியுடையவர் உழவர் என்பர். இவ்விரு கருத்துகளையும் உள்ளடக்கியே இளங் கோவடிகளும், ''இரப்பவர் சுற்றத்தையும், புரப்பவர் கொற்றத்தையும் தம் உழவுச் சால்களிடத்து விளைவித் தவர் வேளாளர்'' என்று புகழ்கின்றார். காவிரியாற்றின் தவப்புதல்வர்களாகிய அவர்கள் செல்வவளம் நிறையப் பெற்றவர் என்பதனை, தூற்றாமல் குவிக்கப்பட்டிருந்த நெற்பொலியில், ஆலையின்கண் வெல்லம் அடுவதற்குப் பாகு காய்ச்சிய புகை சென்று சூழ்ந்தநிலை, மஞ்சு தவழும் மலைபோலக் காட்சியளித்தது என்ற வருணனை மூலம் எடுத்துக்காட்டுகின்றார்.

மருதநிலக் கடவுள் இந்திரன். காவிரி கடலொடு கலக்கும் காவிரிப்பூம்பட்டினத்தில் சித்திரைத் திங்களில் சித்திரை நாளன்று தொடங்கி 28 நாள்கள் இந்திரனைப்

பரவி வழிபடும் இந்திரவிழா 28 நாள்கள் நடைபெற்றது. அரசியல் ஆதரவுபெற்ற மக்கள் மகிழ்ந்து எடுக்கும் பெரு விழாவாக இத்திருவிழா திகழ்ந்தது.[13] தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன் காலம் முதல் இவ்விழா சீர்பெற நடந்து வந்ததனைச் சிலப்பதிகாரம் காட்டும். மழைக்குக் கடவுள் இந்திரன். எனவே இவ்விழா நடைபெறாவிட்டால் மாரி சுருங்கிக் கேடு பெருகும் என்பது அக்கால மக்கள் நம்பிக்கை.[14] புகார் நகரில் வெள்ளிடைமன்றம், இலஞ்சி மன்றம், நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம் என்று ஐவகை மன்றங்கள் இருந்தன. இம்மன்றங்களிலெல்லாம் பலிக்கொடை வழங்கிய பின்னர் மக்கள் இவ்விழாவினைத் தொடங்கினர். வச்சிரக்கோட்டத்திலுள்ள மணங்கெழு முரசை யானையின் பிடரிமேல் ஏற்றி விழாவின் தொடக்கத்தையும் முடிவையும் கூறி முரசறைந்தனர். அக்கோட்டத்திலுள்ள மங்கல நெடுங்கொடியை வான் நோக்கிப் பறக்கவிட்டனர். நகரில் மாளிகைகளிலெல்லாம் மக்கள் மரகதமணியும் வயிரமும் பதித்த தூண்களை நட்டனர். மாளிகையின் வாயில்களில் தோரணங்களைத் தொங்கவிட்டனர். வீதிகள்தோறும் பசும்பொற் பூரணகும்பம், பாலிகை, பாவை விளக்கு, பசும்பொற் கொடிகள், தூமயிற்கவரி, சுந்தரச்சுண்ணம் இவைகள் செறிந்திருந்தன. ஐம்பெருங்குழுவினர், எண்பேராயத்தார், அரச குமரர், பரத குமரர், குதிரைவீரர், யானை வீரர் ஆகியோரெல்லாம் தெருக்கள்தோறும் ஒருங்கு திரண்டு நின்று 'நம் அரசன் மேம்பாடுற்றுக் கொற்றம் கொள்வானாக!' என வாழ்த்தினர். ஆயிரத்தெட்டரசர் தலையிற் சுமந்து வந்த காவிரியின் மங்கல நீரால் விண்ணாட்டவரும் மண்ணாட்டவரும் மருளும்படி இந்திரனை விழுநீராட்டினர். பிறவா யாக்கைப் பெரியோனாம் சிவன்

---

13. சிலம்பு; இந்திரவிழவூரெடுத்த காதை : 64-66 மற்றும் கடலாடு காதை : 5-6.
14. ,, இந்திரவிழவூரெடுத்த காதை : 71-73.

கோயிலிலும், முருகன் கோயிலிலும், பலராமன் கோயிலிலும், நெடுமால் கோயிலிலும், வாசவன் கோயிலிலும் வேத முறைப்படி ஓமங்கள் நடைபெற்றன.

இந்திரவிழா இவ்வாறு சிறப்பாக ஒரு பக்கத்தே நிகழ, மற்றொரு பக்கத்தில் நால்வகைத் தேவர், பதினெட்டுக் கணங்கள் ஆகிய வேறுவேறு கடவுளர்களுக்கும் திருவிழாக்கள் நடைபெற்றன.[15] அறவோர் பள்ளிகளில் தருமபோதனையும் புராணச் சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. சோழ மன்னன் அருள்சுரந்து பகைமன்னர்களை அன்று சிறை வீடு செய்தான். எங்கும் இசை முழக்கம் பெருகி மக்களை மகிழ்வித்தது. மறுகுகளிலும் (சிறு தெரு) பெருந்தெருக்களிலும் ஓயாது முழவுகள் முழங்கிக்கொண்டிருந்தன. இவ்வாறு 28 நாள்கள் இந்திரவிழா இனிமையுற நடந்தது. 29 ஆம் நாள் புகார் நகர மக்கள் அலையெனத் திரள் திரளாகக் கடற்கரை சென்று கடலாடி மகிழ்ந்தனர். கடற்கரை மருங்கில் பல்வகை விளையாட்டுகளை ஆடிக்களித்தனர்.[16] இவ்வாறாக மருதநில மக்கள் வாழ்க்கை மகிழ்ச்சியில் திளைத்துத் துலங்கியது.

## நெய்தல் நில மக்கள் வாழ்வு

கானல்வரியில் நெய்தல் நில மக்கள் வாழ்வு நன்கு படம் பிடித்துக் காட்டப்படுகின்றது. நெய்தல்நில மக்கள் பரதவர் எனப்படுவர்.[17] கலத்தில் கடலிற் சென்று மீன் பிடித்து வாழ்வதே இவர்களுடைய வாழ்க்கையாகும். இரவு நேரங்களில் அவர்கள் மீன்பிடிக்கச் சென்றபோது அவர்களுடைய படகுகளில் சிறிய விளக்குகள் எரிந்தன. கடல் நடுவில் இவ்விளக்குகளைக் கண்டு கரையிலுள்ளோர் நம்பிக்கை ஒளி பெற்றனர். மணல் மண்டிக் கிடந்த

---

15. சிலம்பு; இந்திரவிரவூரெடுத்த காதை : 169-173.
16. ,, கடலாடு காதை : 161-174.
17. ,, கானல் வரி : 17-22.

நெய்தற் கரையோரம் புன்னை மரங்கள் செழித்து வளர்ந்திருந்தன. கடல்விளையாட்டு காணச் சென்றவர்க்கு இப்புன்னைமர நிழல்கள் உதவின. பரதவப் பெண்கள் மணலில் சிற்றில் இழைத்து விளையாடி மகிழ்ந்தனர். அவர்கள் இயற்றிய சிற்றில்களை அலைகளால் மோதுண்டு சங்குகள் அலைகளுடன் கரையோரம் வந்து அழித்துச் சென்றன. பரதவர் தாம் பிடித்த மீன்களைக் கடற்கரை மணலில் பரப்பி உலர்த்தினர். அவ்வுலரும் மீன்களைப் பறவைகள் கவர்ந்து செல்லாதவாறு பரதவமகளிர் கையில் கோலுடன் காவல் புரிந்தனர். மீன்பிடித்து ஈரமான வலைகளைப் பரதவர் தம் சேரி முன்றிலில் விரித்துக் காய வைத்தனர். இவையே கானல்வரி கொண்டு நாம் அறியலாகும் நெய்தல் நில மக்களின் வாழ்க்கை இயல்புகளாகும்.

## பாலை நில மக்கள் வாழ்க்கை முறை

பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேட்டுவர் என வழங்கப்பட்டனர். வேட்டுவவரி அவர்கள் வாழ்க்கை முறையினை விளங்க உரைக்கின்றது. இம்மறக்குடி மக்கள் வழிச்செல்வோரைக் கொல்லல், கொள்ளையடித்தல், பசுக்களைக் கவர்தல் முதலிய தொழில்களைச் செய்தனர். இவற்றால் வளம்பெற்றனர். தம்மை எதிர்த்த பகைவரைத் தம் வாளுக்கு விருந்தாக்கி மகிழ்ந்தனர். நோயால் இறந்து சுடப்படாத மேனியை உடையவர்கள் அவர்கள். அவர்கள் வழிபடு தெய்வம் கொற்றவையாகும். வெற்றி தரும் கொற்றவையைப் பரவி அவர்கள் கூத்தாடினர். வனப்பு மிகுந்த வரிப்பாட்டுகளை வகையுறப் பாடினர். மறவர்குல மகளாகிய ஒருத்தி தன் தடங்கையில் ஒருநாள் நெடிய வில்லுடன் ஊர்மன்றத்தின் நடுவே தோன்றினாள். மறவர் செலுத்தவேண்டிய நேர்த்திக் கடனைக் கேட்டாள். இதுகாறும் நேர்த்திக் கடனைச் செலுத்தாமல் காலத்தை நிகழச் செய்த மறக்குடி மக்களைக் குறை கூறினாள். அது

போது அவர்கள் தங்கள் கொடுந்தொழிலை மறந்து தம் தவற்றை நினைந்து அறக்குடிபோல் அவிந்தடங்கினர். மறவர் மகள், "கொற்றவைக்கு நேர்ந்த—உடன்பட்ட பரவுக் கடனைத் தீர்த்தாலன்றி அவர்களுடைய விற்கள் வெற்றிபெற இயலா" என எடுத்து மொழிந்தாள். கொற்றவையை அலங்கரித்து வேட்டுவர்கள் விழா எடுத்தார்கள்.[18] குமரியின் கூந்தலைச் சடையாகக் கட்டி அதில் பாம்புக்குட்டி வடிவில் அமைந்த பொன் ஞாணைச் சுற்றினர். பன்றியின் கோட்டைப் பறித்து அதைப் பிறையாகச் சுற்றினர். புலிப்பற்களைத் தாலியாகக் கட்டினர். புலியின் தோலை மேகலையாகக் கட்டினர். வில்லை வளைத்துக் கட்டி அவள் கையில் கொடுத்து அவளைக் கலைமான்மேல் ஏற்றி அமர்த்தினர். பாவை, கிளி, கானக்கோழி, வில், மயில், பந்து, கழற்சிக்காய் முதலியனவற்றை அவள் கையில் தந்து வணங்கினர். வண்ணம், சுண்ணம், தண்ணருஞ் சாந்து, புழுக்கல் நோலை, விழுக்குடைமடை, பூப்புகை, விரை முதலிய பொருட்களை ஏவற் பெண்கள் ஏந்திப் பின்வருவர்; ஆறறி பறை, சூரைச்சின்னம், கோடு, கொம்பு, மணி முதலிய வாச்சியங்களை ஒரு பக்கம் ஒலித்தனர். இவ்வாறு வீரர் தரும் பலிகளைக் காடுகெழு செல்வியான கொற்றவை மகிழ்ந்து ஏற்றுக்கொண்டாள். கொற்றவைக்குப் பலவிதமான சிறப்புகளையும் செய்து பலவாறு புகழ்ந்து கூறிக் கூத்தாடி மகிழ்வர் வேட்டுவர். இவையே சிலப்பதிகாரம் கூறும் பாலைநில வேட்டுவர் வாழ்வாகும்.

### சாதி வேற்றுமை

பிறப்பினால் மக்களுக்குள் வேற்றுமையில்லை. ஆனால் நாளடைவில், செய்யும் தொழிலால் வேற்றுமைப்பட்டுப் பல்வேறு வகுப்பினராகப் பிரிந்தனர். திருவள்ளுவரும்,

18. சிலம்பு; வேட்டுவ வரி; வள்ளிக்கூத்து (5).

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்"[19]**

என்றார்.

தொழிலால் ஏற்பட்ட பிரிவு பின்னர்ப் பிறப்பிலேயே வேற்றுமை பாராட்டும் சாதிப்பிரிவினையாக மாறி விட்டது. தொழிலில் உயர்வு தாழ்வு பாராட்டியதன் காரணமாக உயர்ந்த வகுப்பு, தாழ்ந்த வகுப்பு என்ற பிரிவுகள் ஏற்பட்டு உயர்ந்த தொழிலைச் செய்தவர்கள் உயர்ந்தோர் என்றும் இழிந்த தொழிலைச் செய்தவர்கள் தாழ்ந்தவர் என்றும் ஆயினர். கல்வி, அரசு காவல், வாணிகம், வேளாண்மை முதலிய தொழில்கள் உயர்ந்த தொழில்களாகக் கருதப்பட்ட காரணத்தால் இத்தொழில் களைச் செய்த அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியோர் உயர்ந்தோர் ஆயினர்.[20] இவ்வுயர்ந்தோர் பின்னர் தனித்தனி பிரிந்து நால்வகை வருணத்தாராக நிலைத்தனர். இந்நால்வகை வருணத்துள் அடங்காத மக்கள் பிறரும் வாழ்ந்தனர். மருதநிலத்திலே தொழில் காரணமாகப் பல வகுப்புகள் தோன்றின.

சிலப்பதிகாரத்தில் மேலே கண்ட செய்தியின் உண்மை யினைக் காணலாம்.

காவிரிப்பூம்பட்டினத்திலே அரசவீதி, வணிகர் தெரு, மறையோர் இருக்கை, உழவர் உறையும் இடம் தனித் தனியே இருந்தன என்பதனை இந்திரவிழவூர் எடுத்த காதை எடுத்து மொழிகிறது.[21] கடலாடுகாதையில் இந்திர

---

19. திருக்குறள்; பெருமை : 2.
20. சிலம்பு; ஊர்காண் காதை : 183.
"நால்வகை வருணத்து நலங்கே ழொளியவும்"
21. ,, இந்திரவிழவூரெடுத்த காதை : 7-68.
**"கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும்**
**பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்**
**மாட மறுகு மறையோ ரிருக்கையும்**
**வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை."**
— இந்திரவிழவூரெடுத்த காதை : 40-43.

விழாவின் இறுதியிலே கடற்கரையிலே நால்வகை வருணத்தினரும் கூடியிருந்து எழுப்பிய பேச்சொலி எல்லா ஓசையினையும் அடக்கியது என்று குறிக்கப்பட்டுள்ளது. இந் நால்வகை வருணத்திற்கு அப்பாற்பட்டவர்களாக வேறுபல பிரிவினர் மருத்துவர், சோதிடர், முத்துக்கோப்போர், சங்கறுப்போர், சூதர், மாகதர், வைதாளிகர், நாழிகைக் கணக்கர், வேடம் புனைந்து சாந்திக் கூத்தாடுவோர், பாணர், விலைமாதர், கழைக்கூத்தாடிகள் முதலியோர் தனித்தனி இடங்களில் வாழ்ந்து வந்ததாக 'இந்திரவிழவூர் எடுத்த காதை' குறிப்பிடுகிறது.

மதுரை நகரிலும் நால்வகை வருணப்பிரிவைக் காட்டும் நால்வகைத் தெருக்கள் தனித்தனியே இருந்தன. வணிகர்கள், 'மன்னர்பின்னோர்' என்றும், 'அரசர் பின்னோர்' என்றும் சுட்டப்பட்டுள்ளனர். மேலும் பூதங்களில்கூட நால்வகை வருணப் பூதங்கள் இருந்தன என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.[22] அந்தண பூதம், அரசப் பூதம், வணிகப்பூதம் வேளாளப்பூதம் ஆகிய நான்கும் மதுரைநகரைக் காத்து வந்தனவாகவும், கண்ணகி மதுரையைத் தீக்கிரையாக்கியபோது இப்பூதங்கள் அந்நகரைக் காவாமல் விட்டு நீங்கின என்றும் 'அழற்படுகாதை' குறிப்பிடுகின்றது. (பூதங்களின் தோற்றமும் செயலும் கூடச் சிலப்பதிகாரத்தில் வருணிக்கப்பட்டுள்ளன.)

அந்தணப்பூதம் வெண்மை நிறமுள்ளது. குடை, முக்கோல், கமண்டலம், சமத்து முதலியன கைகளிலும் பூணூல் மார்பிலும் இருந்தன. அப்பூதம் நாவினால் வேதங்களை நவின்றுகொண்டிருந்தது. அரசப்பூதம் கதிரவன் போன்ற செந்நிறமுள்ளது. தலையிலே முடியும்

---

22. சிலம்பு; அரங்கேற்று காதை: 107. 'அந்தணர் அரசர் வணிகர் சூத்திரரென்று சொல்லப்பட்ட நால்வகை வருணப் பூதரையும்' — அடியார்க்கு நல்லார் உரை.

மார்பிலே மலர்மாலையும் இடையிலே பட்டாடையுடன் பல அணிகலன்களையும் அணிந்திருந்தது. முரசம், வெண் குடை, வெண்சாமரம், நீண்டகொடி, அங்குசம், வடிவேல், கயிறு முதலியவற்றைக் கையிலே கொண்டிருந்தது. வணிகப் பூதம் பொன்னிற மேனியை உடையது. தலையிலே மலர் மாலைகளையும் மார்பிலே கலவைச் சந்தனமும் அணிந்து அது சிவபெருமானைப் போன்ற தோற்றமுடன் காணப் பட்டது. கையிலே கலப்பையும் தராசும் இருந்தன. வேளாளப்பூதம் கருநிறமுள்ளது. கருமை நிறமுள்ள ஆடையை உடுத்தி வேலைப்பாடமைந்த வெள்ளிப்பூண் களை அணிந்து மார்பிலே அகில், சந்தனம் முதலான சுண்ணக் கலவையைப் பூசியிருந்தது. கோட்டுப்பூ, கொடிப் பூ, நீர்ப்பூ, நிலப்பூ ஆகிய நால்வகை மலராலும் ஆகிய மலரைத் தரித்திருந்தது. கையிலே கலப்பையை ஏந்தி யிருந்தது.[23]

மேலே காணும் நால்வகை வருணப்பூதங்களின் வருணனை கொண்டு அக்காலத்து வாழ்ந்த அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியோரின் தோற்றங்களைக் காணலாம். இவற்றால் சிலப்பதிகார காலத்தில் தமிழ் நாட்டில் பலவகைப்பட்ட சாதிகள் இருந்தன என்றும், அவர்கள் பல்வகைப்பட்ட பழக்கவழக்கங்களைக் கொண் டிருந்தனர் என்றும், ஆயினும் அவர்கள் தாம்தாம் மேற் கொண்ட தொழில்களைச் செவ்வனே செய்து ஒற்றுமை யாக வாழ்ந்து வந்தனர் என்றும் அறியலாம்.

### திருமண முறை

தொல்காப்பியனார் களவு, கற்பு எனக் காதல் வாழ்வினை வகைப்படுத்துவர். 'கற்பெனப்படுவது களவின் வழித்தே' என்ற மொழியும் பண்டைத்தமிழில் எழுந்த தாகும். திருமணத்திற்கு முன்னர்க் காதல் என்பதே இத்

---

23. சிலம்பு; கடலாடு காதை : 35.

தொடரின் பொருளாகும். சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பெறும் களவின் வழிவந்த திருமணம் என்பர் ஒருசார் அறிஞர்.[24] ஆயினும் அறிஞர் பலரும் அஃது பெற்றோர் தம்முள் கலந்து ஏற்பாடு செய்த திருமணம் என்றே மொழிவர்.[25]

**" இருபெருங் குரவரும் ஒருபெரு நாளால்**
**மணவணி காண மகிழ்ந்தனர் "[26]**

என்ற சிலப்பதிகார அடிகள் களவின்வழி வாராக் கற்பினைக் காட்டும் என்பர். இதற்கு ஏற்பவே சிலப்பதிகார உரை யாசிரியர் அடியார்க்கு நல்லாரும் கோவலன் கண்ணகி திருமணத்தை வடநூலார் குறிப்பிடும் எண்வகை மணங் களில் ஒன்றான பிரசாபத்தியம் எனக் குறிப்பிடுவர்.[27] பிரசாபத்தியத்தை விளக்கும்போது மைத்துன முறையான் ஒருவன் மகள் வேண்டிச் சென்றபோது மறாது கொடுத்தல் என்று விளக்கமும் வரைந்தார். எனவே கோவலன் கண்ணகி திருமணம் இருமுதுகுரவரும் ஏற்பாடு செய்த திருமணம் என்பது பெற்றாம்.

அந்நாளில் திருமணம் செய்வித்தற்குரிய வயது ஆடவர்க்குப் பதினாறு என்றும் மகளிர்க்குப் பன்னிரண்டு என்றும் கொள்ளப்பட்டதாக அறிகிறோம்.[28] திருமணம் உறுதியானதும் பெற்றோர் அதனை நகரமாந்தர்க்கு

---

24. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்; குடிமக்கள் காப்பியம், ப. 102.
25. சிலம்பு; பதிகம் : 41-42.
26. இதனைப் பிரசாபத்தியம் என்பர் அடியார்க்கு நல்லார்; அது தமிழில் ஒப்பு என்று கூறப்படும்; ஒப்பாவது மைத்துனக் கோத்திரத்தான் மகள் வேண்டிச் சென்றால் மறாது கொடுப்பது என்பர். — ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை.
27. சிலம்பு; மங்கல வாழ்த்துப் பாடல் : 24-34.
28. ,, ,, : 50-54.

அறிவித்தனர். யானையின் முதுகின்மேல் பெண்களை ஏற்றி நகரைச் சுற்றிவரச் செய்து மணச் செய்தியை பறை யறைந்து அறிவித்தனர். அப்பொழுது முரசு, முருடு, சங்கு முதலிய வாத்தியங்கள் ஒலித்தன. அரசன் நகரை வலம் வருதல் போலக் குடைகள் எழுந்தன. வைரமணித்தூண் தாங்கிய மண்டபத்தில் அழகிய மாலைகளைக் கட்டித் தொங்கவிட்டனர். நீலவிதானம் கட்டிய அழகிய முத்துப் பந்தலில் மணமக்களை அமரச் செய்தனர். சந்திரன் உரோகிணியைச் சேர்ந்த நல்லோரையில் மணவினை நிகழ்ந்தது.[29] நல்லாவூர்கிழார் பாடியுள்ள அகநானூற்றுப் பாடல் ஒன்று கொண்டு இதே கருத்தினை விளங்க அறி கிறோம். அதாவது சந்திரன் உரோகிணி நட்சத்திரத் தோடு பொருந்துகின்ற நாளே திருமணத்திற்கு ஏற்ற நாள் என்று கருதப்பட்டது. புதுமணல் பரப்பி மாலைகள் தொங்கவிடப்பட்ட பந்தற்கீழ்த் திருமணம் நிகழ்ந்தது. ஆயினும் அத்திருமணத்தை மணமான மகளிர் நால்வர் இருந்து நடத்தினர். ஆனால் கோவலன் கண்ணகி திருமணத்தை மாமுதுபார்ப்பான் முன்னின்று நடத்தினான். மணமக்கள் தீயை வலம் வந்தனர். விளக்கம் அமைந்த அழகிய பெண்கள் சாந்து, நறும்புகை, மாலை, சுண்ணம், விளக்கு, நன்கலம், முளைப்பாலிகை, நிறைகுடம் இவை களை ஏந்தினர். "இவள் தன் கணவனை ஒருபோதும் பிரியாமல் வாழ்க! இவனும் தன் தலைவியை அணைத்த கைகள் நெகிழாமல் வாழ்க! இவர்கள் தீமையற்று நலம் பெறுவார்களாக!" எனத் திருமணத்திற்கு வந்த முதியோர் வாழ்த்தினர். வாழ்த்தின் இறுதியில் தம் அரசனையும் வாழ்த்தி 'அவனுக்கு வெற்றி விளைவதாகுக!' என்றனர்.

## தனி மனை வாழ்க்கை

திருமணம் முடிந்ததும் பெற்றோர் புதுமணமக்களைத் தனிமனையில் இல்லறம் நடத்துவதைக் காண விழைந்

29. சிலம்பு; மனையறம் படுத்த காதை : 84-85.

தனர். இவ்வாறு தனிமனைப் புகுத்தும் பெற்றோர் மண மக்களின் இல்லத்திற்கு வேண்டிய பொருள், ஏவற்சுற்றம் முதலியவற்றைக் கொடுத்து மணமக்களைத் தனிமனைப் படுத்துவர். தனிமனைப் புகுத்துதல் அக்கால மரபென்று இதனால் விளங்குகின்றது.

## மகளிர் வாழ்க்கை

கற்புடைப்பெண்டிர் தாம் கொண்ட கொழுநனையே தெய்வமாகக் கருதினர்.

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை"

என்று திருவள்ளுவர் குறிப்பிடுவது போன்று பெண்கள் தனியாகச் சென்று பிற கடவுளரை வணங்குதல் இல்லை என்பது கோவலனைப் பிரிந்து தனிமைத் துயரெய்தி கண்ணகி வாழ்ந்த வாழ்வால் புலனாகிறது. தேவந்தி என்னும் கண்ணகியின் பார்ப்பனத்தோழி கணவனைப் பிரிந்த கண்ணகியின் வருத்தத்தைக் காண ஆற்றாது, "சோம குண்டம் சூரியகுண்டம் மூழ்கிக்காமவேள்கோட்டம் சென்று தொழுது வரலாம்; தொழுது வரின் கணவனை விட்டுப் பிரியாது வாழலாம்" என்று கூறிக் கண்ணகியை அழைத்த போது, கண்ணகி 'பீடன்று' எனக் கூறி மறுத்தாள். ஆயினும் கண்ணகி புகார் நகரை விட்டு வைகறையில் கோவலனோடு மதுரை நோக்கிச் சென்றபோது வழியில் ஸ்ரீகோயிலில் இடப்பட்ட ஒளிமிக்க சிலாவட்டத்தைத் தொழுது வலங்கொண்டு சென்றாள் என்பதனைக் காணும் பொழுது கணவனுடன் கோயில் சென்று வணங்குதல் உண்டு என்பது தெரியவருகிறது.

கற்புடைமகளிர் இல்லறத்தின் சிறந்த பயனாக அறவோர்க்களித்தல், அந்தணரோம்பல், துறவோர்க் கெதிர்தல், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர்கோடல் ஆகிய இவைகளைக் கொண்டனர் என்பது கண்ணகி கோவலனிடம் இறுதியாகப் பேசிய பேச்சிலிருந்து அறி

கிறோம். பெண்கள் தம் கொழுநர் நலனைப் பேணினர். அறுசுவை உண்டி சமைத்து அவர்களுக்குப் பறிமாறினர். கண்ணகி மாதரியின் வீட்டில் தங்கியிருந்தபொழுது அவர்கள் தந்த சமையற்கலன்களை வைத்துக் கொண்டு பல்வேறு காய்களை அரிந்து அடுப்பு மூட்டி அட்டில் தொழில் செய்து தன் கணவனுக்கு அன்புடன் பரிமாறிய செயல் நன்கு அறியப்படும். குறுந்தொகைப் பாடல் ஒன்றும் கணவன் இனிது! இனிது! என அகமும் முகமும் மலர மனைவி செய்த புளித்த தயிர்க்குழம்பினை உண்ணும் செய்தி ஒப்பிடற்பாலது.

### வீடுகள்

மக்களின் செல்வ வளம் அந்நாளில் மாண்புடையதாய் இருந்தது. வீடுகள் பெரியதாயும் பல மாடங்களை உடையதாகவும் இருந்தன. கோவலனின் தனிமனை எழுநிலை மாடங்கள் கொண்டது. நிலாக்காலங்களில் இனிது உறைந்து மகிழ்தற்குரிய நிலா முற்றங்களை அந்நாளில் மக்கள் தங்கள் வீடுகளில் பாங்குற அமைத்திருந்தனர். வேனிற்காலத்திற்கு ஏற்றது போன்றும், குளிர்காலத்திற்கு ஏற்றது போன்றதுமான பள்ளியறைகள் மாறும் தட்ப வெப்பநிலைகளுக்கேற்ப வீடுகளில் மாண்புற அமைக்கப் பட்டிருந்தன. அவைகளில் சன்னல்கள் அமைந்திருந்தன. அவைகள் குறுங்கண் எனப்பட்டன. செங்கல்லே வைத்துக் கட்டாது பளிங்குற் கற்களால் கட்டப்பட்ட மனைகளும் ஒரு சில பாங்குறத் திகழ்ந்தன. பொற்கலங்களே அடுகளங் களாகவும் உண்கலங்களாகவும் வழங்கிய மனைகளும் அந் நாளில் மிளிர்ந்தன. ஏழைகள் சிறுகுடிசைகளில் வாழ்ந் தனர். அக்குடிசை வீட்டின் சுவர்கள் செம்மண் ஊட்டப் பட்டன. அவ்வீடுகள் குளிர்ந்த அழகிய காவணத்தை யுடையன. தாலப்புல்லால் வேயப்பட்ட அழகிய சித்திர வேலைப்பாடுகள் அமைந்த தடுக்குகளை அவர்கள் உட்காரு வதற்குப் பயன்படுத்தினர்.

## ஊர்திகள்

மக்கள் நடந்தே பல ஊர்களுக்கும் சென்றனர். கோவலன், கண்ணகி, கவுந்தி, கவுசிகன், மாங்காட்டு மறையோன் முதலியோர் நடந்தே சென்ற காட்சியினை சிலப்பதிகாரத்தில் காண்கிறோம்.[30] செல்வம் படைத்த ஆடவர் அரசன் ஏறுதற்கமைந்த கோவேறு கழுதைகளில் ஏறிச் சென்றனர். பெண்கள் தேர் அல்லது வண்டிகளில் சென்றனர். இந்திரவிழாவின் இறுதியில் கடற்கரைக்குச் செல்லும்பொழுது கோவலன் கோவேறு கழுதைமீதும் மாதவி வண்டியிலும் சென்றனர்.[31] அரசர்கள் யானை மீதும் தேர்மீதும் ஏறிச் சென்றனர். செங்குட்டுவன் வடநாட்டுப் பயணத்தொடக்கத்தில் தன் நகரில் யானை மீது இவர்ந்து சென்ற செய்தி அறியப்படுகிறது.[32] திருமணச் செய்தியை ஊர் மக்களுக்கு அறிவித்தல், விழாச் செய்தியை நகர மக்களுக்குத் தெரிவித்தல், அரசனுடைய ஆணைச் செய்தியை மக்களுக்கு அறிவித்தல் முதலிய சமயங்களில் யானைகளின் முதுகின்மேல் முரசினை ஏற்றி முரசறைந்து நகரைச் சுற்றிவந்து அச்செய்திகளை மக்களுக்கு அறிவித்தனர். குதிரைகள் பெரும்பான்மையும் படைவீரர்க்குப் பயன்பட்டன.[33] கூடாரவண்டிகளும் அந்நாளில் வழக்கிலிருந்தன. சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குரிய படிவம் சமைக்க வடபுலம் நோக்கிப் படைகொண்டு சென்றபோது அவனுடன் இருபதினாயிரம் வண்டிகள் பண்டங்களை ஏற்றிச் சென்றனவாக வஞ்சிக்காண்டத்துள் சொல்லப்பட்டுள்ளது.[34]

---

30. சிலம்பு; நாடுகாண் காதை : 38.
31. ,, கடலாடு காதை : 119-120.
32. ,, கால்கோட் காதை : 60.
33. ,, ,, : 84 மற்றும் 134.
34. ,, ,, : 135-136.

## ஊழ்வினையில் நம்பிக்கை

உலகில் பிறந்த ஒவ்வொருவரும் முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளின் பலனை இப் பிறப்பில் அனுபவித்துத்தான் தீரவேண்டும் என்பது அந்நாளைய கொள்கையாகும். தொல்காப்பியனார் ஊழ்வினையினைப் 'பால்' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார்.[35] கணியன் பூங்குன்றனார் இயற்றியுள்ள புறநானூற்றுப் பாடலொன்றில், பேரியாற்றின் நீர்ப்போக்கின் வழியே செல்லும் ஓடம்போன்று உயிர்கள் ஊழ்வினையின் வழியே இயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்.[36] திருவள்ளுவர் 'ஊழ்' என்றே ஓர் அதிகாரம் வகுத்துள்ளார். ஊழிற் பெருவலி யாதொன்றும் இல்லையென்றும், ஊழ்வினை சூழினும் தான்முந்துறும் என்றும் ஒரு குறட்பாவில் அவர் குறிப்பிட்டுள்ளார்.[37] ஆயினும் முயன்றால் ஊழ்வினையை முறியடிக்கலாம் என்றும் பிறிதொரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

சமண சமயத்தினர் ''எந்தக் காரணத்தாலும் ஊழ்வினையை மீறமுடியாது; அது உருக்கொண்டுவந்து தன் பயனை ஊட்டியே தீரும்'' என்ற கொள்கை உடையவர்கள் ஆவர்.[38] சிலப்பதிகாரத்தின் பதிகமும் 'ஊழ் வினை உருத்துவந்து ஊட்டும்' என்பது அது விளக்கவந்த மூன்று கொள்கைகளில் ஓர் கொள்கையாகக் குறிப்பிடுகின்றது.[39] சிலப்பதிகாரத்தில் பலவிடங்களில் ஊழ்வினை வற்புறுத்தப் பட்டிருப்பதனைக் காணலாம். மேலும்

---

35. தொல்காப்பியம்; சொல்லதிகாரம்; கிளவியாக்கம் : 58.
36. புறநானூறு; 192.
37. திருக்குறள்; ஊழ் : 10.
38. சிலம்பு; ஊர்காண் காதை : 31-34.
39. பதிகம் : 55-57.

ஊழ்வினை காரணமாக நடந்தவை என்று பல நிகழ்ச்சிகளும் குறிக்கப்பட்டுள்ளன.[40]

முதன்முதலில் கானல்வரியில் ஊழ்வினையை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். மாதவியின் கானல் வரிப் பாட்டால் மனம் மாறிய கோவலன், அவள் நடத்தையிலே ஐய முற்றான்; எனவே கடல்விளையாட்டிற்கென இந்திர விழாவின் இறுதி நாளில் அவளோடு வந்த கோவலன் யாழிசைபோல் ஊழ்வினை வந்து உருத்த, மாதவியை விட்டு நீங்கினான்.[41]

அடுத்து, மாதவியை விட்டு நீங்கிய கோவலன் கண்ணகியிடம் நேரே வந்து, கடந்துபோன நிகழ்ச்சிகளுக்கு நாணி, இழந்த பொருளை மீண்டும் அடைய வாணிபம் செய்யும் பொருட்டு மதுரைக்குச் செல்கின்றான். விடியற்காலையில் கீழ்த்திசையில் கதிர் எழுவதற்கு முன்னேயே கண்ணகியுடன் புறப்பட்டான். அப்போது இளங்கோவடிகள் 'ஊழ்வினை வந்து சேர, அதன் ஏவலை மேற்கொண்டான்' என்று குறிப்பிட்டுள்ளார். கனாத்திறம் உரைத்த காதையின் கீழ்க் காணப்பெறும் வெண்பாவிலும் இவ் வூழ்வினை வற்புறுத்தப்பட்டுள்ளது. 'முன்செய்த தீவினை வந்து இவன் உள்ளத்தைச் செலுத்துதலால்' கோவலன் மதுரை ஏகினான் என்று நாடுகாண் காதையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கொலைக்களக் காதையிலும் ஊழ்வினையே ஆட்சி புரியக் காணலாம்.

---

40. சிலம்பு; 7 : 52; 9 : 78-79; 10 : 4; 16 : 148-153; 16 : 154-157; 16 : 212-217; 19 : 41-42; 19 : 45-46; 20 : 59-63; 23 : 27-30; 23 : 171-172; 24 : 5-6; 27 : 49-52; 27 : 57-65; 29 : 3.

41. சிலம்பு; கானல்வரி : 52.

பாண்டிய நாட்டு மன்னன் நெடுஞ்செழியன் நீதிநெறி வழுவாத — கொடுங்கோன்மை அறியாத செங்கோல் வேந்தன். ஆயினும் அறநெறி தவறாத அவன் பொற் கொல்லன் சொல்லை நம்பிக் கோவலனைக் கொல்லப் பணித்தான். இதற்குக் காரணம் ஊழ்வினையே என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். 'வினைவிளை காலம்' என்ற சொல்லால் 'ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்' என்னும் கருத்தினை வற்புறுத்தியுள்ளார்.

அரசன் கட்டளையினை ஏற்றுச் சென்ற ஊர்க் காவலரும், பொற்கொல்லனும் 'தீவினை சூழ்ந்த வலையிலே அகப்பட்டிருந்த கோவலனை அடைந்தனர்' என்று குறிப்பிடுமுகத்தான் இளங்கோவடிகள் கோவலன் வினைக்கு ஆட்பட்டிருந்த நிலையினை விளக்கியிருக்கக் காணலாம்.

கோவலன் கல்லாக் களிமகனான காவலன் ஒருவனால் வெட்டுண்டு வீழ்ந்தான். இளங்கோவடிகள் இதனைப் பண்டை வினையின் செயல் என்றும், பாண்டியன் செங்கோல் கொடுங்கோல் ஆகும்படி, முன்னைத் தீவினை யின் முதிர்ச்சியால் கோவலன் வெட்டுண்டு வீழ்ந்தான் என்றும் இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

கோவலன் கொலையுண்டதைக் கேட்ட கண்ணகி ஆற்றொணாத் துயருற்றாள். அவள் அழுது அரற்றி ஊரைச் சுற்றி வரும்பொழுது 'மன்னனால் செய்யப்பட்டது இக் கொலைத் தொழில்; ஆயினும் நான் செய்த தீவினை தான் இவ்வாறு எனக்குத் துன்பத்தைத் தந்தது என்று மற்றவர் சொல்லமாட்டார்களோ' என்று சொல்லிப் புலம்பினாள். இவ்வாறு மூன்று முறை அடுத்தடுத்து அரற்றித் தீவினையின் செயலினைக் கண்ணகி குறிப்பிட்டுப் பேசுகின்றாள். கண்ணகியின் இக் கூற்றால் பாண்டியன், கோவலனைக் கொல்லும்படி செய்தது தீவினையின் பயன் தான் என்பது போதருகின்றது.

வழக்குரை காதையிலும் 'நீ யார்?' என்று கேட்ட பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு 'ஊழ்வினை செலுத்திய தனால் உன் நகரை அடைந்த கோவலன், என் காற் சிலம்பை விற்க முனைந்த செயலால் கள்வன் என்று குற்றம் சாட்டப்பெற்றுக் கொலைப்பட்டான்' என்று குறிப்பிடு கின்றாள்.

கட்டுரை காதையில் மதுராபதித் தெய்வத்தின் வாயிலாக ஊழ் இரண்டிடங்களில் வற்புறுத்தப்பட்டுள்ளது. "ஊழ்வினையாலேயே பாண்டியன் தவறு செய்தான்; ஊழ்வினையாலேயே கோவலன் கொலையுண்டான்" என்று அத் தெய்வம் (மதுராபதித் தெய்வம்) கண்ணகியிடம் கூறுகின்றது. மேலும் "முன்வினை உருக்கொண்டு வந்து தன் பயனை நுகரச் செய்யும்போது அத்தீவினையாளர்க்கு எந்தத் தவமும் பயன்படாது; அவ் வூழின் செயலைத் தடுக்கமுடியாது" என்று மற்றோரிடத்திலும் மதுராபதித் தெய்வம் உரைக்கின்றது.

வஞ்சிக் காண்டத்தின் தொடக்கத்திலேயே ஊழ் வினையின் ஆற்றல் கண்ணகி கூற்றால் வெளிப்படக் காணலாம். வேங்கைமர நிழலிலே கண்ணகியைக் கண்ட குறவர்கள் "வேங்கை மர நிழலில் நிற்கும் வள்ளி போல்வர். மனம் நடுங்க, முலையிழந்து வந்து நிற்கும் நீவிர் யாவிரோ" எனக் கேட்க, கண்ணகி அதற்கு "முன்னைவினையால் மதுரையும் அரசனும் அழியும்படி கணவனை யிழந்தேன்; தீவினையை யுடையேன்" என்று விடையிறுத்தாள். நீர்ப்படைக் காதையிலும் மாடல மறையோன் கூற்றால் ஊழ்வினை வற்புறுத்தப் படுகின்றது. ஊழ்வினை கானல்வரிப் பாட்டுடன் கலந்து வந்தது என்றும், அதன் தொடர்பாகவே கோவலன் கொலைப்படல், கண்ணகி நின்நாடு வரல், வடதிசை மன்னர் நின்னால் சிறைப்பட்டுப் பத்தினிக் கடவுளுக்குரிய படிமத்தை முடித்தலையிற் சுமத்தல் முதலாய நிகழ்ச்சிகள் விளைந்தன என்றும் குறிப்பிட்டான்.

சிலப்பதிகாரத்தின் இறுதிக் காதையான வாழ்த்துக் காதையிலும் ஊழ்வினை வலியுறுத்தப்பட்டுள்ளது. ''பழ வினை காரணமாகக் கணவனை யிழந்து துன்புற்றாள் கண்ணகி. அவளுடைய கண்ணீர் கொன்றதனால் உயிர் இழந்தான் பாண்டியன்; அவன் வாழ்க'' என்று ஆய மகளிர் வாழ்த்துகின்றனர்.

மேலும் 'ஊழ்வினையைத் தடுக்க முடியாது, அது அதன் பயனை ஊட்டியே தீரும்' என்னும் கருத்து சிலப்பதி காரம் முழுவதும் எதிரொலி செய்கின்றது. நாடுகாண் காதையில் சாரணர் வாயிலாக ஊழ்வினை வலியுறுத்தப் படுகிறது. ஊர்காண் காதையிலே கவுந்தியடிகளின் வாயுரையால் ஊழ்வினையின் திட்பம் உரைக்கப்படு கின்றது.

கோவலன் மாதவியை விட்டுப் பிரியும்படி செய்தது ஊழ்வினை; அவன் மனைவியுடன் மதுரைக்குப் புறப்படும் படி செய்தது ஊழ்வினை; பாண்டிய வேந்தன் கோவலனைக் கொல்லும்படி ஆணையிட்டது ஊழ்வினை; ஊர்க் காவலர் களில் ஒருவனான கல்லாக் களிமகன் கோவலனை வாளால் வெட்டி வீழ்த்தியது ஊழ்வினை; கண்ணகி தன் கணவனை இழந்தது ஊழ்வினை; இவ்வாறு ஊழ்வினையின் செயல்களே சிலப்பதிகாரக் காதையினைத் தொடர்ந்து நடத்திச் செல்லக் காண்கிறோம்.[42]

## முற்பிறப்பு மறுபிறப்பு நம்பிக்கை

ஊழ்வினையில் நம்பிக்கைக் கொண்ட தமிழ் மக்கள் மறுபிறப்பையும் நம்பினார்கள். இப்பிறப்பிலே ஒருவர் துய்க்கும் இன்ப துன்பங்களுக்கு முற்பிறப்பில் செய்த வினையே காரணம் என்ற கருத்து அன்று தமிழரிடை நிலவியது. ''இப்பிறப்பில் நல்வினை ஆற்றுவோர் மறு பிறப்பில் இன்புறுவார்கள்; தீவினை செய்வோர் துன்புறு

42. சிலம்பு; நீர்ப்படைக்காதை : 49-51.

வார்கள்.'' ஊழ்வினையைப் பற்றிய இந்தக் கொள்கை மறுபிறப்பைப் பற்றிய கருத்தோடு ஒத்துவரக் காணலாம்.

மீண்டும் பிறவி எடுக்க வேண்டாம் என்றால் இப் பிறவியில் பற்றில்லாமல் வாழ வேண்டும்; பயன் கருதாமல் செயல்களைச் செய்யவேண்டும். திருவள்ளுவரும் இறைவன் திருவடியினை அடையாதாரே மீண்டும் மீண்டும் பிறவி யாகிய பெருங்கடலில் நீந்துவர் என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் பற்றற்றவனாகிய இறைவனைப் பற்ற வேண்டும்: அப்போதே பிறவிக்குக் காரணமான பற்று அறும் என்றார். பற்று அறுமானால் வீடு பேறு வாய்க்கும் என்றார் நம்மாழ்வார். பிறப்பிலும் ஏழு பிறப்பினை உடன்படுகின்றார் திருவள்ளுவர்.[43]

சிலப்பதிகாரத்தும் மறுபிறவி பற்றிய நம்பிக்கை இடம் பெற்றிருக்கக் காணலாம்.

''கணவன் பொருட்டுச் செய்யவேண்டிய ஒரு நோன்பினை முன்பிறவியிலே நீ செய்யவில்லை'' என்று கண்ணகியைப் பார்த்துத் தேவந்தி கூறும் கூற்றில் முற்பிறப்பு பற்றிய நம்பிக்கையினைக் காணலாம்.

**கணவற்கு ஒரு நோன்பு பொய்த்தாய் பழம்பிறப்பில்**

அடுத்து, 'பிறப்பைத் தரும் பாசம் கவுந்தியை விட்டு ஒழிக' என்று கவுந்தியைச் சாரணர் வாழ்த்தும் குறிப்பால் பிறவிகளில் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை புலனாகின்றது.

அடுத்து, 'ஏழு பிறப்பிலும் யாங்கள் உனக்கு அடிமை' (ஏழ்பிறப்படியேம்) என்று குறவர்கள் மலைவளங் காண வந்த செங்குட்டுவனிடம் கூறுகின்றனர்.

மேலும் மாடலன் செங்குட்டுவனுக்குப் பின்வருமாறு உயிரின் தன்மையினை எடுத்துரைத்தான்:

---

43. திருக்குறள்; கடவுள் வாழ்த்து; 8, 10 மற்றும் புதல்வரைப் பெறுதல் : 2.

''தெய்வப் பிறப்படைந்த ஒரு நல்ல உயிர் அதை விடத் தாழ்ந்த மக்கள் பிறவிக்குத் திரும்பினாலும் திரும்பும்; மனிதப் பிறவியை எடுத்த ஓர் உயிர் விலங்கின் பிறப்பை அடைந்தாலும் அடையும்; விலங்காகப் பிறந்த அவ்வுயிர் மிகுந்த துக்கத்துக்கு இடமான நரகர் பிறப்பை அடைந்தாலும் அடையும்; இவ்வுயிர் ஆடும் கூத்தர் போன்றது. ஒரு வழியிலே ஒரு கோலம் கொண்டு நிற்காது. தான் செய்கின்ற வினைக்குத் தகுந்த பிறப்பை அடையும். இது குற்றமற்ற அறிஞர்களின் உண்மை உரையாகும்.''

மேலும் மாடலன், ''நல்லறம் புரிந்தோர் பொன்னுலகை அடைவது; ஒன்றிலே பற்றுக்கொண்டோர் அப்பற்றுள்ள இடத்திலே பிறப்பது; அறப்பாவங்களின் பயன் உடனே பலிப்பது; பிறந்தவர் இறப்பது; இறந்தவர் பிறப்பது; இவைகள் எல்லாம் புதியன அல்ல; பழமையானவை'' என்று குறிப்பிடுகின்றான். மாடலனின் இக் கூற்று மறுபிறப்பு உண்டு என்பதை உணர்த்துவதாகும்.

''பழம் பிறப்பை உணர்வோர் ஆவார்'' (பண்டைப் பிறவியர் ஆகுவர்); ''ஒளித்திருக்கும் பழம் பிறப்பை உணர்ந்தோர் ஆவார்'' (ஒளித்த பிறப்பினர் ஆகுவர்) இவை தேவந்தியின் கூற்று. ''பழம் பிறப்பு உணர்ச்சி—நினைவு—வந்து சேர்ந்தது'' (ஒளித்த பிறப்புவந்து உற்றது) இது பழம் பிறப்பை உணர்ந்த சிறுமியரைப் பற்றிச் சொல்லியதாகும்.

மேலும், மதுராபதித் தெய்வம் கோவலன் முற்பிறப்பைப் பற்றிய கதையினைக் கூறுகின்றது. ஒரு கையைக் குரங்கின் கையாகக் கொண்ட தெய்வ குமாரனைப் பற்றிக் கூறும் கதை முதலியன மறுபிறப்பை வலியுறுத்தும் கதைகளாகும்.

''கோவலன் தாயும், கண்ணகியின் தாயும் கோவலன் அடைந்த கொடுந்துயர் கேட்டு மாண்டனர். அவர்கள் கண்ணகியிடம் கொண்ட அன்பால், வஞ்சிமா நகரில்

அரட்டன் செட்டியின் மனைவியின் வயிற்றிலே பெண் களாகப் பிறந்தனர்.

கண்ணகியின்பால் அன்பு கொண்ட இடைச்சியாகிய மாதரி திருமாலிடம் பற்றுக் கொண்டு குரவைக்கூத்து நிகழ்த்தினாள். ஆதலால் அவள் திருவனந்தபுரத்திலே திருமாலுக்குப் பணி செய்யும் சேடக்குடும்பியின் மகளாகப் பிறந்தாள்.''

சிலப்பதிகாரம் கூறும் மேற்கண்ட செய்திகள் மறு பிறப்பு பற்றிய நம்பிக்கை அந்நாளில் மக்களிடையே நிலவியதனை விளங்க எடுத்துரைக்கின்றன.

**கனவில் நம்பிக்கை**

மூன்று கனவுகள் சிலப்பதிகாரத்தில் பேசப்பட்டுள்ளன. ஒவ்வொரு தீய நிகழ்ச்சியையும் முன்கூட்டியே கனவு சிலருக்கு அறிவித்துவிடும் என நம்பினர். கோவலன், கண்ணகியைத் திரும்ப வந்து அடைவதற்கு முன்பு, புகார் நகரில் தன்வீட்டில் கண்ணகி ஒரு தீய கனவு கண்டாள். 'கோவலன் திரும்பிவந்து கண்ணகியின் கையைப் பற்றினான்.[44] இருவரும் புகார்நகரைக் கடந்து வேறொரு பெரும்பதியை அடைந்தனர். அப்பதியிலிருந்தோர் பொய்த் தேளிடுவது போலக் கண்ணகி மீது ஒரு பெரும் பழியைச் சுமத்தினர். கோவலனுக்கு அதனால் பெருந்தீங்கு ஒன்று உண்டாயிற்று. அதுகேட்ட கண்ணகி அவ்வூர் மன்னன் முன்பு உண்மையைக் கூறி முறையிட்டாள். நீதி வேண்டினாள். உடனே அவ்வரசனுக்கும் ஊருக்கும் பெருந்தீங்கொன்று விளைந்தது.' இதுவே கண்ணகி கண்ட கனவாகும்.

இரண்டாவது நாம் காணும் கனவு கோவலன் கண்ட தீக்கனவாகும். மதுரையின் புறத்தே தங்கியிருந்த கோவலன் தான் கண்ட கனவினைக் கவுந்தி அடிகளிடம்

---

44. சிலம்பு; கனாத்திறமுரைத்த காதை : 45-54.

பின் வருமாறு அறிவித்தான். 'மதுரையில் கடைக்குணத் தோன் ஒருவனால் கண்ணகி கண்டோர் உள்ளம் பதைக்கத் தக்க ஒரு பெரும் துன்பமெய்தினாள். கோவலன் உடுத்தி யிருந்த ஆடையைப் பிறர் பறித்தனர்; கோவலன் ஒரு எருமைக்கடாவின் மீதேறிக் கண்ணகியுடன் வீட்டுலகை நண்ணினான். மாதவி, மணிமேகலையைப் போதி அறவோன் முன்பு அளித்தாள்'. இவ்வாறாகக் கோவலன் தன்கனவினைக் கவுந்திக்குக் கூறினான்.[45]

மூன்றாவதாக இடம் பெற்றுள்ள கனவினைக் கண்டவள் பாண்டிமாதேவி ஆவள். பாண்டியன் இறப் பதற்கு முன் ஒரு தீ நிமித்தம் போன்று இத்தீக்கனவினைக் கண்டாள் அவள். 'பாண்டியனுடைய செங்கோலும் வெண்கொற்றக் குடையும் நிலத்தில் விழுந்தன. அரண்மனை வாயிலில் தொங்கிக் கிடந்த ஆராய்ச்சி மணியின் குரல் நடுங்கியது; திக்கெட்டும் அதிர்ந்தன; பகற் பொழுதிலேயே கதிரவனை இருள் விழுங்கியது: இரவில் வானவில் தோன்றியது; பகற்போதில் விண்ணி னின்றும் மீன்கள் விழுந்தன. பாண்டிமாதேவி கண்ட தீக்கனாவாகும் இது.[46].

இம்மூன்று கனவுகளும் பின் விளையப் போகும் நிகழ்ச்சிகளை முன்கூட்டியே சுட்டியமை நன்கு அறியப் படும்.

## சகுனத்தில் நம்பிக்கை

கனாக்களேயன்றிச் சகுனங்களிலும் அக்கால மக்கள் பெரும் நம்பிக்கை கொண்டிருந்தனர். பெண்களுக்கு இடக்கண் துடிப்பது நல்ல சகுனமாகவும் வலக்கண் துடிப்பது தீய சகுனமாகவும் கருதப்பட்டன. இந்திர விழாவின் இறுதிநாளில் கண்ணகியின் இடக்கண் துடித்தது.

---

45. சிலம்பு; அடைக்கலக் காதை : 95-106.
46. ,, வழக்குரை காதை : 1-12.

கண்ணகி கோவலனை விரைவில் அடைவாள் என்பதற்கு அறிகுறியாக இருந்தது. கோவலன் மாதவியைப் பிரிவான் என்பதற்கு அறிகுறியாக மாதவியின் வலக்கண் துடித்த தாக இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

ஆயர்கள் ஒரு செயலை மேற்கொண்டு தெரு வழியே செல்லும்பொழுது இமிலேறு ஒன்று எதிர் வந்தால் அதனைத் தீய சகுனமாகக் கருதினர் என்பதனை இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். கோவலன் சிலம்பை விற்கச் செல்லும்பொழுது மாதரி மனையைத் தாண்டிய அளவில் இமிலேறு ஒன்று எதிரில் வந்தது. அதனை அவன் ஆயர் குலத்தவன் அல்லாத காரணத்தால் தீய சகுனம் என்று அறியாது மேலே சென்றான் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

கோவலன் கொலையுண்டான் என்ற செய்தியினை மாதரியோடு வாழ்ந்த ஆய்ச்சியர் சில நிமித்தங்களால் முன் கூட்டியே அறிந்தனர். ஆய்ச்சியர் சேரியில் குடத்துப் பால் உறையவில்லை. குவியிமிலையுடைய ஏறுகள் கண்ணீர் சொரிந்தன. உறியிலிருந்த வெண்ணெய் உருக வில்லை. மறிகள் முடங்கி ஆடவில்லை. அவற்றின் கழுத்தில் கட்டிய மணிகள் அறுந்து நிலத்தில் விழுந்தன.

இவற்றால் எல்லாம் அக்காலத்தில் சகுனத்தில் மக்கள் கொண்டிருந்த பெரும் நம்பிக்கையைத் தெள்ளிதின் உணரலாம்.[47]

## நல்ல நாளில் நம்பிக்கை

வினைகளை மேற்கொள்ளும் பொழுது அவ்வினையில் வெற்றி பெற நல்ல நாள்களைப் பார்த்துத் தொடங்குவது

---

47. சிலம்பு; இந்திரவிழவூரெடுத்த காதை : 237-239; கொலைக்களக்காதை : 98-101 மற்றும் ஆய்ச்சியர் குரவை : 5.

என்பது அக்கால மரபாகும். கோவலன் கண்ணகி திருமணம் சந்திரன் உரோகிணியைச் சேர்ந்த நல்லோரையில் நடைபெற்றது.[48] அதுபோன்றே செங்குட்டுவன் வடநாட்டுச் செலவைத் தொடங்குதற்குரிய நன்முழுத்தத் தினை அரண்மனைப் புரோகிதர் அறிவித்த அளவிலே செங்குட்டுவன் உடனே புறப்பட இயலாமையால் செங்குட்டுவன் வடதிசை நோக்கித் தன் குடைகளைப் புறவீடு விடுத்தான்.[49]

## சாபத்தில் நம்பிக்கை

சாபத்திலும் சாப விமோசனத்திலும் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். மதுரை வழிநடைச் செலவின்போது கவுந்தியடிகள் கோவலன் கண்ணகி குறித்து வறுமொழியாளனும் வம்பப்பரத்தையும் பொருந்தா உரை புகன்றபோது கவுந்தியடிகள் சினமுற்று 'அவர்கள் உறையூர் காட்டில் நரிகளாகுக!' எனச் சபித்தார்.[50] சபித்ததும் நரிகள் ஊளையிடும் ஒலியினைக் கண்ணகியும் கோவலனும் கேட்டனர். அவர்கள் அறியாமையால் செய்த பிழையைப் பொறுத்து அவர்களுக்குச் சாப விமோசனம் வேண்டினர். கவுந்தியடிகளும் சாப விமோசனம் வழங்கினர்.

அடுத்து, மதுரை மாநகரம் குறிப்பிட்ட இந்த நாளில் அழியவேண்டும் என்று அந்நகர்க்கு முன்பே ஒரு சாபம் உண்டென்பதை மதுராபதித் தெய்வம் கண்ணகிக்குத் தெரிவித்தது.[51] மேலும் கண்ணகி இப்பிறவியில் உழந்த துன்பத்திற்குக் காரணம் முற்பிறவியில் நீலி என்பாள் இட்ட சாபம் காரணமேயாகும் என்பதும் சிலப்பதி

---

48. சிலம்பு; மங்கல வாழ்த்துப் பாடல் : 50-51.
49. ,, கால்கோட் காதை : 44-45.
50. ,, நாடுகாண் காதை : 231-245.
51. ,, வஞ்சின மாலை : 49-52.

காரத்தில் குறிக்கப் பெற்றுள்ளன.[52] இவற்றால் சாபம் முதலியவற்றில் அக்கால மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை புலனாகின்றது.

## ஆடை அணிகள்

பெண்கள் தூய மெல்லிய ஆடைகளை உடுத்தினர்; கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டி நறுமணம் பொருந்திய பூக்களைச் சூட்டினர்; நெற்றியில் திலகமிட்டுக் கொண் டனர்; கண்களில் அஞ்சனம் தீட்டினர்; காதில் குழை அணிந்தனர். மார்பில் சந்தனம் முத்துவடம் முதலிய வற்றை அணிந்தனர்; தோள்களிலும் மார்பிலும் தொய்யில் எழுதினர்; இடையில் மேகலை அணிந்திருந் தனர்; கால்களில் சிலம்பு அணிந்திருந்தனர்.[53]

## வாணிபம்

புகார், மதுரை முதலிய பெரு நகரங்களில் பல்வேறு மக்கள் பல்வேறு தொழில்களை மேற்கொண்டிருந்தனர். ஒவ்வொரு தொழில் ஆற்றுவோருக்கும் தனித் தனித் தெருக்கள் அமைந்திருந்தன. அவர்களுக்குப் பெயர்களும் தெருக்களுக்குப் பெயர்களும் அவர்கள் மேற்கொண்ட தொழில்களை ஒட்டியே அமைந்திருந்தன.

## கலைகள்

தமிழ் மக்கள் இசைக்கலையையும் நாட்டியக்கலையை யும் மிகவும் உயரிய நிலையில் அந்நாளில் வளர்த்துச் சிறந் திருந்தனர். ஐவகை நிலமக்களும் கூத்துக்கள் வழியே கடவுளைப் பரவி நின்றனர். விறலியர் நாட்டியக்கலையை நயமுற வளர்க்க, பாணரோ இசைக்கலையைச் சீர்மை பெற வளர்த்தனர். நாட்டியக்கலையைக் குலமகளிர் அன்றி விலைமகளிரே பயின்றதாகச் சிலப்பதிகாரத்தால்

---

52. சிலம்பு; கட்டுரை காதை : 149-178.
53. ,, கடலாடு காதை : 76-108.

அறியக்கிடக்கின்றது. புகாரிலும் மதுரையிலும் தனித் தெருக்களில் இவர்கள் வாழ்ந்தனர். இவர்கள் செல்வச் செழிப்போடு வாழ்ந்தனர். ஆடையணிகலன்களில் அமை வுறத் திகழ்ந்தனர். ஆடல் மகள் மாதவி பதினாறுவகை ஓமாலிகைகளால் தன்னை அலங்கரித்துக் கொண்ட செய்தி யும் மதுரைப் பரத்தையர் இனிய நீர் விளையாட்டிலும் பொழில் விளையாட்டிலும் காலத்தைப் போக்குகின்ற நிகழ்ச்சிகளும் இவர்கள் ஆடம்பர வாழ்வில் அணிபெறத் திகழ்ந்த நிலையினை உணர்த்தும். பரத்தையர் பெண்கள் ஐந்தாவது வயது தொடங்கிப் பன்னிரண்டாவது வயதுவரை ஏழு ஆண்டுகள் நாட்டியக்கலையை நலமுறப் பயின்றனர். பன்னிரண்டாம் வயதில் அரசன் முன்னிலையில் பெரிய நாட்டிய அரங்கில் அரங்கேற்றம் நிகழும். நாட்டியத்திற்குக் குழலாசிரியன், யாழாசிரியன் முதலியோர் அரங்கில் அமர்ந்து துணை செய்வர். இவ்வாசிரியருடைய இலக்கணங் களெல்லாம் அரங்கேற்றுக் காதையில் ஆசிரியர் இளங்கோ வடிகளால் அணிபெறக் கிளத்தப்பட்டுள்ளது. ஒருமுக எழினி, பொருந்துவரல் எழினி, கரந்துவரல் எழினி என்று மூவகைப்பட்ட திரைச்சீலைகள் பேசப்பட்டுள்ளன. ஆடரங்கில் தூண்நிழல் விழாவண்ணம் பெருவிளக்குகள் ஏற்றப்பட்டுள்ளன. நாட்டிய அரங்கின் அமைப்பும் விளங்க உரைக்கப்பட்டுள்ளது. நாட்டியமாட அரங்கில் ஏறும்போது வலக்காலை முன்வைத்து ஏறவேண்டும் என்பது அக்கால நியதி. கலைகள் அரசன் முன்னிலையில் நடிப்பன (வேத்தியல்), பொதுமக்கள் முன்னிலையில் நடிப்பன (பொதுவியல்) என இருவகைப்பட்டன. நாட்டியம் முடிந்ததும் மன்னன் நாட்டிய நங்கையின் தகுதிக்கேற்பப் பட்டமும் பரிசும் வழங்குவது மரபு. மாதவி பதினோரு ஆடல்களை நன்கு கைவரப் பெற்றிருந்தாள் என்பது சிலப்பதிகாரம் நமக்குத் தெரிவிக்கும் செய்தியாகும். யாழைக் கொண்டு பாட்டிசைத்தனர் என்பது கானல்வரி யால் அறியலாகும். இசைப் பாணர் பாட்டிசைக்கும்

செய்தியும் இனிதே கிளத்தப்பட்டுள்ளது. பொதுவாக, சிலப்பதிகாரத்தின் பலவிடங்களிலும் இசையும் கூத்தும் பற்றிய செய்திகள் இனிமையுறக் கிளத்தப்பட்டுள்ளன. செங்குட்டுவன் வடநாட்டுப் பயணத்தின்போது அவனுடன் நாட்டிய மடந்தையர் பலர் சென்ற செய்தி ஈண்டு மனங் கொளத் தக்கது.

இதுகாறும் கூறியவற்றால் சிலப்பதிகாரம் காட்டும் அக்காலச் சமுதாய வாழ்க்கை ஒருவாறு உரைக்கப்பட்டது காணலாம். அச்சமுதாய வாழ்வு நலமும் வளமும் வாழ்வும் வகையுறப் பெற்று மிளிர்ந்தது என்பதனை 'அங்கைநெல்லிக் கனி' என நமக்குச் சிலப்பதிகாரம் உணர்த்தி நிற்கின்றது.

## கடவுள் நம்பிக்கை

சிலப்பதிகார காலத்தில் தமிழ்மக்கள் பல பெருந் தெய்வங்களையும் பல சிறு தெய்வங்களையும் போற்றி வணங்கி வந்தனர். தெய்வங்களுக்கு தினந்தோறும் பூசை களும் அடிக்கடி திருவிழாக்களும் நடந்தன.

மருதநிலத் தெய்வம் இந்திரன் தமிழ்மக்களால் தெய்வ மாகப் போற்றப்பட்டான். வளம் நிறைந்த ஊர்களில் எல்லாம் இந்திரனுக்குக் கோயில்கள் இருந்தன. சித்திரைத் திங்களில் நிறைநிலா நாள் அன்று இந்திரவிழா தொடங் கியது. தொடர்ந்து 28 நாள்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா மக்களால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. 'இந்திர விழவூரெடுத்த காதை' இந்திரவிழாவின் நடை முறையினை விளங்கக் கூறுகிறது.

முல்லைநிலத் தெய்வமான மாயோன் கண்ணனாக ஆயர்பாடியில் அவதரித்தான். கண்ணனின் சரிதம் சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவையில் விரிவாகக் காணலாம். ஆய்ச்சியர் குரவையில் திருமாலின் அவதாரங்கள் பல குறிப்பிடப்பட்டுள்ளன. கண்ணனின் பாலலீலைகளும் மற்றச் செயல்களும் விரிவாகக் கூறப்

பட்டுள்ளன. தேவர்கள் வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கித் திருமால் உதவியுடன் பாற்கடலைக்கடைந்த செயல் குறிக்கப்பட்டுள்ளது. பின்னர், திருமால் வாமனாவதாரம் எடுத்ததையும் மாவலிபால் மண் பெற்றுத் திருவிக்கிரம அவதாரமாகத் திகழ்ந்ததையும் ஆய்ச்சியர் பாடும் பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது. பிறிதொரு பாடல் மூவுலகையும் தன் இரண்டடியால் அளந்து அந்தச் சிவந்த பாதங்கள் மேலும் சிவக்கத் தன் தம்பியாகிய இலக்குவனோடு காட்டிற்குச் சென்று மதில்காவலிற் சிறந்த பழமை சான்ற இலங்கை மாநகரை வென்ற ஒப்பற்ற பெரிய வீரனாகிய இராமபிரானின் பெருமையைக் கேட்கும் செவிகளே செவிகள், திருமாலின் பெருமை கேளாத செவிகள் செவிகளல்ல என்று குறிப்பிடுகிறது. இப் பாட்டில் திருவிக்கிரம அவதாரமும் இராமாவதாரமும் குறிப்பிடப்படுகின்றன.

"பெரிய கோயில் என்று வைணவர்களால் பெரிதும் பாராட்டப்படும் திருவரங்கம் சிலப்பதிகாரத்தில் குறிக்கப் பட்டுள்ளது. அலைநிறைந்த காவிரியின் இடையில் அமைந் துள்ள திருவரங்கத்தில் நீலமேகம் ஒன்று பொற்குன்றம் ஒன்றின்மேல் அடைத்துப் படுத்திருப்பதுபோல, திருமால் பொன்னிற உருவுள்ள ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையிலே பலரும் தொழு தேத்தப் பள்ளிகொண்டுள்ளார்" என்று குறிப்பிடப் பட்டுள்ளது.[54] அடுத்து திருவேங்கடத்தில் எழிலார்ந்த, நின்ற திருக்கோலத்தோடு காட்சி தரும் திருமால் பின்வருமாறு வருணிக்கப்பட்டுள்ளார்.[55]

"வேங்கடமலையிலே சிறந்த அருவி உண்டு. அந்த மலையின் உச்சியிலே, சூரியனும் சந்திரனும், இருபுறமும் உயர்ந்து காணப்படும் நடு இடம் ஒன்றுண்டு. அந்த

---

54. சிலம்பு; காடுகாண் காதை : 35-40.
55. ,, ,, : 41-51.

இடத்திலே, திருமால் சங்கு சக்கரங்களை முறையே வலக்கரத்திலும், இடக்கரத்திலும் ஏந்தி நிற்கின்றார். அழகிய ஆரத்தை மார்பிலே பூண்டிருக்கின்றார்; பொன்னாடையை உடுத்தியிருக்கின்றார். இவ்வாறு, செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் நின்ற கோலத்திலே காட்சியளிக்கின்றார். இத்தோற்றம், நல்ல நீலநிறமுள்ள மேகம் ஒன்று, தன் மின்னலாகிய புத்தாடையணிந்து, தன் ஒளியாகிய அணிகலம் பூண்டு, நின்று காட்சி தருவதைப் போல் காணப்படுகிறது.''

'திருமால் குன்றம்' என்ற பெயரால் அழகர்மலை கூறப்படுகிறது.[56] அதன் பெருமை, அதிலுள்ள சிலம்பாறு, புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி என்னும் தீர்த்தங்களின் மகிமை முதலியனவெல்லாம் 'காடுகாண் காதை'யில் விளங்கப் பேசப்படுகின்றன. திருமாலைப் பற்றிய குறிப்புகள் சிலப்பதிகாரத்தில் இன்னும் பலவிடங்களில் வந்துள்ளன. சிலப்பதிகாரத்தில் பலதேவனும் தெய்வமாகப் போற்றப்பட்டான்.[57]

''குறிஞ்சிநிலத் தெய்வமான முருகன் சிலப்பதிகாரத்தில் 'குன்றக்குரவை'யில் சிறக்கப் போற்றப்பட்டுள்ளான். முருகன் சரவணப் பொய்கையிலே தாமரைப் பள்ளியிலே கார்த்திகைப் பெண்கள் அறுவராலும் பால் கொடுத்து வளர்க்கப்பட்டான்'' என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ''ஆறுமுகங்களையும் பன்னிரு கைகளையும் கையினில் வேலினையும் கொண்டு மயிலின்மீது அமர்ந்து அசுரர்களை அழித்து தேவர்களின் துயரைத் துடைத்து தேவர்தலைவர் இந்திரன் வணங்கும்படி முருகன் நின்றான்'' என்று பிறிதோரிடத்திலே சுட்டப்பட்டுள்ளது.

பழமையான கடலினுள் புகுந்து மாமரவடிவில் நின்ற சூரபதுமனை ஒளிவிடும் தன் கை வேலாலே கொன்ற கதை

---

56. சிலம்பு; இந்திரவிழவூரெடுத்த காதை : 136-139.
57. ,, ,, 171.

இடம்பெற்றுள்ளது. முருகன் கிரௌஞ்ச மலையைப் பிளந்த செய்தியும் குறிக்கப்பட்டுள்ளது. ஆலமரத்தின்கீழ் அமர்ந்து விளங்கும் செல்வராகிய பரமசிவன், கைலை மலையின் மன்னனாகிய பருவதராசனின் மகளாகிய பார்வதி ஆகிய இவர்களின் புதல்வன் என்று குறிக்கப்படு கின்றான். அடுத்து, குன்றுவாழ் குறவர்கள் மயிலின்மேல் வள்ளியம்மையுடன் சிவபெருமான் புதல்வன் வருவான் என்பர். குறவர்தம் குலமகளாம் குறமகளாகிய வள்ளி யுடன் காணப்படும் ஆறுமுகங்களையுடைய ஒப்பற்றவனே! உனது இரண்டு அடிகளையும் பணிகின்றோம் என்று குறவர்கள் முருகனை வழுத்துகின்றனர். இங்கே வள்ளியை மட்டும்தான் முருகன் மனைவி என்று கூறப்பட்டுள்ளது. மற்றொரு மனைவியாகிய தெய்வயானையைப் பற்றிய குறிப்பு, குன்றக்குரவையிலே காணப்படவில்லை. திருச் செந்தூர், திருச்செங்கோடு, வெண்குன்றம், ஏரகம் முதலிய திருத்தலங்கள் முருகன் உறையும் இடங்களாகக் கூறப் பட்டுள்ளன.

சிவபெருமானைப் பற்றிய குறிப்புகள் சிலப்பதிகாரத்தில் பலவிடங்களில் காணப்படுகின்றன. ''பரமசிவன் பிறைச் சந்திரனையும் மலர்மாலையையும் முடியில் அணிந்தவன். கருக்கான முனையையுடைய சூலாயுதத்தை ஏந்தியவன்'' என்று சிவபெருமான் தோற்றம் குறிக்கப்பட்டுள்ளது.

சிவபெருமானுக்கு நெற்றிக்கண் உண்டு. தேவர்களுக் காக நஞ்சுண்டு நீலகண்டன் ஆனான். ''வாசுகியை நாணாக வும், இமயத்தை வில்லாகவும் கொண்டு திரிபுரத்தை எரித் தான்; யானைத் தோலைப் போர்த்தியவன்; புலித்தோலை உடுத்தியவன்; கொன்றைப் பூமாலையைத் தரித்தவன்'' என்ற செய்திகளெல்லாம் 'வேட்டுவவரி' யிலே இடம்பெற் றுள்ளன. உமையம்மையை ஒரு பக்கமாகக் கொண்டு சிவபெருமான் ஆடிய 'கொடு கொட்டி' என்னும் நடனம் 'கடலாடு காதை'யில் குறிக்கப்பட்டுள்ளது. உமாதேவியைத்

தன் ஒரு பாகமாகக் கொண்டவன் முனிவர்கள் உறையும் இமயமலையில் வீற்றிருக்கும் தெய்வம் என்று 'நடுகற் காதை'யிலே சிவபெருமான் குறிக்கப்பெற்றுள்ளான். சிவ மூர்த்தங்களில் ஒன்றாகிய 'தட்சணாமூர்த்தி' என்னும் பெயர் சிலப்பதிகாரத்தில் தமிழகத்தில் வழங்கியிருந்தது.[58] சங்க இலக்கியங்களில் இப்பெயர் காணப்படவில்லை. 'கட்டுரை காதை'யில் ''சிறந்த வார்த்திகன் என்பவன் மகன், கல்லால மரத்தின் கீழிருந்து நால்வர்க்கு உபதேசித்த சிவபெருமான் பெயர் கொண்டு வளர்ந்தவன். அத்தகைய வார்த்திகனுடைய புதல்வன் பெயர் தக்கிணன் என்பது'' என்ற குறிப்புக் காணப்படுகின்றது. செங்குட்டுவன் வடநாடு சென்றபோதும் பிறைசூடிய பெம்மானின் திருக் கோயில் சென்று முதற்கண் தொழுத செய்தி குறிப்பிடப் படுகின்றது. காவிரிப்பூம்பட்டினத்திலும் மதுரையிலும் இருந்த கோயில்களைக் குறிப்பிடும்பொழுது, சிவபெருமான் கோயில்களையே சிலப்பதிகாரம் முதன்மையாகக் குறிப்பிடு கிறது. இதனால் சிலப்பதிகாரத்தின்வழி, தமிழ் நாட்டில் சிவவழிபாடு சிறந்திருந்தது என்பதனை அறியலாம்.

அருகக்கடவுள் வழிபாடும் சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படுகின்றது. அருகமதத் தத்துவங்கள் சாரணர் களால் தமிழ்மக்களுக்கு உபதேசிக்கப்பட்டன. இவ்வாறே புத்தமதத் தத்துவங்களும் போற்றப்பட்டன. கவுந்தியடி கள் சிலப்பதிகாரத்தில் அருக சமயத் தத்துவங்களை விளங்க எடுத்துரைக்கின்றார். காவிரிப்பூம்பட்டினம், மதுரை முதலிய இடங்களிலும் வேறுபல இடங்களிலும் புத்தர்பள்ளிகளும் அருகர்பள்ளிகளும் இருந்தன. சிலப்பதி காரத்தில் அருகரும் புத்தரும் தமிழ்மக்களால் போற்றப் பட்ட செய்தியினை அறியலாம்.[59]

---

58. சிலம்பு;கட்டுரை காதை : 91 மற்றும் குன்றக் குரவை : 13-14.

59. ,, இந்திரவிழவூரெடுத்த காதை : 180

## சிறு தெய்வங்கள்

சிலப்பதிகாரத்தில் பல சிறு தெய்வங்கள் குறிக்கப்படுகின்றன. அவைகளைத் தமிழர்கள் பல முறைகளில் வணங்கினர். அவைகளுக்கு விழாச் செய்து கொண்டாடி மகிழ்ந்தனர். இந்திரவணக்கம், ஐயை வணக்கம், திருமால் வணக்கம், சிவபெருமான் வழிபாடு, முருகன் வணக்கம், அருகர் வணக்கம், புத்தர் வணக்கம் இவைகள் தமிழ்நாடு முழுவதும் பரவியிருந்தன. ஆனால் விநாயகர் வணக்கம் மட்டும் சிலப்பதிகாரத்தில் காணப்படவில்லை.

நெய்தல் நில மக்களுக்கு வருணன் தெய்வமென்று தொல்காப்பியனார் குறிப்பிடுவர். சிலப்பதிகாரத்தில் தமிழ் மக்களிடத்தில் வருணனை வழிபடும் வழக்கம் குறைந்து விட்டது. அல்லது மறைந்துவிட்டது என்று எண்ண இட மேற்படுகின்றது. பத்துப்பாட்டுள் ஒன்றான பட்டினப் பாலையிலே பரதவர்கள் கடற்கரையிலே சுறாமீன் எலும்பை நட்டு அதற்குப் பூசை செய்தனர் என்ற செய்தி காணப்படுகின்றது. இது வருணன் என்னும் நெய்தல் நில தெய்வத்தைப் பரதவர்கள் வணங்கும் பண்டைக்கால முறையாகக் கருதப்படுகிறது. ஆனால் இவ்வழிபாடு சிலப் பதிகாரத்தில் காணப்படவில்லை.

ஐயை பாலைநிலத்தின் தெய்வம். வேட்டுவமக்கள் பாய்கலைப்பாவை, கொற்றவை, அமரி, குமரி, கௌரி, சமரி, சூளி, நீலி, சங்கரி, அந்தரி முதலிய பல பெயர்களால் வழங்கும் இத் தெய்வத்தை வழிபட்டனர். காளி, துர்க்கை என்ற பெயர்களும் இத்தெய்வத்தைக் குறிக்கும். வேட்டுவர்கள் இத்தெய்வத்திற்குப் பலியிட்டுப் போற்றுவார்கள். ஐயை சிவபெருமான் வடிவாகவும் திருமால் உருவாகவும் போற்றப்படுகின்றாள். அவளுடைய திருவிளையாடல் நிகழ்ச்சியும் வேடர்கள் வணங்கும் முறையும் 'வேட்டுவவரி' யிலே விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

மோகினிப் பிசாசு என்று ஒரு தெய்வத்தைக் குறிப்பிடுவர். இத்தெய்வம் அழகான பெண்வடிவில் வந்து ஆண்களை மயக்குமாம். கடத்தற்கரிய வழியிலே மிகுந்த துன்பத்தைத்தரும் இத்தெய்வம் அச்சம் விளைக்காத நயமான முறையிலே வழிப்போவோரைத் தடுக்கும். இத்தெய்வம் 'ஆரஞர்த் தெய்வம்', 'கானுறை தெய்வம்' என்ற பெயர்களால் சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ளது.[60] 'வனதேவதை' என்றும் இதைக் கூறுவர்.

## புகார் நகரக் கோயில்கள்

சிலப்பதிகார காலத்திலே தமிழகத்திலே பல கோயில்கள் இருந்தன. காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்குத் தனிக் கோயில் இருந்தது. இந்திரன் படையான வச்சிராயுதம் நிற்கும் கோயில், அவன் வாகனமாகிய ஐராவதம் என்னும் யானை நிற்கும் கோயில், கற்பகத்தரு நிற்கும் கோயில் இவைகள் தனித்தனியே இருந்தன.

"வச்சிரக் கோட்டத்திலிருந்த முரசை ஐராவதம் நிற்கும் கோட்டத்திற்குக் கொண்டு வந்தனர்; யானையின் மீது ஏற்றினர்; இந்திரவிழாவின் தொடக்கத்தையும் முடிவையும் அறிவித்தனர். கற்பகத்தரு கோட்டத்திலிருந்த கொடியை வானிலே பறக்கும்படி ஏற்றினர். இவ்வாறு இந்திரவிழாவின் கொடியேற்றுவிழா குறிக்கப்பட்டுள்ளது.

பிறவாத உடம்பினையுடைய பெரியோனாம் சிவன் கோயிலும், ஆறுமுகத்தினையுடைய செவ்வேளாம் முருகன் கோயிலும், வெள்ளைநிற மேனியையுடைய தூயோனாம் பலதேவன் கோயிலும், நீலமேனியையுடைய திருமால் கோயிலும் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தன.

அருகர் கோயிலுக்குப் 'புறநிலைக்கோட்டம்' என்பது பெயர். அக்கோயில் 'ஸ்ரீகோயில்' எனப்படும். காவிரிப்பூம்

---

60. சிலம்பு; காடுகாண் காதை : 109-124.
மற்றும் ஊர்காண் காதை : 11.

பட்டினத்தில் இக்கோயில் இருந்தது. அருகர் பள்ளிகளும் புத்தர் பள்ளிகளும் இருந்தன. தருமங்களைப் போதிக்கும் வேறு இடங்களும் இருந்தன. 'நாடுகாண்காதை'யில் புத்த விகாரங்கள் அருகர்க்குரிய சிலாதலங்கள் முதலியன பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. "ஐந்து கிளைகள் பொருந்திய மகாபோதி மரத்தின்கீழே ஞானம் பெற்றவர் புத்தர். அவருடைய அறவுரைகளைப் போதிக்கும் அந்தர சாரிகள் வந்தமர்ந்து புத்ததருமங்களைப் போதிப்பார்கள். இத்தகைய இந்திரவிகாரம் ஏழினையும் கோவலன் வணங்கினான் என வருகின்ற குறிப்பால் காவிரிப்பூம்பட்டினத்தில் பௌத்தமதப் பள்ளிகள் இருந்தன என்பதை அறியலாம்.

பௌத்தப் பள்ளிகளை வணங்கிய கோவலன் பின் அருகர்களின் சிலாதலத்தையும் வணங்கினான். "அழகு மிகுந்த மலர்களையுடைய பிண்டியின் நிழலிலே சாரணர்கள் அமரும் சிலாதலம் இருந்தது. அது நீராட்டு விழாவின் போதும் பெரிய தேர்விழாவின்போதும் சாரணர்கள் வந்து மக்களுக்கு அருக தருமத்தை உபதேசிப்பார்கள் என்று கருதி சாவகர்களால் இடப்பட்டதாகும். இதனையும் கோவலன் தொழுது வலம் வந்தான்."

சாவகர் என்போர் அருக தருமத்தைப் பின்பற்றி நடக்கும் இல்லறத்தார். உலகநோன்பிகள் என்றும் இவர்கள் அழைக்கப்பட்டனர். புகார் நகரில் அருகர் பள்ளிகளும் இருந்தன என்பதனை இச் செய்தியால் அறியலாம்.

கற்பகத்தரு கோயில், ஐராவதக் கோயில், பலதேவன் கோயில், சூரியன் கோயில், கைலாயக்கோயில், முருகன் கோயில், இந்திரன் கோயில், அருகன் கோயில், சந்திரன் கோயில் முதலிய கோயில்கள் 'கனாத்திறமுரைத்த காதை'யில் குறிக்கப்பட்டுள்ளன. "அழகிய பாம்புப் படுக்கையிலே யோக நித்திரை செய்துகொண்டிருக்கும் நீலமணிபோன்ற நிறத்தையுடைய திருமால் கோயிலை

வலம்செய்து நீங்கிக் கோவலன் கண்ணகியுடன் மதுரைக்குப் புறப்பட்டான்'' என வரும் குறிப்பால் புகார் நகரில் பள்ளிகொண்ட பெருமாள் கோயில் இருந்தது என்பதை அறியலாம்.

## மதுரை நகரக் கோயில்கள்

''நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் கோயில், கருடக்கொடியையுடைய திருமாலின் கோயில், கலப்பைப் படையையுடைய பலதேவன் கோயில், சேவற்கொடியை யுடைய முருகன் கோயில், அறத்துறைகளை மக்களுக்கு எடுத்துக்கூறி அறிவுறுத்தும் சமணர் புத்தர் முதலியவர் களின் பள்ளிகள் இருந்தன என்று 'ஊர்காண்காதை'யில் மதுரையிலிருந்த கோயில்களைப் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

## வஞ்சி நகரக் கோயில்கள்

பிறைநிலாவினைத் தன் முடியில் தரித்த சிவபெருமான் கோயிலும், ஆடகமாடத்து அறிதுயில் கொள்ளும் திருவனந்தபுரத்துத் திருமால் கோயிலும் 'கால்கோள் காதை'யிலே குறிப்பிடப்படுகின்றன.

இவையன்றியும் சாத்தன்கோயில், பேய் பிசாசு பூதங் களுக்கான கோயில்கள், மன்மதன் கோயில், திருமகள் கோயில், கலைமகள் கோயில் முதலியனவும் தமிழகத்தில் அந்நாளில் விளங்கின என்னும் செய்தி சிலப்பதிகாரத்தால் தெரியவருகிறது.

## சமய ஒற்றுமை

சிலப்பதிகாரத்தில் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் முதலான சமயங்களைப் பற்றிய குறிப்புகள் வந்துள்ளன. காவிரிப்பூம்பட்டினத்திலும் மதுரையிலும் சிவன்கோயில், திருமால் கோயில், அருகர் பள்ளி, புத்தர் பள்ளி முதலியன இருந்தன என்பது முன்னரே கூறப் பட்டது. சிலப்பதிகார காலத்தில் சமண பௌத்த சமயங்கள் தமிழகத்தில் நன்கு பரவியிருந்தன என்பது

தெரியவருகிறது. கோவலன் சமண சமயத்தினனாகக் குறிக்கப்பெற்றுள்ளான். மதுரைக்குச் செல்லும் வழியில் அவனும் கண்ணகியும் கவுந்தியடிகளைக் கண்டு கைதொழுத போது, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் அருகதேவன் நூலிற் கூறிய விரதம் தப்பாமையும் உடைய நீங்கள் தீவினையாளரைப்போல உமது இடத்தைவிட்டு நீங்கி வருவதற்குக் காரணமென்ன' என்று கவுந்தியடிகள் வினவுவதால் கோவலன் கண்ணகி இருவரும் சமண சமயத்தவர் என்பது புலனாகிறது. மாதரி என்னும் இடைக்குல நங்கை கண்ணகி கோவலரை அடைக்கலமாக ஏற்றுத் தன் மகள் ஐயையை நோக்கி 'கோவலனார் சாவக நோன்பு உடையார். ஆதலால் கண்ணகி பகலுணவு சமைப்பதற்காகப் புதிய கலன்களைக் கொண்டுவந்து தாருங்கள்' என்று குறிப்பிட்ட நிகழ்ச்சி கோவலன் சமண சமயத்தினன் என்பதை விளங்கக் காட்டும். சமணனாயினும் கோவலன் சமயப்பொறை உடையவன், பிறமதக் காழ்ப்பற்றவன். புகாரை விட்டு மதுரைக்குப் புறப்பட்ட நிலையில் முதலில் திருமால் கோயிலை வலம் வந்து வணங்கினான். பின்னர் இந்திரவிகாரங்கள் ஏழையும் வணங்கினான். அதன்பின்னர், சாவகநோன்பிகளால் இடப்பட்ட சிலாதலத்தை வணங்கினான். இவற்றால் கோவலன் சமயப்பொறை விளங்குகின்றது.[61]

இது போன்றே சிறந்த சிவபக்தனான செங்குட்டுவன் சிவபிரான் அருளால் பிறந்தவன் என்று சிலப்பதிகாரத்தில் இரண்டிடங்களில் குறிக்கப்பட்டுள்ளான். அவன் வடநாடு நோக்கிப் புறப்படும்போது முதலில் சிவன்கோயிலை வணங்கிவிட்டுப் பின்னர் திருமால் பிரசாதத்தை தன் தோளிலே தாங்கி நின்றான்.[62] மேலும் புத்த மதத்தின

61. சிலம்பு; கால்கோட் காதை : 62 அடியார்க்கு நல்லார் உரை.

62. சிலம்பு; : 18 'சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்.'

ராகக் கருதப்படும் தண்டமிழ்ச் சாத்தனோடும் நட்புக் கொண்டிருந்தான் என்பதும், அருகசமயத்தைச் சார்ந்த கண்ணகிக்குக் கோயில் எடுத்துக் கும்பிட்டான் என்பதும் அவனுடைய சமயப் பொறையைக் காட்டும்.

கோவலன் இறந்த செய்தி கேட்டுக் கோவலனுடைய காதற்பரத்தை மாதவி தன் தலைமயிரைக்களைந்து பௌத்த சந்நியாசியானாள். அவள் மகள் மணிமேகலையையும் பௌத்த சமயத்தில் ஈடுபடுத்தினாள். கோவலன் இறந்த செய்தியைக் கேட்ட மாசாத்துவான் பௌத்த சமயம் சார்ந்தான். கண்ணகியின் தந்தையான மாநாய்கன் சமண சமயம் சார்ந்தான்.

சமண சமயத்தைச் சேர்ந்த கவுந்தியடிகள் வைணவ சமயத்தைச் சார்ந்த மாதரியிடம் சமண சமயத்தைச் சேர்ந்த கண்ணகியை அடைக்கலமாகக் கொடுத்தார்.[63]

மாங்காட்டு மறையோன் வைணவன். அவன் திருமாலின் சிறப்பினை எடுத்துக்கூறக் கோவலன், கண்ணகி கவுந்தியடிகள் மூவரும் பொறுமையுடன் கேட்டனர்.[64]

இதுகாறும் கூறப்பட்ட செய்திகளால் சிலப்பதிகார காலத்தில் தமிழ்நாட்டில் பல சமயங்கள் இருந்தன என்றாலும் சமயப்பொறை மேலோங்கியிருந்தது என்பதும், ஒரு குடும்பத்திலேயே பல்வேறு சமயத்தை மேற்கொண்டோர் இருந்தனர் என்பதும், அவரவர் தத்தமக்கு விருப்பமான சமயத்தைத் தழுவ உரிமை இருந்தது என்பதும், அவர்களுக்குள் சமயத்தொடர்பாகப் பிணக்குகள் இல்லை என்பதும், பொதுவாகக் காணின் சமயநம்பிக்கையும் தெய்வநம்பிக்கையும் சிறந்து விளங்கின என்பதும், தெய்வவழிபாடும் சமயபோதனைகளும் மக்களால் பெரிதும் விரும்பி மேற்கொள்ளப்பெற்றன என்பதும் தெளிவாக விளக்கமாகின்றன.

---

63. சிலம்பு; அடைக்கலக் காதை : 21-22.
64. ,, காடுகாண் காதை : 35 53.

# 3. சிலம்பின் இலக்கியச் சிறப்பு

ஐம்பெருங்காப்பியங்களுள் முதன்மையாக வைத்து எண்ணப்படுவது சிலப்பதிகாரம் ஆகும். ஐம்பெருங்காப்பியங்களுள் இன்று முழுவதுமாகக் கிடைப்பன மூன்றே. அவை சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி என்பன. ஏனைய வளையாபதியும் குண்டலகேசியும் முழுவதுமாகக் கிடைக்கவில்லை. அவற்றுள் சிற்சில பாக்களே கிடைத்துள்ளன. இந்த முப்பெருங்காப்பியங்களுள் பெரிதும் போற்றப்பெறுவது சிலப்பதிகாரமே ஆகும். புதுமைக் கவிஞர் பாரதியார் சீவகசிந்தாமணியையோ மணிமேகலையையோ பாராட்டியுள்ளதாகத் தெரியவில்லை. ஆனால் அவர்தம் பாடல்களில் சிலப்பதிகாரத்தையும், அதனை யாத்தளித்த இளங்கோவடிகளையும் பலகாற் பாராட்டிச் சென்றுள்ளார். "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரமென்றோர் மணி ஆரம் படைத்த தமிழ்நாடு"[1] என்றும், "யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவர் போல், இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததிலை"[2] என்றும், "சேரன் தம்பி இசைத்த சிலம்பு" என்றும் பாராட்டியுள்ளமை வெளிப்படை. அவரே 'தமிழ்ச் சாதி' என்ற தலைப்பில் எழுதியுள்ள கவிதையில் சிலம்பு, திருக்குறள், கம்பராமாயணம் ஆகியவற்றின் சிறப்பியல்புகளைத் தேர்ந்து தெளிந்து கூறியுள்ளார்.

" சிலப்பதி காரச் செய்யுளைக் கருதியும்
திருக்குற ளுறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும்,

---

1. பாரதியார் பாடல்கள்; தமிழ் ; 2
2. ,, செந்தமிழ் நாடு : 7.

**'எல்லையொன் றின்மை' எனும்பொருள் அதனைக்**
**கம்பன் குறிகளாற் காட்டிட முயலும்**
**முயற்சியைக் கருதியும், முன்புநான் தமிழச்**
**சாதியை அமரத் தன்மை வாய்ந்தது'' என்று**
**உறுதிகொண் டிருந்தேன் ''[3]**

என்னும் கவிதை அடிகளில் சிலப்பதிகாரம் அவர் நெஞ்சை யள்ளியதற்குரிய காரணத்தைக் கூறாமல் கூறியுள்ளார் என்பது உய்த்துணரலாம். இங்குச் செய்யுள் என்பது 'செய்யப் படுவது செய்யுள்' என்னும் சாதாரண பொருளில் ஆளப்பெறவில்லை. கவிதைநயத்தான் 'செய்யுள்' என்ற சொல்லால் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். இத்தகைய இலக்கியச் சிறப்புகள் செறிந்துள்ள சிலப்பதிகாரத்தின் தனிச்சிறப்புகளை இனி முறையே காணலாம்.

சங்க காலத்தில் காப்பியங்கள் இருந்தனவா என்பது ஆய்வுக்குரிய செய்தி. சங்க காலத்தில்— அதாவது சிலப்பதிகாரத்திற்கு முன்பே—சில காப்பியங்கள் இருந்துள்ளன என்பர் சிலர். சிலப்பதிகாரமே முதன்முதலாகத் தோன்றிய காப்பியம் என்பது வேறு சிலர் கருத்தாகும். சங்கப் பாடல்களை நோக்கும்பொழுது அக்காலத்தில் சிலப்பதிகாரம் போன்ற காப்பியம் எழுந்திருக்க வாய்ப் பில்லை என்றே தோன்றுகின்றது. ஒருவேளை நீண்ட பாடல்கள்—தொடர்நிலைச் செய்யுட்கள் (Epic poetry) சில தோன்றத் தொடங்கி இருக்கலாம். சங்கப் புலவர்கள் தாங்கள் கண்டறிந்த உண்மைகளையும், அனுபவங் களையும் சிறுசிறு பாடல்களாகவே வெளியிட்டுள்ளனர். அவைகளெல்லாம் தொடுக்கப்படாத அழகிய உதிரிப்பூக் களாகவே விளங்குகின்றன. இளங்கோவடிகள் தாம் முதன் முதலில் பல்வேறு மலர்களையும் கோவையாகத் தொடுத்துப் பன்மணம் விரவ மாலையாக்குவதுபோல்

3. பாரதியார் பாடல்கள்: தமிழச்சாதி : 20-26.

தம் அனுபவத்தையும், தாம் கண்டறிந்த உண்மைகளையும் கண்ணகியின் வாழ்க்கை என்னும் இழையால் தொடுத்துக் காப்பியமாகிய மாலையை உருவாக்கியுள்ளார் எனலாம். சிலம்பின் காதை அமைப்புகளும் இக் கருத்தினை வலியுறுத்தக்கூடிய வகையுள் உள்ளன. முப்பது காதைகளும் முப்பது தனிப்பாடல்களைப் போலக் காட்சியளிக்கின்றன. "ஒவ்வொரு பாட்டும் சங்க காலத்துப் பாடல்போலத் தனித்தனிச் சிறந்து விளங்கும் அழகோடு பொலிகிறது. இதனால், கதையைத் தொடர்ந்து கூறிப்போவது இவருடைய அடிப்படை நோக்கமானாலும் அது மேல் வாரியாகப் பார்க்கும் பொழுது புகார்க் காண்டத்தில் நன்கு விளங்கவில்லை. தனிப்பாடலிலேயே திளைத்து நின்ற சங்க காலத்தில் வளர்ந்த தமிழ்ச் செய்யுள் முறையில் தொடர்நிலைச் செய்யுள் பாடப்புகுந்தால் இப்படித்தான் முடியும்போலும். இக்குறிப்பு ஒன்றே சிலப்பதிகாரம் தமிழ் வரலாற்றில் சங்கத் தமிழின் வளர்ச்சி என்பதனை நிலை நாட்டும்"[4] என்கிறார் பேராசிரியர் தெ. பொ. மீ.

இளங்கோவடிகள் பத்துப்பாட்டின் தொடர்களைப் பல இடங்களில் பொன்னேபோல் போற்றுவதைக் காணலாம். சான்றாக ஒன்றைக் காட்டலாம்.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் குறமகளின் வெறி யாட்டினை அழகுற எடுத்தியம்பும்பொழுது,

> "நளிமலைச் சிலம்பில் நல்நகர் வாழ்த்தி
> நறும்புகை எடுத்து,[5] குறிஞ்சி பாடி[6]
> சிமிழ்இசை அருவியொடு இன்இயம் கறங்க,
> உருவப் பல்பூத் தூஉய்,[7] வெருவரக்
> குருதிச் செந்தினை பரப்பி, குறமகள்

4. சமணத் தமிழ் இலக்கிய வரலாறு; பக். 75.
5. திருமுருகாற்றுப்படை; 239.
6. ,, 239.
7. ,, 241.

முருகியம் நிறுத்து, முரணினர் உட்க,
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்
ஆடுகளம் சிலம்பப் பாடி, பலவுடன்
கோடுவாய் வைத்து கொடுமணி இயக்கி[8]
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி,
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட...''

என்று கூறிச் செல்கிறார்.

இளங்கோவடிகள் கண்ணகியைக் குறவர்கள் வழிபடுவதாகச் சொல்லும்பகுதியில்,

கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்
குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்
பூப்பலி செய்யுமின் காப்புக்கடை நிறுமின்
பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின்
ஒருமுலை இழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே.

என்று குறிப்பிடுகிறார்.[9] இதுபோன்று வரும் இடங்களை நோக்கும்பொழுது இளங்கோவடிகள் பத்துப் பாட்டினைப் படித்திருக்கலாம் என்றுகூட நினைக்கத் தோன்றுகிறது. சிறுசிறு சங்கப் பாடல்களை நோக்கப் பத்துப்பாட்டில் வரும் பாடல்கள் நீண்ட பாடல்களாக உள்ளன. அப் பத்துப் பாடல்களைப் போலவே சிலம்பின் காதைகள் அமைந்துள்ளன. எனவே சிலப்பதிகாரம் சங்க காலத்திற்குப் பின் தோன்றிய முதல் தமிழ்க் காப்பியம் எனக் கொள்வதே பொருத்தமுடைத்தாகும்.

காப்பியங்களை இருவகையாகப் பிரிப்பர் ஆய்வாளர் அவை வளர்ச்சிக் காப்பியம் (Epic of Growth), கலைக் காப்பியம் (Epic of Art) என்பன. உலகில் பெரும்பாலான மொழியில் முதன்முதலில் தோன்றியுள்ள காப்பியங்கள்

---

8. திருமுருகாற்றுப்படை; 246.
9. ,, 24 : 17-18.

வளர்ச்சிக் காப்பியங்களாகவே உள்ளன. வால்மீகியின் இராமாயணமும், வியாசருடைய பாரதமும் வடமொழியில் தோன்றிய வளர்ச்சிக் காப்பியங்களாகும். ஓமரின் இலியட்டும், ஒடிசியும்கூட வளர்ச்சிக் காப்பியங்களே. பழைய வரலாறு மெல்ல மெல்ல வளர்ந்து ஒரு காப்பிய மாக உருப்பெறுவதே வளர்ச்சிக் காப்பியம் எனப்படும். இவ் வளர்ச்சிக் காப்பியங்களையே வடநூலார் 'இதிகாசங்கள்' என்று குறிக்கின்றனர். சிலப்பதிகாரம் ஒரு வளர்ச்சிக் காப்பியமாகத் தோன்றவில்லை. சிலப்பதிகாரக் கதைக்கு அடிப்படையாக, நற்றிணையில் வரும் மருதன் இளநாகனார் பாட்டினையும்,[10] புறநானூற்றில் பேசப்படும் பேகன் கண்ணகியின் பிரிவினையும்[11] சிலர் கூறியுள்ளனர். நற்றிணை உரைகாரர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயரவர்களும் "திருமாவுண்ணி என்பது கண்ணகியைக் குறிக் கின்றது போலும்" என்று குறிப்பிட்டுள்ளார்.[12] எனினும் இம்மேற் கோள்களைச் சிலம்பின் கதைக் கூறுகளாக ஏற்றுக் கொள்ள இயலாதென்றே சொல்லவேண்டும். பெரும்பாலும் வளர்ச்சிக் காப்பியங்களெல்லாம் நீண்ட நெடுங்காலமாக வழங்கிவரும் ஒரு பெருங்கதை ஓர் ஆசிரியனால் எழுதப் பட்டு ஒழுங்குபடுத்தி ஒரு திரண்ட வடிவம் கொடுக்கப்பட்டே எழுந்துள்ளன. சிலப்பதிகாரத்தின் கதை அமைப்பு ஓர் ஆசிரியரால் நன்கு திட்டமிட்டு எழுதப்பட்ட ஒரு காப்பியம் என்பதை வலியுறுத்துகின்றதேயன்றிப் பலகாலம் மக்கள் நடுவே உலவிப் பின் வடிவம் பெற்றிருக்கலாம் என்று எண்ணுவதற்குச் சிறிதும் வாய்ப்பளிப்பதாக இல்லை. மேலும் காப்பியத் தலைவி வாழ்ந்த காலத்திலேயே

10. நற்றிணை; 216.

11. புறநானூறு: 143-47.

12. திரு. பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் உரை 'திருமாவுண்ணியென்பது கண்ணகி கதையைக் குறிக்கின்றது போலும்.'

ஆசிரியர் இளங்கோவடிகளும் வாழ்ந்திருக்கிறார் என்பது வஞ்சிக் காண்டத்தால் புலப்படுகின்றது.

''யானும் சென்றேன்......''

என்திறம் உரைத்த இமையோர் இளங்கொடி
தன்திறம் உரைத்த தகைசால் நன்மொழி

என்ற அடிகளைக் காண்க.

இவற்றால் தமிழில் வளர்ச்சிக் காப்பியங்களே இல்லையென்றும், முதலில் தோன்றியுள்ள சிலப்பதிகாரமே தலைக் காப்பியமாக அமைந்துள்ளது என்றும் உணரலாம்.

இங்கே பிறிதொரு வினா எழுகின்றது. மேலைநாட்டு இலக்கணப்படி, சிலப்பதிகாரம் ஒரு காப்பியமா என்பதே அவ்வினா. தன்னகரில்லா வீரன் ஒருவனின் பெரு வாழ்வினைச் சித்திரிப்பதே காப்பியம் என மேலை நாட்டார் விளக்கம் தருகின்றனர். காப்பியக்கதை மக்கள் சமுதாயம் முழுவதையுமே கவரத்தக்க வகையில் மிக விரிந்த ஒன்றாக இருக்கவேண்டும். இத்தகைய இலக்கணங் களைக் கொண்டு நோக்கின் சிலப்பதிகாரக் கதை மிகச் சிறிய ஒன்றாகவே திகழ்வதை உணரலாம். எனினும் ஒரு பெண்ணின் வாழ்வில் ஏற்பட்ட நிகழ்ச்சியைத் தமிழகம் முழுவதற்கும் உரிய செய்தியாக்கி அவளைத் தமிழ் நாட்டிற்கு மட்டுமல்லாமல் கடல்கடந்து இலங்கை மாநகருக்கும் உரிய கற்புத் தெய்வமாகக் காட்டி இளங்கோவடிகள் அதனைக் காப்பியக் கதையின் தகுதிக்கு உயர்த்தியுள்ளார் எனலாம்.[13] இராமகாதையைப் போன்றோ பாரதத்தைப் போன்றோ சிலம்பின் கதை விரிந்த ஒன்று அன்றென்றாலும் கைதேர்ந்த சிற்பி ஒருவன் தந்தச் சிமிழுக்குள் தன் ஆற்றலையெல்லாம் காட்டிச் சிற்பங்களை வடித்தல்போல இளங்கோவடிகள் தம் புலமை நயத்தையெல்லாம் சிலம்பில் காட்டியுள்ளார். காலஞ்

---

13. A History of Tamil Literature P. 156.

சென்ற பேராசிரியர் திரு வையாபுரிப்பிள்ளை அவர்கள் சிலப்பதிகாரத்தை 'விருந்தியல்' (Romance) என்ற வகையுள் அடக்கிக் கூறியுள்ளார்.[14] 'விருந்தியல்' என்ற இலக்கிய வகையின் இலக்கணத்தை நோக்கும்பொழுது சிலப்பதி காரத்தை அதனுள்ளும் அடக்கிக் கூறுதல் அருமை யாகின்றது. கீழை நாட்டுக் காப்பிய இலக்கணங்கள் பொருந்தி வருவதாலும், மேலைநாட்டு இலக்கணங்கள் பெரும்பாலும் பொருந்தி வருவதாலும் சிலப்பதிகாரத்தைக் காப்பியம் என்று வழங்குவதே ஏற்புடைத்தாகும்.

அடுத்து, சிலப்பதிகாரம் முத்தமிழ்க் காப்பியம் என்று பாராட்டப்படும் சிறப்புக்குரியதாக விளங்குகின்றது. அடியார்க்கு நல்லாரும் "பழுதற்ற முத்தமிழின் பாடல்" என்று சிலப்பதிகாரத்தைக் குறித்துள்ளார். இயற்றமிழும் இசைத்தமிழும் நாடகத்தமிழும் கலந்து முத்தமிழ்க் காப்பியம் என்ற தனிச்சிறப்புக்குரியதாக விளங்கும் காப்பியம் ஐம்பெருங்காப்பியங்களுள் இது ஒன்றே. மணிமேகலையோ முழுதும் இயற்றமிழ்க் காப்பியமாகவே விளங்குகின்றது; சிந்தாமணியோ பெரிதும் இயற்றமிழாலும் இடையிடையே சிறிது இசைத்தமிழாலும் அமைந்துள்ளது. ஆனால் சிலம்பில் முத்தமிழும் தக்க அளவில் அமைந் துள்ளன. காட்சிகளையும் கருத்துகளையும் விளக்கப் பயன்படுவது இயற்றமிழ்;[15] இசைகலந்த பாட்டாகச் செய்திகளைச் சொல்வது இசைத்தமிழ்.[16] மெய்ப்பாடுகள் தோன்ற நடிப்பதற்கேற்ற வகையில் அமைவது நாடகத் தமிழ்[17]. கோவலனும் கண்ணகியும் வாழ்ந்த இனிய வாழ்க் கையைச் சொல்லும் மனையறம் படுத்த காதை, மாதவியின் நடன அரங்கேற்றத்தை விளக்கும் அரங்கேற்றுக்காதை,

---

14. சிலப்பதிகாரம்; வாழ்த்துக்காதை : 135-164.
15. காதை எனப் பெயரிட்டுள்ள அனைத்தும்—இயல்.
16. கானல் வரி, வாழ்த்துகாதை—இசை.
17. வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, ஊர்சூழ் வரி, குன்றக்குரவை—கூத்து.

அந்திமாலையை வருணிக்கும் அந்திமாலைச் சிறப்புச் செய்காதை முதலிய தொடங்கிக் ''காதை'' என்று பெயரிடப்பட்டுள்ள அனைத்துமே இயற்றமிழால் அமைந்த பகுதிகளாகும். மங்கல வாழ்த்து, வாழ்த்தும் உரையும் பாட்டும் கலந்து மிளிரும் ஒன்று. இம்மூன்று கூறுகள் மங்கலவாழ்த்துப் பாடலில் இருப்பதாலும் அதன்கண் கதை நிகழ்ச்சியின்மையாலுமே அதற்கு அங்ஙனம் பெயர் கொடுத்தார் என்பர் அடியார்க்குநல்லார். இம் மங்கலவாழ்த்து உரைப்பகுதி நீங்கலாக ஏனைய வாழ்த்துப் பகுதியும் பாடற்பகுதியும் இசைத்தமிழின்பாற்படும். கானல்வரி என்பதே இசைப் பாவாற் பெற்றபெயர். வாழ்த்துக் காதையுள்ளும் இசைத் தமிழ்ப் பகுதிகள் நிறைந்துள்ளன. வேட்டுவ வரி, ஆய்ச்சியர் குரவை, ஊர் சூழ்வரி, குன்றக்குரவை முதலியன கூத்தாற் பெற்ற பெயர்களாம். இவ்வுண்மை அடியார்க்கு நல்லார் உரையாலும் நன்கு விளங்கும்.

வேட்டுவ வரி: ''கூத்துள் படுதலின், நாடகவரிப் பெயராய் வேட்டுவரி நிகழ்தலின் இது வேட்டுவ வரியாயிற்று.''[18]

ஆய்ச்சியர் குரவை: ''இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர் குரவையெனக் கூத்தாற் பெற்றபெயர்.''[19]

ஊர்சூழ்வரி: ''இதுவும் கூத்தாற் பெற்ற பெயர்.''[20]

குன்றக்குரவை: ''ஆய்ச்சியர் குரவையிற் கூறியது இதற்குங் கூறுக.''[21]

---

18. டாக்டர் உ. வே. சாமிநாதையர்: சிலப்பதிகாரம் —பதிப்பு: உரை, பதிகம், 73 அடியார்க்குநல்லார்
19. டாக்டர் உ. வே. சாமிநாதையர்; பதிகம் 77, அடியார்க்குநல்லார் உரை.
20. டாக்டர் உ. வே. சாமிநாதையர்; பதிகம் 78-79 அடியார்க்குநல்லார் உரை.
21. டாக்டர் உ. வே. சாமிநாதையர்; பதிகம் 62-83 அடியார்க்குநல்லார் உரை.

இவையெல்லாம் நாடகத்தமிழ்ப் பகுதிகளாக — கூத்து என்பதை 'நாடகம்' என்ற சொல்லாலேயே சிலம்பில் குறிப்பிடப்படுவதைக் காணலாம். ''மாதவியை நாடக மேத்தும் நாடகக் கணிகை'' என்கிறது பதிகம். இங்கு நாடகம் என்பது கூத்தையே குறிக்கிறது. இக்கூத்துப் பகுதிகள் நிறைந்துள்ளமையாலேயே சிலப்பதிகாரம் நாடகக் காப்பியம் என்னும் பெயரையும் பெற்றது என்னலாம்.

சிலப்பதிகாரத்திற்குக் குடிமக்கள் காப்பியம் என்ற சிறப்புமுண்டு. சிலம்பில் சோழன் கரிகாற்பெருவளத்தானும், பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும், சேரன் செங்குட்டுவனும் குறிக்கப்பெறுகின்றனர். இம் மூவருள் கரிகாற் பெருவளத்தான் சோழநாட்டின் அரசன் என்ற முறையிலேயே குறிக்கப்படுகின்றான்; கண்ணகியின் வாழ்வில் அவன் நேரடியாகத் தொடர்பு கொண்டானில்லை; பாண்டிய நெடுஞ்செழியன் கண்ணகி பெருந் துயருக்குக் காரணமாக அமைந்து சிறந்த இடத்தைக் காப்பியத்தில் பெறுகிறான்; சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயிலெடுத்துக் காப்பியத்தில் பங்கு பெறுகிறான். என்றாலும் இவர்கள் காப்பியத்தின் தலைவர்கள் அல்லர். காப்பியத்தின் மையமாக விளங்குபவர்கள் கண்ணகியும் கோவலனுமே. ஆகவே இது முடி மன்னர்கள் காப்பியமாகாது குடிமக்கள் காப்பியமாகின்றது. இங்கும் ஒரு சிறு வினா எழுகின்றது. கோவலனும் கண்ணகியும் ஒரு நாட்டில் வாழும் சராசரிக் குடிமக்கட் பிரிவினைச் சேர்ந்தவர்களாகவா உள்ளனர் என்பதே அவ்வினா. ''மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர், ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண்டகவையாள், பெருநிலமுழுதாளும் பெருமகன் றலைவைத்த, ஒருதனிக் குடிகளோடுயர்ந்தோங்கு செல்வத்தான்'' ஆகிய தொடர்கள் அவர்கள் சமுதாயத்தின் மிக உயர்ந்தநிலையில், அரசனுக்கு அடுத்த நிலையில் வாழ்ந்த பிரிவினைச்சார்ந்தவர்

என்பதனைக் குறிக்கும். "அடியார்க்கு நல்லாரும் தமக்குத்தாமே நிகராய வணிகரென்ற வாராயிற்று" என்கிறார். கோவலனும் கண்ணகியும் செல்வக்குடியினர் என்பது உண்மையே என்றாலும் அரசனைப் பாடுகின்ற வகையில் அமையாமல் கோவலனையும் கண்ணகியையும் பாடுவதாக அமைவதால் இதனைக் குடிமக்கள் காப்பியம் எனச் சுட்டுதல் பொருத்தமுடைத்தேயாகும். மேலும், ஆய்ச்சியர், வேடுவர், குறவர் முதலிய எளியமக்கள் வாழ்வினை விளக்குவதாலும் குடிமக்கள் காப்பியமாக அமைகின்றது.

சிலப்பதிகாரம் மூன்று உயர்ந்த நீதிகளை விளக்க எழுந்த காப்பியமாகும். அம்மூன்று நீதிகள் யாவை என்பதைப் பதிகம் சுட்டுகின்றது. அவை: (1) அரசியல் பிழைத்தவர்க்கு அறமே கூற்றாக இருந்து கொல்லும். (2) உரைசால் பத்தினியை உயர்ந்தவர்கள் ஏத்துவர். (3) ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பன.[22] இவற்றுள் அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும் என்பது பாண்டிய நெடுஞ்செழியன் வாழ்க்கையால் விளக்கப்படு கின்றது. பத்தினியை உயர்ந்தவர்கள் ஏத்துவர் என்பது காப்பியம் முழுவதும் கண்ணகியின் வாழ்வில் வைத்துப் பேசப்படுகின்றது. ஊழ்வினை உருத்துவந்து ஊட்டு மென்பது பல இடங்களில் சுட்டப்பட்டபோதிலும் சிறப் பாகக் கோவலன் வாழ்க்கையால் விளக்கப்படுகின்றது. வடமொழியில் அணி நூலுடையார் 'பாவிகம்' என்று ஒன்றைக் குறிப்பர். "பாவிகம் என்பது காப்பியப் பண்பே" என்று விளக்கந் தருகிறது தண்டியலங்காரம். இம்மூன்று நீதிகளுள்ளும் இடை நின்ற பத்தினிப் பெண்டிரை உயர்ந் தோர் ஏத்துவர் என்பதே காப்பியப்பண்பாகிய பாவிகமாக விளங்குகின்றது. இதனை நன்குணர்ந்து உரைவகுத்த அடியார்க்கு நல்லார் மங்கலவாழ்த்துப் பாடலின் உரைக்-

---

22. பதிகம்; 55-60.

கண், ''கண்ணகியை முற்கூறினார்; பத்தினியை ஏத்தல் உட்கோளாகலின்'' என்று கூறியுள்ளார். அரும்பத உரைகாரரும் 'இவளை முற்கூறிற்று கதைநாயகியாகலின்' என்று உரைத்துள்ளார். உயர்ந்தோர் என்பதற்கு ''மக்களேயன்றித் தேவர் முனிவரும் முதலாயுள்ளோர்'' என்று பொருள் கூறியுள்ளார் அடியார்க்கு நல்லார். காப்பியத்தின் முதற்பகுதியாகிய மங்கல வாழ்த்திலேயே கண்ணகியைத் தொழுது ஏத்துவது குறிக்கப்படுகின்றது. 'மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக் காதலாள்' என்பது காண்க. காப்பியத்தின் கடைசிப் பகுதியாகிய வரந்தரு காதையில், பத்தினிக்கு நாள்வழிபாடு நடைபெறுவதையும், அரசர்கள் வணங்கி வரம்பெறுவதையும் காண்கிறோம். கண்ணகியின் காற்சிலம்பே நூலுக்குப் பெயராய் அமைந்துள்ளதும் பத்தினி வழிபாட்டுணர்ச்சியைப் புலப்படுத்துகின்றது. கவுந்தியடிகள் கற்புக்கடம் பூண்ட பொற்புடைத்தெய்வம் என்று ஏத்துகிறார்; இது முனிவர் வாழ்த்தாம். மதுரைத் தெய்வத்தின் பணிவும், தேவர்கள் கண்ணகியை விண்ணுலகத்திற்குக் கொண்டு செல்வதும் தேவர்கள் ஏத்துவதற்குச் சான்றுகளாம். இம்மூன்று நீதிகள் மட்டுமன்றி மேலும் பல நீதிகளை இளங்கோவடிகள் நமக்கு அறிவுறுத்துகின்றார். மூன்று மன்னர்களைப் பற்றிப் பேசுவதாலும், மூன்று காண்டத்திற்கும் அன்றைய சேர, சோழ, பாண்டிய நாடுகளின் தலைநகரத்தின் பெயரைச் சூட்டியிருப்பதாலும், கண்ணகியின் வாழ்வால் மூன்று அரசர்களையும் ஒன்று சேர்ப்பதாலும் ஒன்றுபட்ட மும்மைத் தமிழகத்தை இளங்கோவடிகள் காண விழைந்துள்ளார் என்பதை உணரலாம். காப்பியத்தின் முடிவில் இளங்கோவடிகள் வேண்டுகோளாக உரைக்கின்ற 'பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்' என்ற தொடக்கத்தனவும் உயரிய நீதிகளாம்.

அரச குலத்தில் பிறந்த இளங்கோவடிகள் அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றாகும் என்ற நீதியையும்,

தாம் துறவியானது எதிர்பாராத சூழலில் அண்ணனின் செல்லல் நீங்கவே என்பதனையும், தாம் பெண்ணைப் போற்றும் துறவியே என்பதனையும் காட்ட உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர் என்பதனையும், தம் வாழ்வில் சோதிடன் வாயிலாக விளையாடிய ஊழின் வலியினையே கோவலன் வாழ்விலும் விளையாடுவதையும் விளக்கியுள்ளார் என்னலாம்.

ஐம்பெருங்காப்பியங்களில் வேறொரு நிலையில் நோக்கும்பொழுது சிலப்பதிகாரம் தனிச்சிறப்புக்குரியதாகின்றது. தமிழுக்கும் சமயத்திற்கும் மிகநெருங்கிய தொடர்பு நீண்ட நெடுங்காலமாக நிலவிவருகின்றது. தமிழால் சமயமும் சமயத்தால் தமிழும் வளர்ந்துள்ளன. சிந்தாமணியோ சமண சமயக் காப்பியம். சிந்தாமணியில் திருத்தக்கதேவர் பிற சமயத்துக் கடவுளர்களைத் தக்க வகையில் மதித்துப் போற்றியுள்ளார் என்றாலும் நூலின் நோக்கம் சமய சமயத்தைப் பரப்புவதே என்பது முத்தி இலம்பகம் முதலிய பகுதிகளால் நன்கு விளங்குகின்றது. மணிமேகலையோ புத்த சமயக் காப்பியம். சீத்தலைச் சாத்தனார் தெரிந்தோ தெரியாமலோ முதன்முதலாகச் சமயக் காழ்ப்பினை இலக்கிய உலகத்தில் விதைத்துவிட்டுச் சென்றுள்ளார். 'சமயக்கணக்கர்தந் திறங்கேட்ட காதை' யில் பரசமய கண்டனம், மணிமேகலையின் வாயிலாகச் சீத்தலைச் சாத்தனார் செய்வதைக் காணலாம். வளையாபதி, பௌத்த நூல் என்று சிலரும், சமண நூல் என்று சிலரும் கூறுகின்றனர். குண்டலகேசி சமண காவியமென்பது அறிஞர் முடிவு. ஆனால் சிலப்பதிகாரமோ சமயச்சார் பற்றுப் பொதுமைக் காப்பியமாகத் திகழ்கின்றது. சிலம்பில் பல்வேறு சமயங்கள் பேசப்படுகின்றன; பல்வேறு தெய்வங்கள் சுட்டப்படுகின்றன. இந்திர விழவூர் எடுத்த காதையில், சிவன், முருகன், பலதேவன், திருமால், இந்திரன் ஆகியோர் கோயில்கள் குறிக்கப்படுகின்றன. கனாத்திறமுரைத்த காதையில்

சாத்தன்கோயில் பேசப்படுகின்றது. நாடுகாண்காதை, திருமால்கோட்டம், புத்த தருமம் புகலப்படும் இந்திர விகாரம் ஆகியவற்றைச் சுட்டுகின்றது. காடுகாண்காதை, திருமாலின் நின்ற கோலத்தையும், கிடந்த கோலத்தையும் அழகுறப் புனைந்துரைக்கின்றது. இளங்கோவடிகள் சிறு தெய்வத்தைக்கூடச் சுட்ட மறந்தாரல்லர். வனதெய்வ மொன்றைக் காடுகாண் காதையில் சொல்லிச் செல்கிறார். வேட்டுவவரி கொற்றவை வழிபாடாகவும், ஆய்ச்சியர் குரவை திருமால் வழிபாடாகவும், குன்றக்குரவை முருக வழிபாடாகவும் விளங்குகின்றன. நாடுகாண் காதையில் அருகன் திருப்புகழ் பாங்குறப் பகரப்பட்டுள்ளது. சிலம்பின் பாத்திரங்களும் பல்வேறு சமயத்தைச் சார்ந் தவர்களாகவே உள்ளனர். கோவலனும், கண்ணகியும், கவுந்தியடிகளும் சமண சமயத்தவர்கள். தேவந்தியோ சாத்தனை வழிபடுகின்ற அந்தணகுலப் பெண். மாங் காட்டு மறையவனும் மாதரியும் வைணவர்கள். மாதவியோ சமண சமயத்தைச் சார்கிறாள். செங்குட்டு வனோ சைவ சமயத்தைச் சார்ந்தவன். என்றாலும் இவர்கள் எல்லோரிடத்திலும் சமயக்காழ்ப்புக் காணப்பட வில்லை. அவரவர்கட்குத் தங்கள் தங்கள் நெறி உயர்ந்த தாகத் தெரிகின்றது. தங்கள் சமயத்தை உயர்த்தப் பிற சமயத்தைப் பழிக்கும் இழிதகைமை இவர்கள்பால் இல்லை. எல்லோரும் பத்தினி வழிபாடு என்னும் புதிய சமயத்தின் (Pattini cult) தெய்வத் திருநிழலில் ஒன்றுகூடிக் கைகூப்பி வணங்கும் விழுமிய காட்சியினையே சிலம்பு வழங்குவது சிலம்பின் சிறப்பினையும், இளங்கோவடிகளின் பெரு நெஞ் சினையும் என்றென்றும் உலகுக்குப் பறைசாற்றிக் கொண் டிருக்கும் வகையில் அமைந்துள்ளது என்னலாம்.[23]

இதுகாறும் கூறியவற்றால், சங்க காலத்தில் முதலில் தோன்றிய காப்பியம் சிலம்பு என்பதும், அது ஒரு கலைக்

---

23. சிலம்பு; வாழ்த்துக்காதை : 185-202.

காப்பியம் என்பதும், முத்தமிழ்க் காப்பியம் என்பதும், குடிமக்கள் காப்பியம் என்பதும், சிலம்பு எடுத்துரைக்கும் நீதிகள் யாவை என்பதும், அது சமயப் பொதுமைக் காப்பியம் என்பதும் இனிது விளங்கும். இனி, சிலம்பின் நூலகத்தே விளங்கும் இலக்கியச் சிறப்புகளைக் காணலாம்.

இளங்கோவடிகள் ஒரு கலைக்காப்பியக் கவிஞர் (Literary Epic poet). அவர் படிப்பவர்கட்காகக் காப்பியம் எழுதினாரேயன்றி வளர்ச்சிக் காப்பிய ஆசிரியர்களைப் போன்று கேட்பவர்கட்காக எழுதவில்லை. ஆதலால் உயிரற்ற தொடர்களைப் (Stock Phrases) பயன்படுத்து வதைப் பெரிதும் ஒதுக்கித் தள்ளியுள்ளார். அழகும் கவிதைச் சுவையும் நிரம்பிய சொற்களையே இனங்கண்டு எடுத்தாளுகின்றார். கண்ணகியை வீரபத்தினி (பதிகம்), உரைசால் பத்தினி(பதிகம்),கயமலர்க்கண்ணி, திருமாமணி (மனையறம், வேட்டுவவரி), திருத்தகுமாமணிக் கொழுந்து (அடைக்கலம்), தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி (அடைக்கலம்), பூம்புகார்ப் பாவை (வாழ்த்து) ஆகிய அழகிய அழியாத் தொடர்களாலேயே குறித்துள்ளார். இவ்வாறே கோவலனையும், காதற்கொழுநன் (மனை யறம்), செல்லாச் செல்வ, இல்லோர் செம்மல், கருணை மறவ (அடைக்கலம்) ஆகிய தொடர்களால் பேசுவதும் நயமாக அமைந்துள்ளது. பிறவி அழகினைச் 'செய்யாக் கோலம்' (கொலைக்களம்) என்றும், ஞாயிற்றினை உச்சிக் கிழான் (கனாத்) என்றும், வான்கண் (நாடுகாண்) என்றும் சிறந்த சொற்களால் சொல்லிச் சிறந்த கவிதை யைப் படைத்துள்ளார். எந்த நிகழ்ச்சியானாலும் கருத் தானாலும் உயர்ந்த கவிஞர்களால் சொல்லப்படும் பொழுது அந்த நிகழ்ச்சியும் கருத்தும் தரங்குறையாமல் அமைந்துவிடும். கண்ணகியும் கோவலனும் நெடுநிலை மாடத்து இடை நிலத்து அரமியமேறி இன்பம் நுகர்ந்தனர். இதனைச் சொல்லும் இளங்கோவடிகள் பண்பாடு குன்றாத வகையில் மிகுந்த நயப்பாட்டோடு 'தாரும் மாலையும்

தம்முள் மயங்கி' என்று சொல்கிறார்.[24] அரங்கேற்றத்தின் முடிவில் மாதவியின் மாலையை கூனியொருத்தி விலை கூறி நின்றாள். ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பசும்பொன் பெறுவது இந்த மாலை என்று சாற்றுகிறாள். மாதவிக்கு ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பரிசம் என்னாமல் மாலைக்குப் பரிசம் என்று மிகுத்துக் கூறப்பட்டுள்ளது.[25] இவ்வாறு இடக்கரடக்கலாகச் சொல்லுவது கவிதைச் சுவை பயப்பது மட்டுமல்லாமல் நூலாசிரியரின் உயர்ந்த உள்ளப் பண்பையும் புலப்படுத்துகின்றது. மேலும் கண்ணகியை 'வடுநீங்கு சிறப்பின் மனையகம்' என்று குறிப்பதும், மாதவியின்பால் கோவலன் கொண்ட விருப்பத்தினை 'விடுதலறியா விருப்பு' என்பதும் நல்ல கவிதை வெளிப்பாடுகளாகும்.

இளங்கோவடிகள் கவிதைப் போக்கில் சில தனியியல்புகள் வெளிப்படுகின்றன. எண்களை ஒன்றோடொன்று உறழ்ந்து கூறும் முறை இவரிடம் காணப்படுகின்றது.

'இருமுக்காவதம் (கட்டுரை), 'ஐயைந்து இரட்டி' (நீர்ப்படை), "ஆறைங்காதம்" (நாடுகாண்) முதலியன காண்க.

சில தொடர்களுக்கு இடம்நோக்கி நாம் பொருள் கொள்ள வேண்டியுள்ளது.

> " மாசில் கற்பின் மனைவியோ டிருந்த
> ஆசில் கொள்கை அறவிபால் அணைந்தாங்கு"[26]

என்னுமிடத்தில் மாசில் கற்பின் மனைவி கண்ணகியோடிருந்த அறவி கவுந்தியடிகள் என நாம் எளிதில் அறிகிறோம்.

---

24. சிலம்பு; மனையறம் படுத்த காதை : 9-83.
25. ,, அரங்கேற்று காதை : 164-166.
26. ,, புறஞ்சேரியிறுத்த காதை : 102-103.

'அனநடை மாதரும் ஐயனுந் தொழுது'[27]

என்னுமிடத்தில் ஐயன் கோவலன் என்பதும், அன்னநடை மாதர் கண்ணகி என்பதும் கதைப் போக்கில் விளங்கு கின்றன.

" கணவனோ டிருந்த மணமலி கூந்தலை"[28]

" கோவலன் தன்னொடும் கொடுங்குழை மாதொடும்
மாதவத் தாட்டி"[29]

என்று வரும் இடங்களில் 'மணமலி கூந்தல்', 'கொடுங்குழை மாது' என்பன கண்ணகியைச் சுட்டி நிற்கின்றன. இவ்வாறே,

" கருந்தடங் கண்ணியும் கவுந்தி யடிகளும்
வருந்துசெல் வருத்தத்து வழிமருங் கிருப்ப"[30]

என்னுமிடத்திலும் 'கருந்தடங்கண்ணி' என்பதால் கண்ணகி குறிப்பிடப்படுகிறாள்.

இளங்கோவடிகள் உயிரற்ற தொடர்களைப் பயன் படுத்தவில்லை என்று சொல்வதற்கில்லை. 'கொள்கை' என்ற சொல்லைப் பலவிடங்களில் சேர்த்துச் சொல்வது ஓர் இயல்பாக இளங்கோவடிகளிடம் காணப்படுகின்றது.

" வாயில் கழிந்து தன்மனை புக்கனளால்
கோவலர் மடந்தை கொள்கையின் புணர்ந்தென."[31]

என்றும்,

" குரவரும் நேர்ந்த கொள்கையின் அமர்ந்து
படுகதிர் அமையம் பார்த்திருந் தோர்க்கு."[32]

என்றும்,

---

27. சிலம்பு; புறஞ்சேரியிறுத்த காதை : 175.
28. ,, வேட்டுவ வரி : 46.
29. ,, காடுகாண் காதை : 205-206.
30. ,, ,, 166-167.
31. ,, புறஞ்சேரியிறுத்தகாதை : 14-16
32. ,, கடலாடு காதை : 172-174.

" திருந்துகோல் நல்லியாழ் செவ்வனம் வாங்கிக்
கோவலன் தன்னொடும் கொள்கையின் இருந்தனன்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்"[33]

என்றும் வருமிடங்கள் காண்க. பெரும்பாலும் மோனை நயம் தோன்ற வரும் இடங்களில் இச்சொல் கையாளப் பட்டுள்ளது.

எனவே இளங்கோவடிகள் அருகியே உயிரற்ற தொடர் களை ஆளுகிறார் என்பது புலப்படும். இச்சொல்லைத் தவிர வேறு சொற்கள் எதனையும் இவ்வாறு பலகால் ஆளுவ தாகத் தெரியவில்லை. இச்சொல்லும் கவிதை மோனை நயம் நோக்கி ஆளப்படுவதால் இச்சொல் சோர்வினைப் பயக்கவில்லை.

கவிதையின் குணச் சிறப்புகளுள் ஒன்று ஒலிநயம் ஆகும். உணர்ச்சிகளைக் கவிஞன் தான் கையாளும் சொற்களின் ஒலியைக் கொண்டே உருவாக்கிவிடுவான். எல்லாக் காப்பியக் கவிஞர்களும் ஒலிநயத்தைக் கொண்டு சூழ்நிலை களையும் உணர்ச்சிகளையும் சிறப்பாக வருணிப்பதனைக் காணலாம். இளங்கோவடிகளும் இவ்வொலி நயத்தினைத் தான் காப்பியத்தில் ஆங்காங்கே கையாண்டுள்ளார். கண்ணகி கோவலன் திருமணம் நடைபெறுகின்றது. திருமணம் நடைபெறுமிடத்தில் இயல்பாக எழக்கூடிய சலசலப்பினை,

" விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்."[34]

---

33. சிலம்பு; புறஞ்சேரியிறுத்த காதை : 14-16.
34. ,, மங்கல வாழ்த்துப் பாடல் : 54-59.

ஆகிய அடிகளில் அமைத்துக் காட்டுவதனைக் கூர்ந்து நோக்கி உரையார்.

கோவலன் கொலை செய்யப்பட்ட செய்தியைக் கண்ணகிக்கு ஒரு பெண் தெரிவிக்கிறாள். அவள் கலக்க நிலையை இளங்கோவடிகள்,

**" சொல்லாடாள் சொல்லாடா நின்றாளங் நங்கைக்குச்**
**சொல்லாடுஞ் சொல்லாடுங் தான்"** [35]

என்ற அடிகளால் இனிது விளக்குகிறார்.

கண்ணகி வழக்குரைத்து வென்றாள். மன்னனும் அவன் மனைவியும் உடன் மாள்கின்றனர். சீற்றம் தணியாத பத்தினி, ஏழு பத்தினிப் பெண்டிர் வரலாற்றைச் சொல்லிவிட்டு வஞ்சினம் உரைக்கின்றாள்.

**" மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்**
**பட்டாங்கு யானுமோர் பத்தினியே யாமாகில்**
**ஒட்டேன் அரசோ டொழிப்பென் மதுரையுமென்**
**பட்டிமையும் காண்குறுவாய் நீயென்னா**
**விட்டகலா"** [36]

என்பதன்கண் அவள் வஞ்சினம் உரைத்த செய்தி சொல்லப் படுகின்றது. வல்லாற்றுகள் கண்ணகியின் சீற்றத்தையும் சொற்களில் உள்ள அழுத்தத்தையும் உணர்த்துகின்றன.

இவ்வாறு இளங்கோவடிகள் ஒலிநயத்தை இடமறிந்து கையாண்டு காப்பியத்திற்கு எழிலூட்டுவதைக் காணலாம்.

கவிஞர்கள் தங்கள் படைப்புகளில் அழகிற்காகவும், கருத்துகளை விளக்குவதற்காகவும் உவமைகளைக் கையாளுவர்.

---

35. சிலம்பு; துன்ப மாலை : 9-10.
36. ,, வஞ்சின மாலை : 35-38.

**உவமை என்னும் தவலருங் கூத்தி**[37]

**... ... ... ... ... ... ... ... ... ... ... ...**

என்னும் கூற்றே காப்பியத்தில் உவமையின் இடத்தினை நன்கு விளக்கும். இளங்கோவடிகள் பல உவமைகளைக் கையாண்டுள்ளார். தொல்காப்பியம் உவமைகளை நான்கு வகையாகப் பிரித்துக் கூறும்.

அவை வினை, பயன், மெய், உரு என்பன. இந்நான்கு வகை உவமைகளையும் இளங்கோவடிகள் கையாண்டுள் ளார். பல இடங்களில் மரபாகச் சொல்லப்படும் உவமை களையும் உருவகங்களையும் பயன்படுத்தினாலும் சில விடங்களில் பழைய உவமைகளைச் சொல்லும்பொழுதும் சொல்லும் முறையை மாற்றி அழகுபடுத்துகிறார்.

**“ போதிலார் திருவினாள் புகழுடை வடிவு’**[38]

**“ பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென.”**[39]

---

37. சிலம்பு; துன்ப மாலை : 30-31
இப்பொருளணிகளிற் பல, உவமமென்ற ஓரணி யின் அடியாகவே தோன்றின என்பது பல்லோர் துணிபு. ஆசிரியர் தொல்காப்பியனாரும் இத் துணிபினர் போலும். இது வடமொழி அப்பைய தீக்ஷிதரவர்களுக்கும் உடன்பாடாதல்,

**உவமை என்னும் தவலருங் கூத்தி**
**பல்வகைக் கோலமும் பாங்குறப் புனைந்து**
**காப்பிய அரங்கிற் கவினுறத் தோன்றி**
**யாப்பறி புலவர் இதயம்**
**நீப்பது மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே”**

என்ற அவரது சித்திர மீமாஞ்சைக் கூற்றின் விளக்கமே. —வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்; தமிழ்மொழி யின் வரலாறு, பக். 60, 61.

38. சிலம்பு; மங்கல வாழ்த்துப் பாடல் : 26.

39. ,, அரங்கேற்று காதை ; 157.

" இருபெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியின் இடைநிலம்....."[40]

" மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப் பெய்தி
காவலன்போலும் நம்கடையகத்தான்."[41]

" காமனும் தேவியும் போலும் ஈங்கிவர்."[42]

" பிறைமுடிக் கண்ணிப் பெரியோன் ஏந்திய
அறைவாய்ச் சூலத் தருநெறி கவர்க்கும்."[43]

" நெடியோன் மார்பின் ஆரம் போன்று
பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை."[44]

முதலிய மெய் (வடிவு) உவமைகளைக் காண்கிறோம்.

" நன்னிற மேகம் நின்றதுபோல."[45]

" நீல மேகம் நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலை."[46]

(உருவும் மெய்யும் கலந்த உவமை.)

" கள்ளுக நடுங்கும் கழுநீர்போல."[47]

" மரகத மணித்தாள் செறிந்த மணிக்காந்தள் மெல்விரல்கள்
பயில்வண்டின் கிளைபோலப் பன்னரம்பின்.[48]"

முதலிய உருவ உவமைகள் வந்துள்ளன.

---

40. சிலம்பு; இந்திர விழவூரெடுத்த காதை : 59-60.
41. ,, கனாத்திற முரைத்த காதை : 65.
42. ,, நாடுகாண் காதை : 221.
43. ,, காடுகாண் காதை : 72-73.
44. ,, காட்சிக் காதை : 21-22.
45. ,, காடுகாண் காதை : 46.
46. ,, ,, 35-37.
47. ,, இந்திர விழவூரெடுத்த காதை : 236.
48. ,, கானல் வரி : 10-11.

" சாலியொருமீன் தகை."[49]

" அத்தகு திருவின் அருந்தவ முடித்தோர்
உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்."[50]

" விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்
தண்பதம் கொள்ளும் தலைநாட் போல
வேறுவேறு கோலத்து வேறுவேறு கம்பலை
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி."[51]

" கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்தியல் இழந்த வியனிலம் போல"[52]

' அறக்குடி போலவிந் தடங்கினர் எயினர்'[53]

' அருமணி இழந்த நாகம் போன்று'[54]

' இன்னுயிர் இழந்த யாக்கை என்ன'[55]

' அருந்திறல் பிரிந்த அயோத்தி போல'[56]

ஆகியன போன்ற பயன் உவமைகள் நிறைந்துள்ளன.

" குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
இளிவாய் வண்டினொடு இன்னிள வேனிலொடு
மலய மாருதம் திரிதரு மறுகில்."[57]

---

49. சிலம்பு; மங்கல வாழ்த்துப் பாடல் : 51.
50. ,, மனையறம் படுத்த காதை : 9-11.
51. ,, கடலாடு காதை ; 159-162.
52. ,, காடுகாண் காதை ; 60-61.
53. ,, வேட்டுவ வரி : 15.
54. ,, புறஞ்சேரி யிறுத்த காதை : 58.
55. ,, ,, 59.
56. ,, ,, 65.
57. ,, இந்திர விழவூரெடுத்த காதை : 200-203.

" கொடுங்கோல் வேந்தன் குடிகள்போலப்
படுகதிர் அமையம் பார்த்திருந் தோர்க்கு"[58]

" கரந்துறை மாக்களிற் காதலி தன்னொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தினோர்"[59]

முதலிய வினையுவமைகள் பயின்றுள்ளன.

இளங்கோவடிகள் கண்ணகி கோவலன் மாதவி ஆகிய மூவரையுமே வெவ்வேறு நிலையில் உவமையாகக் கூறி யுள்ளமை குறிப்பிடத்தக்கது. கண்ணகியின் அழகினையும், கற்பு மேம்பாட்டினையும் கூற வருகின்றவர் முறையே திருமகளையும், அருந்ததியையும் உவமையாகக் கூறாமல் அவர்களைப் பொருள்களாக்கிக் கண்ணகியின் அழகினையும் கற்பு மேம்பாட்டினையும் உவமையாக்குகிறார். இவ் விடத்தில் கண்ணகிக்கு ஏற்றந்தர அவளை உவமையாக்கி யுள்ளார் என்பது புலப்படுகின்றது.

மலையமாருதம் தெருவில் திரிகின்றது. வண்டினொடும் இன்னிளவேனிலொடும் திரியும் மலையமாருதம், பாணரொடும், பரத்தரொடும் திரியும் கோவலனைப் போன்றுள்ளதாகக் கூறுகின்றார். இவ்விடத்தில் கோவலன் பண்பினை இப்படி உவமிப்பதால் விளக்குகிறார் என்னலாம்.

கோசிகமாணி நீர்நிலையில் கோவலனைக் காண் கின்றான். கோவலன் உருவம் இளைத்திருந்தமையாலும், கோசிகமாணியின் கட்புல மயக்கத்தாலும் நிற்பவன் கோவலன் தானா என்பதைச் சரியாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆதலால் பக்கத்திலிருந்த மாதவிக் கொடியை நோக்கி அவன், கோவலனைப் பிரிந்த மாதவி யைப் போல வாடி நிற்கும் மாதவிக் கொடியே என் கிறான்.

---

58. சிலம்பு; புறஞ்சேரி யிறுத்த காதை : 15-16.
59. ,, கட்டுரை காதை : 148-149.

**"கோவலன் பிரியக் கொடுந்துயர் எய்திய**
**மாமலர் நெடுங்கண் மாதவி போன்றிவ்"**[60]

என்பது கோசிகமாணியின் கூற்று. இங்கு மாதவியின் துயரத்தின் ஆழத்தினைப் புலப்படுத்துவதோடு கோவலனைத் தெரிந்துகொள்வதற்காகவும் மாதவியை உவமையாகச் சொல்கிறான் கோசிகமாணி என்பது விளங்குகின்றது.

இவ்வாறு சிறப்பாக மூன்று பாத்திரங்களையும் உவமையாக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

அடிகள் அரசியலைக் கூர்ந்து நோக்கிப் பல இடங்களில் அரசியல் சார்பான உவமைகளைப் படைத்துள்ளார்.

**'கறைகெழு குடிகள் கைதலை வைப்ப**
**அறைபோகு குடிகளோ டொருதிறம் பற்றி**
**வலம்படு தானை மன்னர் இல்வழிப்**
**புலம்பட இறுத்த விருந்தின் மன்னரின்'**[61]

**'இருபெரு வேந்தர் முனையிடம் போல**
**இருபாற் பகுதியின் இடைநிலம்'**[62]

**'விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்**
**தண்பதம் கொள்ளும் தலைநாட் போல'**[63]

**'கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி**
**வேத்தியல் இழந்த வியனிலம் போல'**[64]

**'கொடுங்கோல் வேந்தன் குடிகள்போலப்**
**படுகதிர் அமையம் பார்த்திருந் தோர்க்கு'**[65]

---

60. சிலம்பு; புறஞ்சேரியிறுத்த காதை : 48 : 49.
61. ,, அந்திமாலைச் சிறப்புச்செய் காதை 9-12.
62. ,, இந்திரவிழவூரெடுத்த காதை : 59-60.
63. ,, கடலாடு காதை : 159-160
64. ,, காடுகாண் காதை : 60-61.
65. ,, புறஞ்சேரி யிறுத்த காதை : 15-16.

'முடிபுறம் உரிஞ்சுங் கழற்காற் குட்டுவன்
குடிபுறந் தருங்கால் திருமுகம் போல
உலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்'[66]

ஆகிய உவமைகள் அரசியலைச் சார்ந்த உவமைகளாக இருத்தல் வெளிப்படை. செங்குட்டுவன் முகத்தையே மதியத்தோடு ஒப்பிடுகிறார் கடைசியில் கூறப்படுகின்ற உவமையில் என்பது குறிப்பிடத்தக்கது.

மரபாகச் சொல்லப்படுகின்ற உவமைகளை எல்லாம் உவமத்தொகையாகப் பல இடங்களில் கூறியுள்ளார்.

மாமலர் நெடுங்கண்[67]

பாற் கதிர்[68]

ஆவியங் கொழுநர்[69]

காவியங் கண்ணார்[70]

திங்கள் வாண்முகம்[71]

பவள வாணுதல்[72]

துடியிடை[73]

காந்தள் மெல்விரல்[74]

இருகயல் இணைவிழி[75]

---

66. சிலம்பு; நடுகற் காதை : 37-39.
67. ,, அரங்கேற்று காதை : 170.
68. ,, அந்திமாலைச் சிறப்புச்செய் காதை : 25.
69. ,, ,, 45.
70. ,, ,, 46.
71. ,, ,, 52.
72. ,, ,, 54.
73. ,, கடலாடு காதை : 26.
74. ,, கானல் வரி : 10.
75. ,, ,, 18.

**திங்கள் முகத்தாளை**[76]

**வேற்கண்ணாள்**[77]

**பவளச் செஞ்சுடர்**[78]

**பவளச் செவ்வாய்த்தி**[79]

ஆகிய இடங்களைக் காண்க.

சிலவிடங்களில் பழைய உவமைகளையே புதிய முறையில் சொல்லியுள்ளார். பெண்களின் சாயலுக்கு மயிலின் சாயலையும், நடைக்கு அன்னத்தினையும், பேச்சுக்குக் கிளியினையும் சொல்வது மரபு. அவற்றைத் தான் கண்ணகியின் சாயல், நடை, பேச்சு ஆகியவற்றிற்கு ஒப்பிடுகிறார். என்றாலும் சொல்லும் முறையில் மாற்றம் காணப்படுகின்றது. மயில் கண்ணகியின் சாயலுக்குத் தோற்றுக் கானகம் புக்கதாம். நடைக்குத் தோற்று அன்னம் பொய்கையில் செறிந்ததாம். பேச்சுக்குத் தோற்ற கிளிகள் மழலைக்கிளவிக்கு வருந்தின வெனினும் மலர்க் கையின் நீங்காது உடன் உறைவனவாயினவாம். பழைய உவமைகளில் புதிய உயிரோட்டம் இருப்பதைக் காண லாம். கண்ணகியின் நுதல், புருவம், இடை, கண் ஆகிய வற்றைக் கோவலன் பாராட்டுகின்ற இடத்திலும் இத்தன்மை நிலவுவதைக் காணலாம். நுதலுக்குச் சிவபிரான் முடியில் உறையும் பிறையும், புருவத்திற்குக் காமன் கரும்பு வில்லும், இடைக்கு வச்சிரப்படையும், கண் பார்வைக்கு முருகப்பிரான் வேலும் உவமைகளாகக் கூறப் பட்டுள்ளன. இவற்றை புகழுவமையலங்காரம் என்கிறார் அடியார்க்குநல்லார்.[80] (பக். 51. அடியார்க்கு நல்லார்

---

76. சிலம்பு; கானல் வரி : 56.
77. ,, வஞ்சினமாலை : 19.
78. ,, அழற்படு காதை : 51.
79. ,, கட்டுரை காதை : 3.
80. ,, மனையறம் படுத்த காதை : 49-52. அடியார்க்குநல்லார் உரை.

உரை) இவை மேலைநாட்டார் சொல்லும் காப்பிய உவமைகளைப் போன்று அமைந்துள்ளமை நோக்கத்தக்கது (Homeric long-tailed epic similes). இப்பொருளுவமைகளையும் இளங்கோடிவடிகள் கையாண்டுள்ளார்.

" அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை''[81]

" குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தநின்
மழலை'[82]

" கதிரொருங் கிருந்த காட்சி போல'[83]

ஆகியனவற்றைச் சான்றாகக் காட்டலாம்.

உருவக அணியை இளங்கோவடிகள் பலவிடங்களில் திறம்படக் கையாண்டுள்ளார். தென்றலைச் 'சிறுகாற் செல்வன்' (அந்திமாலைச் சிறப்புச் செய்காதை) என்றும், திங்களைத் 'திங்களஞ் செல்வன்' என்றும், பின்பனிக் காலத்தைப் 'பனியரசு' (ஊர்காண் காதை) என்றும், உருவகித்துள்ளார். கதிரவன் மறைந்தான்; திங்கள் இன்னும் எழவில்லை. அந்திமாலைக்காலம். அதனைப் புனைந்துரைக்கும் அடிகள் நிலமகளாகிய பேரரசி தன் கணவனாகிய கதிரவனைக் காணாமல் திங்களாகிய செல்வன் யாண்டுளன் என்று தேடித் திசைமுகம் பசந்து கண்கள் பனித்து வருந்தி நிற்பதாக உருவகிக்கிறார். இங்கு அந்திமாலைக் காட்சிகளை நிலமகள் புலம்பலாக உருவகம் செய்கிறார். அதே காதையில் பொய்கையைப் பெண்ணாக உருவகித்துள்ளார். நன்னீர்ப் பொய்கை நங்கையாம்; அவளுக்கு அன்னம் மென்னடையாக அமைகின்றது; தாமரைச் செவ்வாய்; தண்ணறல் கூந்தல். இங்கே பொய்கை பெண்ணாக உருவகம் செய்யப்பட்டுள்ளது. இந்திரவிழவூரெடுத்த காதையில் கதிரவன்

---

81. சிலம்பு; மங்கல வாழ்த்துப் பாடல் : 63.
82. ,, மனையறம் படுத்த காதை : 58-59.
83. ,, ,, 31.

தோற்றம் உருவகமாகப் புனையப்படுகின்றது. கடலை ஆடையாக உடுத்த நிலமகள், மலைகளாகிய ஆகம்; அவளுக்கு ஆரமாக அமைகின்றது பேரியாறு; மழை கூந்தலா கின்றது. அந்த மண்ணகமடந்தையின் போர்வையாகிய இருட்டை நீக்கி உதயமால் வரையில் தோன்றுகிறான் உதய ஞாயிறு. இங்கும் பெண்ணின் உருவகம் கானல்வரியில் 'மருங்கு வண்டு சிறந்தார்ப்ப' என்ற பாட்டில் காவிரி பெண் ணாக உருவகிக்கப்பட்டுள்ளது. புறஞ்சேரி யிறுத்த காதை யில் வைகையைப் பொய்யாக் குலக் கொடியாக உருவகம் செய்துள்ளார். இவ்வுருவகங்களில் சில மரபை ஒட்டியவை. நிலத்தையும், ஆற்றினையும் பெண்ணாக வருணித்தல் மரபு. அந்திமாலையையும், குளத்தினையும், கதிரின் தோற்றத்தினையும் வேறு வகையாகப் புனைந்திருக்கலாம். பெண்மையை வழிபடும் இளங்கோவடிகள் அவற்றையும் பெண்மைக் காட்சியாகவே உருவகித்துள்ள சிறப்பு நினைந்து நினைந்து மகிழ்தற்குரியதொன்றாகும். இம் முற்றுருவகங்கள் தவிர வேறு சில சிறுசிறு உருவகங்களையும் சொல்லிச் சென்றுள்ளார். 'கண்வலை' (கானல்வரி), பழம்பகை (நாடுகாண் காதை), துயர்க்கடல் (புறஞ்சேரி யிறுத்த காதை), பசிப்பிணி (அடைக்கலக் காதை), உயிராணி (அழற்படு காதை) முதலியவற்றைச் சான்றாகக் காட்டலாம்.

இயற்கையை வருணிப்பதில் தமிழ்க் கவிஞர்கள் மிகச் சிறந்த இடத்தைப் பெறுகின்றனர். இயற்கையை அழகுக் கூடமாகக் காண்பவர் சிலர்; இயற்கையை உவமை, உருவகம் ஆகியவற்றின் உறைவிடமாகக் கொள்பவர் சிலர்; இயற்கையை வாழ்க்கையின் பின்னணியாகக் காட்டுபவர் சிலர். இம்மூன்று நிலைகளையும் சிலப்பதிகாரத்தில் காணலாம். கண்ணகியும் கோவலனும் கவுந்தியடிகள் துணையோடு மதுரை நோக்கிச் செல்கின்றனர். சோலை வழியாகவும் சாலை வழியாகவும் அவர்கள் செல்கின்றனர். அச்சோலை வழியை மிக அழகாக வருணிக்கிறார்.

பயில்பூந் தண்டலைப் படர்குவம் எனினே,
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பகம் நிறைத்த தாதுசோர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பம் காட்டினுங் காட்டும்;
உதிர்பூஞ் செம்மலின் ஒதுங்கினர் கழிவோர்
முதிர்தேர் பழம்பகை முட்டினும் முட்டும்;
மஞ்சளும் இஞ்சியும் மயங்கரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் பரற்பகை உறுக்கும்[84]

என்று அடிகள் சோலை வழியைப் புனைந்துரைக்கின்றார். இவ்வருணனையில் இயற்கையை உள்ளவாறு வருணித்துள்ளார். இதில் மிகையாக எதனையும் எடுத்துச்சொல்லவில்லை. அழகும் ஆற்றொழுக்கும் நிறைந்த வருணனை. இதைத் தொடர்ந்துவரும் வயல் வழி வருணனையும், காடுகாண் காதையில் வலப்பக்க நெறியின் இயல்பு கூறுமிடத்தில் வரும் கானம், சிறுமலை முதலியவற்றின் வருணனைகளும் இனிய வருணனைகள்; இயல்பான வருணனைகள். இயற்கையை இயற்கை என்ற நிலையிலேயே வருணிப்பவைகள். இயற்கையை உவமை, உருவகம் ஆகியவற்றின் உறைவிடமாகவும் கொண்டுள்ளார் இளங்கோவடிகள்.

"உள்ளகம் நறுந்தா துறைப்ப மீதழிந்து
கள்ளுக நடுங்குங் கழுநீர் போலக்
கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
உண்ணிறை கரந்தகத் தொளித்து நீருகுத்து"[85]

"கொடி நடுக்குற்றதுபோல ஆங்கவள்
அடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீர் உகுத்து"[86]

"மதிபுரையும் நறுமேனி"[87]

---

84. சிலம்பு; நாடுகாண் காதை ; 67-75.
85, ,, இந்திரவிழவூரெடுத்த காதை : 235-238.
86. ,, காடுகாண் காதை : 174-75.
87. ,, ஆய்ச்சியர் குரவை ஒன்றன் பகுதி-1.

"பொழிகதிர்த் திங்கள் முகிலோடுஞ் சேணிலங்
கொண்டென"[88]

ஆகிய உவமைகள் இயற்கையைச் சார்ந்த உவமைகள். பொய்கை உருவகம், நிலமகள் புலம்பல் முதலிய உருவகங்களும் இயற்கை நிகழ்ச்சிகளில் உருவகமாக விளங்குவது வெளிப்படை.

இயற்கையை வாழ்க்கையின் பின்னணியாக மிகத் திறனோடு கையாண்டுள்ளார் இளங்கோவடிகள். மனிதப் பண்புகளை இயற்கையின்மேல் ஏற்றிச் சொல்வது கவிஞன் உத்திகளுள் ஒன்று. இளங்கோவடிகள் இவ்வுத்தியினைத் திறம்படக் கையாண்டுள்ளார்.

கண்ணகியும் கோவலனும் கவுந்தியடிகளும் வைகைக் கரையை அடைகின்றனர். வைகையின் மேற்பரப்பு வண்ண மலர்களால் நிறைந்துள்ளது. நீர்ப்பரப்பு முழுவதையும் மலர்கள் மறைத்திருப்பது கண்ணகியின் வாழ்வில் நேர இருக்கும் துயரத்தை வைகை தானறிந்திருப்பதுபோலவும் அதனை வெளிக்காட்டாவாறு தன்னைப் புண்ணிய நறு மலராடையால் போர்த்துச் செல்வது போலவும் கூறுகின்றார். இதனை,

"வையை யென்ற பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள்போல்
புண்ணிய நறுமல ராடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி"[89]

என்று விளக்குகின்றார்.

கருநெருங் குவளையும் ஆம்பலும் கமலமும் கண்ணகிக்கும் கோவலனுக்கும் வரப்போகும் துயரத்தை ஐயமின்றி அறிந்தனபோல வண்டுகள் பாடும் பண்ணீர்மையால் வருந்தி ஏக்கமுற்று அழுது கண்ணீரைக் கொண்டு கால் பொருந்த நடுங்கின என்றார். கொடிகள் வர

---

88. சிலம்பு; துன்ப மாலை; 30-31
89. ,, புறஞ்சேரியிறுத்த காதை : 170-73.

வேண்டாம் என்று சொல்வதுபோல் பறந்தன என்றும் கூறு கின்றார். இவ்விடங்களில் எல்லாம் இயற்கையின்மேல் மனிதப்பண்புகள் ஏற்றிக் கூறப்பட்டுள்ளன. வாழ்வோடு இயற்கை இரண்டறக் கலந்து விளங்குகின்றது.

காப்பிய ஆசிரியர்கள் இடப்பெயர்களையும், கப்பல் முதலியவற்றின் பெயர்களையும், ஆயுதங்களின் பெயர் களையும் அடுக்கிக் கூறி இசை பொருந்திய கவிதையாக்கு வதைக் காப்பியங்களில் காணலாம். மில்டன் இடங்களின் பெயர்களைத் தொகுத்துச் சொல்லிக் கவியாக்குவதைத் 'துறக்க நீக்கம்' (Paradise Lost) காப்பியத்தில் காணலாம்.

......"Though all the Giant broad
Of Pblegra with th' Heroic Race were joined
That fought at Theb's and Ilium, on each side
Mixt with auxiliar Gods; and what resounds
In Fable or Romance of Uthers Son
Begirt with British and Armoric Knights
And all who since, Baptiz'd or Infidel
Jousted in Aspramont or Montalban
Damasco, or Marocco, or Trebisond,
Or whoem Biserta sent from Afric shore
When Charlemain with all his Peerage fell
By Fonterabbia."

— Paradise Lost; I : 575-587.

ஓமரின் இலியட் காப்பியத்தில் கப்பல்களின் பட்டியல் தரப் பட்டுள்ளது. (See the Ilaid of Homer Translated by Alexander Pope—Book II p. 37&38.) கம்பன் படைக்கருவி களின் பெயர்களை எடுத்துச் சொல்லிக் கவிதையாக்கு வதைச் சுந்தரகாண்டத்தில் காணலாம். இளங்கோவடிகள் மரத்தின் பெயர்களையும், மலர்களின் பெயர்களையும் எடுத்துக் கூறி அவற்றிலிருந்து நல்ல ஓசைநயத்தையும் கவிதையையும் வெளிக் கொணர்கிறார். (Ilanko extracts music out of the names of flowers and trees.)

குரவமும் வகுளமும் கோங்கமும் வேங்கையும்
மரவமும் நாகமும் திலகமும் மருதமும்
சேடலும் செருந்தியும் செண்பக ஓங்கலும்
பாடலம் தன்னொடு பன்மலர் விரிந்து
குருகும் தளவமும் கொழுங்கொடி முசுண்டையும்
விரிமலர் அதிரலும் வெண்கூ தாளமும்
குடசமும் வெதிரமும் கொழுங்கொடிப் பகன்றையும்
பிடவமும் மயிலையும் பிணங்கரின் மணந்த
கொடுங்கரை மேகலைக் கோவை யாங்கணும்[90]......

என்ற அடிகளைக் காண்க.

சிலேடையணி சங்க இலக்கியத்தில் வருவதாகத் தெரிய வில்லை. சிலம்பில் சிலேடையணி ஓரிரு இடங்களில் வருகின்றது. ''கண்ணீர் கொண்டு காலுற நடுங்க'' (புறஞ்சேரி யிறுத்த காதை) என்பதில் கண்ணீர் என்பதனைக் கள்நீர் என்றும், கண்ணீர் என்றும் இருவகையாகப் பொருள் கொள்ளலாம். ''அருந்திறல் வேனிற் கலர்களைந்துடனே, வருந்தினை போலுநீ'' என்ற தொடரில் அலர் களைந்து என்பது பழிச்சொல் பொறாமை, மலர்களை நீக்குதல் என்னும் இருபொருளில் கையாளப் பெற்றுள்ளது. மேலும் மாதவியின் இரண்டாவது கடிதம், கோவலன் தன் தந்தைக்கு எழுதிய கடிதம் போலவும் அமைகின்றது.

சிலம்பில் கையாளப்பெறும் ஆசிரியப் பாக்கள் நன்கு மெருகுபடுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கியப் பாடல்களில் சிலவற்றின் நடை கடுமையானதாக அமைந்துள்ளன. ஆனால் சிலம்பில் ஆசிரியப்பா எளிமையும் இனிமையும் மிக்கனவாய் அமைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. (The Ahavel metre is perfected in cilappatikaram.)

இவ்வாறு இளங்கோவடிகள் காப்பியத்தில் ஒலிநயம், உவமை, உருவகம், இயற்கை வருணனை ஆகியன சிறப்பாக அமைத்துக் காவியத்தின் இலக்கியச் சிறப்பினை உயர்த்தியுள்ளார் எனத் தெளியலாம்.

---

90. சிலம்பு; புறஞ்சேரியிறுத்த காதை 151-159.

பகுதி 2

# மணிமேகலை

சிலப்பதிகாரத்தோடு தொடர்புடைய நூல் மணி மேகலை ஆகும். 'சிலப்பதிகாரத்தோடு உரைப்பொருள் முற்றிய மணிமேகலை' என்ற தொடர் இவ்வுண்மையை உணர்த்தும். மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்த னார் இயற்றியுள்ள மணிமேகலை கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மணிமேகலையினைக் கதைத் தலைவியாகக் கொண்டது. இம்மணிமேகலையுள் வஞ்சிமா நகர் புக்க காதையில் சேரன் செங்குட்டுவனைப் பற்றியும், வஞ்சிநகரத்தைப் பற்றியும் சில செய்திகளை நாம் அறிய வருகின்றோம். அவை வருமாறு:

## செங்குட்டுவன்

சேரன் செங்குட்டுவன் சேனைகள் வஞ்சிப்பூவினைத் தம் தலையிலே சூடி, மலைகளைப் போன்ற யானை களோடும் தேரோடும் குதிரையோடும் கடல்போலும் முழக்கமிட்டுக்கொண்டு அவற்றைச் செலுத்திச் சென்று கங்கைப் பேரியாற்றின் கரையில் தங்கி, வங்கம் என்னும் ஒருவகை மரக்கலத்தின் உதவியால் அவ்வாற்றின் வடகரையில் இறங்கி, கனகன், விசயன் முதல் உத்தரன், விசித்திரன் முதலிய ஆரிய அரசர் பலரையும் வென்று, அவர்களுடைய அழகிய பொன்முடி அணிந்த தலைமீது பத்தினிப் படிவம் சமைத்தற்குரிய—இமயமலையினின்றும் வெட்டி எடுக்கப்பட்ட கல்லையும் தனது வெற்றியின்

அடையாளமாகப் பொன்னால் செய்யப்பட்ட வாகையையும் சேரன் செங்குட்டுவன் வைத்தான்.

### வஞ்சி

வஞ்சியின் புறமதிற்புறத்தே கடவுளர் கோயிலும் வேதிகையும் (திண்ணை), சாலையும், அழகிய பூஞ்சோலையும், குளமும் நெருங்கி இருந்தன. ஆண்டு நற்றவம் புரிந்த முனிவரும், மறைநூல் பயின்று அதன்படி ஒழுகும் அறவோரும், அறநெறி கடைப்பிடித்த பண்டைநூற் பயிற்சி மிக்க புலவரும் நிறைந்து விளங்கினர். மேலும் அழகிய கொடி என்னும் பெயரான் அமைந்த பூ அல்லாத வஞ்சி என்னும் பெயரமைந்த இவ்வஞ்சிமாநகரம் எழில் மிகுந்த நகரமாகத் துலங்கியது.[1]

இவ்வாறு செங்குட்டுவனும் வஞ்சியும் மணிமேகலைக் காப்பியத்துள் குறிக்கப் பெற்றுள்ளனர்.

---

1. வஞ்சிமாநகர் புக்க காதை: 62:94.

# சேர நாட்டுப் பிற இலக்கியங்கள்

தமிழர்களுடைய பண்பாடும், இலக்கியமும் தொடக்க காலத்தில் களப்பிரர் மற்றும் பல்லவருடைய பண்பாடு, இலக்கியங்களோடும், பிற்காலத்தில் இசுலாமியர் மற்றும் கிறித்துவர்களுடைய பண்பாடு, இலக்கியங்களோடும் கட்டாயத் தொடர்பு கொள்ள வேண்டிய சூழ்நிலைக்கு ஆளாயின. இதன் விளைவாக, சங்க இலக்கிய உரைகளில் குறிப்பிடப்பட்டுள்ள சிறப்பு வாய்ந்த பல நூல்கள் பிற்காலத் தலைமுறையினருக்குக் கிடைக்கவில்லை. அவற்றுள், தகடூர்யாத்திரை, முத்தொள்ளாயிரம் என்னும் இரு நூல்களும் முழுமையாகக் கிடைக்க வில்லை. ஆனால், தற்பொழுது இருக்கின்ற இந்நூல்களின் சில பகுதிகளின் வாயிலாக அக்காலத் தமிழர்களின் வரலாற்றுச் சிறப்பு, இலக்கியச் சிறப்பு ஆகியவற்றை மதிப்பீடு செய்து போற்ற முடியும். இவ்வியலில் இந்த இரு நூல்களும் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. மற்றொரு நூலான புறப்பொருள் வெண்பா மாலையும் ஆய்வுப் பொருளாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. புறப் பொருள் வெண்பாமாலை போரின் பல்வேறு நிலை களையும் போர் நடைபெறுகிறபொழுது மேற்கொள்ள வேண்டிய விதிமுறைகளையும் வரையறுத்துக் கூறு கின்றது. இத்தகு சிறப்பு வாய்ந்த இந்நூலின் ஆசிரியர் சேர நாட்டைச் சார்ந்தவர்.

# 1. தகடூர் யாத்திரை

தமிழர் இழந்த இலக்கியச் செல்வங்கள் பல; கால வெள்ளத்திற்கும் கடல்கோளுக்கும் இரையான நூல்கள் பல. இறையனார் அகப்பொருளுரை கொண்டு இழந்த சில நூல்களின் பெயர்களையும் அறிகிறோம். தொல்காப்பியத்திற்கு உரையெழுதியுள்ள பேராசிரியர், நச்சினார்க்கினியர், தக்கயாகப்பரணி உரையாசிரியர் முதலிய உரையாசிரியர் கூற்றுக்களானும், புறத்திரட்டு என்னும் தொகை நூலானும் 'தகடூர் யாத்திரை' என்னும் பெயரிய நூல் ஒன்று இருந்தது என்பது தெரியவருகின்றது.

'பாட்டிடை வைத்த குறிப்பி னானும்'[1] எனத் தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவிற்குப் பேராசிரியர் உரையெழுதுகின்றபொழுது 'தகடூர் யாத்திரை' என்னும் நூல் குறித்துப் பின்வருமாறு குறித்துள்ளார்:

"பாட்டிடை வைத்த குறிப்பினானும் என்பது ஒரு பாட்டு இடையிடை கொண்டு நிற்குங் கருத்தினான் வருவன எனப்படும். என்னை? பாட்டு வருவது சிறுபான்மையாகலின், அவை தகடூர் யாத்திரை போல்வன."

நச்சினார்க்கினியர் 'தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே'[2] என்னும் தொல்காப்பிய நூற்பாவுரையில்,

"தொன்மை என்பது உரைவிராய்ப் பழைமையவாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு. அவை

---

1. தொல்: பொருள் : செய்யுளியல் : 171.
2. தொல்; பொருள் : செய்யுளியல் : 235.

பெருந்தேவனாராற் பாடப்பட்ட பாரதமும், **தகடூர் யாத்திரையும்** போல்வன''

என்றும்,

'தானை யானை குதிரை'[3] எனத் தொடங்கும் தொல் காப்பிய நூற்பாவின் உரையில்,

''இனி யானைநிலைக்குங் குதிரைநிலைக்குந் துறைப் பகுதியாய் வருவனவும் கொள்க. அஃது, அரசர்மேலும் படைத்தலைவர்மேலும் ஏனையோர் மேலும் யானை சேறலும், களிற்றின் மேலும் தேரின் மேலும் குதிரை சேறலும், தன்மேலிருந்துபட்டோர் உடலை மோந்து நிற்றலும் பிறவுமாம்...இவை தனித்து வாராது தொடர் நிலைச் செய்யுட்கண் வரும். அவை தகடூர் யாத்திரை யினும் பாரதத்தினுங் காண்க'' என்றும் குறிப்பிட்டுள் ளார்.

தக்கயாகப்பரணி உரையாசிரியர் 'மதிதுரந்து வர வொழிந்த'[4] என்னும் தாழிசைக்கு உரையெழுதும்பொழுது **''இது தர்க்கவாதம். இது தமிழில் தகடூர் யாத்திரையிலும் உண்டு''** என்று குறிப்பிட்டுள்ளார்.

இக் குறிப்புகள் எல்லாம் தகடூர் யாத்திரை எனப் பெயரிய நூலொன்று இருந்தது என்பதனைத் தெரிவிக் கின்றன.

புறத்திரட்டு என்னும் தொகைநூலில் 'தகடூர் யாத்திரை' என்னும் நூலின் 44 செய்யுட்கள் தொகுக்கப் பட்டுள்ளன. எனவே புறத்திரட்டு தொகுக்கப்பட்ட காலத்திலேயே தகடூர் யாத்திரை நூல் முழுதும் கிடைக் காமல் 44 செய்யுட்களே கிடைத்தன என்ற உண்மையினை அறிகிறோம். தக்கயாகப் பரணி உரையாசிரியர் புறத்

---

3. தொல்; பொருள்: புறத்திணையியல் : 17
4. தக்கயாகப் பரணி; பேய்களைப் பாடியது; தாழிசை : 12.

திரட்டில் தொகுக்கப்பெறாத ஒரு செய்யுளைத் தம் உரையில் மேற்கோள் காட்டியுள்ளார்.

தகடூர் யாத்திரை, தகடூர் என்னும் இடத்தில் நடந்த போர்ச் செய்திகளையெல்லாம் விளக்கமாகக் கூறுகின்றது. பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேரநாட்டரசன், தகடூரை ஆண்ட அதியமான் நெடுமான் அஞ்சியின்மீது பகைமை கொண்டு, தகடூர்மீது படையெடுத்துச் சென்று, அந்நகரை முற்றுகையிட்டுப் போர் செய்து வென்ற செய்தியினை இந்நூல் உள்ளீடாகக் (Content) கொண்டுள்ளது. பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்து, அரிசில்கிழாரால் பெருஞ்சேரல் இரும்பொறை மீது பாடப்பெற்றதாகும். இச்சேரமன்னன் தகடூரைப் பொருது வென்ற காரணத்தால் 'தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை' என அழைக்கப்பட்டான். தற்போது தருமபுரி மாவட்டத்தின் தலைநகராக உள்ள தருமபுரியே அந்நாளைய தகடூர் என்பர் ஆராய்ச்சி அறிஞர்.

தகடூர் மன்னனாகிய அதியமான் நெடுமான் அஞ்சியும் பெருஞ்சேரலிரும்பொறையும் தமையன் தம்பி முறையினர் என்பது தகடூர் யாத்திரையின் 7 ஆம் பாட்டினால் விளங்குகின்றது. பெருஞ்சேரலிரும்பொறை படையெடுத்து வந்து தகடூர்க் கோட்டையை முற்றுகையிடுகிற வரையிலும் அதியமான் நெடுமான் அஞ்சி, கோட்டைக்குள்ளேயே இருந்தான் என்ற செய்தி நச்சினார்க்கினியர் தம் குறிப்பால் விளங்குகின்றது. மேலும் தகடூர்ப் போரில் முடியுடை மன்னர் மூவரும் அதியமான் நெடுமான் அஞ்சி அவன் மகன் தகடூர் பொருது வீழ்ந்த எழினி, திருக்கோவலூரைச் சுற்றியுள்ள மலை நாட்டினை ஆண்ட மலையமான் திருமுடிக்காரி ஆகிய குறுநில மன்னர்களும், பெரும் பாக்கன், நெடுங்கோளாதன் முதலாய பல வீரர்களும் இப் போரில் ஈடுபட்டார்கள் என்பது தெரிய வருகின்றது.

அரிசில்கிழார், பொன்முடியார் முதலிய புலவர்கள் பாடியுள்ள செய்யுள்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இவர்கள் பாடியுள்ள பாடல்களால்[5] இவர்கள் தகடூர்ப் போர் நிகழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர்கள் என்பது தெரிய வருகின்றது. மேலும் அரிசில்கிழார் பெருஞ்சேர லிரும்பொறைமீது பதிற்றுப்பத்து எட்டாம் பத்தினைப் பாடியுள்ளார் என்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. ஆயினும் தகடூர் யாத்திரை மிகப் பிற்காலத்து நூல் என்று பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் கருது கிறார்[6]. ''மக்களின் மனத்திற்கு உணர்ச்சியூட்டுகிற நிகழ்ச்சிகள், முக்கியமாக வீரச் செயல்கள், அவை நிகழ்ந்த அக்காலத்திலேயே பாட்டாகவும் கதையாகவும் இயற்றப் படுவது தொன்றுதொட்டு இன்று வரை நடைபெற்று வருகிற உலக வழக்கம். எனவே, தமிழகம் முழுவதும் உள்ள மக்களின் மனத்தைக் கவர்ந்ததும், உணர்ச்சியை யூட்டியதும் ஆகிய தகடூர்ப் போர்—இது முடியுடை வேந்தர் மூவரும், குறுநில மன்னர்களும் பங்குகொண்டு நிகழ்த்திய பெரும் போர் என்பதை மறத்தல் ஆகாது—அந் நிகழ்ச்சி நடந்த பல காலத்துக்குப் பிறகு, அது பழங்கதை யாகப் போன பிறகு, தகடூர் யாத்திரை என்னும் நூலாக எழுதப்பட்டது என்று கூறுவது, உலக இயற் கைக்கும் பழந்தமிழர் மரபுக்கும் பொருந்துவது அல்ல'' என்று கூறி; திரு மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களை மறுத் துள்ளார்.[7]

தகடூர் யாத்திரை பத்தொன்பதாவது நூற்றாண்டு வரை ஏட்டுச்சுவடியாக இருந்தது என்பதும், பின்னர் மறைந்து போனது என்பதும் டாக்டர் உ. வே. சாமிநா

---

5. தகடூர் யாத்திரை, செய்யுட்கள் : 9, 29, 47, 48.
6. புறத்திரட்டு; நூன்முகம், பக்கம் XIV
7. மறைந்துபோன தமிழ் நூல்கள் : பக். 161 & 163 (1959)

தையர் அவர்கள் எழுதியுள்ள குறிப்பால்[8] தெரிய வருகின்றது. அக் குறிப்பு வருமாறு:

''அங்கே (திருநெல்வேலி தெற்குப் புதுத் தெருவில் இருந்த கிருஷ்ண வாத்தியார் வீடு) தொல்காப்பிய உரைச் சுவடி ஒன்றில், 'நாங்குனேரியிலிருக்கும் ஒருவருக்கு என்னிடமிருந்த தகடூர் யாத்திரைப் பிரதி ஒன்றைக் கொடுத்து விட்டு இப்பிரதியை இரவலாக வாங்கிக் கொண்டேன்' என்று எழுதியிருந்தது. யாரிடமிருந்து வாங்கியது என்று குறிப்பிடவில்லை. தொல்காப்பிய உரையில் தகடூர் யாத்திரை என்று பெயர் வருகிறது. ஆதலால் அது பழைய நூலென்று உணர்ந்தேன்''

''பிற்காலத்தில் நாங்குனேரியில் நான்கு முறை ஏடு தேடியபோது தகடூர் யாத்திரை கிடைக்கவேயில்லை. பழைய நூல்கள் பல இந்த உலகத்தை விட்டு யாத்திரை செய்துவிட்டதைப் போல அந்த அருமையான நூலும் போய்விட்டதென்றுதான் நினைக்கிறேன்.''

எனவே சங்க காலத்தில் எழுந்த ஓர் அரிய நூலினை நாம் இழந்து போனோம் என்பது தெளிவாகிறது.

---

8. என் சரித்திரம் : பக். 876 & 877 (1950)

## 2. முத்தொள்ளாயிரம்

மூன்று வகையினதாகிய தொள்ளாயிரம் பாடல்களை உடைய நூல் என்றும், மூன்று தொள்ளாயிரம்—அதாவது 2700 பாடல்கள் உடைய நூல் என்றும், முத்தொள்ளாயிரம் பொருள்படுகின்றது. ஆயினும் புறத்திரட்டு என்னும் நூலில் 108 பாடல்களே முத்தொள்ளாயிரப் பாடல்கள் என்று சேர்க்கப்பெற்றுள்ளன. புறத்திரட்டில் சேர்க்கப் பெறாத முத்தொள்ளாயிரப் பாடல் ஒன்று இளம் பூரணர் உரையில் 'ஏற்றூர்தியானும்' என்ற முதற் குறிப்பை உடையது காணப்படுகின்றது. இந்நூலின் பல பாடல்கள் பழைய உரைகாரர்களால் பல இடங்களிலும் எடுத்தாளப்பட்டுள்ளது. ஆனால் ஓரிடத்திலேனும் 2700 பாடல்கள் அடங்கிய பெரிய நூல் என்று முத்தொள்ளா யிரம் குறிப்பிடப்படவில்லை. முத்தொள்ளாயிரத்தினைப் பதிப்பித்துள்ள காலஞ்சென்ற ரசிகமணி டி. கே. சிதம்பர நாத முதலியார் அவர்கள் 'சேர, சோழ, பாண்டியர்கள் ஒவ்வொருவருக்கும் தொள்ளாயிரப் பாடல்கள்' கொண் டது முத்தொள்ளாயிரம் என்று குறிப்பிட்டுள்ளார்.[1]

"ஆயினும் இக்கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இல்லை. ஏனெனில் தொள்ளாயிரம் என்ற தொகையை உடைய நூல்கள்— வச்சைத்தொள்ளாயிரம், அரும்பைத் தொள்ளாயிரம் முதலிய நூல்கள் தமிழில் இருந்தன என்பது இலக்கண விளக்கப்பாட்டியல்[2] உரையில் 'பாட்டு டைத்தலைவன் ஊரினையும் பெயரினையும் உவந்து, எண்ணாலே பத்து முதல் ஆயிரம் அளவும் பொருட்சிறப்

---

1. கலைக்களஞ்சியம்; தொகுதி 8 : பக்கம். 412.
2. நூற்பா; 88.

பினாலே பாடுதல்—அவ்வவ்வெண்ணாற் பெயர் பெற்று நடக்கும் எண் செய்யுளாம். அவை முத்தொள்ளாயிரம், அரும்பைத் தொள்ளாயிரம் முதலியன' எனக் காணப்படுகிறது. இங்கே எண்செய்யுளென்று வகைப்படுத்தப்பட்ட ஒரு நூலே உணர்த்தப்படுகிறது என்பதும், இதன்கண் வரும் செய்யுட்களின் பேரெல்லை ஆயிரத்துக்கும் மேற்படக் கூடாது என்பதும் அறியப்படுகின்றன. ஆகவே முத்தொள்ளாயிரத்தில் தொள்ளாயிரம் செய்யுட்களே உள்ளன என்பதும் சேர சோழ பாண்டியர்களுள் ஒவ்வொருவர் மீதும் முந்நூறு செய்யுட்களே இயற்றப்பட்டன என்பதும் அறியத்தக்கன'' என்கிறார் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை[3] அவர்கள்.

## நூலின் சிறப்பு

மன்னர்களது நாட்டுவளம், நகரவளம், கொடைவளம், வீரமேம்பாடு, வெற்றிச்சிறப்பு, காதற்சுவை முதலியன. நெஞ்சை அள்ளும் முறையில் முத்தொள்ளாயிரத்தில் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாட்டிற்குப் பின்னும் ஒரு நாடகக்களம் இருக்குமென்றும் மனத்தைவிட்டு அகலாத முறையில் களம், பாத்திரம், உணர்ச்சி, கவிவுருவம் எல்லாம் அமைந்திருக்குமென்றும், கவித்துவம் வாய்ந்த பாடல்கள் பலவும் தமிழன் ஒருவனுடைய ஆயுளுக்குப் போதுமென்று சொல்லத் தோன்றுமென்றும் திரு. டி. கே சிதம்பரநாத முதலியார்[4] குறிப்பிட்டுள்ளார்.

## நூலின் ஆசிரியர்

இந்நூலாசிரியரின் பெயரும் வரலாறும் அறியக்கூடவில்லை. இருப்பினும் 'மன்னிய நாண்மீன்'[5] என்னும்

---

3. இலக்கிய தீபம்; பக்கம். 179.
4. கலைக்களஞ்சியம்; தொகுதி 8 : பக்கம். 412.
5. பாட்டு : 1.

கடவுள் வாழ்த்துப் பாடலாலும், 'மடங்கா மயிலூர்தி'[6] 'செங்கண் நெடியான்மேல்'[7] என்னும் பாடல்களாலும் இவர் சமயம் சைவம் என்பது புலனாகின்றது.

## நூலின் காலம்

பேராசிரியர் தொல்காப்பியச் செய்யுளியல் உரையில் முத்தொள்ளாயிரத்தை[8] உதாரணம் காட்டியுள்ளார். இவர் காலம் 14 ஆம் நூற்றாண்டாகும். இளம்பூரணர் தொல்காப்பியப் புறத்திணையியலில்[9] 'ஏற்றூர்தியானும்' என்ற பாடலைக் குறிப்பிட்டு இப்பாடல் முத்தொள்ளா யிரத்து வந்தவாறு காண்க என்று குறிப்பிட்டுள்ளார். பேராசிரியர் தம் தொல்காப்பிய உரையில்[10] முத்தொள் ளாயிரமும் பொய்கையார் முதலாயினார் செய்த அந்தாதிச் செய்யுளும்.........கலம்பகம் முதலாயினவும் புதிதாகத் தாம் வேண்டியவாற்றால் பல செய்யுளும் தொடர்ந்துவரும் விருந்து என்பதற்கு உதாரணமாம்' என விளக்கியுள்ளார். எனவே அந்தாதிச் செய்யுட்கள் கலம்பகம் முதலிய பிரபந்தங்கள் தோன்றிய 8, 9 ஆம் நூற்றாண்டுகளையொட்டி முத்தொள்ளாயிரமும் இயற்றப் பட்டிருக்க வேண்டுமென்பதனை ஒருவாறு ஊகிக்கலாம். மேலும் பேராசிரியர் 'பதினெண் கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்தும் ஆறடியின் ஏறாமல் செய்யுள் செய் தார் பிற்சான்றோரும்[11] என்று முத்தொள்ளாயிர ஆசிரியரைப் பிற்சான்றோர் என்று குறிப்பிட்டுள்ளதனால் சங்ககாலத்திற்குப் பிற்பட்டது இந்த நூல் என்பது தெளி வாகும். இதுகாறும் கூறியனவெல்லாம் புறச்சான்று

---

6. பாட்டு : 2.
7. பாட்டு : 3.
8. நூற்பா; 239 உரை.
9. ,, 5 உரை.
10. ,, 229 உரை.
11. தொல்காப்பியம்; செய்யுளியல் : 158.

களாகும். நூலின் அகத்தே காணப்படும் சான்றுகளை நோக்கின் சோழரின் தலைநகராக உறையூர் குறிப்பிடப் படுகிறதேயன்றி ஒரு பாடலிலேனும் தஞ்சைநகர் கூறப் படவேயில்லை. தஞ்சையை ஆண்ட குறுநில மன்னர்களை வென்று கி.பி. 850க்கு முன் விசயாலயன் என்னும் சோழ மன்னன் சோழப் பேரரசை நிறுவினான் என்பர் பேராசிரியர் திரு. நீலகண்ட சாஸ்திரியார்.[12]

முத்தொள்ளாயிரத்தில் முடியுடை மூவேந்தர்களான மூவேந்தர்கள் பெயர்கள் பொதுப்பெயர்களாகவே வந்துள்ளன. சான்றாக, பாண்டிய மன்னரைக் குறிக்குங்கால் தென்னன், பாண்டியன், பஞ்சவன், மாறன், வையையார் கோமான், கூடலார் கோமான், பொதியிற்கோமான், வழுதி, தமிழர்பெருமான் என்றும், சோழமன்னரைக் குறிக்குங்கால் சோழன், கோக்கிள்ளி, நலங்கிள்ளி, உறந்தையார்கோ, புனனாடன், காவிரிநீர்நாடன், செம்பியன் என்றும், சேரவேந்தரைக் குறிக்குங்கால் சேரன், வானவன், கோதை, கோக்கோதை, மாந்தைக்கோன், முசிறியார் கோமான் என்றும் வந்துள்ளதனால் முத்தொள்ளாயிர ஆசிரியர் காலத்தில் வாழ்ந்த மன்னர் இன்னார் என்பது அறுதியிட்டு உரைக்க முடியவில்லை. இவர்களில் கோக்கோதை, நலங்கிள்ளி என்னும் பெயர்கள் சேர சோழ அரசர்களுடைய இயற்பெயர்களாகப் புறநானூறு குறிப்பிடினும் அவ்வரசர்கள் காலமும் முத்தொள்ளாயிர ஆசிரியர் காலமும் ஒன்றா என்பது ஆய்தற்குரியது என்பர் அறிஞர்.[13]

திவாகரம் என்னும் நிகண்டு நூலில் கணவட்டம்,[14] பாடலம், கோரம் என்பன முறையே பாண்டியன் சேரன்

---

12. A History of South India; P. 166.
13. திரு. ந. சேதுரகுநாதன்; முத்தொள்ளாயிரம் முன்னுரை : பக்கம். 11.
14. திரு எஸ். வையாபுரிப் பிள்ளை; இலக்கிய தீபம் : ப. 183-188.

சோழன் முதலிய அரசர்க்குரிய குதிரைகளின் பெயர் களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. திவாகரத்தின் காலம் சுமார் பத்தாம் நூற்றாண்டு எனக் கொள்ளப்படுவதால் அக்காலத்திற்கு முன் இந்நூல் தோன்றியது எனக் கொள்ளலாம். எனவே முத்தொள்ளாயிரத்தின் காலம் சங்க இறுதிக்காலமான கி. பி. 150க்குப் பின்னும் விசயாலய சோழன் காலமான ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முன்னும் இருத்தல் வேண்டுமென்பது இதுகாறும் கூறியவற்றால் அறியப்படுவதாகும்.

மேலும் பெரியாழ்வார் கையாண்டுள்ள சில தொடர் களும், பழமொழி நூலின்கண் உள்ள பழமொழிகள் சிலவும் முத்தொள்ளாயிரத்தில் காணப்படுகின்றன என்றும், ஆதலின் முத்தொள்ளாயிரம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றியது என்றும் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் குறிப் பிடுவர்.

இனி நூலினுட் சென்று காண்போம்:

## சேரநாட்டு வளம்

சேரநாடு நீர்வளம் நிறைந்த நாடு. சேறு நிறைந்த நீர்ப் பொய்கைகளிற் செவ்வாம்பற் பூக்கள் இதழ் விரிய அவற்றைக் கண்ட பறவையினங்கள் வெள்ளத்திலே தீப்பட்டதென்று அஞ்சித் தம் கையாகிய சிறகுகளாலே தம் இளம் பார்ப்புகளை ஒடுக்கிக் கொள்ளுகின்ற ஆரவாரம் சேரநாட்டில் உளது.[15] இதனால் சேரநாட்டின் மருத வளமும், சேரநாட்டின் பகையற்ற அமைதிச் சூழலும் விளங்கலாகின்றன. புன்னை மரச் சோலையும் புனல் வளமும் தென்னஞ்சோலையும் மிகுதியாகச் சூழ்ந்திருக் கின்ற மாந்தை நகர் சேரநாட்டில் உள்ளது. அச் சேர

15. புறத்திரட்டு; 829.

நாட்டில் நல்ல சுரபுன்னை மரங்கள் மலர்ந்து நறுமணம் வீசுகின்றன.[16]

இவ்வாறு சேரநாட்டு வளம் வருணிக்கப்பட்டுள்ளது.

ஒரு பாடலில்[17] வஞ்சி நகரத்தின் வளம் வருணிக்கப் பட்டுள்ளது. பூஞ்சோலைகள் சூழ்ந்து விளங்கும் வஞ்சி நாட்டில், கள்விற்பவர், களிப்பினைச் செய்யுங் கள்ளைக் கள்ளுண்ணுங் களியர்களுக்குக் கொடுக்க, அவர்கள் வாங்கி, அதிற் படிந்திருக்கும் வண்டு நுரை முதலியவற்றைக் கையினால் வழித்து எறிபவராய்ச் சிதறவிட்ட விருப்பந் தருங் கள்ளின் துளிகளெல்லாஞ் சேர்ந்து வெள்ளமாய்ப் பரவிப் பாய, அதனால் வீதி முதலிய இடமெல்லாம் ஈரம் உடையனவாக அங்கே போக்குவரவு புரிகின்ற ஓங்கிய அழகுள்ள யானைகள் மிதித்தலினாலே அந்த இடங் களெல்லாம் சேறாகிவிடும்.

இவ்வாறு வஞ்சியின் வளம் வருணிக்கப்பட்டுள்ளது.

## சேரனைக் குறிக்கும் தொடர்கள்

முத்தொள்ளாயிரத்தில் சேர மன்னன், கொல்லியர் கோன் கோதை,[18] சேரலர் கோக்கோதை,[19] வானவன்,[20] செங்கண் மாக்கோதை,[21] முசிறியார் கோமான்,[22] மாந்தைக் கோ,[23] குடநாடன்[23(a)] வஞ்சிக் கோமான்[24],

16. புறத்திரட்டு; 1547.
17. ,, 862.
18. ,, 1467.
19. ,, 829, 1567.
20. ,, 1285.
21. ,, 1388.
22. ,, 1279.
23. ,, 1517.
23 (a) ,, 1564.
24. ,, 1564.

மாக்கடுங்கோ[25], கோதை[26], பூழியர் கோ[27] முதலான தொடர்களால் குறிப்பிடப்பெற்றுள்ளான்.

## அரசர்களைப் பற்றி அறியப்படுவன

அரசர்கள் தலையில் கண்ணிமாலையினையும்[28] மார்பில் ஒளிவிடும் பூண்களையும்[29] தாரினையும்[30] தோளில் தோள்வளையினையும் கையில் வைரக் கடகத்தினையும்[31] அணிவர் என்பது பெறப்படுகின்றது.

## யானையின் வீரம்

சேர நாட்டில் யானை மிகுதி. அவ்யானை 'பைங்கண் மால்யானை'[32] என்றும், 'போரிற் புகலுங் களியானை'[33] என்றும் பாராட்டப்பட்டுள்ளது. மேலும், சேரனுக்கு உரித்தாகிய சீற்றமுங் கொதிப்பும் மதமயக்கமும் உள்ள யானை, சிறப்பு மிக்க மன்னர்களுடைய விரிந்த முத்து மாலைகள் கட்டித் தொங்கவிட்ட வெண்கொற்றக் குடைகளைச் சிதறும்படியாகப் பிடுங்கி வீசியெறிந்த பழக்கத்தினாலே, விண்ணில் உலாவுந் திங்களுக்குங் குடைக்கும் வேற்றுமை தெரியாது, வானிலுள்ள திங்கள் மேலுந் தன் கையை நீட்டுகின்றது என்று யானையின் வீரம் விளங்கப் பேசப்பட்டுள்ளது.[34]

---

25. புறத்திரட்டு; 1570.
26. ,, 1467, 1471, 1278, 1279, 1508, 1541, 1553, 1254, 1568.
27. புறத்திரட்டு; 1532.
28. ,, 1508.
29. ,, 1431.
30. ,, 1279.
31. ,, 1431.
32. ,, 1278.
33. ,, 1532.
34. ,, 1388.

## குதிரை, தேர்

குதிரையும் தேரும் ஒருசேரக் குறிப்பிடப்பட்டுள்ளன.[35] வலியத் தாவியோடுகின்ற குதிரை பூட்டப்பட்ட தேர் என்ற குறிப்பு நமக்குக் கிடைக்கின்றது.

## பேரூர்கள்

பூஞ்சோலைகள் பூத்து விளங்கும் நகரம் வஞ்சி[36] யென்றும், முசிறிக்குத்[37] தலைவன் சேரன் என்றும், புன்னை மரச்சோலையும் புனல் வளமும் தென்னஞ்சோலையும் மிகுதியாகச் சூழ்ந்திருக்கும் நீர்வளம் மிகுந்த நகரம் மாந்தை[38] என்றும் சேரநாட்டுப் பேரூர்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

## உவமைகள்

முத்தொள்ளாயிரத்தில் சேரரைக் குறிப்பிடும் இருபது பாடல்களில் நான்கு பாடல்களில்[39] ஐந்து உவமைகள் இடம்பெற்றுள்ளன. சேர மன்னன் கோதையின் படை வீரர்கள் வானத்தே விளங்கும் விண்மீன்களுக்கு ஒப்பிட்டுப் பேசப்பட்டுள்ளனர்.[40] சேரமன்னன் கோதை அவ்விண் மீன்களுக்கு நடுவே அழகுற விளங்கும் சந்திரனுக்கு ஒப்பிட்டுப் பேசப்பட்டுள்ளான்.[41]

சேரநாட்டின் சேறுள்ள நீர்ப்பொய்கைகளில் செவ் வாம்பற் பூக்கள் இதழ் விரிவன வெள்ளத்திலே தீப்பற்றி யெரிவதானதொரு காட்சியை நிகர்த்துள்ளது.[42]

35. புறத்திரட்டு; 1508.
36. ,, 862.
37. ,, 1279.
38. ,, 1547, 1570.
39. ,, 829, 1467, 1532, 1553.
40. ,, 1467.
41. ,, 1467.
42. ,, 829.

தலைவி வாழும் ஊரினருடைய அருள் நெஞ்சத்தின் தன்மை நீரையும் நிழலையும் நிகர்த்தனவாயுள்ளது.[43]

சேரமன்னன் உலாவரும் காட்சியினைக் காண எண்ணிக் கதவுப் பக்கத்திற்குச் சென்ற தலைவி நாணந் தடுக்கிடக் கதவடைத்தாள். இச்செயல் பெருஞ்செல்வர் வீட்டிற்குப் பொருள் கேட்கவிரும்பிச் சென்ற நாணமுள்ள வறிஞர் எவ்வாறு போவதும் வருவதுமே தொழிலாக அலைவார்களோ, அதுபோலத் தலைவியின் நெஞ்சும் கதவைத் திறந்து சேரன் உலாக் காட்சியினைக் காண நினைந்து போவதும், பின் நாணந் தடுக்கக் கதவடைத்துத் திரும்புவதுமான செயலோடு ஒத்துள்ளது.[44]

## உருவகம் (metaphor)

ஒரு பாடலில்[45] கடலாகிய சேனை என்று சேனை கடலாக உருவகஞ் செய்யப்பட்டுள்ளது.

## புறப்பொருள் செய்திகள்

முத்தொள்ளாயிரத்தில் சேரரின் வீரம் சிறக்கப் பேசப்பட்டுள்ளது. சேரனுக்குக் கட்டவேண்டிய கப்பம் கட்டாமல் செருக்குக்கொண்டு பல மன்னர்கள் போர் செய்ய வந்தபோது சேரனுடைய படைத்தலைவன் அவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறுகிறான்.[45a]

"உங்களுடைய போர் யானைகள் பலவாயினும் பயனில்லை. கப்பத்தை உடனே கட்டிவிடுங்கள். உங்களுடைய கோட்டைக்கு உடனே ஓடி மதில்களின்மேல் சேரனுடைய வில்லை எழுதச் செய்துவிடுங்கள். வில்லைப்

---

43. புறத்திரட்டு; 1532.
44. ,, 1553.
45. ,, 1541.
45(a) ,, 1285.

பார்த்துச் சேரனுடைய படைகள் உங்களைத் தாக்காமல் போய்விடும். அதனால் பிழைத்துக் கொள்வீர்கள்.''

இதனால் சேரருடைய வென்றிச் சிறப்பு விளங்குகின்றது.

சேரமன்னன் பகையரசர்மேல் வீசியெறிந்த வேலில் மிக்க புலால்நாற்றமும் கமழ்கிறது. பின்பு வெற்றிதந்த அந்த வேலுக்குச் சந்தனம் பூசி விழா எடுக்கப்படுகிறது. அவ்வேலின் பக்கத்தில் வண்டினங்கள் வந்து மொய்க்கின்றன. குறுநரிகளும் வேலின் பக்கத்தில் வந்து அவ்வேலைச் சூழ்ந்துகொண்டன. இதனால் சேரன் போரிட்ட போர்க்களத்தின் கொடுமையும் இறுதியில் வாகைசூடிய பெருமையும் ஒருங்கே விளங்குகின்றன.[46]

சேரனுக்குப் பகையாய் வந்து பொருது வீழ்ந்த மன்னர்கள் தம் கையில் வைரக் கடகம் கிடந்து விளங்குகின்றன. தோள்வளைகளும் அழகாக அணிந்திருந்தார்கள். அவர்கள் ஊனை உண்ணவந்த சிறுநரிக் கூட்டம் வைரக் கடகக் கையையும் தோள்வளையையும் தசையுடனே கடித்திழுத்துத் தம் வாயைக் கிழித்துக்கொண்டு தம் தாய் நரியை நினைத்துத் துணைக்கு வரும்படிக் கூவுகின்றன. இதனால் போர்க்களத்தின் கொடுமை வருணிக்கப்படுகின்றது.[47]

சேரனைப் பகைத்தவர் நாடுகள் அவனால் அழிக்கப்பட்டு வளமான நாடுகள் கருகித் தீய்ந்து முள்ளிச்செடிகள் பரவப்பெற்று நாளடைவில் அவையும் தீய்ந்துபோயின.[48] மேலும் வேர்ப்படற்சியுள்ள அருகம் புல்லும், கைப்பறாக் காய் காய்க்கும் பேய்ச்சுரையும், தைத்திங்களில் மிகுதியாக உண்டாகும் தைவேளைச் செடியும் எங்கும் நிறைந்

---

46. புறத்திரட்டு; 1471.
47. ,, 1431.
48. ,, 1278.

திருந்தன.[49] இவ்வாறு பகைப்புலம் அழித்த சேரனின் வென்றிச்சிறப்பு குறிப்பிடப்படுகின்றது.

## அகப்பொருள் செய்திகள்

ஒருதலைக் காதலைப் பேசும் கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்தில் பல உள்ளன. பேராசிரியர் கைக்கிளைச் செய்யுள்[50] முத்தொள்ளாயிரத்துப் பல வாயினும் எனக் கூறுவதால் சுட்டி ஒருவர் பெயர்கொண்ட பாடாண்டிணைப் புறப்புறக் கைக்கிளைச் செய்யுட்களை முத்தொள்ளாயிரத்தில் மிகுதியாகக் காணலாம். சேரர்க் குரிய கைக்கிளைப் பாடல்கள் முத்தொள்ளாயிரத்தில் பன்னிரண்டாகும்.[51]

உலாவரும் சேரனைக் காணவொட்டாமல் தாயர் வீதிக் கதவுகளை அடைத்தலாலும் மகளிர் திறத்த லாலும் அக்கதவுகள் தேய்கின்றன.[52]

தாய், உலா வரும் தலைவனைத் தலைவி காண வொட்டாமல் கதவை அடைத்திட முடியும். ஆனால் சேர மன்னனோடு தொடர்புபடுத்தி அலர் தூற்றும் பெண் களின் வாயை அடக்க முடியுமோ என எடுத்து மொழி கின்றாள் இற்செறிக்கப்பட்ட தலைவி ஒருத்தி.[53]

உலாவரும் சேரமன்னனைக் காணும்பொருட்டுக் கதவுப் பக்கம் போன தலைவி நாணமுற்றுக் கதவை அடைத்தாள். தலைவனைக் காணவேண்டும் என்ற காதல் ஒரு பக்கம்

---

49. புறத்திரட்டு; 1279.
50. ,,
51. ,, 1508, 1517, 1518, 1532, 1541, 1547, 1553, 1557, 1564, 1567, 1568, 1570.
52. ,, 1568.
53. ,, 1541.

அவளை உந்தவும், பிறிதொரு பக்கம் பெண்களுக்கே இயல்பாக உரிய நாணம் தடைப்படுத்தவுமாகிய போராட்டம் அவள் நெஞ்சத்தில் நிகழ்வதனை அழகுற வடிக்கின்றார் புலவர்.[54]

உலாவரும் சேரமன்னனைக் காணச் சென்ற தலைவியினது மனம் கொட்டும் பனி பெய்கின்ற மார்கழி மாதத்தில் பனிவாடை தாங்க முடியாமல் வலக்கையை இடத்தோளிலும், இடக்கையை வலத்தோளிலுமாக வைத்துப் பொத்திக் கொண்டு அந்தக் கைகளே போர்வையாக உதவ நடுநடுங்கி, கூனி வளைந்து பல்லோடு பல் பறை கொட்ட மெலிந்து அவனுடைய வாசலிலேயே நின்றுவிட்டது.[55]

சேரன் உலாவரும்போது தலைவியின் அழகு நலத்தைக் கவர்ந்து செல்கின்ற காரணத்தால் தலைவியின் தாய் அவன் செங்கோல் வேந்தனல்லன் என்று மொழிகின்றாள்.[56]

சேரமன்னனைக் கண்ட தலைவியின் மாமை நிறம் அழிந்து பொன்னூறினாற் போன்ற பசலை நிறம் வந்து விட்டது.[57] மேலும் சேரன் பொருட்டுத் தலைவியின் நெஞ்சம் பெரிதும் கனலுகின்றது. அந்த வெப்பத்தைத் தாங்க முடியவில்லை. அது எங்கே தன்னைக் கொன்று விடுமோ என்று அலமருகிறாள் தலைவி.[58]

சேரன் ஒருநாள் இரவு தலைவியின் கனவில் வந்து அவள் உடம்பைக் கையால் தடவினான். அதனைத் தோழியர் அறிந்து கொண்டனரோ எனத் தன் நெஞ்சோடு சொல்லி தலைவி வருந்துகிறாள்.[59]

---

54. புறத்திரட்டு; 1553.
55. ,, 1557.
56. ,, 1517.
27. ,, 1518.
58. ,, 1532.
59. ,, 1547.

தன் நலம் கவர்ந்த சேரனைக் கண்டால் கலகம் விளைவிக்கிறேன் எனச் சொல்லியிருந்த தலைவி அவனைக் கண்ட அளவில் அக்கலகத்தினை மறந்து மனம்மாறி நிற்கிறாள்.[60] தலைவியின் பெண்மை நலத்தையெல்லாம் கவர்ந்து கொண்ட கள்வன் எனப் பிறர் பழி தூற்றும் வண்ணம் சேரன் தலைவியின் நலத்தை வெளவுகிறான்.[61]

தலைவியின் உடல் மெலிவு கண்டு தாய் வேலனை யழைத்து வெறியாட்டெடுக்கத் தீர்மானிக்கிறாள். அது கண்ட தலைவி தன் நெஞ்சினை நிலைக்களமாகக் கொண்டு நிற்கின்ற காமநோய் அவனால்தான் நீங்குமேயன்றி வெறியாட்டால் நீங்காது எனத் தோழியிடம் சொல்லுகின்றாள்.[62]

தலைவி குறையைத் தானே அறியும் இயல்பினனாக இருப்பினும் தலைவன் தன் குறையை அறிந்திலனே, உயர்ந்தோரிடத்தில் பொருந்தியிருக்கின்ற இயல்பு இவ்வாறு இருக்கின்றதே என்று நெஞ்சம் வருந்துகின்றாள் தலைவி.[63]

இவ்வாறு தலைவியின் கைக்கிளைக் குறிப்பு அழகுற முத்தொள்ளாயிரத்தில் வருணிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறாக முத்தொள்ளாயிரம் கவிதைச் சிறப்பு கொண்டு துலங்குகின்றது.

---

60. புறத்திரட்டு; 1564.
61. ,, 1567.
62. ,, 1568.
63. ,, 1570.

## 3. புறப்பொருள் வெண்பாமாலை

தமிழர்தம் வாழ்வு அகம், புறம் என்ற இரண்டனுள் அடங்கும். ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து, அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவராலும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம் அகம் எனப்படும். மேற்கூறிய ஒத்த அன்புடையார் தாமே அன்றி எல்லாராலும் அனுபவித்து உணரப்பட்டு இஃது இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுவதாய் அறனும் பொருளும் என்னும் இயல்பினை உடையதாய்ப் புறத்தே நிகழும் ஒழுக்கம் புறம் என்று கூறப்படும்.

புறப்பொருள் வெண்பாமாலை என்னும் இந்நூல் புறப் பொருளுக்கு இலக்கியமாகிய வெண்பாக்களின் வரிசை (மாலை)யை உடையதாகலின் புறப்பொருள் வெண்பா மாலை எனப் பெயர் பெற்றது. புறத்தின் இலக்கணமாகிய நூற்பாக்களையும் அவற்றின் இலக்கியமாகிய வெண்பாக் களையும், அவ்வெண்பாக்களின் கருத்தைத் தனித்தனியே புலப்படுத்தி ஒவ்வொன்றன் முன்னும் நிற்பனவாகிய கொளு (கருத்து)க்களையும் உடையது. கைக்கிளைப் படலத்தில் உள்ள இலக்கியச் செய்யுட்கள் மருட்பாக்களாக அமைந்துள்ளன. இந்நூல் வெண்பாமாலை என்றும் வழங்கப்படும்.

இந்நூலாசிரியராகிய ஐயனாரிதனார் சேரர் பரம் பரையில் உதித்தவர் என்பதும், இதற்கு முதனூல் அகத்திய

னாருடைய மாணாக்கர் பன்னிருவராலும் அருளிச் செய்யப்பட்ட பன்னிருபடலம் என்பதும் மன்னிய சிறப்பின் என்றும் இந்நூல் சிறப்புப் பாயிரத்தாலும்,

> **மெய்யி னார்தமிழ் வெண்பா மாலையுள்**
> **ஐய னாரித னமர்ந்துரைத் தனவே**

என்னும் இந்நூலின் பதினெட்டாம் நூற்பாவாலும், ''பன்னிரு படல முந்நூலாக வழிநூல் செய்த வெண்பா மாலை ஐயனாரிதனாரும் இது கூறினார்'' என்ற பேராசிரியர்[1] உரையாலும் உணரப்படும்.

ஐயனாரிதனார் சேரர் மரபினர் என்று கருதப்பெறுகின்றார். ''ஐயனாரிதனார் என்பது திருவிடைக்கழியைச் சார்ந்த குராஞ்சேரியில் உள்ள சாஸ்தாவின் பெயர். இப்படியே சாஸ்தாவின் பெயராக இது பல இடத்தும் வழங்குகின்றது'' என்பர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்[2]. இவர் சோழ பாண்டியர்களைத் தம் நூலில் ஒப்பச் சிறப்பிக்கின்ற போக்கும், சைவரேனும் திருமாலைப் பற்றிச் சிறப்பித்துக் கூறுதலும் நடுநிலைசான்ற இவர்தம் நல்லுள்ளத்தினைப் புலப்படுத்துவனவாகும். இந்நூலில் உள்ள வெண்பாக்களில் பலவும், கொளுக்களில் சிலவும் இளம்பூரணர், பரிமேலழகர், நச்சினார்க்கினியர், அடியார்க்குநல்லார், புறநானூற்று உரையாசிரியர் முதலியவர்களால் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டும் உரைநடையாக எழுதப்பட்டும் உள்ளன. பின்னாளில் இலக்கண விளக்க உரையாசிரியர் இந்நூலைப் பெரும்பாலும் எடுத்தாண்டிருக்கின்றார், பண்டைக் காலப் போர் முறையினையும் சமுதாய நிலையினையும் இந்நூல் புலப்படுத்துகின்றது. முதலாவதாகத் தொல்காப்பியப்

---

1. தொல்; மரபியல் : 94 உரை.
2. புறப்பொருள் வெண்பாமாலை; முகவுரை : ப. v & vi

புறத்திணை இயல் கருத்துகளோடு இந்நூல் மாறு பட்டுள்ள இடங்களைக் காண்போம்.

வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்று ஏழு திணைகளாகவே தொல்காப்பியனார் வகைப்படுத்தியிருக்கப் புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொது இயல், கைக்கிளை, பெருந்திணை எனப்பன்னிரண்டாகப் பகுப்பர். தொல்காப்பியனார் வெட்சியில் கரந்தையை அடக்குவர். ஆயினும் தொல்காப்பியனார் கரந்தை என்ற ஒரு திணை உண்டு என்பதனை,

**ஆரமர் ஓட்டலும்**[3]

எனத் தொடங்கும் புறத்திணை இயல் நூற்பாவில் உடன் பட்டவராகின்றார். வஞ்சித் திணையைப் பொறுத்தவரை இருவரும் ஒரே கருத்துக் கொண்டுள்ளனர். மண் கருதிச் செய்யும் போரே வஞ்சித்திணையாகும். புறப்பொருள் வெண்பா மாலையில் கூறப்பட்டுள்ள குடைநிலை, வாள் நிலை, கொற்றவைநிலை முதலியன தொல்காப்பியத்துள் இல்லை. ஆனால் இவற்றைப் படை அரவத்தில் அடக்கி விட்டதாக நச்சினார்க்கினியர் கூறுவர். காஞ்சித்திணை தொல்காப்பியனார் கருத்துப்படி நிலையாமையைப் புலப் படுத்துவதாகும். ஆனால் வெண்பாமாலையார் கூற்றுப் படி வஞ்சி சூடி வந்த வேந்தனை எதிர்நின்று பொரத் துணியும் மன்னன் நிலையினைக் காஞ்சித்திணை காட்டு வதாகும். காஞ்சித்திணையைத் தொல்காப்பியனார் தனித் திணையாக வகுக்க, வெண்பா மாலை ஆசிரியர் வஞ்சிக்கு மறுதிணையாக வைத்துள்ளமை குறிப்பிடத்தகும். தும்பைத் திணையைப் பொறுத்தவரை இருவருக்கும் கருத்து வேறுபாடு இல்லை. வீரங்கருதி வெம்போர்

---

3. தொல்; புறத்திணையியல் : 5.

விளைக்க வந்த வேந்தனைக் களத்தில் நின்று பொருது அழிக்கும் சிறப்பே தும்பை எனப்படும். தொல்காப்பியத் தும்பைத் திணையில் இல்லாத தும்பை அரவம், தேர்மறம், பாண் பாட்டு, நூழிலாட்டு, முன்தேர்க்குரவை, பின்தேர்க்குரவை, பேய்க்குரவை, களிற்றுடனிலை, ஒள்வாணமலை, வெருவருநிலை, சிருங்கார நிலை, உவகைக் கலுழ்ச்சி முதலிய பன்னிரண்டு துறைகள் புறப்பொருள்வெண்பா மாலையுள் இடம் பெற்றுள்ளன. வாகைத்திணையைப் பொறுத்தவரையில் திணைப் பொருளில் இருவர் கருத்தும் வேறுபடுகின்றன. தொல் காப்பியனார் வாகையை அரசர்க்கே அன்றி நான்கு வருணத்தார், அறிவர், தாபதர் முதலியோர்க்கும் உரிமை ஆக்குவர். வெண்பா மாலை ஆசிரியர் அரசர்க்கு மட்டும் வாகை உரித்தென்று கூறினும் தொல்காப்பியனார் கருத்தை ஏற்றுக் கொண்டவர் என்பதனைப் பார்ப்பன வாகை, வாணிக வாகை, வேளாண் வாகை, பொருந வாகை, அறிவன் வாகை, தாபதவாகை முதலிய துறை களைக் கூறி இருப்பதினின்றும் தெரியலாம்.

இவ்வாறு சிற்சில இடங்களில் இவர் மாறுபடினும் பெரும்பாலும் தொல்காப்பியத்தினையே தழுவிக் கூறி உள்ளார் என்பதனைக் காண முடிகின்றது. இந்நூலின் முதல் நூல்,

> பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
> பன்னிரு படலமும் பழிப்பின்று உணர்ந்தோன்[4]

என்று புலவரும் ஐயனாரிதனார் கூறப்படுதலால், புறப் பொருள் வெண்பாமாலை பன்னிரு படலத்தின் வழிநூல் என அறியலாம். பேராசிரியரும் இக்கருத்தே கொண்

4. புறப்பொருள் வெண்பாமாலை; சிறப்புப் பாயிரம்.

டுள்ளார்.[5] வெட்சித்திணை தன்னுறு தொழில், மன்னுறு தொழில் என இருவகைப்படும் என்பது பன்னிரு படலத்து வெட்சிப்படல ஆசிரியர் கொள்கை.[6] இக்கொள்கையினை ஐயனாரிதனார் உடன்பட்டுக் கூறியுள்ளார். எனவே இந் நூலினைப் பன்னிருபடலத்தின் வழிநூல் என்பர்.

## நூலாசிரியர் காலம்

இந்நூலில் உள்ள வெண்பாக்களுள் பலவும் கொளுக் களுள் சிலவும் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் முதலிய தொல்காப்பிய உரையாசிரியர்களாலும், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் முதலிய இலக்கிய உரையாசிரியர் களாலும் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டும், உரை நடையாக எழுதப்பட்டும் உள்ளன. ஆதலால் இந்நூலாசி ரியர் இவர்களுக்கு முற்பட்டவர் என்பது விளங்கும். யாப் பருங்கல விருத்தி உரையில் இந்நூல் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. அவ்வுரையின் காலம் 10ஆம் நூற் றாண்டு[7] எனக்கொள்ளப்படுவதால் இந்நூலாசிரியர் அதற்கும் முற்பட்டவர் என்பது மட்டும் தெளிவாகின்றது.

## இலக்கிய நயம்

வெண்பாமாலை இலக்கணநூலே ஆயினும் இதன்கண் வந்துள்ள கொளுக்களும் வெண்பாக்களும் இலக்கிய நயம் சிறந்து விளங்குகின்றன. ஒரு சில காண்போம். வஞ்சிப் படலத்தில் கொற்றவள்ளையை விளக்கவந்த ஆசிரியர்,

**மன்னவன் புகழ் கிளந்து**
**ஒன்னார்நாடு அழிபிறங் கின்று[8]**

---

5. தொல்; மரபு : 94 உரை.
6. தொல்; பொருள் : 60, இளம்பூரணர் உரை.
7. சோம. இளவரசு; இலக்கண வரலாறு : ப. 87.
8. வஞ்சிப்படலம்; 8.

என்று குறிப்பிட்டுள்ளார். அரசனின் பெருமையை முதற்கண் குறிப்பிட்டுப் பின்னர்ப் பகைவர் தேயம் கெடுவதற்கு வருந்திய வருத்தத்தினைக் குறிப்பிடுவதே கொற்றவள்ளையாகும். இதன்கீழ் அமைந்துள்ள வெண்பா அவலச் சுவையை மிகுவித்துக் காட்டி இலக்கியச் சிறப்பை இனிதுறக் கொண்டுள்ளமையினைக் காணலாம்.

**தாழார மார்பினான் தாமரைக்கண் சேந்தனவால்**
**பாழாய்ப் பரிய விளிவதுகொல் — யாழாய்ப்**
**புடைத்தேன் இமிர்கண்ணிப் பூங்கட் புதல்வர்**
**நடைத்தேர் ஒலிகறங்கு நாடு.**

ஆராந்தாழ்ந்த மார்பினை உடைய மன்னனின் தாமரை மலர் போன்ற கண்கள் சிவந்தன. யாழை ஒப்ப முரன்று பக்கத்திலே வண்டுகள் ஆர்க்கும் மாலையினையும் பொலிவினையும் உடைய கண்ணினையும் உடைய மைந்தர் சிறுதேர் உருட்டும் ஓசை ஆரவாரிக்கும் நாடு, காண்பார் இரங்கும் வண்ணம் பாழாய்க் கெடும்போலும் என்று மன்னனின் படையெடுப்புக்கு முந்தைய பகைவர் தேய நிலையினையும், படையெடுப்புக்குப் பின் அந்நாடு படப் போகும் துயரினையும் புலவர் ஒருங்கே குறிப்பிட்டார்.

அடுத்து நொச்சிப் படலத்தில் மகண்மறுத்து மொழிதல் என்னும் துறையைக் காண்போம்.

**வெம்முரணான் மகள்வேண்ட**
**அம்மதிலோன் மறுத்துரைத்தன்று.**[9]

அதாவது வெய்தான பகையை உடைய பகையரசன் தன் மகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்ட, மதில் காத்துக் கோட்டை உள்ளிருக்கும் நொச்சியார் மறுத்துச் சொல்வது மகண்மறுத்து மொழிதல் எனப்படும். அது வருமாறு:

---

9. நொச்சிப்படலம்; 9.

**ஒள்வாண் மறவர் உருத்தெழுந்து உம்பர்நாட்**
**கள்வார் நறுங்கோதை காரணமாக்—கொள்வான்**
**மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்**
**கருங்கண்ணி வெண்கட்டிற் கால்.**

நொச்சியில் ஒளிவிடும் வாள்வீரரைக் கோபித்து எழுந்து முன்னாள் தேன் ஒழுகும் நறுமாலையைப் பொருட்டாகக் கொண்டு கொள்வான் வேண்டி இடையின் அழகைக் கருதி வந்தவருடைய இளைய யானையின் கொம்பு இந்தக் கறுத்த கண்ணினை உடையாள் படுக்கும் வெளுத்த கட்டிலின் காலாகும் என்று நொச்சியார் வீரம் பேசினர். இது வீரத்தின் விளைந்த பெருமித உணர்வினைக் காட்டும்.

அடுத்து உழிஞைப் படலத்தில் வந்துள்ள ஒரு வெண்பா வீரர்தம் அஞ்சாத ஆண்மைப் பண்பினையும் வீரத்தின் பால் அவர்கள் கொண்டிருந்த அசையாத நம்பிக்கையினையும் புலப்படுத்துவதாகும். அதிகாலையில் அரணின் கண் முரசொலிப்ப அது கேட்டுக் கண் சிவந்த உழிஞையார் அந்த அரணை அழித்து மாலைப் பொழுதிற்குள் அரணுக்குள் நுழைந்து அங்குதான் அடுத்த வேளை உணவு உண்போம் என்று தறுகண்மையோடு அவ்வரணுக் குள்ளே அகப்பையையும் துடுப்பினையும் எறிந்தார்கள் என்ற செய்தி பண்டைத் தமிழர்தம் மற மாண்பினை விளக்குவதாகும்.

**காலை முரச மதிலியம்பக் கண்கனன்று**
**வேலை விறல்வெய்யோன் நோக்குதலும்—மாலை**
**அடுகம் அடிசில்என் றம்மதிலுள் இட்டார்**
**தொடுகழலார் மூழை துடுப்பு.**[10]

உவமை நயங்களும் வெண்பாக்களும் சிறக்க அமைந்து காணப்படுகின்றன. உழிஞையார் கோட்டை மதில்மேல்

---

10. உழிஞை; வெண்பா : 23.

ஏணி சார்த்தி ஏறுகின்ற செயல் பாம்பும் உடும்பும் அழுந்தப் பற்றிக்கொண்டு நிற்கும் நிலையினை ஒத்துள்ளது என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.[11] பெண்களின் கண்கள் வேலின் வெம்மையோடும் கூர்மையோடும் ஒப்பிட்டுப் பேசப்படுவதோடு மகளிர் மயிலொடும் ஒப்பிட்டுப் பேசப்படுகின்றனர்.

அயிலன்ன கண்புதைத்தஞ்சி அலறி
மயிலன்னார் மன்றம்படர.[12]

இது போன்று பல உவமைகள் நெஞ்சை அள்ளும் விதத்தில் வந்துள்ளன.

## சேரர் பற்றிய குறிப்புகள்

பொதுவியற் படலத்தின் முதற்கண் சேரமன்னனின் பனம்பூ மாலையும் அவனுக்குரிமையான கொல்லிமலையும் பேசப்பட்டுள்ளன[13] இது போன்றே சோழருக்கு அத்தியும்[14], பாண்டியர்க்கு வேம்பும்[15] உரிய மாலை என்பது விளங்குகின்றன.

மேலும் புறப்பொருள் வெண்பாமாலையுள் அமைந்துள்ள வெண்பாக்களில் பழந் தமிழகத்தின் போர் முறைகளும் சமுதாய நிலையும், கொற்றவை, முருகன், திருமால், சிவன் முதலிய கடவுளர்களைப் பற்றிய குறிப்பும் வந்துள்ளமையைக் காணலாம்.

---

11. உழிஞை; வெண்பா : 19.
12. வஞ்சி; ,, 14.
13. பொதுவியற்படலம்; வெண்பா : 1.
14. ,, ,, 2.
15. ,, ,, 3.

இந்நூலில் உள்ள வெண்பாக்கள் அழகிய கட்டமைப்பும் பொருள் உணர்ச்சியும் கொண்டனவாய்த் துலங்குகின்றன. வெண்பாக்களில் அமைந்துள்ள ஓசை நயம் நம் நெஞ்சைக் கொள்ளை கொள்ளுகின்றன. எண்ண ஊட்டற் சக்தி (thought—provoking) நிறைந்த சொற்கள் அமைந்து வெண்பாவின் நயத்தினை இலக்கிய அழகும் செறிவும் நிறைந்ததாக ஆக்கியுள்ளன எனலாம்.

# பக்தி இலக்கியம்

பழந்தமிழர் வாழ்க்கையில் இயற்கையின் நெருங்கிய செல்வாக்கு மிக்கு இருந்ததைப் போலவே அவர்தம் வாழ்க்கையில் தெய்வங்களும் பிரிக்கவொண்ணாத் தொடர்பு கொண்டிருந்தன. கடவுள் என்பது ஓர் இன்றி யமையாத் தேவையாகவும், பழந்தமிழர் வாழ்ந்த நிலத்தின் தனித்தன்மையாகவும் விளங்கியது. சமயம் என்ற ஒன்று அக்காலத்தில் நிலவியதற்கான சான்று எதுவுமில்லை. கடவுளர் இருந்தனர்; ஆனால் நாம் இன்று கருதும் சமயம் தோன்றவில்லை. பழந்தமிழர் வழிபட்ட கடவுளர்கள் சிறந்த உயர்ந்த வாழ்க்கை நடத்தவும் மேம்பட்ட வாழ்க்கை நிகழ்ச்சிக்கும் வழிகாட்டினர். மக்கள் கடவுளிடம் எதையும் வேண்டவில்லை. அவ்வாறே கடவுளுக்குக் காணிக்கை செலுத்த உறுதிமொழியும் எடுக்கவில்லை. எனினும் சேர அரசுகளின் ஆதரவின் கீழ் அந்தணப் புலவர்கள் வேள்வி நடத்தியதற்கான குறிப்புகள் உள்ளன. இவை தமிழ்ப் பண்பாட்டில் ஆரியம் முன்னரே புகுந்து விட்டதற்கான சான்றாகும். எனினும் இது தனித்த மெய்ப்பொருள் சமயமாக வடிவம் பெறவில்லை.

சைனமும், பௌத்தமும் அன்பு, தியாகம், கொல் லாமை முதலியவற்றைப் பரப்பும் நோக்கில் தமிழகத் திற்குள் புகுந்து மக்களைக் கவர்ந்து காட்டுத் தீப் போல் பரவின. இவ்வுண்மைகளை மக்கள் நன்கு வரவேற்றுத் தங்கள் புலமைக்கு ஏற்ப, தக்க வகையில் மாற்றினர். இம் மெய்ப்பொருள்களை வலியுறுத்தும் இலக்கியங்கள் பெருகின. சேர நாட்டுக்காரரான சங்கராச்சாரியார் நாடு முழுவதும் பயணம் மேற்கொண்டு தன்னந்தனியாக

நின்று சைன, பௌத்தக் கொள்கையாளர்களிடையே சொற்போர் நிகழ்த்தி வெற்றி அடைந்தார்.

சைனத்திற்கும் பௌத்தத்திற்கும் மேம்பட்ட சமய மறுமலர்ச்சி முகிழ்த்தது. இம்மறுமலர்ச்சி சைவ நாயன் மார்கள், வைணவ ஆழ்வார்களின் தலைமையின் கீழ் ஓர் இயக்கமாக வடிவெடுத்தது. சைனர்களும் பௌத்தர் களும் தங்கள் நம்பிக்கைகளை நிலைநிறுத்த அளவை இயலைத் துணைக் கொண்டனர். ஆனால் சைவ வைணவ அடியார்கள் இதனை முறியடிக்கப் பக்தி இயக்கத்தைக் கருவியாகக் கொண்டனர். பிற சமயங்களுக்கு எதிராக இவ் இயக்கம் நாடெங்கும் ஆழ வேரூன்றிப் பரந்தது. அவர்கள் உள்ளத்தை உருக்கும் இனிய தெய்வத் திருப் பாடல்களை இசையோடு இணைத்துப் பாடினர். அவர்கள் உளமொன்றிய பாடல்கள் மக்களின் ஆன்மாவைத் தொட்டு இறைப்பேற்றில் நாட்டம் கொள்ளும் வகையில் அவ்வுள்ளங்களை உயர்த்தின. இவ்வடியார்கள் எளிய, தியாக வாழ்க்கையை நடத்தினார்கள். தெய்வத்தின்மீது இடையறாப் பக்தி செலுத்தினர். மக்களிடையே மக்களுக் காக வாழ்ந்தனர். புதிய ஆற்றல் மிகுந்த மெய்ப்பொருட் சமயம் வடிவெடுக்கத் தலைப்பட்டது. கடவுள், உயிர், உலகம் ஆகிய மூன்றும் தனிப்பெரும் கூறுகளாக வகுக்கப் பட்டு விளக்கப்பட்டன.

பக்தி இயக்கத்தைப் பரப்புவதில் ஈடுபட்ட அடியார் களுள் குறிப்பிடத்தக்கவர்களான குலசேகர ஆழ்வார், சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், வேணாட்டு அடிகள் ஆகியவர்கள் தமிழ் இலக்கியத்திற்கு அளித்த கொடை குறித்த மதிப்பீடு இங்குச் செய்யப்படு கின்றது. ஏனெனில் அவர்கள் ஒவ்வொருவரும் சேர நாட்டுடன் குறிப்பிடத்தக்க தொடர்புள்ளவர்கள்.

பகுதி 1

# வைணவ இலக்கியம்

## குலசேகர ஆழ்வாரின் பெருமாள் திருமொழி

தமிழகத்தே வழங்கும் சமயங்கள் பல; இந்நாட்டிலேயே கருக்கொண்டு தொன்று தொட்டு வழங்கிவரும் சமயங்கள் சிலவாகும். அவற்றில் சைவமும் வைணமும் தமிழகத்தின் மிகப் பழமை வாய்ந்த சமயங்களாகும். சமயம் என்றால் ஆறு, வழி என்பது பொருளாகும். சமைக்கப்பட்டது சமயம் என்பர். ஒருவன் இப்பிறப்பில் நன்னெறிக்கண் நின்று இறையருள் எய்தப் பெறத் துணை நிற்பன சமயங்களாகும். இனி, வைணவ சமயத்தின் பழமையினைச் சுருங்கக் காண்போம்.

### வைணவ சமயத்தின் பழமை

வைணவ சமயக் கடவுளான 'விஷ்ணு' என்ற சொல்லிற்கு 'எங்கும் வியாபித்துள்ளவன்' என்பது பொருளாகும். இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலும் விஷ்ணு கூறப்படுகிறார். விஷ்ணு வேதங்களில் பரதேவதையாகவும், திருமூர்த்திகளில் ஒருவராகவும் குறிப்பிடப் பெறுகின்றார். மனித சமுதாயம் வாழ அவ்வப் போது பல அவதாரங்களை எடுத்தமையினை வைணவ நூல்கள் பல எடுத்துரைக்கின்றன. 'துட்டர்களை அழிப்பதற்கும் தூயோரைக் காப்பதற்கும் நான் யுகந் தோறும் அவதாரம் செய்கின்றேன்' என்று கீதையில்

கண்ண பரமாத்மா மொழிந்துள்ளார்.[1] பாணினி சூத்திரப் பாடியத்தில் பதஞ்சலி முனிவர் திருமாலைப் பரதெய்வ மாகக் குறிப்பிட்டுள்ளார். வடநாட்டில் கோசண்டி என்ற ஓர் இடத்தில் கிடைத்த கல்வெட்டு கொண்டு கி.மு. 200-க்கு முன்னமேயே வாசுதேவனுக்குக் கோயில் கட்டி வழிபாடு செய்யும் வழக்கம் இருந்தமையினை அறிஞர் ஆர். ஜி. பந்தர்கார் தெளிவு படுத்தியுள்ளார்.[2]

## தமிழ் நூல்களில் வைணவம்

பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் தமிழ்நாடு நானிலமாகப் பகுக்கப்பட்டுள்ள பான்மை யினைக் காணலாம். மலையும் மலையைச் சார்ந்த இடம் குறிஞ்சி என்றும், காடும் காட்டைச் சார்ந்த இடம் முல்லை என்றும், வயலும் வயலைச் சார்ந்த இடம் மருதம் என்றும், கடலும் கடலைச் சார்ந்த இடம் நெய்தல் என்றும் கூறப்பட்டன. இந் நானிலங்களுக்கும் தனித்தனியே கடவுளரைத் தொல்காப்பியனார் குறித்துள்ளார். அந் நூற்பா வருமாறு:

**"மாயோன் மேய காடுறை யுலகமும்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே."[3]**

இந் நூற்பாவின் வழி நாம் முல்லைக்குத் தெய்வமாக அந்நாள் தொட்டே வழிபட்டுவந்த தெய்வம் திருமால்

---

1. பகவத் கீதை; பகுதி 4; சுலோகம் :8
2. Quarterly Journal of the Mythic Society, Bangalore Vol XI, p. 87.
3. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; அகத்திணை இயல் : 5.

என்பதனை அறியலாம். அகத்திணையியலிற் குறிப் பிட்டதனோ டமையாது தொல்காப்பியனார் புறத்திணை யியலிலும் மாயோனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**" மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்**
**தாவா விழுப்புகழ் பூவை நிலையும். "[4]**

நச்சினார்க்கினியர் இப்பகுதிக்கு, 'மாயோனுடைய காத்தற் புகழை மன்னர்க் குவமையாகக் கூறும் பூவை நிலை' என்று பொருள் கூறியுள்ளார்.

## புறநானூற்றில் திருமால்

எட்டுத் தொகை நூல்களில் பழமையான நூலாகக் கருதப்படும் புறநானூற்றில் பலராமனும் **கண்ணனும்** குறிக்கப்பெறுகின்றனர். வெள்ளை மேனியுடைய பலராமனுக்குக் கலப்பை ஆயுதமும் பனைக் கொடியும் குறிக்கப்பெறுகின்றன. கருநீலமேனியனான கண்ணனுக்குக் கருடக் கொடி கொடியாகக் குறிக்கப்பட்டுள்ளது.

**" கடல்வளர் புரிவளை புரையு மேனி**
**அடல் வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்**
**மண்ணுறு திருமணி புரையு மேனி**
**விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும். "[5]**

## இராமாவதாரத்தைப் பற்றிய செய்திகள்

தனுஷ்கோடித் துறையில் ஓர் ஆலமரத்தின் கீழ்த் தங்கி வானர சேனைகளோடு இலங்கைமேற் படையெடுப்பு குறித்து இராமன் ஆலோசனை செய்தபோது, ஆலமரத்தில் வீற்றிருந்த பறவைகள் ஒலியெழுப்ப, தன் ஆலோசனை கெடாவண்ணம் தன் கைகளை மேலே உயர்த்திக்காட்டி

---

4. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; புறத்திணை யியல் : 60.
5. புறநானூறு; 56 : 3-6.

அவை ஒலிசெய்து அடங்கப் பண்ணின செய்தி அகநானூற்றில் அழகுறப் புனையப்பட்டுள்ளது:

> " வென்வேல் கவுரியர் தொன்முது கோடி
> முழங்கிரும் பெளவம் இரங்கும் முன்துறை
> வெல்போர் இராமன் அருமறைக் கவிந்த
> பல்வீழ் ஆலம் போல. "[6]

புறநானூற்றுப் பாடல் ஒன்றிலும் இராம சரிதை நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது. இராவணனால் காட்டிலிருந்து கவர்ந்து செல்லப்பட்ட சீதை, தன் அணிகலன்களைக் கழற்றிப் பூமியில் எறிந்து சென்றதும், அதனைப் பின்னர்க் கண்ட குரங்குக் கூட்டங்கள் முறை மாற்றிப் புனைந்தபோது கூடியிருந்தோர் நகையொலியெழுப்பியதுமான செய்தி,

> " கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
> வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
> நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
> செம்முகப் பெருங்கிளை நகையெழுந்தாங்கு. "[7]

என்னும் பகுதியால் அறியப்படும்.

பரிபாடலில் ஆறு பாடல்கள் மாயோனாம் திருமாலைப் பற்றியவையாகும்.[8] திருமாலிருஞ் சோலைத் திருமாலை இளம் பெரு வழுதியார் என்ற புலவர் பரிபாடலில் பின்வருமாறு வருணித்துள்ளார்:

> " புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்
> வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்
> எவ்வயி னுலகத்துந் தோன்றி யவ்வயின்
> மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்
> ........................................

---

6. அகநானூறு; 70 : 13-16.
7. புறநானூறு; 378 : 18-21
8. பரிபாடல்; 1, 2, 3, 4, 13, 15.

நலம்புரீஇ யஞ்சீர் நாம வாய்மொழி
இதுவென யுரைத்தென முள்ளமர்ந் திசைத்திறை
இருங்குன்றத் தடியுறை யிவைகெனப்
பெரும் பெய ரிருவரைப் பரவுதுந் தொழுதே.[9]

## பத்துப்பாட்டுள் திருமால்

கடியலூர் உருத்திரங்கண்ணனார் கச்சிம்பதியிற் கோயில் கொண்டுள்ள திருமாலை,

" ................................நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்"[10]

என்று குறிப்பிட்டுள்ளார்.

முல்லைப் பாட்டில் திருமால், ஆக்ஞா சக்கரமும், வலம்புரிச் சங்கு தாங்கிய தடக்கைகளும் கொண்டவராகக் கூறப்பட்டுள்ளார்:

" நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மால்."[11]

மதுரைக் காஞ்சி கொண்டு திருமாலின் பிறந்த நாள் திருவோணம் என்ற செய்தியினை அறியலாம்:

" கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்."[12]

திருமுருகன் புகழ் பாடும் திருமுருகாற்றுப்படையிலும் திருமாலைப் பற்றிய குறிப்புகள் உண்டு.

" புள்ளணி நீள்கொடிச் செல்வன்."[13]

---

9. பரிபாடல்; 15.
10. பெரும்பாணாற்றுப்படை; 371-374.
11. முல்லைப் பாட்டு; 1-3.
12. மதுரைக் காஞ்சி; 590-591.
13. திருமுருகாற்றுப்படை; 151.

" நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கை"[14]

முதலிய தொடர்கள் திருமாலின் கொடியினையும் தொழிலினையும் உணர்த்துவனவாகும்.

## திருக்குறளில் திருமால்

" மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு"[15]

என்ற குறளும்,

" தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு"[16]

என்ற குறளும் திருமாலைப் பற்றிய குறிப்பினை நுவல்வன வாம்.

## சிலப்பதிகாரத்தில் திருமால்

சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையோன் கோவலன், கண்ணகி, கவுந்தி ஆகிய மூவரும் மதுரை போகின்ற வழியில் எதிர்ப்பட்டுத் தென்னவன் நாட்டுத் தீதுதீர் நிலைமை யினைச் சிறப்பித்துவிட்டு, திருவரங்கத்தில் கிடந்த கோலமாகக் கிடக்கும் திருமாலினைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றான் :

" நீல மேகம் நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்."[17]

---

14. திருமுருகாற்றுப்படை : 160-161.
15. திருக்குறள்; மடியின்மை : 10.
16. ,, புணர்ச்சி மகிழ்தல் : 3.
17. சிலப்பதிகாரம்; காடுகாண் காதை : 35-40.

அடுத்து, வேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் திருமாலின் நின்ற கோலத்தைப் பின்வருமாறு பாங்குற வருணிக்கின்றான்:

" வீங்கு நீரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறு திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்."[18]

மேலும் ஆய்ச்சியர் குரவை முழுதும் இசைப்பாடலால் நிகழ்த்தப் பெறும் திருமால் வணக்கமும் வழிபாடும் என்றே கொள்ளத்தகும்.

" மூவலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன் சீர்கேளாத செவியென்ன செவியே
திருமால் சீர்கேளாத செவியென்ன செவியே"[19]

என்ற இப் பாடல் இராமாவதாரச் சிறப்பினை நுவல்வதாகும்.

### மணிமேகலை கூறுவது

மணிமேகலை சமயக் கணக்கர் தந்திறங் கேட்ட காதையுள் வைணவ வாதம் கூறப்பட்டுள்ளது.

---

18. சிலப்பதிகாரம்; காடுகாண் காதை : 41-51.
19. சிலப்பதிகாரம்; ஆய்ச்சியர் குரவை; படர்க்கைப் பரவல் : 35.

" காதல் கொண்டு கடல்வணன் புராண
மோதினன் நாரணன் காப்பென் றுரைத்தனன்."[20]

என்ற பகுதிகொண்டு விஷ்ணு புராணம் போன்ற திருமாலைப் பற்றிய புராணங்கள் மணிமேகலைக் காப்பியம் எழுந்த காலத்திற்கும் முன்னரே பெருவழக்குப் பெற்றிருந்த செய்தி தெரியலாகும்.

திருமால் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கும் தன்மையினை வடமொழியில் 'அந்தர் யாமி' என்பர். பரிபாடலில் திருமாலின் இத்தகு தன்மை நெருப்பினுள் வெப்பமாய், பூவினில் நறுமணமாய், கல்லினுள் மணியாய், சொல்லினுள் வாய்மையாய், அறத்தினுள் அன்பாய், மறத் தினுள் வலிமையாய், அனைத்துமாய், அனைத்தின் உட் பொருளுமாய்த் திருமால் விளங்குகின்ற உண்மையினைப் பரிபாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

" தீயினுட் தெறல்நீ பூவினுள் நாற்றம்நீ
கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ
.....................................
அனைத்தும்நீ அனைத்தினுட் பொருளும்நீ."[21]

இதுகாறும் கூறியவற்றால் வைணவ சமயத்தின் பழமை ஒருவாறு அறியப்படும்.

## ஆழ்வார் என்னும் சொல்

வைணவ சம்பிரதாயத்துப்படி அச் சமயப் பெரியோர் களை ஆழ்வார்கள், ஆசாரியர்கள் என இருவகையாகப் பகுப்பர். இவர்களுள் ஆழ்வார்கள் எனப்படுவோர் அவதார புருஷர்களாகவும், ஞான பரிபூரணர்களாகவும்,

---

20. மணிமேகலை; சமயக் கணக்கர் தந்திறங் கேட்ட காதை : 98-99.
21. பரிபாடல்; 3 : 63-68.

வைணவ சமயத்தின் முதல்வர்களாகவும் விளங்கினவர்கள் ஆவர். ஆழ்வார் என்பதற்குப் 'பகவத் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர்' என்று பொதுவாகக் கூறுவர். பண்டைச் சாசனங்களிலும் நூல்களிலும் 'ஆழ்வார்' என்ற சொல் பயின்று வழங்கக் காணலாம்.[22]

## ஆசாரியர் என்னும் சொல்

ஆழ்வார்களின் அருளிச் செயலின் வழியைப் பின்பற்றி ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்தைப் பிரவசனஞ் செய்து நாட்டை உய்யக் கொண்ட பெரியோர்களை ஆசாரியர் என வழங்குவர். ஆசாரியர்கட்கெல்லாந் தலைவர், ஸ்ரீமந் நாதமுனிகள் என்பர்.

## குலசேகரர்

ஆழ்வார்கள் பன்னிருவரில் இவர் ஒருவர் ஆவர். ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாரும் இவரும் அரசர்களாக ஆண்டவர்கள் ஆவர். அதிலும் திருமங்கை மன்னர் குறும் பொறை நாட்டையாண்டவராயிருக்கக் குலசேகரர் பழந் தமிழ் நாடுகளாம் சேர சோழ பாண்டிய நாட்டில் மூன்றில் ஒன்றான சேர நாட்டில் செங்கோல் செலுத்தியவர் ஆவர்.

இவர் தம்முடைய பாடல்களில் தம்மை க்ஷத்திரிய வருணத்தைச் சார்ந்தவர்[23] எனவும், கொங்குநாட்டின் அரசர்[24] எனவும், கொல்லி என்னும் தலைநகரையுடைய

---

22. " ஆழ்வார் திருவரங்க தேவர்க்கு."
— S. I. I. III p. 150.

" இனிப் பிறக்கக்கடவ மயித்திரி யாழ்வாரான புத்த தேவர்க்கு."
— தக்கயாகப் : 193 உரை.

23. "எங்கள் குலத் தின்னமுதே யிராகவனே தாலேலோ." —பெருமாள் திருமொழி, 8:3

24. "கொங்கர்கோன் குலசேகரன்.' ,, 3:9

வர்[25] எனவும் தாம் பிறந்த குலம், நாடு, நகர்களைக் கூறுவர். மேலும் இவர் தம் பாடல்களில்

" கூடலர்கோன் கொடைக்குலசே கரன்.[26]"

என்றும்,

" கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக் கோன்குல சேகரன்"[27]

என்றும்,

" கொல்லி நகர்க்கிறை கூடற் கோமான்."[28]

என்றும்,

" கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்."[9]

என்றும்,

" கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாட்
கோழியர்கோன் குடைக்குலசே கரன்"[30]

என்றும் தம்மைத் தம் பாசுரங்களிற் கூறிக்கொள்வதால் சோழ, பாண்டிய நாடுகளுக்கும் இவர் ஒரு காலத்தில் இறையாயிருந்திருத்தல் கூடும் என ஊகிக்கலாம்.

சிலர் இவர் பாண்டிய வேந்தராகப் பிறந்தார் என்றும், சேரநாட்டில் மன்னர் கால்வழி அற்றுப்போக, மருமக்கட் தாய வழக்குப்படி இவர் சேரவேந்தராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார் என்றும், சேரநாட்டில் இவர் பாண்டியகுலசேகரப்

---

25. "கொல்லிநகர்க் கிறை."
—பெருமாள் திருமொழி, 6: 10
"கொல்லி காவலன்." ,, : 9: 10
26. பெருமான் திருமொழி: ,, 1: 1.
27. ,, 2: 10.
28. ,, 6: 10.
29. ,, 9: 11.
30. ,, 10: 11.

பெருமாள் என்றே வழங்கப்பெற்றார் என்றும் கூறுப.[31] வேறு சிலர் இவ் ஆழ்வார் 'கூடல் நாயகன், கோழிக்கோன்' என்று கூறுகின்றவை, பாண்டிய சோழநாட்டாட்சியில் தமக்குரிய தலைமை பற்றியன என்பதினும், அவ்விருவர் மரபுடனும் தங்குலத்தவர்க்கிருந்த தொடர்பு பற்றியன என்று கொள்ளுதலே பெரிதும் பொருத்தமுடைத்து என்பர்.[32]

## ஆழ்வாரின் காலம்

திருமங்கையாழ்வார்

"பரனே பஞ்சவன் பூழியன் சோழன்
பார்மன்னர்மன்னர் தாம்பணிந் தேத்தும்வரனே"[33]

என்று, தம் காலத்தேயிருந்த மன்னர்கள் திருமாலடியாராக இருந்த செய்தியைக் குறித்திருக்கின்றார். திவ்ய சூரி சரிதம் திருமங்கை மன்னன், தொண்டரடிப் பொடிகள், குலசேகரப்பெருமாள் ஆகிய மூவரும் சம காலத்தவர்களே எனக் குறிப்பிட்டிருப்பதை நோக்க, திருமங்கையாழ்வார் காலத்திற்கு அணித்தான காலத்திற்றான் குலசேகரரும் வாழ்ந்திருத்தல் வேண்டும் எனலாம். மேலும் குலசேகரர் தம் பெருமாள் திருமொழியில்,

"ஆடிப் பாடி யரங்க வோவென்
றழைக்குந் தொண்டரடிப் பொடி
ஆட நாம்பெறிற் கங்கை நீர்குடைந்
தாடும் வேட்கையென் னாவதே."[34]

என்ற அடிகளிலே, தொண்டரடிப் பொடி என்ற தொடரை ஆண்டுள்ளார். இதனினின்று தொண்டரடிப் பொடியாழ்

31. Thiru. M. Srinivasa Aiyangar's Tamil Studies P. 310.
32. திரு. மு. இராகவையங்கார்; ஆழ்வார்கள் கால நிலை: ப. 172.
33. பெரிய திருமொழி: 7: 4: 1-3.
34. பெருமாள் திருமொழி; 2: 2.

வாரைத் தம் திருவுள்ளத்துக் கொண்டு இத்தொடரைக் குலசேகரர் வழங்கியிருப்பாரோ என ஓர் எண்ணம் எழுகின்றது.

மேலும், சுந்தரர் காலத்தவரும், ஆதியுலா, பொன் வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக் கோவை முதலியவற்றின் ஆசிரியரும், சிறந்த சிவனடியாருமான சேரமான் பெருமாளுக்கு முன்னர் ஆண்ட கேரள வேந்தன் தன்னரசு துறந்து தவசியானான் என்பதனைச் சேக்கிழார் பெருமான் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கக் காணலாம்:

" நீரின் மலிந்த கடலகழி
நெடுமால் வரையிற் கொடிமதில் சூழ்
சீரின் மலிந்த திருநகர மதனிற்
செங்கோற் பொறைய னெனும்
காரின் மலிந்த கொடை நிழன்மேற்
கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்த்
தாரின் மலிந்த புயத்தரசன்
தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான்."[35]

இப்பாடலில் 'தரணி நீத்துத் தவஞ்சார்ந்தவ'ராகக் கூறப்பட்ட சேரவேந்தர், 7, 8 ஆம் நூற்றாண்டினரான திருமங்கை மன்னனுக்குச் சமகாலத்தவராகவும் தம் மரசு துறந்தவராகவும் அறியப்படும் குலசேகரப் பெருமாள் என்றே ஆராய்ச்சியாளர் கருதுவர்.[36] மு. இராகவையங்கார் இவர் 8 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தவர் என்பர். பெருமாள் திருமொழியின் 2, 3 ஆம் திருப்பதிகங்களில்,

---

35. பெரியபுராணம்: சேரமான் பெருமாள் நாயனார் புராணம்: 10.

36. திரு. மு. இராகவையங்கார்: ஆழ்வார்கள் கால நிலை: ப. 161.

"கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்தே
இன்பமருஞ் செல்வமு மிவ்வரசும் யான்
வேண்டேன்."[37]

"வானாளு மாமதிபோல் வெண்குடைக்கீழ்
மன்னவர்தஞ்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடுஞ்
செல்வறியேன்."[38]

"மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்
வையந் தன்னொடுங் கூடுவ தில்லையான்"[39]

என்ற அடிகள் இவர் துறவு நெஞ்சத்தை இனிதே காட்டு வனவாம். மேலும் இவர்,

"...அணியரங்கன் திருமுற்றத் தடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டியானு
மிசைந்துடனே யென்று கொலோ விருக்கு
நாளே"[40]

என்று திருவரங்கக் கோயிலைச் சூழ்ந்து விளங்கும் பரம பாகவதர் கூட்டத்தில் தாம் இடம் பெறுநாளே இன்பநாள் என்றும் கூறியுள்ளமையானும் இவர் இடையே அரசாட்சி யைத் துறந்து அடியார் குழுவில் அங்கங்கொண்டு ஆரா அன்பால் பாமாலை புனைந்து திருமாலுக்குச் சார்த்தினார் எனக் கொள்ளலாம்.

மேலும், இவருடைய இரண்டாந் திருமொழி 'தேட்ட ருந்திறல்' எனத் தொடங்குகின்றது. முதற் குலோத்துங்க சோழனது (1070—1112) ஆட்சியின் 15 ஆம் ஆண்டில் அமைந்த கல்வெட்டொன்றில்,

---

37. திரு. மு. இராகவையங்கார் : ஆழ்வார்கள் கால நிலை : ப. 164.
38. பெருமாள் திருமொழி; 4: 7.
39. பெருமாள் திருமொழி; 3; 1.
40. ,, ; 1: 10.

"தீர்த்தம் பிரஸாதித்தருளின அன்றிரா, திருப்புன்னைக் கீழ் (ஸ்ரீ ரங்கநாதப் பெருமாள்) எழுந்தருளியிருந்து தேட்டருந்திறல் கேட்டருளும் போது"

என்று கூறப்பட்டுள்ளது.[41]

தேட்டருந்திறல் என்பது, இத்திருப்பதிகம் முழுது மாகும். இதனால் குலசேகரர் இப்பிரபந்தம் புகழ் பெற்றுப் பாடப் பெற்ற 11ஆம் நூற்றாண்டிற்கும் முன்னமே வாழ்ந் தவர் என்பது பெறப்படும்.

அறிஞர் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் குலசேகரர் என்னும் தம் நூலில் பின்வருமாறு குலசேகரர் காலத்தைப் பற்றி எழுதியுள்ளார்:

"முதலாழ்வார்களது காலத்தைப் பற்றிக் கருத்து வேற்றுமை இருந்தாலும், குலசேகரர் அவர்களுக்குப்பின் வந்தவர் என்பதில் ஐயம் இல்லை. ஆதலின், இவர் பல்லவர் காலத்தவர் எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற ஒரு கல்வெட்டு 'தேட்டருந் திறல் தேனினை' என வரும் இவரது திருமொழியைத் திருக்கோயிலில் பாடுவதற்காகக் கட்டளை ஏற்படுத்துகின்றது. இவை நடப்பதற்குச் சில காலம் முன்னதாக, இவர் வாழ்ந் திருத்தல் வேண்டும். எவ்வாறாயினும், எட்டாம் நூற்றாண்டின் ஈற்றில் வந்தவர் என்று கூறுவதோடு இந்த ஆராய்ச்சியை முடித்துக் கொள்ளலாம்."[42]

## பிறந்த ஊர்

இவ் ஆழ்வார் அவதரித்த நகரம் மேலைக் கடற் கரையிலுள்ள 'குக்குட கூடலாம்' (கோழிக் கூடு) என்று திவ்யசூரி சரிதமும், கொல்லி நகர் என்று பின்பழகிய

41. S. I. I. Vol III. P. 150.
42. குலசேகரர் : ப. 10.

பெருமாள் சீயர் குருபரம்பரையும், வஞ்சிக் களம் என்று வேறு பெரியார் பாடல்களுங்[43] குறிப்பிடுகின்றன.

## பெருமாள் எனும் பெயர்

கேரளோத்பத்தி எனும் நூல் சேரநாட்டைப் பற்றி வழங்கிவரும் கதையைக் கூறும் நூலாகும். சேரநாடு முதன் முதலில் நான்கு பிரிவாகப் பிரிந்து நான்கு கழகத்தினரின் ஆட்சியில் இருந்து வந்ததென்றும், அந் நான்கு கழகத்தினரும் ஒன்று சேர்ந்து தம்மை ஆள ஒரு நம்பியைத் தேர்ந்தெடுத்தனர் என்றும், இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட நம்பிகள் கொடுங்கோலராய் மக்களைக் கொடுமை செய்துவந்த காரணத்தால், கழகத்தார் அனைவரும் ஒன்று கூடி வேற்றுப் புலத்தில் மேன்மையுடன் அரசாண்ட அரசரை வரவழைத்துத் தம்முடைய அரசராக ஆக்கிக் கொண்டதாகக் கூறும். இவ்வாறு அரசராகச் சேரநாடு வந்தவர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேல் அரசாளக் கூடாது என்றும், அப்போதுதான் குடிமக்களது நலத்தில், வரும் ஒவ்வோர் அரசர்களும் கருத்துச் செலுத்துவர் என்றும் கருதினார்களாம். இவ்வாறு பன்னிரண்டாண்டிற் கொருமுறை தேர்ந்தெடுக்கப்பட்ட அரசர்களுக்குப் **பெருமாள்கள்** என்ற சிறப்புப் பெயர் வழங்கியது. அத்தகு பெருமாள்கள் இருபத்தைவர் சேரநாட்டிற் செங்கோலோச்சியதாகவும், அவர்களில் குலசேகரர் என்ற பெயரில் இரண்டு அரசர்கள் காணப்படுகின்றனர் என்றும், அவ் விருவரில் ஒருவரே பெருமாள் திருமொழி பாடிய குலசேகரர் என்றும் கூறுவர்.

---

43. '' பொன்புரையும் வேற்குலசே கரனே மாசிப்
புனர்பூசத் தொழில் வஞ்சிக் களத்திற் றோன்றி''
—வேதாந்த தேசிகன் (தேசிகப் பிரபந்தம்)

'' எண்டிசையும், ஏத்துங் குலசே கரனூ ரெனவுரைப்பர்
வாய்த்த திருவஞ்சிக் களம்''
—ஸ்ரீ வரவர முனிகள் (உபதேசரத்தின மாலை)

## அரசியல் துறந்த கதை

அரசர் அடியவர்களான பரம பாகவதரான அடியார்களை எதிர்கொண்டு அழைத்து உபசரித்து அவர்கட்குத் தொண்டு செய்வதனையே கவனித்து வந்தமையின் அரச கருமங்கள் தடைப்படுவதாக அமைச்சர்கள் கருதினர். எனவே அரசர் அடியவர்பால் கொண்டிருந்த கூட்டுறவை ஒழிக்க முனைந்தனர். அரசர் தமது பூசையறையில் வைத்து வழிபடும் ஆண்டவனுக்கு அணிவிக்கும் அழகியதொரு பன்மணிமாலையை எடுத்து அமைச்சர்கள் மறைத்து வைத்துவிட்டு, அரசர் அதனைத் தேடிய காலையில், அடியவரல்லாது அயலாலொருவரும் அப் பூசையறையில் நுழைதலின்மையின் அவருள் ஒருவரே அபகரித்துச் சென்றிருக்கவேண்டும் என்று அரசனிடம் தெரிவித்தனர். அடியவர் செயல் அறச் செயலாகத்தான் அமையுமே யல்லாது இவ்வாறு ஒருநாளும் களவுச் செயலாகப் பொருந்துதல் இல்லை என்பதனை மனமார நம்பிய குலசேகரர் மனம் புழுங்கினார். குடத்திலே கொடிய நஞ்சுடைய பாம்பொன்றையிட்டு அடைக்கச் செய்து அதற்குள் அனைவரெதிலும் தமது கையினைவிட்டு 'அடியவர் அதனைக் களவாடியிருப்பரேல் குடத்திலிருக்கும் பாம்பு என்னைத் தீண்டுவதாகுக' என்று சூளுரைத்த போது பாம்பு அவரைத் தீண்டாது நின்றதால், அடியவர் பெருமையை அமைச்சர்க்கு விளக்கினார். அமைச்சர்கள் இச்செயல் கண்டு அஞ்சி உண்மையை ஒளியாது எடுத்துரைத்துத் தம் பிழையைப் பொறுக்கவேண்டினர். இனி இத்தகு அமைச்சரோடிருந்து அரசாட்சி செய்வது தகுதியுடைத்தன்று எனக் கருதித் தம் மகனை மன்னராக்கித் தாம் துறவு பூண்டனர் என்பர். பாம்புக் குடத்தில் கைவிட்ட நிகழ்ச்சியினைப் பின்வரும் எம்பெருமானார் பாடல் சித்திரிக்கின்றது:

"ஆரங் கெடுப்பர னன்பர்கொள்
ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை
யிட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லி
காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி
வேந்தர் சிகாமணியே."

இப்பாட்டு ஸ்ரீ ராமாநுஜ முனிவரர் (உடையவர்) அருளியவை என்றும், மணக்கால் நம்பிகள் அருளியவை என்னும் கூறுவர்.[44]

## குலசேகரர் பற்றிக் குருபரம்பரை கூறுவன

கோயில் எனப்படும் திருவரங்கம் சென்று அரங்க நாதனைக் கண்டு வணங்கி அவன் அடியார் கூட்டத்தோடு ஒன்றும் காதலுடையவர் என்பது ஒன்று. இறைவனை வணங்குதலினும் இறைவனுடைய — பெருமாளுடைய அடியார்களாம் பரமபாகவதர்களை வணங்கி வழிபடு தலையே பெறற்கரும் பேறாகக்கருதினார் என்பது இரண்டு. அடியவர்கள் மனமாசு மருவற்றவர்களாய், களவு என்பதனைக் கனவிலும் கருதாதவர்களாய் கடவுள் நெறி நின்று வாழும் அறவோர் என்று அவர் உறுதியாக எண்ணினார் என்பது மூன்று. வடமொழியில் முகுந்தமாலை என்னும் தோத்திரப் பதிகத்தை முதலிலும், நெஞ்சுருக்கும் பெருமாள் திருமொழியைப் பின்னாலும் ஆழ்வார் மால் மீது கொண்ட மாளாத அன்பால் அருளிச் செய்தனர் என்பது நான்கு. இராமாயணத்தை அக்கதை சொல்லு தலில் வல்லார் வாய்க் கேட்டு அதனை நன்கறிந்தவர்

44. திரு. மு. இராகவையங்கார். —சேரவேந்தர் செய்யுட் கோவை, இரண்டாம் பாகம், முதற் பக்கம் அடிக் குறிப்பு.

என்பது ஐந்து. இராமாயணக் கதையினைப் படிக்கக் கேட்கும்போதே கதை நிகழ்ச்சிகளில் ஒன்றுபட்டு, அக்கதை அப்போதுதான் தம் கண்ணெதிரே நடைபெறுவதாக நினைந்து, அதற்கேற்பச் செயல்படும் உணர்வு மிக்கவர் என்பது ஆறு. உண்ணுவதும் உடுப்பதும் உறங்குவதுமே வாழ்க்கை என்று எண்ணி அதிலேயே ஆழ்ந்து அல்லல் பட்டழியும் உலகவரோடு ஒன்றாக வாழ உள்ளம் ஒருப் படாது, தாம் வழிவழிப் பெற்ற அரசர்க்குரிய பெருஞ் செல்வமெல்லாவற்றையுந் துறந்து, பெருமாள் கோயில் கொண்டிருக்கும் திருக்கோயில்களுக்கெல்லாம் சென்று ஆடிப்பாடி அகமகிழ்ந்து நின்றார் என்பது ஏழு. ஆக இவ் வேழு செய்திகளே குருபரம்பரையில் குலசேகரரைப் பற்றி விளங்க இடம்பெற்றுள்ளன. குலசேகரரோடு நெருங்கிப் பழகியது போன்று குருபரம்பரை அவர் கதையை முதலிலிருந்து முடிவுவரை கூறிச் செல்கின்றது. குருபரம் பரை கூறும் செய்திகள் அனைத்தும் உண்மை வரலாறு என்று நம்மாற் கொள்ள முடியாது போயினும், குரு பரம்பரை கூறும் அனைத்துச் செய்திகளும் கற்பனையே—கட்டுக் கதைகளே என்று ஒதுக்கிவிட முடியாது. குருபரம் பரை கூறும் செய்திகளின் அடிப்படையில் சில உண்மைக் கூறுகள் ஒளிவிடக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் குலசேகரர் சேர நாட்டை யாண்ட செம்மல் என்பதும், திருமாலின் மீது பித்தேறி அவர் கோயில் கொண்டிருக்கும் பகுதிகளையெல்லாம் காணப் பேராவல் கொண்டிருந்தார் என்பதும், பரம பாகவதர் மாட்டு வணக்கமும் வழிபாடும் செலுத்தப் பெரிதும் விரும்பியவர் என்பதும், இராம காதையில் நெஞ்சைப் பறிகொடுத்தவர் என்பதும், வடமொழியிலும் வல்லுநர் என்பதும், கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என்பதும், 105 பாசுரங்கள் கொண்ட பெருமாள் திருமொழியின் ஆசிரியர் என்பதும் அறியப் பட்டன.

## பெருமாள் திருமொழி — பெயர்க் காரணம்

பெரிய பெருமாள் விஷயமாகக் குலசேகரப் பெருமாள் இயற்றிய பாசுரங்களாதலின் பெருமாள் திருமொழி என்னும் பெயருடையதாயிற்று. குலசேகரப் பெருமாளி னுடைய திருமொழி என இத்தொடர் விரியுமாதலால் ஆறாம் வேற்றுமைத் தொகை எனலாம்.

## பெருமாள் திருமொழி உரை

எல்லா நூல்களினும் கடவுள் நூலே உயர்ந்ததென்று அறிஞர் உரைப்பர். இவ்வகையில் கடவுள் நூல் எனத் தமிழ் நாட்டிலே கருதப்படுவன திருமுறைகளும், நாலாயிரப் பிரபந்தமும், திருக்குறளுமே என்பர் அறிஞர்.[45] சைவத் திருமுறைகளினும் வைணவப் பிரபந்தங்களுக்கு ஓர் ஏற்றம் உண்டு என்பர்.

சிவனடியார்கள் திருமுறைகளைப் படித்து உணர்ந்து பாடி மகிழ்ந்திருக்கவும் தம்மை நாடி வந்தவர்க்கு உரையகலம் கூறியும் வந்தனர். ஆனால் வைணப் பிரபந்தங்களுக்கு ஆசாரியர் எனப்படும் பெரியோர்கள் மிகச் சிறந்த உரை பல வகுத்தனர். பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலானோர் நாலாயிரத்திற்கு நல்லதோர் விரிவுரையினையெழுதி நாட்டிற்கு நல்கியுள்ளனர். உடையவர் எனப்படும் இராமானுஜர் காலத்திலேயே நாலாயிரம் முறையே தொகுக்கப்பட்டுத் திருமாலின் திருமறையாயது என்றும், இராமானுஜருக்கும் சில நூற்றாண்டுகள் முன்னிருந்த நாதமுனிகளது காலத்தில் நாலாயிரம் சிறந்த சீரிய நிலையினை எய்தியிருந்தது என்றும் ஆராய்ச்சியுலகு அறையும்.

---

45. திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை; குலசேகரர். ப. 1.

## பெருமாள் திருமொழியின் அமைப்பு

பெருமாள் திருமொழி நூற்றைந்து (105) பாசுரங்களைக் கொண்டதாகும். உயிர்க் கூட்டங்களை உய்யும் பொருட்டு அருள் பாலிக்கும் திருமகள் கொழுநனான திருமால் இந் நிலவுலகில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிற திவ்ய தேசங்கள் நூற்றெட்டனுள் முதலதும் தலைமை பெற்றதுமான திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கிற அடியவர்க் கெளியனான அரங்கநாதப் பெருமான் விஷயமாக முதல் மூன்று திருமொழிகளைக் குலசேகரப் பெருமாள் பாடியுள்ளார். திருவேங்கடமுடையான் விஷயமாக நான்காவது திருமொழியும், மலைநாட்டுத் திருவித்துவக் கோட்டம்மான் விஷயமாக ஐந்தாவது திருமொழியும் பாடியுள்ளார். இவ் ஐந்து திருமொழிகளும் ஆழ்வார் திருமாலின் அர்ச்சாவதாரங்களில் ஈடுபட்டுப் பாடியனவாகும். அர்ச்சாவதாரத்திற் போலவே குலசேகரர் எம்பெருமானின் விபவாவதாரங்களுள்ளும், இராமாவதாரத்திலும், கிருஷ்ணாவதாரத்திலும் மிக்க ஈடுபாடு கொண்டவர் என்பதனைப் பின் அமைந்துள்ள ஐந்து திருமொழிகளில் விளங்க வைத்துள்ளார். அவற்றுள்ளும் தமக்குச் சிறிது காலமே முந்தியதான கிருஷ்ணாவதாரத்தை நினைத்து, அதில் அப்பெருமானைத் தாம் அனுபவிக்கப் பெறாது போயினமைக்கு இரங்கி, அவ் இரக்கத்தை அக் கிருஷ்ணாவதாரத்திலே திருவாய்பாடி ஆய்ச்சியர்கள் கண்ணபிரானோடு ஊடல் கொண்டு உரைத்த பேச்சுகளால் ஆறாந் திருமொழியையும், தான் பெற்றிருக்கவும் வளர்க்க முடியாமற் போய் ஆயர்பாடி அசோதை கண்ணனுடைய பிள்ளைத் திருவிளையாடல்களைக் கண்டு களித்தாற் போலத் தானுங் கண்டு களிக்க முடியாமற் போன தேவகிப் பிராட்டி, கம்சவதையின் முடிவில் கண்ணனைக் கண்டு கழிவிரக்கத்தோடு பேசின பேச்சுகளால் ஏழாந் திருமொழியையும் இயற்றியுள்ளார். பின்னர் இராமாவ

தாரத்தில் ஈடுபட்டவராய்க் குலசேகரப் பெருமாள், இராமனைக் கோசலை தன் வயிற்றிற் சுமந்து பெற்ற பேறு காரணமாக அவ் இராமனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக் கூறுமுகமாக எட்டாந் திருமொழியையும், தாம் அக்காலத்தில் அனுபவிக்கப் பெறாமல் இழந்தது— மைந்தனான இராமபிரானை குழந்தைமைப் பருவத்தி லெல்லாம் அனுபவித்து, வாலிபப் பருவத்தில் அனுபவிக்கப் பெறாதே இழந்த தசரத சக்கரவர்த்தி, இராமன் தன் ஆணையெனக் கைகேயி கூறிய சொல் தேறிக் காடேகும் போது அப்பிரிவை ஆற்றமாட்டாது புலம்பிய புலம்பல் முகமாக ஒன்பதாந் திருமொழியையும், இராமாயணத்திற் பெரிதும் ஈடுபட்டவரான குலசேகரர் அவ் இராமாயண கதையைப் பின்புள்ளாரும் எளிதாக உணர்ந்து உய்யுமாறு, அயோத்தியில் தசரதன் மகனாய்த் தோன்றியது முதலாகத் தன்னுலகமாம் பரமபதம் புக்கது ஈறாகவுள்ள சரித்திரங் களைச் சுருக்கமாக உணர்த்தவல்ல பத்தாந் திருமொழி யையும் அருளிச் செய்து பெருமாள் திருமொழியைத் தலைக்கட்டியுள்ளார்.

## பாடல் தொகை

முதலாவது, நான்காவது, ஏழாவது, எட்டாவது, ஒன்ப தாவது, பத்தாவது ஆகிய ஆறு திருமொழிகள் தனித் தனியே பதினோரு பாடல்களைப் பெற்றிருக்க, இரண் டாவது, ஐந்தாவது, ஆறாவது ஆகிய மூன்று திருமொழிகள் பப்பத்துப் பாடல்கள் கொண்டிலங்க, மூன்றாந்திருமொழி மட்டும் ஒன்பது பாடல்கள் கொண்டதாக அமைந்துள்ளது. மொத்தத்தில் நூற்றைந்து திருப்பதிகங்கள் பெருமாள் திருமொழியில் அமைந்துள்ளன.

இனி, தனித்தனியே ஒவ்வொரு திருமொழியினையும் ஆராய்வோம்.

### திருமொழிகளின் பெயர்

ஒவ்வொரு திருப்பதிகத்திற்கும் அதன் முதல் தொடரே பெயராக வழங்குகின்றது. பதிற்றுப்பத்துப் பதிகங்கள் பதிகத்தினுள் வரப்பெற்றுள்ள சிறந்த உயிரான தொடரால் பெயர் அமைந்திருக்கப் பெருமாள் திருமொழி, திருமொழி யின் முதற்றொடரால் பெயரமைந்துள்ளது. இராமானுஜ முனிவரர் காலத்தும், அவர் காலத்துக்கு முன்பும் திருப் பதிகத்திற்குத் திருப்பதிகத்தின் முதல் தொடரே பெயராக அமைந்திருந்தது என்பதனைக் கல்வெட்டு கொண்டு அறியலாம்.[46]

### முதல் திருமொழி—இருளிரிய

'இருளிரிய' எனத் தொடங்கும் முதல் திருமொழியில் ஒவ்வொரு பாடலிலும் முதல் மூன்றடிகளில் திருவரங்கத்தே பள்ளி கொண்டுள்ள திருமாலின் நிலையை நம் கண் ணெதிரே தோன்றுமாறு அழகுற வருணித்துவிட்டு, நான்காம் அடியிலே அத்தகைய பெருமாளை 'என்று காண்பது', 'என்று வழிபடுவது' என்று இரங்கி ஏங்கு கின்றார்.

சைவர்கள் வழக்கில் கோயில் என்றால் அது தில்லை (சிதம்பரம்) யையே குறிக்கும். வைணவர்கள் கோயில்

---

46. முதற்குலோத்துங்க சோழனது பதினைந்தாம் ஆட்சியாண்டில் எழுந்துள்ள கல்வெட்டொன்றில்,

"தீர்த்தம் பிரஸாதித் தருளின அன்றிரா, திருப்புன்னைக் கீழ் (ஶ்ரீரங்கநாதப் பெருமாள்) எழுந்தருளியிருந்து 'தேட்டருந்திறல்' கேட் டருளும்போது"

என்று கூறப்பட்டுள்ளது.

(S. I. I. Vol. iii p. 150.)

— திரு. மு. இராகவையங்கார்—சேர வேந்தர் செய்யுட்கோவை. ப. 9.

என்று வணங்கி வழிபடுவது திருவரங்கமேயாம். ''தில்லைக்கு நாளைக்குப் போக வேண்டும்; தில்லைக்கு நாளைக்குப் போக வேண்டும்'' என்று பித்தேறி நனவிலும் கனவிலும் தில்லைத் திருக்கோயில் உறையும் நடராசப் பெருமானைத் திருநாளைப் போவார் (நந்தனார்) எண்ணி ஏங்கியது போன்று, ஆழ்வார்களிலே பெரிய கோவில் பெரும்பித்துப் பிடித்து 'என்று கொலோ காண்பது' என்று அழுது அரற்றி அரங்கநாதனை எண்ணியவர் குலசேகரர் ஆவர்.

முதல் திருமொழியில் இடம் பெற்றுள்ள பதிகங்கள் அனைத்தும், 'கங்கையிற் புனிதமாய' காவிரியின் நடுவே திருவரங்கம் பெரிய கோயிலுட் பள்ளி கொண்டருளும் அரங்கநாதப் பெருமானைக் கண்ணாரக் கண்டும், வாயார வாழ்த்தியும், அங்குள்ள திருமுற்றத்து அடியாரை அணுகியும், மலர் தூவி வழிபட்டும், தலையார வணங்கியும், கண்களில் நீர் சுரக்க உள்ளமுருகியும், அப்பெருமான் தன் தொண்டரோடு ஆடிப்பாடி 'அரங்கவோ' என்றழைத்துத் துள்ளி மகிழும் நன்னாள் தனக்கு என்று வாய்க்குமோ என்று குலசேகரர் திருவுள்ளம் விரைகின்ற பான்மையினைக் கூறுவனவாய் அமைந்துள்ளன.

## முதல் திருமொழியின் உள்ளுறை பொருள்

(1) ''திருவரங்கம் பெரிய கோயிலில் காவிரியாற்றின் நடுவே ஆயிரந் தலைகளையுடைய ஆதிசேடன் மீது திருக்கண் வளரா நின்ற அழகிய மணவாளனை அடியேன் கண்ணாரக் கண்டு களிக்கும் பேறு என்றைக்கு வாய்க்குமோ'' என்று நெஞ்சம் நெக்குருகுகிறார் ஆழ்வார்.

(2) ''ஆயிரம் வாய்களாலும் ஆயிரம் திருப்பெயர்களைச் சொல்லி எம்பெருமானைத் துதிப்பவனும், பால் போலும் வெளுத்த உடலையுடையவனுமான ஆதிசேடன், அரங்கநாதர்பால் கொண்ட அதிகப் பற்றுக் காரணமாக

யாரேனும் கொடிய அரக்க அசுரர்கள் வந்து எம் பெருமானுக்கு இன்னலை விளைவிக்கப் போகிறார்களோ வென்று, எப்போதும் அழலை வாயினின்றும் உமிழ்ந்து கொண்டுள்ளான். செந்நிறமான அவனுடைய வாய்த் தீ அவனுடைய தலைகளின் மேற் கிளம்பி எங்கும் பரவி, 'சண்பகம் முதலான செம்மலர்களாலே ஒரு மேல் விதானம் அமைக்கப்பட்டுளதோ' என்று தோன்றுமாறு விளங்க, அத்தகைய பெரிய பெருமாளை அரவணையின் கீழ்ப் பள்ளி கொண்டருளிய தோற்றத்தில் வணங்காநின்ற அளவில் மயக்கம் மீதூறிக் கால்களும் கண்களும் சுழல நெஞ்சம் தடுமாற, அதுபோது அரங்கத்தம்மான் திருக்கோயிலில் நிற்கும் மணத்தூண்கள் இரண்டையும் பற்றிக் கொண்டு நின்று, வாய்த்தினவு தீரத் துதிக்கும் பேறு என்றைக்கு வாய்க்குமோ'' என்று ஆழ்வார் ஆவல் மீதூரப் பேசுகின்றார்.

(3) ''எல்லா வகையினும் மாட்சிமை பொருந்திய நான்முகன் தன்னுடைய நான்கு நாக்கினாலும் சொற்களைக் கூறித் துதித்து, நான்முகங்களாலும் இனிமையாக மறைகளால் துதி செய்து, அழகிய எட்டுக் கண்களினால் எல்லாப் பக்கங்களிலும் நன்றாகக் கண்டு களிக்கவும் அமைந்த செவ்விய பொன்போல் விரும்பத்தக்க வடிவுடைய தன்னுடைய தாமரைப் பூவையுடைய திருநாபிக் கமலம் விளங்கும்படி திருவரங்கத்துப் பாம்பணையிற் பள்ளி கொள்ளும் பெரிய பெருமாளுடைய திருவடியின் கீழே பூக்களையிட்டு வணங்கி அங்குள்ள அடியார்களோடு நெருங்கி வாழ்வது என்றைக்கோ'' என்கிறார் ஆழ்வார்.

(4) ''குதிரையின் வடிவங்கொண்டு தன்னைக் கொல்ல வந்த கேசி என்னும் அசுரனைக் கொன்ற கடல் போன்ற வடிவையுடையனாகிய கண்ணனை—அன்று—இந்திரன் கல் மழை பொழிந்த காலத்தில் கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கிப் பசுக்களையும் ஆயர்களையும்

காப்பாற்றியருளிய இடையர்கள் தலைவனை—அமரர்கள் தலைவனை—அழகிய தமிழ்ப் பாட்டாய் விளங்குபவனை—அழகிய வடமொழிப் பாசுரமாய் இலங்குபவனை—பற்றற்ற முனிவரர்கள் இடைவிடாது நினைக்கும் அரங்கத்துப் பள்ளி கொண்டருளும் அரங்கநாதனை நாக்குத் தடிக்கும்படி துதித்து, மலர்களிட்டு அருச்சித்துக் கைகள் கூப்பி வணங்கும் நாள் எந்நாளோ'' என்கிறார் ஆழ்வார்.

(5) ''தும்புரு நாரதர் முதலிய முனிவர்கள் பெரிய பெருமாளின் திருக்கலியாண குணங்களை இனிய இசையுடன் வீணையிலிட்டுப் பாடிக் கொண்டும், நான்முகன் நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களை ஓதிக் கொண்டும் வணங்கப், பள்ளி கொண்டிலங்கும் எம் பெருமானைக் கண்டு வணங்கி என்னுடைய பூமாலையணிந்த தலையானது அவன் திருவடியினை முடிசூடப் பெறுதலும் என்றைக்கு வாய்க்குமோ'' என்கிறார் குலசேகரர்.

(6) ''வண்டுகள் படிந்திருக்கிற தாமரைப் பூவில் தோன்றிய பிரமனும், சிவனும், இந்திரனோடு கூட மற்றைத் தேவர்களின் திரளும், அரம்பை முதலிய தேவ மாதரும், மற்றுமுள்ள தெளிந்த ஞானத்தையுடைய முனிவர்கள் குழாமும், ஒருவர்க்கொருவர் நெருக்கித் தள்ளி, பார்க்குமிடமெல்லாம் மலர்களை இறைத்துக் கொண்டு வந்து சேர்தற்கு இடமான—தேன் மிக்க மலர்களையுடைய சோலைகளை யுடைத்தான கோயிலிலே திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்டு திருக்கண் வளர்ந்தருளும் கடல் போலும் வடிவினரான பெரிய பெருமாளுடைய செந்தாமரை போன்ற திருக்கண்களையும், ஒளியையுடைய சந்திரன் போன்ற திருமுக மண்டலத்தையும் கண்டு என்னுடைய மனமானது மிகவும் உருகுகின்ற நாள் என்றைக்கு வாய்க்குமோ'' என்று ஏங்குகின்றார் ஆழ்வார்.

(7) "கொடுமையால் விளங்கும் மனத்தை யொழித்து, வஞ்சனைகளைப் போக்கி, கொடிய புலன் களை அடக்கி, மேன்மேலும் துன்பந் தரும் பழவினைகளை வேரறுத்து, ஐந்து பொழுதுகளிலும் ஆண்டவனை வணங்கி வாழும் வைணவ பக்தர்களுக்குக் கதியாக விளங்கும்—காவிரியால் அழகுண்டான திருக்கோயிலிலே பாம்பணையில் பள்ளி கொள்ளும் அழகு விளங்கா நிற்கும் மாயோனை எனது கண்கள் கண்டு தொழுது, ஆனந்தக் கண்ணீர் ததும்பும்படி நிற்பது என்றைக்கோ" என்று அகநெகிழ்ந்து ஆழ்வார் உரைக்கின்றார்.

(8) "அம்புகளோடு கூடிய பெரியதான சார்ங்கம் என்னும் வில்லும், வளைந்த நல்ல பாஞ்சசன்னியம் என்ற சங்கமும், எதிரிகளைக் கொலை செய்யவல்ல சக்கரமும், பகைவர்களுக்குக் கொடுந்தொழில் புரிகின்ற கௌமோதகி என்னும் கதையும், வெற்றி பெற்று ஒளி மிக்க நந்தகம் என்னும் வாளும், காற்றுப் போலக் கடிய நடையையுடைய பெரிய திருவடி என்னும் பெயரையுடைய கருடாழ்வாரும் ஆகிய இவையெல்லாம் நாற்புறமும் சூழ்ந்து கொண்டு பெரிய பெருமாளுக்குக் காவலாக இருக்க, மீன்கள் நிரம்பிய விசாலமான கழனிகளாலும் சோலைகளாலும் சூழப்பட்ட திருவரங்கத்துப் பாம் பணையில் பள்ளி கொள்ளும் எம்பெருமானை கொடிய வினையேனாகிய நான் கண்டு வணங்கி மகிழ்ந்து வாழும் நாள் என்றைக்கு வாய்ப்பதோ" என்கிறார் ஆழ்வார்.

(9) "ஒரு நாளும் திருப்தி கொள்ளாத ஆசைகொண்ட மனத்தினரான வைணவ அடியார் குழாத்துள் கூடி, எம் பெருமானது பெருமைகள் பலவற்றையும் பரக்கப் பாடி, அவ்வளவிலும் அமையாத மனக் களிப்போடு அழுத கண் களினின்றும் நீர்த்துளிகள் மழைபோல் பெருகி வர, எம் பெருமானை நினைத்து மனமுருகித் துதித்து, எப்போதும் இசைக் கருவிகளினின்றும் எழும் இன்னோசை கடலோசை போன்று முழங்கும் திருவரங்கத்தில் பாம்பணையில் பள்ளி

கொள்ளும் பகைவரோடு பொருவதையே தொழிலாக வுடைய திருவாழியினைக் கைக்கொண்ட எம்பெரு மானைக் கண்டு வணங்கித் தலை கால் தெரியாமல் துள்ளிக் கூத்தாடி பூமியிலே உடம்பு தெரியாமல் புரளும் நாள் என்று வாய்க்குமோ'' என்கிறார் ஆழ்வார்.

(10) ''தேவர்கள் வாழவும், மண்ணுலகில் உள்ளார் வாழவும், மிக்க துன்பத்தை விளைவிப்பதான பாவங்கள் நீங்கவும், துக்கம் கலவாத சுகம் வளரவும், எப்போதும் மனத்தில் மகிழ்ச்சியை இருப்பிடமாகக் கொண்ட வைணவ பக்தர்கள் வாழவும், திருவுள்ளத்தில் உகப்போடு தெற்குத் திசை இலங்கை நோக்கிப் பள்ளி கொண்டருளா நின்ற அரங்கநாதனுடைய திருச்சந்நிதி முற்றத்திலே திளைக் கின்ற பாகவதர்களுடைய குழாத்துள் சேர்ந்து அடியேனும் அவர்களைப் போலே திளைத்து வாழ்ந்திருக்கும் காலம் எப்போது வந்து வாய்க்குமோ'' என்று குலசேகரர் உளங் குழைகின்றார்.

(11) மணற் குன்றுகள் விளங்கா நின்ற கரையை யுடைய காவிரியின் நடுவிடத்து, திருவரங்கத்து அரவணை யில் பள்ளி கொள்ளும் கடல் போல் விளங்குகின்ற கரிய திருமேனியையுடைய பெரிய பெருமாளை கண்கள் திருப்தியடையும்படி கண்டு வணங்கி மகிழ வேண்டும் என்று ஏற்பட்ட ஆசையால் வெண்கொற்றக் குடையும், வீரம் மிக்க சேனையும், வெற்றியும் ஒளியும் பொருந்திய வாளையும் உடையவருமான—மதுரையில் உள்ளவர்க்குத் தலைவரும், கொடைக் குணம் உடையவருமான குலசேகரப் பெருமாள் அருளிச் செய்த தமிழ் நடையானது நன்கு விளங்கா நின்ற தமிழில் அமைந்த இப் பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் நலம் நல்கும் நாராயண னுடைய திருவடிகளில் சேரப் பெறுவர்.

## இரண்டாந் திருமொழி—தேட்டருந்திறல்

'திருமால் வழிபாட்டினும் திருமாலின் அடியார் வழிபாடு சிறந்ததெனக்' குலசேகரர் எண்ணினர் என்றும்,

'உள்ளும் புறமும் ஒன்றுபட்டு, உயிர்களிடை ஆண்டவனைக் கண்டு, உவந்து, வழிபாடு செய்வதைத் திருமாலின் அடியவரிடைப் பரப்பியவர் குலசேகரரே ஆவர்' என்றும் அறிஞர் கூறுவர்.[47]

திருவரங்கப் பெருமானது திருமுற்றத்து மெய்யடியார் பால் குலசேகரர் கொண்ட அளவு கடந்த ஆராத மனக் காதலை இரண்டாந் திருமொழி இனிதுறக் கிளத்து கின்றது.

## உள்ளுறை பொருள்

(1) ''தன் முயற்சியால் தேடிப் பெறுதற்கு அருமை யானவனும், வலிவைக் கொடுப்பவனும், தேன் போல் இனிப்பவனும், தென் திருவரங்கத்தில் வாழ்பவனும், பெரிய நாச்சியார் நீங்காது உறையும் செவ்வி பெற்றி ருக்கிற வனமாலையை அணிந்துள்ள திருமார்பினையுடை யவனுமான அரங்கநாதனை வாழ்த்தி, அவன் திறத்துப் பித்தேறிய மனத்தினராய், ஆடிப்பாடி அகமகிழ்வதிலே ஒருப்பட்டு, அவன் திருப்பெயர்களை வாய்விட்டுக் கதறிக் கூப்பிட்டு இளைப்படைகின்ற உண்மையான அன்புடைய பாகவதர்களின் குழுவினைக் கண்டு வணங்கப் பெற்றே னாயின் அதுவே யான் கண் படைத்ததற்குப் பயன் ஆகும்'' என்கிறார் குலசேகரர்.

(2) ''தாமரைப் பூவிற் பிறந்த பிராட்டியினது திருத் தோள்களைத் தழுவி முயங்கியதும் புகரையுடைய அம்பினால் நீண்ட மாமரத்தினைத் துளை செய்து தள்ளி யதும், பசுக் கூட்டங்களை மேய்த்ததும் ஆகிய செயல் களையே இடைவிடாது நினைந்து ஆடிப்பாடி 'அரங்கனே' என்று அவன் திருநாமங்களைச் சொல்லிக் கூப்பிடுகின்ற தொண்டர்களின் திருவடித் தூள்களிலே நாம் ஆடப் பெற்

47. திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் — குல சேகரர் ப. 46, 47.

றாற் பின் கங்கையாற்றிலே நீர் குடைந்து ஆடும் ஆசை யானது எற்றுக்கு'' என்று கேட்கிறார் ஆழ்வார்.

(3) ''நப்பின்னை பொருட்டு ஏழு இடங்களை வலி யடக்கியதும், வராக அவதாரம் எடுத்துப் பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்ததும், முன்பு சக்கவர்த்தித் திருமகனாய்ப் பிறந்து பகைவரை வேரோடு கெல்லி யெறிந்ததும், திருவிக்கிராமவதாரம் எடுத்து உலக ளந்ததும் ஆகிய செயல்களை வாயாற் சொல்லி வாய் விட்டுப் பாடி, காவிரியாறு நீர் சுரப்பது போன்று கண்களில் நீர் பெருக்கி, அரங்கன் திருக்கோயில் முற்றத்தைச் சேறாக்குகிற தொண்டர்களின் திருவடிகளால் மிதிக்கப் பெற்றுத் துகையுண்ட அழகிய சேற்றை என் நெற்றிக்குத் திலகமாகக் கொள்வேன்'' என்று குலசேகரர் குன்றாக் களிப்புடன் கூறுகின்றார்.

(4) ''தோய்த்துக் குளிர்ந்த தயிரையும், வெண்ணெ யையும், பாலையும் ஒரே காலத்தில் அமுது செய்த அளவில் அன்னை யசோதைப் பிராட்டி அக்களவினைப் பார்த்துக் கோபித்துப் பிறகு அவளாலே பிடித்துக் கட்டப் பட்ட தோள்களையுடைய எமக்குத் தலைவனான அரங்க நாதனுக்கு ஆட்பட்டவர்களாக நாக்குத் தடிக்கும்படி 'நாராயணா' என்று கூப்பிட்டு, உடல் காப்பேறும்படி விழுந்து வணங்கித் தோத்திரம் செய்து மகிழ்கின்ற வைணவத் தொண்டர்களுடைய திருவடிகளை என் மன மானது துதித்து அவர்களுக்கே பல்லாண்டு பாடும்'' என்கிறார் ஆழ்வார்.

(5) நன்கு சிலைக்கும் ஏழு காளைகளின் கொம்பு களை முறித்தவனாய், போர் செய்ய வந்த 'காளிங்கன்' என்னும் பாம்பினை அடக்கியவனாய், கல்லினால் இயன்று ஒளிமிகுந்த பெரிதான மதில்களாலே சூழப்பட்ட தென்னரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனான அரங்க நாதனாகிற உடம்பில் வில்லோடு கூடிய ஒரு காளமேக

மானது தங்கள் மனத்தில் நிலைத்து விளங்கப் பெற்ற மயிர்க்கூச்செறியும் மேனியுமுடைய வைணவர்களையே என் நெஞ்சானது நினைந்து மயிர்க் கூச்செறியப் பெற்றது'' என்கிறார் ஆழ்வார்.

(6) ''முதலாயும் முடிவாயும் எல்லாமாயும் அற்புத மாயும் விளங்கும் வானவர்தம் தலைவனான அரங்கநாத னுடைய சிறந்த மலர் போன்ற திருவடிகளைச் சூடும் அன்பு இல்லாத பாவிகளும் உய்யும் பொருட்டு எல்லாத் தேயங்களிலும் சென்று சுற்றி, குற்றமற்ற நல்வழிகளைக் காட்டி நமக்குத் தலைவனான அரங்கநாதனுக்கே பக்தி பூண்டிருக்கின்ற தொண்டர்க்கு என் மனமானது எந்தப் பிறவியிலும் அன்பு பூண்டிருக்கும்'' என்று புகல்கின்றார் குலசேகரர்.

(7) ''மேகங்களின் திரளையொத்த திருமேனியையும், நன்கு சுடர்விடும் அழகினையும், முத்துகள் போல் வெளுத்த புன்சிரிப்பையுடைய சிவந்த திருப்பவளத்தையும் ஆரங் களையும் அணிந்த மார்பினையுடையவனுமான அரங்க நாதனாகிற ஒரு பரஞ்சோதியை அடிபணிந்து கண்ணுங் கண்ணீருமாய் நிற்கும் வைணவர்களின் இரண்டு திருவடி களுக்கு என் மனமானது ஒப்பற்ற அன்பைச் செலுத்தும்'' என்று கூறுகின்றார் குலசேகரர்.

(8) ''திருப்பாற் கடலில் பள்ளிகொள்பவனும் நறுந்தேன் மிக்க துழாய் மாலையை யணிந்தவனும், பெரிய திருமார்பையுடையவனும், செந்தாமரை மலர் போலும் கண்ணை யுடையவனுமாகிய அரங்கநாதன்மேல் மையல் கொண்டு, இருந்த விடத்தில் இருக்க வொட்டாமையால் எழுந்து கூத்தாடி வாயாரப் பாடித் திவ்ய தேசங்கள் தோறும் சென்று வந்து அரங்கன்பால் பித்தேறித் திரிகின்ற வைணவர்களுடைய வாழ்வுக்கு என் மனம் மயங்கிக் கிடக்கின்றது'' என்கிறார் ஆழ்வார்.

(9) "ஆனந்தக் கண்ணீர் இடைவிடாது சொரியவும், உடல் மயிர்க்கூச்செறியவும், நெஞ்சு தளர்ந்து களைத்துப் போய் நிலை தளர்ந்து கூத்தாடி, நின்றவிடத்து நில்லாமல் ஆட்டங்களாடிப் பாட்டுகள்பாடி வணங்கி, எனக்குத் தந்தையும் தலைவனுமான அரங்கநாதனுக்கு அடியவர் களாய், அவனுக்கே பித்தேறித் திரிகிறவர்கள் பைத்தியக் காரர்கள் அல்லர். பக்தியில்லாத மற்ற பேர்கள் எல்லாம் பைத்தியக்காரர்கள் தான்" என்று குலசேகரர் மொழி கின்றார்.

(10) சிறந்த தாமரை மலரிற் பிறந்த பிராட்டிக்குக் கொழுநனான அரங்கநாதனுடைய உண்மையான பக்தர் களுடைய எல்லையற்ற அடிமைத் திறத்தினில் எப்போதும் பொருந்திய திருவுள்ளத்தை யுடையவரும் கொல்லி நகர்க்கு அரசரும், மதுரைக்கு அரசரும், உறையூர்க்கு அரசரு மான குலசேகராழ்வாருடைய சொல்லால் அமைந்த இனிய தமிழ்ப் பாடல்களை ஓதவல்லவர்கள் தொண் டருக்குத் தொண்டர்கள் ஆவர் என்பது உறுதி.

## மூன்றாந் திருமொழி—மெய்யில் வாழ்க்கை

திருமாலடியார் திறத்தில் எல்லையற்ற காதல் கொண்டிருந்த குலசேகரர், அரங்கத்தம்மான் அடியவ ரல்லாத உலகினரோடு தமக்குச் சிறிதுந் தொடர்பின்மை யையும், திருமால்மாட்டுத் தமக்குள்ள பெரிய ஈடு பாட்டையுங் கூறுவன 'மெய்யில் வாழ்க்கை' எனப் பெரிய மூன்றாந் திருமொழிப் பாசுரங்களாகும்.

## உள்ளுறை பொருள்

(1) "பொய்யான வாழ்க்கையை மெய் என்று கொண்டு வாழும் இவ் வுலகத்தாரோடு யான் சேர்வ தில்லை. 'ஐயனே, அரங்கா' என்று நின் திருப்பெயர் களைச் சொல்லி அழையா நின்றேன். என்னிடத்தில்

பரிவு காட்டும் திருமாலுக்கே யான் ஆராத காதல் கொண்டொழிந்தேன்'' என்று குலசேகரர் கூறுகின்றார்.

(2) நூல் போலும் இடையையுடைய பெண்டிரோடு பொருந்தியிருக்கிற இவ்வுலக மனிதரோடு யான் கூடுவது இல்லை. கூத்தாடி 'அரங்கா' என்று கூப்பிட்டு, என்மேல் பற்று வைத்திருக்கும் எம்பெருமான்மேற் பெரிதும் காதல் கொண்டேன்'' என்று ஆழ்வார் கழறுவர்.

(3) ''மன்மதனுடைய அழகிய கொடிய வில்லுக்கு ஆட்பட்டுத் திரிகிற இப்பூமியிலுள்ளாரோடு யான் கூடுவது இல்லை; முத்தாரத்தைத் திருமார்பிலே அணிந்துள்ளவனாய் அளவிட முடியாத குணங்குறிகளுடையவனாய் எங்கும் வியாபித்திருப்பவனாய், அடியவர்களை நரகத்தில் சேராதபடி காத்தருள்பவனான அரங்கத்தம்மான்மாட்டுப் பித்தேறி நின்றேன்'' என்று ஆழ்வார் கிளத்துவர்.

(4) ''உணவே, உடையே என்று கண்டவிடமெங்கும் ஓடித் திரிகிற இம் மண்ணுலகத்தாரோடு யான் கூடுவது இல்லை. பரமபதத்திலே வாழ்பவனும், கல் நெஞ்சுடைய பூதனையின் முலையை அமுது செய்த வாயையுடையனுமான அரங்கநாதன் விஷயத்தில் பைத்தியம் பிடித்தவனாயிரா நின்றேன்'' என்கிறார் ஆழ்வார்.

(5) ''குற்றமற்ற நல்வழி தெளிவாக இருக்கவும், அவ்வழியில் போகாமல், நல்வழிக்கு எதிரானவற்றைச் செய்வதனையே விரதமாகக் கொண்டிருக்கும் அநீதியாளர்களோடு யான் கூடுவது இல்லை. உலகங்கட்கெல்லாம் முதல்வனாய் ஆயர்குடியில் கிருஷ்ணனாய் அவதரித்து அழகிய தாமரைப் பூவில் அவதரித்த பிராட்டியின் மணவாளனான அரங்கநாதன் திறத்தில் பித்தேறி நிற்கின்றேன்'' என்று ஆழ்வார் அருளிச் செய்கிறார்.

(6) ''என்னைப் போல இறைவன்மாட்டு அன்பு செலுத்தாதவரோடு யான் கூடமாட்டேன். மேலுலக

ஏதேனும் ஓராற்றாற் தொடர்புடைய பிறப்பொன்றைத் தாம் விரும்பிவேண்டுதலையும் 'ஊனேறு செல்வம்' எனப் பெயரிய நான்காந் திருமொழிப் பாசுரங்கள் நலமுற நவில்கின்றன.

## உள்ளுறை பொருள்

(1) "நப்பின்னைப் பிராட்டியின் பொருட்டு ஏழு எருதுகளை வென்றவனான எம்பெருமானுக்கு அடித்தொண்டு செய்வதையே யான் வேண்டுவதல்லாமல், சதை வளர்ந்து தடிப்பதாகிற செல்வத்தையுடைய இம் மனிதவுடம்பெடுத்துப் பிறத்தலை யான் விரும்பமாட்டேன். அன்றியும் வளைந்திருக்கிற பாஞ்ச சன்னியம் என்னும் சங்கினை இடத்திருக்கையிலே யுடையவனான எம்பெருமானுடைய திருவேங்கடமலையில் திருக்கோனேரி என வழங்கப்படும் அழகிய திருக்குளத்தில் வாழ்கிற நாரையாகவாவது பிறக்கக் கடவேன்" என்கிறார் குலசேகர ஆழ்வார்.

(2) "அழியாத செல்வத்தையுடைய அரம்பையர்கள் என்னைச் சூழ்ந்து நிற்க மேலுலகத்தை அரசாளுகின்ற செல்வத்தையும், இம் மண்ணுலகத்தை ஆளுகின்ற அரசாட்சியையும் அரிய முயற்சியின்றிக் கிடைப்பதாயினும் யான் விரும்பமாட்டேன். தேன்மிக்க மலர்கள் நிறைந்துள்ள சோலைகளையுடைய திருவேங்கட மலையிலிருக்கிற சுனைகளிலே ஒரு மீனாகப் பிறக்கத்தக்க பேற்றினை யான் பெறக் கடவேனாக" என்கிறார் ஆழ்வார்.

(3) "திரித்துவிட்ட சடையையுடையவனான சிவனும், நான்முகனும், தேவேந்திரனும் நெருக்கி முயன்றும் உள்ளே புகுவதற்கு எளிதாயிராத பூலோக வைகுண்டமாகிய திருமலையிலுள்ள திருக்கோயிலின் நீண்ட திருவாயிலிலே, மின்னலை வளைத்தாற் போலச் சோதிமயமாய் விளங்குகின்ற வட்ட வடிவமான சக்ராயுதத்தையுடைய திருவேங்

கடமுடையான் வாய் நீர் உமிழ்கின்ற தங்க வட்டிலைக் கையிலேந்திக் கொண்டு அந்தரங்க அடிமைத் தொண்டருடனே யானும் உள்ளே புகும் பேற்றினைப் பெறக் கடவேன்'' என்கிறார் ஆழ்வார்.

(4) ''ஒளியுமிழும் பவளக்கொடிகளைக் கரையிலே கொணர்ந்து கொழித்து அலைகள் உலாவுகிற குளிர்ந்த திருப்பாற் கடலிலே அறிதுயில் (யோக நித்திரை) செய்தருள்கின்ற மாயோனாகிய எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளைக் கண்டு வணங்கும்படியாக இசையையே பேச்சாகக் கொண்டிலங்கும் வண்டுகளின் கூட்டங்கள் பண்ணிசை முழக்கும் திருமலையிலே சண்பக மரமாய் நிற்கும் பேறுடையவனாகக் கடவேன்'' என்கிறார் குலசேகரர்.

(5) ''தன்னைக் கண்டார்க்கு அச்சத்தால் நடுக்கத்தை விளைவிக்கின்ற மதங்கொண்ட யானையின் கழுத்தின் மீது வீற்றிருந்து நானாவித சுகங்களையும் பொருந்தி அனுபவிக்கும்படியான செல்வத்தையும், அதற்குக் காரணமான அரசாட்சியையும் யான் விரும்பமாட்டேன். எனது தலைவனும் எல்லா வுலகங்கட்குந் தலைவனுமான திருவேங்கடத்தானுடைய அழகிய திருமலையிலே புதராய் நிற்கும்படியானதோர் பேற்றினை உடையவனாகக் கடவேன்'' என்கிறார் ஆழ்வார்.

(6) ''மின்னல் போலும் நுண்ணிய இடையை உடையவர்களாகிய ஊர்வசியும் மேனகையும் போலும் அழகியவர்களான மகளிரின் பாட்டும் கூத்துமான அவற்றை யான் விரும்பவில்லை. வண்டுகளின் கூட்டம் 'தெனதென' என்று ஆளத்தி வைத்து இசை பாடப்பெற்ற திருவேங்கட மலையிலே அப்படிப்பட்ட பொன்மயமான சிகரமாவதற்குரிய அருமையான தவத்தையுடையவனாகக் கடவேன்'' என்கிறார் ஆழ்வார்.

(7) ''ஆகாயத்தைத் தனக்கு இடமாகக்கொண்டு விளங்குகின்ற பூரணசந்திரன் போன்ற ஒற்றை வெண் கொற்றக்குடையின் கீழ் மன்னவர்கட்கெல்லாம் மன்னவ னாகப் பெருமை தோன்ற வீற்றிருந்து அனைவராலும் கொண்டாடப் படுவதற்குக் காரணமான செல்வத்தை யான் ஒரு பொருளாக மதிக்க மாட்டேன். தேன் நிறைந்த மலர்கள் மிக்குள்ள சோலைகளையுடைய திருமலையின் மேல் ஒரு காட்டாறாகப் பெருகும்படியான கருத்தினை யான் உடையவனாக இருக்கின்றேன்'' என்று தம் கருத்தை வெளிப்படுத்துகின்றார் குலசேகரர்.

(8) ''பிறைமதி சூடிய பெம்மானாகிய சிவனும், பிரமனும், இந்திரனும் தத்தமது தகுதிக்குத் தக்கபடி செய் கின்ற பெரிய யாகங்களின் பயனாக அவர்களுடைய குறை யைத் தீர்த்து, அவர்களது வேண்டுகோள்களை நிறை வேற்றி வைப்பவனும்,வேதங்களிற் பரம்பொருளாகக் கூறப் படுபவனுமான எம்பெருமானுடைய பரிமளம் வீசும் மிகக் குளிர்ந்த சோலைகளையுடைய திருவேங்கட மலைமேல் போகிற வழியாக் கிடக்கின்ற நிலையை உடையவனாகக் கடவேன்'' என்று குலசேகரர் தம் விருப்பத்தை வெளியிடு கின்றார்.

(9) ''செடிபோல் அடர்ந்துள்ள கொடிய வினை களைப் போக்கியருள்கிற பெருமானே! பெரியோனே! திருவேங்கடமுடையானே! உனது சந்நிதியின் உள் வாச லிலே பாகவதர்களும் மற்றைத் தேவர்களும் அரம்பை மாதரும் இடைவிடாது இயங்கப்பெற்ற படியாய்ப் பொருந்தி உனது பவளம் போன்ற திருவவதாரத்தைக் காண்பேனாகக் கடவேன்'' என்று ஆழ்வார் குறிப்பிடு கின்றார்.

(10) ''மேலுலகங்களை யெல்லாம் ஒரு கொற்றக் குடையின் நிழலிலே அரசாண்டு, ஊர்வசியினுடைய அழகிய பொன்னுடையணிந்த அல்குலை அடையப் பெறினும் யான் அதனை விரும்பமாட்டேன். சிவந்த பவளம் போன்ற

வாயை யுடையவனான எம்பெருமானுடைய திருவேங்கடம் என்கிற திருப்பெயரையுடைய அழகிய திருமலையின்மேல் ஏதேனுமொரு பொருளாகப் பிறக்கக் கடவேன்'' என்று ஆழ்வார் கூறிக் கொள்கிறார்.

(11) பகைவர்களைக் கொல்லுந் தொழிலைப் பயின்ற கூர்மையான வேலாயுதத்தையுடைய குலசேக ராழ்வார், நிலைபெற்ற குளிர்ச்சியுள்ள சாரல்களையுடைய வடவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கிற பெருமானது பொன்போற் சிறந்த சிவந்த திருவடிகளைக் கண்டு வணங்கு வதற்கு ஆசைப்பட்டுத் தொழுது அருளிச் செய்த-ஆராய்ந்த நூல்களிற் கூறிய இலக்கணத்துக்கு இசைந்த தமிழ்ப் பாடலைக் கற்று வல்லவர் அப்பெருமான் திருவுள்ளத்துக்கு இனிய பக்தர்களாவர் என்று முடிக்கிறார் குலசேகரர்.

## ஐந்தாந் திருமொழி — தருதுயரம் தடாயேல்

திருமாலை அல்லாது தமக்கு வேறு ஓர் புகலிடமில்லை என்பதனைக் குலசேகராழ்வார் பல திருட்டாந்தங்கள் மூலம் இத்திருமொழியில் வெளியிடுகின்றார். ஒவ்வொரு பாடலிலும் அமைந்துள்ள உவமைகள் நயஞ் சிறந்தன வாயும், எடுத்துக்கூற வந்த பொருளை இனிது விளக்கு வனவாயும் உள்ளன. இத்திருமொழி மலைநாட்டில் 'திருமிற்றக்கோடு' என்று இன்று வழங்கப்படும் திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள திருமால் மீது பாடப் பெற்றன வாகும். இவ்வித்துவக்கோடு 'பட்டாம்பி' என்ற ஊரின் பக்கத்தோடும் பாரதப் புழையின் தென் கரையில் உள்ளதும் 'திருமிற்றக் கோடு' எனத் தற்போது வழங்கப் படுவதுமான திருமால் தலம் என்பர். ஆனால் மகா வித்துவான் மு. இராகவையங்கார் அவர்கள் "சேரரது பழைய தலைநகரமான கருவூரில் ஆமிராவதி நதிப் பக்கத்துள்ள திருமால் கோயிற் பகுதி இன்றும் வித்துவக் கோடு என்ற வழக்கு உடைத்தாயிருத்தலால், அதனையே

கொங்கர் கோனான ஆழ்வார் குறிப்பிட்டவர் எனல் பொருந்தும்'' எனக் குறிப்பிடுவர்.[48]

## உள்ளுறை பொருள்

(1) ''நறுமணங் கெழுமிய மலர்கள் நிறைந்த சோலைகளாலே சூழப்பட்ட திருவித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கிற தலைவனே! நீயே எனக்குத் தந்த இத் துன்பத்தை நீயே களைந்திடாவிட்டாலும் உனது திருவடிகளேயன்றி எனக்கு வேறு புகலில்லை. பெற்ற தாயானவள் பெருங் கோபங் கொண்டதனால் தனது குழந்தையை வெறுத்துத் தள்ளினாலும் பின்பும் அத்தாயினுடைய கருணையையே கருதி அழுகின்ற இளங்குழந்தையை யொத்திரா நின்றேன்'' என்கிறார் ஆழ்வார்.

(2) ''ஆகாயத்தை அளாவிய மதில்கள் எப்புறத்தும் சூழப் பெற்ற திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியிருக்கிற தலைவ! கணவனானவன் பார்ப்பவர்கள் அனைவரும் இகழத்தக்க செயல்களையே செய்தாலும், தன்னை மணந்துகொண்டவனான அக்கணவனையே யன்றி வேறொரு புருஷனை நினைப்பதுஞ் செய்யாத உயர்ந்த குலத்துப் பிறந்த கற்புடைய மகளைப் போல, என்னை அடிமை கொண்டவனான நீ, என் குறையைச் சிறிதளவு கூட நீக்கியாளாமற் போனாலும், ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய உனது திருவடிகளையே சரணமாகக் குறிக்கொள்வேன்'' என்கிறார் குலசேகரர்.

(3) ''மீன்களெல்லாம் தாம் வசிப்பதற்கு மிகவுந் தகுதியான இடமென்று ஆசையோடு பார்க்கிற நீர்வளம் மிக்க விசாலமான கழனிகள் சூழ்ந்த திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமானே! அடியேன்பால்

---

48. சேரவேந்தர் செய்யுட்கோவை II பாகம் ப. 21. ஆழ்வார்கள் காலநிலை ப. (67-68).

நீ அருள் நோக்கம் செய்யாதிருந்தாலும் உன்னைச் சரணாகப் பொருந்துதலை விட்டு வேறொருவரைச் சரண் எனப் பொருந்தமாட்டேன். குடிமக்களைக் காப்பதற் கென்று மாலையணிந்துள்ள மன்னன் அதற்கேற்றபடி தான் கவனித்துப் பாதுகாவாமல் எத்தகு கொடுமையான துன்பங்களைச் செய்தாலும் அவனுடைய செங்கோலையே எதிர்பார்த்து வாழ்கிற குடிமக்களை ஒத்திருக்கின்றேன்'' என்கின்றார் ஆழ்வார்.

(4) ''வித்துவக்கோட்டு அம்மா! மருத்துவன் கத்தி யைக் கொண்டு அறுத்தாலும், ஊசியைக் காய்ச்சிக் சூடு போடுதலுமாகிய அறுவை சிகிச்சைகளைச் செய்தாலும் அம் மருத்துவனிடத்து நீங்காத அன்புடைய நோயாளி யைப் போல் உன் மாயையினால் நீ, நீங்காத துன்பத்தை எனக்கு விளைவித்தாலும், உனது அடியவனான நான் அவ் வடிமைத் திறம் முற்றும் வந்தெய்துவதற்காக உன்னுடைய கருணையையே நோக்கியிரா நின்றேன்'' என்று உள்ளமுருக மொழிகிறார் ஆழ்வார்.

(5) ''பயங்கரமான கண்களையுடைய வலிய குவலயா பீடமென்னும் யானையைக் கொன்றவனே! வித்துவக் கோட்டு அம்மானே! உன் இணையடிகளையே நான் புகலிடமாக அடைவது அல்லாமல் வேறு யாரிடத்துச் சென்று யான் உய்வேன்? அலையெறிகிற கடலினிடையிலே நான்கு திசையினும் சென்று பார்த்து எங்கும் கரையைக் காணாமல் திரும்பிவந்து தான் முன்பு பொருந்திய மரக் கலத்தினுடைய பாய் மரத்தின் மீது சேர்கிற பெரியதொரு பறவையை யொத்திரா நின்றேன்'' என்கிறார் ஆழ்வார்.

(6) ''வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமானே! செந்நிறமுடைய நெருப்பு தானாக அருகில் வந்து வெப்பத்தைச் செய்தாலும் செந்தாமரைகள் வானத்தில் தோன்றுகிற வெவ்விய கிரணங்களையுடைய சூரியனுக்கு மலருமேயல்லாது நெருப்புக்கு மலரமாட்டா;

அனுபவித்தே தீர வேண்டியவையான கொடிய என் பாவங்களைத் தீர்த்தருளாதொழிந்தாலும் உனது எல்லை யற்ற உத்தம உயர் குணங்களுக்கேயல்லாமல் வேறொன்றுக் கும் யான் நெஞ்சுருக மாட்டேன்'' என உறுதியுடன் மொழிகிறார் ஆழ்வார்.

(7) ''வித்துவக்கோட்டில் உறைகின்ற எம்பெருமானே! மேகமானது எவ்வளவு காலம் மழை பொழியாமல் ஒழியினும் பசுமை தாங்கிய பயிர்கள் கருநிறங்கொண்டு வான் வெளியில் தோன்றுகின்ற பெரிய மேகங்களையே எதிர்பார்த்திருக்கும். அப் பயிர்கள் போல, தவறாது அனுபவிக்கப்பட வேண்டிய என் துன்பங்களை நீ துடைக்காமல் என்னைக் கைவிட்டாலும் உன் அடியவனான நான் என் மனத்தை உன்னிடத்திலேயே மிகவும் செலுத் துவேன்'' என்று ஆழ்வார் அகங்குழைந்து பாடுகின்றார்.

(8) ''மிகுதியாய் விளங்குகிற காளமேகம் போன்ற கரிய திருநிறமுடையவனே! வித்துவக்கோட்டு அம்மா! புண்ணிய வடிவானவனே! நீர்திரண்டு மிக்கோடும் ஆறு களெல்லாம் கண்ட விடமெங்கும் பரவியோடி இறுதியில் ஆழ்ந்த கடலிலே சென்று சேர்தல் அல்லது மற்றோரிடத் திலே புகுந்து நிற்கமாட்டா. அவ்வாறுகள் போல என் நெஞ்சினுள்ளே புகுந்து விளங்குகிற உன் மேன்மைகள் தவிரப் பிறிதோரிடத்தில் ஆழ்ந்திடேன்'' என மொழி கிறார் குலசேகரர்.

(9) ''மிக்க ஒளியையே கொண்டுள்ள சக்ராயுதத்தை யுடைய வித்துவக்கோட்டம்மா! உன்னையே விரும்பி, மிக்க செல்வத்தை விரும்பாதவனையே தானாகவே வந்து சேர விரும்புகிற செல்வமே போல, உன் மாயையினால் நீ என்மாட்டுப் பரிவு காட்டாயாயினும் உனது அடியவனான நான் உன்னையே அடைய விரும்பி நிற்பேன்'' என்று ஆழ்வார் குறிப்பிடுகின்றார்.

(10) வித்துவக்கோட்டு அம்மா! நீ என்னை விரும்பா விடினும் வேறு யாரிடத்திலும் யான் போய்ச் சரணமடைய

மாட்டேன் என்று தம் அளவிட முடியாத அக்க் காதலை வெளியிட்டு, அவ் எம்பெருமானது திருவடிகளிலேயே பற்று மிகக் கொண்டு வெற்றியைத் தரும் வேலாயுதத்தையும் சேனையையுமுடையவரான குலசேகரர் அருளிச் செய்த நல்ல தமிழ்ப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் கொடிய பாவங்கள் செய்திருந்தாலும் நரகத்திற் சேர மாட்டார்கள்.

இவ்வாறு ஐந்தாந் திருமொழியினைத் தலைக்கட்டு கிறார் குலசேகரர்.

## ஆறாந் திருமொழி—ஏர்மலர்ப் பூங்குழல்

கிருஷ்ணாவதாரத்தில் ஆயர்குலத்து வந்து அவதரித்த கண்ணபிரானிடம் காதல் மீதூரப் பெற்ற ஆயர்குல மகளிர் அப்பெருமானுடன் ஊடல் கொண்டு உரைத்தனவற்றை ஆறாந் திருமொழி அழகுற எடுத்துக் கூறுகின்றது.

## உள்ளுறை பொருள்

(1) ''கண்ணபிரானே! அழகிய மலர்களை யணிந்த நறுமணம் நிறைந்த கூந்தலையுடைய இடையர் குலப் பெண்கள் எத்தனையோ பேர்களிருக்கப் பெற்ற இந்த ஆயர்பாடியில் உன்னுடைய மார்போடு அணைவதற்கு ஆசையின்மையை நன்றாக அறிந்து வைத்திருந்தும் உன்னுடைய பொய்யான வார்த்தைகளைக் கேட்டு அவற்றை மெய்யென நம்பி மயங்கி, மிக்க மழை போன்று பெய்கிற பனியால் ஏற்பட்ட குளிரிலே அகப்பட்டு, யார் என் செய்கையைப் பார்த்து விடுகிறார்களோவென்று கூச்சமடைந்து நடுங்கிக்கொண்டு யமுனையாற்றங்கரை யோரத்தே பெரியதொரு மணற் குன்றிலே உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டு பொழுது விடியுமளவும் அங்கேயே காத்து நின்றேன்'' என்று ஆய்ச்சி ஒருத்தி கூறுவதாக இப் பாடல் அமைந்துள்ளது.

(2) ''கண்ணபிரானே! என் வீட்டிற்குக் கீழண்டை வீட்டில், கயல் போன்று அழகிய கண்களையுடையளான பெண் ஒருத்தி தனியே தயிர் கடைந்து நிற்பதைக் கண்டு, அவளை வசப்படுத்துதற்கு அதுவே தக்க சமயமென்று நிச்சயித்துக் கொண்டு, 'நானும் உன்னோடு கூட விரைவாக இத் தயிரைக் கடைகிறேன்' என்று வாயாற் சொல்லித் திருட்டுப் பார்வை பார்த்து, அவளருகே சென்று சேர்ந்து, வண்டுகள் மொய்க்கும் மலர்களை யணிந்த மயிர் முடியானது அவிழ்ந்து அசையும்படியாகவும், ஒளி பொருந்திய முகமானது வியர்க்கும்படியாகவும், சிவந்த உதடானது துடிக்கும்படியாகவும் குளிர்ந்த தயிரை நீ கடைந்தபடியை நான் மெய்யாகவே அறிவேன்'' என்று வேறோர் ஆய்ச்சி பேசுகின்றாள்.

(3) ''மலர்களைச் சூடியுள்ள கறுத்த மயிர் முடியை யுடையவளான ஒரு பெண்ணைக் கடைக்கண்ணால் பார்த்துவிட்டு, அப்படியிருக்கச் செய்தே, வேறொரு பெண்ணிடத்தே மனத்தைப் பொருந்தச் செய்து, பின் அவளையும் விட்டு, வேறொரு பெண்ணிடத்தில் 'உனக்கு நான் அடியேன்' என்று சொல்லி வைத்து, வேறொரு பெண்ணுக்குப் பொய்யாகவே ஒரு தனிமையிடத்தைக் குறிப்பிட்டு வைத்து, ஆக இத்தனை பெண்களையும் ஏமாற்றிவிட்டு, கடை குழன்று சுருண்ட கூந்தலையுடையளான இளம்பெண்ணொருத்தியோடு கலவி செய்யா நின்றாய். பின் அந்தப் பெண்ணுக்கும் பொய்யனாயிரா நின்றாய். இரட்டை மருத மரங்களை முறித்துத் தள்ளினவனே! நீ வளர்வதோடு கூடவே உன்னுடைய கள்ளங்கவடுகளும் வளர்ந்து வருகின்றனவே! அந்தோ!'' என்று ஆய்ச்சியர் குல மகளொருத்தி குறிப்பிடுகின்றாள்.

(4) ''தாயாகிய யசோதையின் முலைகளில் நல்ல அமுதமான பால் இருக்கவும் அதனை விரும்பாமல் தவழ்ந்து கொண்டு தட்டுத் தடுமாறி நடந்து சென்று, பூதனை என்னும் அரக்கியின் முலைகளிலே வாயை வைத்து, அம்

முலை மீது தடவிக் கிடந்த நஞ்சினை உறிஞ்சி அமுது செய்து, இவ்வாறு செய்ததன் காரணமாக, 'பைத்தியக் காரன்' என்று அயலவர் அனைவரும் பரிகசிக்கும்படி நின்ற பிரானே! நான் மிகுந்த ஆசையோடு உன்னை எதிர்பார்த் திருக்கையில் நீ என்னால் தூதனுப்பப்பட்டு உன்னிடம் வந்த என் வேலைக்காரியோடு நல்ல இன்பத்தை நலமுற அனுபவித்தாய். அந்தச் செய்கையும் உனது தீம்புக்கு ஏற்புடைத்தாகும்'' என்று கண்ணனின் திருவிளையாடல் களை எடுத்து மொழிகிறாள் ஓர் ஆய்ச்சி.

(5) ''மின்னல் போலும் மெல்லிய இடையையுடைய ஒரு பெண்ணை அணைத்துக் கொண்டு, மிக்க இருள் பரவிய வேளையிலே பொன்னாடையாம் பீதாம்பரத்தாலே முக்காடிட்டுக் கொண்டு என் வீதியினூடே அவளும் நீயுமாகப் போகும்பொழுது நான் அக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அன்றியும், நீ கண்ணில் தென்பட்ட வேறொருத்தியைக் கடைக்கணித்து நோக்கிப் பின் இன்னவிடத்தே வாவென்று குறியிடங் காட்டிக் கையாலே அழைத்ததனையும் நான் பார்த்துக் கொண்டு தானிருந்தேன். அந்தப் பெண்ணை நீ விடுத்து எதற்காக என்னிடம் வந்தாய்? சுவாமி! இனிமேலும் நீ அவர்களிருக்கு மிடத்திற்கே நடப்பாயாக'' என்று ஊடல் நோக்கோடு ஒருத்தி மொழிகிறாள்.

(6) ''மல்லரோடு போர் செய்த தோள்களையுடைய கண்ணபிரானே! பெரிதும் பாவியான நான் உறங்கு வதற்குத் தொடங்கியவுடனே அன்றிரவு நடு யாமத்திலே இனிய படுக்கையிலே என்னைப் படுக்கவிட்டு நீ விலகிப் போய் என்னைவிட்டு அகன்று போன அன்றிரவும் அதற்கு மறுநாளும் எல்லாப் பெண்களோடும் கலவி செய்து வந்தாய். இப்படிப்பட்ட நீ என்னருகில் எதற்காக வந்தாய்? எம்பெருமானே நீ அவர்களிடமே போகக் கடவாயாக'' என்கிறாள் ஆயர்குல மகளொருத்தி.

(7) ‘‘ஆயிரம் படங்களையுடைய ஆதிசேடன் என்னும் பாம்பின்மேல் பள்ளி கொள்ளும் நம்பியே! நாங்கள் உன் மாயைப் பேச்சு வலையில் முன்போல் அகப்பட்டு ஏமாற மாட்டோம். நீ விரும்பத்தக்கவர்களாய் மையணிந்து மான் போல் அழகிய கண் படைத்தவர்களான பெண்களும் அல்லோம். காலந் தாமதித்து எம் வீட்டிற்கு வருவதை நீ இனி விட்டுவிடு. அழகிய பொன்னாடையினையும், திருமுக மண்டலத்தினையும், சிவந்த கோவைக் கனி போன்ற உதடுகளையும், கூந்தல் முடியையும் பார்த்து அவற்றில் ஈடுபட்டு, உன் பொய் வார்த்தைகளில் ஒரு நாள் பட்ட பாடு போதுமே. இனியும் என்னிடத்தே வஞ்சக மான வார்த்தைகளைச் சொல்லாமல் உன் தேவிமார் களிடத்தே போய்ச் சேர்’’ என்று ஊடியுரைக்கிறாள் ஓர் ஆய்ச்சி.

(8) ‘‘என்னை இன்னவிடத்திற்கு வாவென்று குறி யிடம் கூறிவிட்டு, நிறைந்த மலர்களையுடைய முல்லைப் பந்தலின் நிழலிலே நீண்ட நேரமாகப் பதுங்கி நின்ற ஒருத்தியைக் கலவி செய்தற்குச் சென்று, அந்நிலையில் என்னைப் பார்த்துக் கலங்குவது போற் கலங்கி அப்பாலே நழுவினாய். பொன்னிற ஆடையைக் கையிலே தாங்கிக் கொண்டு பொய்யாக நீ எனக்கு அச்சமடைந்ததாக நான் பாவிக்கும்படி செய்து கொண்டு என் கைக்கு அகப் படாமல் நீ ஓடிப் போன போதிலும் இனி இங்கே என்னிடத் திற்கு ஒரு நாளாகிலும் வருவாயாகில் அப்போது யான் என் கோபத்தைத் தீர்த்துக் கொள்வேன்’’ என்று ஊடி நிற்கிறாள் ஓர் ஆய்ச்சி.

(9) ‘‘மங்கலமான நல்ல வன மாலையானது மார்பிலே ஒளிவிட, மயிலிறகுகளை அணிந்து கொண்டும், பளபளவென்ற மெல்லிய ஆடையை இடையிலே உடுத்துக் கொண்டும், அழகிய பூங்கொத்துகளைக் காதிலே மிகவும் செறியச் சூடிக் கொண்டும், தேன் மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்களோடு குழைந்து, அதனால்

ஏற்பட்ட மகிழ்ச்சி காரணமாகப் புல்லாங்குழலை நீ இனிமையாக ஊதிக்கொண்டு வந்தாய். ஒரு நாளேனும் நீ எங்களுக்காக வந்து ஊதும்படி உனது குழலினின்றும் இசையானது வெளி வரமாட்டேன் என்கிறது'' என்று கோபித்து நிற்கிறாள் ஆய்ச்சி ஒருத்தி.

(10) இளமை மீதூறிய இடைப் பெண்கள் தாமரைப் பூவில் பிறந்த பிராட்டிக்குக் கணவனான கண்ண பிரான்மீது ஆசைப்பட்டு, இரவின் நடுயாமத்திலே ஊடலில் ஈடுபட்டுச் சொன்ன பாசுரங்களை உட்கொண்டு கொல்லி என்னும் நகருக்குத் தலைவரும் மதுரைக்கு மன்னருமான குலசேகராழ்வார் இனிய பண்ணிலே பொருந்த அருளிச் செய்த இனிய தமிழ் மாலையான இப் பத்துப் பாட்டையும் ஓத வல்லவர்களுக்குத் துன்பம் அணுகாது.

இவ்வாறு ஆறாந் திருமொழி முடிகிறது.

## ஏழாந் திருமொழி—ஆலை நீள் கரும்பு

கண்ணபிரானது பிள்ளைத் திருவிளையாடல்களைக் கண்டு களிக்கும் பேறு, ஆயர்பாடி யசோதைப் பிராட்டி யார்க்கு வாய்த்தது போலத் தனக்கு வாய்க்காமையை நினைந்து, பெற்ற தாயான தேவகிப் பிராட்டியார் அப் பெருமானைக் கண்டபோது கழிவிரக்கத்தோடு கூடிய பேச்சாகப் புலம்பி மொழிந்த போக்கில் அமைந்துள்ளன இத் திருமொழிப் பாசுரங்கள். தாலாட்டுப் பாட்டு என்ற அமைப்பில் இப் பாடல்கள் அமைந்துள்ளன. பிள்ளைத் தமிழில் தாலப் பருவம் என்பதொன்றாகும்.

## உள்ளுறை பொருள்

(1) ''ஆலையிலிட்டு ஆடத் தகுந்த நீண்ட கரும்பு போன்ற கண்ணனே! உனக்குத் தாலாட்டு. தாமரை போன்று விரிந்தகன்ற திருக்கண்களையுடையவனே! தாலேலோ. கடலின் நிறம் போன்ற நிறத்தையுடை

யவனே, தாலேலோ. யானைக் குட்டி போன்றவனே தாலேலோ. நறுமணம் மிக்க நீண்ட குழலையுடைய என் மகனே! தாலேலோ. இவ்வாறு பலகாலுஞ் சொல்லி என் வாய் திருப்தியடையும்படி உன்னைத் தாலாட்டுகிற செல்வமில்லாத தாய்மார்களில் கடையான தாயாய் இருக்கின்றேன்'' என்று தேவகி புலம்பினள்.

(2) ''கூர்மையையுடைத்தாய் மையிடப் பெற்றதாய், செந்தாமரை மலரை யொத்ததான கண்களாலே தொட்டிலின்மேற் கட்டியிலே தொங்கவிட்டிருக்கும் கிளி முதலியவற்றில் ஒரு பொருளை இனிதாகப் பொருந்தப் பார்த்துக் கொண்டும், கறுத்த புறந்தாளையுடையதும் செந்தாமரை மலரை யொத்துச் சிறுத்த சிவந்த அகவாயை யுடையதுமான திருவடிகளை முடக்கிக் கொண்டும், பருகின நீர் விளங்கப் பெற்ற மேகக்குட்டி போல அழகிய சிறுத்த திருவிரல்கள் எல்லாவற்றையும் உள்ளங் கையிலே அடங்கும்படி முடக்கிப் பிடித்துக் கொண்டும், ஓர் யானை கிடக்குமா போலே பள்ளி கொண்டருளும் அழகைக் கண்டு அனுபவிக்கப் பெறாத பாவியானேன்; ஐயோ! கண்ண பிரானே! ஒன்றுந் துய்க்கப் பெறாத பெரும் பாவி யானேன்'' என்று தேவகி புலம்பினள்.

(3) ''அன்பு சுரக்கப் பெற்றவர்களான பரம்பரையாக வருகிற நல்ல உறவு முறையையுடைய பெண்கள் தங்கள் தங்கள் தொடைகளிலே முறை முறையே வைத்துக் கொண்டு, 'என் அப்பனே! எங்கள் குலத்துக்கு ஒப்பற்ற தொரு விளக்கானவனே! கருமேகத்தின் அழகைக் கவர்ந்து கொண்ட காளை போன்றவனே!' என்று இவ்வாறு பல வாறாகத் துதித்து, 'உன் தந்தையார் யார்? காட்டு' என்ற அளவிலே உன்னுடைய சிவந்த சிறந்த விரலி னாலும், கடைக்கண்ணாலும் இன்னார் என் தந்தையார் என்று காட்ட, அந்தப் பேற்றினை நந்தகோபர் பெற்றார். நல்வினையில்லாத என்னுடைய பதியான வசுதேவர் நந்த

கோபர் பெற்ற பேற்றினைப் பெறவில்லையே'' என்று தேவகி புலம்பினள்.

(4) ''கிருட்டினனே! மகிழ்வூட்டும் கதிர்களையுடைய முழு மதியினை ஒத்த திருமுகமும், திண்ணிதான திருக்கைகளும், திருமார்பும், வலிமை பொருந்திய திருத்தோள்களும், தளிரையும், மலரையும் உடைத்தாய்ச் கறுத்த திருக்குழற் கற்றையும், அட்டமி சந்திரன் போன்ற திருநெற்றியும், விசாலமான தாமரை போன்ற திருக்கண்களும் ஆகிய இவை அழகு பெற்று விளங்கும்படியான இளமை பொழியும் இன்பத்தை இப்போது என்னுடைய கண்ணாலே நான் அனுபவியா நின்றாலும், இவள் என்னுடைய தாய் என்று நினைப்பதற்குத் தகுதியான பிள்ளைமைப் பருவத்திலுண்டான அளவற்ற மகிழ்ச்சியினை அனுபவிக்கப் பெறாமல் இழந்த பாவியான என்னுடைய உயிரானது தடுத்து நிற்க வழியில்லையே'' என்று தேவகி புலம்பினள்.

(5) ''உன்னுடைய திரு நெற்றியிலே பொருந்தியிருக்கிற சுட்டியானது அசையும்படி, அழகிய வாயிலுண்டான முத்தத்தைக் கொடுப்பதென்ன, உன்னுடைய தந்தையாரைப் போன்ற உன் வடிவழகை நான் பார்த்து என் அகமானது குளிரும்படி சிவந்த சிறிய திருவாயிலே விரல்களை வைத்துக் கொண்டு நீ சீற்றத்தோடு சொல்லுகிற மழலைச் சொற்களென்ன ஆகிய இவற்றிலே ஒன்றையும் பேறு அற்றவளான நான் அனுபவிக்கப் பெறவில்லை. தெய்வ நங்கை என்று சொல்லும்படியான யசோதைப் பிராட்டி அந்தப் பிள்ளைத் திருவிளையாடல்கள் எல்லாவற்றையும் அனுபவிக்கப் பெற்றாளே'' என்று தேவகி புலம்பினள்.

(6) ''குளிர்ந்த அழகிய தாமரை போன்ற திருக்கண்களை யுடையவனே! கண்ணபிரானே! நீ தவழ்ந்து கொண்டு எழுந்திருந்து, தட்டுத்தடுமாறி நடப்பதாகிற ஒரு நடை

யினால் சிவந்த புழுதி மண்ணிலே விளையாடி, அக் கோலத்தோடு வந்து என்னுடைய மார்பிலே நீ அணையும்படியான பேற்றினை யான் பெற்றிலேன். அந்தோ! அழகு பெற்றுச் சிவந்து சிறிதான கைவிரல்கள் எல்லாவற்றாலும் வாரிக் கொண்டு அமுது செய்த உணவினுடைய மிச்சத்தை நான் உண்ணப் பெறவில்லை. இவற்றையெல்லாம் இழக்கும் படியான பாவத்தை யான் செய்தவளாவேன். ஐயோ! என் தாயானவள் என்னை எதற்காகப் பெற்றாளோ'' என்று கழிவிரக்கத்தோடு தேவகி புலம்பினள்.

(7) ''எல்லாரோடும் கலக்கும் இனிய சுபாவம் உள்ளவனே! என் வயிற்றிற் பிறந்த அழகிய குமாரனே! கோவிந்தனே! என்னுடைய குடங்கையிலே பொருந்தி யிருந்து ஒழுகுகின்ற மிக்க அழகையுடைத்தாயும் மிகவும் இளையதான தளிர்போன்றதுமான திருக்கை ஒன்றாலே என்னுடைய ஒரு முலைக்காம்பை நெருடிக்கொண்டு, மற்றொரு முலையானது உன் மணி வாயில் இருக்க, நடு நடுவே என் முகத்தை நோக்கிப் புன்சிரிப்பை உதிர்த்துக் கொண்டு, அழகிய உன் இரண்டு கண்களாலும் பார்க்கிற பார்வையையும் ஐயோ! நான் இழந்தேனே'' என்று தேவகி புலம்பினள்.

(8) ''வெண்ணெயைக் குடத்திலுள்ள அளவும் கையை விட்டு அளைந்து எடுத்து உண்கிற இளந்தளிரையும் தாமரையையும் போன்ற சிறிய திருக்கைகளும் அழகிய தாம்பாலே அடிக்க, அதற்கு அஞ்சி நிற்கும் நிலையும், வெளுத்த தயிர் பூசிய சிவந்த வாயும், அழுவதும், பின் பயந்து பார்க்கிற அப் பார்வையும், அழகிய சிவந்த சிறிய வாய் துடிப்பதும், தொழுதல் செய்கிறதும் ஆகிய இவற்றை யெல்லாம் நேரிற் கண்ணாற்கண்டு அனுபவித்த யசோதை யானவள் பேரானந்தத்தின் எல்லையைக் காணப் பெற்றாள்'' என்று தேவகி மொழிந்தனள்.

(9) ''கோவர்த்தன மலையைக் குடையாகத் தாங்கி நின்றதும், அழகாகக் குரவையாடியதும், குடக் கூத்தாடியதும், கன்றாய் வந்த ஓர் அசுரனைக் கொண்டு, விளா மரமாய் நின்ற அசுரன் மீது எறிந்து விளாங்காய்களை உதிர்த்ததும், திருவடி கொண்டு காளிங்க நர்த்தனம் செய்ததும் ஆகிய இவை முதலாகவுள்ள வெற்றி பொருந்திய அழகிய பிள்ளை விளையாட்டுகள் எல்லாவற்றுள்ளும், ஒரு விளையாட்டினையும் என் நெஞ்சு குளிரும்படி நான் நீ அப்பிள்ளைமை விளையாட்டை நிகழ்த்திய இடத்தில் கண்ணாரக் கண்டு களிக்கப் பெற்றிலேன். இப்போது அவற்றை நான் காணத்தக்க வழி இருக்குமாகில் அதனை நீ யருளல் வேண்டும்'' என்று கேட்கிறாள் தேவகி.

(10) ''வஞ்சனை பொருந்திய நெஞ்சையுடையவளான பூதனையானவள் உடம்பு வற்ற, உடம்பிலுள்ள குருதி வெளியிற் கொழிக்கும்படியாகவும், நார் போன்ற நரம்புகள் கருகி உதிரும்படியாகவும், அவளுடைய நஞ்சு தோய்ந்த கள்ள முலையை நீ சுவைத்தும், என்மேல் கொண்ட அருளாலே உயிருடன் வளரப்பெற்றாய். அந்தோ! கம்சனுடைய ஆயுளைக் கட்டழித்த காளமேகம் போன்ற எந்தாய்! நான் முலையை வீணே சுமந்து கெட்டவரிலும் கடைகெட்டவளானேன். உன்னையொழிய வேறு புகலிடம் ஏதும் இரா நின்றேன். என்றைக்காகிலும் உன்னைக் கண்ணால் காண்போமென்று உயிரைப்பிடித்துக் கொண்டு உயிர்க்கிறேன். உனக்குத் தகுதியான நல்ல தாயாரை நீ தேடிக்கொண்டாய்'' என்று தேவகி புலம்பினள்.

(11) ''செல்வம் நிரம்பிய பெரிய நகரமாகிய வட மதுரைக்குத் தலைவனாயிருந்த கம்சனை வென்று வேற்றுலகு அனுப்பிவிட்டு, இங்கே (தேவகியிடம்) வந்து சேர்ந்த கண்ணபிரானுடைய மாயம் நிறைந்த எல்லையில்லாத பிள்ளைமை விளையாட்டுகளை, நிகழ்ந்த காலை

யில் காணப்பெறாத தெய்வத்தன்மை பொருந்திய தேவகி யானவள் புலம்பிக்கொண்டு சொன்ன பாசுரங்களைக் கொல்லி நகர்க்கு அரசராய், திருமாலின் திருவடிகளைத் தம் திருமுடிக்குப் புனைந்துள்ளவருமான குலசேகராழ்வார் அருளிச்செய்த நல்ல இசையையுடைய தமிழினாலாகிய சொல் மாலையை ஓதவல்லவர்கள் விரைவாக வைகுந்தத்தைச் சேரப் பெறுவர்.

இவ்வாறு ஏழாந் திருமொழி முடிவு பெறுகின்றது.

## எட்டாந் திருமொழி—மன்னுபுகழ்

கண்ணபிரானது பிள்ளைமைத் திருவிளையாடல்களில் ஈடுபட்ட குலசேகரர், இராமாவதாரத்தில், நற்றாயான கோசலை பெற்ற பேற்றினையும், இராமனின் மற்ற வீரச் செயல்களையும் நினைந்து அவ் இராமபிரானது இளமைப் பருவத்தைத் தாலாட்டுமுகத்தாற் கொண்டாடுவன எட்டாந் திருமொழிப் பாசுரங்களாகும்.

இப்பாசுரங்கள் சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் ஒன்றான திருக்கண்ணபுரத்துக் கோயில் கொண்டிருக்கும் பெருமான் விஷயமாக அமைந்துள்ளன.

## உள்ளுறை பொருள்

(1) "நிலைத்த புகழுடைய கோசலையினுடைய அழகிய வயிற்றிலே பிள்ளையாக அவதரித்தவனே! தென்னிலங்கைக்கு இறைவனான இராவணனுடைய பத்துத் தலைகளையும் சிதறியோடும்படி செய்தவனே! செவ்விய பொன்னாலே செய்யப்பட்டதாய், அழிவில்லாததாய், அழகான பெரிய திருமதிலாலே நாற்புறமும் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற நீல மணி போன்ற எம்பெருமானே! எனக்கு இனிய அமுதாயிருப்பவனே! இராமனே! உனக்குத் தாலாட்டு."

(2) ''தாமரைப் பூவின்மேல் பிரமனைத் தோற்றுவித்து அவன்முகமாக உலகங்கள் எல்லாவற்றையும் உண்டாக்கியவனே! மிகவும் பலத்தையுடையவளான தாடகையினுடைய மார்பைத் துளைக்கும்படியாக வில்லை வளைத்து அம்புகளை எய்தவனே! கண்டு உன்னைத் தொழுதவர் தங்கள் மனத்தைத் தாங்களே இசைந்து கொடுப்பதற்குகந்த கணபுரத்து என் கருமணியே! எட்டுத் திக்கிலுள்ளவர்களையும் அடிமை கொண்டருளுபவனே! இராகவனே! தாலேலோ!''

(3) ''நறுமணம் வீசும் கறுத்த கூந்தலையுடையளான கோசலையினுடைய சிறந்த பிள்ளையே! பெருமை சான்ற ஜனகனின் மாப்பிள்ளையே! சக்கரவர்த்தித் திருமகனே! கங்கை நதியினும் சிறப்பு மிக்க தீர்த்தங்களையுடைய திருக் கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற என் கருமணியே! எங்கள் அரச குலத்திற்கெல்லாம் இனிய அமுதம் போன்றவனே! இராகவனே தாலேலோ!''

(4) ''திருநாபிக் கமலத்திலே பிரமனை உண்டாக்கினவனே! தசரதனுடைய மூத்த குமாரனே! சீதை மணவாளனே! வண்டுகளின் கூட்டங்கள் காமரம் என்னும் இசையைப் பாடப்பெற்ற திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற என் கருமணியே! அம்புகள் பொருந்திய சார்ங்கம் என்னும் வில்லை ஆளவல்லவனே! இராகவனே! தாலேலோ.''

(5) ''நிலவுலகம் முழுதையும் ஆட்சி செய்கிற பெரிய அரச செல்வத்தைப் பரதனுக்கே கொடுத்தருளிவிட்டு, நிறைந்த காதல் நெஞ்சங்கொண்ட இளைய பெருமாளுடன் கூடப்புகுவதற்கு அரிய காட்டை நோக்கி எழுந்தருளியவனே! வீர இலக்குமிக்கு இருப்பிடமாய் மலைபோன்ற திருமார்பையுடையவனே! திருக்கண்ணபுரத்து அரசே! மாலையோடு கூடின சிறந்த திருமுடியையுடையவனே! என் தாசரதீ! தாலேலோ.''

(6) ‘‘எல்லா உறவினரும் பின்னே தொடர்ந்துவர, பழமையான தண்டகாரண்ணியத்திற்கு எழுந்தருளியவனே! உனக்கே அற்றுத் தீர்ந்த பரமபக்தர்களுக்கு அருமருந்து போன்றவனே! அயோத்தி மாநகர்க்கு அரசனே! ஞானிகள் வாழ்வதற்கு இடமான திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற நீலமணி போலும் அழகிய எம் பெருமானே! சிறிய தாயாகிய கைகேயியினுடைய சொல்லை ஏற்றுக் கொண்ட இராமனே! தாலேலோ.’’

(7) ‘‘முன்பு பெரிய வெள்ளம் (பிரளயம்) வந்த போது ஓர் ஆலந்தளிரிலே குழந்தை வடிவாய்க் கொண்டு உலகங்களை யெல்லாம் திருவயிற்றில் வைத்து நோக்கினவனே! வாலியைக் கொன்று அவனது தம்பியான சுக்ரீவனுக்கு அரசைக் கொடுத்தவனே! கால்வாய்களிலே யுள்ள இரத்தினங்களை கரையிலே கொண்டு கொழிக்கப் பெற்ற திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற என் கருமணியே! திருவாலி திருநகரிக்குத் தலைவனே! அயோத்தி நகர்க்கு அரசனே! தாலேலோ.’’

(8) மலைகளைக் கொண்டு சேது அணைகட்டி, அரணுடைத்தான இலங்கை மாநகரைப் பாழ்படுத்தினவனே! அலையெறியும் திருப்பாற் கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்தருளியவனே! சகல கலைகளையும் அறிந்தவர்கள் வாழ்கிற திருக்கண்ண புரத்தில் எழுந்தருளியிருக்கிற என் கருமணியே! சார்ங்கம் என்னும் வில்லைச் செலுத்த வல்லவனே! வீரனே! சீராமா! தாலேலோ.’’

(9) ‘‘கட்டு அவிழும்படியான நறுநாற்றமுடைய மயிர் முடியை யுடையவனான தசரத சக்கரவர்த்தியினுடைய சிறந்த திருக்குமாரனே! ஒப்பற்ற வில்லானது வளைய, அந்த வில்லாலே மதில் பொருந்திய இலங்காபுரியை அழித்தவனே! களையாகப் பறிக்கப்பட்ட செங்கழுநீர் பூக்கள் சுற்றிலும் மலரப்பெற்ற திருக்கண்ணபுரத்தில்

எழுந்தருளியிருக்கின்ற என் கருமாமணியே! இளைய வர்கள் திறத்தில் கருணை பொருந்தியவனே! இராகவனே! தாலேலோ.''

(10) ''தேவர்களையும் அசுரர்களையும் திசைகளை யும் தோற்றுவித்தவனே! யாவரும் வந்து திருவடிகளில் விழுந்து வணங்கும்படியான திருவரங்கத்திலே பள்ளி கொண்டிருப்பவனே! காவிரி என்னும் சிறந்த ஆறானது பெருகியோடும் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற என் கருமணியே! அம்புகள் தொடுக்கப்பெற்று அழகிதாயும் அதே நேரத்தில் பகைவர்களுக்குக் கொடிதாயுமிருக்கும் வில்லை ஆளவல்லவனே! இராகவனே! தாலேலோ.''

(11) ''இராமபிரான் விஷயமாகக் கோசலையார் தாலாட்டுகையிற் சொன்ன பாசுரங்களை உட்கொண்டு, கொலைத் தொழில் புரிகின்ற வேலாயுதத்தைச் செலுத்த வல்லவரும் குடையையுடையவருமான குலசேகராழ்வார் அழிவில்லாத சிறந்த அழகிய மதில்கள் நாற்புறமும் சூழப் பெற்ற திருக்கண்ணபுரத்திலே அருளிச்செய்த தமிழ்ப் பாமாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையும் பாட வல்லவர்கள் பாங்கமைந்த பக்திமான்களாகப் பெறுவர்.''

இவ்வாறு முடிகிறது எட்டாந் திருமொழி.

## ஒன்பதாந் திருமொழி—வன்றாளினிணை

இராமாவதாரத்தில் ஈடுபட்ட ஆழ்வார், கண்ண பிரானது குழவித் திருவிளையாடல்களைக் காணும் பேறு தேவகி பிராட்டிக்கு வாய்க்காதது போல, இராமபிரானது இளமைச் செயல்களைக் காணும் பேறு தசரதர்க்கு வாய்க்காமையை நினைந்து, தன் திருமகன் காடுநோக்கிச் சென்ற பிரிவினை ஆற்றமாட்டாமல் அச்சக்கரவர்த்தி புலம்பியவாற்றைக் கொண்டு மொழிவன ஒன்பதாம் திருமொழிப் பாசுரங்கள்.

## உள்ளுறை பொருள்

(1) ''ஓ! எமது இராமனே! அழகிய அயோத்தி மாநகரத்து மக்கள் அனைவரும் சரணமடைந்தவர்களை எப்பொழுதும் விடாமற் பாதுகாக்கும் வலிமையுடைய உனது இரண்டு திருவடிகளிலும் விழுந்து எழுந்து கைகூப்பி நின்று துதிக்க, அரசனாக முடிபுனைய ஆயத்தமாய் நின்றவனும், அரியணைமேல் அமர்வதற்கு ஆயத்தமாய் இருந்தவனுமான உன்னைப் பெரிய காட்டிற் செல்லுதற்கு 'இந்நகரை விட்டும் நீங்கிப் போ' என்று கைகேயி கூறினாள். நல்ல மகனே! நான் உன்னைப் பெற்று வளர்த்த தாயான கைகேயியின் வார்த்தையைக் கேட்டு உன்னை நிலவுலகத்தை நன்றாக ஆளும்படி செய்தேன்.''

(2) ''எம் இராமாவோ! கொடிய வாயையுடையவனான என்னுடைய கடுஞ் சொற்களைக் கேட்டு, பெரிய பூவுலகத்து அரசாட்சியை விரும்பாமலே விட்டுவிட்டு, விரைந்து வெற்றியை விளைப்பதான மைம்மலை போன்ற வடிவத்தையுடைய யானையும் தேரும் குதிரையுமாகிய ஊர்திகளையொழிய விட்டு, காட்டையே சேர்ந்து, நெய் பூசிய நுனியையுடைய வேலாயுதம் போன்ற நீண்ட கண்களையும் தகுதியான அணிகலன்களையும் உடையளான பிராட்டியும் இளைய பெருமாளும் உடன் தொடர்ந்துவர எங்ஙனம் நடந்து சென்றாயோ? எமது ஐயனே! நான் என் செய்வேன்?''

(3) ''கொலைத் தொழில் பொருந்தின வேலாயுதம் போன்ற செவ்வரி பரந்த நீண்ட கண்களையுடைய கோசலையினது குலத்தில் தோன்றிய குமாரனே! வளைந்த வில்லைத் தடுத்த வலிமை பொருந்திய மலைகள் போன்ற தோள்களை யுடையவனே! மனத்தைக் கசியச் செய்வதில் வல்லவனே! காகுத்த மரபில் தோன்றியவனே! கருநிற முடைய ஐயனே! மென்மையான பஞ்சணை மெத்தையின் மேல் முன்பெல்லாம் படுத்துறங்கிப் பழகினவனான நீ,

இனிமேற் புதிதாக இன்றைக்குச் சென்று, பெரிய காட்டி லுள்ள மரத்தின் நிழலிலே கருங்கற் பாறைகளையே படுக்கையாகக் கொண்டு அதன்மேற் படுத்துத் துயிலப் பழகுகின்றாயோ?''

(4) ''சற்று இங்கே வா; இனிச் செல்வாயாக. மறு படியும் இங்கு வா. போகும்பொழுது பின்னையும் ஒரு முறை வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போ. பூக்களை எப்பொழுதும் தரிக்கிற மயிர்முடியை யுடையவளும், மூங்கிலை யொத்த அழகிய தோள்களையுடையவளுமான பிராட்டியை மணம் புரிதற் பொருட்டுச் சிவனுடைய வில்லை முறித்தவனே! பெரும்பாவியான எனது மனத்தை உருகச் செய்கிற மைந்தனே! இப்பொழுது நீ யானைகள் வசிக்கும் பெரிய காட்டுக்குப் போக, என் மனமானது இரண்டு பிளப்பாகப் பிளந்து போகாமலே வலியதாய் நிற்குந் தன்மைதான் என்னே!''

(5) ''பகைவர்கள் கையிலேந்தும் கூர்மையான வேலாயுதத்தின் நுனி போன்ற பருக்கைக் கற்கள் காலில் தைத்து வருத்தவும், அதனால் மென்மையான உன் கால் களினின்றும் குருதி பெருகவும், மேலே வெயிலுறைக்கவும், வேண்டிய போது உணவு கிடையாமையிலே கொடிய பசியாகிய நோய் மிகவும் பெரும்பாவியானது எனது மைந்தனே! இப்பொழுது எவரும் விரும்பாத காட்டை, நான் போகச் சொன்னேன் என்பதனாலே விரும்பி அக்காட்டிற்குச் செல்கிறாய். கேகய அரசன் பெற்ற மகளான கொடிய பாவியாகிய கைகேயினுடைய வார்த்தை யைக் கேட்ட கொடியோனாகிய நான் ஐயோ, என்ன செய்வேன்!''

(6) ''ஐயா! என்று மகிழ்ச்சியோடு என்னை அழைக் கின்ற அன்பு விளங்குஞ் சொல்லை நான் கேட்கப் பெறாமலும், அணிகலன்கள் நிறைந்த என் மகனுடைய மார்பு என் மார்பிலே அழுந்தும்படி நான் அவனை இறுகப்

புல்லி அணைத்துக் கொள்ளாமலும், அந்த அணைப்பு இன்பத்தில் மூழ்காமலும், உச்சியை மோந்திடாமலும், யானையினது நடைபோன்ற கம்பீரமும் மென்மையும் கலந்த நடையின் அழகையும், தாமரை மலர் போன்ற அவனது முகப்பொலிவையும் காணாமலும், எமது ஐயனான என் மகனைக் காட்டிற்குப் போக்கி இழந்து விட்ட இழிவான செயலைச் செய்தவனான நான் இன்னமும் அழிந்திடாமல் உயிர் வாழ்ந்திருக்கின்றேனே!''

(7) ''தூய்மையான மறைகளை யோதும் அந்தணர் களே! சுமந்திரரே! வசிட்ட முனிவரே! உங்களை ஓர் செய்தி கேட்பன். மலர் அறாது மணம் கமழும் திருக் குழலை விகாரமான சடையாகத் திரித்து, நல்ல பொன் னாடை சார்த்த வேண்டிய இடையில் விசுவாமித்திரம் என்னும் ஒரு வகைப்புல்லைக் கயிறாக முறுக்கிச் சார்த்தி, திருவாபரணங்கள் அணியாமல், இயற்கையழகுக்கு மேல் திருவாபரணங்களால் உண்டாகும் செயற்கையழகு இன்றியே காத்தளிக்கும் தோள்களையுடையவனான எனது குமாரனானவன் நான் இப்போது போகவேண்டிய காட்டுக்குத் தான் போவது தகுதிதானோ? நீங்களே ஆராய்ந்து சொல்லுங்கள்.''

(8) ''கைகேயியே! கல்விச் செல்வம் கைகூடப் பெற்ற வர்களான நல்ல ஆசிரியர்களின் கீழ் அமைந்து அழகிய வேதங்களை ஓதியிருக்கிற மூத்த மகனான இராமனையும், அவனது தம்பியான இலக்குவனையும், பேச்சினிமையிற் கிளி போன்றவளும், மின்னலும் இணையாக மாட்டாத நுண்ணிய இடையையும் மென்மையான தன்மையுமுடைய வளுமான என் மருமகளாகிய சீதையையும் காட்டுக்குப் போகச்செய்து, உனது அன்புக்கு இடமான உன் மகனான பரதன்மேற் பழியுண்டாம்படி செய்து, என்னையும் நீண்ட தூரத்திலுள்ள மேலுலகத்திற்குச் செலுத்துவதனால் நீ என்ன பயன்பெற்றாய்? இவ்வளவும் செய்து விட்டு நீ இப்பெரிய நிலவுலகத்தில் சுகமாக வாழ்கின்றாயே.''

(9) ‘‘முன்பு ஒரு நாளிலே பரசுராமனிடத்திலிருந்து அவன் கை வில்லை வாங்கி, அவனியற்றிய தவப்பயனை யெல்லாம் உன் அம்புக்கிலக்காக்கி அழித்து விட்டவனே! உன் மேன்மையையும், உன்னைப் பெருநோன்பு நோற்று அருமை மகனாகப் பெற்ற தன்மையையும், உனது பெற்ற தாயான கோசலை உன்னைப் பிரிந்தால் தரிக்க மாட்டாது உன் பின்தொடர்ந்த வருத்தத்தையும் நீ ஒரு பொருளாகக் கொள்ளாமல், என்னையும் எனது உண்மைவாக்கினை யுமே உறுதிப் பொருள்களாகக் கருதிக் காடு புகுந்த என் ஐயனே! பெரிய தோள்களையுடைய அரசனே! இனிப் பிறக்கப் போகும் பிறவிகளிலும் நீயே எனக்குப் பிள்ளை யாகப் பிறக்கும்படியான பேற்றினைப் பெறக்கடவேன்.’’

(10) ‘‘மனுகுலத்திற் பிறந்த அரசர்களிற் சிறந்த வனே! தேன் நிறைந்த மலர்களைச் சூடிய கூந்தலை யுடைய கோசலையும் சுமித்திரையும் மனம் வருந்த, வடிவம் போன்றே மனமும் கோணலாகப் பெற்ற கூனியினது சொற்களைக் கேட்ட கைகேயியின் சொல்லை ஏற்றுக் கொண்டு, காட்டையே பெரிதும் விரும்பி இப்பொழுது நீ கைவிட்ட முடிசூட்டுவிழாவின் பெருட்டு அணி செய்யப் பெற்ற இந்நகரத்தை நானும் விட்டு நீங்கி மேலுலகத்தையே மிகவும் விரும்பி அவ்விடத்திற்கே செல்கின்றேன்.’’

(11) ‘‘அழகு நிறைந்த கருநிறமுடைய திருமால் இராமனாகத் திருவவதாரம் செய்து, காட்டிற்குச் சென்ற தான அச்செயலைப் பொறுக்க மாட்டாமல், வெற்றி மாலை பொருந்திய பெரிய மலைபோன்ற தோள்களை யுடைய தசரத சக்கரவர்த்தி புலம்பிய அப்புலம்பல்களைக் கூர்மை மிக்க வேற்படைத் தொழிலில் மேம்பட்டவரும் உறையூரிலுள்ளார்க்குத் தலைவரும் கொற்றக்குடையை யுடையவருமான குலசேகராழ்வார் அருளிச் செய்த சிறப்பு மிக்க தமிழ்மாலையாகிய இப் பத்துத் திருப்பாடல்

களையும் கற்க வல்லவர்கள் கொடிய வழியொன்றிலும் சென்று சேரமாட்டார்கள்.''

இவ்வாறு முடிகிறது ஒன்பதாந் திருமொழி.

## பத்தாந் திருமொழி — அங்கணெடுமதின்

**கற்பார் இராமபிரானையல் லால்மற்றும் கற்பரோ**[49] என்றபடி இராமபிரானிடம் பெரிதும் ஈடுபாடு கொண்ட குலசேகராழ்வார், அப்பெருமான் அவதாரம் செய்தது தொடங்கித் தன் பரந்தாமம் எழுந்தருளியவளவும் நிகழ்ந்த அருஞ்செயல்களை நினைந்து, வால்மீகி முனிவர் இராம சரித்திரத்தைப் பேசியனுபவித்ததுபோலத் தாமும் பேசியனுபவிக்கிறார். மேலும் இத்திருமொழியைத் தில்லைத் திருச்சித்திரகூடத்துத் திருமால் பரமாக்கி மொழிந்துள்ளார்.

## உள்ளுறை பொருள்

(1) ''அழகிய இடத்தையுடையதும் உயர்ந்த மதில்களினால் நாற்புறமும் சூழப்பட்டதும் 'அயோத்தியா' என்று சிறப்புற வழங்கப்படுவதான அழகிய நகரத்திலே அனைத்துலகங்களையும் விளங்கச் செய்கிற தன் ஒளியின் மேன்மையாலே, தான் பிறந்த சூரிய மரபுக்கு விளக்கமேற்படும் செய்து, ஒப்பற்றதொரு விளக்குபோல வந்தவதரித்து, தேவர்கள் துன்பந் தீர்த்து வாழச் செய்த பெரு வீரனும் சிவந்த திருக்கண்களையுடைய பெரிய காளமேகம் போன்ற வடிவினையுடையவனும், இராமன் என்னும் திருப்பெயர் கொண்டவனும், தில்லை நகரத்திலுள்ள திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளியிருக்கிற எங்கள் ஒப்பற்ற முதல்வனும் எமக்குத் தலைவனுமான பரமனைக் கண்கள் குளிரும்படி கண்டு வணங்கும் நாள் எந்நாளோ!''

---

49. திருவாய்மொழி; 7:5:1.

(2) ''செருக்குடன் வந்து எதிர்ப்பட்ட தாடகை யினுடைய மார்பைப் பிளந்து, குருதி வெளிவந்து கொட்டும்படி வலிய ஒப்பற்றதோர் அம்பைச் செலுத்தி, மறைமொழிகளை நிரம்பக் கொண்ட விசுவாமித்திர முனிவரின் வேள்வியினைப் பாதுகாத்து, மேலும் அந்த வேள்விக்கு இடையூறு செய்த சுபாகு முதலான வலிய அரக்கர்களுடைய உயிரைக் கொள்ளை கொண்ட வலிமை யுடையவன் யாரெனில் சிவந்த தளிர்களின் நடுவே மலர்ந்த பூக்களையுடையதும், காண்பவர் மகிழும்படியான அழகு பொருந்தினதும் செழுமையையுடையதுமான குளிர்ந்த சோலைகளையுடைய தில்லைநகர் திருச்சித்திர கூடந் தன்னுள், அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் திரண்டு வந்து துதிக்க, அழகிய சிங்காதனத்தில் வீற்றிருந்த அம்மான் அவன்தானே என்று அறிவீர்களாக.''

(3) ''சிவந்த ரேகைகள் படர்ந்த அழகிய கருமையான நீண்ட கண்களையுடைய சீதையை மணம்புரிதற்பொருட்டு, சினத்தையுடைய இடபத்தினை ஊர்தியாகக் கொண்ட சிவபிரானுடைய வில்லை முறித்து, பின் மணமுடித்து, மிதிலையினின்று திரும்பும் வழியில் கோடாலியாகிய ஆயுதத்தை ஏந்தியவனான பரசுராமனுடைய அஞ்சத்தக்க கட்டமைந்த சிறந்த வில்லைக் கையிற்கொண்டு வளைத்து அவனை வென்று, தான் அவதரித்த மரபான — வேற் படையையுடைய அரச மரபினரின் (க்ஷத்திரியர்களின்) பகையைத் தீர்த்த பெருவீரனும், பகைவர்கள் கண்ட மாத்திரத்திலேயே அஞ்சும்படியான உயர்ந்த மதிலையும் ஓங்கிய அட்டாலையென்னும் மதிற்பக்கத்திடத்தையு முடைய தில்லை நகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள் எழுந் தருளியிருக்கிறவனும், அடக்கியாளுதற்கு அரியதும் பகை வர்க்குப் பயங்கரமுமான வில்லை ஏந்திய பெரிய கையை யுடைய இராமபிரானை வணங்குகிற அடியார்களுடைய இரண்டு திருவடிகளையே வணங்கினேன்.''

(4) "கொத்துக் கொத்தாக மலர்ந்த பூக்களைச் சூடிய கடை குழன்ற கூந்தலையுடைய கைகேயியினது சொல்லின்படி, தொன்றுதொட்டு மரபாக வரும் அரசாட்சியைக் கைவிட்டு, கங்கையின் துறையைச் சிறந்த பக்தனான குகப்பெருமாள் புணை செலுத்தியுதவக் கடந்து காட்டிற்குச் சென்று சேர்ந்து அங்கு வந்த பரதனுக்குத் தனது மரவடியையும் அரசினையும் வழங்கி, சித்திரகூட பர்வதத்தில் எழுந்தருளியிருந்த இராமபிரானை இப் பொழுது பிற்காலத்தில் தில்லைத் திருச்சித்திர கூடம் தன்னுள் கண் குளிரும்படி கண்டு வணங்கப் பெற்ற இந்நில வுலகத்திலுள்ளவர்க்கு இமையவர்கள் சிறிதும் சமமாக மாட்டார்கள்!

(5) "எதிரிகளுடைய வலிமையைத் தோற்பிக்கின்ற மலை போன்ற பெரிய தோள்களையுடைய விராதன் என்னும் அரக்கனைக் கொன்று, சிறந்த தமிழ்மொழிக்கு உரியவரான அகத்திய முனிவர் கொடுத்த கட்டமைந்த வில்லைப் பெற்று, மானின் பார்வையை வெல்லும்படியான பார்வையழகையுடையவளாய் வந்த சூர்ப்பணகை யென்னும் அரக்கியின் மூக்கை யறுத்து, கரன் தூடணன் என்னும் அரக்கர்களின் உயிரைப் போக்கி, மாரீசனாகிய மாயமான் அழியும்படி தனது வில்லை வளைத்து அம்பு களை எய்தவனான இராமபிரானைத் தில்லைத் திருச் சித்திர கூடந் தன்னுள் தலைவணங்கிக் கைகூப்பித் துதிக்க வல்ல அடியார்கள் இப் பூமியில் நடமாடுதலால், இந்தப் பூமியானது பெரிய பேற்றினையுடைத்து.''

(6) "தான் விரும்பும் செல்வமாகப் பொருந்திய பிராட்டி பிரியப்பெற்று அதனால் வருத்தமுற்று, சடாயு என்னும் கழுகரசைப் பரமபதத்திற் செலுத்தி வாலிக்கு அஞ்சிக் காட்டில் கரந்துறைந்த வானர அரசனான சுக்கிரீவனுடன் நட்புச் செய்து, அவனது விருப்பத்தின்படி அவன் தமையனான வாலியை வதைத்து, இலங்கை மாநகரை, அதற்குத் தலைவனான அரக்கர் தம்

தலைவனாம் இராவணனுடைய செருக்கு ஒழியும்படி அனுமானைக் கொண்டு எரிப்பித்தவனும், தில்லைத் திருச் சித்திரகூடந் தன்னுள் இனிமையாய் எழுந்தருளியிருக்கிற அம்மானை — இராமபிரானைத் துதிக்கின்ற அடியார் களுடைய இணையடிகளையே துதிக்குந் தன்மையேன் ஆயினேன்.''

(7) ''ஒலிக்கின்ற கடலை வெற்றி நிறைந்த அம்பைக் கொண்டு கலக்கும்படி எய்யத் தொடங்கி அதில் அணை கட்டி, அந்த அணை வழியாகக் கடல் கடந்து அக் கரை சேர்ந்து, எரிக்கின்ற நீண்ட வேற்படையையுடைய அரக்கர் களும் இலங்கையர் கோனாகிய இராவணனும் ஆகிய அனைவரின் இனிய உயிரைக் கவர்ந்து கொன்று, அவ் இராவணனுடைய தம்பியான விபீடணனுக்கு அரசைக் கொடுத்து, இலக்குமியின் அவதாரமான பிராட்டியுடனே இனிமையாகச் சேர்ந்த எல்லா வகைச் செல்வங்களு முடையவனும் தில்லைத் திருச்சித்திரகூடந் தன்னுள் தனது மேன்மை தோன்ற எழுந்தருளியிருப்பவனுமான இராம பிரானது திருவடிகளைத் தலைமேற் தாங்குதலாகிற அரசாட்சியைப் பெற விரும்புவனேயல்லாமல் அதற்கு மாறாக மற்ற அரசாட்சியை ஒரு பொருளாக மதிக்க மாட்டேன்.''

(8) ''அழகிய உயர்ந்த பொன்னையும் இரத்தினங் களையுங் கொண்டு அமைக்கப்பட்ட மாட மாளிகைகளை யுடைய அயோத்தி மாநகருக்கு மீண்டுவந்து அரசாட்சியைப் பெற்று, தன்னால் முன்னர்க் கொல்லப்பட்ட இராவண னுடைய பெரிய பழைய கதைகளையெல்லாம் அகத்திய மாமுனிவன் வாயாற் சொல்லக் கேட்டு, மிதிலை நகரத்தில் தோன்றிய பிராட்டி உலக முழுவதும் வாழும்படி பெற்ற தன் மைந்தர்களான குச லவர்களுடைய சிவந்த பவளத் துண்டு போன்ற வாயினால் தனது சரித்திரமான இராமாயணத்தைக் கேட்டருளியவனான—தில்லைத் திருச்

சித்திரகூடந் தன்னுள் எழுந்தருளியிருக்கிற எமது தலைவனுடைய சரித்திரத்தைக் காதினாற் கேட்டு, அப் பெருமானைக் கண்ணாற் கண்டு வணங்கப் பெறுவோம் யாம். அதுவேயன்றி இனிய அமுதத்தையும் ஒரு பொருளாக மதிக்கமாட்டோம் அல்லவா?''

(9) ''நிறைந்த தவத்தினையுடைய சம்புகனை அவனிருக்குமிடந் தேடிச் சென்று தலையறுத்து, சிறந்த மறையோன் மகனின் உயிரை மீட்டுக் கொடுத்து, அக்த்திய மாமுனிவன் கொடுத்த பெருவிலையுள்ள இரத் தினமாலையை அணிகலனாகச் சார்த்தியருளி, இலவணன் என்னும் அசுரனைத் தன் தம்பி சத்துருக்கனைக் கொண்டு கொன்று, துர்வாச முனிவனது சாபத்தால் திறல் விளங்கும் தன் தம்பி இலக்குவனைத் துறந்தவனும், தில்லைத் திருச் சித்திரகூடந் தன்னுள் எப்போதும் வசிப்பவனுமான இராமபிரானை மறவாமல் எப்போதும் துதிக்கின்ற மனத்தையுடைய நாம் இனித் துன்பத்தை அடைய மாட்டோம்.''

(10) ''தன்னடிச் சோதிக்கு எழுந்தருள்கிற அந்நாளில் அயோத்தி மாநகரிலுள்ள சங்கமம், தாவரமுமான எல்லா வுயிர்களையும் பரமபதத்திற்குப் போகச் செய்து, வலிமை யையுடைய பாம்புகளுக்குப் பகையான கருடன் மேல் ஏறிக் கொண்டு அசுரர்களை வெற்றி கொண்டு, வெற்றிச் செல்வி விளங்கப் பெற்ற அழகிய நீண்ட தனது திருக்கைகள் நான்கும் விளங்க, பரமபதத்திலுள்ளாரெல்லாம் எதிர் கொண்டு உபசரிக்கும்படி தனது பழமையான அப் பரம பதத்திலே போய்ச் சேர்ந்து, தன் மேன்மையெல்லாம் தோன்றும்படி இனிமையான சிங்காதனத்தில் எழுந்தருளி யிருந்த அம்மான் தன்னைத் தில்லைச் திருச்சித்திரகூடத் தில் எந்நாளும் நமக்காக வசித்தருளும் அப்பெருமான் இவ் இராமபிரானே என்றறிந்து துதித்து, அவனுக்கு அடியவர் களான நீங்கள் நாள்தோறும்—எப்பொழுதும் வணங்கி உய்வீர்களாக.''

(11) "தில்லைநகர்த் திருச்சித்திரகூடந் தன்னுள் திறல் விளங்கும் அனுமானுடனே எப்போதும் உறையும் எம் பெருமானைக் குறித்து அழிவில்லாத புகழையுடைய தசரத சக்கரவர்த்தியின் குமாரனாய்ப் பிறந்தது முதல் பரமபதம் புக்கது இறுதியாக இராமாயண கதை முழுதையும் சங்கிரக மாக அமைத்து, பகைவர்களைக் கொல்லுதல் மேவிய படைக்கலன்களையுடைய சேனையையும் வெற்றியையும் ஒளியையுமுடைய வாளாயுதத்தையுமுடையவரும் உறையூரி லுள்ளார்க்குத் தலைவரும் வெண் கொற்றக் குடையை யுடையவருமான குலசேகராழ்வார் அருளிச் செய்த சிறந்த இயற்றமிழ் இலக்கணத்திற்கு இயைந்த இனிய தமிழ்ப் பிரபந்தமான இப் பத்துப் பாடல்களையும் கற்று வல்லவர்கள் பரமபதத்தில் விளங்குகிற நாரணனுடைய திருவடித் தாமரைகளிற் சேரப் பெறுவார்கள்."

இவ்வாறாகப் பத்தாந் திருமொழியினைக் கொல்லி நகர்க்கிறை கூடல் காவலன் கொடைக் குலசேகரன் தலைக் கட்டியுள்ளார்.

### நூலாராய்ச்சி

## I. திருமொழிகளின் உள்ளீடு

பெருமாள் திருமொழியில் அமைந்துள்ள பத்துத் திருமொழியும் ஒவ்வோர் உள்ளீட்டினைக் கொண்டு எழுந்தவை. ஒவ்வொரு திருமொழியின் இறுதிப் பாட லிலும் குலசேகரர் அத்திருமொழி எப்பொருளைக் குறிக் கொண்டு எழுந்தது என்பதனைச் சொல்கின்றார். அவற்றை முறையே காண்போம். முன்னரே ஒவ்வொரு திருமொழியின் உள்ளீடும் விளங்க உரைக்கப்பட்டிருப்ப தால் ஈண்டுச் செய்யுட் பகுதி மட்டும் தரப்படுகின்றது.

## முதல் திருமொழி

திரைவிளங்கு கரைப்பொன்னி நடுவு பாட்டுத்
திருவரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
கடல்விளங்கு கருமேனி யம்மான் றன்னைக்
கண்ணாரக் கண்டுகக்குங் காதல் தன்னால்
குடைவிளங்கு விறற்றானைக் கொற்ற வொள்வாட்
கூடலர்கோன் கொடைக்குலசே கரன்சொற்
செய்த
நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ் நண்ணு வாரே.[50]

## இரண்டாந் திருமொழி

அல்லி மாமலர் மங்கை நாதன்
அரங்கன் மெய்யடி யார்கள்தம்
எல்லை யில்லடி மைத்தி றத்தினில்
என்று மேவு மனத்தனாம்
கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக் கோன்குல சேகரன்
சொல்லி னின்றமிழ் மாலை வல்லவர்
தொண்டர் தொண்டர்க ளாவரே.[51]

## மூன்றாம் திருமொழி

அங்கை ஆழி அரங்கன் அடியினை
தங்கு சிந்தைத் தனிப்பெரும் பித்தனாய்க்
கொங்கர் கோன்குல சேகரன் சொன்ன சொல்
இங்கு வல்லவர்க் கேதமொன் றில்லையே.[52]

---

50. *பெருமாள் திருமொழி;* 1 : 11.
51. ,, 2 : 10.
52. ,, 3 : 9.

### நான்காந் திருமொழி

மன்னியதண் சாரல் வடவேங் கடத்தான்றன்
பொன்னியலுஞ் சேவடிகள் காண்பான்
புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலுங் கூர்வேற் குலசே கரன்சொன்ன
பன்னியநூல் தமிழ்வல்லார் பாங்காய பக்தர்களே.[53]

### ஐந்தாந் திருமொழி

வித்துவக்கோட் டம்மானீ வேண்டாயே யாயிடினும்
மற்றாரும் பற்றிலே னென்றவனைத் தாள்நயந்து
கொற்றவேற் றானைக் குலசே கரன்சொன்ன
நற்றமிழ் பத்தும் வல்லார் நண்ணார் நரகமே.[54]

### ஆறாந் திருமொழி

அல்லி மலர்த்திரு மங்கை கேள்வன்
தன்னை நயந்திள வாய்ச்சி மார்கள்
எல்லிடப் பொழுதினி லேமத் தூடி
எள்கி யுரைத்த யுரையதனைக்
கொல்லி நகர்க்கிறை கூடற் கோமான்
குலசே கரனின் னிசையின் மேவிச்
சொல்லிய இன்தமிழ் மாலை பத்தும்
சொல்லவல் லார்க்கில்லை துன்பந் தானே[55].

### ஏழாந் திருமொழி

மல்லை மாநகர்க் கிறையவன் தன்னை
வான்செ லுத்திவரு தீங்கணை மாயத்
தெல்லை யில்பிள்ளை செய்வன காணாத்
தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்

---

53. *பெருமாள் திருமொழி*; 4 : 11.
54. ,, 5 : 10.
55. ,, 6 : 10.

கொல்லி காவலன் மாலடி முடிமேற்
கோல மாங்குல சேகரன் சொன்ன
நல்லி சைத்தமிழ் மாலைவல் லார்கள்
நண்ணு வாரொல்லை நாரண னுலகே.[56]

## எட்டாந் திருமொழி

கன்னிநன்மா மதில்புடை சூழ்
கணபுரத்தென் காகுத்தன்
தன்னடிமேல் தாலேலோ
என்றுரைத்த தமிழ்மாலை
கொன்னவிலும் வேல்வலவன்
குடைக்குலசே கரன்சொன்ன
பன்னியநூல் பத்தும்வல்லார் பாங்காய பக்தர்களே.[57]

## ஒன்பதாந் திருமொழி

ஏராந்த கடுநெடுமா விராமனாய்
வனம்புக்க வதனுக் காற்றாத்
தாராந்த தடவரைத்தோள் தயரதன்றான்
புலம்பியவப் புலம்பல் தன்னைக்
கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்
குடைக்குலசே கரன்சொற் செய்த
சீரார்ந்த தமிழ்மாலை யிவைவல்லார்
தீநெறிக்கண் செல்லார் தாமே.[58]

## பத்தாந் திருமொழி

'' தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
திறல்விளங்கு மாருதியோ டமர்ந்தான் றன்னை
எல்லையில்சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்
றது முதலாத் தன்னுலகம் புக்க தீறாக்

---

56. பெருமாள் திருமொழி: 7 : 11.
57. ,, 8 : 11.
58. ,, 9 : 11.

கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாட்
கோழியர்கோன் குடைக்குலசே கரன் சொற்
செய்த
நல்லியலின் றமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ் நண்ணுவாரே''[59]

## II. குலசேகரரைப் பற்றிய குறிப்புகள்

ஆசிரியர் தம்மைப் பற்றியே இறுதிப்பாடலில் கூறிக் கொள்கிறார். அதன்வழி ஆசிரியரைப் பற்றிய குறிப்பு களை நாம் அறிகிறோம். மேலும் தம் திருமொழியைக் கற்று வல்லவர்கள் தீதில் நன்னெறி சேர்வர் என்று ஆழ்வார் உறுதியாக எண்ணுகின்றார். அதனைக் காண்போம்.

(1) குடை விளங்கு விறற்றானைக் கொற்ற
வொள்வாட்[60]
கூடலர்கோன் கொடைக் குலசே கரன்

(2) கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக் கோன்குல சேகரன்[61]

(3) கொங்கர் கோன்குல சேகரன்[62]

(4) கொன்னவிலுங் கூர்வேற் குலசேகரன்[63]

(5) கொற்றவேற் றானைக் குலசே கரன்[64]

(6) கொல்லி நகர்க்கிறை கூடற் கோமான்
குலசே கரன்[65]

---

59. பெருமாள் திருமொழி: 10 : 11.
60. ,, 1 : 11 : 3.
61. ,, 2 : 10 : 3.
62. ,, 3 : 9 : 3.
63. ,, 4 : 11 : 3.
64. ,, 5 : 10 : 3.
65. ,, 6 : 10 : 3.

7) கொல்லி காவலன் மாலடி முடிமேற்
கோல மாங்குல சேகரன்[66]

(8) கொன்னவிலும் வேல்வலவன்
குடைக்குலசே கரன்[67]

(9) கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்
குடைக்குலசே கரன்[68]

(10) கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாட்
கோழியற்கோன் குடைக்குலசே கரன்[69]

இப் பகுதி கொண்ட குலசேகரர் வெண் கொற்றக் குடையினையும் ஆற்றல் பொருந்திய சேனையினையும், வெற்றி நிறைந்த ஒளிவிடும் வாளினையும் உடையவரா யிருந்தார் என்பது விளங்கும்.

மேலும் கூடலர்கோன்— அதாவது மதுரைக்கு வேந்தர் என்று மூன்று பாடல்களில்[70] குறிப்பிடப் பெறுகிறார். அடுத்து, கோழியாகிய உறையூர்க்கு இறையாக—அரசராச மூன்று பாடல்களில்[71] கூறிக் கொள்கிறார். கொல்லி காவலனாக மூன்று பாடல்களில்[72] கூறிக் கொள்கிறார். கொங்கர் நாட்டுக்கு அரசர் என்று தம்மை ஒரு பாடலில்[73] கூறிக் கொள்கிறார். ஆக, குலசேகரர் சேர, சோழ, பாண்டிய, கொங்கு நாடுகளுக்கும் அரசர் என்று தம்மைக் கூறிக் கொள்ளக் காணலாம்.

---

66. பெருமாள் திருமொழி ; 7 : 11 : 3.
67. ,, 8 : 11 : 3.
68. ,, 9 : 11 : 3.
69. ,, 10 : 11 : 3.
70. ,, 11, 21, 61.
71. ,, 21, 94, 105.
72. ,, 21, 61, 72.
73. ,, 30.

மேலும் தம்மைக் கொடையில் மேம்பட்டவராக ஒரு பாடலில்[74] குறிப்பிட்டுள்ளார். தம் வெண்கொற்றக் குடையின் சிறப்பினை நான்கு பாடல்களில்[75] குறிப்பிட்டுள் ளார். தம் அடல் பொருந்திய சேனையை மூன்று பாடல் களில்[76] சிறப்பாகக் கூறியுள்ளார். தம்முடைய ஒளிவிடும் வேற் படையினை மூன்று பாடல்களில்[77] சிறப்பாகக் கிளத்தியுள்ளார். தம் வாட் படையினை இரண்டு பாடல் களில் குறிப்பிட்டுள்ளார்.

## III. தமிழின் உயர்வு

தமிழை நடைமாணச் சிறப்பித்துக் குலசேகரர் தம் திருமொழியிற் கூறியிருக்கக் காணலாம்.

முதல் திருமொழியில் திருவரங்கத்து அம்மானைக் குறிப்பிடும்பொழுது 'அம் தமிழ் இன்பப் பாவினை'[79] என்று குறிப்பிட்டுள்ளார்.

தம் பாடலை,

நடை விளங்கு தமிழ்மாலை (11)
சொல்லின் இன்றமிழ் மாலை (21)
நூற்றமிழ் (41)
நற்றமிழ் (51)
இன்றமிழ் (61)
நல்லி சைத்தமிழ் மாலை (72)
சீரார்ந்த தமிழ்மாலை (94)
நல்லியலின் தமிழ் மாலை (105)

---

74. பெருமாள் திருமொழி; 11.
75. ,, 11, 83 94, 105.
76. ,, 11, 51, 105.
77. ,, 41, 83, 94.
78. ,, 11, 105.
79. பாடல்: 4.

இப்பகுதியால் குலசேகராழ்வார் தமிழ் மொழியினி டத்துக் கொண்டிருந்த அளவிடற்கரிய அன்பும் மதிப்பும் புலனாகக் காணலாம். அகத்தியரை 'வண்டமிழ் மா முனி'[80] என்று குறிப்பிட்டுள்ளார்.

## IV. நகர் வருணனை

குலசேகரர் தம் பாடல்களில் திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துவக்கோடு, திருக்கண்ணபுரம், திருச்சித்ரகூடம், அயோத்தி முதலிய நகரங்களை வருணித் துள்ளார். அவற்றை முறையே காண்போம்.

### (1) திருவரங்கம்

திருவரங்கப் பெருநகர் (1)
கடியரங்கம் (2)
அணியரங்கம் (3)
பற்றற்றார்கள் பயிலரங்கம் (4)
மணிமாட மாளிகைகள் மல்கு செல்வ
மதிலரங்கம் (5)
களிமலர்சேர் பொழிலரங்கம் (6)
அணியரங்கம் (7)
சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கம் (8)
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கம் (9)
அன்பொடு தென் றிசைநோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கம் (10)

### (2) திருவேங்கடம்

தேனார்பூஞ் சோலைத் திருவேங்கடம் (32)
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம்
(34)

---

80. பெருமாள் திருமொழி; 99.

எழில்வேங் கடம் (35)
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம் (36)
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடம் (37)
வெறியார் தண் சோலைத் திருவேங் கடம் (38)
மண்ணியதண் சாரல் வடவேங்கடம் (41)

## (3) திருவித்துவக்கோடு

விரைகுழுவு மலர்ப்பொழில் சூழ் வித்துவக்கோடு
விண்டோய் மதில்புடைசூழ் வித்துவக்கோடு (43)
மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோடு (44)

## (4) திருக்கண்ணபுரம்

கன்னிநன்மா மதில்புடைசூழ் கணபுரம் (73)
கண்டவர்தம் மனம் வழங்குங் கணபுரம் (74)
கங்கையினும் தீர்த்தமலி கணபுரம் (75)
காமரங்கள் இசைபாடும் கணபுரம் (76)
கற்றவர்கள் தாம்வாழுங் கணபுரம் (78)
காலின்மணி கரையலைக்கும் கணபுரம் (79
கலைவலவர் தாம்வாழும் கணபுரம் (80)
களைகழுநீர் மருங்கலரும் கணபுரம் (81)
காவிரிநன் னதிபாயும் கணபுரம் (82)
கன்னிநன்மா மதில்புடைசூழ் கணபுரம் (83)

## (5) திருச்சித்ரகூடம்

செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண் சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் (96)
தெவ்வரஞ்சு நெடும்புரிசை யுயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் (97)

மற்றும் தென்னிலங்கை,[81] அயோத்தி,[82] ஆலிநகர் முதலிய நகர்களும் குறிக்கப்பட்டுள்ளன. அயோத்தி,

அங்கணெடு மதில்புடை சூழ் அயோத்தி'[83]

எனப்பட்டுள்ளது.

(6) மலைநாட்டுச் சொல் வழக்குகள்

(1) அச்சன் — தந்தை (20)
(2) பிற்றைநாள் — மறுநாள் (57)

## V. இசைக் குறிப்பு

பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் (34)
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் (36)
காமரங்கள் இசைபாடும் கணபுரம் (76)

பல பண்களைப் பாடும் வண்டுக் கூட்டங்கள் என்பது. 'தென்ன என' என்பது ஆளத்தி முறையாகும். 'காமரம்' என்பது சீகாமரம் என்னும் பண்ணைக் குறிக்கும். மேலும் 'தாலேலோ' எனத் திருக்கண்ணபுரத்து (எட்டாந் திருமொழி) இராகவனைத் தாலாட்டுப் பாடலில் பாடியுள்ள பாடல்கள் நீலாம்பரி இராகத்தில் பாட வேண்டிய முறையில் அமைந்துள்ளன.

## VI. திருமால் கூறப்படும் முறை

கருமணி (1)
கோமளம் (1)
மாயோன் (2)
அம்மான் (3)

---

81. 73.
82. 78, 95.
83. 79.

மால் (4)
வேலை வண்ணன் (4)
கண்ணன் (4)
ஆயரேறு (4)
அமரர்கள்தம் தலைவன் (4)
அம் தமிழ் இன்பப் பா (4)
வடமொழி (4)
கோ (4)
மணிவண்ணன் (5)
அம்மான் (5)
கடல் வண்ணர் (6)
மாயோன் (7)
மாலோன் (8)
பேராழியம்மான் (9)
அணியரங்கன் (10)
கடல்விளங்கு கருமேனி யம்மான் (11)
தேட்டருந்திறல் தேன் (12)
தென்னரங்கன் (12)
திருமாதுவாழ் வாட்டமில் வனமாலை மார்பன் (12)
அரங்கன் (13)
எம்பிரான் (15)
அரங்கன் ( 5)
நாரணன் 15)
தென்னரங்கன் (16)
அரங்கன் எம்மான் (17)
அரும்பெரும் சுடர் (18)
பெருந்திரு மார்பன் (19)
மலர்க் கண்ணன் (19)

அத்தன் (20)
அச்சன் (20)
அரங்கன் (20)
அல்லி மாமலர் மங்கை நாதன் (21)
அரங்கன் (21)
ஐயன் (22)
அரங்கன் (22)
அரங்கன் (23)
அரங்கன் (24)
அனந்தன் (24)
நாரணன் (24)
நரகாந்தகன் (24)
அண்டவாணன் (25)
அரங்கன் (25)
ஆயன் (26)
அரங்கன் (26)
அந் தாமரைப் பேதை மாமண வாளன் (26)
எம்பிரான் (27)
செங்கண்மால் (28)
அத்தன் (28)
அரங்கன் (28)
ஆயன் (29)
அரங்கன் (29)
அரங்கன் (30)
வேங்கடக்கோன் (33)
மாயோன் (34)
எம்பெருமான் (35)
திருமால் (39)

நெடியோன் (39)
வேங்கடவன் (39)
எம்பெருமான் (40)
வடவேங்கடத்தான் (41)
வித்துவக் கோட்டம்மான் (42, 43, 44, 44, 45, 46, 47, 48, 49, 50, 51)
வாசுதேவன் (52)
தாமோதரன் (53)
நம்பி (56)
எம்பெருமான் (57)
நம்பீ (58)
அல்லி மலர்த்திரு மங்கை கேள்வன் (61)
கேசவன் (63)
தண்ணந் தாமரைக் கண்ணன் (67)
குழகன் (68)
கோமளப் பிள்ளாய் (68)
கோவிந்தா (68)
கருமணி (73, 74, 75, 76, 78)
இராகவன் (73, 74, 75, 76)
சனகன் திருமருகா (75)
தாசரதீ (75)
தயரதன்றன் மாமதலாய் (76)
மைதிலிதன் மணவாளன் (76)
திருகண்ண புரத்தரசு (77)
அற்றவர்கட் கருமருந்து (78)
அயோத்திநகர்க் கதிபதி (78)
கணபுரத்தென் கருமணி (79)
ஆலிநகர்க் கதிபதி (79)

அயோத்திமன் (79)
சீராமா (78, 79)
காகுத்தன் (86)
கரியகோ (86)
அணிநகரத் துலகனைத்தும் விளக்குஞ் சோதி (95)
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்கு (95)
விண்முழுதும் உயக் கொண்ட வீரன் (95)
செங்கணெடுங் கருமுகில் (95)
எங்கள் தனி முதல்வன் (95)
எம்பெருமான் (95)
மைந்தன் (96)
அம்மான் (96)
வேல்வேந்தர் பகைதடிந்த வீரன் (97)
இராமன் (97)
அம்மான் (100)
இராமன் (100)
திருமகளோ டினிதமர்ந்த செல்வன் (101)

## IV. திருமால் வருணனை

ஆதிசேடன் என்னும் அரவரசன்மீது படுத்துக் கண்ணுறங்கும் கடல் நிறங் கொண்டவனும் தாமரை போன்ற கண்களையுடையவனும், ஒளி நிறைந்த சந்திரன் போன்ற முகத்தினையுடையவனுமாகிய அரங்கன் என்று முதல் திருமொழியில் குறிக்கப் பெற்றுள்ளது.

" .................. ....................உரக மேறி
கண்வளருங் கடல்வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிசேர் திருமுகமும்[84]........................ "

---

84. பெருமாள் திருமொழி; 1 : 6 : 3-4.

அம்பு நிறைந்த நீண்ட சாரங்கமாகிய வில்லினையும், வளைந்த பாஞ்சசன்னியம் என்ற சங்கினையும், பகைவரைக் கொலை செய்தலில் வல்ல சக்கராயுதத்தினையும் கௌமோதகி என்ற கதையினையும், வெற்றி பொருந்திய ஒளிவிடுகின்ற நாந்தகம் என்னும் வாளினையும் உடையவர் பெருமாள். காற்றுப் போலும் வேகமாகப் பறக்கின்ற பெரிய திருவடி என்னும் கருடாழ்வார் அரங்கத் தம்மானின் பக்கத்தே நின்று காவல் செய்கின்றார்:

**"கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம்**
**கொலையாழி கொடுந்தண்டு கொற்ற**
**வொள்வாள்**
**காலார்ந்த கதிக்கருட னென்னும் வென்றிக்**
**கடும்பறவை யிவையனைத்தும் புறஞ்சூழ்**
**காப்ப"[85]**

இப்பகுதியோடு,

**"உறகல் உறகல் உறகல் ஒண்சுட ராழியே சங்கே**
**அறவெறி நாந்தக வாளே அழகிய சார்ங்கமே**
**தண்டே**
**இறவுபடாம லிருந்த எண்மர் உலோகபா லீர்காள்**
**பறவை யரையா உறகல் பள்ளி யறைகுறிக்**
**கொண்மின்."[86]**

என வரூஉம் பெரியாழ்வார் பாசுரமும் கருதத் தக்கது.

இரண்டாந் திருமொழியில், 'தேடிப் பெறுதற்கரிய வலிமையை அளிக்கும் தேன்போல இனிமையானவனை, தென்னரங்கத்தில் வாழ்பவனை, இலக்குமி விரும்பி யுறையும் வாட்டமில்லாத மாலையினை யணிந்த மார்பனை' என்று அரங்கனை வருணிக்கின்றார் ஆழ்வார்.

---

85. பெருமாள் திருமொழி; 1 ; 8 : 2-3.
86. பெரியாழ்வார் திருமொழி; 5 : 2 : 9.

" தேட்டருந்திறல் தேனினைத்தன்
அரங்க னைத்திரு மாதுவாழ்
வாட்ட மில்வன மாலை மார்பனை[87]

முதலும் முடிவுமற்றவனும் எங்கும் நிறைந்தவனும், அற்புதமானவனும், வானவர்தம் தலைவனுமாகிய அரங்கன் என்கிறார் ஆழ்வார்.

" ஆதி யந்த மனந்த மற்புத
மான வானவர் தம்பிரான். "[88]

மேகங்களின் திரளையொத்த திருமேனியையும் அழகிய ஒளியினையும் முத்துகள் போல் வெளுத்த புன்சிரிப்பை யுடைய சிவந்த திருப்பவளத்தையும் முத்துமாலை தாங்கிய மார்பினையுடையவனுமாகிய அரங்கன் என்று பாடுகிறார் ஆழ்வார்:

" காரி னம்புரை மேனி நற்கதிர்
முத்த வெண்ணகைச் செய்யவாய்
ஆர மார்பன் அரங்கன். "[89]

அலையெறியும் திருப்பாற்கடலில் பள்ளி கொள்பவனும் தேனுக்காக வண்டுகள் குடையும் திருத்துழாய் மாலையை அணிந்தவனும், மலைபோலும் பெருமை தங்கிய திருமார்பையுடையவனும், செந்தாமரை மலர் போன்ற கண்களை யுடையவனுமான அரங்கநாதப் பெருமான் என்கிறார் ஆழ்வார்:

" மாலை யுற்ற கடற்கி டந்தவன்
வண்டு கிண்டு நறுந்துழாய்
மாலை யுற்ற வரைப் பெருந்திரு
மார்பன். "[90]

---

87. பெருமாள் திருமொழி; 2 : 1-2.
88. பெருமாள் திருமொழி; 2 : 6 : 1.
89. பெருமாள் திருமொழி; 2 : 7 : 1-2.
90. பெருமாள் திருமொழி; 2 : 8 : 1 : 1-2.

மூன்றாந் திருமொழியில், அரங்கன் எல்லா அண்டங்களிலும் வாழ்பவன் என்றும், பேய்முலைப் பால் உண்டவனென்றும் குறிக்கப் பெறுகிறான்.

" அண்ட வாணன் அரங்கன்வன் பேய்முலை
உண்ட வாயன். "[91]

முதலாகவுடையவன், ஆயர் குலத்திலத்தினன், அரங்கன், அழகிய தாமரை மலரில் உறையும் இலக்குமியின் கொழுநன் என்று குலசேகரர் அரங்கனைக் குறிப்பிடுகின்றார்;

" ஆதி ஆயன் அரங்கனந் தாமரைப்
பேதை மாமண வாளன். "[92]

நான்காந் திருமொழியில் அவ்வளவாக வருணனைக்கு இடமில்லை.

இது போன்றே உவமைகள் வழிக் கருத்து விளக்கப் பெறுகின்ற ஐந்தாந் திருமொழியிலும் திருமால் வருணனைக்கு இடமில்லை.

ஏழாந் திருமொழியில் கண்ணனுடைய பிள்ளைமை விளையாட்டுகள் குறிக்கப் பெறுகின்றன.

செக்கச் சிவந்த ஆடையும், திருமுகமும், சிவந்த கோவைக்கனி போன்ற உதட்டினையும் குழல் முடியினையும் உடையவன்.

" செய்ய உடையுந் திருமுகமுஞ்
செங்கனி வாயுங் குழலும். "[93]

அடுத்து, மங்கலகரமாய்ப் பார்வைக்கு நன்கு தோற்றுகிற வனமாலையானது மார்பிலே ஒளிவிட, மயிலிறகுகளைச் சூடிக்கொண்டும், பளபளவென்ற மெல்லிய

---

91. பெருமாள் திருமொழி; 3 : 4 : 3-4.
92. பெருமாள் திருமொழி; 3 : 5 : 3-4.
93. பெருமாள் திருமொழி; 6 : 7 : 3.

ஆடையை இடுப்பிலே சாத்திக் கொண்டும், அழகிய பூங்கொத்துகளைக் காதிலே செறிய அணிந்து கொண்டும் கண்ணன் அழகிய பெண்களுடன் தெருவிற் செல்வதாகக் குலசேகரர் குறிப்பிட்டுள்ளார்:

"மங்கல நல்வன மாலை மார்பில்
இலங்க மயிற்றழைப் பீலி சூடிப்
பொங்கிள வாடை யரையிற் சாத்திப்
பூங்கொத்துக் காதிற் புணரப் பெய்து.

ஏழாந் திருமொழியில், ஆலையிலிட்டு ஆடத் தகுந்த நீண்ட கரும்பு போன்ற கண்ணன் என்றும், தாமரை மலர் போன்று விசாலமான திருக்கண்களையுடையவன் என்றும், கடலின் நிறம் போன்ற நிறத்தையுடையவன் என்றும், யானைக் குட்டி போன்றவன் என்றும், நறுமணம் மிக்க நீண்ட திருக்குழலையுடையவன் என்றும் கண்ண பிரான் குலசேகராழ்வாரால் வருணிக்கப்பட்டுள்ளான்:

"ஆலை நீள்கரும் பன்னவன் தாலோ
அம்பு யத்தடங் கண்ணினன் தாலோ
வேலை நீர்நிறத் தன்னவன் தாலோ
வேழப் போதக மன்னவன் தாலோ
ஏல வார்குழல் என்மகன் தாலோ."[9]

மகிழ்ச்சியை விளைவிக்கும் நிறை நிலாவினை யொத்த திருமுகமும், திண்ணிதான திருக்கைகளும், திருமார்பும், வலிமை சான்ற திருத்தோள்களும், தளிரையும் மலரையு முடைத்தாய்க் கறுத்த திருக்குழற் கற்றையும் பிறைநிலா போன்ற திருநெற்றியும், விசாலமான தாமரை போன்ற திருக்கண்களும் கொண்டு இளமைப் பொலிவோடு கண்ண பிரான் விளங்குவதாக ஆழ்வார் குறிப்பிடுகின்றார்:

---

94. பெருமாள் திருமொழி; 6 : 9 : 1-2.

95. பெருமாள் திருமொழி; 7 : 1 : 1-3.

**" களிநி லாவெழில் மதிபுரை முகமும்**
**கண்ண னேதிண்கை மார்புந்திண்டோளும்**
**தளிர்ம லர்க்கருங் குழற்பிறை யதுவும்**
**தடங்கொள் தாமரைக் கண்களும் பொலிந்த**
**இளமை யின்பத்தை "**[96]

எட்டாந் திருமொழி தாலாட்டாய் அமைந்துள்ளது' அங்கு விவரமான வருணனைக்கு இடமில்லை.

ஒன்பதாந் திருமொழி தசரதன் புலம்பலாய் அமைந்துள்ளது. அங்கும் விரிந்த வருணனைக்கு இடமில்லை.

பத்தாந் திருமொழியில் இராமன் சூரிய குலத்திற்கோர் விளக்கு என்று குறிக்கப் பெற்றுள்ளான் :

**" வெங்கதிரோன் குலத்திற்கோர் விளக்கு. "**[97]

சிவந்த நீண்ட பெரிய கண்களையும் கருமையான மேகத்தைப் போன்ற மேனியினையும் உடைய இராமன் என்று குலசேகரர் குறிப்பிடுகின்றார் :

**" செங்கணெடுங் கருமுகிலை இராமன் தன்னை. "**[98]

இவ்வாறு குலசேகரர் தம் பாடல்களில் திருமாலினைத் திறம்படப் பலவிடங்களில் வருணித்துள்ளார்.

## VIII. இராமாவதாரச் செய்திகள்

குலசேகரர் இராமாவதார நிகழ்ச்சிகளிற் பெரிதும் ஈடுபட்டவர். இராம காதை படிப்பதைக் கேட்கும்போது அக் கதை நிகழ்ச்சியில் ஒன்றிய உணர்வுடையர் ஆகி விடுவார் என்று அவர் வரலாறு நமக்கு உணர்த்துகின்றது. எனவே தம் பெருமாள் திருமொழியிற் பலவிடங்களில் இராமாவதாரத்தைப் பற்றிய செய்திகளைப் பாங்குறக் குறிப்பிட்டுள்ளார். அவற்றைக் காண்போம்:

---

96. பெருமாள் திருமொழி; 7 : 4 : 1-3.
97. பெருமாள் திருமொழி; 10 : 1-2.
98. பெருமாள் திருமொழி; 10 : 1-3.

எட்டாந் திருமொழி இராமாவதாரத்தில் நற்றாயான கோசலையார் பெற்ற பேற்றையும் மற்ற வீரச் செயல் களையும் நினைந்து இராமபிரானது இளமைப் பருவத்தைத் தாலாட்டு முகத்தாற் கொண்டாடும் போக்கில் அமைந் துள்ளது.

நிலைத்த புகழுடைய கோசலையின் அழகிய திரு வயிற்றிற் பிறந்தவன்; தென்னிலங்கைக்குத் தனி வேந்த னாகிய இராவணனின் பத்துத் தலைகளையும் முடி களையும் சிதறும்படி செய்தவன். இவ்வாறு இராமன் கூறப்படுகிறான்:

**" மன்னுபுகழ்க் கோசலைதன்**
**மணிவயிறு வாய்ந்தவனே**
**தென்னிலங்கைக் கோன்முடிகள்**
**சிந்துவித்தாய்."**[99]

இயக்கியாயிருந்து அகத்திய சாபத்தால் அரக்கியாய்க் கொடுமையிழைத்து வந்த வலிய ஆற்றல் வாய்ந்த தாடகையின் மார்பின் மீது அம்பையெய்து அவ்வம்பு முதுகின் வழியே வெளியேறச்செய்ய வில்லை வளைத்தவன் இராமன் என்பது,

**" திண்டிறலாள் தாடகைதன்**
**உரமுருவச் சிலைவளைத்தாய்"**[100]

என்ற தொடரால் வெளிப்படுகின்றது.

நிறைந்த பெரும் புகழுடைய சனக சக்கரவர்த்தியின் மருகன் என்பதனையும் தசரதனுடைய புதல்வன் என்பதனையும்,

**" தங்குபெரும் புகழ்ச்சனகன்**
**திருமருகா தாசரதீ"**[101]

என்ற தொடரால் அறிகின்றோம்.

---

99. பெருமாள் திருமொழி; 8 : 1-2.
100. பெருமாள் திருமொழி; 8 : 2:2.
101. பெருமாள் திருமொழி; 8 : 3:2.

அடுத்த பாடலில்,

**" மைதிலி தன் மணவாளா "**[102]

என்று இராமனைக் குறித்துள்ளார்.

நிலவுலகம் முழுதும் பெரிய அரச செல்வத்தினைப் பரதனுக்கே தந்துவிட்டு, புகுதற்குப் பொல்லாங்கு விளைவிக்கும் அருமையான காட்டிற்குப் பேரன்பு பாராட்டும் இளையாழ்வாராம் இலக்குவனோடு சென்ற வீரமும் வெற்றியுஞ் செறிந்த மார்பனே என்று இராமனைப் பாராட்டியுள்ளார்:

**" பாராளும் படர்செல்வம்**
**பரதநம்பிக் கேயருளி**
**ஆராவன் பிளையவனோ**
**டருங்கானம் அடைந்தவனே."**[103]

இராமபிரான் காடேகும் பிரிவிற்காற்றாது அயோத்தி வாழ் மக்களெல்லாம் அவன் பின் வனந் தொடர்ந்த வரலாறு பின்வரும் அடியிற் சுட்டப்படுகின்றது:

**" சுற்றமெலாம் பின் தொடரத்**
**தொல்கானம் அடைந்தவனே."**[104]

இச் செய்தியினையே சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள்,

**" பெருமக னேவ லல்ல தியாங்கணும்**
**அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த**
**அருந்திறல் பிரிந்த அயோத்தி போல**
**பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும் "**[105]

என்று தம் காப்பியத்தில் குறிப்பிட்டுள்ளார்.

---

102. பெருமாள் திருமொழி; 8 : 4-2.
103. பெருமாள் திருமொழி; 8; 5 : 1-2.
104. பெருமாள் திருமொழி; 8 : 6-1.
105. சிலப்பதிகாரம்; புறஞ்சேரியிறுத்த காதை : 63-64.

வாலியைக் கொன்று குரக்கரசினை வாலிக்கு இளைய வனாம் சுக்கிரீவனுக்குத் தந்த செய்தி,

**" வாலியைக்கொன் றரசிளைய**
**வானரத்துக் களித்தவனே"[106]**

என்ற அடியில் சுட்டப்படுகின்றது.

மலைகளைக் கொண்டு சேது அணை கட்டி அதன்வழி இலங்கை நகர் சென்று அரணை அழித்த செய்தி,

**" மலையதனால் அணைகட்டி**
**மதிளிலங்கை அழித்தவனே"[107]**

என்ற தொடரால் பெறப்படுகின்றது.

அடுத்த பாடலிலும் இலங்கையை அழித்த செய்தி பேசப்படுகின்றது:

**" வளையவொரு சிலையதனால்**
**மதிளிலங்கை அழித்தவனே."[108]**

ஒன்பதாந் திருமொழி, இராமனது இளமைச் செயல் களைக் காணும் பேறு தசரதனுக்கு வாய்க்காமையை நினைந்து தன் மகன் இராமன் காடு நோக்கிச் சென்ற பிரிவாற்றாமையை நினைந்து தசரதன் புலம்பிய வருத்தத்தினைக் கொண்டு மொழிவதாகும்.

கொடிய வாக்கை யுடையவனான நான் கூறிய சொல்லைக் கேட்டு, களிறு, தேர், குதிரை முதலியன வொழிந்து வேல் நெடுங்கண் மங்கை சீதையோடும் இளையவனாம் இலக்குவனோடுஞ் சென்றாயே என்று தசரதன் புலம்புகின்றான் :

---

106. பெருமாள் திருமொழி; 8 : 7 : 2.
107. பெருமாள் திருமொழி; 8 : 8 : 1.
108. பெருமாள் திருமொழி; 8 : 9 : 2.

"வெவ்வாயேன் வெவ்வுரைகேட் டிருநிலத்தை
வேண்டாதே விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி
நெய்வாய வேனெடுங்கண் நேரிழையும்
இளங்கோவும் பின்பு போக
எவ்வாறு நடந்தனையெம் இராமாவோ
எம்பெருமான் என் செய் கேனே.''[109]

அரண்மனையில் மெல்லிய பஞ்சணையின் மேல் துயின்ற நீ, இனிக் காட்டில் மரநிழலில் கல்லணையின் மேல் துயிலப் போகின்றாயே என்று தசரதன் அலமந்தான்.

"மெல்லணைமேல் முன்துயின்றாய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழற்
கல்லணைமேற் கண்டுயிலக் கற்றனையோ
காகுத்தா கரிய கோவே.''[110]

சீதையைக் கடிமணங் கொள்ளும் பொருட்டுச் சிவனுடைய வில்லை முறித்த செய்தி,

"வேய்போலு மெழிற்றோளி தன்பொருட்டா
விடையோன்றன் வில்லைச் செற்றாய்''[111]

என்ற தொடரால் அறியப்படுகின்றது.

செருக்குக்கொண்ட, சத்திரிய குலத்தை வேரறுக்க வேண்டும் என்று உறுதி கொண்டிருந்த பரசுராமனுடைய வில்லை யொடித்து அவனுடைய தவத்தினை முற்றும் பெற்றவன் இராமன் என்பது,

"முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி
அவன் தவத்தை முற்று ஞ் செற்றாய்''[112]

என்ற தொடரால் தெரியவருகின்றது.

---

109. பெருமாள் திருமொழி; 9 : 2.
110. பெருமாள் திருமொழி; 9 : 3 : 3-4.
111. பெருமாள் திருமொழி; 9 : 4 : 2.
112. பெருமாள் திருமொழி; 9 : 9 : 1.

கோசலையும் சுமித்திரையுந் துன்பமடைய, கொடிய கூனி சொற்கேட்டுக் கைகேயி சொன்ன மொழியைத் தேறி வளநகரைத் துறந்து வன்காடு சென்றனையே இராமா என்று தசரதன் புலம்புகின்றான்:

“ தேனகுமா மலர்க்கூந்தற் கோசலையுஞ்
சுமித்திரையுஞ் சிந்தை நோவக்
கூனுருவிற் கொடுந் தொழுத்தை சொற்கேட்ட
கொடியவள்தன் சொற் கொண் டின்று
கானகமே மிகவிரும்பி நீ துறந்த
வளநகர்.”[113]

‘அங்கணெடுமதில்’ என்னும் பத்தாந் திருமொழி முற்றும், இராமபிரான் அவதாரம் தொடங்கிப் பரந்தாமம் எழுந்தருளிய அளவும் நடந்த அருஞ்செயல்களை விவரிப்பதாகும். சுருங்கச் சொன்னால் இராம காதை சுருக்கமாக இங்கு விளக்கப்பட்டுளது எனலாம்.

தாடகையின் மார்பை அம்பாற் பிளந்து குருதியை வெளிப்படுத்தியது, விசுவாமித்திரருடைய வேள்விக்கு இடையூறு செய்த சுபாகு முதலிய அரக்கர்களுடைய உயிரைக் கொள்ளை கொண்டது ஆகிய செயல்கள் இரண்டாம் பாடலிற் குறிப்பிடப் பெறுகின்றன.

“ வந்தெதிர்ந்த தாடகைதன் உரத்தைக் கீறி
வருகுருதி பொழிதரவன் கணையொன்றேவி
மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காத்து
வல்லரக்க ருயிருண்ட மைந்தன்.”[114]

சீதையின் பொருட்டுச் சிவன் திருவில்லை யொடித்ததும், மழுவேந்திய பரசுராமன் கை வில்வாங்கி முறித்து, அதன்வழி சத்திரிய குல மன்னர்களின் பகையைத் தீர்த்ததும் ஆன செயல்கள்,

---

113. பெருமாள் திருமொழி; 9 : 10 : 1-3.
114. பெருமாள் திருமொழி; 10 : 2 : 1-2.

" செவ்வரிநற் கருநெடுங்கட் சீதைக் காகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவாளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றி கொண்டு
வேல்வேந்தர் பகைதடிந்த வீரன்"[115]

என்ற அடிகளிற் சொல்லப்படுகின்றன.

கைகேயி சொல் தேறி அயோத்தி நீங்கி வனம் புக்கதும், கங்கையைக் கடக்கக் குகன் ஓடஞ் செலுத்தி யுதவியதும், பரதனுக்குப் பாதுகையும் அரசும் நல்கியது ஆன செயல்கள்,

" தொத்தலர்பூஞ் சுரிகுழற்கை கேயி சொல்லால்
தொன்னகரந் துறந்துறைக் கங்கை தன்னைப்
பத்தியுடைக் குகன் கடத்த வனம் போய்ப்புக்குப்
பரதனுக்குப் பாதுகமு மரசு மீந்து "[116]

என்ற அடிகளிற் சுட்டப்படுகின்றன.

பிறர் வலியைத் தோற்பிக்கும் தோள் வலிமையை யுடைய விராதனைக் கொன்று, அகத்திய முனிவர் கொடுத்த வில்லைப் பெற்று, சூர்ப்பணகையின் மூக்கை யறுத்து, கரன் தூடணன் என்னும் அரக்கர்களின் உயிரை நீக்கி, மாரீசனாகிய மாய மான் அழியும்படி வில்லை வளைத்து அம்புகளை யெய்தான் இராமன் என்ற செய்தி பின்வருமாறு விளங்கக் கூறப்பட்டுள்ளது:

" வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்டமிழ்மா முனிகொடுத்த வரிவில் வாங்கிக்
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன்றன் னுயிரை வாங்கிச்
சிலைவணக்கி மான்மறிய வெய்தான்."[117]

சீதையை இராவணன் சூழ்ச்சியாற் கவர்ந்துசெல்ல அவளைப் பிரிந்து வருந்தி, இராவணனோடு பொருது

115. பெருமாள் திருமொழி; 10 : 3 : 1-2.
116. பெருமாள் திருமொழி; 10 : 4 : 1-2.
117. பெருமாள் திருமொழி; 10 : 5 : 1-3.

மடிந்த சடாயுவைப் பரமபதத்திற் செலுத்தி காட்டில் சுக்கிரீவனோடு நட்புக் கொண்டு அவன் பொருட்டு அவன் தமையன் வாலியைக் கொன்று, பின் இலங்கை நகர்க்குத் தலைவனான இராவணனின் செருக்கு அறும்படி அனுமனைக் கொண்டு அந்நகரை எரிப்பித்ததுமான செயல்களை,

**" தனமருவு வைதேகி பிரிய லுற்றுத்**
**தளர்வெய்திச் சடாயுவைவை குந்தத் தேற்றி**
**வனமருவு கவியரசன் காதல் கொண்டு**
**வாலியைக்கொன் றிலங்கை நக ரரக்கர் கோமான்**
**சினமடங்க மாருதியாற் சுடுவித்தான்''**[118]

என்ற அடிகளிற் காணலாம்.

முழங்கும் கடலை அம்பால் கலக்கி எய்து, அதில் அணைகட்டி, அந்த அணைவழியாக அக்கரை சேர்ந்து, நீண்ட வேற்படையையுடைய இராக்கதர்களும் இலங்கையர் கோனாகிய இராவணனும் ஆகிய அனைவரின் இனிய உயிர்களைக் கவர்ந்து கொன்று, அவ் இராவணனது தம்பியான விபீடணனுக்கு அரசை வழங்கித் திருமகளோடு இனிதுறையும் செல்வன் என்று இராமன் போற்றப் பெறுகின்றான்.

**'' குரைகடலை யடலம்பால் மறுகவெய்து**
**குலைகட்டி மறுகரையை யதனா லேறி**
**எரிநெடுவே லரக்கரொடு மிலங்கை வேந்தன்**
**இன்னுயிர் கொண் டவன்தம்பிக் கரசு மீந்து**
**திருமகளோ டினிதமர்ந்த செல்வன்.''**[119]

அயோத்தி நகருக்கு வனவாசம் முடித்து மீண்டுவந்து அரசாட்சியை அடைந்து, இராவணனைக் குறித்த பழைய கதையை யெல்லாம் அகத்திய மாமுனிவன் சொல்லக்

---

118. பெருமாள் திருமொழி; 10 : 6 : 1-3.
119. பெருமாள் திருமொழி; 10 : 7 : 1-3.

கேட்டு, மிதிலைச் செல்வியாம் சீதையின் வயிற்றிற் றோன்டிய பிள்ளைகளான குசறி லவர்களுடைய சிவந்த வாயினால் தனது சரித்திரத்தைக் கேட்டான் இராமன் என்று பின்வரும் பாவடிகள் தெரிவிக்கின்றன.

" அம்பொனெடு மணிமாட வயோத்தி யெய்தி
அரசெய்தி யகத்தியன்வாய்த் தான்முன் கொன்றான்
தன் பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச் செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான். '

இச் செய்திகள் இராமாயணம் உத்தரகாண்டத்துள் இடம் பெற்றுள்ளன என்பர்.

மிக்க தவத்தையுடைய சம்புகனை அவனிருக்குமிடந் தேடிச் சென்று தலையறுத்துச் சிறந்த அந்தண குமாரனின் உயிரை மீட்டுக் கொடுத்து, அகத்திய முனிவன் தந்த விலையுயர்ந்த அணியினையும் சாத்தியருளி இலவணன் என்னும் அசுரனைத் தன் தம்பி சத்துருக்கனைக் கொண்டு கொன்று, துர்வாச முனிவனுடைய சாபத்தால் திறல் விளங்கும் தன் இளவல் இலக்குவனைத் துறந்து நின்றான் இராமன் என்ற செய்தியினைப் பின்வரும் பாடற் றொடர்கள் பாங்குற மொழிகின்றன:

" செறிதவச்சம் புகன்றன்னைச் சென்று கொன்று
செழுமறையோ னுயிர்மீட்டுத் தவத்தோ னீந்த
நிறைமணிப்பூ ணணியுங்கொண் டிலவணன் றன்னைத்
தம்பியால் வானேற்றி முனிவன் வேண்டத்
திறல்விளங்கு மிலக்குமனைப் பிரிந்தான்.''[1]

தன்னடிச் சோதிக் கெழுந்தருளுகிற நாளில் அயோத்தி யிலுள்ள தாவர சங்கமப் பொருள்கள் அனைத்தையும் பரமபதத்திற்குப் போகச் செய்து, கருடாழ்வார்மீது ஏறிக்

120. பெருமாள் திருமொழி; 10 : 8 : 1-3.
121. பெருமாள் திருமொழி; 10: 9: 1-3.

கொண்டு அசுரர்களை வென்று, விளங்கப்பெற்ற அழகிய நீண்ட தனது திருக்கைகள் நான்கும் விளங்கப் பரமபதத்தி லுள்ளார் எல்லாரும் எதிர்கொண்டு உபசரிக்கும்படி தன்னுடைய பழமையான பரமபதத்தினைச் சேர்ந்து இனிது வீற்றிருந்த எம்பெருமான் என்று இராமனைக் குலசேகரர் கொண்டாடுகின்றார்:

“ அன்றுசரா சரங்களைவை குந்தத் தேற்றி
அடலவ ரவப் பகையேறி யசுரர் தம்மை
வென்றிலங்கு மணிநெடுந்தோள் நான்குந் தோன்ற
விண்முழுது மெதிர்வரத்தன் தாம மேவிச்
சென்றினிது வீற்றிருந்த அம்மான்.”[122]

இவ்வாறு இராமகாதைக் குறிப்புகள் பெருமாள் திருமொழியில் அமைந்திருக்கக் காணலாம்.

## IX. கிருட்டினாவதாரக் கதை நிகழ்ச்சிகள்

கிருட்டினாவதாரக் கதை நிகழ்ச்சிகள் பெருமாள் திருமொழியிற் பெரிதும் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

முதல் திருமொழியில்,

குதிரையின் வடிவங்கொண்டு வந்த கேசி என்னும் அசுரனின் வாயினைக் கிழித்தவன் என்றும், இந்திரன் கல்மழை பெய்வித்த காலத்திலே வலிய கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கிப் பசுக்களைக் காப்பாற்றி யருளிய இடையர் குலத் தலைவன் என்றும் கண்ணன் குறிப் பிடப்படுகின்றான்:

“ மாவினைவாய் பிளந்துகந்த மாலை வேலை
வண்ணனையென் கண்ணனைவன் குன்றமேந்தி
ஆவினையன் றுயக் கொண்ட ஆயரேறு.”[123]

---

122. பெருமாள் திருமொழி; 10: 10: 1-3.
123. பெருமாள் திருமொழி; 1: 4: 1-2.

இதழ்கள் மிகுந்துள்ள தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டியினது திருத்தோள்களோடு அணைந்து கட்டிக் கொண்டதும், புஜரையுடைய அம்பினால் நீண்ட மரா மரங்கள் ஏழினைத் துளைசெய்து தள்ளியதும், பசுக் கூட்டங்களை மேய்த்ததும் ஆகிய செய்திகள் பின்வரும் பாடற் பகுதியில் அமைந்திருக்கக் காணலாம்:

" தோடு லாமலர் மங்கை தோளிணை
தோய்ந்த துஞ்சுடர் வாளியால்
நீடு மாமரஞ் செற்ற துந்நிரை
மேய்த்ததும்."[124]

நப்பின்னை பொருட்டு ஏழு இடபங்களை வலியடக்கிய தான கிருட்டினாவதாரச் செய்தியுடன், பன்றியாய் வடிவெடுத்துப் பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்ததும், சக்ரவர்த்தித் திருமகனாகப் பிறந்து அரக்கர்களைக் கொன்றொழித்ததும், திருவிக்கிரமாவதாரம் எடுத்து உலகளந்ததுமான செய்திகள் பின்வரும் பாடலிற் கண்டுள்ளன.

" ஏற டர்த்ததும் ஏன மாய்நிலங்
கீண்ட தும்முன் னிராமனாய்
மாற டர்த்ததும் மண்ண ளந்ததும்."[125]

தோய்த்துக் குளிர்ந்த வெண்ணெயையும் பாலையும் ஒரே காலத்தில் அமுது செய்தவளவில் யசோதைப் பிராட்டி அக்களவினைக் கண்டுவிட்டுக் கோபித்துப் பின்னர் உரலிலே பிடித்துக் கட்டிப்போட்ட செய்தி அடியிற் காணும் பாடலில் அமைந்துள்ளது:

" தோய்த்த தண்டயிர் வெண்ணெய் பாலுட
னுண்ட தும்முடன் றாய்ச்சிகண்
டார்த்த தோளுடை யெம்பிரான்."[126]

---

124. பெருமாள் திருமொழி; 2 : 2 : 1-2.
125. பெருமாள் திருமொழி; 2 : 3 : 1-2.
126. பெருமாள் திருமொழி; 2 : 4 : 1-2.

சினக்குரலையுடைய ஏழு இடபங்களின் கொம்புகளை முறித்தவன், போரிட வந்த காளிங்கனாகிய பாம்பின் வலியடக்கியவன் என்று கண்ணன் திருவிளையாடல் குறிக்கப் பெறுகின்றது:

" பொய்ச்சி லைக்குரல் ஏற்றெ ருத்த
மிறுத்துப் போரரா வீர்த்தகோன்."[127]

ஆறாந் திருமொழி முற்றிலும் கண்ணன் ஆயர்பாடியில் கோபிகைகளோடு கூடி நிகழ்த்திய திருவிளையாடல்களே யாகும்.

இரட்டை மருதமரங்களை முறித்துத் தள்ளிய செய்தி,

மருதிறுத் தாய்[128]

என்ற அளவில் குறிக்கப் பெறுகிறது.

பூதனையின் முலையிலே வாயை வைத்து அம்முலைமீது தடவிக் கிடந்த நஞ்சினை உறிஞ்சி அமுது செய்த செய்தி,

" தாய்முலைப் பாலில் அமுதி ருக்கத்
தவழ்ந்து தளர்நடை யிட்டுச் சென்று
பேய்முலை வாய்வைத்து நஞ்சை யுண்டு"[129]

என்று பேசப்பட்டுள்ளது.

கோவர்த்தன மலையைக் குடையாகத் தாங்கியது: கோலக் குரவை அயர்ந்தது, குடக் கூத்தாடியது, கன்றாய் வந்த ஓர் அசுரனைக் கொண்டு விளாமரமாய் நின்ற அசுரன்மீது எறிந்து விளங்காய்களை உதிர்த்தது, காளிங்கன் என்னும் பாம்பின்மீது நின்று கூத்தாடி அதன் வலியை அடக்கியது ஆகிய செயல்கள் பின்வரும் பாட்டில் இடம் பெற்றுள்ளன.

---

127. பெருமாள் திருமொழி; 2: 5 : 1.
128. பெருமாள் திருமொழி; 6: 3 : 4.
129. பெருமாள் திருமொழி; 6: 4 : 1-2.

" குன்றி னாற்குடை கவித்ததுங் கோலக்
குரவை கோத்த துங்குட மாட்டும்
கன்றி னால்விள வெறிந்ததுங் காலாற்
காளி யதன்லை மிதித்ததும்."[130]

வஞ்சனை பொருந்திய பூதனையின் பேய்முலையில் வாய் மடுத்து, அவள் குருதி கொட்ட நரம்புகள் கருகி உதிரச் செய்ததும், கஞ்சனை வதம் செய்ததும்,

" வஞ்ச மேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி
வறண்டு நார்நரம் பெழக்கரிந் துக்க
நஞ்ச மார்தரு சுழிமுலை அந்தோ
சுவைத்து நீயருள் செய்து வளர்ந்தாய்
கஞ்சன் நாள்கவர் கருமுகில் எந்தாய்."[131]

இவையே கிருட்டினாவதாரக் கதை நிகழ்ச்சிகளாக நாம் பெருமாள் திருமொழி கொண்டு அறிவனவாகும்.

## X. உவமைகள்

" உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்"[132]

என்றும்,

" வினைபயன் மெய்யுரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்,"[133]

என்றும்,

" உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை"[134]

என்றும் தொல்காப்பியனார் உவமை பற்றிக் குறிப்பிடுவர். இவ் இலக்கணங்கள் குலசேகரர் திருமொழிகளிற் பொருந்தி யிருக்கக் காணலாம்.

---

130. பெருமாள் திருமொழி 7 : 9 : 1-2.
131. பெருமாள் திருமொழி; 7 : 10 : 1-3.
132. தொல்காப்பியம்; உவமவியல் : 8.
133. தொல்காப்பியம்; உவமவியல் : 1.
134. தொல்காப்பியம்; உவமவியல் : 3.

ஆதிசேடன் உமிழ்ந்த செந்தீயானது, மலரால் அமைத்த விதானம் போன்றுள்ளது:

" .................அழல் நாகம் உமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச் சென்னி விதானமே போல்."[135]

காயாம்பூவினாலே தொடுக்கப்பட்ட நீலமலர் மாலையைப் போன்றவன் என்று திருமால் குறிக்கப் பெறுகிறான்:

" காயாம்பூ மலர்ப்பிறங்க லன்ன மால்."[136]

அரங்கத்தம்மான் திருக்கோயிலில் முழங்கும் முழவோசை கடலோசை போன்றிருக்கும்.

" சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்."[137]

கடல்போன்று கருநீல நிறங்கொண்டு விளங்கும் திருவரங்கத்தம்மான் என்பது,

" கடல் விளங்கு கருமேனி யம்மான்"[138]

எனக் குறிக்கப்பட்டுள்ளது.

நூலினை ஒத்த இடையுடைய மகளிர்,

" நூலி னேரிடை யார்"[139]

எனக் குறிக்கப்படுகின்றனர். இவ்வுவமை நூல் போன்று மெல்லிய இடையினை உடைய பெண்களைக் குறிக்கின்றது.

பெண்களின் நுண்ணிய இடை மின்னலோடு ஒப்பிடப் பட்டுள்ளது.

" மின்னனைய நுண்ணிடையார்"[140]

வெண்கொற்றக்குடை முழுநிலவுக்கு உவமை கூறப் பட்டுள்ளது:

---

135. பெருமாள் திருமொழி: 1 : 2 : 1-2.
136. பெருமாள் திருமொழி; 1 : 2 : 3.
137. பெருமாள் திருமொழி: 1 : 9 : 3.
138. பெருமாள் திருமொழி; 1 : 11 : 2.
139. பெருமாள் திருமொழி: 3 : 2 : 1.
140. பெருமாள் திருமொழி; 4 : 6 : 1.

" வானாளும் மாமதிபோல் வெண்குடை."[141]

ஐந்தாந் திருமொழி முற்றும் உவமையழகுக்குப் பெயர் போனது எனலாம். அரிய உவமைகள் அமைந்து உயர்ந்த பொருளினை நமக்கு உணர்த்துகின்றன. ஒவ்வோர் பாடலும் ஓர் உவமையினை உள்ளடக்கியுள்ளன.

பெற்ற தாயானவள் மிக்க கோபங்கொண்டு அதனால் தனது குழந்தையை வெறுத்துத் தள்ளினாலும் பின்பும் அத்தாயினுடைய கருணையையே கருதி அழுகின்ற இளங் குழந்தையாகக் குலசேகரர் தமக்கு உவமை கூறுகின்றார்:

" அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள் நினைந்தே யழுங்குழவி யதுவேபோன்
றிருந்தேனே."[142]

கணவன், காண்பார் அனைவரும் இகழத்தக்க செயல்களையே செய்தாலும் தன்னை மணஞ்செய்து கொண்ட கணவனையன்றி வேறு ஓர் ஆண்மகனையும் நினைக்கவுஞ் செய்யாத உயர்குலத்துப் பிறந்த கற்புடை மகள்போலக் குலசேகரர் திருமாலோடு தம்மைத் தொடர்பு படுத்திக் கொள்கிறார்:

" கண்டார் இகழ்வனவே காதலன்தாய் செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்போல்."[143]

குடிமக்களைக் காக்கவேண்டிய அரசன் அவர்களைப் பாதுகாக்காமற் போய் மாறாக எப்படிப்பட்ட துன்பங்களைச் செய்தாலும் அவனுடைய செங்கோலையே எதிர் பார்த்து வாழ்கிற குடிமக்கள் போன்றிருந்தேன் என்கிறார் ஆழ்வார்.

" தான்நோக்காது எத்துயரஞ் செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே."[144]

---

141. பெருமாள் திருமொழி; 4 : 7 : 1.
142. பெருமாள் திருமொழி; 5 : 1 : 3-4.
143. பெருமாள் திருமொழி; 5 : 2 : 1-2.
144. பெருமாள் திருமொழி; 5 : 3 : 3-4.

**" எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்**
**மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்."**[148]

நீர் திரண்டுவரும் ஆறுகளெல்லாம் கண்டவிடமெங்கும் பரவியோடி முடிவில் ஆழ்ந்த கடலிலே சென்று சேர்தலல்லது மற்றோரிடத்தே புகுந்து நிற்க மாட்டா; அதுபோல் நாராயணனையே சரண்புகுகிறார் ஆழ்வார்:

**" தொக்கிலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே**
**புக்கன்றிப் புறநிற்க மாட்டாத."**[149]

உன்னையே (நாராயணனையே) மிக விரும்பி, மிக்க செல்வத்தை விரும்பாதவனையே தானாக வந்து செல்வம் சேர விரும்பும். அதுபோல் நின்னையே நான் வேண்டுவன்; நீள் செல்வத்தை வேண்டேன் என்கிறார் ஆழ்வார்:

**" நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்**
**தன்னையே தான்வேண்டுஞ் செல்வம் போல்."**[150]

யானையின் நடைக்கு எம்பெருமான் தன் நடையும், தாமரைக்கு முகமும் உவமையாகக் கூறப்பட்டுள்ளன:

**" கைம்மாவின் நடையன்ன மென்னடையும்**
**கமலம்போல் முகமும்."**[151]

ஆக இவ்வாறு பெருமாள் திருமொழியில் உவமை நலங் காணும்போது ஐந்தாம் திருமொழியின் ஒவ்வொரு பாடலும் பரமாத்மா ஜீவாத்மா முறை, நாயகன் நாயகி பாவம் ஆகிய இவ்வொன்றன் கூறாக அமைந்து அழகூட்டு கின்றன எனலாம். பிறவிடங்களில் எளிய உவமைகளே இடம் பெற்றிருக்கக் காணலாம். பிறவிடங்களில் வண்ண, வடிவு உவமைகள் அமைந்திருக்க, ஐந்தாந் திருமொழி வினையுவமை கொண்டிலங்குகின்றது.

---

148. பெருமாள் திருமொழி; 5 : 7 : 1-2.
149. பெருமாள் திருமொழி; 5 : 8 : 1-2.
150. பெருமாள் திருமொழி; 5 : 9 : 1-2.
151. பெருமாள் திருமொழி; 9 : 6 : 3.

## XI. குலசேகரர் அரச செல்வம் வேண்டாமை

"எண்ணி நிரம்பாத செல்வத்தினையும், தேவமாதர்கள் சூழ இருக்க வானுலகு ஆளும் செல்வத்தினையும் மண்ணுலகை ஆளும் செல்வத்தினையும் யான் விரும்பவில்லை."

" ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்
டேன்."[152]

"நடுக்கஞ் செய்யும் கட்டுத்தறியிற் கட்டப்பட்டுள்ள அரச யானையின் பிடரியில் வீற்றிருந்து இன்பம் பொருந்திய அரச செல்வமும், அரச பாரமும் யான் வேண்டேன்."

" கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான் வேண்
டேன்."[153]

"வெண்கொற்றக் குடையினையுடைய மன்னவர்களுக்கு அரசனாக வீற்றிருந்து மகிழ்வுறும் செல்வத்தினை யான் விரும்பவில்லை."

" வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்."[154]

"தேவர் உலகத்தினை எல்லாம் ஒரு கொற்றக்குடையின் நிழலிலே அரசாண்டு ஊர்வசியினை அடையப் பெறினும் அச்செல்வத்தை யான் விரும்பமாட்டேன்."

" உம்பர் உலகாண் டொருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்."[155]

---

152. பெருமாள் திருமொழி; 4 : 2 : 1-2.
153. பெருமாள் திருமொழி; 4 ; 5 : 1-2.
154. பெருமாள் திருமொழி; 4 : 7 : 1-2.
155. பெருமாள் திருமொழி; 4 : 10 : 1-2.

''தில்லைத் திருச்சித்ர கூடத்தில் திருமகளோ டினிதமர்ந்த செல்வன் அடியிணைகளைத் தொழுதுவழுத்து கின்ற அரசினையல்லாமல் வேறு அரச செல்வத்தினை யான் ஒரு பொருட்டாக மதியேன்.''

'' திருமகளோ டினிதமர்ந்த செல்வன் றன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
அரசமர்ந்தா னடிசூடு மரசை யல்லால்
அரசாக எண்ணேன்மற் றரசுதானே.''[156]

இவ்வாறு பெரிய நிலப்பரப்பினையாளும் அரசாயிருந் தாலும், அச்செல்வத்தைச் சிறிதும் மதியாத — அடியவர் கூட்டுறவை விரும்பும் அடியார்க்கடியவராகக் குலசேகரர் விளங்குகிறார்.

## XII. அடியவர் கூட்டுறவினைப் பெரிதும் விரும்புதல்

''எல்லாம் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்ற அரசர்க் கரசன் அவற்றைத் துறந்து அடியாருக்கடியனாய் ஆண்டவனை வேண்டுதல் அருமையினும் அருமை. அவ் வருமை இவருக்கு எளிதாயிற்று. கடவுளைத் தொழுதல் ஒரு பெரிதல்ல; அடியவரிடத்தும் அன்பு கொண்டொழுக வேண்டும் என்று முதன்முதல் வற்புறுத்தியவர் இவரே யாவர்'' என்று உரைப்பர் அறிஞர்.[157]

குலசேகரர் தம் பாடல்கள் பலவற்றில் அடியவர்களைச் சிறப்பித்தும் அவர்தம் கூட்டுறவினையே பெரிதும் விரும்பி யும் பாடியுள்ளார்.

''திருவரங்கத்தில் அரவணை மீது அழகாகப் பள்ளி கொண்டிருக்கும் அரங்கநாதப்பெருமானின் திருவடியின் கீழ்

---

156. பெருமாள் திருமொழி; 10 : 7 : 3-4.
157. திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை; குலசேகரர், ப. 12, 13.

மலர்களைத் தூவி, ஆங்குள்ள அடியவர் திருக்கூட்டத்தை அணுகி வாழும் நாள் எந்நாளோ'' என்கிறார் ஆழ்வார்:

" அணியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
அம்மான்ற னடியிணைக்கீ ழலர்க ளிட்டங்கு
அடியவரோ டென்றுகொலோ அணுகும் நாளே.''[158]

" அடித்தொண்டர்கள் அகமகிழ்ந்து வாழ அன்போடு இலங்கையிருக்கும் தென்திசை நோக்கிப் பள்ளி கொண்டிருக்கும் திருவரங்கத்தம்மானின் திருமுற்றத்து அடியார் தங்கள் இன்பமிகும் பெருங்கூட்டத்தினைக் கண்டு யானும் அக்குழுவினுள் ஒருவனாய் வீற்றிருக்கும் நாள் எந்நாளோ'' என்கிறார் ஆழ்வார்.

" ......... அகமகிழுந் தொண்டர் வாழ
அன்பொடுதென் றிசைநோக்கிப் பள்ளிகொள்ளும்
அணியரங்கன் றிருமுற்றத் தடியார்தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டுயானும்
இசைந்துடனே யென்றுகொலோ இருக்கும்
நாளோ.''[159]

இரண்டாந் திருமொழி முற்றும் அரங்கத்தம்மான் மெய்யடியார்பால் குலசேகரர் கொண்ட அளவற்ற பக்திப் பெருக்கை வெளியிடுவதாகும்.

"திருவரங்கத்தில் திருவாழும் பெரிய பிராட்டியோடு வாழும் வனமாலை யணிந்த மார்பனை வாழ்த்தி அன்பு கொண்ட மனத்தராய் ஆடிப்பாடி இறைவன் திருப்பெயர்களை வாய்விட்டுக் கதறிக் கூப்பிட்டு இளைப்படைகின்ற உண்மையான அன்பு நிறைந்த அடியார்கள் கூட்டத்தைக் கண்டு வணங்கப் பெற்றால் அதுவே யான் கண் படைத்ததற்குப் பயன் ஆகும்'' என்கிறார் குலசேகரர்.

---

158. பெருமாள் திருமொழி; 1 : 3 : 3-4.
159. பெருமாள் திருமொழி; 1 : 10 : 2-4.

"......... திரு மாது வாழ்
வாட்ட மில்வன மாலை மார்பனை
வாழ்த்தி மால்கொள் சிந் தையராய்
ஆட்ட மேவி யலர்ந்த ழைத்தயர்
வெய்து மெய்யடி யார்கள்தம்
ஈட்டங் கண்டிடக் கூடு மேலது
காணுங் கண்பய னாவதே."[160]

"திருமாலின் திருச்சரிதங்களையே நினைந்து ஆடிப் பாடி அரங்கனே என்று அழைக்கின்ற தொண்டர்களின் திருவடித் தூள்களிலே நான் ஆடப் பெற்றால் கங்கை நீரிலே குடைந்து நீராட வேண்டுமென்கிற ஆசையானது எதற்கு?" என்கிறார் ஆழ்வார்.

"............ இவையே நினைந்து
ஆடிப் பாடி யரங்க வோவென்
றழைக்குந் தொண்ட ரடிப்பொடி
ஆட நாம்பெறிற் கங்கை நீர்குடைந்
தாடும் வேட்கையென் னாவதே."[161].

"திருமாலின் திருவிளையாடல்களைச் சொல்லிப் பாடிக் காவிரியாறு நீர் சுரப்பது போல் கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிய நம்பெருமான் பள்ளி கொண்டிருக்கும் திருச்சந்நிதி முற்றத்தைச் சேறாக்குகிற அடியவர்களின் திருவடிகளால் துகையுண்ட அழகிய சேற்றை என்னுடைய நெற்றிக்குப் பொட்டாக இட்டுக் கொள்வேன்" என்கிறார் குலசேகரர்:

"...... சொல்லிப் பாடிவண் பொன்னிப்பே
ராறு போல்வருங் கண்ண நீர்கொண்
டரங்கன் கோயிற் றிருமுற்றம்
சேறு செய்தொண்டர் சேவடிச் செழுஞ்
சேறென் சென்னிக் கணிவனே."[162]

---

160. பெருமாள் திருமொழி; 2 : 1.
161. பெருமாள் திருமொழி; 2 : 2 : 2-4.
162. பெருமாள் திருமொழி; 2 : 3 : 2-4.

"அரங்கனுக்கு அடியார்களாய் நாவானது தடிக்கும்படி "நாரணா' என்றழைத்து, மேனி காய்ப்பேற வணங்கித் தோத்திரம் செய்து மகிழ்வடைகின்ற அடியவர்களுடைய திருவடிகளை என் மனம் துதித்து அவர்களுக்குப் பல்லாண்டு பாடும்.''

**" அரங்க னுக்கடி யார் களாய்**
**நாத்த ழும்பெழ நார ணாவென்**
**றழைத்து மெய்தழும் பத்தொழு**
**தேத்தி யின்புறுந் தொண்டர் சேவடி**
**ஏத்தி வாழ்த்துமென் நெஞ்சமே.''**[163]

"அரங்கத் தம்மானைத் தங்கள் மனத்தில் நிலைத்து விளங்கப் பெற்ற மயிர்க்கூச்செறியும் மேனியுடைய அடியவர்களையே என் நெஞ்சானது எப்போதும் நினைந்து மயிர்க்கூச் செறியப் பெற்றது.''

**" மெய்சி லைக்கரு மேக மொன்றுதந்**
**நெஞ்சுள் நின்று திகழப்போய்**
**மெய்சி லிர்ப்பவர் தம்மை யேநினைந்**
**தென்ம னம்மெய் சிலிர்க்குமே.''**[164]

"குற்றமற்ற நல்வழிகளை வாழக்காட்டும் அரங்கநாதன்மாட்டே பக்தி பூண்டிருக்கிற அடியவர்பால் எம் மனமானது எந்தப் பிறவியிலும் அன்பு பூண்டிருக்கும்'' என்கிறார் ஆழ்வார்:

**" தீதில் நன்னெறி காட்டி யெங்குந்**
**திரிந்த ரங்கனெம் மானுக்கே**
**காதல் செய்தொண்டர்க் கெப்பி றப்பினுங்**
**காதல் செய்யுமென் நெஞ்சமே.''**[165]

"அரங்கநாதனாகிற அரிய பெருமை வாய்ந்ததொரு சுடரினைக் கிட்டித் துய்க்க வேண்டுமென்கிற நெஞ்

163. பெருமாள் திருமொழி; 2: 4: 2-4.
164. பெருமாள் திருமொழி; 2 : 5 : 3-4
165. பெருமாள் திருமொழி; 2 : 6: 3-4

சுடையராய், அங்ஙனமே சேர்ந்து பக்திப் பரவசத்தாலே கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வெள்ளமிட்டொழுகும் படி நிற்கும் அடியவர்களுடைய இரண்டு திருவடிகளில் என் மனமானது ஒப்பற்ற அன்பை உடைத்தாயிருக்கும்.''

'' ஆர மார்பன் அரங்க னென்னும்
அரும்பெ ருஞ்சுட ரொன்றினைச்
சேரும் நெஞ்சின ராகிச் சேர்ந்து
கசிந்தி ழிந்தகண் ணீர்களால்
வார நிற்பவர் தாளி ணைக்கொரு
வார மாகுமென் நெஞ்சமே.''[166]

''வண்டுகள் தேனுண்ணும் மலர் மாலைகளையணிந்தவனும், மலைபோற் பெருமை தங்கிய திருமார்பையுடையவனும் செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடையவனுமான அரங்கநாதன்மாட்டுப் பெருங்காதல் கொண்டு எழுந்து கூத்தாடி வாயாரப் பாடித் திருத்தலங்கள் தோறும் திரிந்து அரங்கனெம்மானுக்கே பித்தேறித் திரிகின்ற தொண்டர்தம் பெருவாழ்விற்கு என் மனம் மயங்கிக் கிடக்கின்றது'' என்கின்றார் குலசேகரர்.

'' ......... வண்டு கிண்டு நறுந்துதாய்
மாலை யுற்ற வரைப் பெருந்திரு
மார்ப னைமலர்க் கண்ணனை
மாலை யுற்றெழுந் தாடிப் பாடித்
திரிந்த ரங்கனெம் மானுக்கே
மாலை யுற்றிடுந் தொண்டர் வாழ்வுக்கு
மாலை யுற்றதென் நெஞ்சமே.''[167]

''கண்களில் இடைவிடாது மகிழ்ச்சிக் கண்ணீர் சொரியவும், உடல் மயிர்க்கூச்செறியவும், நெஞ்சு தளர்ந்து களைத்துப்போய் நிலைதளர்ந்து, கும்பிட்டுக் கூத்துமாடி, நின்றவிடத்து நில்லாமல் பலவகை ஆட்டங்

166. பெருமாள் திருமொழி; 2: 7: 2-4.
167. பெருமாள் திருமொழி; 2: 8.

களை ஆடிப் பாட்டுக்களைப் பாடி வணங்கி அரங்க நாதனுக்கு அடியவர்களாய் அவன் பால் பித்தேறித் திரிகிறவர்கள் பைத்தியக்காரர்கள் அல்லர்; அவர்களைப் பைத்தியக்காரர்கள் என்று நினைக்கும் மற்றப் பேர்கள் தாம் பைத்தியக்காரர்கள்'' என்கிறார் குலசேகராழ்வார்.

'' மொய்த்துக் கண்பனி சோர மெய்கள்
சிலிர்ப்ப வேங்கியி ளைத்துநின்
றெய்த்துக் கும்பிடு நட்ட மிட்டெழுந்
தாடிப் பாடி யிறைஞ்சியென்
அத்தன் அச்சன் அரங்க னுக்கடி
யார்க ளாகி யவனுக்கே
பித்த ராமவர் பித்த ரல்லர்கள்
மற்றை யார்முற்றும் பித்தரே.''[168]

இரண்டாந் திருமொழியின் இறுதிப் பாடல், 'அரங்க நாதனுடைய உண்மையான அடியார்களுடைய எல்லை யற்ற அடிமைத்திறத்தினில் எப்போதும் பொருந்திய திருவுள்ளத்தை யுடையவரும் கொல்லிநகர்க் கரசரும் மதுரைக் கரசரும் உறையூருக் கரசருமான குலசேகரர்' என்ற குறிப்பினைக் கொண்டுள்ளது:

'' அல்லி மாமலர் மங்கை நாதன்
அரங்கன் மெய்யடி யார்கள்தம்
எல்லை யில்லடி மைத்தி றத்தினில்
என்று மேவு மனத்தனாம்
கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக் கோன்குல சேகரன்.''[169]

இப் பகுதி கொண்டு குலசேகராழ்வார் அரங்கனின் அடியார்மாட்டுக் கொண்டிருந்த அளவற்ற அன்பினை அறியலாம்.

---

168. பெருமாள் திருமொழி; 2: 9.
169. பெருமாள் திருமொழி; 2 : 10 : 1 ?

## XIII. அவலச் சுவை (Element of pathos)

ஏழாந் திருமொழி, கண்ணபிரானது பிள்ளைத் திரு விளையாடல்களைக் கண்டு களிக்கும் பேறு யசோதைப் பிராட்டிக்கு வாய்த்ததுபோலத் தனக்கு வாய்க்காமையை நினைந்து, பெற்ற தாயான தேவகிப் பிராட்டியார் அப் பெருமானைக் கம்ச வதத்திற்குப் பின்னர்க் கண்டபோது புலம்பியவற்றைக் கொண்டு மொழியும் திருப்பாசுரங்களைக் கொண்டதாகும்.

ஒன்பதாந் திருமொழியின்கண் அமைந்துள்ள பாடல்கள், இராமனது இளமைச் செயல்களைக் காணும் பேறு தனக்கு வாய்க்காமையை நினைந்து, தன் மூத்த திருக்குமரன் கற்பின் கனலி மிதிலைச் செல்வியோடும் ஆரா அன்பின் இளவலோடும் காடு நோக்கிச் சென்ற பிரிவாற்றாமையினை நினைந்து தசரத சக்கரவர்த்தி புலம்பியவாற்றினைக் கொண்டு மொழிவனவாகும்.

இவை முன்னரே கிளத்தப்பட்டன. எனவே ஈண்டு விவரிக்கப் பெறவில்லை.

இவ்விரு திருமொழிப் பாடல்களிலும் அவலச் சுவை நிரம்பியுள்ளதனைக் காணலாம்.

## XIV. பிள்ளைத் தமிழ்

பிள்ளைத் தமிழ் என்ற பெயரில்லாவிடினும் முதன் முதல் பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாக எண்ணி அவன் பிள்ளைமைத் திருவிளையாடல்களை நயம்படப் புனைந்து பாடியது 'பிள்ளைத் தமிழ்' எனப் பிற்காலத்தே பெரிதாகச் சிறக்க வளர்ந்த துறைக்குத் தோற்றுவாய் செய்தது என்பர்.

இங்குக் குலசேகரர் ஏழாந் திருமொழியில் கண்ணபிரான் பிள்ளைப் பருவத்தில் நிகழ்த்திய திருவிளை

யாடல்களையும், குழந்தையாக அவன் தொட்டிலில் பாங்குறக் கிடந்த அழகு மாட்சியினையும் சுவைபடப் புனைந்துள்ளார். தேவகி புலம்பலில் பிள்ளைத் தமிழ்ப் போக்குக் காணப்படுவதனை அறியலாம்.

எட்டாந் திருமொழிப் பாடல்கள் இராமனுடைய பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளையும் மற்ற வீரச் செயல்களையும் நற்றாயான கோசலைப் பெருமாட்டி பெற்ற பேற்றினை எண்ணி, இராமபிரானது இளமைப் பருவத்தைத் தாலாட்டு முகத்தாற் கொண்டாடும் வகையில் ஏற்றமுற அமைந்துள்ளன.

இதுகாறும் கூறியவற்றால் குலசேகரர் இயற்றிய பெருமாள் திருமொழியின் சிறப்பு, அழகு மாட்சி, உவமை நலன், கவிதைப் பண்பு, பிள்ளைத் தமிழ்ப் போக்கு, அவலச் சுவை, வருணனைத் திறம், இராமாவதார நிகழ்ச்சிகள், கிருட்டினாவதார நிகழ்ச்சிகள், அடியவர் அன்பின் திறம், திருமாலிடத்துக் குலசேகரர் கொண்ட கரையிலாப் பத்தி முதலியனவற்றினை இனிதுறக் கண்டோம்.

பகுதி 2

# சைவ இலக்கியம்

## 1. பொன் வண்ணத் தந்தாதி

தமிழ்மொழியில் பிற்காலத் தெழுந்த நூல்கள் பல்வேறு வகைப்படுவனவாகும். தனிச் செய்யுட்களும், காவியங்களும் தமிழ்மொழியில் எழுந்த பின்னர்ச் சிறு பிரபந்தங்கள் என வழங்கும் சொற்றொடர் நிலைச் செய்யுட்கள் எழுந்தன. இப் பிரபந்தங்களைத் தொண் ணூற்றாறு வகைப்படுத்திக் கூறுவர். இவைகளைச் சின் னூல்கள் எனக் கூறும் மரபும் உண்டு. 'பந்தம்' என்ற வடசொல் தமிழில் 'நன்கு கட்டுதல்' என்னும் பொருளைத் தரும். யாப்பால் நன்கு கட்டப்பட்ட நூல்கள் இவை களாதலின் இவை இப் பெயர் பெற்றன. இவற்றுள் சிறந்தனவாக இன்றளவும் புலவர் பெருமக்களால் போற்றப் பெறுவன கோவை, உலா, அந்தாதி, பரணி, தூது, கலம்பகம், பிள்ளைத்தமிழ் முதலியனவாகும். இவைகள் சிறு பிரபந்தங்கள் எனினும் சிற்சில நூல்கள் நல்ல கவிச்சுவை நிறைந்து ஒளிர்கின்றன.

### அந்தாதி இலக்கியம்

ஈண்டு அந்தாதி இலக்கியம் குறித்து முதற்கண் ஆராய் வோம். 'அந்தாதி' என்னும் தொடர் 'அந்தம்', 'ஆதி' என்னும் இரு வடசொற்களாலாகியது. 'அந்தம்' என்றால் இறுதி; 'ஆதி' என்றால் முதல். ஒரு செய்யுளின் இறுதி எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ அடுத்த செய்யுளின்

தொடக்கமாக வருவது 'அந்தாதி' ஆகும். ஒரு செய்யுளின் முடிவே அடுத்த செய்யுளின் முதலாக அமைவதால் இப் பாவகை 'அந்தாதி' எனப்பட்டது. முடிவில் முதல், அந்தத்தில் ஆதி என்றும், இப் பாவகையினை நினைவு கொள்வர். "முடிவில் முதல், அந்தத்தில் ஆதி என்ற மெய்யுணர்வின் நுட்பத்தை நோக்கும்போது அதிலிருந்து அந்தாதித் தொடையமைப்புத் தோன்றி வளர்ந்திருக்க லாம் என அறியலாம்" என்பர் தமிழறிஞர். இதற்குச் சான்றாகச் சிவஞான போத முதல் நூற்பாவினைக் காட்டுவர். அது வருமாறு:

**" அவன் அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்.[1]**

இந் நூற்பாவில் காணும் ஈற்றடியின் பொருளை "அதற்கு (உலகத் தொகுதி) ஒடுக்கமாய் முடிவைச் செய்யும் அந்தமாகிய கடவுளே ஆதியுமாகின்றான், எனத் தருக்க நூலறிந்தோர் கூறுவர்" எனக் கூறுவர் அறிஞர் கா. சு. பிள்ளை அவர்கள்.

செய்யுட்களை மனப்பாடம் செய்யவும், மறவாது நினைவில் நிறுத்தவும் அச் செய்யுளின் எதுகை, மோனை முதலிய தொடை வகைகள் உதவுவனவாகும். அதிலுப் அந்தாதி அமைப்பு—ஒரு செய்யுளின் இறுதியில் நிற்கும் எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ அடுத்த செய்யுட்கு முதலாக அமைவதாக உளதாதலின் எளிதாக நினைவில் நிற்கக் கூடியதாகவுளது. ஆயினும் தொல் காப்பியனார் அந்தாதி இலக்கணம் பற்றிய குறிப் பொன்றையும் நமக்குத் தரவில்லை. மோனை, எதுகை, முரண், இயைபு முதலிய தொடை வகைகளைச் சுட்டி, அளபெடைத் தொடையினை ஐந்தாவதாகக் காட்டி, மேலும் பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை முதலியன

---

1. சிவஞானபோதம்; நூற்பா : 1.

வற்றைக் கூறிப் போந்தனர். மேலும் அவர் நிரனிறுத் தமைதலையும், இரட்டை யாப்பினையும் குறிப்பிட் டுள்ளமையைக் கண்ணுறும்போது தொடை வகைகளைப் பத்தாகக் கண்டார் தொன்னூலாசிரியராம் தொல் காப்பியனார் என்பது தெற்றென விளங்குகின்றது. தொல்காப்பியனார் வெளிப்படையாக அந்தாதித்தொடை பற்றிக் குறிப்பிடவில்லை என்றாலும் 'ஒத்தாழிசையும் மண்டில யாப்பும்' எனத் தொடங்கும் நூற்பாவில் முதலையும் முடிவையும், இயைத்துக் காணும் நோக்கு அமைந்திருக்கக் காணலாம். மேலும் தொல்காப்பியனார் காலப்போக்கில் பிற்காலத்தில் புதிய பாவகைகளையும் படைத்துக் கொள்ளலாம் என்று நமக்கு உரிமை வழங்கி யுள்ளார் என்பதனை,

> ' விருந்து தானே
> புதுவது கிளந்த யாப்பின் மேற்றே '[2]

என்ற நூற்பாவினைக் கொண்டு அறியலாம். இந் நூற்பா விற்கு உரை கண்ட பேராசிரியர், ''புதுவது கிளந்த யாப்பின் மேற்றே என்றது என்னையெனில் புதிதாகத் தாம் வேண்டியவாற்றான் பல செய்யுளும் தொடர்ந்து வரச் செய்வது. அது முத்தொள்ளாயிரமும் பொய்கை யார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க, கலம்பகம் முதலாயினவும் சொல்லுப'' என்று குறிப்பிட்டுள்ளார்.[3]

பிற்காலத்தில் நாம் காணும் அந்தாதி நூல்கள் போன்று தனிப்பட்ட நூல்களைச் சங்க காலத்திலும் அதை அடுத்த காலத்திலும் காண இயலாவிடினும், அந்தாதி அமைப்புப் பெற்று வரும் பாடல்கள் சிலவற்றைச் சங்க

---

2. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; செய்யுளியல்; நூற்பா : 237.
3. தொல்காப்பியம்; பொருளதிகாரம், செய்யுளியல்; நூற்பா : 237 பேராசிரியர் உரை.

இலக்கியங்களில் காணலாம். ஒரு சிலவற்றை ஈண்டுக் காணலாம்.

(1) நெய்கனிந் திருளிய கதுப்பின், கதுப்பென
மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயில், மயிற் குனிக்குஞ் சாயல் சாஅய்
உயங்குநாய் நாவின் நல்லெழில் அசைஇ
வயங்கிழை யுலறிய வடியினடி தொடர்ந்து
ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையின்
சேர்ந்துடன் செறிந்த குறங்கின் குறங்கென
மால்வரை ஒழுகிய வாழை, வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி, ஓதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சி,
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கின், சுணங்குபிதிர்ந்தி
யாணர்க் கோங்கின் அவிர்முகை எள்ளிப்
பூணத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்சே றிகுதரு மெயிற்றி னெயிறென "[4]

(2) குன்றகத் ததுவே குறுமிளைச் சீரூர்
சீரூராளே நாறு மயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவே பிறர்[5]

(3) ஐங்குறு நூறு; தொண்டிப்பத்து[6]

(4) நீ மாண்டனை பலவே இறும்
பூதால் பெரிதே (3-4-8) இறும் பூதால் பெரிதே ஒருப
நின்னே ஒருப நின்னே, நீ ஓம்பல் மாறே (5-6)
புரைசால் மைந்தரூ ஓம்பல் மாறே; வீயாயாணர்
நின் வயினானே, வீயாயாணர் நின்வயினானே வாழ்க
நின் வளனே; (7-8) வாழ்க நின் வளனே; இவ்வுல

---

4. சிறுபாணாற்றுப்படை : 14-28.
5. நற்றிணை : 95.
6. பாட்டு : 118.

கத்தோர்க்கே உலகத்தோரே; பிறர்க்கென வாழ்தி
நீ ஆகன்மாறே; (9-10) பிறர்க்கென வாழ்த்தி
நீ ஆகன்மாறே-நின் போர்நிழல் புகன்றே, போர்
நிழல் புகன்றே, போர் நிழல் புகன்ற நல்குவன்
பலவே.[7]

(5) மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீ முரணிய நீருமென்றாங்கு
ஐம்பெரும் பூதத்தியற்கைபோல.[8]

(6) சிலப்பதிகாரம் கானல்வரி 2, 3, 4, 9, 10, 11, 12, 13, 20, 21, 22, 23, 25, 26, 27, 34, 36, 43, 44, 45, 46, 48 ஆம் பாடல்கள்[9]

சங்க காலம் தொடங்கிச் சமய காலம் வரை காணப் பெறும் மேற்குறிப்பிடப்பெற்ற நூல்களில் அந்தாதித் தொடையின் சாயல் துலங்கக் காணலாம். இப்பாடல்கள் மக்கள் மனத்தைப் பெரிதும் கவரத் தொடங்கிய பின் அந்தாதித் தொடையமைந்த நூல்கள் தமிழில் தோன்ற லாயின.

காலத்தால் முற்பட்ட அந்தாதி நூல் காரைக் காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதி, சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய பொன்வண்ணத் தந்தாதி யாகும். இந்நூல் வெண்பா யாப்பில் அமைந்துள்ளது. பின்னர்ப் பாவினங்கள் பெருகி வளர்ந்த காலத்தில்

---

7. பதிற்றுப்பத்து; நான்காம் பத்து
8. புறநானூறு; 2 : 1-6.
9. சிலப்பதிகாரம்; கானல்வரி : 2, 3, 4, 9, 10, 11, 12, 13, 20, 21, 22, 23, 25, 26, 27, 34, 36, 43, 44, 45, 46, 48 ஆம் பாடல்கள்.

விருத்தம், கட்டளைக் கலித்துறை முதலியன செல்வாக்குப் பெறலாயின. மேலும் இவ் அமைப்புகள் பெருகவும் யமகம், திரிபு, சிலேடை, நீரோட்டகம், பதிற்றுப்பத்து முதலியன தோன்றின. இவையன்றியும் பாட்டியல் நூல்கள் குறிப்பிடும் ஒலி அந்தாதி, கலி அந்தாதி, அந்தாதித் தொகை முதலியனவும், இணைமணி மாலை, இரட்டை மணிமாலை, மும்மணிமாலை, மும்மணிக் கோவை, நான் மணிமாலை, நான்மணிக்கோவை, நவமணிமாலை, நவ மணிக்கோவை முதலியனவும் அந்தாதி வகையைச் சார்ந்தனவேயாகும்.

இனிப் பாட்டியல் நூல்கள் அந்தாதியின் இலக்கண மாகக் கூறும் கருத்துக்களை காண்போம்.

'செய்யு ளந்தாதி சொற்றொடர் நிலையே' என்று தண்டியலங்காரம் குறிப்பிடுகின்றது. 'அந்தாதிப்பது அந்தாதி மடக்கே' என்று கூறுகின்றது மாறனலங்காரம். 'அந்த முதலாத் தொடுப்பது அந்தாதி' என்று யாப்பருங் கலக்காரிகை கூறுகின்றது. இத்தொடருக்கு உரையாசிரியர் "அடிதோறும் இறுதிக்கண்ணின்ற எழுத்தானும், அசை யானும், சீரானும், அடியானும், மற்றை அடிக்கு ஆதியாகத் தொடுப்பது அந்தாதித்தொடை" என்று உரையெழுதி யுள்ளார். யாப்பருங்கலம்,

" ஈறு முதலாத் தொடுப்பந் தாதியென்
றோதினர் மாதோ உணர்ந்தி சினோரே"

என்று குறிப்பிடுகின்றது.

" அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியினஃது
அந்தாதித் தொடையென் றறைதல் வேண்டும்"

என்பர் நத்தத்தனார். வீர சோழியத்தில் அந்தாதி பற்றிய குறிப்பு இல்லை.

எளிமையும் இனிமையும், நடைநலமும் தொடை நலமும் கொண்டு தொடக்க காலத்தில் இலக்கிய இன்பம்

நல்கிய அந்தாதி நூல்கள் காலப்போக்கில் அருஞ்சொற் றொடர்களையும், கடினமான சொற்புணர்ச்சிகளையும் பெற்று, இரட்டுற மொழிதல், மூன்றுற மொழிதல், நான்குற மொழிதல், ஐந்துற மொழிதல், ஆறுற மொழிதல் என்ற அளவு வரை விரிந்து பரந்து, திரிபு, மடக்கு, சிலேடை முதலிய மிறைக்கவிகளாய்ப் புலவர் பெருமக்களால் இயற்றப்பட்ட எல்லையில் பொதுமக்கள் எளிதிற் படித்துச் சுவையுணர்வதற்கு எட்டா நிலையிற் சென்று விட்டன. பாமரர் பாராட்டும் நிலையைக் கடந்து, பண்டிதர் மட்டும் தம்முள் சுவைக்கும் எல்லையை எட்டி விட்டது. எனவே அந்தாதி நூல்கள் வழக்கு வீழ்ந்தன.

வரலாற்று முறைக்கண் அந்தாதி நூல்களை நோக்கும் போது, திருமூலர் அருளிய திருமந்திரத்தின் நான்காந் தந்திரத்தில் பல தலைப்புகளில் நூற்றுக்கணக்கான செய் யுட்கள் அந்தாதியாக அமைந்திருக்கக் காணலாம். அடுத்து, கி. பி. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த காரைக் காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியினையும், இரட்டை மணிமாலையினையும் குறிப்பிடலாம். கி. பி. எட்டு ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான சேரமான் பெருமாள் நாயனார் இயற்றியவை பொன்வண்ணத் தந்தாதியும் திருவாரூர் மும்மணிக் கோவையுமாகும். நாயன்மார்களில் திருஞான சம்பந்தரின் திருப்பிரமபுரத் தேவாரம் ஏகபாதமாக அமைந்திருக்கக் காணலாம். மாணிக்கவாசகரின் திருச்சதகமும், நீத்தல் விண்ணப்பமும் அந்தாதிகளே. ஆழ்வார்களுள் பேயாழ்வார், பூதத் தாழ்வார், பொய்கையாழ்வார், நம்மாழ்வார் முதலா னோர் அந்தாதித் தொடையில் சில பாடல்களைப் பாடி யுள்ளனர். சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள், பதினோராந் திருமுறையில் நக்கீர தேவ நாயனார், கபில தேவ நாயனார், பரணதேவ நாயனார் ஆகிய மூவர் இயற்றிய கைலைபாதி காளத்திபாதி அந்தாதி, கபிலதேவ நாயனார் சிவபெருமான் திருவந்தாதி, பரணதேவ

கொண்டே நூலின் பெயரும் அமைந்துள்ளது. ஆத்திசூடி, கொன்றை வேய்ந்தோன் முதலான நூல்களும் நூன்முதற் றொடராலேயே பெயர் பெற்றுள்ளமையைக் காணலாம். மேலும் 'பொன்' என்பது மங்கல மொழியாதலின் நூலின் தொடக்கமாயிற்று.

இனி நூற்கண் நுழைந்து நயங் காண்போம்.

மெய்யுணர்ந்த அடியாரது உள்ளங்களில் அவர் நினைத்த வடிவோடு விரைந்து சேர்கின்றான் இறைவன் என்ற கருத்து முதற் பாட்டால் பெறப்படுகின்றது. 'வண்ணம்' என்ற சொல் இப்பாட்டில் பன்னிரண்டு முறை வந்துள்ளது. சிவபிரான் பொன்வண்ண மேனியினையும், மின்னல் போன்ற ஒளி மயமான சடையினையும், வெள்ளிக் குன்றமன்ன பெரிய இடபவாகனத்தையும் உடையவனாக விளங்குகின்றான் என்று சேரமான் பெருமாள் நாயனார் சிந்தையில் இறையன்பு பெருக உள்ளம் உருகிக் குறிப்பிட்டுள்ளார்.[10]

'கனா நிலையுரைத்தல்' என்னும் துறையின்பாற் பட்டது இரண்டாவது பாட்டு. "பிட்சாடனரான சிவபெருமானைக் காணும் விருப்புடன் உணவாகிய பலியைக் கொண்டு வெளிச் செல்ல இவள் துணிந்தது என்னே! 'பேயனொருவனைக் காமுறும் பித்துப் பிடித்தவள் போலும் இவள்' என்று தாய் கூறித் தலைவியை வீட்டின் உள்ளே இழுக்கவும், தலைவி தளர்ந்த நிலையில் நின்றபோது, சிவபெருமான் தலைவியைத் தழுவிக் கொள்வதற்கு வருமாறு அழைத்தான். இந்நிலையில் தலைவியின் கண்கள் இமை திறந்துவிட்டன." தலைவி கண்ட கனா நிகழ்ச்சி இவ்விரண்டாம் பாடலில் நன்கு சித்திரிக்கப் பட்டுள்ளது.[11]

---

10. பொன்வண்ணத்தந்தாதி; 1.
11. ,, 2.

பரமனின் கொன்றையந்தார் வேண்டிப் பேதுறும் பெண்ணின் காதல் உணர்ச்சியை மூன்றாம் பாட்டு சுட்டு கின்றது. கண்கள் நீரைச் சொரிய, கைவளைகள் நெகிழ்ந்தோட, அரையுடையும் நழுவ, கண்களாற் பொலிந்த நெற்றி வேர்க்க, கொன்றை மாலை போலும் சுணங்கழகுடைய பெண் உருகத் தலைவியின் வருத்த நிலைமை புலப்பட்டதனை இப்பாடல் கவிநயம் சொட்ட உரைக்கின்றது.[12]

நான்காவது பாடலில் நகைச்சுவை இழையோடு கின்றது. அயல்வீடுகளில் பலியாக உணவுகளை ஆராய்ந்து பெற்றும், பரமன் உண்டது நஞ்சாகும். உலகத்தைப் படைக்கும் தொழிலை நடாத்தும் பிரமனது சிரத்தை அருளினின்றிக் கொய்தும் அவன் பிறர்க்குக் கொடுப்பது பேரருளாகும். காமத்தை ஊட்டும் அவனை அனங்கனாக எரித்தும் தன்மேனியுடன் இடப்பாற் கொண்டது மாதாகும். தான் வசிப்பதற்குச் சிறந்த மனையாகக் கொண்டது ஆல், மா பலாப் போன்ற மரக்கிளைகளே யாகும்.[13]

"உலகின் இயக்கத்திற்குக் காரணமானவன் சிவ பெருமானே என்ற தத்துவத்தை உணர்ந்தோர் சிவலோகத் தையும், அவன் பகரவொண்ணாப் பண்பினையும் புகழினையும் சொல்வோர் மண்ணுலகினையும் பெறுவர்" என்று ஐந்தாம் பாடல் குறிப்பிடுகின்றது.[14]

ஆறாவது பாடலில் சங்கர நாராயணக் கோலத்தின் வருணனை இடம் பெற்றுள்ளது. "இடப்பக்கம் திருமால்; வலப்பாகம் தான்; இடப்பால் துழாய் மாலை; வலப்பால் கொன்றைமாலை; இடப்பக்கம் பொற்றுகில்; வலப் பக்கம்

---

12. பொன்வண்ணத்தந்தாதி; 3.
13. ,, 4.
14. ,, 5.

புலித்தோல்; இடப்பால் சக்கரம்; வலப்பால் மான்; இடப்பால் விளங்கும் திருமால் நிறம் கருப்பு; வலப்பால் விளங்கும் இவன் நிறம் செம்மை. அத்திருமால் கூத்து நிகழ்ந்த இடப்பக்கம் கொண்டது குடம்; தில்லைக் கூத்தனான இவன் வலப்பக்கங் கொண்டது கூத்தில் முழக்கும் கொக்கரை.''[15]

இவ்வுருவ வருணனை வண்ண முரண் (Colour Contrast) முதலான அமைந்து நயம்பட உள்ளது.

இறைவன் ஆடித்திரிவது நாடகம் என்றும், பலியாகத் தேர்ந்து கொள்வது தாருகாவனத்து மகளிரின் கைவளைகளாகிய உணவு என்றும், இவர் மேனி பவள நிறம் என்றும், இவர் பெரிதும் உகப்பது இமையவர்தம் துதி என்றும், இவர் அருளிச் செய்தது வேதங்கள் என்றும் ஏழாம் பாடல் ஏற்றமுற எடுத்தியம்புகின்றது.[16]

பத்தாவது பாடலில் நல்ல கருத்து அடங்கியுள்ளது. ''துணையற்ற தனி நெஞ்சமே! ஈசனது திருவடித் தாமரைகளைப் பணிவாயாக; அவனது புகழைப்பாடுவாயாக; இசையுடன் கூடி அவனைத் துதித்துக் கூத்தாடுவாயாக; மலரால் அவனை அணிவிப்பாயாக! தவமூர்த்தியான அவனுக்கே அடிமை செய்வாயாக; தோலுடன் கூடிய உடலில் திருநீற்றைப் பூசி நற்பதவியே விரும்புக; நல்லன நிறைந்த சிவலோகத்தை அவனே உனக்குக் காட்டுவன்; எனவே துன்பத்தை ஒழிப்பாயாக'' என்று தலைவி தன் நெஞ்சிற்குத் தானே கூறிக் கொண்டாள்.

**பணிபதம் பாடிசை ஆடிசை**
**யாகப் பணிமலரால்**
**அணிபதங் கன்பற் கொளப்பனை**
**அத்தவற் கே அடிமை**

---

15. பொன்வண்ணத்தந்தாதி; 6.
16. ,, 7.

**துணிபதங் காமுறு தோலொடு**
**நீறுடல் தூர்த்து நல்ல**
**தணிபதங் காட்டிடுஞ் சஞ்சலம்**
**நீ என் தனிநெஞ் சமே.[17]**

"நெஞ்சம் தளிர்விட, கண்ணீர் ததும்ப, முகம் மலர, கைகள் கூம்ப, தலை, இரு கைகள், இரு செவிகள், இரு தோள்கள், மேவாய் என்னும் எட்டுறுப்பும் நிலத்துப் பதிய வணங்கினால் வானுலகை நமக்கு உரிமையாகும்படி அமைப்பான்" என்று பதினோராவது பாடல் கிளத்துகின்றது.[18]

தேவராய் விளங்கத் துறக்கவின்பங்களை நுகர்வோர் சிவபிரானுக்கு அடியரானவராவர்; மக்கட் பிறவியெடுத்து இரந்துண்போர் சிவனடியார் அல்லாத தீயர் என்பதாம். இவ்வாறு பன்னிரண்டாவது பாடல் பகருகின்றது.[19]

பதின்மூன்றாம் பாடல் பக்திச் சுவை நிறைந்த உருக்கமான உள்ளத்தினின்றும் பிறந்த பாடலாகும்.

"பொய்ம்மையான சொற்களைச் சொல்லி, பாழான உடம்பைப் பேணி, பல வீடுகளிலும் சென்று தடுமாறாமல் நெஞ்சமே! நீ எழுவாயாக. கையில் அழலேந்தி ஆடுபவனும், கடலில் தோன்றிய நஞ்சை உண்டவனுமாகிய சிவபிரான் கழலைச் சார்ந்தால், இவ்வுலகில் நல்ல பயனைப் பெறலாம்" என்று இப்பாடல் குறிப்பிடுகின்றது.

**படிறா யினசொல்லிப் பாழுட**
**லோம்பிப் பலகடைச் சென்**
**றிடறா தொழிது மெழுநெஞ்ச**
**மேயெரி யாடியெம்மான்**

---

17. பொன்வண்ணத்தந்தாதி; 10.
18. ,, 11.
19. ,, 12.

கடறா யினநஞ்ச முண்ட
பிரான்கழல் சேர்தல்கண்டா
யுடறா னுலிபய னாவசொன்
னேனிவ் வுலகினுள்ளே.[20]

ஐம்புலன்களும் இராப்பகலாகச் சிறிது சிறிதாக வெட்டித் தின்பதனை எண்ணி உலக வாழ்க்கையை அருவருத்துவிட்டதாகப் பதினெட்டாவது பாடலில் ஆசிரியர் கூறுகிறார்.[21]

சிவபிரானது பேருருவை வருணிப்பது அடுத்த பாடலாகும். "பெருமானுக்குப் பூமி கால்களாம்; சூரிய சந்திர அக்கினிகள் கண்களாம்; காற்று உயிர்ப்பாம்; கடல் ஆடையாம்; வானம் முடியாம்; விசும்பு உடம்பாம்; வேதம் முகமாம்; திசைகள் தோள்களாம்; பலவாய புகழ்மொழி களும் கீதமாம். இவ்வாறு பேருருக் கொண்டு பிறங்கும் இப்பெருமானிடம் காதல் கொண்டு இப்பூங்கொடி யனையாள் தன் அழகிய நிறத்தை இழப்பது என்ன மதி?" என்பது அப்பாடலின் கருத்தாகும்.

பாதம் புவனி சுடர்நய
னம்புவ னம்உயிர்ப்போங்
கோதம் உடுக்கை உயர்வான்
முடிவிசும் பேஉடம்பு
வேதம் முகம்திசை தோள்மிகு
பன்மொழி கீதம் என்ன
போதம் இவற்கோர் மணிநிறந்
தோற்பது பூங்கொடியே.[22]

"மூப்பும் பிணியும் கூற்றமும் வந்து கொண்டிருக் கின்றன; நாளும் நாளும் இவை புரியும் போராட்டத்தைத்

---

20. பொன்வண்ணத்தந்தாதி; 13.
21. ,, 18.
22. ,, 19.

தாங்கும் ஆற்றல் எனக்கில்லை. நின்பக்கலில் நிற்கும் பேற்றினை எனக்கு அருளுவாயாக'' என்று காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கப் பாடுகிறார்.[23]

ஆன்மாவைத் தலைவியாகவும், ஆத்தரான அடியாரைத் தோழியாகவும் கொண்டு அமைந்துள்ளது இருபத்திரண்டாம் பாடல். சிவானுபவத்தால் தான் பெற்ற பேரின்பத்தைத் தலைவி தோழிக்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. ''தத்துவ ஞானமாகிய பேரொளி என்பால் நிரம்பி நின்ற நிலையில், சிவபெருமான் என்னை நோக்கி 'இன்று முதல் இதுவே உனக்கு அமைந்த முறை' என்றான். யானும் 'இஃதே எனக்கு அழியாச் செல்வம்' என்றனன். அதன்மேல், நான் அவன் என்ற வேற்றுமை யுணர்வை அவ்வருட்பிரகாசம் முற்றிலும் ஒழித்து விட்டது. இதன் இயல்பினை நின்னொத்தார் அறிவார்களோ'' என்று தலைவி தோழியிடம் வினவு கின்றாள்.[24]

அச் சிவானுபவத்தால் விளைந்த பயன்களை அடுத்த பாட்டு (23) விளங்க உரைக்கின்றது:

'' ஒழித்தேன் பிறவியை ஊர்ந்தேன்
உவகையை ஓங்கிற் றுள்ளம்
இழித்தேன் உடம்பினை ஏலேன்
பிறரிடை இம்மனையும்
பழித்தேன் பழியே விளைக்கும்பஞ்
சேந்திரியக் குஞ்சரமும்
தெழித்தேன் சிவன்அடி சேர்ந்தேன்
இனிமிகத் தெள்ளியனே.''[25]

''நஞ்சை அயின்றவன் நீயாதலினால் புன்சொலாயினும் என் கவிகளையும் ஏற்றருளவேண்டும்'' என்ற கருத்தைக் கொண்டுள்ளது 25 ஆம் பாடல்:

---

23. பொன்வண்ணத் தந்தாதி; 21.
24. ,, 22.
25. ,, 23

" அருளால் வருநஞ்ச முண்டுநின்
றாயை யமரர் குழாம்
பொருளார் கவிசொல்ல யானும்புன்
சொற்கள் புணர்க்கலுற்றேன்."[26]

சிவபிரானுடைய தன்மையினை 26 ஆம் பாடல் வருணிக்கின்றது. சிவபிரானது திருமேனி கதிர்விரிகின்ற ஞாயிறு போலும் உளதாம். சடாபாரம் அஞ் ஞாயிற்றைச் சூழ்ந்தொளிரும் கிரணங்கள் போன்றும், நீலகண்டம் (கழுத்து) அச் சடையின் கதிரொளிக்கு ஆற்றாதோடிய காரிருள் போன்றும், திருமேனியிலணிந்த திருநீறு அவ் விருளின் கீழ் இயலும் வெண்மேகம் போன்றும் விளங்குவதாக ஆசிரியர் குறித்துள்ளார்.[27]

இப்பாடலுடன் காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதிப் பாடல் ஒன்றனை ஒப்பிட்டுக் காணலாம்.

" காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்குருளே போலும் மிடறு."[28]

தலைவி சிவபிரான்மீது காதல் மிகுதியும் கொண்டாள். இந் நிலையினை அறிந்த செவிலி பின்வருமாறு குறிப்பிடுகின்றாள்: "இவளுடைய முலைகள் இன்னும் சரியாக அரும்பவில்லை; பற்கள் முளைத்து வரவில்லை. சொற்கள் பொருள் விளங்கிக் கொள்ளமுடியாத மழலைத்தன்மையுடையன. கூந்தல் நன்கு வளரவில்லையாதலின் கூட்டி முடிக்கக் கூடிய நிலையில் இல்லை. இவை இவ்வாறிருப்பவும், சிவன் அணிந்த கொன்றை மலரின் மணம் கமழப் பெறுகின்றது இவளுடைய மேனி. இஃது என்ன காரணம்

26. பொன்வண்ணத்தந்தாதி; 25 : 1-2.
27. ,, 26.
28. அற்புதத் திருவந்தாதி; 65.

என்று தெரியவில்லை. இது கொண்டு அயலார் கூறும் கட்டுரைப் பொருள் இன்னதென்று தெரியக் கூடவில்லை'' என்று செவிலி தலைவிபால் இரக்கம் மிகுதி தோன்றக் கூறினாள்.[29]

சிவபிரான் கொண்ட தவத்திருக்கோலத்திற் சடாபாரம் விளங்கும் சிறப்பினை 39 ஆம் பாடல் குறிப்பிடுகின்றது.

''இறைவனின் சடை தாழவுள்ளது; கங்கை அச் சடையின் மேலுளது; கங்காதேவி அங்கு மகிழ்ச்சியுடன் விளங்குகின்றாள். அச் சடைமேல் திங்கள் ஒளிர்கின்றது. பிறை சடையினூடு இயங்குகின்றது. சீற்றங்கொண்ட பாம்புகள் அங்குள்ளன. ஆயினும் அப் பாம்புகள் அங்கு மகிழ்ந்து வாழ்கின்றன. சடையின் மேல் கொன்றை மாலை சூடப்பட்டுள்ளது.''[30]

'நெடுநாள் வாழவைக்கும் நெல்லிக்கனியினை உண்டமையால் சிவனை மறக்கும் முதுமைத் தளர்ச்சி தனக்கில்லை' என்று ஆசிரியர் ஒரு பாடலில் கூறுகின்றார்.[31]

41 ஆம் பாடல் பக்திச் சுவையினைப் பலபடியாகப் பேசுகின்றது.

''நீ எழுந்தருளியுள்ள திருக்கோயிலின் பெருமைகளைப் பலர்க்கும் உரைப்பேன்; தலையால் வணங்கி, மனத்தால் நின்னை இடைவிடாது சிந்தித்து, அன்பெனும் நெய் சொரிந்து தவவேள்வியை வளர்ப்பேன். மேலும் சொன் மலராகிய விளக்கை ஏற்றி, 'ஈசன் என் மனத்தகத் தான்' என்று பிறரிடம் கூறிப் பூக்களைச் சொரிந்து அருச்சிப்பேன்.''[32]

---

29. பொன்வண்ணத்தந்தாதி; 27.
30. ,, 39.
31. ,, 40.
32. ,, 41.

இறைபணிகட்கு ஆகா உறுப்புகள் அனைத்தும் பயனற்றவை என்ற கருத்தை வெளியிடுகின்றது ஒரு பாடல்.[33]

43 ஆம் பாடல் மிகச் சிறந்த கருத்தினை வெளியிடு கின்றது. "இறைவன் அருளால் அல்லாமல், இவ் வையத்தையே பொற்குன்றங்களாகப் பெற்றாலும், அதனை நஞ்சினும் கீழாகவே கருதுவேன்; ஈசன் அருளால் புழுவின் பிறவி எடுக்க நேர்ந்தாலும் அதனைப் பொன் னுலகத்து வாழும் வானவர் பிறவியோடு ஒப்ப மதிப்பேன்" என்ற கருத்தமைந்த பாடல் வருமாறு:

" தனக்குன்ற மாவையஞ் சங்கரன்
றன்னரு ளின்றிப் பெற்றால்
மனக்கென்று நஞ்சிற் கடையா
நினைவன் மதுவிரியும்
புனக் கொன்றை யானரு ளாற்புழு
வாகிப் பிறந்திடினும்
எனக் கொன்றும் வானவர் பொன்னுல
கோடொக்க வெண்ணுவனே."[34]

தலைவிமாட்டுக் காமன் அம்பெய்து காதலெரி மூட்டு தலைத் தலைவி கடிந்து பேசுகின்றாள். தான் சிவன்பால் கொண்ட காதலைத் தன் செயலாகக் கூறாமல், காமனே இவ்வாறு கனலூட்டித் தன் மனத்தைக் காய்கின்றான் என்றாள். "சங்கரன் என் உள்ளத்தில் நன்குறைவது அறிந்திருந்தும் என் மேனியின் பேரொளியை மன்மதன் தன் அம்பெய்து கவர்ந்து கொண்டான். அவனுக்கு இறைவன் திறத்துப் பிழை செய்வதே குறிக்கோள் போலும்" என்று தலைவி குறிப்பிட்டாள்.[35]

தாருகா வனத்து மகளிர் கூறுவதாகக் காணும் பாடல்கள் இரண்டிலும் (45, 46) 'இறைவன் எவ்வுயிர்க்கும்

33. பொன்வண்ணத்தந்தாதி; 42.
34. ,, 43.
35. ,, 44.

செந்தண்மை பூண்டொழுகும் அந்தண வடிவு கொண்டு வந்திருப்பது, மகளிரின் உள்ளத்தினையும் உயிரினையும் வருத்துவதற்கே யன்றிப் பிறிதொன்றிற்கில்லை' என்ற வாறு.[36]

பாங்கியின் சிறைப்புறக் கூற்றாக வரும் பாடல் நயங் கெழுமியதாகும்.

"தோழியே! அப்பனான பெருமான் நின் மார்பகத்திற்குத் தன் கொன்றை நிறத்தை அருளினன். நின் கண்கட்குக் கங்கை வெள்ளத்தையே வைத்தனன். நின் மனத்துக்குத் தான் சூடிய உத்தமமான உன்மத்தத்தையும் அமைத்தனன். இங்ஙனமாகவும் நீ ஏது பெருமை குறித்து நீ அப்பெருமானைச் சினந்து அரவாரிக்கின்றாய்?" என்பதாகும்.[37]

அடுத்த பாடல் (50) பொருள் முரண் அமைந்து கவிதை நலம் மிகுந்து கிடக்கக் காணலாம்.

"கார் காலத்துக் கொன்றைப் பூவினை அணிந்துள்ள சிவபிரான்பால் நீரும் அனலும், திங்களும் அரவும், தவயோகமும் உமைபாகமும், உருவும் அருவும், வேங்கையும் மானும், பகலும் இரவும் ஆகிய பகைப் பொருள்கள் யாவும் ஒற்றுமையுடன் கலந்துள்ளன" என்று தோழி வியந்து கூறுவதாக அமைந்துள்ளது. 'இறைவன் திரு முன்னர் உலகப் பொருள்கள் அனைத்தும், தம்முள் வேற்றுமை தவிர்த்துக் கலந்து உறைகின்றன' என்ற அரிய கருத்தினை இப்பாடல் அழகுற விளக்குகின்றது.[38]

53ஆம் பாடல் ஈசன் பெருமைகளைப் பேசுகின்றது. நீதியானவன், பழைமை என்பதற்கும் நால் வேதங்கட்கும் முதலானவன், ஏழ்கடல்களையும் துறைகளையுங் கொண்ட சத்த தீவங்கட்கும் உரியவன், கயிலாய மலையில்

---

36. பொன்வண்ணத்தந்தாதி; 45-46.
37. ,, 49.
38. ,, 50.

உறைபவன், பழமை குறையாத இறைவன், எண்வகை குணத்தினன், மனத்தில் உறைபவன், நாகாபரணன் என்று இறைவன் இப்பாடலில் குறிக்கப் பெறுகிறான்.[39]

'உடன்போக்கிற்கு ஒருப்பட்ட தலைவிக்குத் தோழி வழிப்படுத்தி உரைத்தது' என்ற துறையமைந்த பாடல் 54 ஆம் பாடல். "பெண்ணே! தாய், தந்தை, ஆயம் என்பார் பெயர்களையும் குணங்களையும் கூறுதலொழிந்து புன்சடையான் நாமங்களைச் சொல்லுக. அவன் பல்குணங்களையே உரைக்க. உன்னோடு இதுகாறும் பிரியாமல் இருந்த யானும் உன்னை நீங்கினேன். இறைவன் பின்னே போவாயாக. அவன் விரும்பும் வண்ணம் நடந் தொழுகுவாயாக. இவ்வாறு செய்வதே தவப்பயனாகும். அவ்வீரன் கூறிய வண்ணமே—அவற்றையே குறியாகக் கொண்டு மற்றவற்றை ஒழிவாயாக" என்ற கருத்தமைந் துள்ளது அப்பாடல்.[40]

தோழி கூற்றாக அமைந்துள்ளது அடுத்த பாடல் (55). "இவ்வணங்கின் முகம் மன்மதனின் படைவீடாம். அவ்வீட்டு வாயில்களில் நிற்கும் தோரணக் கால்களாம் இவள் தோள்கள். (அம் மனையின் முன் நிறுத்தப் பட்டிருக்கும்) மன்மதனின் தேராகும் இவள் அல்குல். அங்கு மங்கலமாக முன் வைக்கப்பட்ட பூரண கும்பங் களாகும், இவள் கொங்கைகள். இவற்றை யாவருங் காணும் வண்ணம், இறைவன் திருவடிகளில் விழுந்து இவள் தொழுகின்றாள். இவ்வாறு இவள் தொழுவதன் கருத்து, அன்பின் பொருட்டோ, பகைமையின் பாற்பட்டோ என்பதனை யான் அறியேன்.[41]

சிவபிரான் பல்வேறு வடிவாகவும் விளங்குகின்றார் என்ற கருத்தைக் கொண்டது 57 ஆம் பாடல்.

---

39. பொன்வண்ணத்தந்தாதி; 53.
40. ,, 54.
41. ,, 55.

“கறுத்த கழுத்துடைமையால் இருளாவர். திருமேனி நிறத்தால் பகலாவர். வேதவுருவானமையின் மலையாவர். சூடிய கொன்றைப் பூவால் முல்லை நிலமாவர். பாம்புகள் விளையாடுவதால் புற்றாவர். சந்திரனைத் தலையிற்றாங்கி யுள்ளமையின் விசும்பாவர். கங்கை நீரைக் கொண்டுள்ள மையின் கடலாவர்.” இவ்வாறு தம்மருளால் இறைவன் பற்பல வடிவுகளாக ஆயினர் என்று வியந்து கூறியவாறு.

“இருளார் மிடற்றா லிராப்பகல்
தன்னால் வரைமறையாற்
பொருளார் கமழ் கொன்றை யான்முல்லை
புற்றர வாடுதலாற்
றெருளார் மதிவிசும் பாற்பௌவந்
தெண்புனல் தாங்குதலால்
அருளாற் பலபல வண்ணமு
மாவர னாயினனே.”[42]

தலைவியின் பிரிவாற்றாத துன்பத்தினைக் கண்டு தோழி இரங்கிக் கூறுவதாக 58 ஆம் பாடல் அமைந்துள்ளது.

‘இவளுடைய இடையில் உள்ள உடைகள், பிரிந்த தலைவரான (ஈசனான) அந்தணரது வாய்மொழிபோல நெகிழலாயின. கைவளைகளும் கழன்று விழுந்தன. கண்ணீர்த் துளிகள் கொங்கைகளிடைப் பரவின. இவள் ஆயிழைகளும் மன்மதனின் கைவாளால் அறுபட்ட நூல்கள் போல் ஆயின’[43]

இறைவன் தன்னிடத்து வரும்போது தான் நிகழ்த்தப் போகும் ஊடற் செயல்களைத் தலைவி படைத்து மொழிவதாக அமைந்துள்ளது 63 ஆம் பாடல்.

“விரும்பிய மணமிக்க மலராம் கொன்றையந் தாரை இறைவன் தரினும் நான் பெறப் போவதில்லை. என் ஆடையையும் அவனைத் தொடவிட மாட்டேன். என்

42. பொன்வண்ணத்தந்தாதி; 57.
43. ,, 58.

தலையுச்சியினைத் தீண்டினால் கோபிப்பேன். அதனையும் மீறி அவன் என் கொங்கைகளைத் தொடப் புகுந்தால் என் கற்புநிலை கெடுவேன்; வானவர் வணங்க நின்ற நின் தலைமைக்கு இஃது அழகன்று என்பேன். என் தொடி யணிந்த தோள்களைத் தொட முனைந்தால் அவனுடைய திருவாணை மொழியைக் கூறித் தடுப்பேன்.''[44]

கிடங்கினுள் விழுந்த முதலை, அதனுள்ளிருந்து உணவுக்காக அகப்படும் பிறவற்றை எதிர்ப்பார்த்தும், வெளியேற முடியாமல் தவித்தும் வாழும். இந் நிலையினைக் கேவலரானவர் பலர், தாம் தொடங்கிய இல்வாழ்க்கை நிலையில் நின்று, இல்வாழ்க்கைக்குரிய அறங்களைச் செய்து பயன்பெறாது அவ்வாழ்க்கையை வெறுத்து வீணே துறப்பர்; அவ்வாறு துறந்தவர், தம் பற்றினைச் சிவன்பால் வைத்தல் செய்யார்; ஆகவே மறுமைப் பயனைப் பெற ஈசனுக்கும் ஆளாகாமல், இம்மைப் பயன்பெற மனைவாழ்க்கைக்கும் உதவாமல் வாழும் நிலைக்கு உவமித்துள்ளார்:

**'' தொடங்கிய வாழ்க்கையை வாளா**
**துறப்பர் துறந்தவரே**
**அடங்கிய வேட்கை யரன்பா**
**லிலரறு காற்பரவை**
**முடங்கிய செஞ்சடை முக்கணா**
**னார்க்கன்றி யிங்குமன்றிக்**
**கிடங்கினிற் பட்ட கராவனை**
**யார்பலர் கேவலரே.''[45]**

உமையொரு பாகனாக வீற்றிருக்கும் சிவபெருமானின் திருவுருவத்தைச் சிறப்பிக்கிறது 65ஆம் பாடல்.

''ஈசன் வலம் பூண்பது கழல்; இடம் பூண்பது பாடகம்; வலமணிவது நாகாபரணம்; இடமணிவது அரதனாபரணங்

---

44. பொன்வண்ணத்தந்தாதி; 63.
45. ,, 64.

கள்; வலப்பாற் பூசுவது நிருநீறு; இடப்பாற் பூசுவது செஞ்சாந்து; வலமேந்தியது அனல்; இடமேந்தியது பந்து; வலப்பாற் பூண்பது எலும்பு மாலை; இடப்பாற் பூண்பது பொன்னரிமாலை, வலமேந்தியது வேல்; இடமேந்தியது சக்கரம்; வலப் பக்கத்தில் உள்ளது சடைமுடி; இடப்பக்கம் உள்ளது அளகபாரம்.''[46]

''ஈசனது சடை எரியும் நெருப்பினை யொத்துள்ளது. அத்தீயினை அவித்தற் பொருட்டுத் தேவர்கள் சொரியும் பாற்கடலை ஒத்துள்ளது கங்கை; அக்கங்கையில் இயங்கும் ஓடம் போன்றுள்ளது பிறை மதி; அவ்வோடத்தினைச் செலுத்தற்குரிய வலிய மூங்கில் போன்றுள்ளன வலிய பாம்புகள்'' என்று ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.[47]

பிறை நிலா பற்றிய கற்பனை யமைந்த நயங்கெழுமிய பாடலாக அமைந்துள்ளது 68வது பாட்டு.

''இறைவன் சடையிற் புனைந்துள்ள வெண்பிறை, ஆண்டுறையும் அரவுகள் பெருமூச்செறிதலால் வெதும்பும்; அதுவே கங்கை வளாவுதலால் குளிர்கின்றது; உமாதேவி ஊடுங்காலத்து இறைவன் அவள் காலடிகளில் தன் தலையை வைத்துப் பணிதலால் உடல் நைந்துருகும்; அதுவே அவ்வூடல் தணிந்து உமாதேவியை அவன் தீண்டும் போது இவ்வுலகையும் வானுலகையும் விளங்கச் செய்கின்றது. இவ்வாறு துன்பமும் இன்பமும் மாறி மாறி அஃது அடையாநின்றது.''[48]

70-வது பாடல் உயர்ந்த கருத்தமைந்ததாயுளது. ''ஈசன் திருப்பெயரைக் கூறுமின்: அவனுக்கே குற்றேவல் செய்மின்; அவனைத் தரிசனம் செய்து கண்கள் குளிர்மின். மனத்தை ஒருவழிப்படுத்துமின்; அவன் ஒருவனே பரம் பொருளென்று தெளிமின்; கோபம் அடக்குமின்; அவாவை

---

46. பொன்வண்ணத்தந்தாதி; 65.
47. ,, 67.
48. ,, 68.

ஒடுக்குமின்; துக்கம் துடைமின்; இங்குக் கூறியவைகளே வழியாகக் கொண்டு, துறக்கம் அடைந்து, வானோர்க்கு நல்விருந்தாக அமைந்து வாழுமின்.''

'' கூறுமி னீசனைச் செய்மின் குற்
றேவல் குளிர்மின் கண்கள்
தேறுமின் சித்தம் தெளிமின்
சிவனைச் செறுமின் செற்றம்
மாறுமின் வேட்கை யறுமி
னவல மிவைநெறியா
ஏறுமின் வானத் திருமின்
விருந்தா விமையவர்க்கே.''[49]

இதனோடு நக்கீரர் பெருமான் திருமுருகாற்றுப் படையில் கூறியுள்ள பேய் மகளின் தோற்றம் ஒப்பிட்டுக் காணற்பாலது.

'' உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்கும் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ண கழிமுடைக் கருந்தலை
யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நினந்தின் வாயள்.''[50]

ஆசிரியர் கூறும் பேய் வருணனை சிறப்புற அமைந்துள்ளது.

'குழிந்த கண், கோணிய நடை, வளைந்த பல், பிளவு பட்ட அடி, நீண்ட குடை, புலியின் செவிபோலும் ஊன்

49. பொன்வண்ணத்தந்தாதி; 70.
50. திருமுருகாற்றுப்படை; 47-56.

தழைத்த காது, தோலாக வற்றிய முலை, சுழன்ற மயிர், பிளவுபட்ட வாய், அதட்டிக்கட்டி யுரைக்கும் இரைந்த குரல், வாடிய வயிறு, பின்னிய விரல்' இவற்றை யுடையன வாக விளங்குகின்றன பேய்கள்.[51]

சிவபெருமான் நினக்கு அருள்புரிவான் என்று தோழி சொல்ல, அவன் தனக்குச் செய்த மாயச் செயல்களைத் தலைவி கூறுவதாக அமைந்துள்ள பாடல் (77) நடை நலமும் பொருள் நலமும் நிறைந்து காணப்படுகின்றது.

''ஈசன் அயலாரை அலர் தூற்றச் செய்தான். காமநோயினை என்மாட்டுப் பெருகச் செய்தான். முன்கை வளைகள் கழன்றுவிழச் செய்தான். அன்றில் (தன் குரலால் என் நெஞ்சை) ஈரும்படி செய்தான். தென்றல் என் உயிர்மேற் சீறிவரச் செய்தான். மேலும் துன்பங்கள் மலியுமாறு செய்தான். துகில்மேலணிந்த மேகலையையும் நழுவச் செய்தான். இவையே அப்பெருமான் என்பாற் செய்த மாயச் செயல்கள்'' என்று தலைவி தோழியிடம் குறிப்பிட்டாள்:

**மொழியக்கண் டான்பழி மூளக்கண்**
**டான்பிணி முன்கைச்சங்கம்**
**அழியக்கண் டானன்றி லீரக்கண்**
**டான்றென்ற லென்னுயிர்மேற்**
**கழியக்கண் டான்றுயர் கூரக்கண்**
**டான்றுகில் சூழ்கலையுங்**
**கழியக்கண் டான்தில்லைக் கண்ணுத**
**லான்கண்ட கள்ளங்களே.**[52]

தோழி கூற்றாக வரும் பாடலில் (78) நயமான கற்பனையொன்று அமைந்திருக்கக் காணலாம்.

''நீலகண்டரே! இவள் கைகளில் அணிந்துள்ள வளையல்களையே குறிக்கொண்டு வந்து கொள்ளுதல்

---

51. பொன்வண்ணத்தந்தாதி; 75.
52. ,, 77.

செய்தீர். அவை நீ கூத்தாடும் மயானத்தில் பூக்கும் விளாவின் மலரோ, எலும்போ, சூடிய கொன்றையோ, தோலுடையோ, திருநீறோ, வேறு உடையும் அணி கலமுமோ தெரிந்திலேம். இவ்வாறு நீவிர் கவர்ந்து கொள்ள இச்சிறுமி உமக்குக் கடமைப் பட்டதென்னோ'' என்றவாறு.[53]

''ஈசனுக்குத் தான் கடமைப் பட்டது ஒன்றுமில்லை யாயினும், தன்பால் வந்த அவனுக்குத் தன் பரந்த நெஞ்சில் தங்கத் தலைவி இடங்கொடுத்தாள். இதற்குக் கைம்மாறாக அப்பெருமான் துன்பத்தை இவளுக்குத் தந்தனன். பெரிய மரக்கிளையொன்றன் தாளை அக்கிளை மேல் அமர்ந்துகொண்டே வெட்டுதல் போலாம் இச் செயல்'' என்று தோழி கூறுவதாக அமைந்துள்ளது அடுத்த பாடல்.[54]

''பிரமன் தலையை அரிந்ததும், சலந்திரனை அழித் ததும், மன்மதனை எரித்ததும், முப்புரங்களை எரித்ததும், கங்கையின் வெள்ளத்தைச் சடையில் தாங்கியதுமாகிய இச்செயல்கள் நின் பெரும் புகழைப் பறைசாற்று வனவாகும். இவற்றை அறிந்த யான் நீவிர் இவளுடைய சிலவாகிய வளையல்களையும் நெகிழ்த்துப் பறித்த செயலை நோக்கி, இது உங்கட்குப் பழியாகுமே என்று எண்ணி வருந்துகின்றேன்'' என்று தோழி மேலும் கூறினாள்.[55]

செவிலி கூற்றாக வரும் அடுத்த பாடலில் (82) பண்டையளல்லாத, பரிசறியாத சிறுமியின் நிலை பேசப் படுகின்றது.

''இச்சிறுமி பெருமூச்செறிகின்றாள்; அவ்வாறு மூச்செறிதல் சாம்பிராணிப்புகை போல வெளித்தோன்று

---

53. பொன்வண்ணத்தந்தாதி; 78.
54. ,, 80.
55 ,, 81.

கின்றது. மனந்தளர்ந்து தன் கண்களினின்று மேனி யெங்கும் வழிய நீர் சொரிகின்றாள். நினைவு மாறு கின்றாள். நீலகண்டப் பெருமானைத் தன் கண்களில் தாபித்துக் கொள்ளுகின்றாள். வெண்ணகை புரிகின்றாள். இத்தகைய தன்மைகள் இப்போது இவளிடம் சார்ந் துள்ளனவாகையால் இவள் நாம் எண்ணிய பழைய நிலைமையில் உள்ளவளாக இல்லை.''[56]

இறைவனின் இணையற்ற கருணைப் பெருக்கினையும் அதே சமயத்தில் தன்பால் அருளற்ற தன்மையுடையனா யிருத்தலையும் எண்ணித் தலைவி இரங்கிக் கூறுவதாக அமைந்துள்ளன அடுத்த செய்யுள்கள் இரண்டும் (83, 84).

''எதிர்த்த கூற்றிற்குக் கூற்றாகும்; பிறவிப் பிணிக்கு அருமருந்தாகும்; சிந்திக்குமிடத்துச் சிந்தாமணிபோன்று தவும்; தித்திக்கும் அமுதமுமாகும்; இவையாவும் அரனடி யார்க்கு அமைகின்றன. ஆயினும் என்பாலோவெனில் யான் வந்திக்குமிடத்துமட்டும் என்பால் வந்து மயக்கஞ் செய்கின்றான்.''[57]

''தில்லைச் சிவனது திருவடிகளைக் கைதொழுதும், தீவினைப் பயனால் என் மேகலையையும் கைவளை களையும் யான் இழந்தேன். ஒரு நிலைப்படாத இவ்வுல கின்கண் ஆகக்கூடியவற்றை அழிக்கவல்லார் யார்? போகக் கூடியவற்றை யாவரே நிலைநிறுத்தவல்லவர்?''[58]

''ஆவன யாரே யழிக்கவல் லாரமை யாவுலகிற் போவன யாரே'' என்ற தொடர் உயரிய கருத்தினை உள்ளடக்கியதாகும்.

'வெறி விலக்கல்' என்பது ஓர் அகப்பொருள் துறை. தலைவிக்குற்ற நோயறிந்து நிமித்த மறியலுற்ற

---

56. பொன்வண்ணத்தந்தாதி; 82.
57. ,, 83.
58. ,, 84.

தோழிக்கோ அன்றிச் செவிலிக்கோ தலைவி கூறுவதாக அமைந்துள்ள பாடல் வருமாறு :

"தோழீ! (எனக்குற்ற காதல் நோயை விளைவித்த தெய்வம் இன்னதென அறியவேண்டிப் பிற நிமித்திகரை நாடி) நீ விரைய வேண்டா. குலம் நலம் கல்வி யாவும் மெய்யான அப்பெருமான் திருவடி மலர்களே என்று கல்விவலார் புகழும் நிறைவுள்ள நெஞ்சினையே யான் வேண்டியது. நீ விரும்பிய வேலன், கணி முதலியோரிடம் என் பெருமானைக் காண முயலுதலால், என் நெஞ்சம் பெரிதுங் கலக்கம் அடைகின்றது."[59]

இந்த வுலகம் அழியும் கடையூழியினிறுதியில் எம் பெருமான் நிகழ்த்தும் திருக்கூத்தினைச் சிறப்பிக்கிறது 86 ஆம் பாடல்.

"பெருங்கடல்கள் கலங்கின. கரிய மலைகள் வீழ்ந்தன. மண்ணுலகம் கீழே ஆழ்ந்தது. எட்டுப் பெரிய பாம்புகளும் நிலை குலைந்தன. பதினெண் கணங்களும் மருட்சி கொண்டன. நீண்ட சடைமுடி வானத்தைக் கடந்து மின்னி விளங்கியது, தேவரெல்லாம் வியப்புற்றனர். இவ்வாறு ஊழித்தீயின்கண் ஆடுங் கூத்தை இனி யாவர் மகிழ எம்பெருமான் ஆடுவதோ? தெரிந்திலேன்" என்னும் கருத்தமைந்தது இப்பாடல்.[60]

"விண்ணை மடங்க விரிநீர்பரந்து
வெற்புக் கரப்ப
மண்ணை மடங்க வருமொரு காலத்தும்[61]

என்ற திருக்கோவைத் தொடர் ஈண்டு ஒப்பு நோக்குதற் குரியதாகும்.

---

59. பொன்வண்ணத்தந்தாதி; 85.
60. ,, 86.
61. திருக்கோவையார்; தன் துணிபுரைத்தல்; 75.

செவிலி தலைவி திறத்தில் இரங்குவதாயமைந்த பாடலின் (87) பொருள் வருமாறு:

"முக்கட் பெருமானுக்கு இவள் எம்முறையினள்? அவன் திறத்தில் இவள் செய்த பிழை என்னே! ஈசன் இவளுக்கு எலும்பாக உடலை ஆக்கினன். மேலும் தளர்ந்த நிலையில் இருக்கும் இவளது அரைக்கலையையும் அவன் கவரக் கருதினன். யான் வணங்குந் தெய்வமும், தேவாதி தேவனும், உமையொரு பாகனுமானவன் இவள் திறத்தில் இங்ஙனம் புரிவது யாது கருதியோ?" என்று செவிலி இரங்கிக் கூறினாள்.[62]

"எண் தோளுடைய ஈசனுக்குத் திரிகரணங்களாலும் நிலைபெயராமல் திருத்தொண்டினை முக்கரண சுத்தியோடு செய்தவர் மேருமலை போன்று ஓங்கி என்றும் நிலைபெறக் கூடியவர் என்று கூறுவர் அறிந்தோர்" என்னும் அரிய கருத்தினை வெளியிடுகின்றது 88-வது பாடல்.

> "............எண்டோட்
> இவற்கு மனஞ் சொற்செய்கை
> நிலைபிழை யாதுகுற் றேவல் செய்
> தார் நின்ற மேரு வென்னும்
> மலைபிழை யாரென்ப ராலறிந்
> தோர்களிம் மாநிலத்தே"[63]

"இறைவனின் இயல்புகளையும் பெருமைகளையும் அயன் அரி போன்றாரும் ஆய்ந்து உள்ளபடியே உணர்ந்தாரல்லர் எனில் அவன் தன்மைகளை அறிந்து, சிறு மானிடராகிய யாம் சிறந்த கவிகளால் எங்ஙனம் பாட வல்லேம்?" என்ற அடக்கத்தைப் புலப்படுத்துகின்றது அடுத்த பாடல் (89).

---

62. பொன்வண்ணத்தந்தாதி; 87.
63. ,, 88.

மாநிலத் தோர்கட்குத் தேவ
ரனையவத் தேவரெல்லா
மானலத் தாற்றொழு மஞ்சடை
யீச னவன் பெருமை
தேனலர்த் தாமரை யோன்றிரு
மாலவர் நேர்ந்துணரார்
பாநலத் தாற்கவி யாமெங்ங
னேயினிப் பாடுவதே.[64]

"ஈசன் அணிந்துள்ள வெண்ணீறு அவனது சடை முடியிலுள்ள நாகம் விட்ட பெருமூச்சாற் பெருகிய தீப்பட்டு உருகிய சந்திரகலையின் ஊற்றொழுக்கை ஒத்துள்ளது. உமாதேவி பாகமான அவன் திருமேனியானது கங்கையும், தெளிந்த நீருள்ள யமுனையுந் தம்முட் கூடிய சங்கமத்தை ஒத்துள்ளது" எனப் பேசுகின்றது ஒரு பாடல்.[65]

92ஆம் பாடல் ஒரு முடிமணியாயமைந்த பாடல்; அரிய கருத்துகள் அடங்கியது.

"இறைவனைச் சிந்திக்க மனத்தையும், அவன் புகழ் பேச நாவையும், வணங்கத் தலையையும், தொழக் கையையும் நன்கு பிணிக்க அன்பையும், அவனுக்கே உடம்பினையும் யான் நியமித்துக் கொண்டேன்."

சிந்தனை செய்ய மனமமைத்
தேன்செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத்
தேன்கை தொழவமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத்
தேன்மெய் யரும்ப வைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசற்
கிவையான் விதித்தனவே.[66]

---

64. பொன்வண்ணத்தந்தாதி; 89.
65. ,, 90.
66. ,, 92.

சிவபெருமான் திருமூர்த்தியுருவாயுள்ளான் என்று கூறுவது 95-வது பாடல். ''ஈசனது பெயர்கள் அரன் அயன் அரி என்பன. அவன் வாழும் பதி வெற்பு (கயிலை), அலர் (பதுமம்), நீர் (பாற்கடல்) ஆகும். அவனது நிறம் எரி (வண்ணம்), பொன் (வண்ணம்), கார் (வண்ணம்) ஆம். அவன் மாலைகள் கடுக்கை (கொன்றை), கமலம், துழாய் என்பனவாகும். அவன் ஊர்திகள் இடபம், அன்னம், கருடன் முதலியனவாம்.''[67]

''இப் பேதைப் பருவத்தாளாகிய பெண் பேசுவன யாவும் இறைவனது திருநாமங்களே. வெறுப்பற்ற இவளது வேட்கை முழுதும் ஈசன் மாட்டேயுளது. அவன் முடிக்கணிந்த கொன்றையையும், பூசிய சாந்தையும் தன் மார்பகங்களிற் கொண்டு ஈசனைத் தழுவ எண்ணி இவள் அவனைத் தொழுது நின்றாள். இக் கூற்று என்றும் பொய்யற்றதாகும்.'' இவ்வாறு தோழி தலைவி எம் பெருமான் மாட்டுக் கொண்ட காதலைப் புலப்படுத் தினாள்:

பேசுவ தெல்லா மரன்றிரு
நாமமப் பேதை நல்லாள்
காய்சின வேட்கை யரன்பா
லதுவறு காற்பறவை
மூசின கொன்றை முடிமே
லதுமுலை மேன்முயங்கப்
பூசின சாந்துந் தொழுமா
லிவையொன்றும் பொய்யலவே.[68]

''நரகம் புகுவதாயினும், இம்மை யின்பங்களைத் துறக்க நேர்ந்தாலும், ஊர்வன நடப்பன பறப்பனவாகிய தாழ் பிறவிகளிற் பிறந்து துன்புற்று இறந்தாலும், இவ்வுல கையே அரசாண்டாலும், ஈசனின் கழலடி மறவாத

67. பொன்வண்ணத்தந்தாதி; 96.
68. ,, 97.

வரமொன்றையே யான் வேண்டுவேன்'' என்று தலைவி கூறுவதாய் அமைந்த அரிய பாடல் வருமாறு:

பொய்யா நரகம் புகினுந்
துறக்கினும் போந்து புக்கிங்
குய்யா வுடம்பினொ டூர்வ
நடப்ப பறப்பவென்று
நையா விளியினும் நானில
மாளினும் நான்மறைசேர்
மையாம் மிடற்றா னடிமற
வாவரம் வேண்டுவனே.[69]

இக் கருத்துடன் தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாடலொன்றனை ஒப்பிட்டுக் காண்க.

பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா அமர ரேறே
ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே.[70]

''மக்கட்கு விதிக்கப்பட்ட ஆயுட் காலத்தில் பாதி இரவிற் கழிந்து விடுகின்றது. மிகுதி பாதியுள், நோய் பெருகுவதற்குரிய முதல் நிலை பிள்ளைப் பருவமாகும். அதன் பின்னர் அமைந்தது முதுமைப் பருவம், இவ்விரு வகைப் பருவங்கட்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் அச்சம், வெகுளி, அவா, அழுக்காறு ஆகிய தீய குணங்கள் ஆட்சி செலுத்துகின்றன. இவ்வாறாகக் கால முழுதும் வீணே கழிந்தன. எனவே, இப்போதே யாம் முக்கட் பெருமானைத் தியானித்து உய்வோமாக.''

---

69. பொன்வண்ணத்தந்தாதி; 98.
70. நாலாயிரத் திவ்விய பிரபந்தம்; திருமாலை : 2.

இவ்வாறு தலைவி கூறும் கருத்துகளை உள்ளடக்கிய பாடல் உய்யும் நெறி உணர்த்தி நிற்கிறது:

**வேண்டிய நாள்களிற் பாதியுங்**
**கங்குல் மிகவவற்றுள்**
**ஈண்டிய வெந்நோய் முதலது**
**பிள்ளைமை மேலதுமூப்**
**பாண்டின வச்சம் வெகுளி**
**யவாவழுக் காறிங்ஙனே**
**மாண்டன சேர்தும் வளர்புன்**
**சடைமுக்கண் மாயனையே.**[71]

"பொன் மயமான மேருமலையை அணுகிய காக்கையும் அப்பொழுதே பொன் வண்ணமாவது கண் கூடாகக் காணும் செயல் போன்றே சிவபிரானுக்கு அடிமைத் தொண்டரானவர் வீடு பேற்றினை உறுதியாகப் பெறுவர் என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ?" எனக் கூறி நிற்கிறது பொன் வண்ணத் தந்தாதியின் இறுதிப் பாடல்.

**மாயணன் மாமணி கண்டன்**
**வளர்சடை யாற்கடிமை**
**யாயின தொண்டர் துறக்கம்**
**பெறுவது சொல்லுடைத்தே**
**காய்சின வானை வளருங்**
**கனக மலையருகே**
**போயின காக்கையு மன்றே**
**படைத்தது பொன்வண்ணமே.**[72]

இப் பாடலோடு,

**வற்கென் றிருத்திகண் டாய்மன மென்னொடு சூளறு**
**பொற்குன்றஞ் சேர்ந்ததொர் காக்கைபொன் னாமது**
**வேபுகல்**

---

71. பொன்வண்ணத்தந்தாதி; 99.
72. ,, 100.

**கற்குன்றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்**
**புற்கென்று தோன்றிடு மெம்பெரு மான்புன வாயிலே.**[73]

பொன்வண்ணத்தந்தாதியினை இயற்றிய சேரமான் பெருமாள் நாயனார் சேர வமிசத்து அரசர் என அறிகின்றோம். இக் கருத்தினை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு அகச் சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை. இருப்பினும் இந்நூலின் 98 ஆம் பாடலில் 'நானிலம் ஆளினும்' என்ற தொடர் ஒன்றை இவர் பெய்துள்ளார். அப்பாடல் வருமாறு:

**பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போந்து புக்கிங்**
**குய்யா உடம்பினொ டூர்வ நடப்ப பறப்ப என்று**
**நையா விளியினும் நானிலம் ஆளினும் நான் மறைசேர்**
**மையார் மிடற்றான் அடிமற வாவரம் வேண்டுவனே**[74]

நானிலம் ஆள்வதினும் இறைவனை மறவா மனத்தினையே இவர் பெரிதும் வேண்டுகிறார்.

பொறி புலன்கள் செலுத்தும் நெறியில் வாழ்வோர் வாழ்வு அவலம் நிறைந்ததாகும். அவ்வாறு செல்வோன் சிவன்பால் சித்தத்தை நிலைநிறுத்த முடியாது. இக் கருத்தினைச் சான்றோர் பலர் குறித்துச் சென்றுள்ளனர். திருவள்ளுவர் பெருமான்,

**அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்**
**வேண்டிய வெல்லா மொருங்கு**[75]

என்றும்,

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு.**[76]

என்றும் குறிப்பிட்டுள்ளார். திருநாவுக்கரசர் பெருமான்.

---

73. சுந்தரர் தேவாரம்; ஏழாம் திருமுறை; திருப்புனவாயில் : 4.
74. பொன்வண்ணத்தந்தாதி; 98.
75. திருக்குறள்; துறவு : 3.
76. ,, ,, 10.

> **பொறிப் புலன்களைப் போக்கறுத் துள்ளத்தை**
> **நெறிப்படுத்தும்**[77]

என்றார். மாணிக்கவாசகர்,

> **மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப்**
> **புலன் ஐந்தின் வழியடைத்து.''**[78]

என்று புகன்றுள்ளார். இந்த முறையிலேயே சேரமான் பெருமாள் நாயனாரும்,

> **தீவினையேனை நின்றைவர் இராப்பகல் செத்தித்தின்ன**
> **மேவின வாழ்க்கை வெறுத்தேன் வெறுத்துவிட்டேன் வினையும்**
> **ஓவின துள்ளந் தெளிந்தது கள்ளங் கடிந்தடைந் தேன்**
> **பாவின செஞ்சடை முக்கணன் ஆரணன் பாதங்களே''**[79]

என்று குறிப்பிட்டுள்ளார். உடல் எடுத்த பயன் உத்தமன் திருவடி சேர்தலே என்பதனை இந் நாயனார் பெரிதும் தம் பாடலில் வற்புறுத்தியுள்ளார்.

> **படிறா யினசொல்லி பாழ்உடலோம்பிப் பலகடைச் சென்று**
> **இடறா தொழிதும் எழு நெஞ்சமே எரியாடி எம்மான்**
> **கடறாயின நஞ்சும் உண்டபிரான் கழல் சேர்தல் கண்டாய்**
> **உடறானுள பயன் ஆவ சொன்னேன் இவ்வுலகினுற்றே.''**[80]

### ஈசனிடம் கொண்ட இணையற்ற அன்பு

முக்கரண சுத்தியுடன் முக்கட் பெருமானின் திருவடிக்கே ஆளாகும் நோக்கில் சேரமான் பெருமாள் சிறந்தொளிர்கின்றார். பின்காணும் அழகிய பாடல்வழி

---

77. திருநாவுக்கரசர் தேவாரம்; ஐந்தாம் திருமுறை; திருவேகம்பம் : 4.
78. திருவாசகம்; கோயில் திருப்பதிகம் : 1
79. பொன்வண்ணத்தந்தாதி; 18.
80. ,, 13.

அவர் இறைவன் மாட்டுத் தாம் கொண்ட ஈடுபாட்டினையும் அவனை வாழ்த்தி வணங்கும் வந்தனைக்குரிய முறைகளையும் புலப்படுத்தியுள்ளார்:

**சிந்தனை செய்ய மனமமைத்தேன் செப்ப நாவமைத்தேன்**
**வந்தனை செய்யத் தலையமைத் தேன்கை தொழ**
**அமைத்தேன்**
**பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்மெய் யுரும்ப**
**வைத்தேன்**
**வெந்த வெண்ணீறணி ஈசற் கிவையான் விதித்தனவே.''**[81]

## முன்னோர் மொழியைப் பொன்னேபோல் போற்றல்

**'' உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்**
**வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.''**[82]

என்ற திருக்குறட் கருத்தினை,

**'' ........ பழியே விளைக்கும்பஞ்**
**சேந்திரியக் குஞ்சரமுந்**
**தெழித்தேன்.''**[83]

என்ற பாடலிற் காணலாம்.

**'' கனியே கழலடி யல்லாற்**
**களைகண்மற் றொன்றுமிலேன்''**[84]

என்ற இவரது பாடல் தொடர்,

**'' கண்ணிலேன் மற்றோர்களைகண் ணில்லேன்**
**கழலடியே கைதொழுது காணின் அல்லால்''**[85]

என்ற திருநாவுக்கரசரின் தேவாரப் பாடலை அடியொற்றியதாகும்.

---

81. பொன்வண்ணத்தந்தாதி; 92.
82. திருக்குறள்; நீத்தார் பெருமை : 4.
83. பொன்வண்ணத்தந்தாதி; 23.
84. ,, 40.
85. திருநாவுக்கரசர் தேவாரம்; ஆறாம் திருமுறை; திருப்புகலூர் : 1.

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"[86]

என்ற குறட் கருத்து,

"சொல்லா தனகொழு நாவல்ல
சோதியுட் சோதிதன்பேர்
செல்லாச் செவிமரந் தேறித்
தொழாதகை மண்டிணிந்த
கல்லா நினையா மனம் வணங்
காத்தலை யும்பொறையா
மல்லா வவயவந் தானு
மனிதர்க் கசேதனமே."[87]

என்ற பாடலில் பிரதிபலிக்கக் காணலாம்.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்"[88]

என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தை அடியொற்றி,

"புனக் கொன்றை யானரு ளாற்புழு
வாகிப் பிறந்திடினும்
எனக் கென்றும் வானவர் பொன்னுல
கோடொக்க வெண்ணுவனே"[89]

என்ற பாடல் அமைந்துள்ளது.

"உறைகின் றனரைவ ரொன்பது
வாயிலோர் மூன்றுளதால்"[90]

என்ற பாடல் தொடர்,

86. திருக்குறள்; கடவுள் வாழ்த்து : 9.
87. பொன்வண்ணத்தந்தாதி; 42.
88. திருநாவுக்கரசர் தேவாரம்; நான்காம் திருமுறை; திருப்பாதிரிப்புலியூர் : 8.
89. பொன்வண்ணத்தந்தாதி; 43.
90. ,, 72.

“ எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே ”[91]

என்ற திருநாவுக்கரசர் பாடலை நினைவூட்டுகின்றது.

“ வலந்தான் கழலிடம் பாடகம் பாம்பு வலமிடமே
கலந்தான் வலநீ றிடம்சாந் தெரிவலம் பந்திடமென்
பலந்தார் வலமிட மாடகம் வேல்வல மாழியிடம்
சலந்தாழ் சடைவலந் தண்ணங் குழலிடஞ் சங்கரற்கே.[92]”

என்ற பாடலோடு,

“ தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ”[93]

என்ற திருவாசகப் பாடலை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது ஒத்த கருத்துகள் பொலிந்திலங்குவதனைக் காணலாம்.

**பாநயம்**

இறைவன் அருள் வடிவானவன். உண்டார் உயிரை உண்ணும் நஞ்சினையும் தான் உண்டு உயிர்கட்குபகாரம் செய்து நீலகண்டனாகத் துலங்குகின்றவன். இவ் வருள் நிறைந்த செயலைத் திருஞானசம்பந்தர்,

---

91. திருநாவுக்கரசர் தேவாரம்; ஆறாம் திருமுறை; திருப்புகலூர் : 1.
92. பொன்வண்ணத்தந்தாதி; 65.
93. திருவாசகம்; திருக்கோத்தும்பி : 18.

" கனைத்தெழுந்த வெண்திரைசூழ் கடலிடை
நஞ்சு தன்னைத் தினைத்தனையாம் மிடற்றில்
வைத்த திருந்தியதேவ"[94]

என்றும், திருநாவுக்கரசர்,

" நெய்யாடி நின்மலனே நீலகண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே"[95]

என்றும், சுந்தரர்,

" ஆலந்தான் உகந்தமுது செய்தானை
ஆதியை அமரர் தொழுதேத்தும்
சீலந்தான் பெரிதும் உடையானை"[96]

என்றும், மாணிக்கவாசகர்,

" வார்ந்த நஞ்சயின்று வானோர்க்கு அமுதம் ஈவள்ளல்
ஆர்ந்தநின் பாதம் நாயேற் கருளிடவேண்டும் போற்றி "[97]

என்றும் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர்.

இவற்றிற் கொப்பவே சேரமான் பெருமான் நாயனாரும்,

" அருளால் வருநஞ்சம் உண்டுநின் றாயை அமரர் குழாம்
பொருளார் கவிசொல்ல யானும்புன் சொற்கள் புணர்க்க லுற்றேன்
இருளா சறஎழில் மாமதி தோன்றவும் ஏன்ற தென்ன
வெருளா தெதிர் சென்று மின்மினி தானும் விரிகின்றதே."[98]

என்று பாடியுள்ளார்.

---

94. திருஞானசம்பந்தர் தேவாரம்; முதல் திருமுறை; திருநெடுங்களம் : 2.
95. திருநாவுக்கரசர் தேவாரம்; ஆறாம் திருமுறை; திருப்புகலூர் : 8.
96. சுந்தரர் தேவாரம்; ஏழாம் திருமுறை; திருவேகம்பம் : 1.
97. திருவாசகம்; திருச்சதகம் : 69.
98. பொன்வண்ணத்தந்தாதி; 25.

தோழியின் கூற்றாக வரும் அகப்பொருட்சுவை யமைந்த பிறிதொரு பாடல் பாநயம் நிறைந்து காணப்படு கின்றது. "யானையை அலறத் தாக்கி வெற்றி கொள்ளும் சிங்கம் ஒரு சிறிய எலியை வாட்டுதல் அதன் பெருமைக் கிழுக்காகும் செயலாகும். சிங்கம் இவ்வாறு எலியைக் காய்வது பெருமை குன்றிய செயலாவது மட்டு மன்றிப் பழி மிகுந்த செயலுமாகும். அதுபோன்றே பிரம்மா முதலிய புகழ் பிறங்கியவரை வெற்றி கொண்ட சிவபிரான் எளிய தலைவியின் கைவளைகளைக் கவர்ந்து வெற்றி பெறுவ ராயின் அச்செயலால் அவர்க்குப் பெருமையும் வாராது; மாறாகப் பழியுமாகும்" என்ற கருத்தமைந்த பாடல் கழிபெரும் கவிதை இன்பம் தருவதாகும்.

" தறித்தாய் அயன்தலை சாய்த்தாய்
சலந்தரனைத் தழலாப்
பொறித்தாய் அனங்கனைச் சுட்டாய்
புரம்பனலுஞ் சடைமேற்
செறுத்தாய்க் கிவைபுகழ் ஆகின்ற
ஈண்டிவள் சில்வளையும்
பறித்தாய்க் கிதுபழி ஆகுங்கொலாம் என்று
பாவிப்பனே."[99]

## சிவனடி சிந்திக்கும் அருள் நெஞ்சம்

துணி துவைக்கும் துறைக்குச் சென்று துணி துவைத்து விட்டு வீடு திரும்பும் வண்ணான் முதுகில் ஒட்டியிருந்த உவர்மண் மழைநீர் பட்டதால் வெளுத்துப் பூத்துச் சிவனின் வெண்ணீற்றினை ஒத்திருந்தது. நகர்வலம் வந்த சேரமான் பெருமாள் இதனைக் கண்ணுற்று 'வாரமேடமே நினைப்பித்தீர்' என்று யானையினின்றும் இவர்ந்து வண்ணானின் காலில் விழுந்து வணங்கச் செல்ல, அவன் 'அடிவண்ணான்' என்று சொல்லி ஒதுங்கப் பதிலுக்கு 'அடிச்சேரன்' என்று மொழிந்த—அடக்கமே உருவானவர்

99. பொன்வண்ணத்தந்தாதி; 81.

சேரமான் பெருமாள். பக்தி வலையிற்பட்ட மெய்யன்பு நிறைந்த நாயனார் அருள் நெஞ்சமும் நன்கு வாய்க்கப் பெற்றிருந்தார். 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்னும் பரந்த நெஞ்சினராக வாழ்ந்த கொடை நெஞ்சு கோணாத நாயனார், அவ்வருள் நெஞ்சத்தோடு பாமணக்க நாமணக்கப் பாடியுள்ள பாடல் வருமாறு:

"கூறுமின் ஈசனைச் செய்மின் குற்
றேவல் குளிர்மின் கண்கள்
தேறுமின் சித்தம் தெளிமின்
சிவனைச் செறுமின் செற்றம்
ஆறுமின் வேட்கை அவலம்
இவை நெறியா
ஏறுமின் வானத் திருமின்
விருந்தாய் இமையவர்க்கே."[100]

## அணிநயம்

நாயனாரின் பாடல்களில் பா நலமும் நடை நலமும் சிறக்க மிளிர்வதனைக் கண்டோம். ஈண்டு அணிநலம் அவர் பாடல்களில் அழகுற அமைந்து கிடக்கும் மாட்சியினைக் காண்போம்:

"சாற்றுவன் கோயிற் றலையும் மனமும் தவமிவற்றால்
ஆற்றுவன் அன்பெனும் நெய்சொரிந் தாற்றிய
சொல்மலரால்
ஏற்றுவன் ஈசன்வந் தென்மனத்தான் என்றெழுந் தலரே
தூற்றுவன் தோத்திரம் ஆயினவே இனிச்
சொல்லுவனே."[101]

இப் பாடலில் 'அன்பெனும் நெய் சொரிந்து ஆற்றிய அஞ்சொல் மலரால் ஏற்றுவன்' என்ற உருவக அணியும், 'ஈசன் என் மனத்தான் என்றெழுந்து அலரே தூற்றுவன்'

100. பொன்வண்ணத்தந்தாதி; 70.
101. ,, 41.

என்பதில்' 'அலரே தூற்றுவன்' என்ற சொற்களில் (அலரே தூற்றுவன்—பழி பரப்புவேன், மலர் தூவி வழிபடுவேன்) சிலேடை அணியும் அமைந்திருத்தல் காணலாம்.

'சந்திரன் தோன்ற அதற்கிணையாக மின்மினியும் பறந்தொளிர்கின்றது; அதுபோலத் தேவர் குழாம் நற் சொற் கவி சொல்லயானும் புன்சொற் கவி தொடுக்கலானேன்' என்ற கருத்தமைந்துள்ள பாடல் வருமாறு:

**'' அருளால் வருநஞ்ச முண்டுநின்**
**றாயை அமரர் குழாம்**
**பொருளார் கவிசொல்ல யானும்புன்**
**சொற்கள் புணர்க்கலுற்றேன்**
**இருளா சறவெழின் மாமதி**
**தோன்றவு மேன்றதென்ன**
**வெருளா தெதிர்சென்று மின்மினி**
**தானும் விரிகின்றதே''**[102]

என்ற பாடலில் எடுத்துக்காட்டுவமை அமைந்துள்ளது.

**'' விரிகின்ற ஞாயிறு போன்றது**
**மேனியஞ் ஞாயிறுசூழ்ந்**
**தெரிகின்ற வெங்கதி ரொத்தது**
**செஞ்சடை யச்சடைக்கீழ்ச்**
**சுரிகின்ற காரிருள் போன்றது**
**கண்டமக் காரிருட்கீழ்ப்**
**புரிகின்ற வெண்முகில் போன்றுள**
**தாலெந்தை யொண்பொடியே.''**[103]

என்ற பாடலிற் பலவயிற் போலியுவமை அமைந்துள்ளது. 71ஆம் பாடலில் சிலேடையணியும், 95ஆம் பாடலில் நிரனிறையணியும் அமைந்துள்ளன.

---

102. பொன்வண்ணத்தந்தாதி; 25.
103. ,, 26.

## சேரநாட்டு வழக்குகள்

நூலாசிரியர் சேரநாட்டினராதலால் சேர நாட்டுச் சொல் வழக்குகள் சில இப் பாடல்களில் வந்துள்ளமை காணலாம்.

(1) மாடம் பதி—கோயில் (அ) மடத்தின் தலைவர் (8)
(2) செத்துதல்—அரிதல், சிறிது சிறிதாக வெட்டுதல் (18)
(3) போதம்—அறிவு (19)
(4) நங்கள்—எங்கள் (36)
(5) பறைகின்ற—சொல்லப்படும் (72)

## இசை, கூத்து வகைகள்

சீகாமரப்பண் 'காமரம்' என 16ஆம் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. 'பாணி கொள வுமையாள் பண்ணியன் பண்ணியல் பாடலன்' என்ற தொடர் உமாதேவி தாளத்தை அறுதியிடத் தான் பண்ணுடன் பாடலை இசைப்பவன் என்பதனைப் புலப்படுத்துகின்றது. ஆடல்பாடல்களுடன் ஈசன் நிகழ்த்தும் கூத்தில், உமாதேவி தாளம் தருதல் வழக்கம். இதனை, "நீ காபால மாடுங்கால் முத்துறழ் முறுவலாள் முற்பாணி தருவாளோ" என்ற கலித்தொகைக் கடவுள் வாழ்த்துச் செய்யுளால் அறியலாகும்.

'பண்டரங்கன்' என்று சிவனைக் குறிப்பிடுகின்றது ஒரு பாடல் (32). பாண்டரங்கக் கூத்தினை ஆடுபவன் என்பது இதன் பொருள். பாண்டரங்கக் கூத்து சிவனாடல்களில் ஒன்று என்பதனைக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துக் கொண்டும், சிலப்பதிகாரங் கொண்டும் அறியலாம்.

## பழமொழி

பழமொழி ஒன்றும் ஒரு பாடலில் (73) கையாளப் பட்டுள்ளது. 'ஓரூர் இரண்டஃகம் காட்டல்' என்பது

பழமொழி. அஃதாவது ஓரூரில் ஒரு பண்டத்தையே இரண்டு விலைக்கு விற்று வாணிபஞ் செய்வது போலும் முறைமை. திருத்தக்க தேவரும் 'ஓரூரிரண்டாஃமாயிற்று' என்று சீவக சிந்தாமணியில் (2087) இப்பழமொழியினைக் கையாண்டுள்ளார். வணிகர் ஒரே ஊரிலேயே ஒரு பண்டத்திற்கு இரண்டு விலைகள் கூறி விற்கக்கூடாது என்பது இதனால் தெரிகின்றது.

இதுகாறும் கண்டவற்றால் சேரமான் பெருமாளின் தூய அடக்கம் நிறைந்த பக்திச் சிறப்பும், நடை நலமும் தொடை நலமும் சான்ற புலமைச் செவ்வியும், 'ஏணார் இருந்தமிழ்' எனத் தமிழைக் குறிப்பிட்டுள்ளமை (62) கொண்டு அவர்தம் தளராத தண்டமிழ்ப் பற்றும், தான் பெற்ற இன்பம் வையகமும் பெற வேண்டும் என்ற பரந்த நோக்கமும், திருமுறைகளில் தோய்ந்த நெஞ்சமும், பாக்களில் அணிகளை அழகுறப் பொருந்த அமைக்கும் மாட்சியும், அகப்பொருள் அமைதி துலங்கப் பாடும் கவிதை மரபும், மெய்யுணர்வு ததும்பி நிற்கும் பெற்றியும் ஆய இன்னோரன்ன பல சிறப்புகள் ஒருங்கே புலனாதல் கண்டோம்.

# 2. திருவாரூர் மும்மணிக் கோவை

தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைச் செய்யுள் நூல்களில் ஒரு வகையின கோவை நூல்களாகும். தொல்காப்பியனார் கூறும் 'விருந்து' என்னும் வனப்பு வகையைச் சார்ந்தது. இக் கோவை அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைந்ததாகும். சில பிரபந்தங்களில் அகப்பொருள் இலக்கியச் செய்யுட்கள் அமைந்திருப்பினும் கிளவிகளாக வகுத்துத் துறைகளாக விரித்து ஒரு வரலாற்றுத் தொடர்ச்சி அமையக் கோக்கப் பெற்றுப் பாடப் படுவதாதலின் இந் நூல்வகை 'கோவை' என்னும் பெயர் பெற்றது. அகப் பொருட் சுவை தழுவி வருதலின் 'அகப்பொருட் கோவை' என வழங்கப் பெறும். அகப்பொருட்குரிய ஐந்திணைகளும் அமைந் திருத்தலின் இஃது 'ஐந்திணைக் கோவை' எனவும் வழங்கப் பெறும்.

**குலோத்துங்க சோழனைச் சொல்லியவைந்**
**திணைக்கோவை பாட**

என்று குலோத்துங்கன் கோவையும்,

**திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை**

என்று துறைமங்கலம் சிவப்பிரகாசர் பாடலும்,

**நம்மா லியற்றிக் கொடுத்திடு**
**மைந்திணைக்கோவை யேற்றனையால்**

என்று திருசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் பாடலும் குறிப்பிடுவதனால் கோவை நூல்கள் 'ஐந்திணைக் கோவை' எனவும் வழங்கப்பட்டன என்பது புலனாகும். தொல்காப்பியம், இறையனாரகப் பொருள், நம்பியகப் பொருள், வீர சோழியம், இலக்கண விளக்கம் முதலிய

நூல்களில் கோவையின் இலக்கணம் நன்கு கூறப்படு கின்றது. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித் தொகை, அகநானூறு ஆகிய தொகை நூல்களிலும், திணை மாலை நூற்றைம்பது முதலிய கீழ்க்கணக்கு நூல்களிலும் வரும் செய்யுட்கள் இவற்றின் இலக்கியம் என்பர்.

பொருள் தொடர்நிலைச் செய்யுட்களாக ஒன்றீ னொன்று தொடர்ந்து ஒரு கோவையாக வருதலின் 'கோவை' என்பது காரணப் பெயர் ஆகிறது. 'கோவை யுந் தொகையு மாவயின் வரையார்' என்பதனால் இது தொடர்நிலைச் செய்யுள் எனப் பேராசிரியர் கூறி யுள்ளார்.[1] மேலும் தண்டியலங்கார உரையாசிரியர் 'தமிழ் முத்தரையர் கோவை' என்னும் ஒரு நூலினைச் சிறு காப்பியத்திற்கு உதாரணமாகக் காட்டுவதால், கோவைகள், சிறு காப்பியங்களென்று வழங்கப்பட்டன என்பதும் பெறப்படும்.

> ஆய்ந்த கலித்துறைதான் நானூ றகப்பொருண்மேல்
> வாய்ந்தநற் கோவையாம்[2]

என்று வெண்பாப் பாட்டியலும்,

> கோவை என்பது கூறுங் காலை
> மேவிய களவு கற்பெனும் கிளவி
> ஐந்திணை திரியா அகப்பொருள் தழீஇ
> முந்திய கலித்துறை நானூ றென்ப[3]

என்று பன்னிரு பாட்டியலும் கோவைக்கு இலக்கணம் கூறும்.

இதனால் கோவை என்பது கட்டளைக் கலித்துறை நானூறு அகப்பொருள் மேல் வருவன என்பதும், அகப் பொருள் இலக்கணத்தைத் தழுவி ஐந்திணையிற்றிரியாதன

1. திருச்சிற்றம்பலக் கோவையார்; 252, உரை.
2. வெண்பாப் பாட்டியல்; 15.
3. பன்னிரு பாட்டியல்; 221.

வாய்ப் பொருந்திய களவும் கற்புமாகிய கைக்கோள்கள் இரண்டினுக்கு உரிய கிளவிகள் பழைமையாகிய முறையின் வரும் கட்டளைக் கலித்துறை நானூற்றாற் பாடப்படும் என்பதும் தெரிய வருகின்றன.

இனி, மும்மணிக்கோவையின் இலக்கணம் காண் போம்.

வெண்பாப் பாட்டியல்,

ஈண்டிய முப்பதா யீரெண் கலைவண்ணம்
மூண்டதொலி யந்தாதி முப்பதாம்—ஆண்டகவல்
முன்முறையே வெண்பா கலித்துறைய வந்தாழி
மும்மணிக்கோ வைக்கு முதல்[4]

எனக் குறிப்பிடுகின்றது. அதாவது நேரிசை ஆசிரியப் பாவும், நேரிசை வெண்பாவும், கட்டளைக் கலித்துறையும் முறையே அந்தாதியாக முப்பது கூடியது 'மும்மணிக் கோவை' என்பது பெறப்படுகிறது.

இலக்கண விளக்கப் பாட்டியல்,

அகவல் வெண்பா அசையெண் கலித்துறை
தொகை முப்பதுபெறச் சொற்றொடர் நிலையிற்
கூறுதல் மும்மணிக் கோவை யாகும்[5]

என்று குறிப்பிடுகின்றது.

பன்னிரு பாட்டியல்,

வெள்ளையும் அகவலும் நேரிசை ஆகக்
கலித்துறை வர அந் தாதி ஆகி
முறைமையின் இயல்வது மும்மணிக்கோவை.[6]

என்று குறிப்பிடுகின்றது. பன்னிரு பாட்டியலின் மேற் கோள் நூற்பாக்கள்,

---

4. வெண்பாப் பாட்டியல்; 13.
5. இலக்கண விளக்கப் பாட்டியல்; 55.
6. பன்னிரு பாட்டியல்; 56.

**தோன்றிய அகவல் வெள்ளை கலித்துறை**
**மூன்றும் வருவது மும்மணிக்கோவை**

என்றும்,

**மும்மூன் றொருபொருள் மிகைவரும் என்ப**

என்றும் குறிப்பிடுகின்றன.

நவமணிகளுள் நிறங்கள் வேறுபட்ட புருடராகம், வைடூரியம், கோமேதகம் என்னும்[7] மூவகை மணிகளாற் கோக்கப் பெற்ற கோவையைப் போலவே தம்முள் வேறுபட்ட ஆசிரியப்பா வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் மூவகைச் செய்யுட்கள் முப்பதால் அமைக்கப்படுவது 'மும்மணிக்கோவை' என்று வழங்கப்படும். இந்த மூன்று வகைச் செய்யுளும் அந்தாதியாகியும் ஈற்றுச் செய்யுளின் இறுதியும் முதற் செய்யுளின் முதலும் ஒன்றுபட்டு மண்டலித்தும் அமைந்துவரும். சொற்றொடர் நிலைச் செய்யுளில் அடங்கும் இம் மும்மணிக் கோவையினை யாப்பருங்கல விருத்தியுரைகாரர், "இறுதி யெழுத்தும் சொல்லும் இடையிட்டுத் தொடுத்த செய்யுளந்தாதி விகற்பம், உதயணன் கதையும் கலியாண கதையும் பன்மணி மாலையும் மும்மணிக் கோவையும் என்னும் அவற்றுட் கண்டு கொள்க"[8] என்று குறிப்பிட்டுள்ளதிலிருந்து செய்யுளந்தாதிக்கு மும்மணிக்கோவை உதாரணமாதல் அறியலாம்.

"இத்தகைய சிறுபிரபந்தங்கள் படிப்பவர்களுக்கு எளிதிற் பல கருத்துக்களையும் சொற்பொருட் சுவைகளையும் அன்பையும் புலப்படுத்தி ஆசிரியருடைய ஆற்றலை விளக்குகின்றன. தொடர்ந்து பயிலும் ஆற்றல் இல்லாத

---

7. "மும்மணியா வனசொன்ன புருடராகம் உறுவயிடூ
ரியங்கோமே தகமே
யென்றாங் கோதுவர்."
—திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்;
25 : 22

8. யாப்பருங்கல விருத்தி; நூற்பா : 53, உரை.

இளம் பருவத்தினருக்கு உரிய பாடப்புத்தகங்களாக இவ்வகைப் பிரபந்தங்கள் பண்டைக்காலத்துத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் பயிற்றப்பட்டன; அதனால் இவை தமிழறிவு பெற்றார்க்கும் பெற விரும்புவார்க்கும் ஒருங்கே இன்பந் தருவன ஆகும்'' என்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் குறிப்பிடுவர்.[9]

பழம்பெருமை மிக்கது திருவாரூர். பூங்கோயில் எனப் படும் மூலட்டானம் திருவாரூர்த் திருக்கோயிலில் உளது.

> '' இருங்கனக மதிலாரூர் மூலட்டானத்
> தெழுந்தருளி யிருந்தானை ''[10]

என்று திருநாவுக்கரசர் பெருமான் பாடியுள்ளார். திருவிழாக் காலங்களில் ஆரூர்த் தியாகேசப்பெருமான் அடியவர்க்கு அருள் வழங்கும் காட்சியும், அடியவர் அகமும் முகமும் குளிர இறைக்காட்சியில் ஈடுபடும் மாட்சியும் சேந்தனாரால் செவ்வையுறக் கிளத்தப்பட்டுள்ளன.

> '' குழல்ஒலி யாழ்ஒலி கூத்தொலி ஏத்தொலி
> எங்கும் குழாம் பெருகி
> விழவொலி விண்ணளவும்சென்று விம்மி
> மிகுதிரு ஆரூர் ''[11]

என்று பாடியுள்ளார்.

தெய்வப்புலமைச் சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்தின் திருநகரச் சிறப்பில் திருவாரூரைத் திறம்படப் புகழ்ந்துரைத்துள்ளார்.

> '' சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது
> மன்னு மாமல ராள்வழி பட்டது

---

9. வலிவல மும்மணிக்கோவை; முன்னுரை iv
10. திருநாவுக்கரசர் தேவாரம்; ஆறாம் திருமுறை; திருஆரூர் அறநெறி : 1.
11. ஒன்பதாம் திருமுறை; திருப்பல்லாண்டு; கோயில் : 11.

வன்னியாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர் திருநகர்''[12]

என்றும்,

"நிலம கட்கழ கார்திரு நீணுதல்
திலகம் ஒப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் தாம்ரை போல் மலர்ந்து
அலகில் சீர்த்திரு வாரூர் விளங்குமால்''[13]

என்றும் திருவாரூர்ப் பெருமையைச் செப்பியுள்ளார்.

திருவாரூர்ப் புராணம் இத்தலத்தின் பெருமையைப் பின்வருமாறு கூறும்:

"திருமகள் தவஞ்செய் செல்வத் திருவாரூர் பணிவ னென்னா
ஒருவனே ழடிந டந்து மீண்டிடின் ஒப்பில் காசி
விரிபுனற் கங்கை யாடி மீண்டவ னாவ னென்றால்
இருடிகாள் ஆரூர் மேன்மை பிரமற்கு மியம்ப வற்றோ.''[14]

"மண்ணினை யுண்டுமிழ்ந்த மாயனு மாமலர் மேல்
அண்ணலு நண்ணரிய ஆதியை மாதினோடும்
திண்ணிய மாமதில்சூழ் தென்திரு வாரூர்புக்
கெண்ணிய கண்குளிர என்றுகொ லெய்துவதே''[15]

என்று சுந்தரர் தேவாரம் குறிப்பிடுகின்றது.

சப்தவிடங்கத் தலங்களுள் முதன்மையான தலம். 'அஞ்சணை வேலி ஆரூர்' என்பது தேவாரம்.

"தேங்காவி னூறுந் திருவாரூர்த் தொன்னகரிற்
பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா திருந்தாரே''[16]

என்பது அப்பர் தேவாரம்.

---

12. திருவாரூர்த் திருநகரச் சிறப்பு; 1.
13. திருவாரூர்த் திருநகரச் சிறப்பு : 12.
14. திருவாரூர்ப் புராணம்; தலமகிமைச் சருக்கம்; 71.
15. சுந்தரர் தேவாரம், ஏழாம் திருமுறை: திருவாரூர் : 83 : 9
16. திருநாவுக்கரசர் தேவாரம்; நான்காம் திருமுறை; திருஆரூர் : 5.

இலக்குமி பூசித்த தலம் என்று

"......................மலர்மென் பாவை
முழுதுள திருவும் என்றும் முடிவில் மங்கலமு மெய்த
விழுமிதி னோற்றுப் பெற்ற வியன் திருவாரூர்"[17]

என்று கந்தபுராணம் குறிப்பிடும்.

"பிறந்தவர் பிறவாப் பெரும்பதி"[18]

என்று கல்லாடமும்,

"முத்தியங் குதித்தோ ரெய்தும் பதியது"[19]

என்று திருவிளையாடற் புராணமும் கூறா நிற்கும்.

தில்லையைக் காணக் காசியில் இறக்கச்
சிறக்கும் ஆரூர்தனில் பிறக்க
எல்லையில் அருணையை நினைக்க
எய்தலாம் முத்தி என்று உரைத்தீர்"[20]

என்ற பாடல் கொண்டு திருவாரூரிற் பிறக்க முத்தி என்ற கருத்தினை அறியலாம்.

சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரோடு திருவாரூர்த் திருக்கோயில் சென்று தியாகேசப் பெருமானை வணங்கியபோது இம்மும்மணிக் கோவையைப் பாடினார் என்பர்.

முதற்கண் ஆசிரியமும், அடுத்து வெண்பாவும், மூன்றாவதாகக் கட்டளைக் கலித்துறையுங் கொண்டு திருவாரூர் மும்மணிக் கோவை அமைந்துள்ளது.

---

17. கந்தபுராணம்; குமாரபுரிப் படலம் : 81.
18. கல்லாடம் ; 52.
19. திருவிளையாடற் புராணம் ; அருச்சனைப் படலம் : 17.
20. சைவ எல்லப்ப நாவலர்; அருணாசலப்புராணம் : 68.

ஆசிரியப்பாவாகப் பத்துப் பாடல்கள் வந்துள்ளன. பதினாறு அடிகளில் வருவன 2 (7, 10). பதினேழு அடிகளில் வருவது 1 (28). பதினெட்டு அடிகளில் வருவன 6 (4, 13, 16, 19, 22, 25). இருபது அடிகளில் வருவது 1 (1). வெண்பாக்கள் பத்தும் கட்டளைக் கலித்துறை பத்தும் நான்கடியான் வருகின்றன. ஒவ்வோர் பாடலும் தோழி, தலைவி, செவிலி, தலைவன் ஆகியவருள் ஒருவர் கூற்றாக வரக் காணலாம். மொத்தம் இருக்கும் முப்பது பாடல்களுள் தோழியின் கூற்றாகப் பதினாறு பாடல்களும்; தலைவியின் கூற்றாக ஏழு பாடல்களும், செவிலியின் கூற்றாக ஐந்து பாடல்களும், தலைவன் கூற்றாக இரண்டு பாடல்களும் வந்துள்ளன. ஒவ்வொரு பாடலிலும் திருவாரூர் இறைவன் பற்றிய புகழ்மொழி இடம் பெற்றுள்ளது. முதற்கண் திருவாரூர்ச் சிவபிரான் பற்றிய குறிப்புகளைக் காண்போம்:

**சிவபெருமான்**

(1) .............................. கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ணல். (1)

(2) .......................... வாய்ந்த
கனமால் விடையுடையோன்.

(3) கண்ணார் நுதலெந்தை

(4) அலகி லாற்ற லருச்சுனற் கஞ்ஞான்
றுலவா நல்வர மருளிய வுத்தமன்

(5) ............................ அயலாய
அண்டத்துக் கப்பாலா னந்திங்கட் கண்ணியான்

(6) ............................ துன்னருநஞ்
சாரு மிடற்றண்ணல்

(7) ............................ புல்லார்
திரிபுர மெரிய வொருகணை தெரிந்த
அரிவை பாகத் தண்ணல்.

(8) ........................ பியைழாச்சீர்
அம்மா னனலாடி யாரூர்க்கோன்

(9) ........................ விண்ணீ னின்றிழிந்த
பிளிறு குரற்கங்கை தாங்கிய பிஞ்ஞகன்

(10) ........................ செறிபொழில்
அருகுடை யாரூ ரமர்ந்துறை யமுதன்
முருகுவிரி தெரியன் முக்கண் மூர்த்தி

(11) ........................ தொழுதமரர்
முன்னஞ்சேர் மொய்கழலான் முக்கணான் நான்
மறையான்

(12) ........................ தக்கன் வேள்வி செற்ற
செந்தா மரைவண்ணன் தீர்த்தச் சடையன்

(13) ........................ திருந்தாக்
கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி லொருவன்
ஆற்றல் செற்ற வண்ணல்

(14) ........................ பொடியாக
நண்ணாரூர் மூன்றெரித்த நாகஞ்சேர்
திண் சிலையான்

(15) தடப்பாற் புனற்சடைச் சங்கரன்

(16) ........................ நலத்தகு
அலைபுன லாரூ ரமர்ந்துறை யமுதன்
கலையமர் கையன் கண்ணுத லெந்தை

(17) ........................ அரவஞ்
சடைக்கணிந்த சங்கரன்

(18) கடிமலர்க் கொன்றையுந் திங்களுஞ்
செங்க ணரவுமங்கேழ்
முடிமல ராக்கிய முக்கணக்கன்

(19) ......................... அவனேல்
அமரரு மறியா வாதி மூர்த்தி
குமரன் றாதை குளிர்கடை யிறையவன்
அறைகழ லெந்தை

(20) ......................... மேலாய
தேந்தண் கமழ்கொன்றைச் செஞ்சடையான்

(21) பொய்யார் தொழினு மருளு மிறை

(22) ......................... வார்சடைக்
கொடுவெண் டிங்கட் கொழுநிலவேய்க்குஞ்
சுடுபொடி யணிந்த துளங்கொலி யகலத்
தண்ணல்.

(23) ......................... நீளிருட்கண்
ஆயிரங்கை வட்டித் தனலாடித் தீயரங்கத்
தைவா யரவசைத்தான்.

(24) வார்சடை யான்

(25) மணிதிகழ் மிடற்று வானவன் மருவும்
அணிதிக ழகலத் தண்ணல்

(26) ......................... சீருலா
மாந்துறைவா யீசன்

(27) ............ கலைக்கைச் சுடர்வண்ணன்

(28) உலாநீர்க் கங்கை யொருசடைக் கரந்து
புலானீ ரொழுகப் பொருகளி றுரித்த
பூத நாத னாதி மூர்த்தி

(29) ஆயினவன் பாரே யழிப்ப ரனலாடி
போயினவன் பாரோம்பும் பேரருளான் தீயினவன்
கண்ணாளன்

(30) தாழ்ந்து கிடந்த சடைமுடிச் சங்கரன்.

இவ்வாறு இறைவனைப் புகழுகின்ற போக்கிலே திருவாரூரினையும் சேரமான் பெருமாள் நாயனார் சிறப்பித்துள்ளார். பலவிடங்களில் இறைவனின் செயல்கள் உவமைகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

## உள்ளுறை பொருள்

ஆசிரியரின் இயற்கை வருணனையைக் காண்போம். முதலாவது பாடலிலேயே கார்ப்பருவம் கவினுற வருணிக்கப்பட்டுள்ளது.

சூல்கொண்ட கருமேகம் மலைமுகடு ஏறி மழைத் துளிகளைப் பொழிகின்றது. தலைவன் குறித்த கார்ப் பருவத்தையே தலைவி நினைந்து நிற்றலால் தலைவியும் அப்பருவ நிலையை அடைந்தனள். கார்ப்பருவக் காட்சி களும் தலைவி கொண்ட உடல் வண்ண வேறுபாடுகளும் ஒத்துவிளங்குகின்றன.

தலைவியின் காதிற் குழைகளாகிய மின்னு விளங்கவும், புருவமாகிய வானவில் தோன்றவும், செவ்வாயாகிய இந்திரகோபம் ஊரவும், கைத்தலங்களாகிய காந்தள் மலரவும், பற்களென்னும் முல்லை அரும்பவும், குழலுந் தேமலுங் கொன்றைகளைத் தோற்றுவிக்கவும், மென் சாயல் இளமயிலின் தோற்றத்தினைத் தரவும், பெருமூச் செனும் ஊதைக் காற்று வீசவும், கண்ணீராகிய பெருமழை யைப் பொழிந்ததால் அக்கண்ணீர் பெருகி அக் கண்ணி லுள்ள அஞ்சனச் சேற்றில் அளைந்து, மணி பொன் வயிரம் அகில் சந்தனம் இவற்றை உரிஞ்சிக் கொங்கைகளாகிய மலை முகட்டிடையே இழிய, அதன் வழி தலைவியானவள் கார்ப்பருவத்தின் நிலைகளைத் தானும் புலப்படுத்தினள்

என்று முதற்பாட்டுக் குறிப்பிடுகின்றது. வானத்தில் வில் தோன்றுதல், இந்திர கோபம் ஊர்தல், காந்தள், முல்லை, கொன்றை முதலிய காட்டுநிலப் பூக்கள் மலர்தலும், மயிலாடுதலும், வாடை வீசுதலும் கார் காலத்தில் நடை பெறும் செயல்களாதலின் இவற்றிற் கேற்பவே தலைவி மாட்டும் பல்வேறு மாற்றங்கள் விளைந்தன என எடுத்துக் காட்டுவர் ஆசிரியர்.

கார்காலம் முகிழ்த்த அளவில் தலைவிமாட்டுத் தோன்றிய துன்பத்தினை இரண்டாம் பாடல் இனிமை ததும்ப மொழிகின்றது.

இடப வாகனனான இறைவன் கண்டத்தைப் போல் கறுத்த கார்காலம் தோன்றிய அளவில், காதலன் சென்ற தேர் அதுகாறும் வாராததன் விளைவாகத் தலைவியின் கைவளைகள் தாமே கழன்றன; மேனியில் பசலை நிறம் ஊர்ந்தது; கண்கள் நீரைப் பொழிந்தன.

மேலும் மூன்றாம் பாடல் கார்காலத்தின் வரவால் தலைவி படும் வாட்டத்தினையே மேலும் மிகுத்துரைக்கின்றது.

ஈசனது திருநீலகண்டம் போன்று இருண்ட மேகம் இடியுடன் கூடி ஒலிக்கின்றது. இது, வானவெளியில் நடைபெறும் செயல். கீழே முல்லை நிலத்தில், மலைச் சாரலின் பாங்கர் இனம் இனமாக மயில்கள், ஆனிரை, மடமான்கள் முதலியன ஆணும் பெண்ணுமாகக் கலந்து விளையாடுகின்றன. இக்காதற் காட்சிகள் தலைவனைப் பிரிந்து துயருறும் தலைவிக்கு மேலும் துன்பத்தினை மிகுவிப்பனவாகும். 'தோன்றின கார் தோன்றில தேர்' என்ற தொடரே தலைவியின் துயர மிகுதியைப் புலப்படுத்துவதாகும்.

நான்காவது பாடல் தலைவி கூற்றாக வருகின்றது.

கார்வானம் உறைகழித்த ஒள்வாள் போல மின்னுகின்றது; இடியென்னும் அதிர்குரல் முரசென ஆர்க்கின்றது;

கார் தன் வில்லை வளைத்து மழைத்துளிகளாகிய சரங்களை எய்கின்றது. அதனால் களா, வெண்காந்தள், செங்காந்தள், காயா ஆகிய மரங்கள் மலர்ந்து இந்திர கோபத்துடன் கொடுந்துயர் விளைப்பனவாயின. ஆயின் தலைவரோ பகைவர்தம் பெரிய மதில்களைப் போக்கற வளைத்து இரவும் பகலும் காவலை மேற்கொண்டு வேந்தனது பாசறையில் வீற்றிருக்கின்றார்.

இவ்வாறு தலைவி கார்ப்பருவங் கண்டிரங்குகின்றாள்.

இப்பாடல்வழி முல்லை நிலத்தில் கார் காலத்தில் மலரும் பூக்கள் காதலர்ப் பிரிந்தார்க்குக் கலக்கத்தை மிகுவிக்கும் பெற்றியன என்பதனை அறியலாம்.

ஐந்தாம் பாடலும் மேற் கூறிய கருத்தினையே வெளிப் படுத்தி நிற்கின்றது.

தோன்றி மரத்தில் தீப்போலும் மலர் தோன்றவும், மயில்கள் ஆரவாரித்து ஆடும்படியும் கார்காலம் வந்தது. ஆதலின் தலைவிக்கு ஆராத்துயர் பெருகிற்று.

அடுத்த பாடல் தலைவன் தான் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தே திரும்பிவரவும் அதனைக் கண்ட தோழியின் கூற்றாக அமைந்துள்ளது.

முழக்கத்துடனும் மின்னலுடனும் கார்மேகம் கவிந்தது. அக்கார்கால வரவோடு காதலர் தேரும் தெருவெலாம் ஓசை யெழுப்பி வந்தது. தலைவி கையினின்றும் கழன்று வீழ்ந்த சிறுவளைகள் முன்கையிற் செறியலாயின.

தலைவன் பொருள்வயிற் பிரிந்தபோது தலைவி உற்ற ஆற்றாத் துயர நிலையினை ஏழாவது பாடல் எடுத்து மொழிகிறது.

தலைவன் வருத்துந் தெய்வங்களையுடைய மலை வழியிற் செல்லுதல் அருமையைப் பொருட்படுத்தாமல், வழியிடத்தே மலர்ந்து மணம் பரப்பும் மலர்களைச் சூடி,

இரவில் தன் கையிலுள்ள ஒளியுமிழும் வேலே முன்னடி காட்டும் விளக்காகக் கொண்டு காட்டாற்றின் கடுவிசை வெள்ளத்தையும் நீந்திக் கடந்து வேறு துணையின்றிச் செல்கிறான். அதுபோது அவன் தோற்றப் பொலிவில் மயங்கிய வானரமகளிர் அவனைத் தேவகுமரன் என்று எண்ணிக் கொண்டு 'அவனது வலிய பரந்த மார்பில் அணைதற்கு மிகு காதலுடையவர் ஆவர் போலும்' என ஐயுற்றுப் புலந்த உள்ளமொடு தலைவி துயிலாக் கண்ணளாக உள்ளாள். தன் கண்ணெதிரே மான்கள் தம் துணையுடன் திரியும் காதற் காட்சியினைக் கண்டு செயலற்றாள். தன் கைவிரல் களை நெரித்து விம்மிப் பெருமூச்செறிந்து திருமகள் அழுவது போல எல்லையற்ற பெருந்துயர் உற்றனள்.

அடுத்த பாடல், தலைவன் வேழம் வினாதல் துறை யமைந்த பாடலாகும். பாங்கியற் கூட்டம் விரும்பிச் சென்ற தலைவன், தலைவியுடன் அவள் இருந்த தினைப் புனத்திடைச் சென்று, அவர்கள் குறிப்பறிதற் பொருட்டு, தான் வேட்டையாடித் துரத்திவந்த களிறொன்று இப் பக்கமாகப் புகுந்ததோ என்று அவர்களை உசாவுதல் ஆகும்.

திருவாரூர் ஈசனால் முன்னாளில் தோலுரிக்கப்பட்ட வெஞ்சின யானை போன்றதொரு களிறு புனத்தின் பக்க மாகப் போனதுண்டோ என்று கேட்டான் தலைவன்.

கட்டளைக் கலித்துறையி லமைந்த அடுத்த பாடல் (9) தலைவன் இரவுக் குறி வருதலைப் பாங்கி ஏதங்கூறி விலக்குதல் என்னும் துறையின்பாற்படும்.

'களிறுகள் இயங்குதலால் மக்கள் எவரும் நடமாடாமல் ஆள் வழக்கே அற்றுக்கிடக்கும் மலைவழியில் வேலே துணையாகக் கொண்டு செறிந்து கிடக்கும் நள்ளிருளில் அறிவின்றி நீ வருவாயோ?' என்று பாங்கி, இரவுக்குறி வந்த தலைவனைப் பார்த்துப் பேசுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

அடுத்த பாடல் (10) தலைவன் தலைவியர்க்குள் கூட்ட மூண்மையைத் தோழி முன்னுறவுணரும் திறம் தெரிந்து கூறியதாகும்.

'ஈசனது மராமரச் சோலை செறிந்த சிராமலைச் சாரலில் என் தோழி (தலைவி) சூட வேண்டி நறுமணஞ் சான்ற புதுமலர் கொய்து வருவதற்கு நான் அவளைப் பிரிய நேர்ந்தது சற்று நேரத்திற்கு முன்புதான் ஆயினும் இச் சிறு காலத்துள்ளே இவளது கூந்தலணி சிதைந்தது; மாலை பரிந்தது; நெற்றியில் இடப்பட்ட திலகமும் அழிவுற்றது; கண்களோவெனில் தீட்டிய மைநிறம் மாறிச் செந்நிறம் பெற்று, உள்ளறிந்த கொடுவினையை உரைப்பன போன்றன. செவ்வாயும் சேறுபட்டது. திருமுகம் வியர்வை உட்கொண்டும், கொங்கைகள் பூசிய சந்தனம் அழிந்தும், அணிந்த மேகலையும் துகிலும் நிலை கலங்கியும் போனமையால், இதற்குரிய காரணம் யாது என்று ஆராய்ந்தும் அதன் காரணம் என்னால் அறியப்பட முடியவில்லை' என்று தோழி முன்னுறவுணர்ந்து கூறினாள்.

இங்குத் தலைவிபால் தோழி கண்ட மாற்றங்கள் தலைவிக்குத் தலைவன் கூட்டமுண்மையை உணர்த்தியன வாகும்.

பதினோராவது பாடல் புனத்திடைத் தம்மை நோக்கி வரும் தலைவன் வருகையைத் தோழி தலைவிக்கு உரைத்த தாகும்.

'கொடி போன்ற இடையினை உடையவளே! முக்கண் பெருமானாகிய சிவபெருமானின் சேயான முருகனைப் போல ஒருவன் இங்கு வந்து, பொழுது போய் இருள் வந்துற்றாலும் இப் பூம்புனத்தைக் காப்பான் போலத் தங்கி, தன் மனத்தினுள்ளே அழுத்திக் கொண்டிருக்கும் எண்ணத்தை வெளியிடக் கூசியவனாய் உள்ளான்' என்று தோழி தலைவனின் உட்கிடக்கையினை உணர்ந்து தலைவிக்கு எடுத்துரைத்தாள்.

அடுத்த பாடல் (12), தலைவன் கையுறையாக அளித்த தழையைத் தான் ஏற்றதனைத் தலைவிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது.

காவற் புனத்தினின்று போகாமல் என் எதிரில் வந்த தலைவரைச் சந்தித்த எனக்கு, ஒளி சிறந்த பூந்தாரையும் தழையுடையையும் தலைவர் விரும்பியளித்தார். அவற்றி லொன்றையும் மறுக்க முடியாமல் யான் ஏற்றுக் கொண்டேன் என்று தோழி கூறினாள். மறுப்பின்றித் தோழி தலைவன் கையுறையை ஏற்றுக் கொண்ட காரணம் தினைப்புனத்திடைக் காவலில் நின்ற தம்மைத் தாக்க வந்த களிற்றைக் கடிந்து காத்ததும், தம்மாட்டு நீங்காத அன்பு காட்டுவதுமாகும்.

பதின்மூன்றாவது பாடல், தலைவியின் உடன் போக்கிற்குச் செவிலித்தாய் வருந்திக் கூறும் கூற்றாக வந்துள்ளது.

'திருவாரூர் பிறந்த என் பூங்கொடி மடந்தை, தன் மனையின்கண் நிறைந்துள்ள மட்டற்ற செல்வத்தில் மகிழ்ச்சி கொள்ளாளாய், அயலானொருவன் தன் காதலனாக, அவன் பின்னே, தன்னடியின் கீழேயே தன் நிழல் மறையக் கூடிய நண்பகலில் மிக்க அனல் வீசும் பாலைவனத்திடையே, கொடுந்தொழில் புரியும் தறு கண்மை வாய்ந்த வேடுவர் கொட்டுந் துடியோசைக்கு அஞ்சி, மெய் நடுக்குற்று, ஈந்தும் இலவமும் விளாவும் நெருங்கி வளர்ந்துள்ள வெளியிடையில் அமைந்ததும், வேட்டை நாய்களைப் பிணித்த கயிற்றால் அரிக்கப்பட்ட கம்பத்தின் மேலிடமாக மரைமான்களின் உரிதோலைக் கூரையாக வேய்ந்து அதன் மயிர்களால் மூடப்பெற்றது மான சிறுகுடிசையிலே, விரித்த நரைக் கூந்தலினையும் வெளுத்த வாயினையும் உடைய மறவர் குடி மங்கையர்க்கு விருந்தாயினள் போலும்' என்று செவிலித்தாய் சிந்தை உருகிச் செயலற்றுக் கூறினள்.

பின் வரும் அகப்பாடற் பகுதி இக் கருத்தினை உள்ளடக்கியுள்ளது:

"................. அத்தம்
கூர்வேல் விடலை பொய்ப்பப் போகிச்
சேக்குவள் கொல்லோ தானே தேக்கின்
அகலிலை கவித்த புதல்போற் குரம்பை
ஊன்புழுக் கயரு முன்பிற்
கான்கெழு வாழ்வர் சிறுகுடி யானே."[21]

அடுத்த பாடல் (14) செவிலிக்குத் தோழி கூறியதாக அமைந்துள்ளது.

'தன் காதலனான தலைவன் பின்னே உடன்போக்கு வலித்த நெஞ்சோடு உடன் சென்ற தலைவி காலாலே நடந்து சென்று, பகைவர் திரிபுரங்களை உடன்றெரித்த மேருமலையை வில்லாகவும் வாசுகியை நாணாகவும் கொண்ட சிவனுக்குரிய திருவாரூர் சூழ்ந்த பகுதியினை இனிது அடைந்தவளாகுக' என்று தோழி குறிப்பிட்டாள்.

அடுத்த பாடல் (15) உடன்போக்கு நேர்ந்தவிடத்துச் செவிலித்தாய் இரங்கிக் கூறியதாக அமைந்துள்ளது.

'சிவபிரானது சடையின் குளிர்ந்த மதி போன்ற முகத்தினளாம் என் மகள், ஒரு படுக்கையில் என் வலப்பக்கமாக அணைந்து கொண்டு துயிலுங்கால் அவ்வணைப்புப் பிரிந்து இடப்பக்கமாக நான் திரும்பினும் அஞ்சக் கூடியவளாவள். அத்தகு மெல்லியள் இப்போது தலைவன் துணையாகப் பெரும் கடத்தினைக் கடந்து சென்றனளே! அவண் நேரக்கூடிய துன்பங்கள் அவளால் பொறுத்தற் கரியவன வல்லவே!' என்று செவிலி சோர்ந்து கூறினாள்.

ஒருவாத புகழுடைய திருவாதவூரராம் மணிவாசகப் பெருந்தகையும்,

---

21. அகநானூறு; 315.

" தழுவின கையிறை சோரிற் றமியமென் றேதளர்வுற்று
அழுவினை செய்யும் ............... பேதை" [22]

என்று திருக்கோவையாரிற் குறிப்பிடும் கருத்து இதனோடு ஒப்பு நோக்கற்குரியது.

பதினாறாவது பாடல் மகட்போக்கிய செவிலித்தாய், ஆற்றாமை மீதூரக் குரவொடும் பிறவொடும் கூறிவருந்திய வரம்பிலாத் துன்பத்தினைப் புலப்படுத்தி நிற்கிறது.

'என் செல்ல மகள் கடுவெயில் எரிக்கும் காட்டகத்தே தன் காதலனுடன் போதலால், அவளது கண்ணழகிற்கு ஆற்றாது தோற்றமை பற்றி உண்டான நெஞ்செரிவோடு அங்கு வசிக்கும் மானினம் அவள் செலவினைத் தடுக்காமற் செல்ல விடுவனவாகுக. அவள் கொங்கை யெழிலுக்குத் தோற்றுக் குன்றை யடைந்த கோங்கமும், அவள் உடன்போக்கிற்கு ஒருப்பட்டு நடக்கும் செலவிற்கு உடன்படுக. அவள் வளவிய தோளுக்கு உடைந்து வெயிலிடை நிற்கும் வேய்களும் அவ்வெயில் முனிதல் காரணமாகக் கூற்றின் வாய்ப்பட்டு ஒழிக. எம் சிவன் முடிக்கண்ணியாக அணிந்த குரவமே! அரிய பெரிய கடத்திடை நின்று நாள் தோறும் ஆயிரம் பாவைகளை வளர்ப்போய்! உனக்கு மிகவும் அணியளாக வரும் என் பாவையைத் தடை செய்யாமல், அக்குற்றத்தினின்று நீங்கினையாவாய்!'

இவ்வாறு செவிலி சிந்தை நொந்து பாலை மரங்களுள் ஒன்றான—பாவை போன்று பூப்பூக்கும் குராமரத்தினை நோக்கிக் கவன்று கூறினாள். இக் குராமலர் சிவபிரான் உகந்த மலரென்பது,

" குரவ நாண்மலர் கொண்டடியார் வழிபாடு செய்
விரவி நீறணிவார்" [23]

என்னும் தேவாரத்தால் விளக்கமுறும்.

---

22. திருச்சிற்றம்பலக் கோவையார்; நற்றாய்க் குரைத்தல் : 229.
23. திருஞானசம்பந்தர் தேவாரம்; இரண்டாம் திருமுறை: திருவையாறு: 8.

அடுத்த பாடலும் (17) செவிலி கூற்றாய் வந்துள்ளது.

'குரவமலர் மணக்குங் கூந்தலை யுடைய என் மகள் மாலையணிந்த வேலோன் பின் சென்ற கடுமை நிறைந்த கானம், சிவன் காமவேளைக் கடைக்கண்ணால் எரித்த நெருப்பினும் நனி கொடுமை வாய்ந்தது' என்று செவிலி கூறினாள்.

அடுத்த பாடலும் (18) அதே கருத்திலேயே அமைந்துள்ளது.

'கொன்றை, திங்கள், அரவு முதலிய மூன்றனையும் முடிமலராகவும் பெருத்த செவ்வானம் போலும் விரிந்த திருமேனியையும் கொண்ட முக்கண்ணனாம் சிவனை வணங்கித் துதியாதார் வறுமையால் வெயிலில் வருந்தி யலைவது போல, என் அருமை சான்ற மகளும் பாலை நிலத்தை நடந்து கடந்து சென்றனள்' என்று செவிலி இரங்கிக் கூறினாள்.

அகவலில் அமைந்துள்ள அடுத்த பாடல் (19) வாயில் வேண்டி வந்த பாணனொடு தோழி வெகுண்டு கூறியதாக அமைந்துள்ளது.

'தலைவனுடைய பார்வை விலங்கு போலவும், இளைய மகளிரை அகப்படுத்தும் வலைபோலத் தோன்றியும், உள்ளத்து நிகழ்வதை வெளிப்படுத்தாது கள்ளத்துடன் மறைத்துப் பொய் கலந்த சொற்களால் எம்மைப் பலவாறு மிகைப்படப் பாராட்டியும், கள்ள நோக்குடன் எம்மைக் கைதொழுது பணிந்தும், எம் மனைக்கண் வந்துள்ள பாணனே! நீ பாராட்டெடுத்த தலைவனோவெனில் இம் மருங்கு வாராமல் இனியமொழி கூறும் பரத்தையர் வலைப்பட்டு அவர் வசமாகிக் கண்ணாடி யனைய தன்மையினனாய் உள்ளான்' என்று தோழி பாணனை வெகுண்டுரைத்தாள்.

கண்ணாடித் தன்மையினன் என்று தலைவனைத் தோழி கடிந்துரைத்த குறிப்பானது பின்வரும் குறுந் தொகைப் பாடலொன்றன் கருத்தினைத் தழுவியதாகும்:

"கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யும்........."[24]

அடுத்த பாடலும் (20) இதே கருத்தினையே கொண்டுள்ளது.

'பாணனே! பூந்தண் புனலூரன் பொய்ம்மொழி களைப் பால் போலும் இனிய சொற்களைப் பேசும் பரத்தையரிடமே சென்று சொல்லுக; ஏற்றுக்கொள்ள எவ்வாற்றானும் இயலாத அப்பொய்ம்மொழிகளை எதன் பொருட்டு எம்மிடம் கட்டியுரைக்கிறாய்?' என்று தோழி பாணனைப் பார்த்துச் சீற்றத்துடன் மொழிந்தாள்.

அடுத்து, கட்டளைக் கலித்துறையில் அமைந்துள்ள பாடல் (21) தலைவியின் கூற்றாக வருவதாகும். இப் பாடல் 'அணைந்தவழி யூடல்' என்னும் துறையைச் சார்ந்தது. அதாவது தோழியால் ஊடல் தணிவிக்கப் பெற்றுப் பள்ளியிடத்தாளாகிய தலைவி, ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைவனோடு புலந்து கூறியதாம்.

'ஐயா, யான் இரங்கும் வண்ணம் நீவிர் என் காலடி களைத் தொட்டுப் பணிய வேண்டா; என்மேனியை அணைக்க வேண்டா; என் ஆடையை இழுத்து அலைக்க வேண்டா; இத்தகு சாகசங்களை நீங்கள் நன்கு கற்று இவ்விடம் வந்துள்ளீர் போலும்! உம்முடைய செய்கைகள் மிகவும் நன்றாக விருக்கின்றன. விழிக்கண் மைபூசி மையல் எழுப்பும் நம் சேரிப் பெண்டிராம் பரத்தையர் இவற்றைக் கேட்பராயின், உமக்குப் பொல்லாங்கு வந்து சேரும்!'

---

24. குறுந்தொகை; 8.

தலைவியின் அடிதொட்டு வணங்கல் என்பது ஊடற்காலத்துத் தலைவியின் வெகுளி தணித்தற்பொருட்டு தலைவன் ஆற்றும் செயலாம்.

**"மனைவி யுயர்வும் கிழவோன் பணிவும்**
**நினையுங் காலைப் புலவியுள் உரிய."[25]**

பரத்தைமாட்டுப் பிரிந்து மீட்டும் தன்னிடம் வரும் தலைவனிடத்துத் தலைவி,

**"நின் சேயிழையார் நலஞ்செய்த**
**புல்லங்கள் மாட்டேம் தொடல்விழு நற்கலையே"[26]**

என்றும்,

**"கால்தான் தொடல் தொடரேல் விடு**
**தீண்டல் எங் கைத்தலமே"[27]**

என்றும் கூறுவதாகத் திருக்கோவையார் மொழியும்.

இருபத்திரண்டாம் பாடல் தலைவி கூற்றாக அமைந்துள்ளது. அகவலில் அமைந்துள்ள இப் பாடல் பரத்தையிற் பிரிந்த தலைவனை நினைந்து தலைவி வருந்துவதாக அமைந்துள்ளது. தன் நெஞ்சொடு தலைவி பேசுவதாக அமைந்துள்ள இப் பாடலின் கருத்து வருமாறு:

'நெஞ்சே! கிண்கிணி ஒலிக்கவும், சிறுபறையைக் கையிற் பற்றியும், சிறுதேர் உருட்டியும், புழுதியளைந்தும், இளஞ் சிறாரொடு தளர்நடை பயிற்றியும், அக்குமணிகளை அரையிற் கட்டியும், ஐம்படைத்தாலி அணிந்தும் என் பக்கத்தில் இருக்கும் என் இளஞ்செல்வனை நினைத்தவளவிற்

---

25. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; பொருளியல் : 33.
26. திருச்சிற்றம்பலக் கோவையார் ; பள்ளியிடத்து ஊடல் : 358.
27 திருச்சிற்றம்பலக் கோவையார்; அணைந்த வழி ஊடல் : 390.

சுரக்கும் தீம்பாலையுடைய என் மார்பகங்களைத் தழுவும் விருப்பமின்றிப் பிரிந்த தலைவரின் பூண் அணிந்த மார்பினைப் புல்லுவன் என்று என்னைவிட்டு நீ அவரிடம் சென்றமையால், பெரிதும் மடமைக் குணம் உடையை ஆயினை' என்று தலைவி நெஞ்சொடு புலந்து வருந்தினாள்.

இப்பாட்டில் குழந்தையின் இனிய தோற்றமும் செயலும் நெஞ்சையள்ளும் வகையில் வருணிக்கப்பட்டுள்ளன. பின்வரும் பாடற்பகுதி அழகான குழந்தைச் சித்திரம் எனலாம்:

"அழகுடைக் கிண்கிணி யடிமிசை யரற்றத்
தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேரீர்த்
தொருகளி றுருட்டி யொண்பொடி யாடிப்
பொரு களி றனைய பொக்கமொடு பிற்றாழ்ந்து
பூங்குழற் சிறாரொடு தூங்குநடை பயிற்றி
அக்கரை யுடுத்தி யைம்படை கட்டி
ஒக்கலை யிருக்கு மொளிர்புன் குஞ்சிக்
குதலையங் கிளவிப் புதல்வன்"[28]

அடுத்த பாடல் (23), பிரிவிடையாற்றாத தலைவி தன் நெஞ்சினை நோக்கிக் கூறியதாக அமைந்துள்ளது.

'நெஞ்சமே! தீயரங்கத்தில் ஆடும் ஈசனது திருத்தோள்களிடம் அன்பு அமைத்த திருத்தொண்டினைச் செவ்வின் ஆற்றும் தலைவனிடத்துச் செல்வாயாக. தலைவனைப் பிரிந்து நீ இங்கிருந்து என்ன பயன்?'

அடுத்த பாடல் (24) தோழி கூற்றாக அமைந்துள்ளது. பரத்தையிற் பிரிந்து தலைவியிடத்து வந்த தலைவனைப் பார்த்துத் தோழி கூறுவதாக அமைந்துள்ளது.

'வீரஞ்சான்ற வேலினையுடையோய்! சின்மொழியையும் பவளவாயினையுமுடைய எங்கையர்க்கே (பரத்தையர்க்கே) நீவிர் அருள்புரிவீராக. நீர் நிறைந்த குளத்தில்

---

28. திருவாரூர் மும்மணிக் கோவை : 22.

பல்லாயிரமாகவுள்ள ஆம்பல் மலர்களிடையே தான் ஒன்றாகத் தாமரை தோன்றுமாயினும், அக்குளம் தாமரைக்குளம் என்றன்றோ வழங்கப்பெறும்' என்று திறலாகக் (சமத்காரமாக) கூறினாள் தோழி.

நீர் நிறைந்த குளம் இங்கு ஊராகவும், ஆம்பல்கள் பரத்தையராகவும், தாமரை தலைவியுமாகக் கொள்ளப் பட்டன.

இதனால், தலைவியுடன் கூடி வாழும் இனிய இல் வாழ்க்கையினையே ஊரார் சிறப்பித்துப் பேசுவரேயன்றி, பரத்தையிற் பிரிந்து வாழும் பயனற்ற வாழ்க்கையை ஒரு போதும் மதியார் என்ற அரிய கருத்து பெறப்பட்டது.

"துறைமலி யாம்பல் பல் லாயிரத்
துத்தமி யேயெழினும்
நறைமலி தாமரை தன்னதன்
றோசொல்லு நற்கயமே"[29]

என்ற பகுதியில் சீரிய நற்கருத்துத் துலங்கக் காணலாம்.

தலைவன் சிறைப்புறத்தானாக நிற்க, தோழி அலர் நீங்க விரைவில் தலைவியை வரைந்து கொள்ளவேண்டும் எனக்கூறுவதாக இருபத்தைந்தாம் பாடல் அமைந்துள்ளது.

'தண்ணந்துறைவனான தலைவனது தடவரை போலும் பரந்த மார்பினைக் கண்டது முதலாக, திருவாரூரில் விழா நடக்கும் காலத்து எழுந்த ஆரவாரம் போன்ற பேரலர் இச்சிற்றூரில் எழுவதாயிற்று' என்று தோழி கூறினாள்.

இருபத்தாறாம் பாடல் அல்லகுறியறிவிக்கும் கருத் தமைந்த பாடலாகத் தோழி கூற்றாக வந்துள்ளது.

அல்ல குறியறிவித்தல் என்னும் துறை, தலைவன் சிறைப்புறமாக வந்து நிற்ப அவன் கேட்கும் வண்ணம், முதல் நாளிரவில் குறியல்லாத குறிக்கட்சென்று தலைவ

29. திருவாரூர் மும்மணிக்கோவை; 24 : 3-4.

னைக் காணாது தாம்வறிதே மீள நேர்ந்ததனைத் தோழி புட்களின் மேல் வைத்துக் கூறுதலாம்.

'ஊரெல்லாம் துயின்றும், உலகு ஒலியடங்கியும், மக்கள் தொழில் மடங்கியும் உள்ள செறிந்திருள் பரவிய நள்ளிரவில், திருமறைக்காட்டு நீர்த் துறையிடமாக அன்னம் முதலாய பறவைகள் இரைமேய்ந்து உறங்கா வாயின':

இதன் கருத்து, வேற்றுப் புட்களின் வரவு, மக்கள் வரவோசை, பழங்கள் முதிர்ந்து நீர்நிலைகளில் விழுந்து ஒலியெழுப்புதல் முதலிய நிகழ்ச்சிகள் காரணமாகப் புட்கள் ஆரவாரித்தமையால் அத் தடை காரணமாகத் தலைவி இரவுக்குறிக்கண் வந்து சேரும் வாய்ப்புப் பெற்றிலள் என்பதாகும்.

**"பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம்**
**புற்று முற்றும்**
**அன்னம் புலரு மளவுந் துயிலா தழுங்கினவே"[30]**

என வரூஉம் திருக்கோவையார்ப் பாடற்பகுதியும் இக் கருத்தினையே புகல்வதாகும்.

இருபத்தேழாவது பாடல் தலைவனது தேர்வரவினைத் தலைவிக்கு உணர்த்தும் தோழியின் கூற்றாக அமைந்துள்ளது.

'இராக்காலம் இறுமாந்து செருக்குற்றது போல மிகுந்து, புட்களும் பேய்களும் துயில் மடிந்து நின்ற இப் பனிநாளில் நள்ளிருளிடையே, சிவபெருமானைச் சிந்தையாரத் தொழும் அடியார் மனம் போல நம் உள்ளம் உருகும்படி ஒப்பற்ற நம் தலைவர் பூண்ட தேர் இங்கு வந்து உலவுகின்றது.'

இப்பாடலால் ஈசனைத் தொழும் அடியார் மனத்தின் உள்ளமுருகும் தன்மையும், தலைவன் தேர்வரவினை

30. திருச்சிற்றம்பலக் கோவையார்; அல்ல குறியறிவித்தல் : 172.

ஆவலோடும் நம்பிக்கையோடும் எதிர்நோக்கி நின்ற தலைவி, தோழி இவர்தம் ஆர்வமும் புலனாகக் காணலாம்.

இருபத்தெட்டாவது பாடல் அகவலில் அமைந்துள்ளது; தலைவியின் கூற்றாக வருகின்றது. தன் ஆயத்திடையே விருந்தினனாகப் புக்க தலைவனால் தான் அடைந்த வேறுபாட்டைத் தோழியிடம் தலைவி கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

'சிவபெருமானது திருவாரூரில் ஒரு நாள் நண்பகலில் என் ஆயத்துடன் கூடி, வலம்புரிச் சங்கை அடுப்பாகக் கொண்டு, முத்துக்களாகிய அரிசியைச் சலஞ்சலம் என்ற கலம் நிறையப் பெய்து ஏற்றி, பவளமாகிய செந்தீயை மூட்டி, அழகிய இப்பியாகிய துடுப்பால் ஒப்பத்துழாவிச் சமைத்த அடா அமுதை — அதாவது மணற்சோற்றை, என் சிறு தோழியர் கூட்டத்துடன் வாய் மடுத்து யான் உண்ணும்போது அங்கு ஒருவன் ஓடி வந்து, என் முலை முகம் நோக்கி முறுவலித்து, 'தேமொழி நங்காய்! விருந்தினனாகப் புகுந்த எளியேனுக்கும் அமுதம் அளிப்பாயோ' என்று கூறி என்னை இறைஞ்சி நின்றான். அதனால், பொங்கும் நீரில் எண்ணெய்த் துளிகள் பட்டது போல என் அங்கமெல்லாம் அவ்விருந்தினனே ஆயினன்' என்று தலைவி பண்டு நிகழ்ந்த நிகழ்ச்சியினைச் சொற்று இன்புற்றாள்.

நீரிற்பட்ட எண்ணெய்த் துளிகள் அந்நீர் முழுதும் பரவி வேறுபடுத்தல் போலத் தலைவன் தன்னைக் கண்ட காட்சி, தன்னை முற்றும் வேறுபடுத்தியது என்று தலைவி காட்டும் உவமை, நயம் செறிந்ததாகும்:

**நறைகம ழெண்ணெய்ச் சிறுநுண்டுள்ளி**
**பொங்குபுன லுற்றது போலவென்**
**அங்க மெல்லாந் தானா யினனே.**[31]

31. திருவாரூர் மும்மணிக் கோவை: 28.

மேலும் இப்பாடல்,

**புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்**
**பகாஅ விருந்தின் பகுதிக்கண்[32]**

என்றபடி தலைவி தோழிக்குக் கூறியதன்பாற்படும்.

தன்னை இடித்துக் கழறிய பாங்கனுக்குத் தலைவன் மறுமொழி கூறுவதாக இருபத்தொன்பதாவது பாடல் அமைந்துள்ளது.

'திருவாரூர் மடப்பாவையாம் என் தலைவியின் கொங்கைத் தடத்தில் விருப்புற்றுப் பெருகிய என் அன்பினை இனியாரே நீக்க வல்லவர்?' என்று தலைவன் தன் காதன் மிகுதியினைத் தன் பாங்கனுக்கு உணர்த்திய வாறாம்.

இறுதிப் பாடலாகிய முப்பதாவது பாடல் கட்டளைக் கலித்துறையில் அமைந்துள்ளது; தலைவியின் கூற்றாக வந்துள்ளது. தலைவனின் பிரிவாற்றாது கையாறு எய்திட்ட தலைவி கடலொடு வருந்திக் கூறுவதாக இறுதிப்பாடல் அமைந்துள்ளது.

'திருவாரூர்ப் பெருமானது திருவடிகளைப் பணியாது பிறவிக்கடலில் ஆழ்ந்து கிடந்து நைந்துருகும் மக்களைப் போல வருந்தும் என்பால் இரக்கமுற்று, சூழ்ந்துள்ள தன் கரைமேல் அலையாகிய தன் கைகளால் அடித்துக் கொண்டும், வீழ்ந்தும், கிடந்தும், அலறியும் இக்கடல் எப்பொழுதும் என்போல் துயிலாதாயிற்று' என்று தலைவி தன் தண்டாத துன்பத்தினைப் புலப்படுத்தினாள்.

கடலிற்கு என்பால் அமைந்துள்ள இரக்கம் தலைவர்க்கு என்பால் அமைந்தில்லையே என்ற கூற்றில் தலைவியின் ஆற்றாமை நன்கு புலப்படும்.

---

32. தொல்காப்பியம்; பொருளதிகாரம்; களவியல் : 16.

## உவமைகள்

திருவாரூர் மும்மணிக் கோவையில் வந்துள்ள உவமைகளைக் காண்போம்:

(1) ............................ கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ண லாரூர்
எல்லையி லிரும்பலி சொரியும்
கல்லோ சென்ற காதலர் மனமே. (1)

இப்பாடலில் கங்கை வெள்ளத்தைக் கட்டுப்படுத்திய நீண்ட சடையை உடைய வரும் உமா தேவியை இடப்பாகமாகக் கொண்டிலங்கும் கடவுளருமாகிய ஈசன் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திருவாரூரின் எல்லையில் அமைந்துள்ள பலிபீடக் கல் போன்று பிரிந்து சென்ற காதலர் மனம் வன்மையாய் உளது என்று தோழி குறிப்பிட்டாள். தலைவன் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்தும் அவன் தலைவியை நினைந்து திரும்பி வாராததால் தோழி தலைவனின் மனத்திற்குத் திருவாரூரின் எல்லையின்கண் அமைந்துள்ள பலிபீடக்கல்லை உவமை கூறினாள்.

(2) கண்ணார் நுதலெந்தை காமரு கண்ட
மென விருண்ட
விண்ணா லுருமொடு மேலது கீழது
கொண்டல். (3)

இப்பாட்டில், இடியுடன் கூடிக் கருத்தெழுந்து முழங்கும் மேகத்தின் கருமை, ஈசனின் கருத்த கழுத்தின் இருளுக்கு உவமை கூறப்பட்டுள்ளது.

(3) " யானே இன்னே
அலகி லாற்ற லருச்சுனற் கஞ்ஞான்
றுலவா நல்வர மருளிய வுத்தமன்
அந்த ணாரூர் சிந்தித்து மகிழா
மயரிய மாக்களைப் போலத்
துயிருழந் தழியக் கண்டுயி லாவே." (4)

இதன் பொருள், 'யானோ அளவற்ற ஆற்றலுடைய அருச்சுனனுக்கு அந்நாளில் சிறந்த நல்வரமாகிய பாசு பதத்தினை யளித்த திருவரூர் சிவபிரானைச் சிந்தித்து மகிழாது அறிவு கலங்கிய மாக்களைப் போலத் துயர் மேம்பட்டு உழந்தழிதலால், கண்கள் துயில் பெறாவாயின' என்பதாம்.

இவ் வுவமை சிவன் சேவடி தைவரு நெஞ்சச் சிறப்பினை யுணர்த்தி நிற்றல் காண்க.

(4) '' .. .........அந்திங்கட் கண்ணியான்
கண்டத்துக் கொப்பாய கார்'' (5)

முன்பே வந்துள்ள உவமையே இது. இறைவன் கழுத்தின் கறுப்பு கார்மேகக் கறுப்புடன் ஒப்பிடப் பட்டுள்ளது.

(5) '' ......................... துன்னருநஞ்
சாரு மிடற்றண்ண லாரூ ரனைய வணங்
கினுக்கே. (6)

திருவாரூர் போன்று அழகுடைய தலைவி என்று இப் பாட்டில் தலைவி குறிக்கப்பெற்றுள்ளாள்.

தலைவியின் அழகுக்கு இவ்வாறு அக்காலத்துப் புகழ் பூத்து நின்ற நகரங்களை உவமை கூறுவது வழக்கு என்பதனைச் சங்க இலக்கியங் கொண்டு தெளியலாம்.

(6) '' அல்லியங் கோதை யழலுற் றாஅங்
கெல்லையி லிருந்துய ரெய்தினள்.'' (7)

திருமகள் அழுவது போல எல்லையற்ற பெருந் துயரினைத் தலைவி எய்தினள்.

(7) '' கொடியேர் நுடங்கிடையாள்'' (14)

கொடிபோன்ற நுண்ணிய இடை என்று தலைவியின் இடை வருணிக்கப்பட்டுள்ளது.

(8) " குரவங் கமழ்கோதை கோதைவே லோன்பின்
விரவுங் கடுங்கானம் வெவ்வா—யரனுஞ்
சடைக்கணிந்த சங்கரன் றார்மதனன் றன்னைக்
கடைக்கணித்த தீயிற் கடிது." (17)

'குரவமலர் மணக்குங் கூந்தலையுடைய என் மகள் மாலை சூடிய வேலோன் பின் சென்ற கடுமை நிறைந்த காடு, சிவன் காமவேளைக் கடைக்கண்ணால் எரித்த தீயினும் கொடுமை வாய்ந்தது' என்று செவிலி தலைவி உடன்போக்கு ஒருப்பட்டுத் தலைவன் பின் சென்ற கானத்தின் கடுமையைக் குறிப்பிட்டாள்.

(9) " ..................................முக்கணக்
கன்மிக்க செக்கரொக்கும்
படிமலர் மேனிப் பரம
னடிபர வாதவர் போல்
அடிமலர் நோவ நடந்தோ
கடந்ததெம் மம்மனையே " (18)

பெரிதாகிய செவ்வானம் போன்று விரிந்த திரு மேனியை யுடையவனாகிய ஈசனை வணங்கித் துதியாதார் 'வறுமை வாய்ப்பட்டு வெயிலில் வருந்தியலைந்து திரிவது போல, என் அருமை மகளும் கொடிய பாலைநிலத்தைக் கடந்து சென்றனள்' என்று செவிலி இடைச்சுரத்தில் தலைவி பட்ட துன்பத்தை நினைத்து நவின்றாள்.

இவ்வுவமையால் இறைவழிபாட்டின் சிறப்பு வற்புறுத் தப்படுகின்றது.

(10) " பொய்யார் தொழினு மருளு
மிறைகண்டம் போலிருண்ட
மையார் தடங்கண் மடந்தையர்" (21)

'பொய்ம்மை நெஞ்சத்தவர் தொழுதாலும் அருளும் சிவபெருமானுடைய கறுத்த கழுத்துப் போலும் இருண்ட

மைதீட்டிய விசாலமான கண்களையுடைய பெண்கள்' என்று இவ்வுவமை குறிப்பிடுகின்றது.

எவர் தொழுதாலும் இறைவன் எளியனாய் வந்து அருள் புரிவான் என்பதனை இப்பகுதி விளங்க உரைக்கின்றது.

(11) '' அண்ண லாரூர் திண்ணிதிற் செய்த
சிறைகெழு செழும்புனல் போல
நிறையொடு நீங்கா நெஞ்சம் நீயே.'' (22)

'மண்ணணைத்த கரைக்குள் அடங்கும் நீர் போல நிறையென்னும் நற் பண்பால் அடைக்கப்பட்ட நெஞ்சம்' என்பது இப்பகுதியால் — இவ்வுவமையால் பெறப்பட்ட கருத்தாகும்.

(12) '' தண்ணந் துறைவன் தடவரை யகலங்
கண்ணுறக் கண்டது முதலா வொண்ணிறக்
காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக்
கோளிழைத் திருக்குங் கொள்கை போல
மணிதிகழ் மிடற்று வானவன் மருவும்
அணிதிக ழகலத் தண்ண லாரூர்
ஆர்கலி விழவி னன்னதோர்
பேரலர் சிறந்தது சிறுநல் லூரே.'' (25)

கரும்பாம்பாகிய கேது பிறையைக் கவ்வியது போலக் கருநிறங் கொண்ட கழுத்தினையுடையவன் திருவாரூர் ஈசன் என்பது முதலாவது வரும் உவமையாகும்.

அடுத்து, தண்ணந் துறைவனான தலைவனது தடவரை போலும் மார்பினைக் கண்டது முதலாக, திருவாரூரில் திருவிழா நடைபெறுங்காலையில் எழுகின்ற பேராரவாரமே போன்ற பேரலர் தலைவியின் சிற்றூரில் எழுவதாயிற்று.

இவ்வுவமையால் 'விழவறா நிலையினையுடையது திருவாரூர்' என்பது பெற்றாம். விழவின் ஆரவாரம் தலைவி குறித்து எழுந்த அலருக்கு உவமமாயிற்று.

(13) ......................கலைக்கைச் சுடர்வண்
ணனைத்தொழு வார்மனம் போன்
றுள்ளு முருக வொருவர்திண்
டேர்வந் துலாத்தருமே.'' (27)

'மானேந்திய கரத்தினையுடைய ஈசனைத் தொழும் அடியார் மனம் போல நம் உள்ளம் உருகும்படி ஒப்பற்ற நம் தலைவரது தேர் இங்கு வந்து உலவா நின்றது' எனத் தலைவியிடம் தோழி கூறினாள்.

இவ்வுவமையால் ஈசனைத் தொழும் அடியார்தம் மனவுருக்கம் காட்டப் பெற்றது. சேரமான் பெருமாள் நாயனார் அவர்களின் நீங்கா இறையன்பும் இதன் வழிப் புலனாகின்றது.

(14) நறைகம ழெண்ணெய்ச் சிறுநுண் டுள்ளி
பொங்குபுன லுற்றது போலவென்
அங்க மெல்லாந் தானா யினனே.'' (28)

'பொங்கும் நீரில் எண்ணெய்த் துளிகள் பட்டது போல என் அங்கமெல்லாம் அவ் விருந்தினனே (தலைவனே) ஆயினன்' என்று தலைவி குறிப்பிட்டாள்.

மணச் சிறு சோறு வட்டித்துத் தன் தோழியர் குழாத்துடன் உண்ணும் அளவையில் தலைவன் சிறு சோறு வண்டி நின்றான். அப்போது தலைவி உற்ற நிலை மலே காட்டியதாகும்.

நீரிற்பட்ட எண்ணெய்த் துளிகள் அந்நீர் முழுதும் பரவி வறுபடுத்தல் போலத் தலைவனது காட்சியின் மாட்சி ன்னை முற்றிலும் வேறுபடுத்தியது என்று தலைவி குறிப்பிட்டாள்.

(15) தாழ்ந்து கிடந்த சடைமுடிச்
சங்கரன் றாள்பணியா
தாழ்ந்து கிடந்துநை வார்கிளை
போலயர் வேற்கிரங்கி (30)

'தாழ்ந்த சடைமுடி கொண்ட சங்கரன் திருவடிகளைப் பணியாது பிறவிக் கடலில் அழுந்திக் கிடந்து இளைத்து நிற்பவர் போல வருந்தும் என்பால் இரக்கங் காட்டி' என்று இவ்வுவமை மேற் செல்கின்றது.

இவ்வுவமையால் ஈசனது திருவடிகளை நினையாதார் நெஞ்சம் பிறவிப் பெருங்கடலை நீந்துவதில்லாமல் துயருறும் என்ற அரிய கருத்துப் பெறப்படுகின்றது.

**தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்**
**மனக்கவலை மாற்ற லரிது**[33]

என்ற குறளும்,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார்**[34]

என்ற குறளும் இவ்வுவமைக் கருத்திற்கு அரண் கோலுவன வாகும்.

இவ்வுவமை சேரமான் பெருமாள் நாயனாரின் கடவுட் பற்றினையும் வாழ்க்கைத் தெளிவினையும் வகையுறக் காட்டி நிற்கின்றது.

## இயற்கை வருணனை

முதற் பாடலில் கார்ப் பருவ வருணனை கவினுற அமைந்துள்ளது.

சூல் கொண்ட கருமேகம் மலை முகட்டில் ஏறி மழை பொழிந்தது; மின்னல் மின்னியது; வானவில் இட்டது;

---

33. திருக்குறள்; கடவுள் வாழ்த்து : 7.
34. ,, 10.

இந்திர கோபம் ஊர்ந்தது; காந்தள் மலர்ந்தது; முல்லைப் பூக்கள் அரும்பின; கொன்றை பூத்தது; மயில் தோகை விரித்து ஆடியது; ஊதைக் காற்று வீசியது.

இவ்வாறு கார்ப் பருவ வரவு கிளத்தப்பட்டுள்ளது.

நான்காவது பாட்டும் கார் கால வருணனையாகவே அமைந்துள்ளது. கார் வானம், உறை கழித்த ஒள்வாள் போல மின்னிற்று; இடியெனும் அதிர்குரல் முரசமியம்பி ஆர்த்தது; வானவில்லை வளைத்து, மழைத்துளிகளைக் கணைகளாகப் பொழிந்தது. களா, வெண்காந்தள், செங் காந்தள், காயா என்ற மரங்கள் மலர்ந்து இந்திர கோபத் துடன் தலைவனைப் பிரிந்துறையும் தலைவிக்குப் பெருந் துயர் விளைவித்தன.

இவ்வாறு இம் மும்மணிக்கோவைப் பாடல்கள் இயற்கை வருணனையும், காதல் வாழ்வும், உவமை நலமும், உயரிய கருத்துகளும் குறைவறக் கொண்டு மிளிர் கின்றன. இறைவனிடத்து இடையறாத அன்பு கொண் டவர் சேரமான் பெருமாள் நாயனார் என்பது ஒவ்வொரு பாடலின் வழியும் புலனாகின்றன. சங்க இலக்கியப் பாடல்களின் செறிவு இப் பாடல்களில் நிறைந்திலங்கக் காணலாம்.

# 3. திருக்கைலாய ஞானவுலா

தமிழிலக்கியப் பேரியாறு காலத்திற்கேற்பப் புதுப் புதுக்கோலம் புனைந்து, வற்றாது, வளமாக ஓடிக்கொண்டிருக்கின்றது. காலத்தின் இடையிடையே தோன்றிய தமிழ்ப் புலவர் பெருமக்கள் தங்கள் சீரிய கற்பனையினின்றும் விழுமிய கருத்தினின்றும் எழுந்த எண்ணற்ற இலக்கிய முயற்சிகளை நம்மிடையே அழியாக் கருவூலங்களாக விட்டு மறைந்துள்ளனர். இயற்கையின் பின்னணியில் துலங்கிய மனித வாழ்வினைச் சங்க இலக்கியங்கள் திட்பமுற எடுத்துக்கூறின. மக்களின் நீங்காத சமயவுணர்வினை இடைக்கால இலக்கியங்கள் கொண்டிலங்கின. இவ் இடைக் காலத்திலேயே தமிழ் மொழி இலக்கிய வரலாற்றில் சிறு பிரபந்தங்கள் என்று குறிப்பிடப் பெறும் உலா, கோவை, பள்ளு, பரணி, குறவஞ்சி, பிள்ளைத் தமிழ், சதகம் முதலான இலக்கியங்கள் தோன்றின. 'செஞ்சொற் கவியின்பம்' என்று கம்பர் குறிப்பிடுவது போன்று சொன்னயத்தாலும் பொருட் சிறப்பாலும் கற்பனை வளத்தாலும் இச் சிற்றிலக்கியங்கள் சிறந்து விளங்கின.

தமிழ் மொழியின் தொன்னூலாசிரியராம் தொல்காப்பியனார் பிற்காலத்தெழுந்த இச் சிற்றிலக்கிய வகைகளுக்கு எல்லாம் தம் தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியலின்கண் இடம் வைத்துள்ளார் என்பதனை உணர்தல் இன்றியமையாததாகும்.

**விருந்தே தானும்**
**புதுவது கிளந்த யாப்பின் மேற்றே[1]**

---

1. தொல்காப்பியம் : பொருளதிகாரம்; செய்யுளியல் நூற்பா : 23.

என்ற நூற்பா அனைத்துவகைச் சிற்றிலக்கியங்கட்கும் வித்திட்டுள்ளது என்று அறிஞர் கூறுவர். இந்நூற்பாவிற்கு உரை எழுதிய பேராசிரியர் 'புதுவது கிளந்த யாப்பின்மேற் றென்னையெனின், புதிதாகத் தாம் வரவேண்டியவாற்றால் பல செய்யுளும் தொடர்ந்து வரச்செய்வது; அது, முத்தொள்ளாயிரமும் பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க; கலம்பகம் முதலாயினவும் சொல்லுப'[2] எனக் குறிப்பிட்டுள்ளமை காண்க. எனவே தொல்காப்பியனார் விருந்து என்ற வாற்றால் அனைத்துவகைப் புத்திலக்கியங்கட்கும் இடம் வைத்திருப்பது அவர் தம் எதிரதாக் காக்கும் கூரிய சீரிய மதி நல மாண்பை நுவலா நிற்கும்.

மேலும் தொல்காப்பியத்தில்,

**குழவி மருங்கினும் கிழவ தாகும்**[3]

**ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப**
**வழக்கொடு சிவணிய வகைமை யான**[4]

என வரும் நூற்பாக்கள், சிறப்பாகப் பிள்ளைத்தமிழ், உலா முதலான சிற்றிலக்கிய வகைகட்குக் கருவாய் அமைந்துள்ள தனைக் காணலாம். இந் நூற்பாவிற்கு இளம்பூரணர் 'ஊரின்கண் காமப் பகுதி நிகழ்தலும் உரித்து என்று சொல்லுவர் புலவர்; அது நிகழுங்காலத்து வழக்கொடு பொருந்தி நடக்கும் வகைமையின்கண்' என்று பொருள் கண்டுள்ளார். மேலும் 'ஊரொடு தோற்றமும்' என்பது பேதை முதலாகப் பேரிளம் பெண் ஈறாக வருவது; 'வழக்கு' என்பது சொல்லுதற்கு ஏற்ற நிலைமை; 'வகை' என்பது

---

2. தொல்காப்பியம் : பொருளதிகாரம்; பேராசிரியர் உரை.

3. தொல்காப்பியம் : பொருளதிகாரம்; புறத்திணை யியல் நூற்பா : 24.

4. தொல்காப்பியம் : பொருளதிகாரம்; புறத்திணை யியல் நூற்பா : 25.

அவரவர் பருவத்திற்கு ஏற்பக் கூறும் வகைச் செய்யுள்' என்றும் விளக்கங் கூறியுள்ளமை[5] இடைக்காலத் தெழுந்த உலாக்களுக்கு இலக்கணமாக அமைந்துள்ள செய்தியினை அறியலாம்.

இளம்பூரணருக்குக் காலத்தாற் பிற்பட்ட உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் மேற்கண்ட நூற்பாவினையே இரண்டாக்கி, அவற்றுள் முதல் நூற்பாவிற்கு, 'பக்கு நின்ற காமம் ஊரிற் பொதுமகளிரொடு கூடிவந்த விளக்கமும் பாடாண்திணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர்' என்றும், 'தோற்றமுமென்றது அக்காமம் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கத்தை; அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் படுத்துக் கலிவெண்பாட்டால் செய்யும் உலாச் செய்யுளாம்' என்றும் விளக்கம் வரைந்துள்ளமை[6] உலா இலக்கியங்கள் தோன்றி வளர்ந்த நிலையினைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

ஆயினும் ஈண்டொரு தடையும் எழுப்பப்பட்டுள்ளது. இளம்பூரணர் பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர் என்றும், நச்சினார்க்கினியர் கி. பி. பதினான்காம் நூற்றாண்டினர் என்றும் அறிஞர்கள் ஆய்ந்து நிறுவியுள்ளனர். இளம்பூரணருக்கும் முன்னர் வாழ்ந்தவர் சேரமான் பெருமாள் நாயனார். அவர் இயற்றியருளிய திருக்கைலாய ஞானவுலாவே உலா இலக்கியங்களில் முதலாவதாகும். இதுபோன்றே மூவருலா எழுதிய ஒட்டக்கூத்தர் காலத்திற்குப் பிற்பட்டவர் நச்சினார்க்கினியர். இவ்விரு உரையாசிரியர்களும் தம் காலத்திற்கு முன்னர் எழுந்த இலக்கிய வகைகளைக் கண்டு அவற்றிற்கேற்ப இந் நூற்பாக்களுக்கு உரை கண்டிருக்கலாம் என்றும்,

5. தொல்காப்பியம் : பொருளதிகாரம்; புறத்திணையியல், இளம் பூரணர் உரை.
6. தொல்காப்பியம் : பொருளதிகாரம்; புறத்திணையியல், நச்சினார்க்கினியர் உரை.

ஆதலின் இவர்கள் கூறியுள்ள உரைப்பகுதி பொருந்தாது என்றும் கூறி இந்நாளில் வேறு உரை விளக்கமும் கூறப் பெறுகின்றது.[7]

### வரையறை

பிற்காலத்தில் பல்வேறு வகைகளாகக் கிளைத்துத் தழைத்த சிற்றிலக்கியங்களைத் தொண்ணூற்றாறு என்ற எண் வரையறைக்குள் அடக்கிக் கூறும் மரபு தமிழில் எழுந்துள்ளது. பதினெட்டாம் நூற்றாண்டில் எழுந்த பிரபந்த மரபியல்,

**பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறாத்**
**தொண்ணூற்றாறு என்னும் தொகையதாம்**

என்றும், பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்த பிரபந்த தீபிகை,

---

7. (அ) இதற்கு இளம்பூரணர் உரையும் சிறவாது; மலை கலங்கினும் நிறைநிலை கலங்காத் தமிழ் மகளிரெல்லாம் ஓர் ஏதிலன் உலாவில் உயிரினும் சிறந்த தம் கற்பிழந்து காமவெறி கொள்ளவைத்துப் பழி பிறங்கும் பிற்காலப் பிரபந்தங்களை அமைப்பதற்கு இப்பொருள் கொண்டார் போலும்;...... இவற்றைப் பிரித்து இருவேறு நூற்பாக்களாக்கிப் பொருந்தாப் புதுப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர் ... அன்றியும் முதலடிக்கு இவர் கூறும் புதுப் பொருள், தமிழறமும் பழமரபும் அழியவரும் இழுக்காகும்.

— நாவலர் டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் புத்துரை.

(ஆ) 'இப் பாடாண் திணையில் உலகியல் வழக்கத்தை யொட்டித் தலைமக்களுடைய ஊரும் உயர்குடிப் பிறப்பும் இயற்பெயரும் குறித்துப் பாராட்டப் பெறுதலுண்டு.

— திரு. க. வெள்ளைவாரணன்,
தமிழ் இலக்கிய வரலாறு, தொல்காப்பியம்.

**பதினாறை யாறாற் பெருக்கி பிரபந்தாதி**
**பலவகை எடுத்துரைக்கின்**

என்றும் குறிப்பிட்டுள்ளமை கொண்டு சிறுபிரபந்த வகைகள் தொண்ணூற்றாறு என அறிய வருகிறோம். ஆயினும் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முன் எழுந்த பன்னிரு பாட்டியல் அறுபத்தைந்து சிற்றிலக்கிய வகைகளின் விளக்கமும், பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய வெண்பாப் பாட்டியல் ஐம்பத்தாறு சிற்றிலக்கிய வகைகள் பற்றிய விளக்கமும், பதினான்காம் நூற்றாண்டில் எழுந்த நவநீதப் பாட்டியல் தொண்ணூற்றேழு சிற்றிலக்கிய வகைகள் பற்றிய விளக்கமும் கூற, பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்த படிக்காசுப் புலவர் சிவந்தெழுந்த பல்லவன் என்னும் வள்ளல்மீது பாடிய சிவந்தெழுந்த பல்லவராயன் உலா,

**தொண்ணூற்றாறு கோலப்ரபந்தங்கள்**

என்று குறிப்பிட்டுள்ளது. எனவே படிக்காசுப் புலவர் வாழ்ந்த காலத்தை யொட்டியே சிறு பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு என்னும் வரையறை எழுந்திருக்கலாம் எனக் கருத இடமுண்டு. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரமாமுனிவர் இயற்றிய சதுரகராதியிலும் தொண்ணூற்றாறு இலக்கிய வகைகட்குரிய இலக்கணத்தினைக் காணலாம். ஆயினும் இந்த வரையறை புலவர் பெருமக்களால் ஒருங்கு போற்றப்பட்டதோவெனின் அன்று என விடையிறுக்கலாம். பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் சிதம்பரப் பாட்டியலில் அறுபத்திரண்டு சிற்றிலக்கிய வகைகளும், பதினேழாம் நூற்றாண்டினதான இலக்கண விளக்கப்பாட்டியலில் அறுபத்தெட்டு சிற்றிலக்கிய வகைகளும் கூறப்பெற்றிருக்க, சென்ற நூற்றாண்டில் எழுந்த பிரபந்தத் தொகையில் தொண்ணூற்றேழு இலக்கிய வகைகளுக்கு

இலக்கணம் இயம்பப்பட்டிருப்பது கொண்டு, சிற்றிலக்கியங்களை எண் வரையறைக்குள் அடக்கிக் கூறும் மரபு காலத்திற்குக் காலம் வேறுபட்டு வந்துள்ளமையினை அறியலாம். மேலும் இந்த வரையறைக்குள் அடங்காது அம்மானை, அலங்காரம், சிந்து, சீட்டுக்கவி, ஏசல், புலம்பல், தென்பாங்கு, வண்ணம், வில்பாட்டு முதலான பிற்காலப் புதிய இலக்கியப் படைப்புகள் பல தோன்றி நிலைத்திருப்பதனையும் காண்கிறோம். எனவே வளர்ந்து வரும் தமிழ் மொழியில் படைப்பிலக்கியங்களை ஒரு வரையறைக்குள் அடக்கிக் கூறும் வழக்கின் பொருத்தமின்மையினைத் தெளிவாக உணரலாம்.

## உலாவின் தோற்றம்

இறைவன் திருவீதிகளில் தமக்குரிய ஊர்திகளில் உலா வந்த சிறப்பினைத் தேவார ஆசிரியர்கள் சிறக்கப் பாடியுள்ளனர். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் பெருமான் தம் காலத்தில் திருவாரூர்த் திருநகரில் தியாகராசப் பெருமானுக்குத் திருவாதிரைத் திருநாளில் நடைபெற்ற திருவிழாவினைக் குறித்துப் பாடியுள்ளார். திருத்தொண்டர் குழாம் புடைசூழத் தியாகப் பெருமான் திருவீதிவுலா வருகின்ற சிறப்புப் பின் வரும் பாடலால் புலனாகின்றது:

**முடிகள் வணங்கி மூவாதார் கண்முன் செல்ல**
**வடிகொள் வேய்த்தோள் வானர மங்கையர் பின்செல்லப்**
**பொடிகள் பூசிப் பாடுந் தொண்டர் புடைசூழ**
**அடிகள் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்.**[8]

மேலும் அவரே அட்ட வீரட்டானத் தலங்களில் ஒன்றாயதும், மன்மதன் எரியுண்டதுமான தலமாகிய திருக்குறுக்கை வீரட்டத்தில் ஏழு நாள்கள் விழா நடந்ததனையும், அத்திருவிழாவில் திருத்தாண்டவக்கோலத்

---

8. திருநாவுக்கரசர் தேவாரம், 4; 21: 8.

தோடு திருக்குறுக்கை வீரட்டனார் திருவீதிகளில் திருவுலாப் போந்த சிறப்பினையும் இனிதே எடுத்துக் கிளத்துகின்றார்.

> **அத்தமாம் அயனும் மாலும் அன்றிமற் றொழிந்த தேவர்**
> **சோத்தமெம் பெருமானென்று தொழுது தோத்**
> **[திரங்கள் சொல்லத்**
> **தீர்த்தமாம் அட்டமிமுன் சீருடை ஏழுநாளும்**
> **கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்டனரோ.**[9]

இறைவன் இடபத்தில் அமர்ந்தருளி வீதியுலாப் போந்த சிறப்பினை,

> **மால் விடைமேல் நெடுவீதி போதக் கொண்டார்**[10]

என்றும் அவர் பிறிதொரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். திருஞான சம்பந்தர் தேவாரத்திலும்;

> **தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்**[11]

என்றும்,

> **தேராரும் நெடுவீதித் திருத்தோணிபுரம்**[12]

என்றும் வருகின்ற குறிப்புகள் மேலும் இக்கருத்தினை வலியுறுத்தும்.

## காப்பியங்களில் உலா

உலாவின் இலக்கியக் கூறுகள் இடைக்காலத் தெழுந்த காப்பியங்களிலும் இடம் பெற்றிருப்பதனைக் காணலாம். உதயணனின் உலாக் காட்சி பெருங்கதையில் 'நகர்வலங் கண்டது' என்னும் பகுதியில் கிளத்தப்பட்டுள்ளது. சிந்தாமணிக் காப்பியத்தின் தலைவனாகிய சீவகன் வேடர் கூட்டம் வௌவிச் சென்ற ஆநிரைக் கூட்டத்தை மீட்டு

---

9. திருநாவுக்கரசர் தேவாரம், 4 ; 50 : 2.
10. திருநாவுக்கரசர் தேவாரம், 6 ; 96 : 7.
11. திருஞானசம்பந்தர் தேவாரம், 1 ; 27 : 7.
12. திருஞானசம்பந்தர் தேவாரம், 1 : 60 : 5.

வந்தபோது, அந் நகரில் வாழ்ந்த கற்புடை நங்கையர் அவனை வாழ்த்தியதையும், பிற மகளிர் அவன் பொலிவும் வனப்பும் கண்டு களித்து நின்ற காட்சியினையும் திருத்தக்க தேவர் கவினுறக் காட்டியுள்ளார்:

இன்னமு தனைய செவ்வா
யிளங்கிளி மழலை யஞ்சொற்
பொன்னவிர் சுணங்கு பூத்த
பொங்கிள முலையி னார்தம்
மின்னிவர் நுசுப்பு நோவ
விடலையைக் காண வோடி
அன்னமு மயிலும் போல
அணிநகர் வீதி கொண்டார்.[13]

அடுத்து, கம்பராமாயணத்தின் 'உலாவியற் படலம்' சீதையைத் திருமணங்கொள்ள இராமர் மிதிலைக்குச் செல்லுவதைக் குறிப்பிடுவதோடு உலாச் செய்திகளையுந் திறம்பட மொழிந்துள்ளது.

## முத்தொள்ளாயிரத்தில் உலாக் காட்சி

சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தர் தம் சிறப்புகளைக் கவினுறக் காட்டி நிற்பது முத்தொள்ளாயிரம் என்னும் நூலாகும். நங்கை யொருத்தி தெருவில் உலா வரும் சோழ மன்னனைக் காண ஆசை மீதூர்ந்து நிற்க, அவனைக் காணவேண்டாவென அவள் தாய் தெருக்கதவைத் தாளிட, இவ்வாறாக இவ் இருவரிடையே ஏற்படும் மனம், செயற் போராட்டங்களை முத்தொள்ளாயிர ஆசிரியர் நயமுற நவின்றுள்ளார்.

திறந்திடுமின் தீயவை பிற்கண்டும் மாதர்
இறந்துபடின் பெரிதாம் ஏதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பின் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு

13. சீவக சிந்தாமணி : 457.

என்னும் பாடல்[14] உலா இலக்கியங்களின் கூறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

## உலாவின் இலக்கணம்

தமிழில் எழுந்த பாட்டியல் நூல்கள் பலவாகும். அவற்றிலெல்லாம் உலாவென்னும் சிற்றிலக்கியத்திற்குரிய இலக்கணம் குறிப்பிடப்பட்டுள்ளது. காலத்தால் முற்பட்ட பாட்டியல் நூல் பன்னிரு பாட்டியலாகும். அந் நூலில்,

பாட்டுடைத் தலைவ னுலாப்புற வியற்கையும்
ஒத்த காமத் தினையாள் வேட்கையும்
கலியொலி தழுவிய வெள்ளடி யியலால்
திரிபின்றி நடப்பது கலிவெண் பாட்டே[15]

என்று உலாவின் இலக்கணம் விளங்கக் கூறப்பட்டுள்ளது. வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியல்,

திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை
மறந்தயர வந்தான் மறுகென்—றறைந்தகலி
வெண்பா வுலாவாங் குழமகன்மேல் மேவிலவ்
வெண்பாக் குழமகனா முற்று[16]

என்று இலக்கணம் வரையறுத்துள்ளது.

சிதம்பரப் பாட்டியல்,

குழமகனை அடையாளம் கலிவெண் பாவால்
கூறியவன் மறுகணையக் காதல் கூரேழ்
எழிற்பேதை பதினொன்று பெதும்பை பன்மூன்று
இயன்மங்கை பத்தொன்பான் மடந்தை யையைந்

---

14. முத்தொள்ளாயிரம் : 85.
15. பன்னிரு பாட்டியல் : 214.
16. வெண்பாப் பாட்டியல் : உலா, குழமகன்.

தழகரிவை முப்ப:.தோர் தெரிவை நாற்பா
னாம்வயது பேரிளம்பெண் முதலா யுள்ளோர்
தொழவுலாப் போந்த துலாத் தலைவன் பேர்க்குத்
தொடையெதுகை யொன்றிலின்ப மடலாய்ச்
சொல்லே[17]

என்றும், *இலக்கண விளக்கப் பாட்டியல்,*

குழமகனை கலிவெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க வுரைத்தாங்கு
இழைபுனை நல்லா ரிவர்மணி மறுகின்
மற்றவன் பவனி வரவேழ் பருவ
முற்றமா னார்தொழப் போந்த துலாவாம்[18]

என்றும் *கூற, பதினெட்டாம் நூற்றாண்டில் எழுந்த பிரபந்தத் திரட்டு,*

பேதைமுத லேழ்பருவப் பெண்கள் மயக்கமுற
ஓதுமறு குற்றானொள் வேலானென்—றேதம்
அறக்கலி வெண்பாவி னாக்க லுலாவாம்
புறத்தசாங் கந்தாங்கிப் போற்று[19]

என்றும், *பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்த பிரபந்தத் தீபிகை*

மிக்கவிள மைப்பருவமாய்
உற்றதலை மகனைப் பிறப்பும் பரம்பரை
யுறுங்குல மினானென்பதாய்
உயர்தலைமை யாம்மாதர் புடைசூழ வேபருவ
முளபெண்கள் கண்டுதொழவே
மத்தகய மீதுபரி சிவிகைமீ தும்பவனி
வருவதலைவ னைத்துதித்து

---

17. *சிதம்பரப் பாட்டியல்; மரபியல் :* 37.
18. *இலக்கண விளக்கப் பாட்டியல் :* 97.
19. *பிரபந்தத் திரட்டு.*

**மானே ரிசைக் கலியின் வெண்பாவினாற்கூறல்**
**வருமுலா வாகுமன்றே**[20]

என்றும் இலக்கணங் கூறுவதனின்றும் நாம் அறிகின்ற செய்திகள் வருமாறு:

தலைவன் வீதியில் உலா வருகையில் அவ் வீதியிலுள்ள பேதை முதல் பேரிளம் பெண் ஈறான ஏழு பருவப் பொது மகளிரும் அவனைக் கண்டு காமுற்றதாகக் கலிவெண்பாவிற் பாடப்படுவது உலா என்னும் சிற்றிலக்கியமாகு மென்று பெறப்படுகின்றது. பாட்டுடைத் தலைவன் உலா வருதலைச் சிறப்பித்துப் பாடப்படுதலின் இஃது உலா வெனப் பெயர் பெற்றது. இஃது உலாப் புறமென்றும் வழங்கும். உலாப் புறம் என்னும் இப்பெயர் இலக்கணப் போலியாக வந்தது என்பர் சங்கர நமசிவாயர். "இல் முன் என்பதனை முன்றி லென்றும், நகர்ப்புறம் என்பதனைப் புறநகர் என்றும், புறவுலா என்பதனை உலாப்புறம் என்றும், கண்மீ என்பதனை மீகண் என்றும், கோவில் என்பதனைக் கோயிலென்றும், பொதுவில் என்பதனைப் பொதியி லென்றும் வழங்கும் இத் தொடக்கத்தன இலக்கணப் போலி" என்று அவர் காட்டும் பகுதியினைக் காண்க.

**கோவை யகம்வைத்து உலாப்புறம் காட்டுதி**

என்னும் தொடர் கோடீச்சுரக் கோவையில் காணப்படு கின்றது. உலா மாலை என்ற பெயராலும் உலா நூல்கள் குறிக்கப்பெற்றன என்ற செய்தி திருவிலஞ்சி முருகன் உலாக் காப்புச் செய்யுளாற் பெறப்படுகின்றது.

**ஏர்கொண்ட தென்னிலஞ்சி ஈசன் குருபரன்மேல்**
**சீர்கொண்டு உலாமாலை சேர்க்கவே.**[21]

தமிழ் வியாசர் என அழைக்கப்பெறும் நம்பியாண்டார் நம்பிகள் ஞானசம்பந்தப் பெருமான் மீது இயற்றிய உலா

---

20. பிரபந்தத் தீபிகை : 19.
21. திருவிலஞ்சி முருகன் உலா : காப்புச் செய்யுள்.

'ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை' எனப் பெயரியது என்பதும் ஈண்டு அறியத் தக்கதாம். மேலும் இவ்வுலா 'பவனி' என்றும், 'பவனியுலா' என்றும் குறிப் பிடப்படுவதுண்டு.

> **பவனித் திருத்தேரைப் பாரீர்.**[22]
>
> **பொற் கழுக்குன் றீசர்பவனித் திருவுலாப் பாட**[23]

எனவரும் தொடர்கள் இக் கருத்தினை உணர்த்துவன வாகும்.

## உலாவின் சிறப்பிலக்கணம்

> **புறத்தசாங்கம் தாங்கிப் போற்று**

என்னும் பிரபந்தத் திரட்டுச் செய்யுள் கொண்டு சிற்றில், பாவை, கழங்காடல், அம்மனையாடல், ஊசல், கிளிக்குச் சொல் பயிற்றல், யாழ் மீட்டல், புனலாடல், பொழில் விளையாட்டு முதலிய மகளிர் விளையாட்டு, பொழுது போக்குச் செயல்கள் முதலியன குறித்த செய்திகளும் உலா நூல்களில் இடம் பெறவேண்டும் என் அறியலாம். பதினாறு வயது முதல் நாற்பத்தெட்டு வயது வரை உள்ள தலைவன் மீது மட்டுமே உலா பாடப்பெறும் என்பதனைப் பன்னிரு பாட்டியல் குறிப்பிட்டுள்ளது.[24]

## உலாவின் பகுப்பு

உலா நூல்கள், முதனிலையென்றும் பின்னெழுநிலை யென்றும் இருவகையாகப் பகுத்துக் காணப்பெறும்.[25]

---

22. திருக்கழுக்குன்றத்து உலா : 129.
23. திருக்கழுக்குன்றத்து உலா : காப்புச் செய்யுள்.
24. 'நீடிய நாற்பத் தெட்டினளவும்
    ஆடவர்க் குலாப்புற முரித்தென மொழிப.'
    —பன்னிரு பாட்டியல் : 136.
25. 'முதனிலை பின்னெழு நிலை யுலா வெண்கலி.'
    —பன்னிரு பாட்டியல் : 213.

தலைவனது குன்றாத குடிப்பெருமை, தலைவன் வீரம், வென்றி, உலாச் செல்ல நீராடுதல், அணிகள் அணிதல், அவன் யாதானும் ஒரு வாகனத்தில் ஏறிச் செல்லுதல், உடன் வருவோர், நகர மகளிர் எதிர்கொள்ளல் முதலியன வற்றைப் பற்றிப் பாடுவதனை முதனிலை என்றும்,[26] பேதை முதலாகப் பேரிளம்பெண் ஈறாக வரும் பத்துப் பருவங்களின் தன்மைகளை விளக்கிக் கூறி, ஏழு பருவ மகளிரும் பாட்டுடைத் தலைவன் பட்டத்து யானைமீது பவனி வருவதைப் பார்த்துத் தத்தம் பருவநிலைகளுக் கேற்ப உணர்ச்சியுற்று அவன்மீது காதல் கொண்டதாக அமையப் பாடுவது பின் எழுநிலை[27] என்றும் கூறுவர் பாட்டியல் இலக்கணிகள்.

## புறப்பொருளைச் சார்ந்த பாடாண் திணை

உலா இலக்கியங்கள் புறப்பொருள் துறையைச் சார்ந்தனவாகும். பாடப்படும் ஆண்மகனுடைய ஒழுகலாறு களை—வீரம் வென்றி கொடை முதலிய சிறப்புப் பண்பு களை விரிவாகக் கூறுவதே பாடாண்டிணையாகும். பாட்டு டைத் தலைவன் மீது ஏழு பருவப் பெண்டிரும் காதல் கொண்டு மயங்கினர் என்பது தலைவனின் ஒழுகலாற் றினை உரைத்தது ஆகுமாயெனில் அன்று; புறத்துறையில்

---

26. ‘குடிநெறி மரபு கொளல்கொடை விடியல்
நன்னீ ராடல் நல்லணி அணிதல்
தொன்னக ரெதிர்கொளல் நன்னெடு வீதியின்
மதகளி றூர்தல் முதனிலை யாகும்.’
—பன்னிரு பாட்டியல் : 133.

27. ‘ஏழு நிலையும் இயம்புங் காலை
பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை பேரிளம் பெண்ணெனப்
பாற்படு மகளிர் பருவத் தாதல்
நோக்கி உரைப்பது நுண்ணியோர் கடனே.’
—பன்னிரு பாட்டியல் : 135.

நாட்டம் மிகுந்த மன்னவனை அகத்துறையில் நாட்டங் கொள்ளச் செய்ய வைப்பதோராறு என்று கூறுவர். "உலாவில் மாதர் பலர் காதல் கொண்டனர் என்று கூறப் படுகின்றதே யன்றி அம்மாதர் பலரையும் அம் மன்னவன் கூடி இன்புற்றான் என்று கூறப்படாமையாலும், தன் அழகின் சிறப்பையும் காதலுணர்ச்சியையும் நினைந்து அம் மன்னவன் தீதில் நெஞ்சத்துக் காதல்கொள்ளும் கற்புடைத் தலைவிமேற் சென்ற கருத்தனாய்ப் போர்மேற் போதலை விடுத்து மனைக்குத் திரும்புதல் ஆண்மகனுக்குரிய ஒழுக்கமே யாதலாலும் உலாச் செய்யுளைப் புலவர் பாடினார்கள்" என்பர் இலக்கிய ஆய்வாளர்.[28]

உலா நூல்கள் ஏழு பருவப் பெண்டிர்மீது தலைவன் காதல் கொண்டான் என்று யாண்டும் கூறப்படாமல், பெண்டிர் தலைவன்மீது கொள்ளும் ஒருமருங்கு பற்றிய கேண்மையைக் கிளத்தும் கைக்கிளைத் திணையைச் சார்ந்ததாக உள்ளனவால், இந் நூல்கள் பெண்பாற் கைக்கிளைத் துறையைச் சார்ந்த நூல்களாகக் கொள்ள வேண்டும். இறைவன்மீது பாடப்பெற்ற உலா நூல்களில் திருவீதிவுலா வரும் அவ் அண்ணல்மீது ஏழு பருவ மகளிரும் காதல் கொண்டதாகக் கூறப்படுவதால் இத்தகைய உலா இலக்கியங்களைப் புறப்பொருள் வெண்பாமாலையார்[29] கூறும் 'கடவுண்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்' என்னும் துறைக்கண் நிறுத்தலாம்.

### ஏழு பருவ மகளிர்

மிதிலை நகர வீதிகளிலே இராமன் உலாவந்த செய்தியினைக் கம்பர் பாலகாண்டம் எதிர்கொள் படலத்தில் விளங்கப் பாடியுள்ளார்:

---

28. திரு. செ. வேங்கடராமச் செட்டியார்; சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்: பக்கம் 129, 130.
29. புறப்பொருள் வெண்பா மாலை; பாடாண் படலம் : 49.

**பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கள்தாம்**
**ஏதியார் மாரவே ளேவந் தெய்தினார்**
**ஆதிவா னவர்பிரான் அணுகலால் அணிகொள்கார்**
**ஓதியார் வீதிவாய் உற்றவா றுரை செய்வாம்.**[30]

இதன் பின்வரும் உலாவியற் படலம் மேலும் இச் செய்திகளை விளங்க உரைக்கின்றது. கொங்குவேளிரும் ஏழு பருவ மகளிர் செயல்களையும் அவர்தம் நீராடலையும் சுவைபட வருணித்துள்ளார். சிந்தாமணியில் கோவிந்தையார் இலம்பகத்தில் வரும் பதினான்கு பாடல்களில் ஆநிரை மீட்டு வந்த சீவகன்மாட்டுப் பருவமகளிர் கொண்ட காதலும், அவர்தம் செயலும் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. தலைமகன் முடிபுனைந்தோ, மணம் புரிந்தோ, வெற்றி பெற்றோ, தேர்மீதோ, பிற ஊர்திகள்மீதோ வீதிவலம் வருவது உண்டென்றும், அதுபோது பேதை முதலாப் பேரிளம் பெண் ஈறான பருவ மகளிர் தம் பருவ உணர்ச்சிக்கேற்பக் காதல் கொள்ளுதல் வழக்கு என்பதும் அறியப்படும்.

பருவ நிலைகளுக்கேற்ப உடலில் மாற்றங்களும் உள்ள நிலையில் வேறுபாடுகளும் மகளிர்மாட்டு அமையும் என்பதனை உலா கொண்டு நுண்ணிதின் அறியலாம். ஒவ்வொரு பருவத்தினர்க்கும் உரிய மனநிலையினைப் பின்வருமாறு அறிஞர் குறிப்பிட்டுள்ளனர். "பொதுவாக மகளிர் உலகியலை அறியும் நிலை எய்தாத இளம் பருவம் பேதைப் பருவம் என்றும், காம உணர்ச்சி ஒருவாறு அரும்பி அதனை உணர்ந்தும் உணராததுமான நிலையில் உள்ள பருவம் பெதும்பைப் பருவம் என்றும், அவ்வுணர்ச்சியை நன்கு எய்திய பருவம் மங்கைப் பருவம் என்றும், அவ்வுணர்ச்சியில் பயின்றுவரும் பருவம் மடந்தைப் பருவம் என்றும், அவ்வுணர்ச்சியில் முதிர்ந்து இன்பத்திற்

30. கம்ப ராமாயணம்; பால காண்டம்; எதிர்கொள் படலம்: 34.

றிளைக்கும் பருவம் அரிவைப் பருவம் என்றும், மகப் பேற்றையடையும் பருவம் தெரிவைப் பருவம் என்றும், காமவுணர்ச்சி தளர்வுறத் தோன்றும் பருவம் பேரிளம் பெண் பருவமென்றும் ஒருவாறு பாகுபாடு செய்து கொள்வது பொருத்தமுடைத் தென்னலாம்'' என்று கூறுவர் ஆய்ந்து டாக்டர் உ. வே. சா. அவர்கள்.[31]

இலக்கண விளக்கப் பாட்டியல்,

**ஐந்துமுத லேழாண்டும் பேதை[32]**

என்றும்,

**எட்டுமுதனான் காண்டும் பெதும்பை[33]**

என்றும்,

**ஆறிரண் டொன்றே யாகுமங்கை[34]**

என்றும்,

**பதினான் காதிபத் தொன்பான் காறும்**
**எதிர்தரு மடந்தை மேலாறு மரிவை[35]**

என்றும்,

**ஆறுதலை யிட்ட விருபதின் மேலோ**
**ஏாறுந் தெரிவையெண் ணைந்துபே ரிளம்பெண் என்**
**றோரும் பருவத் தோர்க்குரைத் தனரே[36]**

என்றும் குறிப்பிடுவதனால், ஐந்துமுதல் ஏழு வயதுவரை பேதைப் பருவம் என்றும், எட்டுமுதல் பதினொன்றுவரை பெதும்பைப் பருவம் என்றும், பன்னிரண்டு முதல் பதின் மூன்று வரை மங்கைப் பருவம் என்றும், பதினான்கு முதல் பத்தொன்பதுவரை மடந்தைப்பருவம் என்றும், இருபது

31. திருக்குற்றால நாதர் உலா, முன்னுரை.
32. இலக்கண விளக்கப் பாட்டியல் : 99.
33. இலக்கண விளக்கப் பாட்டியல் : 100.
34. இலக்கண விளக்கப் பாட்டியல் : 101.
35. இலக்கண விளக்கப் பாட்டியல் : 102.
36. இலக்கண விளக்கப் பாட்டியல் : 103.

முதல் இருபத்தைந்து வரை அரிவைப் பருவம் என்றும், இருபத்தாறு முதல் முப்பத்தொன்றுவரை தெரிவைப் பருவம் என்றும், முப்பத்திரண்டு முதல் நாற்பது வரை பேரிளம் பெண் பருவம் என்றும் முன்னோர் கொண்டிருந்த கருத்துப் புலனாகின்றது. இதுகொண்டு பேதைப்பருவம் மூன்றாண்டு காலம் எனவும், பெதும்பைப் பருவம் நான்காண்டு காலம் எனவும், மங்கைப் பருவம் இரண்டாண்டு காலம் எனவும், மடந்தைப்பருவம் ஆறாண்டு காலம் எனவும், அரிவைப் பருவம் ஆறாண்டுகாலம் எனவும், தெரிவைப் பருவம் ஆறாண்டு காலம் எனவும், பேரிளம் பெண் பருவம் ஒன்பதாண்டு காலம் எனவும் விளங்குகின்றது.[37] ஆயினும் பெண்டிர்க்குக் கூறப்படும் வயதும், கால எல்லையும் சிறிது மாறுபட்டும் சில நூல்களில் நுவலப் படுகின்றன.[38]

உலா இலக்கியங்களில் கூறப்படும் ஏழு பருவ மகளிரும் குல மகளிர் அல்லர், பொதுமகளிரே என்பர். 'ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப' என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் கொண்ட உரை 'பக்கு நின்ற காமம் ஊரில் பொதுமகளிரோடு கூடிவந்த விளக்கமும் பாடாண் திணைக்கு உரியது' என்பதாகும். மேலும் பெருங்கதை ஆசிரியர் கொங்குவேளிர் உதயணன் உலா

37. ''பகருங்கா லைந்தேழ் பதினொன்று பன்மூன்
றகலாத பத்தொன்பா னையைந்—திகலாத
முப்பத்தொன் றீரிருபான் பேதைமுத லோர்க்குச்
செப்புவ ராண்டெல்லைத் திறம்.''
—வெண்பாப் பாட்டியல் : 26.

38. ''பேதை தனக்குப் பிராயமேழு பெதும்பைக்
கொன்பது
ஓதிய மங்கைக்குப் பன்னிரண்டாகு மொளிர்
மடந்தை
மாதருக் கீரே ழரிவை பதினெண் மகிழ்—தெரிவைச்
சாதிமூ வேழெனும் பேரிள நாலெட்டுத்
தையலார்க்கே.''

வந்த காலத்தில் உத்தம மாதராம் கற்புடை மகளிர் ஒழிந்த பிறமகளிரே அவன் வடிவழகில் ஈடுபட்டு மயங்கினர் எனக் குறிப்பிட்டுள்ளார்:

ஞாலந் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளி ரொழிய மற்றைக்
கன்னிய ரெல்லாங் காமன் துறந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி
இறைவளை நில்லார் நிறைவரை நெகிழ.[39]

திருத்தக்க தேவரும் இந்நுட்பத்தினையும் மரபினையும் உணர்ந்தவராகவே காணப்படுகின்றார். சீவகன் உலா வந்த செய்தியினைக் கூறும்போது, அவன் ஆண்மை வீறும் தோற்றப் பொலிவைக் கண்ட கற்புடை மகளிர் 'பொலிக' என்று வாழ்த்துக் கூறியதாகவும், பிற மகளிர் காமக்கண் கொண்டு கண்டு வாடி மெலிந்தனர் என்றும் கூறியுள்ள மையும் அப்பாட்டிற்குப் பொருள் கண்ட நச்சினார்க் கினியர் தமிழ்ப் பண்பாடு விளங்க உரை வகுத்த திறமும் போற்றற்குரியனவாகும். மேலும் இலக்கண விளக்கப் பாட்டியல் நூற்பாவில் வரும் 'இழைபுனை நல்லாரிவர் மணி மறுகின்' என்ற தொடரில் உள்ள 'மறுகு' என்ற சொல்லிற்குப் 'பரத்தையர் வீதி' எனப் பொருள் விளக்கம் கூறுகின்றார் உரைகாரர். பிற்காலச் சைவ இலக்கிய நூல்களும், தலபுராண நூல்களும் இப் பொதுமகளிரை 'உருத்திர கணிகையர்' எனவும், கல்வெட்டுகள் 'தளிப் பெண்டிர்' எனவும் வழங்கக் காண்கிறோம்.

மேலும் மகளிரைப் பருவ வகையால் பிரித்துரைக்கும் வழக்குண்மை சங்க காலத்திலேயே தோன்றிவிட்டது என்பது,

பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை புறத்து[40]

39. பெருங்கதை; 2 : 7 : 54-62.
40. அகநானூறு; 7 : 6-7.

என வரூஉம் அகப்பாடற் பகுதி கொண்டு உய்த்துணரலாம் என்பர் அறிஞர்.

## உலா நூல்கள் பெயர் பெறும் முறை

பாட்டுடைத் தலைவனின் ஊரோடு சார்த்திச் சில நூல்கள் பெயரிடப் பெற்றுள்ளன. தியாகராசப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு எழுந்த உலா, அக்கடவுள் எழுந்தருளியிருக்கும் திருத்தலமாகிய திருவாரூரைக்கொண்டு 'திருவாரூர் உலா' என்று வழங்குகின்றது. அவிநாசி உலா, திரும்பனந்தாள் உலா, தேவையுலா, பேரூருலா முதலியனவும் இவ் வகையைச் சாரும்.

பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரோடும் சில உலாக்கள் வழங்கும். விக்கிரம சோழன் மீது பாடப்பெற்ற உலா விக்கிரம சோழனுலா, குலோத்துங்க சோழன் மீது பாடப்பெற்ற உலா குலோத்துங்க சோழனுலா, இராசராச சோழன் மீது பாடப்பெற்ற உலா இராச ராச சோழனுலா என வழங்கப்படுகின்றன. காஞ்சி ஏகாம்பரநாதர் மீது பாடப்பெற்ற உலா ஏகாம்பர நாதர் உலா என்றும் வழங்குவது காணலாம். சில உலாக்கள் தலைவனின் ஊர்ப் பெயரோடும் இயற்பெயரோடும் இணைந்து வழங்கப்பெறுகின்றன. மதுரைச் சொக்கநாதர் உலா, தஞ்சைப் பெருவுடையார் உலா, திருவிலஞ்சி முருகன் உலா, குன்றக்குடி சண்முகநாதர் உலா, கயத்தாற்றரசன் உலா முதலியன இத்துறைக்கு எடுத்துக்காட்டுகளாம். பாடும் பொருளால் பெயர் பெற்ற உலா சிலேடையுலாவாகும்.

இவ்வுலா நூல்களிற் பெரும்பாலன, புலவர்கள் தாங்கள் வழிபடும் தெய்வங்களின் மீதாவது, அல்லது தங்களை ஆதரித்த அரசர்கள் வள்ளல்கள் மீதாவது அல்லது தங்கள் ஆசிரியர்கள் மீதாவது பாடப்பெற்றனவாக அமைந்திருக்கக் காணலாம். ஆக இம் முப்பிரிவுகளில் ஒரு பிரிவாக எந்த வுலாவினையும் அடக்கலாம். சேரமான்

பெருமாள் நாயனார் இயற்றியருளிய திருக்கைலாய ஞான வுலா கடவுளர்மீது பாடியதற்கும், கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பாடிய மூவருலா அரசர்கள்மீது பாடிய தற்கும், படிக்காசுப் புலவரால் பாடப்பெற்ற சிவந்தெழுந்த பல்லவராயன் உலா வள்ளல் மீது பாடப் பெற்றதற்கும், நம்பியாண்டார் நம்பிகள் பாடியருளிய ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை அடியார் மீது பாடியதற்கும், தத்துவராயர் பாடிய ஞானவினோதன் உலாவும், சிவப் பிரகாசர் பாடிய சிவஞானபாலைய தேசிகர் உலாவும் ஞானாசிரியர் மீது பாடியதற்கும் எடுத்துக்காட்டுகளாகும்.

இதுகாறும், உலாவின் தோற்றம், வளர்ச்சி, இலக்கணம் முதலிய செய்திகளை ஒருவாறு கண்டோம். இனி, சேர மான் பெருமாள் நாயனார் இயற்றிய திருக்கைலாய ஞான வுலாவினைப் பற்றிக் காண்போம்.

## திருக்கைலாய ஞானவுலா

உலா நூல்களில் காலத்தால் முற்பட்டது திருக்கைலாய ஞானவுலாவாகும். எனவே இஃது 'ஆதி உலா' என்றும் கூறப்பெறும். திருப்புகழ் தந்த அருணகிரி நாதர்,

> ஆத ரம்பயில் ஆரூரர் தோழமை
> சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
> ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையில்ஏகி,
> ஆதி அந்தஉ லாஆசு பாடிய
> சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
> ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே[41]

என்று பாடியுள்ளார். சிவபெருமான் தேவாரத்தில் 'ஆதி' என மூவரால் அழைக்கப்பட்டுள்ள காரணத்தினால், சிவ பெருமானின் தெய்வீக உலா பற்றிய இந் நூல் 'ஆதி உலா' என வழங்கல் பொருந்தும் என்பர் அறிஞர். திருக்கைலாயத்தின்கண் நிகழ்ந்த சிவபிரானின் உலா நிகழ்ச்சியினைப் பலபடப் பாராட்டிப் பாடியதனால்

41. திருப்புகழ் : 104.

இந் நூல் 'திருக்கைலாய ஞான வுலா' என்றும் வழங்கப் பெறும். இந் நூல், தான் நுவலும் பொருட் சிறப்புக் காரணமாக 'ஞானவுலா' என்றும் வழங்கப் பெறும். 'திரு வுலாப் புறம்' என்று பொதுப்பட இந்நூலினைப் பெரிய புராணம் குறிப்பிடக் காணலாம்:

பெருகு வேதமும் முனிவரும்
துதிப்பரும் பெருமையாய் உனை அன்பால்
திருவு லாப்புறம் பாடினேன்
திருச்செவி சாத்திடப் பெறல் வேண்டும்
மருவு பாசத்தை அகன்றிட
வன்றொண்டர் கூட்டம்வைத் தாய்என்ன
அருளும் ஈசரும் சொல்லுக
என்றனர் அன்பரும் கேட்பித்தார்.[42]

இதனால் ஆதியுலாவினை நயந்த ஆதியும் அந்தமு மில்லா அருட்பெருஞ் சோதியின் அருளுடைமையும், இலக்கியத் தினை இனிதுறச் சுவைக்கும் ஈடுபாடும் தெரிகின்றன. ஏகாம்பர நாதருலா பாடிய இரட்டையர்கள் இவ்வுலா வினிடத்து ஈடுபாடுடையவர்கள் என்பதனை,

................................வழுத்திநர்க்குப்
போத வினியதொரு பொன்வண்ணத் தந்தாதி
ஆதி யுலாவோ டமைத்தோனும்

என்றும், ஏகாம்பரநாதருலாவினை முடிக்குங்கால்,

..................................முடிமேல்
நிலாவுடையான் தேமா நிழலுடையான் சேரன்
உலாவுடையான் போந்தான் உலா

என்றும் குறிப்பிட்டுள்ளதனால் அறியலாம். இந்நூல் பதினோராந் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. இந் நூலினைச் சேரமான் பெருமாள் நாயனாரிடமிருந்து கேட்ட சிவபெருமான் மகிழ்ந்து அவரைச் சிவகணங் களுக்குத் தலைவராக்கிச் சிறப்புச் செய்தார் என்பர். பின்னர் இவ்வுலா மாசாத்தன் என்பவரால் திருப்பிடவூரில் வெளிப்படுத்தப்பட்டது என்பர்.

---

42. பெரியபுராணம்; வெள்ளானைச் சருக்கம் : 47.

சிவபெருமான், நந்தி தேவரும் மாகாளரும் காவல் புரிகின்ற வாயில்களைக் கடந்து புறம் போந்தான். அக்காலையில் வசுக்கள் எண்வகை ஆசிகள் கூறினர். புகழ்சான்ற முனிவர்கள் எழுவரும் வாழ்த்துரை வழங்கினர். பன்னிரு ஆதித்தரும் பல்லாண்டு பாடினர். அகத்தியர் யாழ் இசைத்தார். அங்கியங் கடவுள் அகில் முதலான நறுமணப் புகைகளை ஏந்தினார். இயமன் நன்மொழிகளால் வாழ்த்தி நின்றான். நிருதி முதலானோர் நிழற் கலன்கள் எடுத்தனர். வருணன் நிறைகுடம் ஏந்தி நின்றான். வாயு தேவன் தெருக்களை நீர்மைப்படுத்தினான். மேகங்கள் நீர் தெளித்தன. திங்கள் குடை நிழற்றியது. ஈசானன் அடப்பை ஏந்தினன். அச்சுவினி தேவர்கள் மந்திரமொழி களால் வாழ்த்துரை நவின்றனர். உருத்திரர்கள் பாராட் டுரை பகர்ந்து நின்றனர். குபேரன் அளவிடற்கரிய பெரும் பொருளினை யாவர்க்கும் பரிசிலாக வாரி வீதிகளில் வீசிச் சென்றான். கங்கை யமுனை முதலான தூய்மை நிறைந்த ஆற்றுத் தெய்வங்கள் கவரி வீசின. எண்வகைப் பாம்பு களும் சுடர் எடுத்தன. எண்டிசை யானைகளும் இறைவன் திருவடிகளில் ஏற்றமுறப் பணிந்து நின்றன. முகிற் கூட்டங்கள் விதானமாக அமைந்தன. மின்னல்கள் கொடி களாக விளக்கந் தந்தன. இடிகள் முரசங்களாக ஆர்த்தன. தும்புரு நாரதர் இசை முழக்கினர். அரம்பை ஊர்வசி மேனகை திலோத்தமை முதலான தெய்வ மகளிர் நடனம் ஆடினர். பூதகணங்கள் காவற்றொழில் புரிந்தன. அந் நிலையில் தேவர்கள் பலரும் வணங்கி நிற்க இறைவன் தனக்குரிய வெள் விடைமீது இவர்ந்து, திருக்கோயிலின் ஏழு வாயில்களையும் கடந்து வீதி உலாப்போந்தான்.

தேவ சேனாபதியாம் திருமுருகப்பெருமான் மயிலின் மீது ஏறி முன்னே சென்றார். தேவேந்திரன் அயிராவதம் என்னும் யானையின்மேல் ஏறிப் பின்புறம் வந்தான். பிரமன் அன்னத்தின்மேல் அமர்ந்து வலப்புறம் வந்தான். திருமால் கருடன்மேல் அமர்ந்து இடப்பக்கம் சென்றார்

காமவேள் கொடிப்படைகள் தாங்கி யாவர்க்கும் முன்னே அணிபெறச் சென்றான். சாத்தனார் குதிரையின் மேல் வந்தார். வேழமுகத்து விநாயகரும் உலாவிற் பங்கு கொண்டு மெல்ல நடந்து வந்தார். சப்தமாதர்கள் என்னும் மங்கையர் எழுவரும் சூழ்ந்து உடன் வருகின்றனர். கொற்றவை ஆளியின் மீதமர்ந்து அழகுற வருகின்றாள். பதினெண்வகைத் தேவகணத்தவர் எல்லாப் பக்கங்களிலும் பெருந்திரளாக உடன் வந்தனர். சல்லரி, தாளம், தகுணிதம், தத்தளகம், கல்லலகு, கல்லவடம், மொந்தை, தட்டழி, சங்கம், சலஞ்சலம், தண்ணுமை, பேரி, கரதாளம், குடமுழவம், கொக்கரை, வீணை, குழல், யாழ், தடாரி, படாகம், மத்தளம், துந்துபி, முருடு முதலிய இசைக் கருவிகள் பலவும் எம்மருங்கினும் எழுந்தியங்கின. மங்கலம் பாடுவார் இறைஞ்சினர். மல்லரும் கிங்கரரும் பல்வகை ஓசைகளைச் செய்து உலாக் காண்போரை மகிழ்வித்தனர். அறுவகைப் பருவங்கள், பலவகை யோகங்கள், அரிய தவங்கள், கேசரி சாம்பவிதேனு முதலான வழிபாட்டு முத்திரைகள், மந்திரங்கள், ஊழி ஆண்டு திங்கள் கிழமை நொடி முதலான காலக்கூறுகள், மூவகைப் பண்புகள் முதலியனவற்றிற்கு முறையே உரிய ஆட்சிக் கடவுளர்களும், வாலகிலியர் என்பவர்களும் முறையே திரண்டு வந்தனர். இத்தகு சிறப்புகளுடன் இறைவன் 'கடிகமழும் பூமாண் கருங்குழலார் உள்ளம் புதிதுண்பான்' போல் திருவீதி உலாப் போந்தான்.

## குழாங்களின் நிலையும் செயலும்

ஈசன் உலா வரும் வீதிகளில் அமைந்துள்ள மாளிகைகள், அவ் ஈசனைப்போலவே கங்கையைத் தாங்கி, மறைகளை ஓம்பி, பிறையும் தூலமுங்கொண்டு, வெள்ளையணிந்து பிறங்கின. சீர்த்தி நிறைந்த இத்தகு மாடமாளிகைகளில் மலர்ப்படுக்கையே போர்க்களமாக, சிலம்புகள் பறையாக, கண்களே அம்பாக, புருவங்கள்

வில்லாக, அல்குலாகிய தேரைச் செலுத்திக் கொங்கை களாகிய குதிரைகள் பொங்கிச் சிறப்பக், கணவர்களின் உள்ளமெனும் அரியணையைக் கவர்ந்து பெறுதற் பொருட்டுக் கலவிப்போர் விளைவிக்கும் மகளிர் பலரும் சிவபெருமான் உலா வரும் படை முழக்கம் கேட்கின்றனர். உடனே, பொற்குடத்து வைத்துள்ள நீரால் முகம் விளக்கி நற்பெருங் கோலங்கள் நலமுறப் புனைந்து பேதை முதற் பேரிளம் பெண் ஈறாக யாவரும் திரண்டு நின்றனர். அவர்கள் அழகுற அணிந்திருந்த சூளிகை, சூட்டு, சுளிகை, சுட்டிகை, வாளிகை, பொற்றோடு முதலான அணி கலன்கள் ஒளியுமிழ்ந்தன. அவர்களிற் சிலர் மாளிகையின் மாடத்திற்கு ஓடிச்சென்று நின்று உலாக் கண்டனர். மாதர் சிலர் மால் உறப்பெற்று மயங்கி நின்றனர். ஒரு சிலர் 'சிவன் எமக்குத் தன் கொன்றையந்தாரைத் தாராது போயின் நள்ளிரவு எம்மை நடுக்கஞ் செய்விக்குமே' என்றனர். 'காம வேளோ இவன்?' எனச் சிலர் கலங்கினர். வேறு சிலர் 'இவன் காமவேள் அல்லன்; அவனினும் அணி நலம் சிறக்கப்பெற்ற பேரழகன்' என்பர். பின்னும் சிலர் 'இப் பேரழகன் யாவனோ' என வியந்து நிற்பர். இத்தகு காதல் மயக்கம் மீதூரப் பெற்றமையின் அணிகலன்களை முறை மறந்து அணிவார்கள். ஒரு கண்ணிற்கு மைதீட்டிப் பிறிதொரு கண்ணிற்கு மைதீட்டாமலே விரைந்தோடி வந்து தெருவை அடைவர். தமது வடிவ நிழலையே தாம் என மயங்கித் தியங்கி, அணித்தே இருக்கும் கண்ணாடியின் மேற் செம்பஞ்சுக் குழம்பினைத் தெளிப்பார்கள். தம் கையில் இருக்கும் பந்தினைக் கிளியென நினைத்து, அதற்குச் சொல் பயிற்றி நிற்பார்கள். கடவுள் மீது தங்கள் கருங்கண்ணாகிய வலையை வகையுற வீசுவார்கள். திண்ணிய நிறை என்னும் தாழ் வீழ்த்தக் கற்பு என்னும் கதவைத் திறந்துவைத்துக் காதல் மீதூர்ந்த நிலையில் கவினுறக் காட்சியளிக்கின்றனர்.

## பேதை

அவர்களுள் பேதைப் பருவத்தினள் ஒருத்தி, ஐந்து நிறைந்து ஏழு ஆண்டு எய்தப் பெறாத வயதினள். வெண் மணல் கொண்டு சிறு சோறு சமைத்து மகிழ்பவள். இடை யழகால் வரும் இறுமாப்பு எய்தாதவள். உடையழகால் பிறர் நெஞ்சை வாங்கும் நுட்பம் அறியாதவள். அன்னம் போலும் நடையால் கௌவை நோய் செய்யாதவள். தம்மைக்கண்டு வசமிழந்தவர், பிறவற்றில் வெறுப்புக் கொள்ளுமாறு செய்யும் தொழிலை அவள் கதிர் முலைகள் இன்னும் கற்றில. நோய் நோக்கம் யாரையும் செய்யாத அவள், தன் செவ்வாயினின்றும் பிறக்கும் செஞ் சொல்லாலும் பிறரை வஞ்சிக்கும் ஆற்றலிலாள். தன் கூந்தல் நன்கு நீள வளராத நிலையில், திறமை தோன்ற நீவிப் பூக்கள் முடிக்கும் திறன் அறிந்திலள். மூங்கில் நிகர்க்கும் அவள் தோள்கள் ஆடவர்க்கு அயர்வைச் செய்தில. சொல்லுவது ஒன்றும் நினைப்பது வேறொன்றும், செய்வது பிறிதொன்றுமாய் ஒரு நிலையில் நில்லாது ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றித் தாவிச் செல்கிறது அவள் மனம். திருமாலின் ஐம்படைத்தாலியினைக் கழுத்தில் பூண்டு, உடம்பிற் சந்தனச் சேறாடி, நீலச் சிற்றாடையை நெகிழ்த்துக்கட்டி, அழகிய பந்தரின்கீழ் மரப்பாவை வைத்து விளையாட்டயர்ந்து கொண்டிருந்தாள் அப்பாவை போன்ற பேதை. அதுகாலையில் அவள் தாயை 'இவளுக்குத் தந்தை யார்?' என்றொருத்தி வினவ, அதற்கு அத்தாய் 'அந்த மில்சீர் ஈசன் எரியாடி' என மறுமொழி பகன்றாள். அதுபோது, தாய் விளையாட்டாகக் கூறியதன் நுட்பமறியாது போனாள் அப்பேதைப் பெண்.

## பெதும்பை

காமநூற் கணக்கில் சில நாள்கள் பழகினவள் போன்ற உணர்வுற்று மயங்கிய ஏழு முதல் பதினொன்றுக்குள் வயது கொண்ட பேரொளிசேர் காட்சிப் பெதும்பைப் பருவத்

தினள் ஒருத்தி மயில் போன்ற சாயலும் அழகும் நிரம்பியவள். அவள் முகம் தாமரையும் திங்களும் போன்று திகழ்ந்தது. காதுகளிற் குழைகள் துலங்கின. கண்கள் கெண்டை மீன்களை நினைவூட்டின. இதழ்கள் கொவ்வைக் கனிகள் போன்று சிவந்து திகழ்ந்தன. பற்கள் முத்துக்களை நிகர்த்தனவாய் வெண்மை மிக்கு விளங்கின. புருவங்கள் வில்லைப்போன்று விளங்கின. அவள் நெற்றியில் சுட்டியும், கைகளிற் சிறு வளையும் அணிந்திருந்தாள். கால்களிற் கிண்கிணி ஒலித்தது. இடையை ஒளியும் நிறமும் தயங்கும் அழகிய ஆடை அணிசெய்தது. பொதிய மலைச் சாந்தத்தைத் தோள்களிற் பூசியிருந்தாள். கண்டார் கருத்துகளைக் கவரும் முலைகளைப் பெற்றிருந்தாள். அவளது தோற்றப் பொலிவு 'கடலில் தோன்றிய அமிழ்தமே ஒரு வடிவு கொண்டு வந்ததோ' என வியக்கவைத்தது. கூந்தலிலே மலர் மாலைகள் துலங்கின. இளங்கிளியின் சொற்களையொத்து அவள் சொற்கள் அமைந்தன. வாள் போன்ற கண்களில் வகையுற அஞ்சனம் தீட்டியிருந்தாள். கழுத்தில் மணியாரமும் விரல்களில் மோதிரமும், தோள்களிற் கடகமும் அணிந்த பெதும்பை, தன் தோழியர் சூழ, வெண் மணலைக் கொண்டு மன்மதனின் வடிவத்தை அமைத்து, அவனுக்குரிய கரும்பு வில்லையும், மலர் அம்பையும், தென்றல் தேரையும் மனம்ஒன்ற வரைந்துகொண்டிருந்தாள். அக்காலையில் சிவபெருமான் வெள்விடையேறி அவண் வர, பெதும்பைப் பருவமகள் நலம், நாண், அறிவு, நிறை முதலானவற்றைத் தோற்றாள். கைவளைகள் கழன்றோடின. கண்களாகிய வண்டுகள் இறைவனைப் பின் தொடர, ஆடை நெகிழத் தன்னை மறந்தவளாய்ச் செய்வதறியாது திகைத்து நின்றாள்.

### மங்கை

மங்கைப் பருவத்தாள் கங்கைச் சுழியனைய உந்தியாள். கைகளும், கால்களும், கொங்கைகளும் முகமும் தாமரை மலரை ஒத்திருந்தன. இடை வஞ்சிக்கொடியையும்,

தோள்கள் மூங்கிலையும், அல்குல் தேர்த்தட்டினையும், கூந்தல் அறலையும், இதழ்கள் பவளத்தையும், பற்கள் முத்துக்களையும் ஒத்துத் துலங்கின. ஆடை அணிகலன் களை அமைவுறப் பெற்றிருந்த அவள் பொற்கூட்டினின்று பூவையை யெடுத்துத் தன் மடிமீதிருத்தி, அவற்றிற்குச் சொற்களைப் பயிற்றுவித்துக் கொண்டிருந்தாள். இறைவன் அதுபோது உலா வர அவனைக் கண்டு உணர்விழந்தாள். அவன் மாலையினழகையும் வடிவின் பேரழகினையும் கண்ணாரக் கண்டு துய்த்து நெட்டுயிர்த்தாள். நாணந் துறந்து உள்ளம் உருக ஆசைப் பெரு வெள்ளத்தில் அமிழ்ந்து பெருமூச்சு விட்டு நின்றாள்.

### மடந்தை

தீந்தமிழின் தெய்வ வடிவினளாம் மடந்தை முத்தாரம் அணிந்திருந்தாள். அவள் மேனியை அணிகலன்கள் அணி செய்தன. தேனையும், மான்மதச் சாந்தையும், சந்தனத் தையும் பூசிக் கலிங்கப் பட்டாடையுடுத்து, நுதலணிகளை நெற்றியில் வகையுறப் புனைந்து தோழியர் புடைசூழ ஒரு தவிசின் மீதிருந்து யாழை யெடுத்துச் சீகாமரப் பண்ணை அமைத்து, இறைவன் மீது 'மடல் வண்ணம்' என்னும் கவிதையைப் பாடிக்கொண்டிருந்தாள். இந் நிலையில் மால் விடைமீதிவர்ந்து வரும் சிவனின் திருக் கோலம் காணுமுன் மணியோசை கேட்டாள். பின்னர் இறைவனைக் கண்ட அளவில் அவனது திருமார்பையே உற்று நோக்கினாள். கண்களில் நீர் நிறைய, நாணம் மீதூர, மனம் ஒரு நிலைப்படாமல் நிற்க, இறைவனை அணைய விரும்பித் தன் மார்பைத்தானே அணைத்துக் கொள்வாள். இறைவனின் கொன்றைப் பூந்தாரின் நிறத்தினைத் தன் மேனி நிறமாகக் கொண்டு புலம்பி நின்றாள்.

### அரிவை

அரிவைப் பருவத்தாள் திங்களும் தாரகையும் வில்லும் செழும் புயலும் ஒளி விளங்கும் செவ்வாயும் கொண்ட

முகமுடையாள். அல்குற்கு மேகலையை அணிந்து, அழகிய முலைகளின் மேற் சந்தனம் பூசியிருந்தாள். கால்களிற் பாடகமும், முன் கையிற் சூடகமும், தலையிற் பொன்னரி மாலையும், கழுத்தில் முத்துமாலைகளும் சூடித் திருமகள் போன்று பேரழகு வாய்ந்தவளாக விளங்கிய அவள் இன்னிசை வீணையை எடுத்து, இறைவன்மீது காதல் மீதூரப் பாடல்களைப் பாடினாள். இறைவன் உலா வருதலைக் கண்ட அவள் இன்னிசையும், இற்பிறப்பும், இருந்தமிழும் மன்னிய வீணையும் கைவிட்டு எழுந்தாள். இறைவனின் முகத்தில் தன் கண் இணைகளைச் செலுத்திப் பார்த்தாள். கூந்தலை ஒருபோது அவிழ்ப்பாள்; பின் முடிப்பாள். நெகிழும் ஆடையைத் திருத்தி, கச்சினைக் கட்டி, மாளாக் காதலை மன்றாடிமீது கொண்ட காரணத்தால் மயங்கி நிற்பாள். தன் அங்கை வளை கழலாமல் காத்த அவள், தன் நெகிழும் ஆடையைக் காக்க மறுத்தாள். இவ்வாற்றால் நலமெல்லாம் தோற்று அந் நங்கை நின்றாள்.

## தெரிவை

'ஆரா அமுதம் அவயவம் பெற்றனைய சீரார் தெரிவைப் பிராயத்தாள்' மயக்கம் தராத மழலைச் சொற்களால் இருள் நீங்கிய வைகறைப் போதினை ஒத்திருந்தாள். இளைஞர்க்குக் காதல் வெம்மையை விளைவிப்பதனால், உச்சிப் போதினை ஒத்தவள். முக மண்டலம் திங்கள் போன்றிருத்தலின் நிலவொளி வீசும் இராக்காலம் எனத் தக்கவள். நீண்ட கண்களும் நுணுகிய இடையும் கார் காலத்தினை நிகர்த்திருந்தன. மாந்தளிர் போலும் மேனியும் முருக்க மலர் போன்ற இதழும் இளவேனிலின் அழகை நிகர்த்திருந்தன. இவள் தோழி யருடன் அமர்ந்து வெள்ளிப் பலகையில் பொன்கவற்றுக் காய்களால் மணிச்சூது ஆடிக்கொண்டிருந்தாள். அது போது உலா வந்த இறைவன் தன் எழிற்கோலத்தைக்

கண்ட அவள் தன் பெண்மைச் சிறப்புகளை யெல்லாம் தோற்றொழிந்தாள்.

## பேரிளம் பெண்

பெண்ணரசாய்த் தோன்றிய பெருமையினளாகிய இவள் ஐம்புல இன்பங்களும் ஒருங்கே தரும் இயல்பிற் சிறந்து நின்றாள். கண்ணாடி மண்டிலம் போல ஒளிவிட்டு இலங்கும் அழகிய நகங்களையுடைய மெல்லிய விரல்களையும், கொடிபோல் நுடங்கும் இடையினையும் கொண்டு திருத்தமுறத் திகழ்ந்தாள். அவள் பொற்செப்புகளிரண்டும், சுணங்கும் திதலையும் பரவிக் கண்டார்க்கெல்லாம் அணங்கும் அமுதமுமாகத் திகழ்ந்தன. கை மலர்கள் காந்த மலர்களைப் பழித்தன. காமவேளின் காதல் மனைவியாகிய இரதி தேவியினை ஒத்து அவள் பேரழகியாகத் திகழ்ந்தாள். முத்தமும் தேனும் பொதிந்து முனிவரையும் சித்தம் திறைகொள்ளும் திறனுடையாள். 'சீதாரி' என்னும் நறுமணப் பொருளால் அவள் தன் மெய்ம்முழுதும் மணமூட்டிக் கொண்டிருந்தாள். தோழியர் அவளைப் பலபடப் பாராட்டினர். அழகிய வெண்பாவினை விரித்துரைத்துப் பாடிக்கொண்டிருக்கும் அளவில் இறைவன் உலா வர, அவனைக் கண்டு 'அண்ணலே வந்தாய்; வளை கவர்ந்தாய்; மாலும் அருந்துயரும் தந்தாய்; இது தகவோ?' என்று புலம்பி நின்றாள்.

இவ்வாறாகச் சிவபெருமான் உலாப் போந்த தெருக்களிற் பெண்களின் ஆரவாரம் பெரிதாக இருந்தது.

# நூல் நயம்

## திருமுறைப் பயிற்சி

ஆதியும் அந்தமுமில்லாத ஆண்டவனாம் சிவபிரானின் ஒப்புயர்வற்ற சிறப்புகளைப் பலவாறாக எட்டுக் கண்ணி களில் நூலின் தொடக்கத்தே ஆசிரியர் குறிப்பிடும் நயம் அறிந்து இன்புறத்தக்கது. 'பிறவாதே தோன்றினான், காணாதே காண்பான், துறவாதே யாக்கை துறந்தான், முறைமையால் ஆழாதே ஆழ்ந்தான், அகலா தகலியான், ஊழால் உயராதே ஓங்கினான், சூழொளி நூல் ஓதா துணர்ந்தான்' முதலிய தொடர்கள் நுட்பஞ் செறிந்தன வாகும். இங்குக் குறிப்பிடப் பெறும் கருத்துகள் தேவார திருவாசகங்களின் பிழிவெனலாம்.

> **எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்**
> **அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான்**

என்ற தொடர்,

> **ஆர்உருவ உள்குவார் உள்ளத்துள்ளே**
> **அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்தோன்றும்**

என்னும் திராவிட சுருதியை ஒத்துள்ளன. அடுத்துச் சீரார் சிவலோகத்தை நம் மனக்கண் முன்னே ஆசிரியர் அழகுறக் கொண்டு வந்து நிறுத்திவிடுகின்றார்.

## வருணனைத் திறன்

உலாக் காட்சிகளும், மகளிரின் பருவ வருணனைகளும் மனங்கொள்ளும் வகையில் உள்ளன. சிவபெருமான் உலா வரும் தெருக்களில் உள்ள மாட மாளிகைகள் சிவ பெருமானின் வடிவழகையே நினைவூட்டின என ஆசிரியர் கூறியுள்ள திறம் அவர்தம் கூர்த்த மதியினைப் புலப் படுத்தும்:

வானநீர் தாங்கி மறைஓம்பி வான்பிறையோடு
ஊனமில் சூலம் உடையவாய்—ஈனமிலா
வெள்ளை அணிதலால் வேழத் துரிபோர்த்த
வள்ளலே போலும் வடிவுடைய—ஒள்ளிய மாடம்

என்னும் பகுதி காண்க.

அடுத்து, மாளிகைகளில் வாழும் மகளிர் நடாத்தும் கலவிப்போரினை ஆசிரியர் கவினுறக் கிளத்தியுள்ளார்:

மாட நடுவின் மலரார் அமளியே
கூடிய போர்க்கள மாக்குறித்துக்—கேடில்
சிலம்பு பறையாகச் சேயரிக்கண் அம்பா
விலங்கு கொடும்புருவம் வில்லா—நலந்திகழும்
கூழைபின் தாழ வளையார்ப்பக் கைபோந்து
கேழ்கிளரும் அல்குலாம் தேர் உந்திச்—சூழ்ஒளிய
கொங்கைமாப் பொங்கக் கொழுநர் மனங்கவர
அங்கம் பொருதசைந்த ஆயிழையார்

என்ற வருணனை உருவக நலஞ்செறிந்து காணப்படுகின்றது. இப்பகுதியில் சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவர் பெரிதும் ஈடுபட்டிருக்கவேண்டும் போலும்!

சில்லரிச் சிலம்பின் வள்வார்ச்
சிறுபறை கறங்கச் செம்பொன்
அல்குற்றேர் அணிந்து கொம்மை
முலையெனும் புரவி பூட்டி
நல்லெழில் நெடுங்கண் அம்பாப்
புருவவில் உருவக் கோலிச்
செல்வப்போர்க் காமன் சேனை
செம்மல்போல் எழுந்த தன்றே

என்ற பாடல் மேற்கூறப்பட்ட பகுதியுடன் ஒத்திருக்கக் காணலாம். பெதும்பைப் பருவப்பெண் இயல்பினை,

**தாமரை ஒன்றின் இரண்டு குழை இரண்டு**
**காமருவு கெண்டை ஓர் செந்தொண்டை — தூமருவும்**
**முத்தம் முரிவெஞ்சிலை சுட்டி செம்பவளம்**
**வைத்தது போலும் மதிமுகத்தாள்**

என்றும், மடந்தைப் பருவ மகளின் இயல்பினை,

**அங்கை கமலம் அடிகமலம் மான்நோக்கி**
**கொங்கை கமலம் முகம் கமலம்**

என்றும், மங்கைப் பருவ மகளின் எழிலை,

**ஈசன் சிலையும் எழில்வான் பவளமும்**
**சேய்வலங்கை வேலும் திரள்முத்தும்—பாசிலைய**
**வஞ்சியும் வேயும் வளர்தா மரைமொட்டும்**
**மஞ்சில்வரும் மாமதிபோல் மண்டிலமும்—எஞ்சாப்**
**புருவமும் செவ்வாயும் கண்ணும் எயிறும்**
**உருவ நுசுப்பும் மென்தோளும்—மருவினிய**
**கொங்கையும் வாண்முகமு மாக்கொண்டாள்**

என்றும் கூறியுள்ள திறம் உள்ளங் கொள்ளைகொள்ளும் வகையில் அமைந்திருக்கக் காணலாம்.

அரிவைப் பருவத்தினளாகிய பெண்ணின் அழகை,

**திங்களும் தாரகையும் வில்லும் செழும்புயலும்**
**தங்கொளிசேர் செவ்வாயும் உண்மையாற்—பொங்**
**கொளிசேர்**
**மின்னார்வான் காட்டும் முகவொளியாள்**

என்றும், தெரிவைப் பருவத்தினள் அழகை 'வைகறையும் நண்பகலும் அந்தியும் இரவும் கார்காலமும் இளவேனிலும் போன்ற இனிய பண்புகள் பலவும் சிறக்கப் பெற்றவள்' என்னும் கருத்தமைய,

**மருள்ஓசை இல்மழலை வாய்ச்சொலால் என்றும்**
**இருள்தீர் புலரியே ஒப்பாள்—அருளாலே**

வெப்பம் இளையவர்கட்கு ஆக்குதலால் உச்சியோடு
ஒப்பமையக் கொள்ளும் உருவத்தாள்—வெப்பந்தீர்ந்து
அந்தளிர்போற் சேவடியும் அங்கையும் செம்மையால்
அந்திவான் காட்டும் அழகினாள்—அந்தமில்
சீரார்முகம் மதியம் ஆதலாற் சேயிழையாள்
ஏரார் இரவின் எழில்கொண்டாள்—சீராரும்
கண்ணார் பயோதரமும் நுண்ணிடையும் உண்மையால்
தண்இளங் காரின் சவிகொண்டாள்—வண்ணஞ்சேர்
மாந்தளிர் மேனி முருக்கிதழ்வாய் ஆதலால்
வாய்த்த இளவேனில் வண்மையாள்

என்று வருணித்திருக்கும் திறம் சேரமான் பெருமாள் நாயனாரின் கூரிய மதிநலத்தினைப் புலப்படுத்தும். இப்பகுதி காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந் தாதிப் பாடலோடும், இதே ஆசிரியரின் பொன்வண்ணத் தந்தாதிப் பாடலோடும் ஒப்பிட்டு நோக்கி உணர்ந்து மகிழ்தற்குரியதாகும்.

## திருக்குறட் பயிற்சி

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு[43]

என்னும் குறளைப் பொன்னேபோல் போற்றி அரிவைப் பருவத்தினளின் இடையழகினைப் புகழும்போது குறிப் பிட்டுள்ளார். இக் குறட் கருத்தினையே பின்பற்றித் திருத் தக்க தேவர்,

செல்வர்க்கே சிறப்புச் செய்யும்
திருந்துநீர் மாந்தர் போல
அல்குற்கும் முலைக்கும் ஈந்தார்
அணிகலம் ஆய எல்லாம்

43. திருக்குறள்; பொருள் செயல் வகை : 2.

நல்கூர்ந்தார்க் கில்லை சுற்றம்
என்றுநுண் நுசுப்பு நைய
ஒல்கிப்போய் மாடம் சேர்ந்தார்
ஒருதடங் குடங்கைக் கண்ணார்[44]

என்று தம் காப்பியத்தில் அணிபெறக் கையாண்டுள்ளார். இப்பகுதி கற்பனை நலமும் கருத்து வளமும் மிளிர்ந்து காணப்படுகின்றது.

அடுத்து, பேரிளம்பெண்ணை வருணிக்கும் பொழுது

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள[45]

என்ற திருக்குறட் தொடரைக் கையாண்டு, ஐம்புல இன்பங்களும் ஒருசேரத் தருபவள் பேரிளம் பெண் என்பதைப் புலப்படுத்தியுள்ளார். இவையன்றியும் மேலும் பல திருக்குறள்களின் எதிரொலியினையும் இந்நூலுட் காணலாம். மேலும் எட்டுத்தொகை நூல்களின் பாக்கள் சிலவற்றின் கருத்தினை ஒத்தனவாகச் சில தொடர்கள் இவ்வுலாவில் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

## சொல் நயம்

மடந்தைப் பருவத்தாள் காமர இசையெழுப்பி யாழ் வாசித்தலைச் சொல்ல வந்த ஆசிரியர்,

விடவண்ணக் கண்டத்து வேதியன்மேல் இட்ட
மடல்வண்ணம் பாடும் பொழுதீண்டு—அடல்வல்ல
வேல்வல்லான் வில்வல்லான் மெல்லியலார்க்
கெஞ்ஞான்றும்
மால்வல்லான் ஊர்கின்ற மால்விடை

44. சீவக சிந்தாமணி ; இலக்கணையார் இலம்பகம் : 158.
45. திருக்குறள்; புணர்ச்சி மகிழ்தல் : 1.

*எனக் கூறும் பகுதியில் வந்த சொற்களையே மீட்டும் வரச் செய்து சொன்னயமும் ஒலி நயமும் தோன்றச் செய்கிறார்.*

**..............................மெல்லியலாள்**
**தன்னுருவம் பூங்கொன்றைத் தார்கொள்ளத்தான் கொன்றைப்**
**பொன்னுருவங் கொண்டு புலம்புற்றாள்**

*என்ற பகுதியில் அவலத்தினும் நயந்தோற்றுதல் காண்க.*

*அரிவைப் பருவத்தினளின் மெய்ப்பாடுகளாகக் காணும் பின்வரும் கண்ணிகள்,*

**கூந்தல் அவிழ்க்கும் முடிக்குங் கலைதிருத்தும்**
**சாந்தந் திமிரும் முலைஆர்க்கும்—பூந்துகிலைச்**
**சூழும் அவிழ்க்குந் தொழும் அழுஞ்—சோர்துயருற்**
**றாழும் அழுந்தும் அயாவுயிர்க்கும்—சூழொளிய**
**அங்கை வளைதொழுது காத்தாள் கலைகாவாள்**
**நங்கை இவளும் நலந்தோற்றாள்**

*ஆசிரியர் பிறர் தம் மனவியல்புகளை உள்ளபடியே படம்பிடித்துக் காட்டுதலில் வல்லவர் என்பதனை எடுத்து மொழியும்.*

*நூலின் முடிவும் சிறப்பான முறையில் அமைந்திருக்கக் காணலாம்.*

**பண்ணாரும் இன்சொற் பணைப்பெருந்தோட் செந்துவர்வாய்ப்**
**பெண்ணார வாரம் பெரிதன்றே — விண்ஓங்கி**
**மஞ்சடையும் நீள்குடுமி வாள்நிலா வீற்றிருந்த**
**செஞ்சடையான் போந்த தெரு.**

## *இசைச் செய்தி*

*ஆசிரியர் தாம் வாழ்ந்த காலத்திய இசை பற்றிய செய்திகளையும் ஒருவாறு கோடிட்டுக் காட்டியுள்ளார். வீணையில் சீகாமரப் பண்ணை எழுப்பும் மகளிரைக் குறிப்பிட்டுள்ளார். உலாவின்போது முழங்கிய வாச்சியங்களாக ஆசிரியர் கூறும் பல்வேறு வாச்சியங்கள்,*

துத்தம் கைக்கிளை விளரிதாரம்
உழைஇளி யோசைபண் கெழுமப் பாடிச்
சச்சரி கொக்கரை தக்கை யோடு
தகுணிதம் துந்துபி தாளம் வீணை
மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்
தமருகம் குடமுழா மொந்தை வாசித்து
அத்தனை விரவினோ டாடும் எங்கள்
அப்பன் இடம்திரு வாலங்காடே[46]

எனவரும் காரைக்காலம்மையார் பாடலை அடியொற்றி யனவாக உள்ளன.

### மொழி ஈடுபாடு

பக்தி நலங்கெழுமிய இந் நூலில், ஆசிரியரின் தமிழ்ப் பற்றினையும் காணலாம். மடந்தைப் பருவத்தாளை ஆசிரியர் 'தீந்தமிழின் தெய்வ வடிவாள்' என்ற தொடரால் குறிப்பிட்டுள்ளார்.

### பக்தி நலம்

பேரிளம் பெண்,

கண் அவனை அல்லது காணா செவிஅவனது
எண்ணருஞ்சீர் அல்லது இசைகேளா — அண்ணல்
கழலடி அல்லது கைதொழா அஃதான்று
அழல் அங்கைக் கொண்டான் மாட்டன்பு

என்னும் வெண்பாவினை விரித்துரைத்துப் பாடுவதாக அமைத்திருப்பது ஆசிரியரின் அளப்பரிய பக்தி நலனைப் பறைசாற்றுவதாகும். எனவேதான் இவ்வுலா பொருத் தமுற 'ஞானஉலா' எனவும் வழங்கப்படுகிறது.

### நூலாசிரியர்

திருக்கைலாய ஞான உலாவின் ஆசிரியர் சேரமான் பெருமாள் ஆவர். சங்ககாலத்தில் சேரர் மரபு, உதியன் மரபு, இரும்பொறை மரபு என இரு பிரிவுகளாக விளங்கியது. இவர் செங்கோற் பொறையன் என்னும்

46. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் : 9.

மன்னர்க்குப் பின் ஆண்டவர். இவர் உதியன் மரபைச் சேர்ந்தவர் என்பர். இவர் இயற்பெயர் பெருமாக்கோதையார் என்பதாகும். சேரர் தலைநகராகிய வஞ்சிக்கு அண்மையில் விளங்கிய கடற்கரைப்பட்டினமாகிய மகோதை எனப்பட்ட கொடுங்கோளூரில் அமைந்திருந்த திருவஞ்சைக்களம் என்னும் சிவபெருமான் திருக்கோயிலில் இறைபணிகள் இனிதுற ஆற்றிவந்தார்.

"அளவில் பெருமை அகிலயோனி ஆளும் கழறிற்றறிந்து அவற்றின் உளம் மன்னிய* உறுதுயரம் ஒன்றும் ஒழியா வகை அகற்றிக் களவு கொலைகள் முதலான கடிந்து" விளங்கிய காரணத்தினால் இவர் 'கழறிற்றறிவார்' என்னும் சிறப்புப் பெயரினையும் பெற்றார். இவர் சிவனடியார்களிடத்தே பெரும் பக்தி கொண்டவர். ஒரு முறை நகர்வலம் வந்தபோது, உவர்மண் பொதி சுமந்து மழையில் நனைந்ததனால் உடம்பு வெளுத்து நடந்து வந்து கொண்டிருந்த வண்ணான் ஒருவனைக் கண்டு, 'சிவனடியார் வேடம்' என நினைந்து, தான் ஏறிவந்த யானையினின்றும் இழிந்து, அவன் அடிவணங்கி நின்றார். இதனைத் தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமான்,

> **சேரர் பெருமான் தொழக்கண்டு**
> **சிந்தை கலங்கி முன்வணங்கி**
> **யாரென் றடியேன் தனைக்கொண்டது**
> **அடியேன் அடிவண் ணான்என்னச்**
> **சேரர் பிரானும் அடிச்சேரன்**
> **அடியேன் என்று திருநீற்றின்**
> **வார வேடம் நினைப்பித்தீர்**
> **வருந்தா தேகும் எனமொழிந்தார்**[47]

என்று தம் பெரிய புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

தன்னை வழிபட்ட இசை பாடும் பாணர் குலத்தவராய யாணபத்திரருக்கு, 'மதிமலி புரிசை மாடக் கூடல்' என்று தொடங்கும் திருமுகப் பாசுரம் ஒன்று எழுதித் தந்து,

---

47. பெரிய புராணம்: கழறிற்றறிவார் நாயனார் : 19.

அதனைச் சேரமான் பெருமாளிடத்துக் கொடுத்துப் பரிசில் பெற்றுக்கொள்ளுமாறு இறைவனே பாணபத்திரரைப் பணித்தார் என்பதும் வரலாற்று வழி அறியக் கிடக்கிறது.

நம்பியாரூரராம் சுந்தரமூர்த்தி நாயனாரோடு இவர் நட்புக்கொண்டு பல திருத்தலங்கட்கும் அவரோடு சென்று வழிபட்டு வந்தார் என்பதும் பெரிய புராணங் கொண்டு அறியலாம்.

இவர் போர் விரும்பாத அமைதிப் போக்கினர் என்பதை இவர் இயற்றிய பொன்வண்ணத் தந்தாதி பாடல் ஒன்று [48] கொண்டு நன்குணரலாம்.

இவர் சுந்தரமூர்த்தி நாயனாரோடு ஒரே காலத்தில் வாழ்ந்தவராக வரலாற்றின்வழி நன்கு அறியப்படுகின்ற காரணத்தால் இவர் காலம் எட்டாம் நூற்றாண்டென்பர். கல்வெட்டு ஆராய்ச்சி அறிஞராம் காலஞ்சென்ற திரு. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் அவர்களும்,[49] மகாவித்துவான்திரு. மு. இராகவையங்கார் அவர்களும் [50] இக் கருத்தினராக இருக்க, தஞ்சை திரு. சீனிவாசப்பிள்ளை அவர்களும், [51] திரு. நாராயண ஐயர் அவர்களும் [52] சேரமான் பெருமாள் நாயனார் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டெனக் குறிப்பிடுவர்.

உலாக்களில் காலத்தால் முற்பட்ட திருக்கைலாய ஞானவுலா இலக்கியச் சிறப்பும் பக்திநலமும் பாங்குறக் கொண்டு மிளிர்கின்றது.

---

48. பொன்வண்ணத் தந்தாதி : 21.
49. தமிழ்ப்பொழில்; Vol. II; பக்கம் : 209.
50. சாசனத் தமிழ்க் கவி சரிதம்; பக்கம் 13.
51. தமிழ் வரலாறு; Vol. II பக்கம் : 64.
52. Origin and Early History of Saivism in South India, P. 445.

# 4. சுந்தரமூர்த்தி நாயனாரின் தேவாரப் பதிகங்கள்

இவர் நடுநாட்டில் திருமுனைப்பாடி நாட்டைச் சார்ந்த திருநாவலூர் என்னும் ஊரில் ஆதிசைவ அந்தணர் குலத்தைச் சார்ந்த சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் பிறந்தவர் ஆவர். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் நம்பியாரூரர் என்பதாகும். இவருக்கு வன்றொண்டர். தம்பிரான் தோழர் முதலிய பெயர்களும் உண்டு. திருவாரூரில் பரத்தையர் குடியில் பிறந்த பரவையாரையும், திருவொற்றியூரில் வேளாள மரபிற் பிறந்த சங்கிலியாரையும் மணந்தவர். சேரநாட்டரசர் சேரமான் பெருமான் இவருக்கு உற்ற நண்பர் ஆவர்.

திருவொற்றியூரைப் பிரிவதில்லை என்று சங்கிலியாரிடம் சூள் உரைத்துப் பின் அச்சூள் பொய்த்துப் போயினமையின் திருவொற்றியூரை விட்டு நீங்கிய அளவில் இவர் இரு கண்களும் போயின. காஞ்சியம்பதியில் இறைவனைப் பாடி ஒரு கண்ணும், திருவாரூரில் மறு கண்ணும் பார்வை பெற்றனர். வெள்ளப் பெருக்கெடுத்த காவிரியை வழிவிடச் செய்தது, திருப்புக்கொளியூர் அவிநாசியில் முதலை யுண்ட பாலனை யெழுப்பியது முதலியன இவர்தம் பாடலால் நிகழ்த்திய அற்புதச் செயல்களாகும்.

இவர் பாடல்கள் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஏழாந் திருமுறையைச் சார்ந்ததாகும். இவர் பாடல்கள் நயம் நிறைந்தனவாகும். இவர் வாழ்ந்த காலம் எட்டாம் நூற்றாண்டு என்று அறிஞர்கள் ஆய்ந்து முடிவு கண்டுள்ளனர்.

## திருவஞ்சைக் களம்

### பதிக வரலாறு

சுந்தரமூர்த்தி நாயனார் திருப்புக்கொளியூர் அவிநாயில் முதலையுண்ட பாலனை அழைத்துத் தந்து மலைநாடு சென்றார். சேரமான் பெருமாள் சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளும் செய்தி கேட்டு மனமகிழ்ந்து நகரை அலங்கரித்து அமைச்சர்கள் புடைசூழச் சென்று மலை நாட்டெல்லையில் எதிர்கொண்டு வணங்கி யானைமேல் அழைத்து வந்து வஞ்சிமாநகரில் அவருடன் தங்கி மகிழ்வுடனிருந்தனர். பின்னர் அங்கிருந்து பல தலங்களையும் வணங்கி மகோதையை அடைந்தனர். அந்நகரில் உள்ள 'திருவஞ்சைக் களம்' என்னும் திருக்கோயிலை வலம் வந்து இறைவனைப் பணிந்து இவ்வுலகில் பாசத்தால் கட்டப் பட்ட மனைவாழ்க்கையை அறுத்திட்டுத் திருவடியில் சேர்த் தருளவேண்டும் என்னும் குறிப்போடு பாடியருளியது இத் திருப்பதிகம்.[1]

### இப்பதிகத்தின் குறிப்பு

இத் திருப்பதிகம், சிவபெருமான், உலகத்தவர் வெறுக்கும் கோலங்கள் பலவற்றை விரும்பி மேற்கொள்ளு தற்குக் காரணம் என்ன என்று வினவும் முகத்தால், அவை யனைத்தும் அவன்தன் பொருட்டன்றி, உயிர்களின் பாசத்தை அறுத்தற்பொருட்டே கொள்கின்றனவாதலைப் பெற வைத்து, தமது வாழ்க்கையாகிய பாசத்தையும் அறுத்திட வேண்டும் என்னும் குறிப்புத் தோன்ற அருளிச் செய்ததாகும்.

### சிவபெருமானின் வடிவு

தலைக்குத் தலைமாலையை அணிந்துள்ளான். சடையின்மேல் கங்கையென்னும் ஆற்றைத் தாங்கியுள்ளான்.

1. பெரிய புராணம்; வெள்ளானைச் சருக்கம்: 14-30.

கொல்லும் தன்மையுடைய புலியினது தோலை உரித்தெடுத்து அரையில் உடுத்தியுள்ளான். அவ் வுடையின் மேல், சினத்தையுடைய பாம்பைக் கச்சாகக் கட்டியுள்ளான்.

விரும்பத்தகாத பாம்பைப் பிடித்து ஆட்டுகின்றான்; பாம்பைப் பூணாகப் பூணுகின்றான். சடையின்கண் பிறையைச் சூடியுள்ளான். சாம்பலை உடம்பு முழுதும் பூசிக் கொண்டுள்ளான். இழிந்த எருதினையே ஊர்தியாகக் கொண்டுள்ளான்.

மாலைக் காலத்தில் தோன்றும் செவ்வானம்போலும் அழகிய திருமேனியை உடையவன்.

## சிவபெருமானின் செயல்

இராப்பொழுதில் புறங்காட்டில் எரியில் நின்று ஆடுகிறான்.

இலங்கைக்கு அரசனாகிய இராவணனை அவனது பத்துத் தலைகளோடு பல தோள்களும் அற்று விழுவண போலும்படி நெரித்தான். பாற்கடலில் தோன்றிய நஞ்சினை அமுதமாக உண்டு, கண்டம் (கழுத்து) கறுப்பானான். பிரமன் தலைகள் ஐந்தனுள் ஒன்றை அறுத்தான்.

## சிவனை நம்பியாரூரர் செப்பிடும் வகை

சிவனை நினைந்து துயிலுணர்வார்க்கு நெல்லிக்கனி போன்றவன்; முனிவர்கட்கெல்லாம் முனிவன்; தேவர்கட்கெல்லாம் தேவன்.

உலகத்தை இயக்குதலில் எழுதப்படும் எழுத்துகளுக்கு உயிரெழுத்துப் போன்றவன்; இல்லாதவனாயும் உள்ளவனாகவும் விளங்குகின்றான். உயிர்கட்கு உதவுதலில் தளிர்க்கும் பயிருக்கு மேகம் போன்றவன். அடியார்களுக்கு அணியனாய் (நெருக்கமாய்) இருக்கின்ற காரணத்தால் அவரோடு ஒரு குடிப் பிறப்பினன் போன்றவன். எப்

பொருளின் ஆக்கத்திற்கும் அறிவிற்கும் காரணன். பொருள்களின் ஆக்கத்திற்குக் காரணங்களாகப் பிற பிறவற்றைச் சொல்லுவாரது சொற்பொருள்களும் அவனே; புலன் உணர்விற்குக் காரணமான நாக்கு, செவி, கண் என்பனவும் சிவனே.

## சிவனை வணங்கினால் சித்திக்கும் நிலைகள்

சிவனை உள்ளந் தெளியப் பெற்றால் சிறியாரும் பெரியாராவர். விரைந்து வந்து சிவனை வணங்குபவர் இறத்தலும் பிறத்தலும் இலராவர்.

மத்தளமும் வேய்ங்குழலும், 'மந்தம்' என்னும் அளவாக இயம்பப்படுகின்ற, நன்மை வளர்கின்ற திருவாரூரில் உள்ளார்க்குத் தலைவனாகிய நம்பியாரூரன் போற்றிய, இசைநலம் மிக்க, தமிழ்ச் சொற்கள் என்னும் மலர்களால் இயன்ற இம்மாலைகளை வாயிலாகக் கொண்டு அப்பெருமானது திருவடிகளில் பணியவல்லவர், நிலையாமை நீங்கப்பெற்று, நிலைபேறுடையவராவர்.

## நம்பியாரூரர் வாழ்வு

நம்பியாரூரர் தனது மனைவாழ்க்கையை வெறுத்து விட்டதாகவும், உடம்பாலும் அவ் மனைவாழ்க்கையைத் துறந்துவிட்டதாகவும் குறிப்பிடுகின்றார்.

ஒவ்வொரு பாடலிலும் அவர் 'தந்தையே!' எனச் சிவனை விளித்து அவர் வடிவழகினையும் அருட்செயலினையும் விதந்து பாடிச் சிவனின் திருவடிப் பேற்றினை இரக்கின்றார்.

## மகோதையும் திருவஞ்சைக்களமும் குறிக்கப்படுமாறு

மலைக்கு நிகராகிய தன்மையால் தம்மில் ஒப்பனவாகிய வலிய அலைகள் வலம்புரிச் சங்குகளைப் பற்றி ஈர்த்து வந்து எறிந்து முழங்கி மோதுகின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய, 'மகோதை' என்னும்

நகரத்தின்கண்ணுள்ள, அழகு நிறைந்த சோலைகளை யுடையது 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயில்.

வலிய அலைகள் தம் வடிவத்தைச் சுருளாகச் செய்து ஓடிவந்து மோதுதலினால், கரு வளர்கின்ற சங்குகள் வாய் திறந்து முத்துகளை ஈன, இங்ஙனம் அலைத்து முழங்கு கின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய, 'மகோதை' என்னும் நகரின் கண் உள்ள அழகு நிறைந்த சோலைகளையுடையது திருவஞ்சைக்களம் என்னும் திருக் கோயில்.

மூங்கில்களையுடைய பெரிய மலைகள் போலும் அலைகள் இடைவிடாது மோதுகின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய அழகு நிறைந்த சோலைகளை யுடையது திருவஞ்சைக்களம் என்னும் திருக்கோயில்.

துளிகளைத் தூற்றுதலால் மேகத்திற்கு நிகராகும் தன்மையில் தம்முள் ஒப்பனவாகிய வலிய அலைகள், பல பொருள்களை ஈர்த்துவந்து மோதி முழங்கி, வலம்புரிச் சங்கின் இனிய ஓசையால் யாவரையும் தன்பால் வருவிக் கின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் தலத்தில் உள்ள, அழகுநிறைந்த சோலைகளை யுடையது திருவஞ்சைக்களம்.

பொன், மணி முதலிய செல்வங்களைத் தந்த மரக் கலங்களினது செலவினையுடைய மூழ்குதற்குரிய கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் நகரின்கண் உள்ள அழகு நிறைந்த சோலைகளையுடையது திருவஞ்சைக்களம் என்னும் திருக்கோயில்.

வலிமையோடு, 'சங்கு, சிப்பி, முத்து' என்பவற்றைக் கொணர்ந்து வீசி, வலம்புரிச்சங்கை மேலேகொண்டு முழங்கி, ஆர்ப்பரவத்தை யுடையதாகின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் நகரத்தின்கண் உள்ள அழகு நிறைந்த சோலைகளை யுடையது திருவஞ்சைக்களம் என்னும் திருக்கோயில்.

விரும்புகின்ற நுகர்ச்சிப் பொருள்கள் எத்துணை வகையினவற்றையும் மிகுதியாக மரக்கலங்களில் ஏற்றி, நடுவண் செல்லச் செலுத்த ஆரவாரிக்கின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் நகரின்கண் உள்ள அழகு நிறைந்த சோலைகளையுடையது திருவஞ்சைக்களம் என்னும் திருகோயில்.

கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் நகரின்கண் உள்ள அழகுநிறைந்த சோலைகளையுடையது திருவனஞ்சக்களம் என்னும் திருக்கோயில்.

முத்துகள் முதலியவற்றை வடித்தெடுத்துச் சேர்ப்பன போல, சில வலிய அலைகள் அவைகளை ஈர்த்துவந்து வீசி, வலம்புரிச் சங்கினால், கரையிலுள்ளாரைத் தாக்குகின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் நகரின்கண் உள்ள அழகிய சோலைகளையுடையது திருவஞ்சைக்களம் என்னும் திருக்கோயில்.

அழகிய குளிர்ந்த கரையின்கண்ணதாகிய மகோதை என்னும் நகரின்கண் உள்ளது திருவஞ்சைக்களம் என்னும் திருக்கோயில்.

## முடிப்பது கங்கை

சேரர் பெருமானுடன் சுந்தரர், ஐயாற்றிறைவரைத் தொழுது பல தலங்களையும் வணங்கிக்கொண்டு, கொங்கு நாட்டைக் கடந்து மலைநாடு சென்று சேரமான் பெருமாளது தலைநகரமாகிய கொடுங்கோளூரையடைந்து அவருடன் திருவஞ்சைக்களத்து இறைவரை வணங்கிப் பாடியருளியது இப் பதிகம் (முடிப்பது கங்கை).

திருவஞ்சைக்களத்துப் பெருமான் திருமுன்பில் அருளிச் செய்தது. இது சிவபெருமானது தன்மையை ஆராயும் முறையில் அருளிச் செய்தது.

## சிவபெருமானைப் பற்றிய செய்திகள்

சிவன் தலையிற் சூடுவது கங்கையையும் சந்திரனையும். திருக்கைகளால் பாம்பைப் பிடித்துள்ளான். மலைமகளைத்

தன் உடம்பில் ஒரு கூறாகக் கொண்டுள்ளான். சுடலைச் சாம்பலைத் தன் திருமேனியில் பூசியுள்ளான். சுடுகாட்டை அரங்காகக் கொண்டு பேயோடு பித்தனாக ஆடுகின்றான். அவனுடைய சடைமுடியில் பாம்புடன் வன்னி, ஊமத்தை, பிறை முதலியவைகளைத் தரித்துள்ளான். கொன்றை மாலை அவனுக்குரிய மாலையாகும். மதயானையினின்றும் உரித்த தோலை உடையாக உடுத்துள்ளான். அங்கையில் நெருப்பை ஏந்தியுள்ளான். முல்லை நிலத்தில் உள்ள வெள்ளை எருதினை ஊர்தியாகக் கொண்டுள்ளான். திரிபுரத்தை எரித்த தேவதேவனாக விளங்குகின்றான். மாணிக்கம் போன்ற அவன், கறுப்பு நிறத்தையுடைய கண்டத்தை யுடையவன்.

தம்மால் இயன்றவைகளைச் சொல்லிப் புகழ்ந்து நிற்கும் அடியவர் துன்பங்களைக் களைகின்றான். திருமாலும், பிரமனும், ஏன் யாராலும் அறியப்படாத முதலும் முடிவும் உடையவன். அன்பு செய்யும் அடியார்க்குத் தலைவனாகிய அவனுக்கு ஊர் என ஒன்றில்லை; உலக முழுதுமே அவனுக்கு ஊர்களாகும். அதே போன்று அவனுக்குப் பெயரும் ஒன்றல்ல; ஓர் ஆயிரமாகும்.

## உயரிய கருத்து

இவ்வுலகில் உள்ள உயிர்களைக் கொல்லுதல் நன்னெறிக்குத் தடை என்பதனைச் சுந்தரர் ஓரிடத்தில் வற்புறுத்துகின்றார்.

## சமணர்களைப் பற்றிய குறிப்பு

சமணர்களைத் தாக்கி ஓரிடத்தில் சுந்தரர் குறிப்பிடுகின்றார். அவர்கள் கரிய மனத்தையுடையவர்கள் என்றும், கஞ்சியைக் குடிக்கின்றவர்கள் என்றும், கழுமரங்கள் போலத் தோன்றுகின்றவர்கள் என்றும், அவர்கள் சிவனை இகழ்ந்து பேசுகின்றனர் என்றும் சுந்தரர் குறிப்பிடுகின்றார்.

## பிற கடவுளர் குறிக்கப்படல்

**மலைமகள் :** மூங்கில்போலும் தோள்களையுடையவள் என்றும், மலையரசன் மகள் என்றும், சிவனால் விரும்பப் படுபவள் என்றும், சிவனது திருமேனியில் ஒரு கூறாய் விளங்குபவள் என்றும் மலைமகள் குறிப்பிடப்பெற் றுள்ளாள்.

**திருமால்:** சிவனின் அடியைக் காண முயன்று அறிய முடியாமற் போனவர் என்று திருமால் குறிப்பிடப் பெற்றுள்ளார்.

**பிரமன்:** பூமேல் இருப்பவன் என்றும், சிவனின் முடியைக் காண முயன்று அறிய முடியாமற் போனவர் என்றும் பிரமன் குறிப்பிடப்பெற்றுள்ளார்.

## அடியார் சிவனைப் பரவும் முறை

சிவபெருமானை இறைவன் என்று அறிந்து துதிக்கச் சென்று, நன்னெறியிற் பொருந்தி, தூய மலர்களைச் சொரிந்து, மறைகளாகிய பாட்டுகளைப் பாடி அவன் அடியிணைகளைப் போற்றுகின்றனர்.

'முடிப்பது கங்கை' என்னும் இப் பதிகம் சிவனை விரும்பிப் பாடியனவும் ஏசிப் பாடியனவும் ஆகிய கருத்து களைக் கொண்டதாகும்.

## 5. வேணாட்டடிகள் அருளிய திருவிசைப்பா

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு ஆகும். அவற்றுள் ஒன்பதாம் திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் நூல்களாகும். ஒன்பதாந் திருமுறையினைப் பாடிய புலவர் ஒன்பதின்மர் ஆவர். அவர்கள் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்தி காடவ நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலிய முதனார், புருடோத்த நம்பி, சேதிராயர் முதலியோ ராவர். திருவிசைப்பாவோடு திருப்பல்லாண்டினையும் பாடியவர் சேந்தனார் ஆவர்.

வேணாட்டடிகள் திருவிசைப்பாவில் ஒரே ஒரு பதிகம் பாடியுள்ளார். திருவிசைப்பாவில் உள்ள மிகுதியான பாடல்கள் சிதம்பரத்தைப் பற்றியனவாகும். வேணாட்டடிகள் திருவிசைப்பாவும் 'தில்லை' என வழங்கும் சிதம்பரத் தலத்தைப் பற்றிப் பாடப்பெற்றதாகும். இத் தில்லைப் பதிகம் பத்துப் பாடல்களைக் கொண்டது.

வேணாட்டடிகள் என்ற சிறப்புப் பெயர், தென் திருவாங்கூர்ப் பகுதியை ஆண்டுவந்த அரசர்க்கு வழங்கி வந்ததாகும். 'வேணாட்டடிகள் வீரகேரள ரவிவர்மன்'[1], 'திருவேணாட்டடிகள் வீரராமன் கேரள வர்மன்'[2] என வழங்கும் தென் திருவாங்கூர்ப் பகுதியை ஆண்ட அரசர் களின் பெயர்கள் இவ்வுண்மையைத் தெரிவிக்கின்றன. இவ் வேணாட்டடிகளை, அவ்வரசருட் பழமையானவர் என்றே கருதல் தகும்.[3]

---

1. T. A. S. Vol I; p. 384.
2 T. A. S. Vol I; p. 63.
3. திரு. மு. இராகவையங்கார், சேர வேந்தர் செய்யுட் கோவை; இரண்டாம் தொகுதி: ப. 165.

## சிவபெருமான் குறிப்பிடப்பெறும் முறை

அழகிய தில்லைப் பதியில் ஆனந்தத் தாண்டவம் செய்கின்றவன். புதியராய் வந்த அடியாரின் தொண்டினைப் பெரிதும் விரும்புபவன்; ஒழுகுகின்ற மதநீரையும், பானை போன்ற வயிற்றினையுமுடைய யானைமுகக் கடவுளாகிய விநாயகரை மகனாக உடைய தலைவன். அகத்திய முனிவர்க்குப் பிரணவத்தை அறியும்படி அறிவுறுத்தும் வேதநூல் தந்தவன். பூவுலகத்தோடு வானுலகம் வரையிலுள்ள மனிதர்கள் முதல் தேவர்கள் வரையுள்ள யாவர்க்கும் ஆதரவாக இருப்பவன்.

## வேணாட்டடிகள் வேண்டுவன

அடிமையை விரும்பும் சிவன் எவ்வித ஆதரவும் அற்ற தன் தொண்டினையும் விரும்பி ஏற்றுக்கொள்ள வேண்டும். புதியவராய் வந்த அடியவரின் தொண்டினைப் பெரிதும் விரும்பும் அவன், வழிவழிவந்த அடியவனான தனது தொண்டினையும் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். வாய் வாட்டமுற்று, நாவினால் உளறி, சிவனை நினைந்து, மனம் உருகி, முத்தியைப் பெறுதற்குத் தான் செய்யும் குற்றேவலை ஏற்றுக்கொண்டு பொய்யோடு கூடாமல் இருக்கக் கைகொடுத்து உதவி தன்னை வந்து அடையும் படி, சிவன் அருளுதல் வேண்டும். தோள்கள் பொருந்தவும், கைகள் பொருந்தவும், அடியார்கள் பொருந்தவும் சிவனை வணங்கினால் அடியவனாகிய தனக்குத் தனது திருவடிகளை அடைவித்தல் வேண்டும். அடியவர்க்கு அடியவனாகிய ஒருவன், செய்யுள் வடிவாகப் பொருந்திய தமிழ்ப் பாடலின் தொகுதியை எடுத்துக் கூறி, ஓயாமல் கூப்பிட்டுக்கொண்டே இருக்கின்றமை கருதி விரைந்து அருள் செய்யின் மிகவும் நன்றாக இருக்கும்; அன்றியும் நாயடியேனாகிய தான் இறக்குந் தருணத்திலேனும் சிவனைத் தரிசித்தலைச் சிவன் தடை செய்ய முடியாது என்று உள்ளம் நெக்குருக வேணாட்டடிகள் சிவபெருமானின் அருளுக்காக இரங்கி மொழிகின்றார்.

## உவமை நலம்

இளம் வாழைக்காய், இளைய கறிவேப்பிலை கைத்தாலும் இவற்றை விரும்புவர்கள் கறி செய்தற்குப் பயன் படுத்துவார்கள்.[1] அதுபோல அடிமைத் தொழிலை விரும்புகின்றவர்கள், அவ் வடிமை இழிவான செயல்களைச் செய்தாலும் பொறுத்துக் கொள்வார்கள். எடுத்துக்காட்டு உவமை யணி இவ் வுவமையினின்றும் பிறங்குகின்றது. கன்றைப் பிரிந்த தாய்ப்பசு போல இறைவனைப் பிரிந்த வேணாட்டடிகள் கதறுகின்றார்.

## பழமொழிகள்

பழமொழிகள் சில இவர்தம் பாடலில் இடம் பெற்றுப் பாடல்களுக்கு அழகும் நயமும் கூட்டுவிக்கக் காணலாம். 'எவரும் தம்முடைய பானையைச் சாய்த்து நீரைப் பிடிக்க மாட்டார்கள்'[2]; 'நீர் நிறைந்த குளத்தின் அருகிலே பள்ளத்திலுள்ள மரத்திற்கு அக்குளத்தின் நீர் கசிந்து பாயாதோ?'[3]; 'ஓர் எருதினுக்கு இடுவது புல்லும், மற்றோர் எருதினுக்கு இடுவது வைக்கோலும்'[4] முதலான பழமொழிகள் தகுந்த இடங்களில் பாட்டில் அமைந்து வேணாட்டடிகள் சொல்ல வந்த பொருளைத் தெளிவு படுத்துகின்றன. 'ஒரு கண்ணுக்கு வெண்ணெயும், மற்றொரு கண்ணுக்குச் சுண்ணாம்பும்' என்று இன்றும் நாட்டுப்புற மக்களிடையே வழங்கும் பழமொழி மூன்றாவதாக எடுத்துக்காட்டப் பெற்ற பழமொழியோடு ஒப்பிட்டுக் காணக்கூடியதாகும்.

---

1. 'கைச்சாலுங் சிறு கதலி யிலை வேம்பும் கறிகொள் வார்'—திருவிசைப்பா; 1 : 2.
2. 'தம்பானை சாய்ப்பற்றார் என்னும் முதுசொல் லும்'—2 : 1.
3. 'பொசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளமென் றதுபோல'—3 : 1.
4. 'இடுவதுபுல் ஓரெருதுக்(கு) ஒன்றினுக்கு வையிடுதல்'—6 : 3.

## வேணாட்டடிகள் இறைவன் மாட்டுக் கொண்ட ஆராத அன்பின் அடிமைத்திறம்

கசந்தாலும் இளம் வாழைக்காய் இளம் கறிவேப்பிலை இவற்றை விரும்புபவர்கள் கறி செய்வதற்கு இவற்றைப் பயன்படுத்துவதுபோல, அடிமையை விரும்பும் இறைவன், தான் இழிவான செயலைச் செய்தாலும் பொறுத்துக் கொண்டு தன் தொண்டினைச் சிவன் விரும்பாதிருக்கிறான் என்கிறார். எவரும் தமது பானையைச் சாய்க்காமல் பிடித்து நீரை நிரப்பிக் கொள்வதுபோல, இறைவன் அடியவனான தனது தொண்டினை ஏற்றுத் தன்னை அவனுடைய கருணையினால் நிரப்ப வேண்டும் என்று வேண்டுகிறார். நீர் நிறைந்த குளத்தின் அருகிலே பள்ளத்திலுள்ள மரத்திற்கு அக்குளத்தின் நீர் கசிந்து பாய்தல்போல, திக்கு நோக்கி மருண்டு விழித்துச் சிவபெருமானே என்று ஓவென்று கதறும் தன்பால் அருளுதல் வேண்டும். நிற்கும் போதும், உட்காரும்போதும், படுக்கும்போதும், எழுந்திருக்கும்போதும், சிவனையே நினைந்து வணங்குகின்ற அவனுடைய அடியவனான தான், ஐம்புலன்களின் சேட்டையால் ஒருகால் நினையாதொழியினும் அவ்வாறு இருக்கவிடாது செய்தல் வேண்டும். அகத்தியனுக்குப் பிரணவத்தை அறியும்படி அறிவுறுத்தியது, ஓர் எருதினுக்குப் புல் இடுதலைப் போன்ற செயலென்றும், தனக்கு அருளாதது மற்றோர் எருதினுக்கு வைக்கோல் இடுதலும் போலுமான செயலென்றும் வேணாட்டடிகள் குறிப்பிடுகின்றார். மேலும், பூவுலகத்தோடு வானுலகம் வரையிலுள்ள மனிதர்கள் முதல் தேவர்கள் வரையுள்ள யாவர்க்கும் ஆதரவாக இருக்கும் சிவன் தனக்கு ஆதரவாகாமல் போதலும், கலக்கமடைந்து தான் 'பெருமை பொருந்திய தலைவனே' என்று அழுது துன்புற்று மேனோக்கிக் கூவி அழைத்தாலும் தன்னை வந்து அடையவில்லை என்கிறார்.

## முன்னோர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றுதல்

இவர் பாடல்தோறும் கையாளும்—சிவனைக் குறிக்கும் 'நம்பான்' என்ற சொல், 'நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள்' என்ற சம்பந்தர் தேவாரத்தையும், 'பேழ்கணித்துச் சிவபெருமான் ஒளனினும்' என்ற தொடர், 'பேழ்கணித்தால் பெறுதற் கரியன் பெம்மானே' என்ற திருவாசகத்தையும், 'நாயடியேன் சாவாயும் நினைக் கண்டால் இனியுனக்குத் தடுப்பரிதே' என்ற தொடர், 'பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால், இவனெனைப் பன்னாள் அழைப்பொழி யானென்று எதிர்ப்படுமே' என்ற அப்பர் தேவார அடிகளையும் அடியொற்றியதாகும்.

## பின்வந்தோர் கையாளல்

'நின்று நினைந்து இருந்து கிடந்து எழுந்து தொழும் தொழும்பனேன்' என்ற தொடர், 'நின்றும் இருந்தும் கிடந்தும் நினைமின்கள் என்றும் சிவன்றாள் இணை' என்ற 'வருத்தமற வுய்யும் வழி' என்னும் நூற் குறள் வெண்பாவிற்கும், 'நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை' என்ற அபிராமி அந்தாதி அடிக்கும் வழிகாட்டியாய் இருந்திருத்தல் வேண்டும்.

## முடிவுரை

இத் தில்லைப் பதிகத்தில், வேணாட்டடிகளின் உலக அனுபவமும், வாக்கின் சிறப்பும், பத்தித் திறமும் பாங்குற மிளிரும் பான்மையினைக் காணலாம்.

---

# நிறைவுரை

முடியுடை மூவேந்தர்களில் சேரர்களே முதலாவது வைத்து எண்ணப் பெறுகிறார்கள். சேர சோழ பாண்டியர் என வழங்குவது மரபு. தொல்காப்பியனாரும் "போந்தை, வேம்பே ஆர் என வரூஉம் மாபெருந் தானயர் மலைந்த பூவும்" என்று மூவேந்தர்தம் அடையாளப் பூமாலையைக் குறிப்பிடும் பொழுது முதற்கண் சேரர்க்குரிய பனம்பூ மாலையினைச் சுட்டியுள்ளார். மேலும் சோழ பாண்டியர் ஆகிய இருவரும் ஆண்ட நிலவெல்லையினும் சேரர் ஆண்ட நிலவெல்லை பெரிது என்பர் பேராசிரியர் மு. இராகவை யங்கார். மேலும் வீரத்திலும் கொடையிலும் மேம்பட்ட அரச மரபு சேரர் மரபே என்பதும், சோழ பாண்டியர் மரபு போல் இடையறவுபட்டு நின்றுவிடாமல் இன்றும் திருவனந்தபுரத்தில் சேர அரச பரம்பரை தொடர்கிறது என்றும் உரைப்பர். மேலும் பதிற்றுப்பத்து என்னும் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று முழுக்க முழுக்கச் சேர அரச பரம்பரையின் வரலாற்றை நிரல்படக் கூறுகின்றது. இவ்வாறு சோழ பாண்டியர் பற்றிக் குறிப்பிடும் முழு நூல் யாதொன்றும் இல்லை என்பதும் நினைக்கத் தக்கதாகும்.

அடுத்து, தமிழில் இன்று வழங்கும் நூல்களுள் தொல் காப்பியமே பழமையுடையது என்பதும், அந்நூல் சேர நாட்டில் திருவிதாங்கோடு எனும் பகுதியில் எழுந்தது என்பதும் எண்ணத்தக்கது. இவ் இலக்கண நூலேயன்றித் தமிழின் முதற்பெரும் காப்பியமாம் சிலப்பதிகாரத்தினை இயற்றிய இளங்கோவடிகளார் 'குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த' சேர இளவல் ஆவர். மேலும் பதிற்றுப் பத்திற் காணலாகும் காட்சிகள் இன்றைய கேரள நாட்டில் காணத்தக்க காட்சிகளாகும்.

களவழி நாற்பது, தகடூர் யாத்திரை, முத்தொள் ளாயிரம் முதலான நூல்களில் சேரரைப் பற்றிய செய்திகள் சிறக்க உண்டு. தொல்காப்பியத்தின் பின்னர்ப் புறப் பொருள் இலக்கணம் கூற எழுந்த புறப்பொருள் வெண்பா மாலையை இயற்றிய ஐயனாரிதனாரும் ஒரு சேர இளவல் ஆவர். பக்தி இலக்கியத் துறையிலும் கணிசமான பங்கு சேரநாட்டுக்குரியதாகும். பன்னிரு ஆழ்வார்களில் ஒரு வரான குலசேகர ஆழ்வார் பாடியருளிய 'பெருமாள் திரு மொழி' கவிதைப் பெற்றியும் பக்தி அனுபவமும் நிறைந்த பல பாடல்களைக் கொண்டதாகும். அவற்றிலும் திருவேங் கடத்தம்மான் விஷயமாகவும், திருவித்துவக்கோட்டு அம்மான் விஷயமாகவும் குலசேகரர் பாடியுள்ள பாசுரங் கள் கல்நெஞ்சையும் கனிவிப்பனவாகும். இப்பாசுரங்களிற் காணலாகும்..உவமைகள் ஒரு புத்துலகையே தோற்று விக்கும் தன்மை கொண்டனவாகும். சேரமான் பெருமாள் நாயனார் அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களில் ஒரு வராவர். இவர் பாடியுள்ள திருக்கைலாய ஞானவுலா ஆதியுலா என்றும் அழைக்கப்பெறும். பொன்வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை முதலியன இவர் தம் பிற படைப்புகளாகும். சுந்தரரும் வேணாட்டடிகளும் சேரநாட்டைப் பற்றிப் பாடியுள்ளனர்.

இவ்வாறாகத் தமிழ்மொழியின் முதல் இலக்கண நூலும், முதற் காப்பியமும், முதல் உலாவும் சேரநாட்டுப் புலவர்களின் கொடையாகத் திகழ்கின்றன.

''மதில்கடந்தல்லது உண்ணோம் புகா'' என்று புகலும் தறுகண்மை சேர மறவர்க்கிருந்தது. சுருங்கச்சொன்னால் சேரர் ஈரமும் வீரமும் இமயமலையாய் ஒளிர்கின்றன. சேரநாட்டு வளம் இயற்கையழகுடன் கிளத்தப்பட்டுள்ளது.

பழந்தமிழ் மக்களின் வாழ்க்கையினை அறிந்துகொள் வதற்குப் பண்டைய இலக்கியங்களும், கல்வெட்டுகளும், பிற வரலாற்றுக் குறிப்புகளும் துணையாகின்றன. சேர

நாட்டுச் செந்தமிழர் தம் அக்காலத்திய வாழ்க்கை முறை, அரசியல் முறை, சமுதாய அமைப்பு முதலாயின குறித்துப் 'பதிற்றுப்பத்து' என்னும் நூல் தோன்றிய சங்க காலந் தொட்டு, பத்தி இலக்கியங்கள் காலம் ஈறாக இதுகாறும் ஆராயப் பெற்றன. பழந்தமிழர்களுடைய வாழ்க்கை அமைப்புகள் பற்றி அறிய இந்நூல்கள் பெரிதும் துணை நிற்கின்றன என்பது வெள்ளிடைமலை.

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சியும் மாற்றமும் போக்கும் எப்படியெப்படி யெல்லாம் மாறுகின்றன என்பதை அறிய இவ்விலக்கியங்கள் பயன்படுகின்றன. இன்றுள்ள சேர நாடு இன்றைய தமிழ் எல்லைகளினின்றும் மாறுபட்டாலும் அங்கு வாழும் மக்களிடம் இப்பொழுதும் நம் பண்பாட்டுக் கூறுகளே மிகுதியாக இடம் பெற்றிருப்பது எண்ணுதற்குரிய தாகும். அக்காலத்திய மக்கள் கொண்டிருந்த பழக்க வழக்கங்களுள் இன்றும் சில எச்சமாக நின்று பண்டைய வாழ்வின் நெறிமுறைகளை எடுத்தியம்புகின்றன. அவற்றை யெல்லாம் ஒப்பு நோக்கி ஆராய்தற்கு இவ்வகை நூல்கள் பயன்படக் கூடும்.

சேரமன்னர்களின் வரலாற்றினை அறிந்து கொள் வதற்குப் பதிற்றுப்பத்து பேரளவில் துணையாகின்றது. மன்னர்களுடைய முடியாட்சிச் சிறப்புகளும், வீரச் செயல் களும் இந்நூலில் நன்கு புலனாவதைக் காணலாம். பதிற்றுப்பத்தின் தலைப்புகள் ஒவ்வொன்றும் தனித்தனி ஆய்வுக்குரியனவாய் விளங்குவன. திருமாலின் புகழ் பாடும் பாடல் ஒன்றின் பெயர் 'கமழ் குரல் துழாய்'. இங்ஙனம் பாடலின் தலைப்பே சமயக் குறிப்பாய் விளங்கும் பான்மை யையும் அறிய முடிகின்றது.

அவ்வாறே எட்டுத்தொகை நூல்கள் காட்டும் அக வாழ்க்கையும், புறவாழ்க்கையும் மாந்த நாகரிக வரலாற்று வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கனவாய் விளங்குகின்றன. சங்க நூல்கள் காட்டும் அகப்பொருள் நுட்பங்கள் தனி.

தன்மை வாய்ந்தவை. உள்ளுறை, இறைச்சி நயம் பொருந்திய அப்பாடல்கள் ஒவ்வொரு நாட்டின் அகச் சூழலையும் புறச்சூழலையும் காட்டுவனவாம். சேர நாட்டின் பகுதிகளாக இன்று விளங்கும் இடங்கள் இயற்கை எழில் கொஞ்சும் சங்க கால ஊர்களின் எச்சங்களாக விளங்குகின்றன எனலாம். குலசேகரர் பாடிய பாடல் களின் பொருள் விளக்கங்களாகவும் பண்பாட்டு விளக்கங்க ளாகவும் அவை திகழும் பான்மையையும் எண்ணிப் பார்த்தல் வேண்டும். எனவே அன்றைய இலக்கியங்கள் கூறும் செய்திகளோடு இன்றைய நிலையில் திகழும் கூறு களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மாந்த வளர்ச்சியின் வேகமும், மாற்றமும் புலனாகும்.

'சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்களை' ஒருமுக மாகத் தொகுத்துப் பார்க்கும்போது, அவற்றைப் பாடி யோர் பலராயினும் அப்பாடல்களினிடையே இழையோடும் சமூக, வரலாற்று, பண்பாட்டுக் கூறுகளையும் அவற்றின் போக்கினையும் நாம் ஓரளவு அறிய முடிகின்றது எனலாம்.

# பின்னிணைப்புகள்

## I. சேரநாட்டைப் பாடிய புலவர்கள்

1 **அரிசில் கிழார் :** கொள்ளிடத்தின் வடபால் அரியிலூர் அல்லது அரியில் என்று வழங்கும் ஒரூரின் பெயர் அரிசில் என்பதன் மருஉவாகக் கருதப்படுகிறது. கிழார் என்றால் உரியவர் என்று பொருள்படும். கிழாரென்பது வேளாளர்க்கேயுரிய சிறப்புப் பெயராக இருந்தது. பதிற்றுப் பத்தில் எட்டாம் பத்தைப் பாடியதால் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையிடம் ஒன்பது நூறாயிரங் காணம் பரிசில் பெற்றதாகப் பதிகம் கூறுகிறது. தகடூர் யாத்திரை யென்னும் நூலில் இவராற் பாடப்பட்ட பாடல் களும் சில உள்ளனவென்பது தொல்காப்பியப் புறத்திணை யியலில் 8, 12 ஆம் நூற்பாக்களுக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையால் விளங்குகிறது.

இவர் செய்த பாடல்கள்: குறுந்தொகை1-93; பதிற்றுப்பத்து—71-80., புறம்—146, 230, 231, 281, 285, 300, 304, 342. திருவள்ளுவமாலை 13-வது பாடல் இவர் பெயரால் வழங்குகிறது. இவர் 'எழினியைக் குறித்துப் பாடும் புறப்பாடலில் கன்றை மேவிய ஆனிரை மேய்ந்த காட்டிடத்தே பிறிதொன்றால் ஏதமின்றிக் கிடப்பவும், சுரத்தில் நடத்தலால் வெம்மையுற்ற காலினையுடைய வழிப்போக்கர் தாம் வேண்டிய இடத்தே தங்கவும், களத்தின்கண் நிறைந்த நெற்பொலி காவலின்றியே கிடப்பவும் எதிரில் நின்று தடுக்கும் பகையைத் துரந்த நிலங் கலங்காத செவ்விய ஆட்சியினை உடையவன் எழினி' என்று குறிக்கின்றார். கடையெழு வள்ளல்களுள்

ஒருவனாகிய பேகனைப் பாடியிருத்தலின் இவர் அவன் காலத்தினராக இருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது.

**2. இளங்கீரனார் :** இவரும் எயினந்தை மகனார் இளங்கீரனாரென்பவரும் ஒருவரேயென்று சிலர் கூறுவர். அங்ஙனமாயின் இவர் வேடர் மரபினர் ஆவர். பாலைத் திணையைப் பலவாறு பாடியுள்ளார். எட்டுத்தொகையில் இவரியற்றியுள்ள செய்யுட்கள் 14 (நற்றிணை-6; அகநானூறு—8).

**3. இளங்கோவடிகள் :** இவர் சேரன் செங்குட்டுவனின் தம்பி. இவர் துறவு பூண்டு தனியே இருந்து வந்தார். முத்தமிழிலும் இவருக்குள்ள அறிவு ஆற்றல் மிகப் பெருமை என்பதற்கு, இவரியற்றிய சிலப்பதிகாரமே சான்றாகும். கண்ணகியின் வரலாற்றை இவர் மலைநாட்டுக் குறவர் வாயிலாகவும், மாடலன் என்னும் மறையவன் வாயிலாகவும் அறிந்து கொண்டார். ஒரு நாள் இவர் தம் தமையனாகிய செங்குட்டுவனோடு பேரியாற்றங் கரையில் அமர்ந்து இன்பமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தார். மலைநாட்டுக் குறவர்கள் தாங்கள், ஒரு கற்பு மங்கையை வேங்கை மரத்தின் கீழ்த் தங்கியிருந்ததையும், பின்னர் ஒரு விமானம் வந்து அவளை அழைத்துச் சென்றதையும் கண்டதாக, மன்னனிடம் கூற, இளங்கோவடிகள் உடன் அமர்ந்திருந்த சாத்தனார், அம்மங்கை கண்ணகியே என்றும், அவள் கற்பின் பெருமையை இலக்கிய வாயிலாக நிலைநாட்ட இளங்கோவடிகள் முயலல் வேண்டும் எனவும் வற்புறுத்தவே, இளங்கோவடிகளும், கண்ணகியின் சிலம்பு காரணமாக வந்த கதையாதலின் அதன் பெயராலேயே சிலப்பதிகாரம் என்னும் பெயரால் காப்பியம் செய்தார். இளங்கோவடிகளின் செம்மை சான்ற மனப்பான்மை சிலப்பதிகாரத்தால் நன்கு விளங்குகிறது. காவியத்தின் இறுதியில் ''பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்'' என்று தொடங்கி, ''செல்லும்

தேளத்துக்கு உறுதுணை தேடுமின்'' என்று முடிக்கும் செய்யுள் அருள் நிறைந்த அவருள்ளத்தைப் புலப்படுத்துகிறது. இவருடைய காலத்தைக் குறித்தும், சமயத்தைக் குறித்தும் கருத்து வேறுபாடு உண்டு.

**4. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் :** சங்க காலப் புலவர்; அந்தணர். சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையால் ஆதரிக்கப் பெற்றவர். ஆய் என்னும் வள்ளலின் கொடைச் சிறப்பும் வீரச் சிறப்பும் இவராற் பலவாறு பாராட்டப் பெற்றுள்ளன. அதனால், 'திருந்து மொழிமோசி பாடிய ஆய்' எனப் பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் இவரைப் பாராட்டியுள்ளார். இவர் பெயர் மோசி, ஏணிச்சேரி முடமோசியார் எனவும் வழங்கும். இவராற் பாடப் பெற்றோர் சோழன் முடித்தலை கோப்பெருநற்கிள்ளியும், ஆயும் ஆவர். இவர் பாடியவை: புறம் 13, 127, 135, 241, 374, 375.

**5. ஓரம்போகியார்:** சங்க காலப் புலவர். இவர் பாடலில் வந்துள்ள ஊர்கள் ஆமூர், இருப்பை, கழார், தேனூர் என்பவை. ஐங்குறுநூற்றில் முதல் நூறாகிய மருதத் திணையைப் பாடியுள்ளார். இவையேயன்றி இவர் பாடிய பாடல்கள் 10. (குறுந். 10, 70, 122, 127, 384; நற்-20, 360; அகம்-286, 316; புறம்-284).

**6. ஔவையார் :** சங்க காலப் புலவர். இவர் அஞ்சி அதியமான்பாற் பேரன்புடையவர். அதியமானுக்காகத் தொண்டைமானிடம் தூதாகச் சென்றவர். அவனளித்த நெல்லிக்கனியை உண்டு அதன் பெருமையை உணர்ந்ததும் அதியனை, 'பால் பிறை பிறைநுதற் பொலிந்த சென்னி, நீல மணிமிடற்றொருவன் போல் நெடிது வாழ்க' என வாழ்த்துகின்றார். பல பாடல்களில் அதியனின் வீரச் சிறப்பையும், கொடைச் சிறப்பையும் பாராட்டிக் கூறுகிறார். இவர் பரணர் என்னும் சங்கப் புலவரின் காலத்தில்

வாழ்ந்தவர் என்பது இவர் அதியனைப் பற்றிப் பாடும் 99-வது (புறம்) பாடலால் தெரிய வருகிறது.

ஒரு போர்க்களத்தில் அதியமான் பொருது புண்பட்டு நின்ற காட்சியைப் புலவர் வீரச்சுவை தோன்றப் பாடுகிறார். அதே போன்று பகைவன் எறிந்த வேல்பட்டு அதியமான் போரில் மாண்டபோது ஔவையார் பாடிய கையறுநிலைப் பாட்டுகள் உள்ளத்தை உருக்கும் தன்மையன. அவனுடைய மார்பில் பட்ட வேல், பாணர்களின் மண்டையில் துளை செய்து உருவி, இரப்பவர்களின் கையுள் புகுந்து சென்று, அவனால் காக்கப்படுவோரின் கண்களின் பாவை சோரப் பாய்ந்து, பாடும் புலவரின் நாவில் தைத்தது என்றும், இனிப் பாடுவாரும் பாடுவார்க்கு ஈவாரும் இல்லை என்றும் உள்ளம் நைந்து உருகினார். அதியமான் மகன் பொருட்டெழினியும் தந்தையைப் போலவே சிறந்த வீரனாக விளங்கி ஔவையார் பாட்டுக் குரியவனானான். இவர் பாடியனவாக நற்றிணையில் 7, குறுந்தொகையில் 15, அகத்தில் 4, புறத்தில் 30, திருவள்ளுவ மாலையில் 1 ஆக 60 பாடல்கள் உள்ளன.

**7. கபிலர்:** இவர் அந்தணர். வேள் பாரியின் நண்பர். அவன் இறந்த பிறகு அவன் மகளிரை அழைத்துச் சென்று மணம் செய்து கொள்ளும்படி, விச்சிக்கோன், இருங்கோ வேள் என்பவர்களை வேண்டி, அவர்கள் மறுத்தமையால் வெறுத்துப் பின்பு அம்மகளிரைப் பார்ப்பார்ப் படுத்துத் தம் கடனைக் கழித்தனர். இவர் ஐங்குறு நூற்றில் குறிஞ்சியைப் பொருளாகவுடைய மூன்றாம் நூறையியற்றினார்; பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தைப் பாடிச் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் நூறாயிரம் காணமும், நன்றா என்னும் குன்றின் மீதேறிக் கண்ணால் கண்ட இடங்களையும் பரிசிலாகப் பெற்றார் என்று பதிகம் கூறுகிறது.

பாரியின் பிரிவுக்குக் கண்ணீர் விட்டுக் கையறு நிலையாகப் பாடும் பாடல் நெஞ்சை உருக்குவதாகும்.

இவரருளிச் செய்தனவாக 278 பாடல்கள் இப்போது உள்ளன. அவற்றுள் அகவற்பாக்கள் 207. (நற்-20; குறுந்-29; ஐங்-100; பதிற்-10; அகம்-16; புறம்-30; குறிஞ்சி-1; வெண்பா-42; திருவள்ளுவமாலை-1; இன்னா நாற்பதிலுள்ள பாடல்-41), கலித்தொகையிலுள்ள கலிப்பா-29.

**8. காக்கை பாடினியார் நச்செள்ளையார்:** இவர் பெண்பாலார். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன் மீது பதிற்றுப் பத்துள் ஆறாம் பத்தைப் பாடினார். இதற்காக அவர் ஒன்பது துலாம் பொன்னும், நூறாயிரம் பொற்காசும் பெற்றார் எனப் பதிகம் பகருகிறது. காக்கை கரைந்தமையைப் பற்றிப் பாராட்டிக் கூறிய அருமை பற்றிக் காக்கை பாடினியார் என்ற சிறப்புப் பெயரைப் பிற்காலத்தில் ஆன்றோரால் இவர் பெற்றனர் எனத் தெரிகிறது. இவர் பாடியவை பதிற்றுப்பத்து 51-60; குறுந்-210; புறம்-278.

**9. காப்பியாற்றுக் காப்பியனார்:** சங்ககாலப் புலவர். இவர் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைப் பற்றிப் பதிற்றுப்பத்துள் நான்காம் பத்திற் பாடியவராவர். இவர் அவ்வரசனிடம் பரிசிலாக நாற்பது நூறாயிரம் பொன்னும் அவன் ஆண்டதில் ஒரு பாகமும் பெற்றார் என்பது பதிகம் கூறும் செய்தி. இவர் பாடலுள் முதற்கண் திருமால் வணக்கம் கூறப்பட்டுள்ளது.

**10. குமட்டூர்க் கண்ணனார்:** இவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மீது பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தைப் பாடியுள்ளார். இதற்கு உம்பற்காட்டு 500 ஊர் பிரமதாயமும், 38 வருடம் தென்னாட்டுள் வருவதனிற் பாகமும் பரிசிலாகப் பெற்றவர் எனப் பதிகத்தால் அறியலாம். இவர் அந்தண குலத்தினர்.

**11. குண்டுகட்பாலியாதன்:** இவருக்கு இப்பெயர் சினையாலும் இடத்தாலும் வந்தது; பகைவர் தருந்

திறைப் பொருள்களை அரசர் இரவலர்க்குக் கொடுத்து விடும் வழக்கம் பண்டைக்காலத்தில் உண்டென்பது இவர் பாடலாலும் தெரிய வருகின்றது. சேரமான் செல்வக் கடுங் கோவாழியாதனுடைய வண்மையைப் பாராட்டி இவர் பாடியிருக்கும் புறநானூற்றுச் செய்யுள் (387) மிகவும் பாராட்டற்பாலது. இவர் பாடிய பாடல்கள். 2. நற்-1; புறநானூறு-1.

**12. குறுங்கோழியூர் கிழார்:** இவர் வேளாளர். இவராற் பாடப் பட்டவன் சேரன் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையாவன்; போரிற் பாண்டியன் தலையானங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணிப்புண்டு அப்பால் அப்பிணிப்பைத் தானே நீக்கிக் கொண்டு சென்று அவன் சிங்காசனத்திலேறிய வரலாறும், அச்சேரனுடைய வீரமும், செங்கோன் முறைமையும் இவரால் நன்கு கூறப்பெற்றுள்ளன; இவர் பெயர் குறுங்கோளியூர் கிழாரெனவும் வழங்கும். இவர் பாடல் களுட் சிறந்த பகுதிகளின் கருத்துகள் வருமாறு:

(1) அரச! ஐம்பூதங்களை அளந்தறிந்தாலும் அறிய லாகும்; உன்னுடைய அறிவு முதலியன அளந்தறிதற் கரியன.

(2) "சோற்றை ஆக்குந் தீயாலும் வெயிலாலும் உண்டாகும் வெம்மையேயன்றி உன் குடை நிழலில் வாழ்வோர்க்கு வேறு வெம்மையில்லை."

(3) இந்திரவில்லை யன்றி வேறு கொலை வில்லையும், கலப்பையை யன்றி வேறு படைக்கலங்களையும் உன் நாட்டார் அறியார்.

(4) வயாவுற்ற மகளிர் விரும்பியுண்பாரேயன்றிப் பகைவர் நின் மண்ணை ஒருபொழுதும் நுகரார்.

(5) "உன்னைப் பாடிய நா வேறொருவரையும் பாடாதபடி கொடுக்கும் வண்மையை உடையாய் நீ."

(6) ''எல்லா வகையாலும் உன் நாடு தேவருலகம் போல்வது''. இவர் பாடியுள்ளவை: புறம்-17, 20, 22 என்பன.

**13. கூடலூர் கிழார்:** இவர் மலைநாட்டின் கண்ணதாகிய கூடலூரை இருப்பிடமாக உடையவர்; வேளாண் மரபினர்; இவருடைய பாடல்கள் இன்சுவையைத் தருபவை; ஒரு விண்மீன் வீழ்ச்சியைக் கண்டு கோச் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்னும் அரசன் இன்ன நாளில் இறப்பானென்று முதலில் நிச்சயித்திருந்து அவ்வாறே அவன் இறந்தது கண்டு ஒருவாற்றானும் பிரிவாற்றாது வருந்தினாரென்று, ''ஆடியலழற் குட்டத்து'' என்னும் பாடலாலும் அதன் பின்னுள்ள வாக்கியங்களாலும் தெரிதலால், இவர் கணிதத்தில் வல்லவராகக் கருதப் படுகிறார். இவர் மேற்கூறிய அரசனால் மிக ஆதரிக்கப் பெற்றவர்.

அவன் வேண்டுகோளால் ஐங்குறுநூறென்னும் தொகை நூலைத் தொகுத்தவர் இவரே. இவர் காலத்துப் புலவர்கள் குறுங்கோழியூர் கிழார், பொருந்தில் இளங்கீரனார் என்பவர்கள். முதுமொழிக் காஞ்சியை இயற்றிய மதுரைக் கூடலூர் கிழார் என்பவர் வேறு; இவர் வேறு. இவரியற்றிய பாடல்கள்—4; குறுந்—3; புறநானூறு—1.

**14. கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்:** இவர் வஞ்சப் புகழ்ச்சியணியைப் பாடல்களில் அமைப்பதில் வல்லவர்; திருவள்ளுவமாலையில் இவர் பெயரோடு ஒரு பாடல் காணப்படுகின்றது. இவராற் பாடப்பட்டோர்: சேரமான் குட்டுவன் கோதை, சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, ஏனாதி திருக்கள்ளி, ஈர்ந்தூர்கிழான் தோயன்மாறன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்,

சோழிய ஏனாதி திருக்குட்டுவனென்போர். இவர் பாடியன புறம்—54, 61, 167, 180, 197, 394.

**15. திருத்தாமனார்:** சங்க காலத்தைச் சேர்ந்தவர். இவராற் பாடப்பட்டோன் சேரமான் வஞ்சன். சேரமானது கொடைத் தன்மையை நன்கு பாடிச் சிறப்பிக்கிறார். புறம்—398 என்ற ஒரு பாடலே இவராற் பாடப்பட்டவை.

**16. நக்கீரர்:** இவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் என்று வழங்கப்படுவார். இறையனாரகப் பொருளுக்கு உரை செய்தவரிவரே என்றும், திருமுருகாற்றுப் படை, நெடுநல் வாடை இவ்விரண்டையும் இவரே இயற்றியிருக்க வேண்டும் என்றும் கூறப்படுகிறது. இவர் பாடிய நெடுநல் வாடை பத்துப் பாட்டினுள் 7-வது, 188 அடிகளையுடையது. பகைமேற் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்துந் தலைவிக்கு அவ் வருத்தந் தீரும்படி அவன் பகையை வென்று விரைவில் வருவானாக என்று கொற்றவையைப் பரவுவாள் கூற்றாக அவனை நக்கீரர் பாடியது. இவர் வடமொழியில் நல்ல பயிற்சியுடையவர். இவர் பெயருக்கு முன்னே உள்ள அடையால் இவரது ஊர் மதுரையென்றும், இவருடைய தந்தையார் ஒரு கணக்காயர் என்றும் தெரிகின்றது. இவரது பாடல்களாக நற்றிணையில் ஏழு செய்யுட்களும், குறுந்தொகையில் எட்டும், அகநானூற்றில் பதினேழும், திருவள்ளுவமாலையில் ஒன்றும், வேறு சில தனிப்பாடல்களும் உள்ளன. அகம் — 36, 57, 78, 80, 93, 120, 126, 141, 200, 205, 227, 249, 253, 290, 310, 340, 346, 369, 389.

குறுந்தொகை — 78, 105, 131, 143, 161, 266, 280, 368.

நற்றிணை: 31, 86, 197, 258, 340, 358, 367. புறம்: 56, 189, 395. திருவள்ளுவமாலை: 7-வது பாடல்.

**17. நரிவெரூஉத் தலையார்:** சங்க காலப்புலவர். இவர் யாது காரணத்தாலோ தம்முடம்பு வேறுபட்டிருந்து சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ் சேரலிரும் பொறையைக் கண்ட நாளில் அவ்வேறுபாடு நீங்கித் தம்முடம்பு பெற்றனர். இதனைப் புறநானூற்றின் 5ஆம் பாட்டின் பின்புள்ள வாக்கியத்தாலும் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலின் "புதுமை பெருமை" என்னும் 7-ஆம் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய விசேடவுரையாலு முணரலாம். இவர் பாடியன குறுந்—5, 256; புறம்—5, 195. "இன்பம் பொருளறம்" என்னும் திருவள்ளுவ மாலைச் செய்யுள் இவர் பாடியதாகக் காணப்படுகிறது.

**18. பரணர்:** இவர் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்துப் பாடிக் கடல் பிறக்கோட்டிய கோச்செங்குட்டுவனிடம் உம்பற்காட்டுவாரியையும், அவன் மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகப் பெற்றனர். இவராற் பாடப் பட்டோர்: சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னி, சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி, வையாவிக் கோப்பெரும் பேகன், சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன என்பார். 'மாலுங் குறளாய்' என்னும் திருவள்ளுவ மாலைச் செய்யுள் இவர் பாடியதாகக் காணப்படுகிறது. இவர் பாடியன அகம்: 6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, 162, 178, 181, 186, 196, 198, 208, 212, 222, 226, 236, 246, 258, 262, 266, 276, 322, 326, 356, 357, 372, 376, 386 396, குறுந்தொகை: 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 292, 298, 328, 393, 399.

நற்றிணை: 6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356.

பதிற்றுப்பத்து—41-50.

புறம்—4, 63, 141, 142, 144, 145, 336, 341, 343, 348, 352, 354, 369.

பன்னிரு பாட்டியலின் பகுதி இவர் செய்ததாகவும் வழங்கும். கபில, பரண, நக்கீரர் என்று கூறப்படுவதால் இம்மூவரும் சமகாலத்தவராக இருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

**19. பாலைக் கௌதமனார்:** பல்யானைச் செல்கெழு குட்டுவன் மீது மூன்றாம் பத்தைப் பாடியவராகிய இவர் அவனை இரந்து அவனுதவியால் ஒன்பது பெருவேள்வி வேட்கையில் மனைவியுடன் சுவர்க்கம் பெற்றதாகப் பதிகம் கூறுகிறது. இவர் பாடியது பதிற்றுப்பத்து—21-30.

**20. பெருங்குன்றூர் கிழார்:** இவர் குடக்கோ இளஞ் சேரல் இரும்பொறையென்னும் சேரவரசன்மீது பாடிய பத்துப்பாடல்கள் பதிற்றுப் பத்தில் ஒன்பதாம் பத்தாக இடம் பெற்றுள்ளன. இதற்காகப் பொற்காசு முதலிய பல பரிசில்களைப் பெற்றவர் எனப் பதிகம் கூறுகிறது. வேளாளர்; கடைச் சங்கமிருந்து தமிழாய்ந்தோருள் ஒருவர்; இவராற் பாடப்பட்டோர்கள் மேற்கூறிய தலைவர்கள் இருவரும், உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியும் ஆவர். இவர் காலத்துப் புலவர்கள் இறையனாரகப் பொருளுரையால் தெரிகின்ற சிறு மேதாவியார், சேந்தம் பூதனார், அறிவுடைவிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலியோர்களும், வையாவிக்கோப் பெரும் பேகனைப் பாடிய பரணர் முதலியோர்களும் ஆவர். இவர் இயற்றியனவாக எட்டுத் தொகையில் 21 செய்யுட்கள் கிடைக்கின்றன. நற்றிணை—4, குறுந்தொகை—1, பதிற்றுப்பத்து—10. அகநானூறு—1, புறநானூறு—5; இவற்றுள் அகத்திணைக்குரியன 6, புறத்திணைக்குரியன 15.

**21. பொருந்தில் இளங்கீரனார்:** 'செறுத்த செய்யுள் செய் செந்நாவின், வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' எனக் கபிலருடைய கல்வி கேள்விகளை இவர் புகழ்ந்திருத்தலால் இவருடைய நற்குணம் வெளியாகிறது. இவராற்

பாடப்பெற்றோன் சேரமான் மாந்தரஞ் சேரலிரும் பொறை.

**22. பொய்கையார்:** இவருடைய ஊர் மலைநாட்டி லுள்ள தொண்டியென்பது. இவராற் பாடப்பட்டோன் சேரமான் கோக்கோதை மார்பன்; சேரமான் கணைக் காலிரும் பொறையின் அவைக்களத்துப் புலவராக விளங்கியவர். இவர் மூவன் என்பவனை அச்சேரமான் வென்று அவனது பல்லைப் பிடுங்கித் தன்னுடைய தொண்டி நகரத்துக் கோட்டை வாயிற் கதவிலே அழுத்தி வைத்த செய்தி இவர் பாடலில் வந்துள்ளது (நற்: 18). அச் சேரமானைப் போரில் சோழன் செங்கணான் வென்று சிறையில் வைத்துவிட்டபோது சோழன்மீது களவழி நாற்பது என்னும் நூலைப் பாடினார் என்பர். இவரே பொய்கையாழ்வாரென்பது சிலருடைய கொள்கை; ஆனால் இவர் வேறு அவர் வேறு என்று கொள்வதே மரபு. இவர் பாடியனவாக யாப்பருங்கல விருத்தியிற் சில வெண்பாக்களும், பன்னிரு பாட்டியலிற் சில சூத்திரங்களும் காணப்படுகின்றன.

**23. பேய்மகள் இளவெயினி:** பேயினது ஆவேசமுற்ற வள் எனப்படும். இந்த வகையார் இக்காலத்தும் அங் கங்கே உள்ளனர். இப்பாட்டின் விசேடவுரையால், பேயே ஒரு மகள் வடிவங் கொண்டு பாடினாளென்று புறநானூற் றின் பழைய உரைகாரர் கருதியதாகத் தெரிகிறது. எயினி என்பதால் எயினக் குலத்திற் பிறந்த மங்கை எனக் கொள்ளல் வேண்டும். வஞ்சி நகரின் வளமும் தலைவன் கொடையும் இவர் பாடலிற் கூறப் பெற்றுள்ளன. இவராற் பாடப்பெற்றோன் சேரமான் பாலை பாடிய பெருங் கடுங்கோ.

**24. மாமூலனார்:** கி.மு. 245 இவரது காலம் எனக்கூறப் படுகிறது. இவர் முக்காலமுமுணர்ந்தவரென நச்சினார்க் கினியர் கூறுவர். "யோகிகளாய் உபாயங்களால் முக்கால

முழுணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன்றேயத்து அனை நிலைவகையோராவார்'' (ந-உரை) யாப்பருங்கல விருத்தியிலும் இக்கருத்துக் கூறப்பட்டுள்ளது. இவர் மோரியர் படையெடுப்பைப் பற்றியும், நந்தரென்பார் வடநாட்டில் பாடலிபுரத்தில் கங்கை நீருள் தமது செல்வத்தை மறைத்து வைத்ததைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். இவர் பாடியன அகம்—1, 15, 31, 55, 61, 65, 91, 101, 115, 127, 187, 197, 201, 211, 223, 251, 265, 281, 295, 311, 325, 331, 347, 349, 359. குறுந்—61; நற்—14, 75. ''அறம் பொருள் இன்பம்'' என்னும் திருவள்ளுவமாலைச் செய்யுள் இவர் பாடியதாகக் காணப்படுகிறது.

**25. முரஞ்சியூர் முடிநாகராயர்:** சங்கப்புலவர். இறையனாரகப் பொருளுரை இவரைத் தலைச்சங்கப் புலவருள் ஒருவராகக் கூறுகின்றது. இவர் பாரதப் போரில் பெருஞ் சோறு வழங்கிய உதியஞ் சேரலாதனைத் தம் பாடலில் (புறம்-2) குறிப்பிட்டுள்ளார். அவ்வரசன் பாரதப்போரில் பெருஞ் சோறு வழங்கவில்லை; அவன் தனது முன்னோரான பாண்டவரை நினைந்து அவர் பொருட்டுச் செய்த திவசத்தில் பெருஞ்சோறு வழங்கினான் எனச் சிலர் கருதுவர். பாரதப்போர் கி.மு. 13 ஆம் நூற்றாண்டளவில் நிகழ்ந்தது. இவர் பாடியது புறம்—2.

**26. மோசிகீரனார்:** சங்க காலத்தவர். இவர் அதியமானை வென்ற சேரலிரும்பொறையைப் பாடியுள்ளார். சேரமானது அரசமுரசு வைத்திருந்த கட்டிலில் அப்புலவர் அறியாது துயின்றதைக் கண்டு சேரமான் அவருக்குத் துன்பஞ் செய்யாது அவர் தூங்கி எழுந்திருக்கும் வரை கவரி கொண்டு வீசியதாக இவர் பாடிய புறம் 50-ல் அறியக் கிடக்கிறது. ''ஆண்பாலேழா றிரண்டு'' என்னும் திருவள்ளுவமாலைச் செய்யுள் இவர் பாடியதாக் காணப்படுகின்றது. இவர் பாடியன: அகம்—392; குறுந்-59, 84; நற்-342; புறம்-50, 154, 155, 156, 186.

**6. சேரமான் கடுங்கோ ஆழியாதன் :** கபிலர் புறப் பாடல்[6] இரண்டில் இவ்வேந்தர் பெருமகனைச் சிறப்புறப் பாராட்டியுள்ளார். இவன் ஈகை நிறைந்த நெஞ்சினன்; புலவரைப் போற்றும் புரவலன்.

**7. சேரமான் கோக்கோதை மார்பன் :** தொண்டி என்னும் கடற்கரைப் பட்டினத்தைக் கோநகராகக் கொண்டு ஆண்ட இவன் வீரப் பண்பும் கொடை மனமும் நிரம்பப் பெற்றவன். இவனைப் பாடிய புலவர் பொய்கை யார் ஆவர். இப்பாடல்கள்[7] புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. நக்கீரரும் அகப்பாடல்[8] ஒன்றில் இவனைப் பாராட்டியுள்ளார்.

**8. சேரமான் குட்டுவன் கோதை :** இவன் வீரமும் வள்ளன்மையும் கொண்டு விளங்கினான் என்பதைக் கோனாட்டு எறிச்சலூர் மதுரைக் குமரன் பாடியுள்ள பாடலால்[9] அறிகிறோம்.

**9. சேரமான் மாரிவெண்கோ:** இவனுடைய சம காலத்து அரசர்களாகப் பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் விளங்கினர். இம்மூவரும் ஒரு சேர வீற்றிருந்தபோது ஔவையார் அம்மூவரும் மகிழ்ந்து ஒருங்கிருந்த காட்சியினை வாழ்த்திப் பாடியுள்ளார்.[10]

**10. சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ :** புலவனாகவும் புரவலனாகவும் ஒருசேர விளங்கிய இவன் பேய்மகள் இளவெயினியால் பாராட்டப்பட்டுள்ளான்.[11]

---

6. 387.
7. 48, 49.
8. 346.
9. புறம்; 254.
10. புறம்; 367.
11. புறம்; 11.

**11. சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் :** சேர மரபினருள் இவனே பழமையானவன் என்பர். நற்றிணைப் பாடல் ஒன்றில்[12] இளங்கீரனாரும் அகநானூற்றுப் பாடல் இரண்டில்[13] மாமூலனாரும் புறநானூற்றுப் பாடல் ஒன்றில்[14] முரஞ்சியூர் முடிநாகராயரும் இவனைப் பாடியுள்ளனர்.

**12. சேரமான் வஞ்சன் :** பாயல் மலைக்கு உரிய வனாகவும், பாடி வந்த பரிசிலர்க்குப் பகிர்ந்தளித்த புரவலனாகவும் இவ்வேந்தன் திருத்தாமனார் என்னும் புலவரால் பாராட்டப் பட்டுள்ளான்.[15]

**13. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் :** நெடுஞ் சேரலாதனுக்குச் சோழன் மணக்கிள்ளியின் மகளான நற்சோணை என்னும் பெருந்தேவியிடம் பிறந்தவன். களம் பல கண்ட காவலன். பரணர் அகப்பாடல் ஒன்றிலும் புறப் பாடல் ஒன்றிலும்[16] இவனைப் புகழ்ந்துள்ளார்.

**14. பெருஞ்சேரல் இரும்பொறை :** கவரி வீசிய காவலன் இவன். புலவர் மோசிகீரனார் இவனைக் காண ஒருஞான்று வந்தபோது அரசமுரசம் வைக்கப் பெறும் கட்டிலில் சோர்வால் உறங்கிவிட்டார். அதுபோது ஆண்டு வந்த இவ்வரசன் அவர்க்குத் தீங்கிழைக்காமல் அவர் துயிலெழும் வரையிலும் கவரி கொண்டு வீசி நின்றான்[17]. இதனால் இவன் புலவர்மாட்டுக் கொண்ட பற்றும் தமிழன்பும் விளங்கும்.

**15. யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல்இரும்பொறை :** வீரமும், கொடையும் ஒருங்கே கொண்டிருந்த இவன்

---

12. 113.
13. 65, 235.
14. 2.
15. புறம்; 398.
16. 212,
17. புறம்; 50.

தொண்டியிலிருந்து அரசாண்டான். ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தான். கபிலரிடம் பெருமதிப்பு வைத்திருந்தான். இவனைப் பாடிய புலவர்கள் குறுங்கோழியூர் கிழார்,[18] பொருந்தில் இளங்கீரனார்,[19] கூடலூர் கிழார்[20] ஆகிய மூவரும் ஆவர்.

## III பாடல்கள் பாடிய சேரவேந்தர்

**1. சேரமான் இளங்குட்டுவன்:** பாலைத்திணை அமைய அகநானூற்றில் இவர் ஒரு பாடல்[21] பாடியுள்ளார். அப்பாட்டுத் தவிர வேறொரு பாட்டையும் இவர் பாடியதாகத் தெரியவில்லை. மகட்போக்கிய செவிலித்தாயின் கூற்றாக அமைந்துள்ள இப்பாடலில் பாலைவழியின் அருமையும் தலைவி நெஞ்சின் காதலும் ஒருங்கே புலப்படுகின்றன.

**2. சேரமான் எந்தை:** குறுந்தொகையில் ஒரு பாடலைப்[22] பாடி உள்ளார். தலைமகனது செலவுக்குறிப் பறிந்து நெஞ்சாற்றமாட்டாத தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும் முறையில் இப்பாடல் அமைந்துள்ளது.

**3. சேரமான் கணைக்கால் இரும்பொறை:** இவன் பாடிய பாட்டு ஒன்றேயாம்; அது புறநானூற்றில்[23] இடம் பெற்றுள்ளது. இவருடைய மான உணர்வும் கவிதைச் சிறப்பும் இப்பாட்டில் விளங்குகின்றன.

**4. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை:** கோட்டம்பலம் என்ற இடத்தில் இவர் இறந்தவர் என்பது

---

18. புறம்; 17, 20. 22.
19. புறம்; 53.
20. புறம்; 269.
21. 153.
22. 22.
23. 74.

பெயராலேயே விளங்கும். தன் கோப்பெருந்தேவி இறந்த போது அவளை ஈமத்தீயில் ஏற்றிய நிலையில் இம்மன்னன் பாடியுள்ள பாட்டு அவலச்சுவை ததும்பி உருக்கம் நிரம்பிய தாகும். தன் துணைவி இறக்கவும் யான் இன்னமும் உயிர் வாழ்கின்றேனே என்று இவன் புலம்பிய சொல், இவன் தன் காதல் மனையாள்மாட்டுக் கொண்டிருந்த ஆழமான அன்பினைப் புலப்படுத்தும்.

**5. சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ:** பாடல் பெற்றவரும் பாடியவருமான சேரவேந்தர் இவர் ஒருவரே. சேரவேந்தரில் பெரும்புலவராக விளங்கிய இவரைப் பேய் மகள் இளவெயினி எனும் பெண்பாற் புலவர் பாடியுள்ளார். எல்லாரையும்விடப் பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடுதலால் 'பாலைபாடிய' என்னும் அடையுடன் இவர் பெயர் சேர்ந்து வழங்கப்பட்டது. பிரிவின் துன்பத்தினை உருக்கத்தோடு விவரிப்பனவாக இவருடைய பாடல்கள் அமைந்துள்ளன. இவர் இயற்றியனவாக நற்றிணையில் பத்தும்,[24] குறுந்தொகையில் பத்தும்,[25] அகநானூற்றில் பன்னிரண்டும்,[26] கலித்தொகையில் முப்பத்தாறும்,[27] புற நானூற்றில் ஒன்றும்,[28] ஆக அறுபத்தெட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. இவருடைய கவிதைச் சிறப்பு ஒவ்வொரு பாடலிலும் ஒளிவிடுகின்றது. அரிய நுட்பமான அகப்பொருட் கருத்துகள் இவர் பாடல்களில் துலங்கு கின்றன.

---

24. நற்றிணை—9, 48, 118, 2(2, 224, 256, 318, 337, 384, 394.
25. 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398.
26. 5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379.
27. பாலைக்கலி—1-36.
28. 282.

**6. கருவூர்ச் சேரமான் சாத்தன் :** கருவூரிலிருந்து ஆண்ட சேரவேந்தன் இவன் என்பது இவன் பெயரால் பெற்றாம். இவன் பாடியதும் ஒரு பாட்டே.[29] அது குறுந்தொகையில் அமைந்துள்ளது. சிறைப்புறமாகத் தலைவன் நிற்கத் தலைவி தலைமகட்குக் கூறும் போக்கில் இப்பாட்டு அமைந்துள்ளது.

**7. குட்டுவன் கண்ணன் :** இப்பெயரால் குட்டுவனுக்கு மகன் கண்ணன் என்ற விளக்கத்தைப் பெறுகின்றோம். இவர் பாடிய பாடல் ஒன்றே குறுந்தொகையில்[30] இடம் பெற்றுள்ளது. பகல் வந்து தலைவியைக் கூடிச் செல்லும் தலைவனுக்கு இரவுக்குறி நேர்ந்தவள் போலப் பேசித் தலைவியை விரைவில் தலைவன் மணம் செய்துகொள்ள வேண்டும் எனத் தோழி கூறும் கூற்று நயமுடையது.

**8. நம்பி குட்டுவன் :** குட்டுவன் என்ற பெயரால் இவர் சேரர் மரபினைச் சேர்ந்தவர் என்பது புலப்படுகின்றது. இவர் இயற்றிய பாடல்கள் இரண்டே. அவை குறுந்தொகையில்[31] அமைந்துள்ளன. இவை நெய்தல் திணையை விளக்குவனவாக உள்ளன. இப்பாடல்கள் தோழியின் பேச்சுத் திறனையும் தலைமகளின் பண்பு நலனையும் குறிப்பிடுகின்றன.

## IV. சோரவேந்தர் கிளையினர்

**1. அதியமான் நெடுமான் அஞ்சி :** அதியமான் என்போர் சேரவேந்தரின் ஒரு கிளையினராவர். தகடூர் என்பது இவர் தலைநகராகும். இம்மரபில் உதித்த நெடுமான் அஞ்சி தன் பெருங் கொடைத் திறத்தால் கடையெழுவள்ளல்களுள் ஒருவனாக மதிக்கப் பெற்றவன்.

---

29. 268.
30. 179.
31. 109, 243.

போரில் சிறந்தவன். இவன் முன்னோர், தேவர்களை வழி பட்டு விண்ணுலகத்திலிருந்து கரும்பை இவ்வுலகத்திற்குக் கொணர்ந்தவரென்றும், இவர்க்கு வரம் கொடுப்பதற் கென்று தேவர்கள் வந்து தங்குவதோர் சோலை இவன் தலைநகரில் இருந்ததென்றும் கூறப்படுகின்றன. 'மழவர்' என்ற ஒருவகை வீரர்படை இவனுக்கு இருந்தது. தன்னை உண்பவர்க்கு நெடுங்காலம் உயிர் வாழ்வு அளிக்கும் அரு நெல்லிப்பழத்தைப் பெற்று அதனை ஔவையார்க்குக் கொடுத்துப் பெரும்புகழ் பெற்றவன். பொகுட்டெழினி என்பவன் இவனுடைய வீரமகன். குதிரை மலை இவனது மலையாகும். புறத்திரட்டுப் பாடல்களாலும், பிற்காலத்து இவன் மரபினர் தம்மை "வஞ்சியர் குலபதி எழினி" எனவும் 'சேரவமிசத்து அதியமான் எழினி' எனவும் கூறிக் கொள் வதனாலும், பனந்தார் இவர்க்கு மாலையாதலாலும், புறநானூற்றுரைகாரர் குறிப்பாலும் இவ்வதியமான் சேர மரபினனே என்றும், நாட்டின் பிரிவு பற்றிய தாயவழக்கே சேரமானுக்கும் இவனுக்கும் போர் புரியக் காரணமாயிற் றென்றும் அறியலாம். இவனைப் பற்றி ஔவையார் நற்றிணையில்[32] ஒரு பாட்டிலும், குறுந்தொகையில் ஒரு பாட்டிலும்,[33] புறநானூற்றில் இருபத்திரண்டு பாடல் களிலும்[34] புகழ்ந்து பாடியுள்ளார். அஞ்சியத்தை மகள் நாகையார்[35], மாமூலனார்[36] ஆகியோர் முறையே ஒவ் வொரு பாட்டுப் பாடியுள்ளனர். அரிசில்கிழார்[37] ஒரு பாட்டும் பெருஞ்சித்திரனார்[38] பாட்டொன்றும் இவனைப் பற்றிப் பாடியனவாகப் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன.

---

32. 381.
33. 91.
34. 81-95, 97-101, 103, 104, 206, 231, 232, 235, 315, 340.
35. அகம்-352.
36. அகம்-325.
37. 230.
38. 207.

**2. அதியமான் நெடுமான் அஞ்சிமகன் பொகுட்டெழினி:** பெயரோடு சேர்ந்துள்ள அடையாலே இவன் அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் என்பது விளங்கும். தந்தையைப் போலவே வீரனும் வள்ளலுமாக விளங்கியவன். இவனைப் பற்றி ஔவையார் குறுந்தொகையில்[39] ஒரு பாட்டிலும், புறநானூற்றில்[40] மூன்று பாட்டுகளிலும், தாயங்கண்ணனார் என்னும் புலவர் அகநானூற்றுப்[41] பாட்டு ஒன்றிலும் பாடியுள்ளனர். பல்வேல்எழினி எனப் பட்டவனும் இவனாக இருக்கலாம் என்பர் மு. இராகவையங்கார் அவர்கள்.[42]

**3. ஆட்டன் அத்தி:** இவ்வத்தியை 'வஞ்சிக்கோன்' என்று இளங்கோவடிகள் கூறுதலால் சேரர் மரபினன் இவன் என்பது அறியப்படும். இவன் ஆட்டத்தில் வல்லவன். சோழன் கரிகாலன் மகள் ஆதிமந்தியார் என்பவளை மணந்தவன். இவனை ஒரு சமயம் காவிரி வெள்ளம் கவர்ந்து கொள்ளவும், ஆதிமந்தி அத்தியைத் தேடிக் கடற்கரை வரை அரற்றிச் செல்லவும், அப்போது கடல் தன் அலைக்கரங்களால் ஆட்டனத்தியை ஏந்திக் கொண்டுவர, ஆதிமந்தியின் துயரை அறிந்து அங்கே நீராடி வந்த மருதி என்பாள் அவனைக் கரை சேர்க்கவும், அவளைக் கடல் அலை இழுத்துச் சென்றதாகவும் கூறப்படுகின்றது. இவனைப் பற்றி ஆதிமந்தியார்[43] பாடிய பாடல் ஒன்றும் பரணர்[44] பாடிய பாடல் ஆறும், வெள்ளிவீதியார்[45]

---

39. 80.
40. 96, 102, 392.
41. 105.
42. சேரவேந்தர் செய்யுட்கோவை, முன்னுரை பக்கம் 23.
43. குறுந்; 31.
44. அகம்; 76, 135, 222, 236, 276, 376.
45. அகம்; 45.

பாடல் ஒன்றும் ஆக எட்டுப் பாடல்கள் இருக்கின்றன.. இளங்கோ[46] அடிகளும் இவனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**4. கண்ணெழினி :** எழினி என்ற பெயரினின்றும் அதியமான் மரபினனாக இவன் கருதப்படுகின்றான். இவன் ஒரு பெருவீரன் என்பதும் நடு நாட்டிலுள்ள முதுகுன்றம் (விருத்தாசலம்) இவனுக்குரிய மலை என்பதும் இவனைப் பாடியுள்ள மாமூலனார்[47] பாடலினின்றும் அறியப்படும் செய்திகளாகும்.

**5. வாட்டாற்று எழினியாதன் :** வாட்டாறு என்பது தென்திருவாங்கூர்ச் சீமையிலுள்ள திருவாட்டாறு என்ற திருமால் தலமாகும். இவ்வூரில் இருந்தாண்ட சிற்றரசனான இவன் வேள் என்றும் சிறப்பிக்கப்படுவன். எழினி என்ற அடைமொழியால் அதியமான் மரபினன் இவன் என்பதும், ஆதன் எனச் சேரர் பூண்டுவந்த பெயரால் சேரர் கிளையினன் என்பதும் தெரியவருகின்றன. இவன் நாட்டின் வளத்தையும் இவனது கொடைச்சிறப்பையும் பாடியவர் மாங்குடிகிழார்[48] என்ற புலவர்.

**6. வானவன் மறவன் பிட்டன் :** இவன் குதிரை மலைக்குத் தலைவன். வீரத்தாலும் கொடையாலும் மேம்பட்டு விளங்கியவன். 'வானவன் மறவன்' என்று இவன் சிறப்பிக்கப்படுவதால் சேரமானின் படைத்தலைவன் இவன் என்பது விளங்கும். இவனைப் பற்றிப் புலவர்கள் ஆலம்பேரி சாத்தனார்[49], மருதன் இளநாகனார்[50] முறையே ஒவ்வொரு பாடல் பாடியுள்ளனர்.

---

46. சிலம்பு; 21 : 11-15.
47. அகம்; 197.
48. புறம்; 396.
49. அகம்; 143.
50. அகம்; 77.

**7. வானவன் :** வானவன் என்ற இவனுடைய பெயரால் இவன் சேரமரபினன் என்பது விளங்குகின்றது. இவனைப் பற்றிக் கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார்[51] ஒரு பாட்டும் மதுரை இளங்கௌசிகனார்[52] ஒரு பாட்டும் மாறோக்கத்து நப்பசலையார்[53] ஒரு பாட்டும் பாடியுள்ளனர். இவன் போரில் வல்லவன் என்பதும் குதிரைப் படை வைத்திருந்தான் என்பதும் பகைவர் எயிலை அழித்தவன் என்பதும் கடற்படையை வைத்திருந்தான் என்பதும் உணர்த்தப்படும் செய்திகளாம்.

**8. வானவரம்பன் :** இவனைப் பற்றி நக்கீரர் அகநானூற்றுப் பாடல் ஒன்றில் குறிப்பிடுகின்றார். போரில் சிறந்து விளங்கும் புகழினன் என்பது அவர் உணர்த்தும் செய்தியாகும்.

## V. சேர நாட்டுப் பகுதிகளை ஆண்ட வேற்றரசர்கள்

**1. வேள் ஆய் :** இவன் ஆய் அண்டிரன் என்றும் வழங்கப்படுவான்; வேளிர் மரபினன்; கடையெழு வள்ளல்களுள் ஒருவன். பொதியில், கவிரம் என்ற மலைகளும், ஆய்குடி, தலையாறு என்ற ஊர்களும் இவன் நாட்டில் உள்ளவை. இவ்வேளிர் தலைவன் வீரப் பெருமை வாய்ந்தவன். இவன் வள்ளன்மை மிக்கவன். இவன் வள்ளன்மையைப் புகழ்ந்து சங்கத்துச் சான்றோர் பலர் பாடியுள்ளனர். ஒருகால், நீல நாகமொன்று தனக்கு அளித்த அரிய ஆடையொன்றை, இவ்வேள் ஆய் சிவபிரானுக்குச் சாத்தி மகிழ்ந்தான். அண்டிரன் இவனுடைய இயற்

---

51. அகம்; 309.
52. அகம்; 381.
53. புறம்; 126.

பெயர் என்ப. இவனைப் பற்றி உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பன்னிரண்டு பாடல்களில் பாடியுள்ளார். குட்டுவன் கீரன்[55] ஒரு பாடலும், உறையூர் ஓடை கிழார்[56] ஒரு பாடலும் பாடியுள்ளனர். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனாரும்[57], மோசிகீரனாரும்[58] ஒவ்வொரு பாட்டில் குறிப்பிடுகின்றனர். பரணர் நற்றிணைப்[59] பாடல் ஒன்றிலும், அகப்பாடல்[60] இரண்டிலும், உமட்டூர் கிழார் மகனார் பெருங்கொற்றனார்[61] ஒரு பாடலினும் இவனைப் பற்றிச் சொல்லுகின்றனர். சிறுபாணாற்றுப் படையில்[62] இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் இவனைப் பற்றிப் பாடியுள்ளார்.

**2. நாஞ்சில் வள்ளுவன் :** இவன் நாஞ்சில் என்ற மலைக்குரிய தலைவன்; நாஞ்சிற் பொருநன் என்றும் இவனை வழங்குவர். 'தென்னவர் வயமறவன்' எனக் கூறப்படுதலால், பாண்டியர்க்கும் படைத் தலைமை பூண்டவன் இவன் என்று தெரிய வருகின்றது. பரிசிலர்க்கு வேண்டியவற்றை அளித்துவந்த பண்பாளன் இவன். இந்நாஞ்சில் வள்ளுவனுடைய தலைவனான அரசனைச் சேரனாகப் புறநானூற்றுரைகாரர் குறிப்பிட்டனராயினும் அதற்கு மூல மேற்கோள் காணப்படவில்லை என்பர், மு. இராகவையங்கார்[63]. இவனைப்பற்றி ஒரு சிறைப்

---

54. புறம்-127-135, 374, 375, 241.
55. புறம்-240.
56. புறம்-136.
57. நற்-237.
58. குறுந்-84.
59. ,, 167.
60. ,, 152, 198.
61. அகம்-69.
62. வரிகள்-96-99.
63. சேரவேந்தர் செய்யுட் கோவை; முன்னுரை பக்கம்-25.

பெரியனார்[64] ஒரு பாடலும், மருதனிள நாகனார்[65] இரண்டு பாடலும், ஔவையார்[66] ஒன்றும், கருவூர்க்கதப் பிள்ளை ஒன்றும்[67] ஆக ஐந்து பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன.

3. **நன்னன் :** இவன், மலை நாட்டின் வடவெல்லைப் பகுதியை ஆண்டு வந்த வேளிர் மரபினன். நன்னன் வேண்மான், நன்னன் உதயன் எனவும் இவன் வழங்கப்படுவான். கொண்கான நாட்டு ஏழிற் குன்றமும், பாழிச் சிலம்பும் இவன் மலைகளாம். வியலூர், பாழி, பாரம், கடம்பன் பெருவாயில் என்பன இவன் நாட்டு ஊர்களிற் சிறந்தவை. இவன் பல போர்களில் ஈடுபட்டு வல்லமையுடன் விளங்கியிருக்கின்றான். இவனுடைய பாழி மலையில் பொற் சுரங்கமும் இருந்ததாகக் குறிப்பிடப்படுகின்றது. மிஞிலி என்பவன் இவனுடைய படைத்தலைவன். இந்நன்னன் சேரர் தொடர்புடையவன் என்பது 'நன்னனுதியன்' எனச் சேரர் பெயரை இவன் தரித்திருத்தலால் கருதப்படுகின்றது என்பர் அறிஞர். இவனைப் பற்றி மாமூலனார்[68] மூன்று பாடல்களிலும், பரணர்[69] இரண்டு பாடல்களிலும், முள்ளிலூர்ப்பூதியார்[70] ஒரு பாட்டிலும், மோசிகீரனார்[71] பாடல் ஒன்றிலும் குறிப்பிடுகின்றனர். இவை யாவும் அகநானூற்றுப் பாடல்கள்.

---

64. 137.
65. 138, 139.
66. 140.
67. 380.
68. 15, 97, 349.
69. 258, 356.
70. 173.
71. 392.

# VI. சேரர் நாடு, மலை, ஊர்கள், திருவிழா முதலியன

சேரர்களுடைய நாடு, ஊர்கள், மலை ஆகியன பற்றிய குறிப்புகள் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன. இலக்கியக் கோப்புக் கெடாத வகையில் தகுந்த இடங்களில் தேவையான அளவே இடம் பெறுவதால் சிலவற்றைப் பற்றிக் குறுகிய அளவில்தான் அறிய முடிகிறது.

**1. குடநாடு:** மாமூலனார் பாடிய அகநானூற்றுப் பாடலில் குடநாடு பற்றிக் குறிப்பிடப்படுகின்றது. ஆறலை கள்வர் வாழும் ஒடுங்காட்டுக்கு அப்பால் உள்ளது குடநாடு. அந்நாட்டைக் குட்டுவன் காப்பதால் பசியென்பதை அறியாத மருத நிலத்து ஊர்களையுடையதும், எருமைகள் தாமரைகளை மேய்ந்து தெவிட்டி வெறுக்கு மாயின்பலாவின் கொழுவிய நிழற்கண்ணே தங்குவதுமாகிய வளமிக்கது என்பதும், சேரனது குடநாடு ஒடுங்காடு என்ற இடத்திற்கு வடக்கில் உள்ளது என்பதும் அறியப் படும் செய்திகளாம்.[1]

**2. வஞ்சிமாநகர்:** வளைந்த விற்படையை உடைய சேரனுடைய வஞ்சி என்று மணிமேகலையுள்[2] குறிப்பிடப் படுகின்றது. அவ்வஞ்சி நகரத்தைப் பற்றிய பலவகைச் சாதியார், தொழிலாளர் இருக்கும் வீதிகளையும் மற்றும் பல இடங்களையும் சாத்தனார் குறிப்பிடுகின்றார். சேர வேந்தன் பாதுகாவலுடன் காக்கின்ற வஞ்சி என்று அகநானூற்றில்[3] சுட்டப்படுகின்றது.

**3. கருவூர்:** பெரிய யானைப் படையினையும் நெடிய தேர்ப் படையினையு முடைய சேர வேந்தனு

---

1. அகம்; 91: 12-17.
2. மணிமேகலை; 28: 1-136.
3. 263; 11-12.

டையது செல்வம் மிக்க அகன்ற நகராகிய கருவூர். அதன் அருகில் பாயும் ஆன் பொருனை என்னும் ஆறு மணலைக் கொண்டு வந்து குவித்து வைக்கும்.[4]

**4. முசிறி :** பிடித்த மீன்களை நெல்லுக்கு ஈடாக விற்றுக் குவித்து, அந்நெற் குவியலை ஏற்றிய தோணியால் மனைகளை மறுகச் செய்வதும், மனையிற் குவிக்கப்பட்ட மிளகு மூடைகளால் ஆரவார மிக்க கடலைக் கலங்கச் செய்வதும், மரக்கல மேற்றிவந்த பொற்பரிசம் கழித் தோணிகளாற் கரை சேர்க்கப்படுவதும் என மலைப் பண்டங்களையும் கடற் பண்டங்களையும் ஒரு சேரக் கொண்டு தன்கண் வருவார்க்குக் கொடுக்கும் குட்டுவனது கடல் முழக்கம் பெற்ற முசிறி என்று வரலாற்றுப் புலவர் பரணர்[5] குறிக்கின்றார். சேரரின் சுள்ளியம் பேரியாற்றில் யவனரது வேலைப் பாடமைந்த மரக்கலங்கள் பொன்னை ஏற்றி வந்து, அப்பொன்னுக்கு ஈடாக மிளகு மூட்டைகளை ஏற்றிச் செல்லும் வளமிக்கது. அக்கலங்கள் கொள்வதும் கொடுப்பதும் அப்பேரியாற்றிற்குள் உள்ள முசிறி என்ற பட்டினத்தில் எனப்படுகின்றது. ஒரு காலத்தில் அம்முசிறிப் பட்டினத்தைப் பாண்டியன் ஒருவன் முற்றுகையிட்டமையும் சொல்லப்படுகின்றது.[6]

**5. தொண்டி :** கீழ்க்காற்றால் விளக்கம் பொருந்திய கடலின் அலைகள் உடைக்கும் மணல் மேட்டில் கிடக்கும் பழைய படகின் சிதைவு போக்கிப் புதுக்கிய புதிய வலையினையுடைய பரதவர்கள் உயர்ந்த மணலையுடைய அடைகரையில் வந்து கிடக்கும் சுறாமீனின் கொள்ளை யினை மணம் நாறுகின்ற பாக்கத்தினர்கள் பலர்க்கும் பகுத்துக் கொடுக்கும் வளமிக்கது தொண்டி என்னும் பட்டினம்.[7] கடலில் மீன்பிடிக்கச் சென்ற தந்தைக்கு

---

4. அகம்; 93 : 20-23.
5. புறம்; 343 : 1-10.
6. அகம்; 149 : 7-13.
7. அகம்; 10 : 8-13.

உப்பு விற்றுப் பெற்ற மூரல் வெண் சோறும் அயிலை இட்டாக்கிய புளிக்கறியும் சொரிந்து கருவாட்டுடன் இளைய மகள் இடும் இடம் திண்ணிய தேரினை உடைய சேரனது தொண்டி.[8] குட்டுவனது தெளிந்த அலைகள் பொருந்திய பரப்பினை உடைய பட்டினம் (துறைமுகம்) தொண்டி என்கின்றார் நக்கீரர். தொண்டித் துறையில் வண்டுகள் ஆரவாரித்திட நாடுதற்கு மலர்ந்துள்ளன தண்ணில் நெய்தற் பூக்கள்.[9] அகன்ற வயலின்கண்ணே மன்னரால் அறியப்பட்டும், அரிச்சுட்டை எடுப்போரால் கொண்டு வரப்பட்டும், தண்ணிய சேறு பரந்து அழகிய வலிய தண்டினையுடைய கண்போன்ற நெய்தல் நெற் போரினிடத்து மலருந் திண்ணிய தேரையுடைய பொறை யனது தொண்டி எனப்படுகின்றது.[10] சேரன் கணைக்கால் இரும்பொறைக்கு உரிமையுடையது தொண்டி. அந்நகரின் தலைவனாகிய அவன், வேள் என்பவனைப் போரில் வென்று அவனது முள்போன்ற பற்களைப் பிடுங்கிக் கொண்டுவந்து கடற்கரைச் சோலைகள் நிரம்பிய தொண்டி நகரின் வாயிற் கதவிலே வைத்திழைத்தான் என்று குறிக்கப்படுகின்றது.[11] மேற்குறிப்பிட்ட உழவர் நெற்கதிர் அரிந்திடும் வயல் வளமிக்க தன்மையும், கல்லென்று ஒலிக்கின்ற புள்ளினங்களை உடைய கடற்கரைச் சோலைகள் சூழ்ந்த பாங்கும் தொண்டிக்குரியன என்று நற்றிணைப் பாடல் ஒன்று[12] சொல்லுகின்றது.

சேரனுடைய தொண்டி மேற்குக்கடற்கரையில் அமைந் துள்ளது. அத்துறையின்கண் அயிரைமீன் மிகுதியும் கிடைக்கும் என்கிறார் பரணர்.[13] பச்சை அவலை இடித்த

8. அகம் ; 60 : 1-7.
9. அகம் ; 290 : 12-14.
10. நற்றிணை ; 8 : 5-9.
11. ,, 18 : 2-4.
12. ,, 195 : 5-6.
13. குறுந் ; 128 : 2-3.

கோனாட்டுக் கழுமலமாகிய சீகாழியின் இது வேறு என்பர்.[24]

**4. குழுமூர்:** இது உதியன் என்னும் சேர மன்னனுடைய ஆட்சியில் இருந்த ஊர். நல்ல ஆநிரையின் மிகுதியைக் கொண்ட அவ்வூர் பல்லான்குன்று என்னும் மலைக்கு அருகில் இருந்திருக்கவேண்டும். அக்குழுமூரில் ஈகையைக் கடனாக ஏற்றுக்கொண்ட தூய நெஞ்சினன் ஆன உதியனுடைய அட்டில் எப்போதும் ஓசை நிரம்பியதாய் இருக்கும்.[25] குழுமூரில் உள்ள அட்டிலைச் சிறப்பிக்கக் காரணம் என்ன? சேரவேந்தர் வறுமையுற்ற மக்களின் பசிப்பிணி நீக்க வேண்டி அறச்சாலைகள் நாடெங்கும் அமைத்துச் சோறு அளித்துவரும் சீரிய இயல்பினர் என்பது இன்னும் மலைநாட்டில் நிகழும் அறச் செயல்களால் அறியலாம். இத்தகைய அரிய செயலை மிகப் பழங்காலத்திலேயே சேரவேந்தர் மேற்கொண்டிருந்தனர் என்பது பாரதப்போரில் இருபெருஞ்சேனைக்கும் உணவளித்துதவிய பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் வரலாற்றால்[26] அறியலாம்.

**மலை**

**கொல்லிமலை :** குட்டுவன் சேரனுக்கு உரியது கொல்லி மலை. இந்த மலையில் உள்ள சுனையில் மணங்கமழும் குவளைமலர்கள் பூக்கும்.[27] பாணர் பரிசிலாகப் பெற்ற நல்ல குதிரையின் குளம்புகள் பட்டுப்பட்டு மலை வழி செப்பமாகியது. அவ்வழியில் மெலியாமல் இரவலர் ஏறுகின்ற பொறையனது கொல்லிமலை அமைந்துள்ளது. அம்மலையின்கண் தெய்வத்தால் படைக்கப்பட்ட அழகிய

---

24. மு. இராகவையங்கார் சேரவேந்தர் செய்யுட் கோவை, பக்கம் 364.
25. அகம்; 303:4-7, அகம்; 338 : 14, அகம்; 168: 4-7.
26. புறம்.
27. நற்றிணை: 105:7-9.

செயல்திறன் அமைந்த பாவை ஒன்று உள்ளது.[28] பொறை யனது தண்ணென்று குளிர்ந்து விளங்கும் கொல்லிமலை யிடத்துள்ள சிறிய பச்சையான மலைப்பச்சை மணமுள்ள தாக விளங்குவதால் மகளிர் கூந்தலில் சூடி மகிழ்வர்.[29] என நற்றிணை குறிப்பிடுகின்றது. சேரனுடைய கொல்லி மலையின் மேற்குப்பக்கத்தில் அச்சந்தரும் கரிய கண்ணை யுடைய தெய்வத்தால் எழுதப்பட்ட நல்ல பாவை உள்ளது என்று அதே செய்தியைக் குறுந்தொகை குறிப்பிடு கின்றது.[30] அந்தக் கொல்லி மலையின் மீது மூங்கில்கள் நிறைந்திருக்கின்றன; அது வல்வில் ஓரி என்பானுக்கு உரியது. முள்ளூர் மன்னனாகிய காரி என்பவன் அவ் ஓரியைக் கொன்று அவனுக்குரிய கொல்லிமலையைச் சேர வேந்தனுக்குக் கொடுத்தான். சிவந்த வேர்ப்பலா மரங்கள் செறிந்து கிடப்பது அம்மலை.[31] தீப் போன்ற கதிரொளி விடும் அழகிய மணிகள் மிளிரும் கொல்லிமலை.[32] மேகம் விரும்பி மழை மிகுதியும் பொழிவதால் மிகப்பெரிய அம் மலையின் உச்சியிலிருந்து பாய்ந்துபரவிச் செல்லும் அருவி.[33] அகன்ற கரிய காட்டினை உடையது;[34] கொல்லிமலை அக்காலத்தில் பெற்றிருந்த சீரும் சிறப்பும் பீடும் பெரு மிதமும், அதன்கண் விளங்கிய அழகுப்பாவையின் புகழும் புதுமையும் எங்கும் பரவியிருந்தன, எவரையும் ஈர்த் திருந்தன என்பதை அறியலாம்.

### திருவிழா

1. **சேரர் திருநாள்:** கூத்தருடைய சுற்றம் சூழ்ந்திருந்து வாழ்த்தும் குளிர்ந்த கடல் சூழ்ந்த நாட்டின் தலைவனான

---

28. நற்; 185:3-11.
29. 346; 8-10.
30. குறுந்; 8ºː4-6.
31. அகம்; 62:13-15.
32. அகம்; 33: 14-15.
33. அகம்; 209: 13-17.
34. அகம்; 213: 14-15.

சேரனின் பிறந்தநாள் ஓலக்கத்திலே எல்லாக் கலையும் உணர்ந்த சீரியோர் திரண்டு அவன் கேட்பத் தருக்கங் களைக் கூறி விரும்புதல் கொண்ட ஆரவாரத்தை ஒப்பப் பலாச்சுளைகளும், மாம்பழங்களும், பல்வகைக் காய்களும், பழங்களும், கற்கண்டுத் துண்டுகளும் இறைச்சிகளோடு சோறும் கிழங்குகளும் கொண்டுவந்து மக்களுக்குப் படைக் கவும் அவர்கள் ஆரவாரத்துடன் உண்பர்[35]. சேரன் அவையில் தருக்கவாதம் அடிக்கடி நிகழும் என்று மணி மேகலை குறிப்பிடும்.[36] நச்சினார்க்கினியர் சேரமன்னனின் பிறந்தநாள் எனக்கொள்ளாமல் பெரிய நாளொலக்கம் என்றே பொருள் கொண்டார்[37] என்பது நோக்கத்தக்கது.

**2. உள்ளிவிழா:** நற்றிணையில் இருநூற்று முப்பத்து நான்காம் பாடல் விடுபட்டுப் போயிருக்கின்றது. பின்னத் தூர் நாராயணசாமி ஐயர் அவர்கள் பதிப்பில்[38] இப்பாடல் கிடைத்திருப்பதாகப் பின்னிணைப்பு எனச் சேர்க்கப்பட்டி ருக்கின்றது. அதில் வஞ்சிமாநகரைப் பற்றியும் அங்கு நடைபெறும் உள்ளிவிழாவினைப் பற்றியும் குறிக்கப்பட் டுள்ளன கொங்குநாட்டினர் மணியினை இடையில் கட்டிக்கொண்டு தெருவில் ஆடுவது உள்ளிவிழா. கழுமலம் என்னும் ஊரைப்பற்றியும் அவ்விடத்தே நிகழ்ந்த போரில் சோழன் வென்றமையும் அப்பாட்டில் உணர்த்தப்படு கின்றன.[39]

---

35. மதுரைக்காஞ்சி; 523-535.
36. 26:63-4.
37. பத்துப்பாட்டு, 2. உ.வே.சா. பதிப்பு, பக்கம் 398: வரிகள் 523-525.
38. நற்; 1956-ஆம் ஆண்டுப்பதிப்பு; இப்பாடல் இறை யனார் அகப்பொருள் 28 ஆம் நூற்பா உரையில் மேற்கோளாகக் காட்டப்பெறுகின்றது.
39. நற்: 234:7-9.

சேரர்களின் நாடு, ஊர், மலை, விழாக்கள் பற்றிய செய்திகளை இலக்கியங்கள் ஆங்காங்கே குறிப்பிடுவனவற்றை இவ்வாறு ஓரளவு நாம் தொகுத்துக் காணலாம்.

## VII சிலப்பதிகாரம்—பதிற்றுப்பத்து

சிலப்பதிகாரத்திற்கும் பதிற்றுப்பத்திற்கும் உள்ள சில தொடர்புகளைக் காண்போம். ஐந்தாம் பத்திற் பாடப்பட்ட செங்குட்டுவன் மோகூர் மன்னனுடைய வேப்ப மரத்தை வெட்டினான் எனக் கூறப்படுகின்றான். இதுவே சிலப்பதிகாரத்திலும் நீர்ப்படைக்காதையின்கண் சொல்லப் பட்டிருக்கக் காண்கிறோம்.

**பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு**
**வேம்புமுதல் தடிந்த ஏந்துவாள் வலத்துப்**
**போந்தைக் கண்ணிப் பொறைய கேட்டருள்** [1]

எனவரும் சிலப்பதிகார அடிகள்

**மோகூர் மன்னன் முரசங் கொண்டு**
**நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து** [2]

என்றும்,

**மோகூர்..................**
**கடுஞ்சின விறல்வேம்பு அறுத்த**
**பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே** [3]

என்றும் வரும் பதிற்றுப்பத்து அடிகளோடு ஒப்புநோக்கத் தக்கன.

---

1. காதை 27 : 124-126.
2. பதிற்றுப்பத்து V; 4 : 14-15.
3. ,, V; 9 : 16-17.

செங்குட்டுவனுடைய முதாதையர் ஒருவர் அகப்பா என்ற ஊரை எறிந்தவர் என்ற செய்தி,

**மிகப்பெருந் தானையோடு இருஞ்செரு வோட்டி**
**அகப்பா எறிந்த அருந்திறல்**[4]

எனச் சிலப்பதிகாரத்துள் குறிக்கப்படுகின்றது. இதுவே பதிற்றுப்பத்துள்

**தண்ணலம் பெருங்கோட்டு அகப்பா எறிந்த**
**பொன்புனை உழிஞை வெல்போர்க் குடவே**[5]

எனப் பாலைக் கௌதமனாரால் சொல்லப்படுகின்றது.

செங்குட்டுவன் நெடுங்கடலோட்டிய செய்தி சிலப்பதிகாரத்துள்,

**நெடுந்தேர்த் தானையொடு இரும்பிற்புறத்து**
**இறுத்துக்**
**கொடும்போர் கடந்து நெடுங்கட லோட்டி**[6]

எனப்படுகின்றது. இச்செய்தி பதிற்றுப்பத்தில்

**கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு**
**உடைதிரைப் பரப்பின் படுகடல் ஓட்டி**
**வெல்புகழ்க் குட்டுவன்**[7]

என வருவதோடு பொருந்துகின்றது.

இவ்வாறு பதிற்றுப்பத்தில் குறிக்கப்படும் சில செய்திகள் சிலப்பதிகாரத்துள் பேசப்படுவனவோடு வரலாற்று முறையில் முற்றிலும் பொருந்தி அமைகின்றன என்பதைக் காணலாம்.

---

4. நடுகற்காதை : 143-14.
5. பதிற்றுப்பத்து. III; 2 : 26-27.
6. காதை 28 : 118-119.
7. பதிற்றுப்பத்து V; 6 : 11-13.

# மேற்கோள் நூல்கள்

## I

**மேற்கோள் நூல்கள்**

1. அகநானூறு
2. இலக்கண விளக்கப் பாட்டியல்
3. இறையனார் அகப்பொருள்
4. ஐங்குறுநூறு—பழைய உரை
5. கம்பராமாயணம்
6. கலிங்கத்துப் பரணி
7. கலித்தொகை
8. களவழி நாற்பது
9. குலோத்துங்கன் கோவை
10. குறுந்தொகை
11. கோடீச்சுரக்கோவை
12. சிதம்பரப் பாட்டியல் — ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை.
13. சிலப்பதிகாரம் — அடியார்க்கு நல்லார் உரை
14. சிவந்தெழுந்த பல்லவராயன் உலா
15. சிறுபாணாற்றுப்படை
16. சீவகசிந்தாமணி
17. தக்கயாகப்பரணி
18. தண்டியலங்காரம் — பழைய உரை
19. தமிழ் நாவலர் சரிதை (கழகப் பதிப்பு)
20. திருக்கழுக்குன்ற உலா

21. திருக்குறள்
22. திருச்சிற்றம்பலக் கோவையார் — பேராசிரியர் உரை
23. திருமந்திரம்
24. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
25. திருவாசகம்
26. திருவாரூர்த் தூது
27. திருவாரூர் மும்மணிக்கோவை
28. திருவிசைப்பா
29. திருவிலஞ்சி முருகர் உலா
30. தொல்காப்பியம் — எழுத்ததிகாரம்
— சொல்லதிகாரம்
— பொருளதிகாரம்
நச்சினார்க்கினியர் உரை
பேராசிரியர் உரை
31. தேவாரம்
32. நற்றிணை — பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை.
33. நாலாயிர திவ்வியப்பிரபந்தம்
34. நெடுநல்வாடை
35. பகவத் கீதை
36. பட்டினப்பாலை
37. பத்துப்பாட்டு—நச்சினார்க்கினியர் உரை
38. பதிற்றுப்பத்து—பழைய உரை
அருளம்பலனார் உரை
அவ்வை துரைசாமிப்பிள்ளை உரை
39. பதினெண் கீழ்க்கணக்கு—மர்ரே எஸ். இராஜம் பதிப்பு

40. பரிபாடல்
41. பன்னிரு பாட்டியல்
42. பனம்பாரனார் பாயிரம்
43. பாரதியார் பாடல்கள்
44. பிரபந்தத் திரட்டு
45. பிரபந்தத் தீபிகை
46. பிரபந்த மரபியல்
47. புறத்திரட்டு — பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை பதிப்பு
48. புறநானூறு—பழைய உரை
49. புறப்பொருள் வெண்பாமாலை—பழைய உரை
50. பெரிய புராணம்
51. பெருங்கதை
52. பெரும்பாணாற்றுப்படை
53. பெருமாள் திருமொழி
54. பொருநராற்றுப் படை
55. பொன் வண்ணத் தந்தாதி
56. மணிமேகலை
57. மதுரைக்காஞ்சி
58. முத்தொள்ளாயிரம்
59. முல்லைப்பாட்டு
60. மூவருலா
61. யாப்பருங்கல விருத்தி
62. வால்மீகி இராமாயணம்
63. வில்லி பாரதம்
64. வீரசோழியம்
65. வெண்பாப் பாட்டியல்

# II

1. அகநானூற்றுச் சொற்பொழிவுகள். தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. 1956.

2. இராகவையங்கார், மு.

   (i) சேரன் செங்குட்டுவன்.
   சென்னை: வள்ளுவர் பண்ணை, ஐந்தாம் பதிப்பு 1964.

   (ii) சேரவேந்தர் செய்யுட்கோவை பகுதி I & II திருவாங்கூர்ப் பல்கலைக் கழகம், 1947.

   (iii) ஆழ்வார்கள் காலநிலை.

   (iv) ஆராய்ச்சித் தொகுதி.

3. இராசமாணிக்கம், மா.
   தமிழ்மொழி இலக்கிய வரலாறு.
   சென்னை: பாரிநிலையம், முதற்பதிப்பு, 1963.

4. இளவரசு, சோம.
   இலக்கண வரலாறு.
   சிதம்பரம்: தொல்காப்பியர் நூலகம், முதற் பதிப்பு, 1963.

5. கலித்தொகைச் சொற்பொழிவுகள்.
   சென்னை: கழகப்பதிப்பு, மறுபதிப்பு (1952).

6. கிருஷ்ணசாமி ஐயங்கார், டாக்டர் எஸ்.
   சேரன் வஞ்சி.
   சென்னை: கல்வி வெளியீட்டு நிறுவனம், 1956.

7. சண்முகம். மு.
   சிலப்பதிகாரக் கட்டுரைகள்.
   சென்னை: தேசிய வெளியீட்டு நிறுவனம். மூன்றாம் பதிப்பு, 1958.

**8. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை.**

(i) பிற்காலச் சோழர் சரித்திரம்.
சிதம்பரம்: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், மூன்றாம் பதிப்பு, 1958.

(ii) தமிழ் இலக்கிய வரலாறு - பகுதி I. (கி.பி 250 முதல் கி. பி. 600 வரை)
சிதம்பரம் : அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

(iii) இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுகளும்.
சிதம்பரம் : தொல்காப்பியர் நூலகம், 1961

**9. சதாசிவன், க.**

சேர நாடும் செந்தமிழும்.
சென்னை : பாரிநிலையம், நான்காம் பதிப்பு, 1964.

**10. சாமிநாத ஐயர், டாக்டர் உ. வே.**

(i) சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்.
சென்னை: தியாகராஜ விலாசம் வெளியீடு, 1957.

(ii) என் சரித்திரம்.
சென்னை : தியாகராஜ விலாசம் வெளியீடு, 1950.

(iii) வலிவல மும்மணிக்கோவை.
பதிப்பு. 1934.

**11. சிதம்பரனார், துடிசைகிழார் அ.**

சேரர் வரலாறு.
சென்னை: கழகம், இரண்டாம் பதிப்பு 1962.

**12. சீனிவாச பிள்ளை, கே.எஸ்.**

தமிழ் வரலாறு.
எட்டாம் பதிப்பு, 1960.

13. சுப்பிரமணிய பிள்ளை, கா.

இலக்கிய வரலாறு.
சென்னை: கழகம் மறுபதிப்பு 1958.

14. சேதுப்பிள்ளை, இரா. பி.

(i) தமிழ் இன்பம்.
சென்னை: பழனியப்பா பிரதர்ஸ், ஐந்தாம் பதிப்பு, 1956.

(ii) ஊரும் பேரும்.
சென்னை: பழனியப்பா பிரதர்ஸ், 1956.

15. துரைசாமிப்பிள்ளை, அவ்வை சு.

பன்டை நாளைச் சேரமன்னர் வரலாறு.
தூத்துக்குடி திருவளர் பதிப்பகம், மூன்றாம் பதிப்பு, 1965.

16. பாலசுப்பிரமணியன், சி.

தமிழ் இலக்கிய வரலாறு.
சென்னை: நறுமலர்ப் பதிப்பகம், எட்டாம் பதிப்பு, 1969.

17. மீனாட்சிசுந்தரனார், தெ. பொ.

(i) சமணத்தமிழ் இலக்கிய வரலாறு.
கோயம்புத்தூர், கலைக்கதிர். 1961.

(ii) குலசேகரர்,
இரண்டாம் பதிப்பு, 1965.

(iii) தமிழா நினைத்துப் பார்.

18. வரதராசன், மு

(i) குறுந்தொகைச் செல்வம்.
சென்னை: பாரிநிலையம், 1955.

(ii) நற்றிணைச் செல்வம்.
சென்னை: பாரி நிலையம், 1958.

19. வித்தியானந்தன், டாக்டர் சு.
தமிழர் சால்பு (1954).

20. வேங்கடசாமி, மயிலை சீனி.

(i) சேரன் செங்குட்டுவன்.
சென்னைப் பல்கலைக்கழகம், 1960.
(ii) மறைந்து போன தமிழ் நூல்கள்.
சென்னை: பாரிநிலையம், 1959.

21. வையாபுரிப்பிள்ளை, எஸ்.

(i) இலக்கிய மணிமாலை.
சென்னை: தமிழ்ப்புத்தகாலயம், 1954,

(ii) இலக்கிய தீபம்.
சென்னை: பாரி நிலையம். 1952.

(iii) புறத்திரட்டு.
சென்னைப் பல்கலைக்கழகப் பதிப்பு,
ஆசிரியர் முன்னுரை.

## III

1. Arokiyaswami, M.: The classical age of the Tamils, University of Madras, 1967.

2. Gopinatha Rao, T. A.: History of Sri Vaishnavas, University of Madras, 1923.

3. Hudson, William Henry: An Introduction to the Study of Literature, 1954.

4. Kanakasabhai Pillai, V.: The Tamils 1800 years ago, Kazhagam, Edition 2, 1966.

5. Mahalingam, T. V.: South Indian Polity, University of Madras, Edition 2, 1967.

6. Manickam, V. Sp. : The Tamil concept of Love, Kazhagam Edition, 1962.

7. Meenakshisundaranar, T. P. : History of Tamil Literature, Annamalai University Publication.

8. Menon, K. P. P. : History of Kerala. 1962.

9. Nagam Iyer : Tiruvancore State Manual.

10. Nilakanta Sastri, K. A. :

    (i) A Comprehensive History of India, 1957.

    (ii) A History of South India, Oxford University Press, Madras, Edition, 1, 1955.

11. Raghava Ayyangar, M. : Some Aspects of Kerala and Tamil Literature, Part I and II. Trivancore University Publication, Trivandrum, 1948 and 1950.

12. Ramachandra Dikshitar, V. R. :

    (i) The Silapadikaram, Oxford University Press, 1955.

    (ii) Studies in Tamil Literature, University of Madras.

13. Sesha Aiyar, K. G. : Cera kings of the Sangam Period, Luzac & Co., London, 1937.

14. Sivaraja Pillai, K. N. : The Chronology of the Early Tamils, University of Madras, 1936.

15. Smith, Vincent Adam : Early History of India, 1929.

16. Srinivasa Aiyangar, M.: Tamil Studies, 1914,

17. Srinivasa Aiyangar, P. T. : History of the Tamils, Coomaraswamy Naidu & Sons, Madras, 1929.

18. Thaninayakam, Xavier. S. : Nature in Ancient Tamil Poetry, 1963.

19. Vaiyapuri Pillai, S. : History of Tamil language and literature, New Century Book House. Madras, 1956.

20. Varadarajan, Dr. M. :

(i) The Treatment of Nature in Sangam Literature, Saiva Siddhanta Books Publishing Society Ltd., Tirunelveli & Madras Edition 1, 1957.

(ii) Ilango Atigal, Sahitya Akademi Publication, New Delhi, 1967.

## IV

### Journals and Periodicals and Lexicon

Annals of Oriental Research, University of Madras.

Encyclopaedia Brittanica.

Journal of the Madras University.

Kalai-k-Kalanjiyam (Tamil Encyclopaedia) 1 to 10 volumes

Malabar Manual by William, I. C. S.

Proceedings of the International Conference Seminar of Tamil Studies—Kualalampur, 1966.

South Indian Inscriptions.

The Tamilian Antiquary.

Tamil Culture

Tamil Lexicon.

Trivancore Archaeological Series, Vol. I & IV.

---